அனைத்திந்திய நூல் வரிசை

# அக்னி நதி

குர்அதுல் ஐன் ஹைதர்

தமிழாக்கம்
சௌரி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# 1

மழை, தூறல்களைத் தெளித்துக் கொண்டிருந்ததை அந்த நதி காட்டியது. கரைப்பக்கமாக வண்ண மலர்கள் பசுமையில் கலந்து, மஞ்சளும் குங்குமமும் பூசிக்கொண்டவைபோல் மலர்ந்திருந்தன. வைர ஊசிகள் போல் உதிர்ந்த மழைத்தூறல்கள் புற்களில் சிதறிக்கிடந்தன. துறையில் சில ஓடங்கள் தென்பட்டன. தொலைவிலிருந்து ஓடக்கார வாலிபன் ஒருவன் உல்லாசமாக இசைக்கும் இனிய பருவப்பாட்டு ஒலிக்கத் தொடங்கியது. கடப்பமரக் கூட்டங்களிடையே ஒரு மயில் தோகை விரித்துக் காத்திருந்தது.

மூன்று பெண்கள் நதிக்கரைக்கு மேலே மேட்டுத்திடலில் ஆலமரத்தடியில் அமர்ந்திருந்தார்கள். முதலாமவள் தன் மேனி வண்ணத்துக்கு ஒப்ப குங்குமப்பூ நிறத்தில் சேலை உடுத்தியிருந்தாள். அவள் கூந்தலில் செண்பகப்பூ பொலிந்தது. இரண்டாமவள் சற்று இளம் பிராயத்தினள். கண்களுக்கு மை தீட்டிக் கவர்ச்சியைக் கூட்டியிருந்தாள். தோற்றமும் தோரணையும் 'இவள் ஓர் அரசகுமாரி' என்பதைக் காட்டின. மூன்றாமவள் மற்ற இருவருக்கும் பணிப்பெண். மழைத்திவலைகள் பட்டுவிடாதிருக்க, இருவருக்குமாக அவள் பட்டுக் குடையைத் தாழ்த்திப் பிடித்துக் கொண்டிருந்தாள். ஆலமரத்திற்குக் கீழே சிறு ஏரி. கரையோரம் கோரை மண்டியிருந்தது. நீர்ப்பரப்பில் தாமரை பரவலாக மலர்ந்திருந்தது. குங்குமப்பூ வண்ண சேலைக்காரி— வயது இருபத்தைந்து இருக்கும்— கன்னிப்பெண் என்பதை வகிட்டில் செந்தூரமில்லாததைக் கொண்டு ஊகிக்க முடிந்தது. அவள் துறவு பூண்டவளுமில்லை—கூந்தலில் செருகியிருக்கும் செண்பக மலர் சான்று. இந்தக்குழப்பம் அந்த வாலிபனுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால், பக்கத்துப் பலாச மரத் தோப்பில் நின்றுகொண்டு அவன் எதற்காக வியப்புடன் அந்தப் பெண்ணை உற்றுப் பார்க்க வேண்டும்? அவன் தன்னிலைக்கு வர சில கணங்கள் ஆயின. சட்டென்று அந்த வாலிபன் பார்வையைத் திருப்பி, ஆற்றங்கரைப் பக்கம் விரைந்தான்.

கருமுகில் கூட்டத்தில் மின்னல் பளிச்சிட்டது. குங்குமப்பூ வண்ணப் புடவைக்காரி — நதியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தவள்—பேசத் தொடங்கினாள்: "மழை வரப் போகிறது."

மற்றவள் ஏதும் பதில் சொல்லவில்லை. அவள் இப்போது வெள்ளை ஆடை அணிந்து இளமைத் தேகம் பொலியும் அந்த வாலிபனைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அந்த இளைஞன் சிராவஸ்தி நகரத்துக் குருகுலத்தில் பயிலும் இறுதியாண்டு மாணாக்கன்; கௌதம நீலாம்பரன் என்று பெயர். பலாச மரத்தோப்பிலிருந்து நதித்துறைக்கு வந்து சேர்ந்தான். பிரும்மச் சாரியானதால் கையில் குடை இல்லை. கால்களுக்குப் பாதரட்சையும் இல்லை. கேசக்குழைகள் கழுத்திலும் பிடரியிலும் புரண்டு அலைவது அழகாக இருந்தது. வானத்தைப் பார்த்தான். வாடிய முகமானாலும் அழகாக இருந்தது. இந்திரனின் படை வேழங்களைப்போல் கரிய மேகங்கள் வான முகட்டிலிருந்து கிளம்பி அணிவகுத்து முன்னேறிக் கொண்டிருந்தன. சோலை பார்க்க ரம்மியமாக இருந்தது. நதி, படகுகள், கடப்ப மரத்தடியில் தோகை விரித்து நிற்கும் மயில்; ஆல மரத்தடியில் மூன்று அழகிய பெண்கள்; மழைச்சாரலில் சந்திர பிம்பம்போல் அவர்கள் முகம் பொலிந்தது. சிராவஸ்தி நகரம் அங்கிருந்து ஐம்பது காத தூரம். கௌதம நீலாம்பரன் சுற்றுப்புற எழிலை நின்று ரசித்தான். பிறகு ஆற்றில் குதித்தான். திளைந்து குளிப்பதில் தனி சுகம். குளிர்ந்த ஆற்றுநீர், லேசான அலைவரிசை, மழைத்தூறல்—எல்லாம் அவன் மேனிக்கு இதமளித்தன. கரைப் பக்கமாக நீந்தினான். நீந்தியே கரையேறவேண்டும்.

“இந்த மாணாக்கர்களின் வாழ்க்கையே கடினமானதுதான் தோணியில் கூட ஏறக்கூடாதாம்.” பணிப்பெண் அனுதாபத்துடன் சொன்னாள்.

மை தீட்டிய கண்களுடன் விளங்கிய அரசகுமாரி—அவள் பெயர் நிர்மலா—ஆற்றின் பிரவாகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அங்கு அந்த வாலிபன் எதிர் நீச்சல் போட்டுக்கொண்டு ஆற்றைக் கடந்து கொண்டிருந்தான். அவள் பணிப்பெண்ணின் அனுதாபப் பேச்சுக்குப் பதில் சொல்லவில்லை. இப்போது அவளுக்குத் தன் அண்ணன் நினைவு வந்தது. அவனும் இவனைப் போலவே பல நதிகளையும், சம வெளியையும், மலைப்பாதைகளையும் கடந்துசென்று, தக்ஷசிலா நகருக்குச் சென்றான்; பத்து ஆண்டுகள் கடந்துவிட்டன. இன்னும் திரும்பி வரவில்லை. நிர்மலாவுக்குத் தமையனின் நினைவு வந்ததுமே வேதனையும் படர்ந்தது.

பணிப்பெண் இதை ஊகித்துக் கொண்டாள். அவள் நினைத்தாள்: ‘அரசகுமாரர் தக்ஷசிலாவிலிருந்து திரும்பி வந்தா ரானால், குமாரி சம்பகா அவரை மணந்து கொண்டிருப்பாளோ? இப்போது அவள் கவிதை எழுதிக்கொண்டிருக்கிறாள். கடல் கடந்து வரும் வெளிநாட்டு யாத்திரிகர்களுடன், குறிப்பாக சீன யாத்திரிகர் களுடன் நீண்டநேரம் கலந்துரையாடுகிறாள். என்ன பயன்?’—

பணிப்பெண்ணுக்கும் விசனமாகத்தான் இருந்தது.

அரசகுமாரி நிர்மலா தண்ணீர்ப்பக்கம் குனிந்து பாசி இலை ஒன்றைப் பறித்தாள். மயில், கழுத்தைத் திருப்பிப் பெண்கள் அமர்ந் திருந்த பக்கம் ஒயிலாகப் பார்த்துவிட்டு, வாழைத் தோட்டத்திற்குள் கர்வத்துடன் நுழைந்தது.

கௌதமன் ஆற்றின் நடுப்பக்கத்தில் இருந்தான். மாரிக்காலம் காரணமாக சரயூ நதியின் கரைகள் அகன்று விட்டன. கௌதமன் திரும்பி எதிர்க்கரைப் பக்கம் பார்த்தான். படித்துறைப் பக்கம் பெண்கள் அமர்ந்திருப்பது தெரிந்தது. மறுகரையில் பிரம்புத் தகடுகள், நீண்ட புற்கள், நீல மலர்கள் நிறைந்து பாசிச்செடிகள் மண்டியிருந்தன.

கரையேறியதும் கௌதமன் ஆடைகளைப் பிழிந்து உடுத்திக் கொண்டான். கவலை கவிந்தவனாக அருகில் இருந்த கோவிலுக்குள் புகுந்தான். சண்டீதேவியின் சிறு கோவில் அது. அறைகுறைக் கட்டிடம். அங்கு ஒரு மூலையில் தான் கொண்டு வந்திருந்த கட்டுச் சோறு முடிப்பை வைத்துவிட்டுத்தான் அவன் அருகிலிருந்த அயோத்தி நகருக்குச் சென்றான்.

எவ்விதச் சந்தடியும் இல்லை. உள்ளே மண்டபத்தை அடைந்த போது அவனுக்கே அச்சம் எழுந்தது. உருவமற்ற பரப்பிரும்மம் ஏதாவதொரு உருவத்தை மேற்கொண்டு வெளிப்படுமானால், அதைப் பார்த்துப் பயப்படுவானேன்? மனிதனுக்கு மற்றொரு ஜீவனின் இருக்கையில் நம்பிக்கை கிடையாதோ? கௌதமன் பல இரவுகளைத் தன் பய உணர்ச்சியை ஆராய்ந்து பார்த்தவாறே கழித்திருக்கிறான். வாழ்க்கையைப் பார்த்துப் பயமா? ரிக் வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது: "முதலில் 'நான்' (அஹம்) இருந்தது. இது மனித உருவில் வெளிப்பட்டது. சுற்றிலும் பார்த்தது. தன்னைத்தவிர வேறு யாரையும் காணவில்லை. அப்போதுதான் அது தன்னை 'நான்' என்று அழைத்துக்கொண்டது. தனியாக இருக்கிறோமே என்கிற அச்சம் ஏற்பட்டது. பிறகு 'நான்' என்பதற்குத் தோன்றலாயிற்று: 'இங்குதான் வேறு யாரும் இல்லையே, எதற்காகப் பயப்பட வேண்டும்?' பயம் விலகியது. ஆனால் மகிழ்ச்சி ஏற்படவில்லை." தனிமை சுணக்கத்தையும் சலிப்பையும் ஏற்படுத்தியது.

"நான் என்னுடைய ஆத்மாவின் தனிமையைக் கண்டு அஞ்சக் கூடாது". கௌதமன் தனக்குள் சொல்லிக்கொண்டான். ஆல மரம், அரசமரம், இரண்டும் காற்றைச் சலசலப்புடன் வெளிப்படுத்தின. அத்துடன் வயல்வெளி முடிகிறது. அப்பால் தேக்கு மரக்காடு, தொடர்ந்து பலாச மரங்கள், ஆறுகள், சிற்றாறுகள். இவற்றைத் தாண்டித்தான் அவனுடைய ஆசிரமத்திற்குச் செல்லவேண்டும். கோவிலிலிருந்து இறங்கி வந்ததும், கிராமத்தை நோக்கி நடந்தான். அயோத்தி நகரின் விளக்கொளிகள் சரயூ நதியில் மின்மினிகளைப் போல் மினுக்கிக் கொண்டிருந்தன. மழைச்சாரலில் வெளிக்காட்சிகள்

மங்கலாகத் தென்பட்டன.

கௌதமன் அந்தப்பேட்டைக்குச் சென்றதும் முதல் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினான். வாசல் பக்கம் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பின் பிராயத்தைச் சேர்ந்த பெரியவர் அந்த வெளிச்சத்தில் ஏதோ படித்துக்கொண்டிருந்தார். உள் கூடத்திற்கு வெளியே இருட்டு கவிந்திருந்தது. கௌதமனின் குரலைக்கேட்டு அவர் விளக்கை எடுத்துக் கொண்டு வெளியே வந்தார். பிரும்மச் சாரியின் வெண்ணிற ஆடையைக் கண்டார்.

"இங்கு சாக்கிய முனிவர் புத்தர்பிரானின் சீடர்களான பிக்கு களின் கூட்டம் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதைச் சேர்ந்தவர் நீங்கள் என்று நினைத்தேன்." பெரியவர் கௌதமனைப் பார்த்துச் சொல்லிவிட்டு, பொதுவாகவும் கருத்துத் தெரிவித்தார்: "இப்போது இப்படியொரு புதுமோகம் கிளம்பியிருக்கிறது. பையன்கள் ஓடுவது கிடக்கட்டும். பெண்களும்கூட வீடு வாசலைத் துறந்து பௌத்த சங்கத்தில் சேரத் தொடங்கியிருக்கிறார்களே! வீட்டைவிடக் காடு தான் இவர்களுக்குப் பிடித்திருக்கிறது!"

கௌதம நீலாம்பரன் பெரியவர் பேச்சைப் பொருட்படுத்தாமல், "எனக்குக் கொஞ்சம் பருப்பு வேண்டும்," என்றான்.

பெரியவருக்குப் பேச்சுப்பித்து, தொடர்ந்து பேசிக்கொண் டிருந்தார்: "எதிர்ப்பக்கத்து நகரில் ஒரு அழகான பெண் இருக்கிறாள்; ராணி ரேணுகா போல் அவ்வளவு அழகு! என் வீட்டுக்காரி நேற்று கடைவீதிப் பக்கம் போயிருந்தபோது கேள்விப்பட்டாளாம். அந்தப் பெண்ணும் பௌத்த சங்கத்தில் சேரப்போகிறாளாம். அந்தப்புரத்துப் பணிப்பெண்கள் சொன்ன தகவல். காலம் எப்படி அலங்கோலமாகப் போய்க்கொண்டிருக்கிறது, பார்த்தீர்களா!"

இதற்குள் அவருடைய மனைவி மாவும் பருப்பும் எடுத்து வந்தாள். கௌதமன் உத்தரீயத் தலைப்பை நீட்டி அதைப் பெற்றுக் கொண்டான். அப்போதும் பெரியவர் பேசிக்கொண்டிருந்தார்: "இப்படியுமா ஒரு காலம்! நான் நிச்சயமாகச் சொல்லுவேன்: இப்போதெல்லாம் பெற்றவர்கள்கூடத் தம் பெண்பிள்ளைகளுக்குக் காலா காலத்தில் கலியாணம் செய்துவைக்க வேண்டுமென்கிற அக்கறை குறைந்துவிட்டது; கவலையில்லாமல் இருக்கிறார்கள்! பெண்களோ 'நிர்வாண' (முக்தி) நிலையைத் தேடிக்கொண்டு கிளம்பியிருக்கிறார்கள்!"

பெரியவர் சொல்லி முடித்துவிட்டோம் என்கிற திருப்தியுடன் கைவிளக்கை எடுத்துக்கொண்டு உள்ளே திரும்பினார். கௌதமன் தூணில் சாய்ந்து கொண்டான். பௌத்த பிக்குகளின் கூட்டமொன்று இந்தப்பக்கம் வந்திருப்பதையறிந்து மகிழ்ச்சி கொண்டான். சந்திக்க முடிந்தால் இரவுப்பொழுது இலகுவாகக் கழியும். அளவளாவியே

பொழுதைப்போக்கலாம். "பகவான் உங்களுக்குப் பசுச் செல்வத்தையும் நல்ல சந்ததிகளையும், செல்வச் செழிப்பையும் அருள்வாராக!" பெரியவரையும் அவருடைய மனைவியாரையும் பார்த்து வாழ்த்தி விட்டு, கௌதம நீலாம்பரன் கோயிலை நோக்கிப் புறப்பட்டான்.

விளக்குடன் நின்று கொண்டிருந்தவர் கௌதமனை வழியனுப்பி விட்டு உள்ளே சென்றார். கௌதமன் அந்த வீட்டை நிதானமாகப் பார்த்தான். உள்ளே குழந்தைகள் விளையாடிக்கொண்டிருந்தன. வீட்டுத் தலைவி அடுப்படியில் அமர்ந்து சமையலில் ஈடுபட்டிருந்தாள். வாசல் பக்கம் தொங்கிய ஒரு கூண்டில் மைனா அடைபட்டிருந்தது. அந்த அமைதியான சூழ்நிலையிலும் அவனுக்கு அச்ச உணர்வுதான் ஏற்பட்டது. அடுப்புத் தீயின் மங்கிய வெளிச்சத்திலும் அந்த இளம் பெண்ணின் மேனிவளம் பொலிவாகத் தெரிந்தது. வெளிமுற்றத்தில் வாழை இலைகள் தாழ்ந்து தொங்கின. இறக்கைகளுக்கிடையே அலகைச் செருகியபடி மைனா உறங்கிக்கொண்டிருந்தது. மூலையில் கணப்பில் எரிந்து கொண்டிருந்த வீட்டுத்தீ ஒருநாள் சிதைக் கொள்ளியாக மாறும். சிதைத் தீயிலிருந்து மற்றொரு குடும்பத்தின் அடுக்களைக்கு நெருப்பு கிடைக்கும். துறவியின் குடிலில் இந்த அக்கினியாத்திரை தொடங்குகிறது. இத்தகைய கணங்கள்- தருணங்கள் ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் வரத்தான் செய்யும். இந்தக் கௌதம நீலாம்பரனின் வாழ்விலும் எதிர்ப்படலாம்– இதற்கெல்லாம் பொருள் உண்டா? எந்தக் காட்சிக்குத்தான் பொருள் இருக்கிறது?

சிராவஸ்தியில் அவன் தந்தைக்கு மூன்று மாடி மாளிகை இருந்தது. வெளிக்கூடத்தின் தூண்களில் யானைமுகம் துதிக்கையுடன் செதுக்கப் பெற்றிருக்கும். இது அவனுக்கு இறுதியாண்டுப் படிப்பு. படிப்பு முடிந்ததும் இந்த உலகமே அவனுக்கு எதிரே பரந்து இருக்கும் — காலடியில் சிதறிக்கிடப்பதைப்போல. எல்லா நேரமும் அவன் விருப்பத்திற்கு ஏற்பக் காத்திருக்கும். எல்லாத் தத்துவ சாஸ்திரங்களையும் வேதாந்த நூல்களையும் அவன் ஆய்ந்து ஊன்றிப் படித்தவன். எனினும் சில பௌதிகப் பொருள்களைக் கண்டு பயப்படுகிறானே! நதித்துறையில் மழைத்தூறலில் நனைந்துகொண்டு அமர்ந்திருந்த இளம்பெண்கள், ஆலமரத்தோப்பு, காஷாய உடை தரித்த பிக்குகள் கூட்டம், இந்த இல்லறத்தாரின் இளம் மனைவி— இவர்கள் யாவரும் பிரும்மத்தின் சொரூபங்கள்—பூரண பிரும்மங்கள்!

புல்தரையில் கிடந்த வில்வப்பழம் ஒன்றை கௌதமன் எடுத்துக் கொண்டு கோயிலுக்கு வந்து சேர்ந்தான். சிறு பள்ளம் பறித்து அடுப்பாக அமைத்துக்கொண்டான். மண்கலயத்தில் அரிசியைக் களைந்து வைத்தான். எதிரே நதியையும் மறைத்துக்கொண்டு இருள் கவிந்திருந்தது. மதியும் மேக மூட்டத்துள் மறைந்திருந்தது. காற்றில் புதிதாக இதழ் விரித்த மலர்களின் நறுமணம் கமழ்ந்தது. இருள்

கவிந்த சூழ்நிலை. கௌதமனின் கவனம் கலைந்தது. யாரோ வரும் காலடியோசை கேட்டது. இருட்டில் யாரோ சிரிப்பது கேட்டது. பிறகு அமைதி. கௌதமன் சுவர்ப்பக்கம் சாய்ந்து அமர்ந்தான். மனித உருவம் எட்டிப் பார்ப்பது தெரிந்தது. கரிய மேகங்கள் நெருக்கமாக விழுமியிருந்தன. "நீ யாரப்பா? இருளில் தனியாக உட்கார்ந் திருக்கிறாயே!" கீழேயிருந்து ஓர் ஆண்குரல் கேட்டது.

"நான்தான்" கௌதமன் பதில் சொன்னான்.

"நல்லது. உனக்குப் பெயர் ஏதும் இல்லையா?"

"நான்! இதற்கு வேறு பெயர் தேவையா? மனித ஆத்மாவுக்கு என்ன பெயர் சூட்டுவது வழக்கம்?"

அமைதி, கௌதமனுக்கு ஏமாற்றமாக இருந்தது. சிறிது நேரம் காத்திருந்துவிட்டு அவனே பேசத்தொடங்கினான்: "நான் இந்த முறை பிறவி பெற்றதும். சிராவஸ்தி நகரத்துப் பண்டிதர்கள் எனக்கு ஜாதகம் கணித்து, என்னைக் 'கௌதம நீலாம்பரன்' என்று அழைக்குமாறு பணித்தார்களாம். வாழ்வின் ரகசியங்களை, வருங் காலப் புதிர்களை அறிந்த தைவக்ஞர்களாம் அவர்கள்!"

"நீல வண்ண வானவெளிக்கு உரிய கௌதமனே! கொஞ்சம் தரைக்கு இறங்கி வாயேன்!" புதிய குரல் ஒலித்தது.

"தரை ஈரமாக இருக்கிறது. பாம்புகள் நடமாடும். நீங்கள் மேலே வரக்கூடாதா?"

"மேல்-கீழ் என்பது சிந்தனை மாறாட்டத்தின் பிரதிபலிப்புகள். நீயிருக்கும் மேலிடமே பாதளத்தைவிடத் தாழ்ந்தது என்பது உனக்குத் தெரியுமா?"

"நீங்கள் வைணவ பக்தரோ?" கௌதமன் சுவர்ப்பக்கத்திலிருந்து கீழே எட்டிப்பார்க்காமலேயே இந்தக் கேள்வியை விடுத்தான்.

"எந்தக் கேள்விக்கும் இறுதியான-முடிவான பதிலைத் தந்துவிட முடியாது"—கீழேயிருந்து குரல் வந்தது.

'சரிதான்; யாரோ வாயாடியான சமணத்துறவி வந்திருக்கிறார்'; என்று நினைத்தான். பாடலிபுத்திரத்து அரச குடும்பம் இப்போ தெல்லாம் சமணர்களை அதிகம் ஆதரித்து வருகிறது. இல்லை, இவர் பௌத்த பண்டிதரோ? கௌதமனுக்குப் பௌத்தர்களுடன் வாக்குவாதம் செய்வது பிடித்தமான பொழுதுபோக்கு. காடுகளிலும் சோலைகளிலும் பௌத்த பிக்குகள் நிரம்பியிருக்கிறார்கள். அங்கெல்லாம் வாத விவாதங்களுக்குப் பஞ்சமில்லை. குதர்க்க வாதிகள், சந்தேகவாதிகள், நாஸ்திகர்கள் அந்தக் கூட்டத்தில் நிறைய இருக்கிறார்கள். கடந்த நூற்றாண்டில்தான், கபில வஸ்துவின் அரச குமாரன் சித்தார்த்தன் காட்டுக்குச் சென்று, தவம் கிடந்து, இந்தப் புது சமயத்தைத் தோற்றுவித்தான். அவனுடைய புரட்சிகரமான கண்டுபிடிப்பு இது! காட்டிலே வாழ்வதென்பது அவன் காட்டிய

வழி. அவன் காலத்திலேயே 62 மதங்கள் பலப்பல உட்பிரிவுகளுடன் நாட்டில் நிலவி வந்தன. அவை போதாதென்று, சாக்கிய குலத்தில் வந்த அந்தச் சித்தார்த்தன் துறவியாகித் தனி மதம் ஒன்றைத் தன் பெயரில் தோற்றுவித்தான்.

அறுபத்திரண்டு மாறுபட்ட கொள்கைகள்! சமய நோக்குகள்-! இவ்வளவுக்கும் வாழ்க்கை ஒன்றுதான்; மனிதனும் தனிப்பட்டவன் தான் - ஒருவன்தான்!

"வழிப்போக்கரே! நீர் யார்?" கௌதமன் மறுபடியும் குரல் கொடுத்தான். இனந்தெரியாத கிலி அவனைத் திரும்பவும் சூழ்ந்து கொண்டது.

"பெயர் என்பது சில ஒலிகளின் சேர்க்கை. என்னை அறிந்தவர்களாக நினைத்துக் கொண்டிருப்பவர்கள் ஹரிசங்கர் என்று சொல்லி அழைப்பார்கள். ஆனால் அவர்கள் என் பெயரை மட்டும்தான் அறிந்திருப்பவர்கள்."

"இந்த இடத்திற்குப் புதியவர்தானே?"

இந்தக் கேள்விக்குப் புதியவனிடமிருந்து பதிலில்லை. கொஞ்சம் வெட்கப்பட்டிருக்கவேண்டும். "வட மேற்குப்பகுதியிலிருந்து இப்போது தான் வந்திருக்கிறேன்." என்றான்.

"நீர் எங்கே படித்தீர்?" கௌதமனுக்குப் புதிய ஆர்வம் கிளர்ந்தது.

"தக்ஷசிலத்தில்"

"தக்ஷசிலா! ஆஹா! எனக்கு அங்கே போகவேண்டுமென்று வெகுநாட்களாக ஆசை. அருமையான இடம்."

"போக முடியவில்லையே என்று விசனிக்க வேண்டியதில்லை. எதிலும் அடிப்படை வித்தியாசம் கிடையாது. தக்ஷசிலாவும் அப்படித் தான்."

"ஹரிசங்கர்! நீ படிப்பை முடித்துவிட்டாயா?" கௌதமனுக்கு நெருக்கவுணர்வு வளர்ந்தது. நட்புரிமை பாராட்டிக்கொண்டு வினவினான்.

"முடிந்தது. பிறகு நான் நதிகளையொட்டியே நீண்ட யாத்திரையை மேற்கொண்டிருக்கிறேன். மதுரா சென்றேன். பிரும்மா வர்த்தத்தில் ஹஸ்தினாபுரத்தின் இடிபாடுகளைக் கண்டேன். சொந்த ஓடம் ஒன்றை வாங்கி அதில், கிழக்கே வெகுதூரம் வரைக்கும் சென்றேன். ஒவ்வொரு இடத்திற்கும் காலம் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. கௌதமா! இந்தக் காலம் என்பது மிகப் பயங்கரமானது; என் ஊகம் இது. நீ எப்போதாவது காலத்தைக் கண்டு பயந்திருக்கிறாயா?"

"நீ கௌதம புத்தரை ஏற்றுக்கொண்டிருப்பவன்தானே?" இதற்குப் பிறகு அந்த வாலிபன் கீழே இறங்கி, கோயில் மண்டபத்திற்கு

வந்தான். வெளித்திண்ணையில் உட்கார்ந்து கொண்டான்.

"நீ காசியிலே படிக்கிறவன், இல்லையா?" கௌதமனின் வெள்ளை வேட்டியைப் பார்த்துக்கொண்டு கேட்டான்.

"சிராவஸ்தி குருகுலத்தில் எனக்கு இது இறுதியாண்டு. காசியிலுள்ள கல்விக்கூடங்கள் மகா பண்டிதர்களை உருவாக்குவதோடு சரி." கௌதம நீலாம்பரனின் பேச்சில் கர்வம் தொனித்தது.

"உன் வாழ்க்கை இலட்சியம் என்ன?"

"நீயும் இந்த இருளிலிருந்து வந்துவிட்டு, என்னைப் பார்த்து இதே கேள்வியைக் கேட்கத் தோன்றுகிறதாக்கும்!" கௌதமனுக்குச் சற்று எரிச்சலாக இருந்தது.

காற்றில் சிலிர்ப்பூட்டும் சில்லிப்பு தெரிந்தது. இளம் நிலவில் கௌதமன் புதிய நண்பனை உற்று நோக்கினான். அந்த அழகிய முகம் முன்பு எங்கோ பார்த்ததாகத் தோன்றியது.

'இந்த முகத்தை நான் இதற்குமுன் எங்கே பார்த்திருக்கிறேன்? அண்மையில்தான் பார்த்திருக்கிறேன்...?' கௌதமன் தெளிவுபெற முடியாமல் தவித்தான். சுருள் சுருளான கேசத்தை மழித்துவிட்டால், ஒருவேளை வேறு நபர் மாதிரி தோற்றமளிக்கலாம்.

"தலையை மொட்டையடித்துக் கொள்ளவில்லையா நீ? இப்படியுமா ஒரு பிக்கு இருப்பார்! பௌத்த சங்கத்தின் நெறிமுறைகளைக் கடைப் பிடிப்பதில்லையோ?"

"நான் சுதந்திரமானவன்; மேலும் சுதந்திரத்தை நாடிச் சென்று கொண்டிருக்கிறேன்." தொலைவில் மினுக்கிக் கொண்டிருந்த அயோத்திமா நகரின் விளக்குகளின் ஒளிக்கூட்டத்தைப் பார்த்தவாறே பேசினான்.

"அப்படியானால் வேதங்களில் உனக்கு நம்பிக்கை கிடையாது,"—சிறிது இடைவெளிக்குப்பிறகு கௌதமன் வினவினான். கௌதம புத்தரின் சீடனுடன் முறையாக விவாதம் நடத்த இது பூர்வ பீடிகை—முறையான சீண்டல் என்பதைக் கௌதம நீலாம்பரன் உணர்ந்திருந்தான்.

"சாக்கிய முனிவர் புத்தரும் இந்தக் கோசல நாட்டைச் சேர்ந்தவர்தான். தியாகத்தை அடிப்படையாகக் கொண்ட சமயக் கோட்பாடும், அதற்கு நீங்கள் தரும் இலக்கண விளக்கமும் உபநிடதங்களில் உள்ளவைதான். நீங்கள் புதிதாக ஒன்றையும் படைத்து விடவில்லை! சாக்கிய முனிவரே கபிலரின் சாங்கிய மதக்கோட்பாடுகளிடமிருந்து செல்வாக்குப் பெற்றவர்தானே! உலகில் எந்தக் கருத்தும் எப்போதுமே சமமாகவோ, தொடர்பு இல்லாததாகவோ இருக்காது. கருத்துக்களுக்குத் தூய உருவம் என்பதும் கிடையாது. சொற்களை ஏன் பயன்படுத்துகிறாய்? சொற்கள் தொடர்புள்ள பொருள்களுடன் சம்பந்தத்தை ஏற்படுத்துகின்றன." இதைச் சொன்னதும், கௌதமனுக்கு

அந்த இல்லறத்தலைவர் குறை கூறியது நினவு வந்தது: அயோத்தி மாநகர் அரண்மனையிலிருந்து ஓர் அரசகுமாரி சுகபோக வாழ்வைத் துறந்து, கானக வாசத்தை மேற்கொண்டதாகத் தகவல். கௌதமன் அதைப் பொதுவாக விமரிசித்தான்: "மேலும், இப்போதெல்லாம் பெண்களுக்கும் இந்தப் புதுமோகம் தொற்றிக்கொண்டு வருகிறது." இதைச் சற்றுச் சினத்தோடு சொன்னான்.

ஹரிசங்கர் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்? உன் மகிழ்ச்சி நிலை என்னவாயிற்று?" கௌதமன் மேலும் சினந்தான்.

"நீயே போகப்போகத் தெரிந்துகொள்வாய்?" பிக்கு நிதானமாகச் சொல்லிவிட்டு, தரையில் படுத்தான்.

"நீ எதற்காகத் திரிந்துகொண்டிருக்கிறாய்? வீட்டை விட்டு ஏன் ஓடி வந்தாய்?"

"நீ எதைத் தேடி அலைகிறாய்?" ஹரிசங்கர் பதிலைக் கேள்வியாக அளித்தான்.

"நீ பெரிய கர்வி. குருடன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்ட விழைவதுபோல், ஞானிகளாகத் தம்மை நினைப்பவர்கள் அகந்தை, செருக்கு எனும் பிரமையில் சிக்கி, ஒரே பகுதியில் வட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்."

"பொருளற்ற சொற்கள்"— ஹரிசங்கர்.

"நீ பாணினியின் இலக்கண நூலைப் படித்திருக்கிறாயா? சொற்களின் எல்லைகளைத் தகர்க்காத வரைக்கும், அவற்றின் உட்பொருளை உன்னால் உணரவே முடியாது," சூளுரைப்பதுபோல் குரல் திடமாக ஒலித்தது.

"சொற்களின் இறுதி விளக்கத்திற்கு வரும்போது மூல—அல்லது முதல் அர்த்தம் மறைந்து விடுகிறது; பல மாறுதல்களைக் காணமுடிகிறது. பொருள் நுணுக்கத்தை ஆராயப்புகுந்த நான் திக்கு திசை தெரியாமல் எங்கோ போய்க்கொண்டிருகிறேன்."

கௌதமன் திடமாக வாதிட்டான்: "சொல் நிலையானது. சொல் கடவுள். 'ஓம்' எனும் பிரணவத்திலுள்ள மூன்று எழுத்துக் களுக்கும், குறில், நெடில், இடை எனும் மூன்று ஒலிகளான ஸ்வரங் களுக்கும் இடையில்தான் பிரபஞ்சப் படைப்பின் எல்லா அமைப்பு களுமே கட்டுண்டு இருக்கின்றன, இயங்குகின்றன. ஒலி வானத்தின் ஒரு தன்மை."

"உன் பெயருள்ள முனிவரான கௌதம மகரிஷி சொல்லியிருக் கிறார்: ஒலி சாசுவதமானதென்றால், முகத்திலிருந்து வெளிப்படுவதற்கு முன்பே தொனி ஒலிக்க வேண்டும். சொற்கள் வெளிப்பட வேண்டும். ஏனென்றால் வானவெளிக்கும் நம் காதுகளுக்கும் இடையே எவ்விதத் தடையும் இல்லையல்லவா?"

"நீ என்ன தத்துவவாதி? சொற்களில் நம்பிக்கை வைக்காதவன். சொற்களின் வழித்துணை இல்லாமல் நீ எப்படித் தூய சிந்தனைகளை எட்டிப்பிடிப்பாயாம்? தொனி—உள்ளுரைக் கருத்து சொல்லின் இயற்கைச் சிறப்பு. பொருள்—அகப்பொருளோ, புறப்பொருளோ—யாவும் நிலையானவை; பொருள்தான் பிரும்மம்."

"காலத்தை நித்தியமாக எண்ணிக்கொண்டு நீங்கள் வீண் குழப்பங்களைப் பரப்பி வருகிறீர்கள்." ஹரிசங்கர் உத்வேகத்துடன் குறை கூறினான். "நீ வேதாந்தத்தைத் தாண்டி முன்னேறவில்லை என்பதைக் காணும்போது வியப்பாக இருக்கிறது."

"முடிவிற்கு அப்பால் வேறு என்ன இருக்க முடியும்?"

"உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே" ஹரிசங்கர்.

"பரமாத்மா-ஜீவாத்மா இரண்டும் அவித்தை காரணமாக இரண்டாகப் பிரிகின்றன; இதுதான் துவைதம். இதனால் சப்தம் - அசப்தம் (சப்தமில்லாத) எனச்சொற்கள் இருவகைப் பிரும்மங்களாகின்றன. சப்தத்தைத் தியானம் செய்து அறிந்துகொண்டபின்தான் அசப்தத்தை வெளிப்படுத்த முடியும்."

"நீ சொல்லும் அந்த அசப்தம்தான் (சொல் அல்லாதது) நான்."

கௌதமன் பேசவில்லை. ஹரிசங்கர் தொடர்ந்தான்: "கௌதமா! காரிய-காரணத்தின் முறைநெறி முழுமையானது. ஒரு பொருள் மற்றதைப் போல் இருப்பதில்லை. சிறிதுநேரம் அல்லது சிறிது காலம் சேர்ந்து இருப்பதைத் தவிர, அல்லது பொதுமையாக இருப்பதைத்தவிர ஒரு பொருளுக்கு மற்றதுடன் சம்பந்தம் ஏதும் கிடையாது. எல்லாமே நிலையற்றவைதாம்; யாவுமே துன்பம்-விபத்து-கேடுகளுக்கு இலக்காகுபவையே. 'ஸர்வம் துக்கம், துக்கம்!' என்கிறார்கள்; சரீரம், ஆத்மா இரண்டுமே அழிவுள்ளவை. இரண்டும் இணைந்துவிடுவதாலேயே சாசுவதமான எதையும் ஏற்படுத்தி விட முடியாது. ஆத்மா அமரத்துவம் கொண்டதன்று. மனிதன் விளக்கைப்போல் எரிந்து ஒளிர்ந்து, மங்கி, புகைந்து, அழிந்துவிட வேண்டியவன்தான். எஞ்சியிருப்பனவெல்லாம் நிகழ்சிகளும் தன்மைகளும்தான்... கௌதமா! தூங்குகிறாயா?"

"இல்லை; சொல்லிமுடி!"

"இசைக்குப் புகழ்பெற்ற அயோத்தியில் ஒரு பெண் இருந்தாள். அவள் என்னைச் 'சாசுவதமான தன்மை உண்டு பொருளுக்கு' என நம்பவைக்க மிகவும் முயன்றாள். அவளும் மேகம் முழங்கினால்கூட இடத்தையும் காலத்தையும் மூடி போட்டுவிடுவாள்."

"ஹரிசங்கர்! நீ கீதத்தையும் சொல்லையும் மறுத்து விட்டாய். ஆனால் ஒன்றை நீ உணர்ந்து கொள்: ஒலி என்றும் இருந்து கொண்டிருக்கும்; அது அழிவற்றது."

"என் அனுபவத்தைக் கூறுகிறேன். வட கோசல நாட்டின்

எல்லைக்கு நான் வந்து சேர்ந்தேன். எல்லைக் காவலர்கள் மறைவிடங்களிலிருந்தவாறே என்னை உரக்கக் கேட்டார்கள்: 'நீ எங்கிருந்து வருகிறாய்?' நான் பதில் சொன்னேன்: 'நான் இங்கிருந்து போனேன், இப்போது இங்கே திரும்பி வந்திருக்கிறேன். எல்லோருமே இந்த இடத்தில் மடியவேண்டியவர்கள்தாம்!' இதைக்கேட்டதும் ஒரு காவலாளி தன் சகாவுடன், 'இந்த ஆள் என்ன பிதற்றுகிறான்?' என்று கேட்டான். 'யாரோ ஞானப்பித்து என்று தோன்றுகிறது.' என்றான் மற்றவன். பிறகு இருவரும் தாயக்கட்டம் ஆடத் தொடங்கிவிட்டார்கள். பிறகு நான் அயோத்திக்கு வந்துதும் உணர்ந்து கொண்டேன்: ஒலி-குரல் முடிவற்றது. கௌதமா! வாழ்க்கையின் பரப்பு மிகப்பெரியது. நாடுகள், குடியிருப்புகள், புதிய புதிய மக்கள், பல்வேறு மொழிகள்... நான் நீண்ட பயணம் செய்திருக்கிறேன். ஆனால் மேகங்களின் ஒலி என்னை எல்லா இடங்களுக்கும் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது! நீ என்னிடம் சொற்களும் ஒலிகளும் அழிவற்றவை என்று வாதாடுகிறாய்! என்னிடம் கேட்டுத் தெரிந்துகொள்! நான் நன்கு அறிவேன். இதெல்லாம் வெவ்வேறு இடங்களுக்குள்ள மகிமை—மாயமான மகிமை. உண்மை எதுவும் இல்லை. எல்லாம் துக்கமயம்!"

கௌதமன் சலனமின்றிக் கேட்டுக்கொண்டிருந்தான்.

"புனிதமான சரயூ—ரிக்வேதத்தில் இடம்பெற்றுள்ள இந்த நதி எனக்குத் தாய்! இன்று இரவு வியப்பில் ஆழ்ந்தவாறு உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அயோத்தி மாநகரமே! உன்னிடம் இந்த விளக்குகள் எதுவரைக்கும் ஒளி வீசிக்கொண்டிருக்கும்? இன்றைய அயோத்தி பிரும்மா படைத்தது; மாற்றார் எவராலும் வெற்றி கொள்ள முடியாதது. இந்த வைபம் உன்னைவிட்டு என்றோ ஒருநாள் போய்விடுமா? போகாமல் இருக்குமா? போய்த்தான் ஆக வேண்டுமா? எதுவுமே சாசுவதம் இல்லையோ? அந்த மலரைச் சண்பகப்பூ என்கிறார்கள்—நிறமும் அழகும் அப்படிச் சொல்ல அடையாளம் காட்டுகின்றன. இதே இடத்தில் என் வீட்டார் என்னை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். என் தாய், தந்தை, சகோதரி. என் சகோதரியின் பாசத்தையும் மற்ற பாச நேசங்களைப் போல் புறக்கணித்துவிட்டு, இதயத்தைக் கடினமாக்கிக்கொண்டு என் வழிப்பயணத்திற்குத் திரும்பி வந்தேன். ராமபிரான் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்துவிட்டுத் திரும்பி வருவதாக வாக்களித்தான். நானும் இப்போது திரும்பி வந்திருக்கிறேன். ஆனல் சாக்கிய முனிவர் சித்தார்த்தர் என்னை வாக்களிப்பு எனும் பிணைப்பிலிருந்து விடுதலை செய்திருக்கிறார். சொற்கள் என்னை வஞ்சித்து விட்டதைப் பார்!" மனச் சோர்வுடன் சொல்லி முடித்தான் ஹரிசங்கர்.

மழை பொழிந்து கொண்டிருந்தது.

காற்றில் அகல்விளக்கு அணைந்து விட்டது. ஹரிசங்கர் செங் கல்லைத் தலையணையாக வைத்துக்கொண்டு படுத்தான். கௌதமன் வெள்ளை உத்தரீயத்தை இழுத்துப் போர்த்திக்கொண்டு, சுவர்ப் பக்கமாக ஒருக்களித்துப் படுத்தான். விழிப்பிலேயே இருவரும் மௌனமாகப் படுத்திருந்தார்கள். கீழைக்காற்று அவர்களைத் துயிலில் ஆழ்த்தியது.

அன்று இரவு கௌதமனுக்கு விசித்திரக் கனவுகள் தோன்றின. கோவில் கருவறையிலிருந்து சண்டிதேவி இளம்பெண்ணாக வெளியே வருகிறாள். பிறகு நதிக்கரையில் பார்த்த காவியுடை தரித்த பெண்ணாக மாறிவிடுகிறாள். பிறகு அவள் வடிவம் வேறுவிதமாக மாறுகிறது. முதலில் மணப்பெண்ணாகத் தோன்றியவள் மங்கல நங்கையாகத் தெரிந்தாள். சில கணங்களில் கிழவியாகி, பிறகு காளிதேவியைவிடப் பயங்கரமாகக் காட்சியளித்தாள். உடனே கௌதமனின் தலைமாட்டில் வந்து உட்கார்ந்து உரக்க அழத்தொடங் கினாள். "அம்மா ! என் தாயே!" கௌதமன் அலறிவிட்டான். அந்தக் கிழவி நீண்ட பற்கள் அதிகம் தெரிய, மறுப்புத் தெரிவித்தாள்: "நான் உன் அம்மா இல்லை; நான் வைசாலி நகரின்..."

"தாயே! என் அம்மா!!" கௌதமன் உணர்ச்சிவசப்பட்டான். வில்வமரத்திலிருந்து ஒரு காய் கீழே விழுந்தது. கௌதமன் விழித்துக் கொண்டான். கலவரத்துடன் எழுந்து உட்கார்ந்தான். பக்கத்தில் ஹரிசங்கர் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். மழை நின்றிருந்தது. கௌதமன் வேத மந்திரங்களை ஜபித்தான். வெகுநேரம் கழித்துத் தூக்கம் வந்தது.

விடியற்காலையில்—இருள் பிரிவதற்கு முன்பு ஹரிசங்கர் விழித்துக் கொண்டான். கௌதமன் சண்டீஸ்துதி பாடிக்கொண் டிருந்தான். துறையில் சில அந்தணர்கள் செருமியும் கனைத்தும் காலைக்கடன்களுக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள். மாந்தோட் டத்தில் புள்ளினங்களின் கலகலப்பு ஒலி எழுந்தது. கௌதமன் துர்க்கை சன்னிதியிலிருந்து வெளியே வந்தான். ஹரிசங்கர் அவனைப் பார்த்து முறுவலித்தான். கௌதமன் வினவினான்: "வைசாலியில் யார் இருக்கிறார்?"

ஹரிசங்கர் பதில் சொல்லவில்லை; சிரித்துக்கொண்டான். கௌதமனுக்கு எரிச்சலாக வந்தது. இருவரும் கோவிலிருந்து படிகள் வழியாக இறங்கி சோலைக்குள் வந்தார்கள். "சிராவஸ்திக்குத் திரும்பிப் போகிறாயா?"— ஹரிசங்கர் கேட்டான்.

"ஆமாம். நீயும் என்னுடன் வா. ஆவணி மாதத்தில் என்னுடன் ஆசிரமத்தில் தங்கலாம்."

"மகரிஷிகளே எச்சரித்திருக்கிறார்கள்; துறவுப்பாதை கத்தி முனையைப் போன்றது. நீ என் வழியில் வர முயலாதே.

எச்சரிக்கிறேன்!"

"சரி, பாதை குறுகலாக—ஒற்றையடிப் பாதையாக இருந்து, அதில் எதிரும் புதிருமாக இரு வழிப்போக்கர்கள் வந்து நிற்கும்போது, ஒருவர் விலகி மற்றவருக்கு இடம்கொடுத்தாக வேண்டும்; இல்லாவிட்டால் இருவருமே பள்ளத்தில் விழவேண்டியதுதான், இல்லையா?"

"ஆமாம்"

இருவரும் சிராவஸ்தி நகரை நோக்கிச் சென்றார்கள்.

வானம் துப்புரவாக இருந்தது. காற்றில் மலர் மொக்குகளின் மணம் கலந்து வந்தது. மாலை நெருங்கியபோது இருவரும் ஒரு கிராமத்திற்குள் நுழைந்தார்கள். அங்கு மயில் வளர்ப்பு அதிகம். கிணற்று மேடையில் இருவரும் உட்கார்ந்தார்கள். கிராமம் முழுவதும் அவர்கள் வந்த செய்தி பரவியது.

ஹரிசங்கர் கண்களை மூடியவாறு உட்கார்ந்திருந்தான். அழகிய இளம்பெண் ஒருத்தி இருமயில் தோகை விசிறிகளுடன் அவர்களைத் தரிசிக்க வந்தாள். கௌதமன் காணிக்கையாக ஒரு விசிறியை வாங்கிக் கொண்டான்; அதைத் திருப்பிப் பார்த்தான். வனப்பு, வண்ணக் கவர்ச்சி, கலைத்திறன் பொருந்திய விசிறி. இவை எங்கெல்லாம் விற்பனைக்குப் போகின்றன; வெளியூர்-வெளிநாடுகளிலெல்லாம் இவற்றுக்கு வரவேற்பு இருக்கும். நான் தடவிப்பார்த்து, மென்மையை அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்த விசிறியே அயோத்தி மாநகரின் கடைவீதியில் விற்பனைக்குப் போகும். இதையே ஒருகால் சண்பகப் பூ விற்கும் அந்தப் பெண் விரும்பி வாங்கிக் கொண்டாலும் கொள்வாள்.'

கௌதமன் தோகை விசிறியைத் திருப்பிக் கொடுத்தான். "அலங்காரப் பொருள்களை வைத்துக்கொள்ள எங்களுக்கு அனுமதி கிடையாது. அந்த அழகிய தோகை விசிறிகளை நீயே வைத்துக்கொள், எங்களுக்கு வேண்டாம். காடுகளில் இந்தத் தோகைகளை மயில்களின் மேனிகளிலே பார்த்தே பரவசமடைகிறோம்."

தோகைகளைத் திரும்பப் பெற்றுக்கொண்டு, அந்தப் பெண் இருவரையும் வணங்கினாள்.

"உன் பெயர் சுஜாதாதானே?" கௌதமன் சிரித்துக்கொண்டே கேட்டான்; பிறகு ஹரிசங்கரைப் பார்த்தான். அவன் கண்களை மூடியவாறு உட்கார்ந்திருந்தான்.

"இல்லை, என் பெயர் நந்தபாலா. சுஜாதா என் அக்காள்." இயல்பாகப் பதில் சொன்னாள். பிறகு கிராமத்தை நோக்கி நடந்தாள்.

"கௌதமா! வாழ்க்கைப்பாதையில் எந்த யுகத்திலும் உனக்கு நந்தபாலாவோ சுஜாதாவோ எதிர்ப்படுவாள். அவள் உன் அருகில் வந்து, உன்னை ஆராதிக்கவும் போற்றவும் விரும்புவாள். இப்போதும்

காலதாமதமாகி விடவில்லை; விழிப்பாக இரு; விழித்துக்கொள்!" ஹரிசங்கர் அறிவுறுத்தினான்.

மறுநாள் காலையில் இருவரும் தம் பயணத்தைத் தொடர்ந் தார்கள். சிராவஸ்தி நெருங்கிக்கொண்டிருந்தது. சிறு காடு குறுக் கிட்டது; பிறகு சில கிராமங்கள். நடந்துகொண்டிருக்கையில், ஹரி சங்கர் சட்டென்று நின்றான். உடனே அவனுக்குச் சொல்லத் தோன்றியது. "கௌதமா! வைசாலியில் அம்பாபாலி என்றொரு பேரழகி - பொதுமகள் இருந்தாள். அவள், உன் சம்பகா, சுஜாதா, நந்தபாலா எல்லாரும் ஒரே வகை. நீ உன் உள்ளத்தை விகாரங் களிலிருந்து விடுவித்துக்கொள். பாச பந்தம் பொல்லாதது!"

ஹரிசங்கர் சட்டென்று திரும்பி, காட்டுப்பாதையில் நடக்கலானான். கௌதமன் பலமுறை அழைத்தான். எப்படியாவது தன்னுடன் அழைத்துச் செல்ல விரும்பினான். ஹரிசங்கர் திரும்பிப் பார்க்கவில்லை. காட்டுப் பாதையில் அவன் உருவம் மறைந்து விட்டது.

# 2

சிராவஸ்தி அழகான நகரம்; ராப்தி நதியின் தெற்குக்கரையில் வெகுதூரத்திற்குப் பரவியிருந்தது. வடபகுதியில் இமயமலைக் கண்டங்களாக ஊதாவும் நீலமுமாக மலைத்தொடர்கள். தாழ்வரைகளில் விளை நிலங்கள்; பயிர்கள் வளர்ந்து மண்டியிருந்தன. மலைச்சாரல்களில் இருந்த அடர்ந்த காடுகளில் புலிகளும் சிறுத்தைகளும் திரிந்து கொண்டிருந்தன.

வடகோசல நாட்டில் நகரங்கள், புரங்கள், நகரிகள் எனும் பேரூர், சிற்றூர், கோட்டம் யாவும் நதிக்கரையில் வளமான இடங்களில் அமைந்திருந்தன. மக்கள் தொகை பெருகப் பெருக, காடுகள் அழிக்கப் பெற்றுக் குடியிருப்புப் பகுதிகளாக மாறலாயின.

சிராவஸ்தி, மக்கள் பெருக்கம் கொண்ட கலகலப்பான நகரம். தொலைதூர நாடுகளிலிருந்தெல்லாம் ஜனங்கள் அங்கே வந்து குடியேறியிருந்தார்கள். சிற்பிகள், பொற்கொல்லர்கள், துணி வியாபாரிகள், மளிகை வியாபாரிகள், கொல்லர், கருமார், தச்சர் ஆகிய யாவரும் தனித்தனிப் பேட்டைகளில் வசித்து வந்தார்கள். வண்டிக்காரர்கள், குயவர்கள், மதுபானக் கடைக்காரர்கள், பிரம்புக் கூடை முதலியவை பின்னும் குறவர்கள், நகரத்திற்கு வெளியே குடியிருந்தார்கள். இவர்களுக்கும் அப்பால் ஒதுக்குப்புறமாகப்

புலையர்களின் சேரிப்பகுதி இருந்தது. நாலுவகை இனத்தில் சேராத அவர்கள் ஐந்தாவது இனத்தைச் சேர்ந்த தாழ்ந்த மக்கள். சவத்தைத் தூக்கிச் செல்வதும், சடலத்தை எரிப்பதும் அவர்களுடைய தொழில். பிணத்திற்குப் போர்த்திய துணிகளைத்தான் அவர்கள் உடுத்த வேண்டும். சமூக நியதிப்படி அவர்களுக்கு இட்டிருந்த ஆணை: உடைந்த மண் கலயங்களில்தான் அவர்கள் உணவு கொள்ளவேண்டும்; செப்பு நகைகளைத்தான் அணிய வேண்டும்.

ஆனால் எண்பது ஆண்டுகளுக்கு முன்பு கபிலவஸ்துவின் இளவரசர் சாக்கிய முனிவர் (புத்தர்) சிராவஸ்தி நகரில் வந்து தங்கி யிருக்கிறார். அப்போது அவரும் அவருடைய சீடர்களும் தார்மிகப் பொதுக் கூட்டங்களில் உபதேசம் செய்திருக்கிறார்கள்: "மனிதர்கள் பிறவியால் மிலேச்சர்களோ, சண்டாளர்களோ, புலையர்களோ ஆவதில்லை; செயல் வகையால்தான் அப்படி ஆகிறார்கள்." இப்போதுங்கூட காவியுடை தரித்தவர்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று புலையர்களையும், கீழ்ச்சாதிக்காரக்ளையும் நல்வழிப்படுத்தி மேன்மையுற உபதேசம் செய்திருக்கிறார்கள்! குப்பை மேட்டைக் கோபுரமாக்க முனைந்திருக்கிறார்கள்!

மௌன விரதமிருக்கும் அந்தணர்களைப்போல், பல மாதங் களாக வாளாவிருந்த தவளைகள் மழைத்தாரைகளைக் கண்டதும், மேலும் உயிரூட்டம் கொடுக்க வருண பகவானைத் துதித்து, கத்தித் தீர்த்தன. குரு ஓதுவதைச் சீடர்கள் அடியொற்றித் திருப்பி ஒப்பு விப்பதுபோல் தவளைகள் முதல் குரலுக்கு மறுகுரல் கொடுத்துக் கத்தின. எல்லாத் தவளைகளும் மாரிக்காலப் பண்ணில் ஒருங்கே இசை பாடின.

கௌதமன் சுவடியை மூடி வைத்தான். நிமிர்ந்து எதிர்ப்புறம் பார்த்தான். மழை உக்கிரமாகப் பொழிந்து கொண்டிருந்தது. தவளைகளின் கத்தல், மயில்களின் அகவுதல், சாதகப் பறவைகளின் கலவர -ஒலிகள், ஆவணி மாதத்துக் கருமுகில்களின் முழக்கம். ரிக்வேதத்தில் பல்லாண்டுகளுக்கு முன்பு மாரிக்காலத்தை எப்படி யெல்லாம் ரிஷிகள் வர்ணித்திருக்கிறார்களோ, அந்த வர்ணிப்புகளைக் காட்சியாக வெளிப்படுத்துவது போல் இருந்தது அந்த அடர்மழை. கௌதமன் ஒப்பு நோக்கி ரசித்துக் கொண்டிருந்தான். குடிலுக்கு வெளியே அமர்ந்து மழை இசைக்கும் நாதகீதத்தைச் செவி மடுத்தான். அவனுக்குத் தன் ஆசானின் நினைவு வந்தது.

கௌதமனின் குரு ஆசார்யபாதர் என்று சிறப்புத் தகுதி பெற்றவர். அவரிடம் பல ஆண்டுகள் கல்வி பயின்றான். கூடவே ஓவியம் வரையவும் நாடகம் எழுதவும் நன்கு கற்றுக்கொண்டான். அவன் பிறவிக்கவிஞனாகத் திகழ்பவனானால், அவனைப் புரோகித னாக்குவதில் என்ன பிரயோஜனம்? குரு இதை உணர்ந்திருந்தார்.

கௌதமனுக்குப் படிப்பு ஏறவில்லை என்றாலும் அவன் உதவாக் கரையாகி விடமாட்டான். இந்திரப்பிரஸ்த நகருக்குச் சென்று, பாஞ்சாலர்களின் படையணியில் சேர்ந்து பணிபுரிவான். அதற்கேற்ற தகுதி அவனிடம் இருந்தது. இருந்தாலும், அவன் அந்த வழியைத் தேர்ந்தெடுக்கவில்லை. நாடகம் எழுதவே விரும்பினான்; முயன்றான்; முனைந்தான். கலைகள் பற்றிய நூல்கள் எழுதவேண்டும்; தன்னுடைய முடிவுகளை அவற்றில் ஆய்வுத் திறனோடு விளக்கவேண்டும்; சித்திரங்களையும் சிற்பங்களையும் புதுப்புது சாதனைகளாகப் படைத்துக்காட்ட வேண்டும் என்கிற வேட்கை அவனுக்கு.

இன்று மாலை கௌதமனின் குடிலில் விறுவிறுப்பான கருத் தரங்கமே நிகழ்ந்தது. தக்ஷசிலாவிலிருந்து அவன் நண்பன் அகிலேசன் வந்திருந்தான். அவன் அரசியல் பயிற்சி உள்ளவன். அரசநீதி அவனுக்குப் பாடப்பகுதி. மேலும் சில வாலிபர்களும் பேச்சில் கலந்து கொண்டார்கள்.

"பெரிய குழப்பமெல்லாம் வரப்போகிறது." அகிலேசன் பீடிகை யுடன் தொடர்ந்தான். சிராவஸ்தியைச் சேர்ந்த யோகேந்திரன் குறுக் கிட்டான்: "பாடலிபுத்திரத்து அரசு உணவுப்பண்டம் எதையும் விட்டு வைக்கவில்லையே! வாரிக் குவிக்கிறது."

"இவ்வளவும் படை முகாம்களுக்கு வேண்டியிருக்கிறது. தேசமே வறட்சியாகிக் கொண்டிருக்கிறது. பொதுமக்கள் எத்தனை நாள்தான் பொறுத்திருப்பார்கள்?" குணவர்மா தன் கருத்தைத் தெரிவித்தான்.

"அரசர் பெருமான் கனநந்தர் எரிமலை வாயிலில் அமர்ந்திருக் கிறார்." விமலேசுவரன் வருத்தத்துடன் சொன்னான். பிறகு அகிலேசனைப் பார்த்து, "சாணக்கியரைப்பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாயே?" என்று கேட்டான். அவன் சிராவஸ்தியைச் சேர்ந்த சிற்பி. "நீ அவரைச் சந்தித்தாயா?"

"தக்ஷசிலாவில் பலமுறை சந்தித்தேன்." அகிலேசனின் பதிலைக் கேட்டதும், மற்றவர்கள் அவனை வியப்போடு பார்த்தார்கள். யோகேந்திரனையும் மதிப்போடு பார்த்தார்கள். அகிலேசன் சாணக்கியரைப் பற்றிப் பேசத்தொடங்கினான். சாணக்கியர் அதிசய மேதாவிலாஸம் படைத்தவர்; அரசியல் வித்தையில் அவர் கொடுத்ததுதான் பிச்சை. நினைத்ததைத் திண்மையுடன் முடித்துக் காட்டும் அசகாய சூரர். யோகேந்திரனின் தகவலின்படி இப்போது அவர் பாடலிபுத்திரம் சென்றிருக்கிறார். அங்கு என்ன என்னவோ நடக்கப் போகிறதாம். யார் எவர் என்று கண்டுபிடிக்க முடியாமல் காரியங்கள் ரகசியமாக நடந்து கொண்டிருக்கின்றனவாம்.

இந்தப் பேச்சில் கலந்துகொண்டவன்போல் தோன்றினாலும், தொடர்பில்லாதவனாக மூலையில் ஒதுங்கி உட்கார்ந்திருந்தான் கௌதமன்.

“மகத நாட்டுக்காரர்கள் என்றைக்குமே வம்புக்காரர்கள்தாம். ராஜா ஜராஸந்தனை மறக்க முடியுமா?” யோகேந்திரன் சொன்னான்.

“மகதத்தோடு நமக்கு உடன்படிக்கை—ஒற்றுமை எதுவும் எக்காலத்திலும் நடவாதது.” விமலேசுவரன் சொன்னான்.

“தம்பி! இதெல்லாம் சாதிப்பிரச்சினை.” அகிலேசன் சப்பண மிட்டிருந்த நிலையை மாற்றிக்கொண்டே பேசத்தொடங்கினான். மற்றவர்கள் அவன் பேச்சைக் கவனத்துடன் கேட்கத் தொடங் கினார்கள்.

“நாடு முழுவதிலும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களுமே ஆட்சி செலுத்துகிறார்கள். வெகுதூரத்திலுள்ள சிந்துவெளி வரையிலும் பிராமணர்களின் அரசாட்சிதான் நடக்கிறது. மகதம்தான் முழு மையாக அவர்கள் ஆதிக்கத்திற்கு உட்படவில்லை. கோசல நாட்டவர் களான நாங்கள் மகதநாட்டின் மதிப்புமிக்க உயர் ஜாதிக்காரர்களைக் கூட உயர்வாக மதித்ததில்லை. மேலும், அஜாதசத்ருவின் பேரன் மறைந்த பிறகு, மகதத்தில் கீழ் சாதிக்காரர்களின் செல்வாக்கு வளர்ந்திருப்பதை நாம் மறந்துவிட முடியுமா? கனவம்சம் கீழ் சாதிக் காரர்களின் வம்சம். ஆகையால் மகதநாடு கீழ் சாதிக்காரர்களான கொள்ளைக்காரர்களின் நாடாகி விட்டது.” எதிரேயிருந்த வாலிபர் களைப் பார்த்தவாறு உணர்ச்சியுடன் சொன்னான்.

குணவர்மன் குறுக்கிட்டான்: “மகதத்தின் புதிய தலைநகர் இப்போது சிறப்படைந்து வருகிறது. மற்ற தலைநகர்களான கிரிவிரஜம், ராஜகிரி இவற்றைவிடப் பிரபலமாகிக் கொண்டிருக்கிறது இந்தப் பாடலிபுத்திரம்.

“அண்மையில்தானே குசீ நகரம், வைசாலி, சிராவஸ்தி யாவும் கோசலத்துடன் கூட்டுச் சேர்ந்துகொண்டு அஜாதசத்ருவை எதிர்க்கத் திரண்டு வந்தன. அப்போது மகதநாட்டின் அமைச்சர்கள் ஆக்கிர மிப்பைத் தடுத்து நிறுத்த, பாடலி கிராமத்தைச் சுற்றிலும் மதில் எடுத்தார்கள். இன்றைக்கு நிகழ்ந்திருப்பதுபோல் இருக்கிறது. அஜாதசத்துருவின் பேரன் உதயன் குஸுமாபுரத்தை நிர்மாணிக்க கல்கோள்விழா நடத்தினானே, இன்று அதே குஸுமாபுரம் பிரதாபம் மிகுந்த தலைநகரமாகத் திகழ்கிறது. பல காதங்களுக்கு அப்பால் இங்கு இருந்துகொண்டு நாம் இப்போதும் அந்த நகரத்தைக் கண்டு பயப்படுகிறோம்.” விமலேசுவரன் பேசினான்.

கௌதமன் விளக்கு வெளிச்சத்தில் நண்பர்களின் முகங்களைப் பார்த்தான். அவனுக்கு நினைவு வந்தது: ‘இந்த நகரமும் தீ, வெள்ளம், போர்—இந்த மூன்றின் உற்பாதங்களால் அழிந்துபோகும் என்று சித்தார்த்தர் முன்னறிவிப்புச் செய்திருந்தார். குடியிருப்புப் பகுதிகள், ஊர்கள், நகர்கள் யாவும் இப்படித்தான் எழும்புகின்றன; என்றாவது ஒருநாள் அழியவும் செய்கின்றன. உள்ளத்தின் உறைவிடங்கள்,

மனிதர்கள் உறையும் இடங்கள்—எல்லாவற்றிற்குமே இந்தக் கதிதான். நான் தன்னந் தனியனாக இருக்கிறேன்...'

அகிலேசன் மூலையில் அமர்ந்திருந்த இளைஞனிடம் சாணக்கியரைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தவன், இப்போது விமலேசுவரனைப் பார்த்து உரக்கச் சொன்னான்: "ஏனப்பா! நீதானே இப்போது மகதப் பேரரசர் உதயனைப்பற்றிச் சொன்னாய்? அவர் ஈரானைச் சேர்ந்த மொகல் மன்னன் முதலாவது தாராவின் சமகாலத்தவர் என்பது ஞாபகமிருக்கட்டும்!" பிறகு முன்போலவே மூலையிலிருந்த வாலிபனைப் பார்த்து, "நான் இப்போது சாணக்கியரைப்பற்றி, அவருடைய அரசியல் நோக்கம், சாம்ராஜ்யத் திட்டம் குறித்துப் பேசிக் கொண்டிருந்தேன் இல்லையா? தாரா ஆட்சிபுரியும் ஈரானும் ஒரு சாம்ராஜ்யம்தான். அதன் ஆட்சிச் சக்கரம் இப்போது நாலாபக்கமும் சுற்றிக்கொண்டிருக்கிற விஷயம் உனக்கெல்லாம் தெரிந்திருக்காது."

"ஆட்சிச் சக்கரம்...?" மூலையில் அமர்ந்திருந்த இளைஞன் வினவினான்.

"ஈரானியர்கள் காந்தாரத்தின் மீது படையெடுத்தபோது, மகாராஜா பிம்பஸாரனிடம் தன் தூதனை அனுப்பி வைத்தார்கள். ஆனால் இன்றைக்கு? ஈரானியப் பேரரசு ஸப்தஸிந்து பிரதேசத்தின் வடமேற்குப் பகுதிகளிடமிருந்து கப்பம், வரி என்று வசூலித்துக் கொண்டிருக்கிறது. தாரா அறிவித்தான்: 'நான் தார்யூஷ்! நான் பேரரசன், சாம்ராட்; இந்த நாடுகளுக்கெல்லாம் ஷாயின்ஷா! இந்த நாடுகள்—அதாவது ஈரானியர், ஆரியர், வந்தேறிகள் யாவரும் வாழ்கின்ற நாடுகள்! அவனுடைய போர்க்கலன்கள் சிந்துநதியில் மிதந்தன..." தாராவின் குரலில் தனி ஆவேசம் ஒலித்தது. அது அந்தக் குடில் முழுவதிலும் ஒலித்தது.

"ஷாயின்ஷா...! ஷாயின்ஷா!" கௌதமன் அப்பெயரை உச்சரித்துப் பார்த்தான். "இது பாரசீகர்களின் மொழியாயிற்றே!" என்றான்.

"ஆம்! தார்யூஷின் மூத்தமகன் அர்த்தக்ஷீஜ் வடபுலத்தில் தாம் வசப்படுத்திக்கொண்ட பிரதேசங்களைக் குறித்துச் செருக்குடன் சொன்னான். 'இந்துத் தெய்வங்கள் கோவில்கொண்டிருந்த இந்தப் பிரதேசங்களை நான் அஹுர்முஜ்த் அவர்களின் அருளால் சீர்குலைத்தேன். எல்லாக் கோவில்களையும் அழித்தேன்.' எப்படி அவனுடைய சூளுரை?" அகிலேசன் கத்தினான்.

கௌதமனுக்கு உடல் விதிர்த்தது. மனிதர்கள் தமக்குள் போர் வெறிகொண்டு ஒருவரை மற்றவர் அழித்துக் கொண்டிருக்கிறார்களே! 'எல்லாக் கோவில்களையும் அழித்தேன்!' எப்படி இறுமாந்து பேசுகிறான்!

"அஹுர்முஜ்த் யார் ?" அகிலேசன்.

"கடவுளைக் குறிக்கும் ஈரானிய மொழிச்சொல்"

"இந்த அர்தக்ஷீஜ் என்ன சொன்னான் ? கடவுள் பெயரால்..."

"இதெல்லாம் அரசியல் கௌதமா ! தெரிந்துகொள்." அகிலேசன் எரிச்சலுடன் சொன்னான். பிறகு மற்ற நண்பர்களைப் பார்த்து, "சில நாட்களுக்கு முன்பு, பார்ஸிபொலிஸ் நகரிலிருந்து தப்பிப் பிழைத்து வந்து சில வணிகர்கள் தக்ஷசிலாவிற்கு வந்திருந்தார்கள். அவர்கள் சொன்னார்கள். ஈரானில் பெரும்போர் மூண்டதாம். யவனர்கள் ஈரானியரின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போரிட்டார்கள். அடிமைத் தளையிலிருந்து விடுபட்டார்கள். ஈரானியப் பேரரசு பலவீனமடைந்து கொண்டிருக்கிறது. கௌதமா ! உனக்கு ஒரு செய்தி சொல்லுகிறேன் கேள். விஷ்ணுகுப்தர்(சாணக்கியர்) என்னிடம் 'நம் நாட்டிற்கும் இப்படி யொரு மாபெரும் வலுவான சாம்ராஜ்யம் அவசியம்' என்று சொன்னார். பார்ஸிபொலிஸ் நகரத்திலிருந்து வந்த வியாபாரிகள் கூறினார்கள்: 'ஈரானைச் சேர்ந்த மூன்றாம் தார்யூஷ் மிகப்பராக்கிரம சாலியான பேரரசனாம் ! அவனைக்கூட யவனர்களின் (யூனான் வாசிகள்) தளபதி அலெக்ஸாந்தர் தோற்கடித்து விட்டானாம். அவன் மேற்கத்தியப் பகுதியிலிருந்து பெரும்படையுடன் வந்து ஆக்கிரமித்தானாம். அவன் நுழையும் நாடு அவன் வசமாகாமல் போவதில்லை..."

கௌதமன் திகைப்புடன் கேட்டுக்கொண்டிருந்தான். "இப்போது ஈரான் முழுவதும் அலெக்ஸாந்தர் கைக்கு வந்துவிட்டது" அகிலேசன் தன் பேச்சை முடித்தான்.

"அப்படியானால், பாரசீகர்களின் பரந்த சாம்ராஜ்யத்திற்கு உரியவன் இப்போது அலெக்ஸாந்தரா ?" கௌதமன் ஆச்சரிய மடைந்தான்.

"ஆமாம், அவனேதான்"

"அகிலேசா ! நீ க்ஷத்திரியன். ராஜ்யத்தை உருவாக்குவதும், உருக்குலைத்து அழிப்பதும் உன் போன்றவரின் தொழில். நான் உனக்கு என்ன போதனை செய்ய முடியும் ?" கௌதமன் கேட்டான்.

"கௌதமா !" அகிலேசன் எழுந்து விளக்கிற்கு எண்ணெய் வார்த்து, அதைத் தூண்டிவிட்டு, நடுவில் எடுத்து வைத்தான். பிறகு தொடர்ந்தான்: "நீ போரில் ஈடுபட வேண்டி வந்தால் போராட மறுத்துவிடுவாயா ?"

"நாட்டின் குடிமகன் ஒதுங்கி நிற்பான் என்று நினைக்கிறாயா ?" குடிலின் மூலையில் அமர்ந்திருந்த யோகேந்திரன் சூளுரைப்பது போல் கேட்டான். கௌதமன் கலவரத்துடன் அவனைத் திரும்பிப் பார்த்தான்.

மற்றவர்கள் தொடர்ந்து மகதநாட்டு அரசியல் பற்றிக்

காரசாரமாக விவாதிக்கத் தொடங்கினார்கள்.

இரண்டாம் நாள் மாலையில், கௌதமன் சாளரத்தின் பக்கம் அமர்ந்து, பூர்ஜபத்திரத்தில் எழுதி வைத்திருந்ததைப் படித்துக் கொண்டிருந்தான். ஹரிசங்கர் வாயில் பக்கம் வந்து நின்றான்.

"பிரும்மச்சாரி! உன் புனிதமான குடிலுக்குள் நான் வரலாமா?"

"வரவேண்டும். வரவேண்டும். எங்கே இவ்வளவு தூரம்?" கௌதமன் பூர்ஜ பத்திரங்களை அடுக்கி எடுத்து வைத்துவிட்டு, "நான் நினைத்தேன். நீ நிரந்தரமாகத் தலைமறைவாகி விட்டாய் என்று" சொல்லிக்கொண்டே, பாயை உதறிப்போட்டான்.

"கௌதமா! ஆசைகள் உன்னைச் சிரமப்படுத்துகின்றனவா?"

"அப்படியானால்?"

"எடுத்துக்காட்டாக புலால் உண்ணும் ஆசை?"

"ஹரிசங்கர்! நான் இப்போது உன்னிடம் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். என்னைச் சுற்றிலும் ரத்தக்களரிகள் நடக்கும்போது, நான் அவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கிற நிலைமையில் என்னால் என்ன செய்ய முடியும்? சகலத்திற்கும் நான் கழுவாய் செய்து விட முடியுமா? என் நண்பர்கள் போர்-படுகொலை-ரணகளம் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறார்கள். நான் அதையெல்லாம் விரும்பாதவன்."

"ஆனால், நீ அதையெல்லாம் எதிர்த்துப் போராட வேண்டும்!" ஹரிசங்கர் பதிலளித்துவிட்டு, எதையோ படிக்கத் தொடங்கினான். வெளியே பலாச மரத்தின் நிழல் நீண்டு படியத் தொடங்கியது. இந்தப் பௌத்த பிக்கு ஏதாவது பேசமாட்டானா என்று கௌதமன் காத்திருந்தான். அவன் ஏதும் பேசவில்லை. விசித்திரமான துறவி! மாலைப்பொழுது தொடங்கிவிட்டது. இரு வாலிபர்களும் சாளரத்திற்கு எதிரே போய் நின்று, வெளிப்புறத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கௌதமனால் அதிகநேரம் வாளாவிருக்க முடியவில்லை. "வாழ்க்கையைப் பற்றி ஏதாவது தகவல் சொல்லேன்."

"உன் வாழ்க்கை உனக்கே உரியது. அது என் வாழ்க்கையிலிருந்து வேறுபட்டது. நான் உனக்குச் சொல்ல என்ன இருக்கிறது? ஏதுமில்லை."

கௌதமன் மூலைப்பக்கம் சென்று பனையோலையை எடுத்து வந்தான். "நீ சாந்தி பற்றி எடுத்துக்காட்டுகளுடன் சொல். நான் குறிப்பு எடுத்துக்கொள்ளுகிறேன், அல்லது அப்படியே எழுதிக் கொள்ளுகிறேன்." எழுதுகோலை வைத்துக்கொண்டு, சப்பணமிட்டு உட்கார்ந்தான். "நான் என் புத்தகத்தின் இரண்டாம் பகுதியை இனிமேல்தான் எழுதப் போகிறேன்."

"அதுசரி, உன் புத்தகத்தின் இறுதிப்பகுதியை எழுதுவது யார்?"

"முழு வரலாறும் ஆழங்காண முடியாத கடல். அதில் நானும்

நீயும் இலைகளைப்போல் அல்லாடிக் கொண்டிருக்கிறோம். எனக்கு முன்னால் அறியப்பட்டுள்ள தகவல்களுக்கு நான் பொறுப்பாளியா? சொல்லேன், நான் என்ன எழுத வேண்டும்?" கௌதமனுக்கு ஐயப்பாடு.

"கால நிர்ணயம் தேவையில்லை. எல்லாமே கனவுபோல் கடந்து போய்க்கொண்டிருக்கின்றன. இனிமேலும் அப்படித்தான் கடந்து போகும்."

"கடந்துபோகுமா அல்லது கடந்து போய்க்கொண்டே இருக்குமா?" கௌதமன் தெளிவு பெற விரும்பினான்.

"இது உன் சொந்தப்பிரச்சினை."

"எனக்கு அஹிம்சையைப் பற்றி விளக்கிச் சொல்லேன்." சிறுவன் பிடிவாதம் பிடிப்பானே அப்படியிருந்தது கௌதமன் கோரியது.

"பிராமணனாகப் பிறந்து விட்டு, அஹிம்சை நெறியை அறிய விரும்புகிறாயே!" ஹரிசங்கர் சிரித்துக்கொண்டே சொன்னான்.

"உனக்கு நினைவிருக்கிறதா? ஆலாரகாலாம் வரப்போகிற புத்தரிடம் என்ன சொன்னார், தெரியுமா?"

"சொல்லேன்."

"ஆலாரகாலாம் புத்தரிடம் சொன்னார்: 'நண்பனே! உன் போன்ற ஞானிகளுடன் உறவாடுவதில் எனக்கு மிக மகிழ்ச்சி. நான் அறிந்த சித்தாந்தங்களையும், கல்வி கேள்விகளையும் நீயும் அறிந்திருக்கிறாய். அதேபோல், நீ கற்றறிந்தவற்றை நானும் தெரிந்து கொண்டிருக்கிறேன். நான் எந்த நிலையில் இருக்கிறேனோ, அதே நிலையில்தான் நீயும் இருக்கிறாய். உன்னைப்போலவே நானும் இருக்கிறேன். ஆதலால் நாம் இருவரும் கூடி பௌத்த சங்கத்தைப் பாதுகாப்போம், வளர்ப்போம், இது என் கோரிக்கை.' இந்தப்பேச்சை நான் என்றும் மறந்ததில்லை." கௌதமன் தன் பேச்சை முடித்துக் கொண்டான். இருவரும் ஓய்வு கொள்ளப் பிரிந்தார்கள்.

வயல்வெளிகளுக்கு அப்பால் குளிர்காலத் தீமூட்டங்கள் கனன்று கொண்டிருந்தன. கிராமத்தின் ஒதுக்குப்புறத்தில் பட்டிமன்றத் திடலில் அரங்கமேடையில் மாகாபாரதக் கதை நடந்து கொண்டிருந்தது. கதை கூறும் 'பாட்' இனத்துப் பாடகன் நிகழ்த்துவது. அந்திவேளையில் அவனுடைய உரத்த குரல் காற்றில் கலந்து கௌதமனின் குடிலிலும் ஒலித்தது. இடையிடையே கதை கேட்பவர்களின் ரசனைக்குரல்களும் கலந்து வந்தன. மிருதங்கத்தொனியுடன் கதை பாடுபவனின் குரல் கலந்து பரவியது. அந்த ஒலிக்கு எதிரொலிபோல், கௌதமனின் இதயம் படபடத்தது. பிறகு காற்றின் ஓசை மேலோங்கவே, அமைதி படர ஆரம்பித்தது.

"இந்த அமைதியே எனக்குப் பல கதைகளைத் தெரிவிக்கின்றது.

சொற்கள் முடங்கிவிட்ட நிலையிலும் என் உணர்வுக்கு ஒடுக்கம் ஏற்படுவதில்லை. இப்படியொரு அனுபவம்!" கௌதமன் தனக்குள் சொல்லிக்கொண்டான், கூடவே பக்கத்தில் இருந்த ஹரிசங்கரையும் பார்த்தான். இதற்கெல்லாம் முடிவுதான் என்ன? யார் தீர்மானிப்பது? யார் யாரைவிடச் சிறந்தவர்? யார் யாரை வெற்றி கண்டார்? கௌரவரா, பாண்டவரா?

"மகத நாட்டுடன் போர் தொடுக்கப்பட்டால், நீ சண்டையில் கலந்து கொள்வாயா?" கௌதமன் உரத்த குரலில் கேட்டான்.

"நாங்கள் எங்களுடைய சொந்தக் கருத்துக்களால் உருவாக்கப் பட்டவர்கள். ஒவ்வொரு மனிதனுக்கும், அவனுடைய செயல்கள், தேவைகள், அல்லது விபத்துகள் யாவுமே அவரவர் இயல்புக்கு ஏற்பவே சம்பவிக்கின்றன. மனிதன் சுதந்திரமானவனல்ல, அவனது சக்தியால் மட்டும் ஏதும் நிகழ்ந்து விடுவதில்லை. பொறுப்புரிமை என்பதெல்லாம் பொருளற்றது" ஹரிசங்கர் தெளிவாகச் சொன்னான்.

நதியில் ஒளிச்சுடர்கள் நிறையத் தெரிந்தன.

"திருமணக்குழு ஏதோ விமரிசையாக வருகிறது போலும்." கௌதமன் தன் ஊகத்தைச் சொன்னான்.

"ஊம்..."

"அரண்மனையைச் சேர்ந்த அலங்கார ஓடம் இந்தப்பக்கமாக வருகிறது என்று நினைக்கிறேன்."

"நாம் வெளியே போகலாம்!" ஹரிசங்கரின் குரலில் கலவரம் மேலிட்டது. இருவரும் குடிலைவிட்டுப் புறப்பட்டு, தோட்டத்தைக் கடந்து கிராமப்புறப் பாதைக்கு வந்து சேர்ந்தார்கள். கௌதமன் பேசாமல் ஹரிசங்கரைப் பின்தொடர்ந்தான். ஓரிடத்தில் சட்டென்று நின்றான். ஹரிசங்கரைப் பார்த்து, "நீ ஒரு அகம்பாவி. உனக்குப் பிறரைப்பற்றிக் கவலையே கிடையாது. தன் புத்தி போகிற போக்கில் சென்று தவறான - தீயதான நிலைக்குத் தன்னைக்கொண்டு சேர்ப்பதில் உனக்கென்ன பெருமை? பிறருடைய மனநிலை-பாதிப்பு பற்றி உனக்கென்ன கவலை?" என்றான்.

"பிறர் எப்படி பாதிக்கப்படுகிறார் என்பது பற்றி நான் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறேன். சரி, வா! நாம் அங்கே போய் வேடிக்கை பார்க்கலாம்."

கௌதமன் பேச்சிழந்தான்.

தீப அலங்காரங்களுடன் ஒளிர்ந்த ஓடங்கள் நதியைக் கடந்தன. நதித்துறையில் கலகலப்பு பரவியது. கௌதமன் ஒரு வழிப் போக்கனிடம், "இது யார் வீட்டுக் கலியாண ஊர்வலம்?" என்று கேட்டான்.

"அயோத்தியிலிருந்து ராஜா பரிவாரங்களோடு வருகிறார்" என்றான்.

கௌதனுக்கு இது எதிர்பாராத பதில். ஹரிசங்கரை அருகில் அழைத்தான். அவனைக் காணவில்லை. கிராம மக்கள் குழுமியிருந்த கூட்டத்துள் ஹரிசங்கர் மறைந்து போனான். இனி அவனைத் தேடிக் கண்டுபிடிப்பது இயலாது. கௌதமன் போர்வையை ஒழுங்குபடுத்திக் கொண்டு நகர்ப்புறத்தை நோக்கி நடந்தான்.

நகரத்துப்பிரதான வீதியொன்றில் அவன் வீடு. அந்தப் பக்கமாகச் சென்றான். அந்த வீட்டிலிருந்து வெளிச்சம் வீதியில் படர்வதைக் கண்டு, அதைக் கடந்துசெல்ல விரும்பாமல், பக்கத்து சந்தில் நுழைந்து சென்றான். நடையில் வேகம், விரைவிலேயே நகரத்தின் எல்லைக்கு வந்து சேர்ந்தான்.

அங்கே ஒரு மாந்தோப்பு; அதனுள் அழகிய மாளிகை மறைந் திருந்தது. இந்த மாளிகையில் நூறு ஆண்டுகளுக்குமுன்பு சாக்கிய முனிவர் புத்தர் வந்து தங்கினார். கௌதமன் சற்றுத் தொலைவில் நின்ற வண்ணம் அந்த மாளிகையைக் கண்டான். வேறொரு ஒற்றை யடிப்பாதை வழியாகத் திரும்பி, நேரே தன் குடிலுக்கு வந்து சேர்ந்தான். அவன் உள்ளத்தில் தீவிர உளைச்சல்: 'சுதந்திரமே இல்லை; எதிலும் இல்லை; பரந்த சூழ்நிலையில், ஒலிக்கடலின் அலை வரிசைகளில், அறிவின் பரப்பில்—எதுவுமே சுதந்திரம் கிடையாது.' என்றோ ஒருநாள் வரலாறு, பெயர் வரிசை, தேசம், காலம் இவை என்னை விழுங்கிவிடப்போகின்றன...

கௌதமன் நதிக்கரைக்கு வந்து, புல்தரையில் வெறும் உடம்போடு படுத்துப் புரண்டான். கொதிப்பு கொஞ்சம் அடங்கியது. உபநிஷத்தின் ஒரு கருத்து அவனுக்கு நினைவு வந்தது: 'தன் ஆத்மாவை மட்டுமே நாடுபவன்—அறிந்து கொள்ள விரும்புபவன் வேறு எதையும் நாட வேண்டியதில்லை; அவனுக்குத் தாய், தந்தை, உலகம், தெய்வம், நல்லவர்-கெட்டவர், திருடர், கொலையாளி, நன்மை-தீமை, கவலை-மகிழ்ச்சி, நிறை-குறை என்று ஏதுமே கிடையாது. ஏனென்றால், அவன் மனக்கிலேசங்கள், சள்ளைகள் யாவற்றையும் வெற்றி கண்டு விட்டான்.'

மேலும் சாக்கிய முனிவர் கூறியிருக்கிறார்:

"தெய்வம் என்று ஒன்று இருக்கிறதோ இல்லையோ, ஒன்று மட்டும் உண்மை: துயரம் யாவர்க்கும் உள்ளது; தவிர்க்க முடியாதது. நாம் தனித்தன்மையுடன் வாழ்கிறோம் என்று பொய்யாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். நாம் சார்புடன் தொடர்புச் சிக்கலுடன் உழன்று வாழ்கிறோம். ஒவ்வொரு பொருளும் துக்கமயம்தான். மனிதன் ஒருநாள் அழிய வேண்டியவனே; விளக்கை எவ்விதம் ஊதி அணைக்கிறோம். அதுபோலத்தான் மனித வாழ்வும் நிகழ்ச்சிகளின் வரிசையும், அனுபவங்களின் தொடர்ச்சியும் மட்டுமே இடையறாது இருந்து வரும்."

நதியின் இளம் அலைகள் கரைவரைக்கும் வந்து கொண்டிருந்தன. கௌதமன் தீயைப் பார்ப்பதை விடுத்து, அமைதியாக வழியும் நதியை நோக்கினான்.

'...நான் துன்பத்தை சகித்துக்கொள்ள விரும்புகிறேன்; நான் பலவீனனாகவே ஆசைப்படுகிறேன். என் மடமை-பேதைமைகளை நானே கண்டுகொள்வேன். நான் துக்கத்தை அனுபவிப்பேன்...'

இதயத்திற்கும் புத்திக்கும் ஏற்படும் கிலேசங்கள் புதிய சோதனைகள் தாம். பலப்பரீட்சைதான்! நான் முக்தியை விரும்ப வில்லை. கருணை என்பது மிகப்பெரிய தத்துவம். சாக்கிய முனிவா! சித்தார்த்தரே! போதப் பசிகொண்ட மாதவரே! எனக்கு உம்மிடத்தில் கருணை பிறக்கிறது. ஆம், யார் யாரிடம் கருணைகாட்டுவது என்பதும் ஒரு பிரச்சினைதான்.

# 3

மலைச்சாரலை ஒட்டிச் செல்லும் பாதை சிராவஸ்தி நகரிலிருந்து வட திசைப்பக்கம் இட்டுச் செல்வது. இரு மருங்கிலும் நாணல் புதர்களும் இடையிடையே பலாச மரங்களும் மண்டியிருந்தன. எங்கும் பூக்காடாக விரிந்தது. அதனூடே ஒரு நதி ஆவேசத்துடன் ஓடிக்கொண்டிருந்தது. மேலண்டைக் கரையில் ஒரு படித்துறை. அங்கு அரண்மனைப் படகுகள் வந்து தங்குவது வழக்கம்.

அயோத்தியையும் வடகோசலத்தையும் ஆண்டுவரும் மன்னன் நண்பர், துணைவர் சூழ வடக்குப்பக்கத்தில் வேட்டையாடப் போகிறான். முன்சென்று திரும்பிய வழிகாட்டிகள், யானைக்கூட்டம் நடமாடும் பாதை அடர்மழை காரணமாகச் சகதி நிறைந்திருப்பதாகத் தெரிவித்தார்கள். வேட்டைக்கான யாத்திரையை மேலே தொடராமல், படகுத்துறையில் பரிவாரங்களுடன் இறங்கினான். யானைகளும், பல்லக்குகளும், ரதங்களும், அலங்கார வண்டிகளும் படகுத்துறையை விட்டுச் சாலை வழியாகப் புறப்பட்டன. சற்றுத்தொலைவில் அரசனின் ராஜகுரு புருஷோத்தமரின் பர்ணசாலையிருந்தது. அதற்கு அப்பாலுள்ள இலுப்பைத் தோப்பில் கூடாரங்கள் அமைத்தார்கள். ராஜ பரிவாரங்கள் அங்கு வசதியாகத் தங்கின. வெறிச்சோடிக்கிடந்த கானகப்பகுதியில் கலகலப்பு களை கட்டியது. திருவிழாக்கோலம்! மான் கூட்டங்களும், வாத்து, வான்கோழி, மயில்கள் சுயேச்சையாகத் திரிந்து கொண்டிருந்த சோலைப்பகுதி இப்போது சந்தைக் கூட்டமாகக் கலகலத்தது!

அரசனுடன் வந்த அந்தப்புறப் பெண்கள் பகல் முழுவதும் அந்தச் சோலையில் உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்தார்கள். மாலை மயங்கியதும், நதித்துறைக்கு வந்து, திளைந்து குளித்தார்கள். சிலர் பகற்பொழுதுகளில் வில்லும் அம்பும் ஏந்தி மான் வேட்டையாடு வதும் உண்டு.

இரண்டு மூன்று நாட்கள் இவ்வாறு கழிந்தன. இதற்குள் சம்பகா சலிப்படைந்தாள். சுவையற்ற வாழ்க்கையாகத் தோன்றியது. அலைச்சல், வேட்டை இரண்டுமே இப்போது அவளுக்கு பிடிக்க வில்லை. ராஜகுமாரி நிர்மலாவை உடனழைத்துக்கொண்டு, யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் குடியிருப்புப் பக்கம் வந்து சேர்ந்தாள். எதிரே மாந்தோப்பு. நல்ல அமைதி; சுகமான குளுமை. வானத்தில் வண்ண பேதங்களுடன் முகில் பத்தைகள் சிதறிக்கிடந்தன. நீர் இறைக்கும் ராட்டினம் இயங்கிக் கொண்டிருந்தது.

“சம்பகா ! பாட்டு கேட்கிறது, கவனி ! அந்தப்பக்கம் போவோம், வா !” நிர்மலா கேட்டுக்கொண்டாள்.

இருவரும் மாந்தோப்பு வழியாக நடந்தார்கள். இலைச்சருகுகள் நொறுங்கின. மரக்கிளைகளின் இடைவெளியில், சற்றுத் தொலைவில் ஆசிரமங்கள் தெரிந்தன.

“இது எந்த இடம்?” சம்பகா கதம்ப மரக்கிளையைப் பற்றியவாறே கேட்டாள்.

“இந்தப் பிள்ளைகள் யார்?” நிர்மலாவுக்கு வியப்பு. பிரும்மச் சாரிகளான மாணவர்களைக் கண்டதும் அவளுக்குத் தன் அண்ணன் நினைவு வந்தது.

கௌதம நீலாம்பரன் தொடர்ச்சியாக மூன்று நாட்கள் வரையிலும் பட்டினியுடன் நதிக்கரைப் பகுதியில் சுற்றித்திரிந்து கொண்டிருந்தான். இரவு வெகுநேரம் வரைக்கும் நதியில் முழங் காலளவு ஆழத்தில் நின்று கொண்டே இருந்தான். அந்தக் குளுமை அவனுக்குத் தேவையாக இருந்தது. பிறகு, மணல் மேட்டில், கருவேல முட்களைப் பரப்பி, அதன் மேல் படுத்து உறங்குவான்.

நான்காம்நாள் அவனுக்குச் சலித்துவிட்டது. குடிலுக்குத் திரும்ப விரும்பினான். மாலையில் தள்ளாடிக்கொண்டு தன் பாதையில் சென்ற போது, பின்னாலிருந்து யாரோ குரல் கொடுப்பது கேட்டது. திரும்பிப் பார்த்தான். அகிலேசன் முறுவலித்தவாறு அருகில் வந்தான்.

“கௌதமா ! மூன்று நாட்களாக உன்னை எங்கெல்லாம் தேடுவது ? கண்காணாமல் எங்கே போனாய் ?”

“நான் இங்குதான் இருந்தேன். நீ எங்கே வந்தாய் இந்தப் பக்கம் ?”

“நீ எதற்கு வந்தாயோ, அதற்குத்தான்” குரலில் கிண்டல் தொனித்தது.

"நான் பகவானின் லீலாவிநோதத்தைக் கண்டு கொண்டிருக் கிறேன்."

"பகவானின் லீலாவிநோதத்தில் சிறு துளியை நேற்றுப் பார்த்தேன். அது வில்லும் அம்பும் தாங்கி, ஒரு மானுக்குப் பின்னால் ஓடிக் கொண்டிருந்தது. என்னைக் கண்டதும் மரத்தில் ஏறிக்கொண்டது."

அகிலேசன் சொல்வது கௌதமனுக்குப் புரியவில்லை.

"வனதேவி! கானகக் கலையே, வனதேவி...!" தொலைவில், புதர்களுக்கு அப்பால் யாரோ பாடிக்கொண்டு செல்வது தெரிந்தது. அடுத்த அடிகள் லேசாகக் கேட்டன: "நீ தொலைவில் கோலங்காட்டி மறைந்தனையே, மீண்டு வருவாயோ, எங்கள் குடிசைப் பக்கம்...?"

"மனிதர்களைக் கண்டால் உனக்குப் பயமோ?"

கௌதமன் பதில் சொல்லவில்லை. இருவரும் குளிர்ந்த காற்றை ரசித்தவாறு, புல் தரையில் நடந்தார்கள். காற்று மணத்தது. இருவருக்குமே பாடத் தோன்றியது. ரிக்வேதப்பாடல் ஒன்று அவர்களுக்கு இயல்பாகப் பாட வந்தது.

வனதேவி! விருப்பம் போலெங்கும் இளைப்பாற
வனப்பான நீர்நிலங்கள் சூழ்நிலையாய்க் கொண்டாய்
மணம்சிதறும் தாவரங்கள் பூவிரித்துப் பூரிக்க
வணங்கும் கலையாய்க்கான கத்தாயேநீ பரந்தாய்!

சற்றுத்தொலைவில், குழல் ஊதிக்கொண்டு மகிழ்ச்சியுடன் சிறுவர் கூட்டம் சென்றது. கிராமத்தில் இன்று கலகலப்பு அதிகம்தான். கௌதமன் களைப்பு மேலிட்டு மரநிழலில் அமர்ந்துவிட்டான்.

"ஒரு பக்கம் தேவிகள், மறுபக்கம் தேவ கன்னிகள், மரக் கிளைகளில் யக்ஷிணிகள்—இந்த மரக்கிளைகளுக்கடியில், நிழலில் இளைப்பாறாதே — எச்சரிக்கை! யக்ஷிணிகள் ஆண்களை மயக்கி வசப்படுத்திக் கொள்வார்களாம். எங்காவது. இரண்டாவது பாடலி புத்திர நகரம் உருவாகி விடப் போகிறது!" அகிலேசன் செயற்கையான பெரும் போக்குடன் உபதேசிக்க லானான்.

"அடேடே! இது யார்?" கௌதமன் எதிரே நிற்கும் பெண்ணை வியப்புடன் பார்த்தான். அருகில் நின்ற அகிலேசன் தன் போக்கிலேயே பிரசங்கித்தான்; "மகாபாரதத்திலே ஓரிடத்தில் வியாஸ கவி கேட்கிறதைப் போல இருக்கிறதே உன் கேள்வி. 'நீ யார், பெண்ணே? கதம்ப மரக் கிளையைப் பற்றிக்கொண்டு ஒயிலாக நிற்கும் நீ தேவ கன்னியோ? யக்ஷிணியோ? அப்ஸரஸோ...?' கௌதமா! மரங்களின் ரகசியத்தைப் புரிந்துகொள்ள முடியாதப்பா!"

"எந்த மரங்களின்?"

"கௌதமா! நாம் பெண்களைக் கவனித்துப் பார்க்கலாம், உற்று நோக்கலாம் என்று எப்போது தீர்மானித்தாய்? இதற்கு உரிமை கிடையாதே நமக்கு. வழி தவறத் துணிந்து விட்டாயா?" அகிலேசன்

எச்சரித்துவிட்டு, முகத்தைத் திருப்பிக்கொண்டான். கிளை மறைவில் விலகிச் சென்றான்.

கௌதமன் திடுக்கிட்டான். எதிரே உன்னிப்பாகப் பார்த்தான். கதம்ப மரத்தினடியில் முன்பு நதித்துறையில் கண்ட பெண் நின்று கொண்டிருந்தாள்.

சம்பகா கௌதமனைப் பார்க்கவில்லை. நிர்மலாவோடு பேசிக் கொண்டே ஒற்றையடிப்பாதையில் வேறுபக்கமாகச் சென்றுவிட்டாள். அகிலேசன் பாறைமீது அமர்ந்து தியானத்தில் லயித்திருந்தான். கண்விழித்ததும் கௌதமனைப் புறப்படுமாறு பணித்தான். இருவரும் கிராமப் பக்கம் நடக்கலானார்கள். குடிசைகள் பக்கம் வந்ததும் கௌதமன் நின்றான். "நான் பிக்ஷை வாங்கி வருகிறேன், நீ முன்னே போ!" என்று சொல்லித் திரும்பினான். அந்தப் பெண்கள் சென்ற பாதையில் விரைந்தான். புதர்களிலிருந்து நீட்டிக்கொண்டிருந்த முட்கள் அவன் கால்களைக் கீறின.

சம்பகா கூடாரத்திற்கு அருகில் வந்தபோது, பின்னால் சருகுகள் நொறுங்க யாரோ பின் தொடர்வது தெரிந்தது. திரும்பிப் பார்த்தாள். சரயூ நதியை நீந்திக் கடந்த வாலிபன் தென்பட்டான். கரிய கண்கள், சிவந்த நிறம்; வெள்ளையான வேட்டி உடுத்தியிருந்தான்; இளம் பிராமண பிரம்மச்சாரி.

"அயோத்தியிலிருந்து இங்கு பலர் வந்திருப்பதாகக் கேள்விப் பட்டேன். இன்று இங்கு பிக்ஷைகொள்ள விருப்பம்." பெருந் தோரணையில் பேசினான்.

"காட்டில் வனதேவியைப் போற்றிப் பாடிக்கொண்டிருந்தது, நீயா?"—சம்பகா மெல்லக் கேட்டாள்.

"பாடியது யார் என்பதும் தெரியாது. நான் யார் என்பதும் எனக்குத் தெரியாது" கௌதமன் சலனமில்லாமல் பதில் சொன்னான்.

"நீ ஓவியம் வரைவாயா?" கௌதமன் பதில் சொல்வதற்குள் அவளே தொடர்ந்தாள்: "குருதேவர் புருஷோத்தமரின் ஆசிரமத்தில் பயிலும் கௌதம நீலாம்பரன் நல்ல சித்திரக்காரன் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். உன்னைப் பார்த்தால் அந்தப் பெயர்தான் நினைவுக்கு வருகிறது. நான் பெயருக்குள்ள புதிரான ரகசியத்தில் நம்பிக்கை கொண்டவள். நீ எப்படியோ?"

"யாரோ மூடர்கள் சொன்ன தகவல்களை நம்பி, இப்போது குறிப்பிட்ட பேர்வழிதான் நான்"

"போகட்டும். நீ என் படத்தை வரைவாயா? இன்று காலை பல ஓவியர்கள் இங்கு வந்து போனார்கள்."

"நான் சிற்பி. கற்பனையின் ஆதாரத்தில், உள்ளத்தின் சங்கேதங் களையும் அழைப்புகளையும் துணைக்கொண்டு சித்திரம் வரைகிறேன். என்னை விசுவகர்மாவானாலும் மதித்துத்தான் ஆகவேண்டும்."

"நீ நாஸ்திகனோ? இந்தக் காலத்து மாணாக்கர்கள் கபிலரின் சாங்கிய மதத்திலும், சித்தார்த்தரின் பௌத்தத்திலும் அதிக நம்பிக்கை கொண்டு வருகிறார்கள்."

"எனக்கு பிக்ஷையாக மாவோ, தானியமோ அளித்து அனுப்பி வையுங்கள். என்வழி சங்கடமாக இருக்கும். சீக்கிரம் திரும்ப வேண்டும்." கௌதமன் குரலில் கண்டிப்பைக் காட்டினான். இந்தப் பெண்ணை மறுமுறையும் பார்க்க மாதக்கணக்கில் சுற்றித்திரிந்து கொண்டிருந்தான். இப்போது அவளை நேரிடையாகச் சந்தித்திருக்கிறான். இருந்தும், அவசரப்படுகிறான் விலகிப்போக! அவனுக்கு அவளைக் குறித்து நெருக்கமான உரிமை உணர்வு ஏற்படத் தொடங்கியது. தன் உள்ளம் - இதயம் - வாழ்வு - சகலத்திலும் கலந்திருக்கும் ஓர் அங்கம் அவள் என்று உணர ஆரம்பித்தான்! சங்கோசம், நாணம், கூச்சம் ஏதும் அங்கு குறுக்கிடவில்லை. அநாதி காலமாக அவள் தெரிந்தவள் என்கிற உரிமையான ஒட்டுறவே அவனுக்குத் தோன்றியது.

கௌதமன் பக்கத்திலிருந்த மற்றவளைக் கவனித்தான். அவள் கௌதமனை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அவளை எங்கோ பார்த்த நினைவு. அவனும் உற்றுப் பார்த்தான். ஆம், இவள் ஹரிசங்கரின் தங்கை; அவளேதான்!

சம்பகா கூடாரத்திற்குள் சென்று கோதுமை மாவு கொணர்ந்து, கௌதமனின் பிக்ஷைப்பாத்திரத்தில் இட்டாள். "சரி, போய்வா! சௌகரியப்பட்டபோது இங்குவா!" மெல்லச் சொன்னாள்.

பிக்ஷை இட்டவளை வணங்கிவிட்டுத் திரும்பினான். இந்த இரு பெண்களும் அரசனுடன் எதற்காக வந்திருக்கிறார்கள்? கூடாரங்களுக்கு அருகில் பல பெண்கள் இங்குமங்கும் நடமாடிக்கொண்டிருந்தார்கள். இந்த இரு பெண்களும் தனித்தன்மையுடன் தனித்தே இருந்தார்கள்.

"அந்த இரு பெண்களும் யார்?"—எதிர்ப்பட்ட ஒரு முதியவளிடம் கௌதமன் கேட்டான். அவள் சமையல் கூடமாக அமைத்திருந்த கூடாரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள். திகைப்புடன் நின்று கௌதமனை வியப்புடன் பார்த்தாள்: கண்கள் பிரகாசித்தன: "பார்ப்பதற்கு நீ பிராமண பிரும்மசாரி போல் இருக்கிறாய். உனக்கு ஏன் இந்த ஆர்வம்? ஒருத்தி ராஜகுருவின் மகள் சம்பகா: மற்றவள் ராஜகுமாரி நிர்மலா. இருவரும் ராஜாவுடன் யானை வேட்டையைப் பார்க்க வந்திருக்கிறார்கள். இதை நீ தெரிந்துகொள்ள வேண்டுமோ? இதோ பார்! நீ இனிமேல் இந்தப்பக்கம் வராதே! இப்போதெல்லாம் போக்கிரிப்பயல்கள் துறவியாகவும் பிரும்மச்சாரியாகவும் வேஷம் போட்டுக்கொண்டு வந்து மோசம் செய்கிறார்கள், மகா மோசம்!" கோபமாகப் பேசிவிட்டு அவள் மேலே சென்றாள்.

கௌதமன் சினந்தான். "கிழப்பேய்! நாணங்கெட்ட முண்டம்!" தனக்குள் ஏசிவிட்டு, தன் ஆசிரமத்தை நோக்கி நடந்தான்.

மறுநாள், கௌதமன் சால்வையை மேலே போர்த்திக்கொண்டு கூடாரங்கள் உள்ள சோலையை நோக்கி நடந்தான். பல இடங்களிலும் தேடிப்பார்த்தான். அவள் தென்படவில்லை. அரச குடும்பத்துப் பெண்கள் பொது இடங்களில் தென்படவும் மாட்டார்கள். ஏதாவதொரு பட்டுவிதானத்திற்கு அடியில் கிளியுடன் கொஞ்சிக் கொண்டிருக்கிறாளோ என்னவோ?—இதை நினைத்ததும் அவனுக்கு சிரிப்பு வந்தது. கிளிக்குப் பேச்சுக் கற்றுக்கொடுப்பது பெரிய இடத்துப் பெண்களுக்குப் பொழுதுபோக்கு. அல்லது பல்லக்கில் அமர்ந்து காற்று வாங்கச் சென்றுவிட்டாளோ என்னவோ?

"நான் இங்கே இருக்கிறேன்." கதம்ப மரத்தின் மறைவிலிருந்து அவள் வெளிப்பட்டாள். அவனுக்கு நிலை கொள்ளவில்லை.

"நீ ஏன் கவலையாக இருக்கிறாய்? எனக்கு கவலைப்படுவது அலுத்துவிட்டது. நேற்றிலிருந்து நிர்மலா விசனப்பட்டுக் கொண்டிருக்கிறாள்."

"ஏன்?"

"அவளுடைய சகோதரன் அரச வைபவத்தைத் துறந்து எங்கோ சென்றுவிட்டான். நேற்று உன்னைப் பார்த்ததிலிருந்து அவளுக்குத் தன் சகோதரனின் நினைவு வந்துவிட்டது."

"ஆனந்தன் தன் காதலியைத் துறந்து விட்டானாம். அதுவும் சித்தார்த்தர் பேச்சைக்கேட்டு."

சம்பகா பேசவில்லை.

"ஒருகால் ஆனந்தன் திரும்பி வந்தாலும் வரலாம். அவன் இன்னும் முழுவதும் 'அர்ஹத்'(புத்த) நிலையை எட்டவில்லை. அடிக்கடி திரும்பி வந்துவிடுகிறான்."

"இது கெட்ட செய்தி. முக்தி உயர்ந்த நிலை. அவனுக்கு எடுத்துச் சொல்லேன். சாக்கிய முனிவர் மஹாமதியிடம் என்ன சொன்னார் தெரியுமா?"

"என்ன சொன்னாராம்"

"சாக்கிய முனிவர் சொன்னார்: மஹாமதி, எப்படி நடிப்பு, நடனம், இசை, ஓவியம், மற்ற கலைத்தொழில் ஆகியவற்றில் மெல்ல மெல்லத் தேர்ச்சி பெறுவதைப் போலவே, 'அர்ஹத்' நிலையும் சாதனை மூலம்தான் ஏற்படும். நம் அரசகுமாரன் தியாகத்தைக் கூட ஒரு கலை என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்."

சம்பகா ஒரு மேட்டில் உட்கார்ந்தாள்.

"என்னுடன் வாயேன், நான் வரைந்த சித்திரத்தைக் காண்பிக்கிறேன்."— கௌதமன் சொன்னான்.

"எனக்கென்ன லாபம்?" உற்சாகத்துடன் அவள் கேட்டாள்.

“என்னைக் கோமாளி, வெறும் கற்பனைப்பித்து என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா ? என்னையும் மற்ற மாணாக்கர்களைப்போல எண்ணிவிட்டாயா ? சம்பகா ராணி, சிராவஸ்தி நகரைச் சேர்ந்த இந்தக் கௌதம நீலம்பரன் சித்திரக்கலையில் தேர்ந்த பெரிய ஆசாரியர் என்று உலகம் புகழப்போவதை நீ கேட்கப் போகிறாய்.”

சம்பகா பேசவில்லை. பத்துவருஷங்களுக்குமுன்பு ஹரிசங்கர்—நிர்மலாவின் சகோதரன்—இப்படித்தான் வீறாப்புடன் பேசினான். ‘என்னைச் சோம்பேறி, கற்பனாவாதி என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் ஒரு நாள், அயோத்தியின் அரசகுமாரன் கணித சாஸ்திரத்தில் மகா நிபுணன் என்று கேள்விப்படப் போகிறாய்!”

‘கருத்து வெளியீடு நோக்கத்தால் வேறுபட்டிருக்கலாம். ஆத்மாவுக்கு ஆசைப் பந்தம் காரணமாக இப்படைப்பு முழுவதுமே கானல் நீராகத் தோற்றமளிக்கிறது. அந்தக்கானல் நீர் என்னையும் ஹரிசங்கரையும் நிம்மதியில்லாமல் செய்துவிட்டது. அடிப்படை நோக்கமென்ன ?’ கௌதமன் சிந்தித்தான்.

சம்பகா இறங்கி வந்தாள். “உன் நண்பன் ஆனந்தன் எங்காவது தென்பட்டால், அவனிடம் சொல், ‘நீ காதலித்த சுந்தரி நீ காணும் கானல் நீர்த்தோற்றத்திலிருந்தும் விடுபட்டுவிட்டாள். ஆதலால் நீ எதற்கும் கவலைப்பட வேண்டாம்.’ இதை மறக்காமல் சொல்லிவிடு.”

“நான் கேள்விப்பட்டது உண்மைதானா? நீ பிக்குணியாக விகாரைக்குப் போகப் போகிறாயாமே?”

“அதில் என்ன தவறு? அந்த அனுபவத்தையும் பார்த்து விட வேண்டாமா?”

“சம்பகா உனக்கு என்ன வயதாகிறது ?”

“பல நூற்றாண்டுகள். குத்து மதிப்பாகக்கூடக் கூற இயலாது; நினைவில்லை.” அவள் சிரித்து விட்டாள்.

கொஞ்ச நாட்களுக்கு முன்பு, நாடோடிப்பாடகர்கள் வாயிலாக மகாபாரதக் கதையை பாடக் கேட்டேன். பீஷ்மர், அர்ச்சுனன் கதையைக் கேட்டபோது, ‘அந்தக் காலத்தில் சித்திராங்கதாவும் அலோபியும் எப்படி இருந்திருப்பார்கள்?’ என்று நினைக்கத் தோன்றியது.”

“என்னைக் கண்டதும் அந்த நினைப்புக்குப் பதில் கிடைத்திருக்குமல்லவா ? நீதான் சிலைவடிக்கும் கலைஞானாயிற்றே ! சிற்பி...”

“நீ மாறாக ஏதும் சொல்லிவிடவில்லை. எந்தக் கலைப்படைப்பிற்கும், பெயர்-உருவம் இரண்டின் இணக்கமும் இன்றியமையாதது, பெயரால் செவியும், உருவால் கண்ணும் அறிமுகமாகின்றன.”

“தன்மை-இயல்பு என்ற நிலையில் உள்ள ஒன்றை அறிவால்தான் உணர முடியுமேயன்றி, புற உணர்வுகளால் அனுபவிக்க முடியாது. இல்லாவிட்டால், உன் கருத்தை நீயே மறுக்க வேண்டி வரும்.”

“தூய உருவம் இயல்புதான. செயற்கையான கலவையல்ல. அதை வெளிப்படையான அடையாளத்தால் இனங்காட்ட முடியும். குறிப்பாக அறிவிக்க முடியும்; அதையே வெளிப்படைச் சின்னமாகக் கருதிவிட முடியாது.”

“வானத்திற்கு உருவம்தான் அடையாளம்”

“சுத்தமான உருவம். நிலையின் விளக்கத்தைப்பற்றி வாதிடுபவரின் நிலையே சாசுவதமில்லை.”

“நீ எப்படி உருமாற விரும்புகிறாய்?”

“ஒருநாள் அதை நான் உனக்குச் சொல்லத்தான் போகிறேன். பொறுத்திரு!”

ஆடு கத்துவது கேட்டது. நிர்மலா வெண்மையான மலர்களைக் கூடை நிறையக் கொய்து நிரப்பிக்கொண்டு, ஒற்றையடிப் பாதையில் வந்து கொண்டிருந்தாள். கௌதமனைப் பார்த்ததும், அவள் கூடையை வரப்பின் மேல் வைத்துவிட்டு, கைகுவித்து வணங்கினாள். கௌதமன் ஞான முதிர்ச்சி கண்ட புனிதரான அந்தணரைப்போல், அவளை ஆசீர்வதித்தான். பிறகு, திரும்பிப் பாராமல் நடந்தான்.

சாந்தி—மன அமைதி பெற்றவர்கள் பாக்கியசாலிகள்!

சம்பகா முணுமுணுத்துக் கொண்டாள். அவளுக்கு கௌதம சித்தார்த்தர் கயா ஷேத்திரத்தில் நிகழ்த்திய தர்மோபதேசம் நினைவு வந்தது. அன்று அவர் கூறினார். “பெரியவர்களே! எல்லாப் பொருள் களையும் தீப்பற்றிக் கொண்டது. கண்களில் தீ கனல்கிறது. உருவம், அமைப்பு, பார்வை, புலன்களுடன் தொடர்பு கொண்ட பொருள்கள், தீராத வேட்கை, ஆசை, சொற்கள், வாசனை, நாற்றம், அறிவு, மூளை, எண்ணம், உறுப்புகள், பௌதிகக் கற்பனைகள்—சகலமும் இந்தத் தீயில் வெந்துபோகின்றன. இதற்கான தீக்குண்டத்தை உருவாக்குபவை வெறுப்பு, விருப்பு, பிறவி, முதுமை, சாக்காடு, சோகம், துயரம், நிராசை—இவைதாம்.”

குருகுலத்திலிருந்து வந்த மாணவன் திரும்பிச் சென்று விட்டான். சோலைப்பகுதி கீழைக்காற்றில் ஆவேசமாக ஆடிக்கொண்டிருந்தது. மரங்களை ஒட்டிய ஒற்றையடிப்பாதையில் பிக்குணிகள் பிட்சா பாத்திரத்தை ஏந்தியவாறு தம் குடில்களுக்குச் சென்றுகொண்டிருந் தார்கள். அவர்களுடைய முகங்களில்தான் என்ன அமைதி! அவர்கள் ஓட்டமுள்ள தனி வழியில் கலந்துவிட்டார்கள். இனி அங்கிருந்து திரும்புதல், தடம் மாறுதல் ஏதும் கிடையாது. நானும் அப்படிக் கலக்க முடியுமா?—சம்பகா ஏக்கத்துடன் சிந்தித்தாள்.

“பெண்களைப் பற்றி நம் பொது நோக்கு எப்படி இருக்க வேண்டும்?” நூற்றாண்டுகளுக்குமுன்பு இதே சிராவஸ்தி நகரில் முக்கியத்துவம் வாயந்த இக்கேள்வி எழுப்பப்பட்டது.

“ஆனந்தா! அவர்களைப் (பெண்களை) ஏறிட்டும் பார்க்கக்

கூடாது." பதில் வந்தது.

"ஒருகால் அவர்களைப் பார்க்க வேண்டி வந்து விட்டாலோ? அல்லது, பார்த்துவிட்டால்?"

"அவர்களுடன் பேசக்கூடாது."

'அவர்களாகவே வலிய வந்து பேசினாலோ?"

"எப்போதும் விழிப்பாய் இருக்க வேண்டும்."

பல இரவுகள் தொடர்ந்து விழித்திருந்ததால், கௌதமனின் கண்கள் சொக்கின. உறக்கம் சூழ்ந்து தாக்க வந்தது. அவன் சிரமப் பட்டு விழித்துக் கொண்டிருந்தான்.

அரச பரிவாரங்கள் தங்கியிருந்த சோலையிலிருந்து கால் சலங்கையொலியும், பக்கவாத்தியத் தொனிகளும் எழும்பின. முழுமதி நகர்ந்து நகர்ந்து ஆசிரமத்திற்கு மேலே வந்தது. மலர்க்கொடி களுக்குக் கீழே அடக்கமாக அமைதியில் மூழ்கியிருந்த குடில்கள் நிலவொளியில் சோபித்தன. சில குடில்களில் விடி விளக்கு மினுக்கிக் கொண்டிருந்தது. கௌதமன் மட்டும் உறங்கவில்லை. அவன் மெல்ல எழுந்தான். வெள்ளைச் சாதராவைப் போர்த்திக்கொண்டு ஆசிரமத்தை விட்டு வெளியே வந்தான். சோலைப்பக்கம் விரைவாக நடந்தான். சருகுகள் நொறுங்கிய சப்தம் கேட்டது. துணுக்குற்ற அணில் குறுக்கே பாய்ந்து ஓடியது. அவன் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டான். எவரும் பார்த்துவிடக்கூடாதே என்கிற கவலை. தீவட்டிகள் எரிந்து கொண்டிருந்த சோலைப்பக்கம் சென்றான். சிறு அரங்கம்; பெண்களின் இசைக்குழு நாட்டியத்திற்கு ஏற்ப இசைத்துக் கொண்டிருந்தது.

கௌதமன் கவனித்தான். தன்னை ஏசிய கிழவி அரங்கத்திற்கு எதிரில் அமர்ந்திருப்பதைக்கண்டு துணுக்குற்றான். கூடாரத்தின் மறைவில் ஒருக்களித்து நின்று கொண்டான். அரங்கத்தின் தன்மயத் துடன் ஆடிக் கொண்டிருந்த பெண்ணின் கலைத்திறனை ரசித்துக் கொண்டிருந்தான்.

ரசிகர்கள் திகைத்தார்கள். ஒரு வாலிபன் கூடாரத்தின் பின்பக்கத் திலிருந்து மேடைக்கு வந்தான். சலங்கைகளைக் கால்களில் கட்டிக் கொண்டு, உற்சாகப் பெருக்குடன் தாளகதிகளுக்குக்கேற்ப தாண்டவ நடனம் ஆடத் தொடங்கிவிட்டான். எதிரே இருந்தவர்கள் வியப்பு மேலீட்டுடன் நடனத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். நடராஜப் பெருமானே மனிதவுருக்கொண்டு இங்கு வந்திருக்கிறாரோ? அதிசயித் தார்கள்.

நடனத்திற்கு ஏற்ற எட்டுச் சுவைகளையும் கருத்துக் குறிப்பால் வெளிப்படுத்தினான். சிவ தாண்டவம் தனிச்சிறப்பாக அமைந்தது. முத்திரைகளில் உலகத்தின் ஆக்கம், இயக்கம், அழிவு மூன்றையும் தெளியவைத்தான். சிவமயமானான். அவன் வாக்கு சப்த பிரும்பம்;

ஜீவராசிகளின் உயிர்ப்பு அதில் தெரிந்தது. அவனுடைய ஆடைதான் சந்திரன், விண்மீன்கள். சிவபிரான்தான் தாளம், லயம், கதி, ஜதி, இசை சகலமும் என்பதை அவன் எடுத்துக்காட்டினான். சர்வ வியாபியான சிவ தத்துவம் புலனாயிற்று!

சம்பகா நடனமாடிக்கொண்டே அவன் அருகில் வந்து நின்றாள் பார்வதியானாள்; சிவனின் துணைவி—சக்தி சொரூபம். சிவ-பார்வதி நடனம் இனிய கலைமலர்ச்சியாகத் தொடங்கியது. தெள்ளிய நிலவு; விரிந்த நிலப்பரப்பு; இசை முழக்கம்; துணை வாத்தியங்களின் கூட்டுறவு. மோகனக் கவர்ச்சி சூழ்நிலையை எழில் மயமாக்கியது. வெள்ளிப் பத்தைகள் போன்ற வெண்முகில்கள் நதிக்குமேலே மிதந்தன. கொக்குகள் இறக்கை இடுக்கில் அலகைச் செருகி, ஒடுக்கமாக மணல் திட்டில் உறங்கிக் கொண்டிருந்தன. கார்த்திகை மாதத்து முழு மதியும் மலர்களின் மேலிருந்து தரையில், கண்ணோட்டம் விட்டது.

இரவு ஓய்ந்து ஒடுங்கியது. கலை கேளிக்கையில் விழாக்கோலம் பூண்டவர்களின் ஆரவாரம் அடங்கியது. சிலம்பொலிகளும் பாடல் ஓசையும் நின்றன. புலரி தொடங்கியதும், கூடாரப் பகுதியில் முழு அமைதி நிலவியது. அரங்கமேடையில் மலர்களும் மொக்குகளும் நிறையச் சிதறிக் கிடந்தன.

## 4

பொழுது புலர்ந்தது. இமயத்தின் சிகரங்களின் மேல் இளம் இருள் மூட்டம் விலகிக் கொண்டிருந்தது. பொய்கைகளில் சிவந்த தாமரை மலர்கள் விரிந்தன. கிராமத்துப் பாதையில் சேர்ந்து செல்லும் ஆயர் மகளிரின் தலையில் பால் - தயிர்க்குடங்கள் இளம் வெயிலில் பள பளத்தன. இலுப்பை மரங்களில் மலர்கள் குலுங்கின. அங்கே வண்டுகள் ரீங்கரிப்பது அவன் செவியிலும் ஒலித்தது. வெம்மையேறிய பகலவனின் கதிர்கள் அவன் இமைகளை உணர்த்தியதும், கண்களைக் கசக்கிக் கொண்டு அவன் எழுந்தான். தான் சிதிலமடைந்த படிக் கட்டில் கிடப்பதை உணர்ந்தான். அது குளத்தின் படித்துறை. கண் விழித்துப் பார்த்தபோது, கலவரமடைந்தான், 'நாம் எங்கிருந்தோம், இங்கு எப்படி வந்தோம்...?' தீவிரமாக யோசித்தும் விளங்கவில்லை.

அலுப்புத் தீர சோம்பல்முறித்தபின் எழுந்தான்; மறுபடியும் உடலை முறுக்கிச் சுறுசுறுப்பை வளர்த்துக் கொண்டபின், படியில் நிதானமாக உட்கார்ந்தான். எதிரே இலுப்பைத் தோப்பைக் கண்டான்.

கூடாரங்களைக் காணவில்லை. வெறிச்சோடிக் கிடந்தது. மரத்தின் மறைவிலிருந்து ஒரு மான் விருட்டென்று ஓடியது. அணில்கள் வில்வப் பழங்களைக் கடித்துத் தின்று கொண்டிருந்தன. பச்சைக் கிளிகள் கொப்புகளிலிருந்து பறக்கத் தொடங்கிவிட்டன. கானகப் பகுதி அமைதி பெற்றது. ஆனால் அவன் அமைதி குலைந்திருந்தான். தெளிவற்ற கனவுகளாக முந்தைய நிகழ்ச்சிகள் நினைவு வந்தன. அருகில் அரச பரிவாரங்கள் வேட்டைக்குப்போகும் வழியில் தாவளமிட்டுத் தங்கியிருந்தன. திறந்த வெளியில் அமைத்திருந்த அரங்கத்தில் இரவு முழுவதும் நடன விழா நடைபெற்றது. பலர் தோன்றி நடனமாடினார்கள். அவனும் ஆவலை அடக்க முடியாமல் கலந்து கொண்டான். களிவெறியுடன் ஆடினான். நேரம் போனதே தெரியவில்லை. களைத்துத் தள்ளாடி அமர்ந்தபோது, அரசர் அவனைத் தம் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். அவனும் நறவமும், வறுத்த இறைச்சியும் வழங்கப்பட்ட போது மறுக்கவில்லை. விருந்தில் திளைத்தான். அந்த இரக்க நிலையிலும் சம்பகாவைத் தேடித் துருவின அவன் கண்கள். அவளோ நடன விழா முடிந்ததும், அரசகுமாரியுடன் அந்தப்புரப் பகுதிக்குச் சென்று விட்டாள். அவளை எதிர்நோக்கி விடியும் வரை அவன் காத்திருந்தான். பிறகு சோர்ந்து போய் விரக்தி மேலிட, ஆசிரமத்திற்குக் கிளம்பினான். உறக்கம் அவனை நடக்க விடவில்லை. தள்ளாட்டத்துடன் படித் துறையில் படுத்தவன்தான். வெயில் ஏறிய பிறகே விழிப்புக் கண்டது. விடியற் காலையில், வேட்டைக்குப் புறப்பட துந்துபி முழங்கியதோ, கூடாரங்கள் கலைக்கப்பட்டதோ, புறப்பட்டபோது, சம்பகாவும் அரசகுமாரியும் படித்துறைப் பக்கம் வந்தவர்கள் கௌதமனைக் கண்டு துணுக்குற்றதோ, அவர்கள் பேசிக் கொண்டதோ— எதுவும் தெரியாது அவனுக்கு.

அரசகுமாரி நிர்மலா தேவி அப்போது சொன்னாள்; 'சம்பகா! அதிசயமான பிராமணப் பையன் இவன்! முந்தாநாள் உன்னுடன் ஓவியத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தான்; இரவு நடராஜப் பெருமானைப் போல் ஆனந்தத் தாண்டவம் புரிந்தான்; இப்போது குழந்தையைப்போல் தூங்கிக்கொண்டிருக்கிறான். இவனை எழுப்பி, விடைபெற்றுக் கொள்வோமே."

சம்பகா கௌதமனையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு நிர்மலாவிடம், "வேண்டாம். விழித்திருப்பவனுக்கு ஒரு உறக்கம் வரத்தான் செய்யும். இதேபோல் தூங்குபவனுக்கு விழிப்பு வராமல் போகாது. எப்போதும் விழித்திருப்பவர்களைத்தான் நாம் பார்க்க வேண்டும்; வா, போகலாம்."

இருவரும் பல்லக்கில் ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள்.

இப்போது இலுப்பைத் தோப்பில் பூரண சாந்தி நிலவியது.

படியில் அமர்ந்தவண்ணம் அவன் சிந்தித்தான். அந்த ஓர் இரவிலேயே அவன் வெகுவாக வளர்ந்துவிட்டான். அவன் இதயத்தில் தனி பிரபஞ்சம் விரிந்தது. அதில் அவன் சுயேச்சையாக சஞ்சரித்தான். துணைக்கு மாயையைச் சேர்த்துக் கொண்டான். இதற்காக அவன் வருத்தப்படவில்லை. என்ன விசித்திரமான அனுபவங்கள்! சிவனுக்குப் பதிலாக, வாழ்வில் எழும் நஞ்சு முழுவதையும் அவனே மாந்திவிட்டது போல் இருந்தது. இந்த முயற்சியே விநோதமாகத்தான் இருந்தது. இந்தப் போட்டியை அவன் கபிலனோடு போடவில்லை. அப்பாவி ஹரிசங்கர் பல காதங்களுக்கப்பால் எங்கோ இருப்பான்!

ஆனால்... சம்பகா புறப்படும்போது ஏன் என்னைச் சந்திக்க வரவில்லை. எழுப்பி விடை பெற்றுக்கொள்ளக்கூட அவளுக்குத் தோன்றவில்லையா...?

கௌதமனுக்கு இதை நினைத்ததும் மகிழ்வு முகிழ்த்தது. 'என்னிடம் விடை பெற அவள் யார்? வேறு பாட்டுக்கே இட மில்லையே. என்னுள் ஒன்றிவிட்டவள். என்னிடம் பேச, விடைபெற வேண்டிய அவசியம்? அவள் என்னோடு, எப்போதும் இருக்கிறாள், பேசுகிறாள், உறவாடுகிறாள். ஒருவேளை இதுவும் மாயைதானோ? பிதற்றல். நான் என்னையே ஏமாற்றிக் கொள்ளுகிறேன். மாயையில் செம்மையாகச் சிக்கிக் கொண்டதன் விளைவு இது! அவள் என்னை விட்டுப் பிரிந்தவள், வேறுபட்டவள்; வெகு தொலைவில் ஒதுங்கிப் போனவள். நான் எங்கே, அவள் எங்கே...? எல்லாமே பொய்தான், பிரமைதான்.

"நல்லது!" கௌதமன் படியிலிருந்து எழுந்தான். (இங்குதான் அவள் அன்றைக்கு உட்கார்ந்திருந்தாள்.) "சம்பகா! வெகு ஆடம்பரத் துடன் யானை வேட்டைக்குக் கிளம்பிவிட்டாய்! இந்த வாழ்வு? உன் துணை இல்லாமலேயே கழியும்."

ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். இதுதான் அவனுக்கு இறுதி ஆண்டு. படிப்பு முடிந்ததும் அவன் தந்தை வந்து அழைத்துப்போவார். குருதேவர் அவனை ஆசீர்வதித்து அனுப்பும்போது வழக்கம்போல் உபதேச மொழிகளை வழங்குவார்:

'ஸத்யம் வத! தர்மம் சர!' (உண்மை பேசு, உனக்குரிய தர்மத்தைக் கடைப்பிடி!) எந்தத் தர்மத்தை? அவனுடன் பயிலும் மாணவர்கள், மற்ற ஆசிரமத்துச் சிறுவர்கள் யாவரும் அவனை வழியனுப்பப் படித்துறை வரைக்கும் வருவார்கள். வித்தையைக் கற்றுத் தேர்ந்ததற்கு அறிகுறியாக, படிப்பாளியாகிவிட்டதைக் கௌர விப்பதாக, அவன் தலையில் பரிவட்டம் கட்டிக்கொள்ளுவான்; கண்களுக்கு மை தீட்டிக்கொள்வான். காதுகளுக்கு மணி குண்டலங்கள் அணிந்து கொள்வான். காவிக்கரை போட்ட சாதராவைத் தோளில் போட்டுக்கொள்வான். கால்களுக்குக்

செருப்புகள்; தலை முடியில் முள்ளம்பன்றி முள்ளாலான ஊசியைக் குடுமி முடிச்சுக்கு இதவாகக் குத்திக்கொண்டு, குடையைப் பிடித்த வண்ணம், மிக மதிப்பாக சிராவஸ்தி நகர வீதிகளில் நடந்து செல்வான். அயோத்தி, பாடலிபுத்திரம் சென்று ராஜ சபைகளில் சன்மானம் பெறுவான். புரோஹிதராகப் பதவி ஏற்பான். அரசரின் மந்திரிகள் குழாமில் இடம் பெறுவான். அந்தப் பேதைப்பெண் சம்பகா அப்போது என்ன நிலையில் இருப்பாள்? மூடப்பெண்... மகதத்தின் பாழடைந்த விகாரையில், சிரத்தை முண்டனம் செய்து, துறவுக்கோலம் பூண்டு, சாக்கிய முனிவர் புத்தர் போதித்த நிர்வாண நிலையை எய்தத் தவம் செய்து கொண்டிருப்பாள்.

அவளுக்குத் தன் மேதாவிலாஸத்தில் இவ்வளவு செருக்கு இருக்குமானால், எனக்கு என் உயர்த்தியில் கர்வம் இருக்கக் கூடாதா? வெறும் சித்திரக்காரனாகவும், படிமம் படைக்கும் சிற்பியாகவும் இருந்து என்ன பலன்? நான் தர்ம சூத்திரங்களை இயற்றுவேன். சட்ட திட்டங்களைப் படைப்பேன். மனு, கபிலன், ஜைமினி எவரும் என் கால்தூசி பெறமாட்டார்கள். பெரிய மேதாவிகளின் உலகத்தையே உலுக்கிக் காட்டுவேன். ஞானபலம் என்னிடம் குறைவில்லை. விநாயகருடைய எழுதுகோலைப் போன்றது என் எழுத்தாணி. சம்பகா என்னை வரிக்கா விட்டால் ஒரு கேடும் வந்துவிடாது; என் வாழ்வு இருண்டு விடாது. என்னிடம் கலைமகள் பூரணமாக வீற்றிருக்கிறாள். அவள் என்னைப் புறக்கணிக்க மாட்டாள்; என்னை விட்டு ஒரு போதும் விலகமாட்டாள்.

சம்பகாவிடம் அப்படி என் கவர்ச்சி? உலகில் ஆயிரம் அழகிகள் உலவுகிறார்கள் ஏன்? அந்த ராஜகுமாரி நிர்மலா எவ்வளவு அழகு...! ஆனாலும், சம்பகா! உன்னை உற்றுப்பார்த்தால், உனக்கு ஈடு இணையான அழகியைக் காணத்தான் முடியாது.

அவள் அழகு உருவம் எப்படியிருந்தது...? கௌதமனுக்கு நினைத்ததும் கோபம் எழுந்தது. தரையில் தென்பட்ட சரளைக் கற்களை உதைத்துத் தன் சினத்தைக் காட்டிக் கொண்டான். 'நான் தீர்மானித்து விட்டேன். உன் படத்தை ஒருபோதும் நான் எழுதப் போவதில்லை. சம்பகா! நீ உன்னைப்பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நான் உன்னைத் துளியும் மதிக்கவில்லை. உன் உருவத்தையே மறந்து வருகிறேன். உருவம் வெறும் கூடு. என் இதயத்தில் இடம் பெற்றிருக்கிற— பத்திரமாக இருக்கிற உருவத்தை விசுவகர்மா இருக்கிறானே — தேவலோகச் சிற்பி — அவன்தான் அறியமுடியும்.

கௌதமன் மனச் சள்ளையுடன் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தான். இருப்புக் கொள்ளவில்லை; வெளியே வந்தான்; இங்குமங்குமாகத் திரிந்தான். ஆசிரமத்து மாணாக்கர்கள் கௌதமனை வியப்புடன்

கவனித்தார்கள். ஒருவன் கேட்டான். "இரவு எங்கே போயிருந்தாய்?" கௌதமன் பொருட்படுத்தவில்லை.

நண்பன் அகிலேசன் கேட்டபோது, பொய் சொன்னான். "நதிக் கரையில் இரவு முழுதும் தங்கித் தவயோகத்தில ஆழ்ந்திருந்தேன்." அவன் மனமறிந்து சொல்லும் முதல் பொய் இது. பொய் சொல்வது இப்போது அவனுக்கு இயல்பாகத் தோன்றியது; விரும்பவும் செய்தான். அன்றைக்கு அவன் சந்தியாவந்தனம் செய்யவில்லை; வழக்கம்போல் குருவை வணங்கவும் போகவில்லை. ஆசிரமங்களை அடுத்துள்ள சோலையில் திரிந்து கொண்டிருந்தான்.

"நான் அவள் உருவத்தை வரையப் போவதில்லை. வாழ்க்கையின் எல்லாத் தொடர்புகளையும்விட உயர்ந்ததாக இருக்கவேண்டும் கலை." தனக்குள் பலதடவை சொல்லிக் கொண்டான். இறுதியில் முடிவை அவனால் புறக்கணிக்காமல் இருக்க முடியவில்லை. அவன் கலைஞன்; படைப்பார்வம் அவனை உந்தியது, அலைக்கழித்தது.

மறுநாளே கௌதமன் ஓவியத்திற்கான உபகரணங்களையும், சிற்பம் செதுக்கத் தேவையானவற்றை எடுத்துக்கொண்டு, இலுப்பைத் தோப்புக்கு வந்து சேர்ந்தான். படித்துறைக்கு எதிரே இடம் சரி செய்தான். வண்ணங்களைக் குழைத்து வைத்தான். தூரிகை, திரைச் சீலைகளைச் செப்பம் செய்தான். புதிய வண்ணங்கள் இறக்க மூலிகைகளைக் கொதிக்க வைத்தான். சீனத்துத் திரைச்சீலையில் ஓவியம் வரையத் தொடங்கினான். ஓடவில்லை. உருவம்—அருவம் இரண்டிற்கும் இடையே கீழே வைத்துவிட்டு, நான் எதை வரைவது? இதற்குப் பொருள் என்ன? வேதாந்திகள் 'ஈசுவரன் உருவற்றவன், அறியவொண்ணாதவன், புலப்படாதவன்' என்று சொல்கிறார்கள். ஏதாவது ஒரு புறச்சான்று, எடுத்துக்காட்டு இருந்தால்தானே கருத்துக்கு உருக் கொடுக்க முடியும்...? வாழ்ந்து கொண்டிருப்பதே உயிருக்கு அடையாளம் தான், அதுவே உயிர். உயிருக்கு அது இலக்கணமாகாது. அதன்பால் கவரப்படுவது அவரவர் கருத்துக்கு ஏற்றவாறு அமையும். பிறகு, கலைஞன் சுத்தமான கருத்தை—எண்ணத்தை எப்படி வெளிப் படுத்துவான்? அவனுடைய கொள்கைநோக்கு எப்படி நடுநிலையில் இருக்க முடியும்? கலைஞனின் உண்மையான கலை தியானம்—சிந்தனை வளம்; அதுவே முழுமையானதல்ல. சுத்தமான ஆகிருதி அல்லது பொருளின் உருவகம் அப்பொருளில்தான் பொதிந்திருக் கிறது. அதுதான் வாஸ்தவமான லட்சியம். பொருளின் தனிப்பட்ட நிலையை எப்படித் தூண்டிவிட முடியும்? யதார்த்த வாழ்க்கை யிலிருந்து கண்களை அகற்றிக்கொண்டுவிட முடியாது.

இப்படியெல்லாம் அவன் சிந்திப்பதன் விளைவாக, குளக் கரையில் உட்கார்ந்து பல சித்திரங்களைத் தீட்டினான். பிறகு அவற்றைத் திருப்திப்படவில்லை என்று சொல்லிக்கொண்டு

குலைத்துவிட்டான். இதேபோல், சிவப்பு மண்ணால் பல மூர்த்திகளை உருவாக்கியபின் உடைத்தான்.

கௌதமனின் கலை மோகம் பிரபலமானது. ஆசிரமத்தின் சுவர் களில் மண், மரத்தூள், சுண்ணாம்பு மூன்றையும் குழைத்துப்பூசி, அதன் மேல், கெட்டியான வண்ணங்களில் படங்கள் வரைந்திருக் கிறான். சிவப்பு மண்ணைக் குழைத்துச் சிலைகள் வரைந்திருக்கிறான். அவன் வரைந்தவை பெரும்பாலும் பிரும்ம ஞானத்தின் குறியீடுகள். திரிசூலம், கல்பவிருட்சம், நிலத்தாமரை, வாழ்க்கைச் சக்கரம், கமலாஸனம், அக்கிக்கம்பம் இப்படித்தான் இருக்கும். சமீபகாலமாக அதில் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. கிராமக் காட்சியைத் தீட்டி வருகிறான். அதில் பெண்கள், குடியானவர் குழந்தைகள், பசுக்கள், மொக்கு—மலர்கள் இடம் பெறுகின்றன. இந்த உருவங்களில் வலு இருந்தது. வாழ்வின் செம்மை, வெம்மை இரண்டும் இடம் பெற்றிருந்தன. வெறும் கற்பனை யுகமாக இராமல், யதார்த்த உலகத்தின் பிரதிபலிப்பாக இருந்தது. இது நிலத்தாயின் சுய சிருஷ்டி.

பிறகு ஒருநாள் கௌதம நீலாம்பரன் அழகிய யக்ஷிணி மூர்த்தியை வரைந்தான். கதம்ப மரக்கிளையைப் பற்றியவாறு, மரத்தடியில் யக்ஷிணி ஒயிலாக நிற்கும் கோலம்; மிகக் கவர்ச்சியான படிமம். பிரபல படிமக் கலைஞர்கள் வந்து பார்த்துவிட்டுச் சினந்தார்கள்; பாராட்ட மறுத்தார்கள். ஓவியக்கூடங்களும், தேவால யங்களும் அதை ஏற்க விரும்பவில்லை. விமரிசகர்கள் உன்னித்துப் பார்த்தார்கள்; அதிசயித்தார்கள்; உள்ளூர வியந்தார்கள். ஆனால் எவரும் அவனைப் பாராட்டவில்லை. கலைஞர்கள், கலை விமரி சகர்கள், புத்திஜீவிகள் கூட்டங்களில் கௌதம நீலாம்பரன் சர்ச்சைக் குரியவனானான். அவனுடைய கலைத்திறனின் புதிய திருப்பத்தை விமரிசித்தார்கள்; வாதப் பிரதிவாதங்கள் எழுந்தன. கௌதமன் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அவன் தத்துவ ஞான மார்க்கத்தைக் கைவிட்டவன். அதனால், தூய சௌந்தரிய உணர்வு எது, அதன் அறிமுகம் எப்படி ஏற்படும், பிறருக்கு அதை எப்படிக் காட்டுவது—என்பவற்றைத் தெரிவிக்க அவனுக்கு உரிமை கிடையாதா? உருவம்-அருவம், இருப்பு-இல்லாமை என்பவை குறித்து எழுப்பப்பெறும் சச்சரவுகளில் முடிவுகூற அவன் யார்? அவன் விருப்பமெல்லாம் படைப்புக் கலையோடு சரி. மனிதர்களையும், மனித ரகசியங்களையும் சித்திரமாகவோ, சிலையாகவோ வடித்துக் காட்டுவதே அவன் விரும்பும் பணி, சாதனை. வேதாந்த வித்தகன் என்ற நிலையில் அவன் சிந்தித்தான். 'தூய அழகுணர்ச்சி பற்றிய அனுபவமே தனி இன்பம்; அது மின்னலைப்போல் அகண்டது, சுயம் பிரகாசமானது. கலைஞனின் கற்பனை விசுவகர்மாவின் கற்பனைக்கு மறுபெயர். படைப்பவன் ஆத்மாவிலோ 'நான்' என்பதிலோ உறைந்திருக்கிறான்.

அவன் கணந்தோறும் அகிலத்தைக் கண்டுகொண்டிருக்கிறான்; அவன் சொரூபமே அகிலத்தின் பிரதிபலிப்புதான். அவனே ஆத்மா! அழகின் ஆதரிசனமான மதிப்பீடு, அகிலத்தையே 'நான்' என்று உணர்வதுதான். இதன் அடிப்படையில்தான் அழகும், அதை உணரும் தன்மையும் அமைக்கப்பட்டுள்ளன. இதுதான் உண்மையான நிலை, தூய அறிவு, தூய வாழ்வு. இதயம்தான் பரந்த சித்திரக்கூடம்; இங்கு எல்லா ஓவியங்களும் இருக்கின்றன. இங்கு உவமைகள் யாவும் ஒருமைப்பாட்டுள் ஒடுங்குகின்றன. விதவிதமான வண்ணக் கண்ணாடிகளிலிருந்து ஒரே வகையான ஒளி பிரகாசிக்கிறது. எந்தப் பொருளாகட்டும், முறையாக உருவாக்கப்படுமானால், அது பூரணமாகக் கலை வடிவம்தான். கலைஞன், ரசிகன் இருவருக்கும் ஒரே பொதுவழி. தெள்ளிய அறிவுள்ள சிந்தனைச் செல்வர்கள் இந்த உண்மையை உணர்வார்கள்.

அழகிய யக்ஷிணி படிமத்தை உருவாக்கியதன் மூலம் படிமக் கலையில் புது மரபு தொடக்கி வைக்கப்பட்டது. சிற்பக்கலை சுத்தமான பௌதிகக் கலையாக உருமாறியது. அதில் மயக்கமற்ற யதார்த்த நிலை நிறைந்திருந்தது. கதம்ப மரத்தடியில் காட்சிதரும் வானதேவிகளும், தேவ கன்னிகளும் உண்மையில் அயோத்தியிலும் சிராவஸ்தியிலுமுள்ள மகளிர், கிராமங்களில் வாழும் குடியானவப் பெண்கள். இந்த உழவர் மகளிரைத் தினமும் நீர்த்துறையில் காணலாம், பாடித்திரியும் களிப்பில் காணலாம், கழனிகளில் களையெடுக்கும் நிலையில் பார்க்கலாம்.

கௌதமன் உருவாக்கிய யக்ஷிணி இடுப்பை வளைத்து ஒருக்களித்த நிலையில் ஒயிலாக நின்று கொண்டிருந்தாள். கைகள் வாளிப்பாக இருந்தன. பெரிய கண்கள். மேனி நல்ல திடம்; வாட்ட சாட்டம். இந்த உருவம், இந்த சம அமைப்பு—கம்பீரம், ஒயில், உயிர்ப்பு, நிஜ உணர்வு எல்லாமே கலந்த முழுப் படைப்பு. இந்தப் புதிய வார்ப்பில் உயிர்ப்பு இருந்தது. ஒட்டம் இருந்தது, வலிமை இருந்தது. தோற்றத்தில் சுதந்திர உணர்வும் பெருமிதப் பெருக்கும் பொங்கி நின்றன, இங்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை. கலைஞன் விரும்பும் சுயேச்சை, பந்தத்திலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது. தான் எதை உருவாக்க வேண்டும், உருவாக்கப்போகிறோம் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது.

ஒருநாள் கௌதமன் சில புதிய சித்திரங்களை எடுத்துக்கொண்டு விமலேசுவரனின் ஓவியக் கூடத்திற்குச் சென்றான். சிராவஸ்தியில் உள்ளது அது. அங்கு எப்போதும் போலவே அவனுடைய நண்பர்களும் விரோதிகளும் குழுமியிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் சில எழுத்தாளர்களும் மற்றவர்களுங்கூடத் தென்பட்டார்கள். இது அவனுக்கு வியப்பாக இருந்தது. இவர்கள் அரசியல் விவாதத்திற்காக

அவன் குடிலுக்கு வந்திருக்கிறார்கள். எல்லாரும் மௌனமாக இருந்தார்கள்; கவலைக்குறி தெரிந்தது. ஏதோ யோசனை-குழப்பம் அவர்களுக்கு. கௌதமனை ஏறிட்டுப் பார்த்தார்கள்; ஏதும் பேசவில்லை. அவனும் சாளரத்தினருகில் அமர்ந்து மௌனியானான்; கடைவீதியின் கலகலப்பைப் பார்துக்கொண்டிருந்தான்.

"உனக்குத் தெரியாதா?" விமலேசுவரன் கேட்டான்.

"என்னவாம்?"

"நீ எதுவும் கேள்விப்படவில்லையா? நீ எந்த உலகத்தில் இருக்கிறாய்?"

இந்த சமயத்தில் கதவை யாரோ தட்டுவது கேட்டது. கதவைத் திறந்ததும் அகிலேசன் உள்ளே வந்தான். மூச்சு வாங்கியது. கால்களில் புழுதி ஏறியிருந்தது. வெகுதூரத்திலிருந்து வந்திருக்கிறான். "நண்பர்களே! எல்லாரும் சாமான் செட்டுகளை எடுத்துக்கொண்டு இந்த இடத்தை விட்டு வெகு சீக்கிரம் புறப்பட்டு விடுங்கள்! தாமதிக்க வேண்டாம்!"

"ஏன்? என்ன நடந்தது?" கௌதமன் கலவரமடைந்தான்.

"மகதத்தில் போர் மூண்டு விட்டது. சந்திரகுப்தனின் படை எல்லாப் பகுதிகளையும் வென்று கொண்டு, விரைவாக முன்னேறிக் கொண்டிருக்கிறது. இங்கு இன்னும் முடக்கம் தீரவில்லை. இனி நிம்மதியாக ஏர் செல்லாது. சமவெளியில் வீர தாண்டவம் தொடங்கியாக வேண்டும். இது உனக்கு ஏற்ற காலமில்லை. காலன் போர் முரசம் கொட்டிக் கொண்டு உன்னைப் பின்தொடர்கிறான். அந்த யமன் உருவம்—அருவம், தன்மை—இன்மை இவைகளின் வேறுபாட்டை அகற்றிக்கொண்டு வருகிறான்." அகிலேசன் மூச்சு வாங்கப் பேசிவிட்டு, களைத்துப் போய் உட்கார்ந்து கொண்டான். கண்களை மூடி ஆசுவாசப் படுத்திக்கொண்டான். பிறகு சொன்னான்: "நம் அரசர் யானை வேட்டையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். வழியில் விஷ்ணுகுப்தரின் வீரர்கள் தாக்கினார்கள். அரசருக்குத் துணையாக வந்தவர்கள் எல்லாரும் மடிந்தார்கள்."

"எல்லாருமா?" கௌதமன் துணுக்குற்றான்.

"ஆமாம்; அப்படித்தான் கேள்விப்பட்டேன். அரச குமாரியும், மற்ற பெண்களும் நதியை நீந்திக் கடந்து பாஞ்சாலர்களின் ஆட்சிப் பகுதிக்கு விரைந்தார்களாம். ஆனால் எதிரிகள் பின் தொடர்ந்தார்களாம்,"—அகிலேசன் அவசரமாக எழுந்தான்.

"நீ எங்கே போகிறாய்?" வேதனைக் குரலில் கௌதமன் கேட்டான்.

அகிலேசன் சொன்னான்: "நான் போரிடப் போகிறேன். ஆனால் நீ போருக்கு வரமாட்டாய். நீதான் அஹிம்ஸைவாதியாயிற்றே?" பதிலுக்குக் காத்திராமல் சென்றுவிட்டான்.

கௌதமன் எழுந்து நின்றான். விமலேசுவரனிடம் கேட்டான்: "நீயாவது சொல்லப்பா! இங்கு கலைஞர்களும், கல்வியில் தேர்ந்தவர்களும் குழுமியிருக்கிறீர்களே, சொல்லுங்கள்! எப்போதாவது போரில் ஈடுபட வேண்டும்? யாராவது ஹரிசங்கரிடம் கேட்டுச் சொல்லுங்களேன். எப்போது ஜீவஹிம்ஸை செய்யலாம், எப்போது செய்யக்கூடாது என்று." கௌதமன் நிலை கொள்ளாமல் கூடத்தில் நடந்தான். பிறகு உரக்கக் கூவினான்: "நண்பர்களே! எனக்கு ராஜா நந்தருடன் எவ்விதத் தொடர்பும் கிடையாது. சாணக்கியரை நான் அறிந்தவனில்லை. சந்திரகுப்தனுடன் எனக்குச் சச்சரவு கிடையாது. இவர்கள் எல்லாரும் சேர்ந்து என்னை எதற்காகத் தங்கள் சண்டையில் இழுக்கிறார்கள்? நானும் கொலையாளியாக வேண்டுமா? எனக்கு எல்லா உயிர்களும் பிரியமானவை. நானும் உயிர்வாழ விரும்புகிறேன். நான் என்ன செய்வேன்...?" சாளரத்தின் குறுக்குப் பலகையில் தலை சாய்த்து, கண்களை மூடிக்கொண்டான்.

சித்திரசாலையில் குழுமியிருந்தவர்கள் வெளியேறிக் கொண்டிருந்தார்கள். காலடியோசைகளைக்கேட்டு கௌதமன் கண்களைத் திறந்தான். கூடம் வெறிச்சோடிக் கிடந்தது. அவர்களுடன் வெளிவாசல் வரைக்கும் ஓடினான். பிறகு நின்று கத்தினான்: "நண்பர்களே! உங்கள் கலைப் படைப்புகளை அப்படியே விட்டுச் செல்லுகிறீர்களே. சிலைகள் உடைந்து நாசமாகிவிடுமே! என் சகோதரர்களே...!"

கீழே அங்காடி வீதியில் கூக்குரல்களும், வெறியாவேசக் கூச்சல்களும் பயங்கரமாக எழுந்தன. நகரத்திற்குள் போர் மூண்டுவிட்டது. கொடுமையான ஆக்கிரமிப்பு. கடைவீதி அல்லோலப்பட்டது. ரணகளக்காட்சிகள் அதிகரித்தன. தூசிப்படலம் சூழ்ந்தது. யானைகளின் பிளிறல்கள், அம்புகள் பாயும் ஒலிகள், வாள்களும் கேடயங்களும் மோதிக்கொள்ளும் ஓசைகள், பெண்களும் குழந்தைகளும், சிறுவர்களும் எழுப்பும் அவல ஓலங்கள்—இவற்றுக்கிடையில் கௌதம நீலாம்பரனின் குரல் அமுங்கிவிட்டது. கூடத்துப் படிகளில் சிலை போல் நின்றான். எங்கும், ரத்தக்களறி. பிணங்கள், குற்றுயிரான உடல்கள், முடமான உடலங்கள் வீதியில் சிதறிக்கிடந்தன. நண்பர்களின் சடலங்கள் தெருவில் கிடப்பதையும் கண்டான். சாணக்கியரின் வீரர்கள் வெகு லாவகத்துடன் எதிர்பவர்களைச் சாய்த்துக்கொண்டே முன்னேறி னார்கள். கௌதமனுக்குக் கண்கள் இருண்டன. தூணில் சாய்ந்து கொண்டு நிதானமடைந்தான். கூடத்தை வெறித்துப் பார்த்துவிட்டு, ரணகளத்தில் புக முனைந்துவிட்டான். எதிரே விமலேசுவரனின் சடலம் தென்பட்டது. அவன் கையிலிருந்த வாளை எடுத்துக்கொண்டு புறப்பட்டான். கனவில் நடப்பவனைப் போல் சென்றான், வாளைச் சுழற்றிக்கொண்டே.

இரவு வெகுநேரம்வரைக்கும் போரிட்டுக் கொண்டிருநதான்.

விழுப்புண்களின் வேதனை தாளாமல் ஒரு சந்தில் நினைவு குன்றி விழுந்தான். பக்கத்தில் நகர மக்களின் சவங்கள் கிடந்தன. வான முகட்டுக்கு அருகில், நகர எல்லைக்கு அப்பால் ஜேதவனம் எனும் சிறு காட்டின் நடுவில், மாளிகை ஒன்று அமைதியாகத் தென்பட்டது. மரங்களின் கும்பலுக்கிடையில் மறைந்திருந்தது. அதன் தூபிக்கலசம் இருட்டிலும் இலேசாகப் பளபளத்தது. சூழ்நிலையைக்கண்டு அது மௌனமாக எள்ளி நகையாடுகிறதோ?

# 5

காலம் நிற்கவில்லை. நாட்டில் புதிய பேரரசரின் ஆட்சி நிலை பெற்றது. மயிலை அரசுச் சின்னமாகக் கொண்ட சாம்ராஜ்யம். இதன் அரியணையில் வீற்றிருக்கும் மகாராஜாவின் வம்சாவளியை எழுதுபவர்களின் எழுதுகோல் தொடக்கத்திலேயே தயங்கி நிற்கிறது. காட்சிக்கு இனியவரும் மனிதருள் சிறந்தவருமான பாடலிபுத்திரப் பேரரசர்... கீழ்சாதிப் பெண்ணுக்குப் பிறந்த பிள்ளை; இந்தப் பிள்ளையை இடையர்கள் எடுத்து வளர்த்தார்கள்; இவனைத்தான் சாணக்கியர் தக்ஷசிலாவில் மேலோன் என்று பாராட்டினார். இவன் இனி புதிய வரலாற்றைப் படைக்கப் போகிறான். பரம்பரைக் கதை, குலப் பெருமைகளின் காலம் முடிவடைந்து விட்டது. தொண்ணூற்றொண்பது கோடி பொற்காசு கொண்ட பொக்கிஷங்களைக் கொண்டவர் என்றெல்லாம் புகழப் பெற்ற பேரரசன் நந்தனுடைய பரம்பரைப் பெருமைகள் கனவுகளாகி விட்டன.

இது புது யுகம்.

சந்திர குப்தன் மிகச் சக்தி வாய்ந்த பேரரசன். அவனுடைய அதிகாரம் பரவிக்கொண்டிருக்கிறது. அவன் புகழ் உலகமெங்கும் எட்டியிருக்கிறது. அவனுடைய தலைநகர் உலகிலுள்ள பெரிய பிரபல நகரங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. அவனுடைய படை வலிமையைக் கண்டு அண்டை அயல் நாடுகள் அஞ்சுகின்றன. காரணம், விஷ்ணுகுப்தரின் யோசனைப்படி சந்திரகுப்தன் ஆட்சி புரிகிறான். விஷ்ணுகுப்தர் கௌடில்யர் என்றும் சாணக்கியர் என்றும் பெயர் பெற்ற பெரிய ராஜதந்திரி. வலிமைமிக்க மகா பத்மநந்தனின் பேரரசை அடியோடு ஒழித்தவர். சாக்கிய முனிவர் முன்பே சொல்லியிருக்கிறார்: "வெற்றி வெறுப்புக்கு வித்திடுகிறது." ஏனென்றால் தோற்றவர் துன்பப்பட்டுக் கொண்டிருப்பார்கள். ஆனால், வெற்றிக்கும் தோல்விக்கும் அப்பாற்பட்ட நடுநிலைக்காரன்

நிம்மதியாக —சுகமாக வாழ்கிறான்.

ஒவ்வொரு வெற்றியும் தோல்வியும் வரலாற்றில் புதுத் திருப் பத்தைத் தோற்றுவிக்கின்றன. உலகம் அத்திருப்பத்தில் எப்படியோ முன்னேறுகிறது. இந்த வெற்றிக்குப் பிறகுதான் பொதுமக்களுக்கு அரசியல் உணர்வே ஏற்படலாயிற்று. தேசிய உணர்ச்சியும் எழுந்தது. நாட்டு மக்களுக்குள், பல வம்சங்கள், இனங்கள், சாதிகள், குடும்பங்கள் இவற்றுக்கெல்லாம் மேலாக—பொதுவாக பேரரசை ஏற்றுக்கொண் டிருக்கின்றன. சந்திர குப்தனின் தலைமையில் வலிமைமிக்க பேரரசு உருவாகியது. அவன், தான் படையெடுத்து வந்த அந்நியர்களான ஈரானியர்களையும் யூனானியர்களையும் விரட்டிவிட்டான். பாடலிபுத்திரத்திற்கு இவ்வளவு மகிமை இதற்கு முன்பு ஏற்பட்டது கிடையாது. புதிய புதிய மாளிகைகள் எழுந்தன. வளர்ச்சி கண்டன. சாக்கியமுனி புத்தரின் காலம்முதல் வழங்கிவந்த மாகதி மொழி புதிய பிராகிருதமாக உருமாறியது. இயல், இசை, நாடகமெல்லாம் மற்றக் கலைகளுடன் சேர்ந்து வளம்பெற்றன. நாடக அரங்கங்கள் நிறையத் தோன்றின. மக்களின் கலை, ரசனைத் தரத்திலும் உயர்ந்தது.

காசியைச் சேர்ந்த ஒரு நாடகக்குழு புதுப்புது நாடகங்களை அரங்கேற்றி நடத்திவந்தது. இந்தப் பிரபல நாடக ஆசிரியன் நாடக இயக்குனன், நடிகனுங்கூட. இவன் முதல் முறையாகப் பாடலிபுத்திரத் திற்கு வந்தான். இவன் புகழ் முன்பே பாடலிபுத்திரத்தை எட்டி யிருந்தது. இவனைப்பற்றி பல உபகதைகள் பிரபலமாகியிருந்தன. இவன் சிறந்த கலைஞன், திறமைசாலி, சிறப்பியல்புகள் கொண்டவன். சிற்பியாக இருந்தவன், நன்கு நடனமாடுபவன், ஒப்பற்ற நடிகன், பரத முனிவரின் கலை மரபுகளைக் கசடறக் கற்றவன், அயோத்திமா நகரில் பல ஆண்டுகள் தங்கி, கல்வி—கலைகளில் பயின்று தேறியவன். இசையில் சாலவும் சிறந்தவன், இனிய குரல். இவ்வளவு இருந்தும் இந்த இளைஞனுக்கு அமைதி இல்லை; ஊர்ஊராகச் சுற்றி அலைகிறான். ஓரிடத்தில் நிலைத்திருப்பதில்லை. ஒரே கலையைத் தொடர்ந்து கைக்கொள்வதில்லை. மேகத்தின் நிழலைப் பிடிக்க முயல்கிறபோது, அது அகப்படாமல் விலகும்போது ஒருவர் எப்படிப் பொருமுவார்? இந்த இளம் கலைஞன் நிலை அப்படித்தான்.

இவனுடைய புதிய நாடகத்திற்குப் பரபரப்பான புகழ். பாடலி புத்திர நகரமே நாடக அரங்கத்திற்கு எதிரில் குழுமத் தொடங்கியது. பெண்கள் ரதத்திலும் பல்லக்கிலும் வரிசையாக வந்து கொண்டிருக் கிறார்கள். எல்லாரும் உயர்நிலைப் பெண்கள். அரசகுமாரிகள், மந்திரிகுமாரிகள், செல்வந்தரின் புதல்விகள், உயர் அதிகாரிகளின் பெண்கள்... விதம்விதமாக அலங்கரித்துக்கொண்டு, உறவுப் பெண் களுடன் வந்த அழகு தனிக் கவர்ச்சி. கன்னிப் பெண்களுக்கு இந்த நாடக—நடிகக் கலைஞனைக் காண்பதில் போட்டா போட்டி. இந்த

வாலிபனின் அழகைப் பற்றி அவர்கள் நிறைய கேள்விப்பட்டிருக் கிறார்கள். உண்மையிலேயே வாலிபன் நல்ல அழகன். பெண் களிடத்தில் ஒரு பலவீனம்—குறை. கலையின் மேன்மை—கீழ்மை களைக் கலைஞனின் உருவம்-உடல் வாளிப்பு-எழில்களைக் கொண்டு அளக்க முற்பட்டுக் குழப்பமடைகிறார்கள்.

வெள்ளைத்திரை ஒதுக்கப்பட்டது. நகாசு வேலைப்பாடுகள் கொண்ட அரங்கத்தின் பின் திரையில் மங்கலகலசம், எழிலோவியம், கலைச்சின்னம் இடம் பெற்றிருந்தன. வாத்திய இசைக்குழு எதிரே அமர்ந்திருந்தது. இறைவணக்கம் தொடங்கியது. கம்பங்களின் மறைவு களிலிருந்து பொலிவு மிக்க எழில் பெண்கள் ஆடல் பாடலோடு வெளிப்பட்டார்கள். மகாதேவரின் துதி. ஒரு பெண் மட்டும் பாடிய படியே வரிசையிலிருந்து பிரிந்து ஒதுங்கி நின்றாள். இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு கொடிபோல் அவள் நின்ற ஒயில் தனிக்கவர்ச்சி. இவள்தான் கதாநாயகி. நீண்ட பின்னலில் முத்துச் சரங்கள் கோக்கப் பட்டிருந்தன். பொன்னிறமான அவள் கரங்களில் வியர்வைத்துளிகள் முத்திட்டிருந்தன.

நாடக அரங்கத்தில் புதிய கவர்ச்சி கூடியது. காட்சியாளர்கள் ஆவல் அலைமோதக் காத்திருந்த கட்டம் வந்தது; கதாநாயகன் வெண்மையான அரங்கத்தில் கம்பீரமாகத் தோன்றினான். குனிந்த தலையை அவன் நிமிர்த்திய பாங்கே செருக்கும் மிடுக்குமாக இருந்தது. சூனிய வெளியைப் பார்த்துக்கொண்டு, கம்பீரமாக நடந்து வந்தான். ரசிகர்-ரசிகைகளின் பார்வை அவனையே மொய்த்தது. கதாநாயகன் கூட்டத்தாரை ஒரு நோட்டம் பார்த்து விட்டு, நாடகத்தின் பூர்வாங்கப் பேச்சைத் தொடங்கினான். இனிய எடுப்பான குரலைக் கேட்டு ரசிகர்கள் மகிழ்ந்தார்கள். மந்திரவசப் பட்டவர்களாகி, அமைதியாக, கழுத்தை நீட்டி அவனையே உற்று நோக்கினார்கள். உரையாடலுக்கிடையில், பேச்சுக்கு உத்வேகம் ஊட்ட அவன் இடது கையையும் வலதுகையையும் உயர்த்தி அசைத்தான்.

பார்வையாளர்கள்—ரசிகர்கள் துணுக்குற்றார்கள். வேதனை அவர்கள் முகத்தில் படர்ந்தது. பெண்கள் துக்க நெகிழ்ச்சி தாளாமல் கண்களை மூடிக்கொண்டு விட்டார்கள். இவ்வளவு அழகிய—தேர்ந்த—சிறந்த கலைஞனின் இரு கை விரல்களும் துண்டிக்கப்பட் டிருந்தன; மொக்கையான கைகள்.

கௌதம நீலாம்பரனுக்கு எதிரே தனித்ததொரு நகரமே விரிந் திருந்தது. காண்பவர் கூட்டத்தையும் கடந்த மற்றொன்று. இந்த நகரமும், ஜன சமூகமும் அவனை எப்போதும் ஆதரவும் அன்பும் கொண்டே எதிர்கொண்டன. அவன் எல்லாருக்கும் நாடகம் நடத்திக் காட்டி வந்தான்; ஆனால் அவன் நாடகத்தை—வெளிநாடகத்

திற்குப் பின்னால், திரைமறைவில் யாருக்கும் புலப்படாத இடத்தில் நிகழும் சொந்த நாடகத்தை— எவரும் பார்த்ததில்லை.

அந்த நாடகத்தைக் கண்டு ரசித்தவர்கள், நாடகத்தின் கலைத் திறனையும் திட்பமான உரையாடலையும் ரசித்தவர்கள் நகரப் பிரமுகர்கள். அவர்களில் எவருக்குமே தெரியாது இந்த நாடகக் கலைஞன் எங்கெல்லாம் சஞ்சரித்து, எத்தகைய சாதனைகளைப் புரிய முனைந்தவன் என்பது! அவன் வாழ்க்கையில் எல்லாச் சோதனை முயற்சிகளையும் செய்து பார்த்துவிட்டவன். ஏதும் மீதமில்லை. அவன் கருத்தில், இந்த வாழ்க்கை வெறும் சூனியம், அல்லது பிரகாசம், அல்லது இருள். அவனைப் பொறுத்தவரைக்கும் தீர்மானமாக 'இதுதான்' என்கிற வரையறை கிடையாது. உலக வாழ்வின் நிஜ நிலையை அவன் புறக்கணித்ததில்லை. ஆனால் அது முடியாது. உலகம் ஒவ்வொரு அடியிலும் சுய ரூபத்துடன் அவன் எதிரில் நின்று கொண்டு அவனை நிதானமிழக்கச் செய்தது;

அன்றைக்கு...

சிராவஸ்தி நகரின் கடைவீதியில் ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்துப் பகல் முழுவதும் போராடிக்கொண்டிருந்தான். வேல் ஒன்று தாக்கி அவன் கீழே சாய்ந்தான். நினைவு திரும்பி, அவன் தலையைத் தூக்கிப் பார்த்தபோது இரவு வெகு நேரமாகியிருந்தது. உடலெல்லாம் ரணகாயம். கைகளில் ரத்தம் வழிந்தது. கைவிரல்களை விரிக்க முயன்றபோது மரணவலி; ரத்தப் பெருக்கில் விரல்கள் நைந்திருந்தன. அப்போதுதான் அறிந்தான், எழிலைப் படைக்க, கலைக்கு உயிரூட்டத்துணை நிற்கும் விரல்களில் வெட்டுக்காயத்தைக் கண்டான். பிறகு அமைதியான புத்த விஹாரையில் ஓய்வாக அமர்ந்திருந்தபோதும், இந்த உண்மையை அவனால் பொய்யாக்க முடியவில்லை. கலைஞனாக—படைப்புத் தொழிலை மோகித்து கைக்கொண்ட சிற்பிக்கு—கைகள் மிக முக்கியமான அடையாளம், சாதனம். நடனத்தில் பாவ முத்திரைகள் மூலமாக உலகத்தின் ரகசியங்களை, வாழ்க்கையின் முழுமையைக் காட்டுபவை விரல்கள் தான். இவை மாளிகைகளைக் கட்டவும், பூங்காக்களை வளர்க்கவும், குழல் ஊதவும், குழந்தைகளைக் கொஞ்சவும், தேவை. மற்றொரு உண்மையும் இருக்கிறது; அதே விரல்கள் கூரிய அம்புகளை எய்கின்றன. ஈட்டியை உருவாக்குகின்றன, பிறர் கழுத்தை நெறித்துக் கொல்லுகின்றன.

உடலில் கொஞ்சம் தெம்பு ஏற்பட்டதும் கௌதமன் எழுந்து நடக்கலானான். சவங்களைத் தாண்டிச் சந்துப்பக்கம் வந்தான். சுவரைப் பிடித்துக்கொண்டு தன் வீட்டை நோக்கி நடந்தான். அவன் வீடு சூனியமாக இருந்தது. இருபது வருடங்களுக்குப்பிறகு அவன் தன் வீட்டுக்குள் நுழைந்திருக்கிறான். சில நாழிகைகளுக்கு முன்புதான்

அவன் தாயும் தந்தையும் போரில் உயிர் துறந்திருக்கிறார்கள். வீடு வெறிச்சோடிக் கிடந்தது. அங்கேயே தங்கி ஆசுவாசப்படுத்திக் கொண்டான். போர்க்காயங்கள் ஆறிய பின், சிராவஸ்தியை விட்டுப் புறப்பட்டான்; ஊர் ஊராகத் திரிந்தான்.

நாட்டில் அமைதி திரும்பியது. சந்திரகுப்தனின் ஆட்சி நிலை பெற்றது. கௌதமன் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்த பின் காசிமா நகருக்கு வந்து சேர்ந்தான். அவன் கல்வி—கேள்விகளில் தேர்ந்த அந்தணன். பல தகுதிகளைப் பெற்றவன். அறிவுத்திறன்-கலைத் திறனைத் தவிர அவனிடம் வேறு சொத்து கிடையாது. பொருளில்லா மைக்காக அவன் வருந்தியதில்லை: கவலைப்பட்டதுமில்லை. மாணவனாகவும் பிரும்மச்சாரியாகவும் இருந்து வந்ததால், பட்டினி கிடக்கவும், இன்னல்களை ஏற்கவும் சகிக்கவும் பழக்கப்பட்டிருந்தான். வறிய நாடோடி போன்ற அன்றாடங் காய்ச்சி வாழ்க்கை அவனுக்கு இளப்பமாகத் தோன்றவில்லை. ஆனால் ஒரு மாறுதல்; பண்டிதர் களின் குழுவுடன் ஒட்டுறவு கொள்வதில்லை, அவர்களுடன் வாதம் புரியவும் முற்படுவதில்லை.

காசியில் ஒருநாள், நாடகமன்றத்தின் தலைவியைச் சந்தித்தான். கண்டதுமே அவள் கௌதம நீலாம்பரனிடம் மனதைப் பறி கொடுத்தாள். அன்றே கௌதமனைத் தன் நாடக மன்றத்தில் சேர்த்துக்கொண்டாள். கௌதமனால் இனிமேல் ஓவியம் வரைய முடியாது. சிற்பங்களோ, பதுமைகளோ படைக்க இயலாது. நடன மாடவும் முடியாது. நடிக்கத்தான் முடியும்; அது அவனுக்காகக் காத்திருந்தது. மாணவனாக இருந்தபோது அவன் நாடகங்கள் எழுதி யிருக்கிறான். பிறகு அவன் தத்துவ சிந்தனையாளனாக, புலவனாக, ஓவியனாக, நடனக்கலைஞனாக, சிற்பியாகவெல்லாம் மாறினான்; இப்போது பிரதம நடிகனாகிவிட்டான்!

அவனுடைய நடிப்புத்திறன் புதியதொரு உண்மை!

பிரிவுத் துயர் நாடகத்தின் கருப்பொருள். கௌதம நீலாம்பரனும் இந்த மரபை வளர்த்தான். பிரிவு-ஏக்கம்-துயரம் இதைத்தவிர வேறு எதை அவனால் தேர்ந்தெடுக்க முடியும்?

நாடகக் குழுவின் தலைவி, பேரழகி, பிரபல நடிகை நாயகியின் பெயர் அம்பிகா. பெரும் செல்வந்தர்களின் வாலிபப் பிள்ளைகளும், தானைத் தலைவர்களும் அவள் பெயரைத் தாரக மந்திரம்போல் ஜபித்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களை லட்சியம் செய்ய வில்லை. அவள் மோகித்துத் தவங்கிடந்ததெல்லாம் ஏழை அந்தண வாலிபன் கௌதமனிடம் தான்-விரல்கள் துண்டிக்கப்பட்ட முடமான கைகளுக்கு உரிய. தான்தோன்றிப்போக்குள்ள இளைஞனிடம்! அப்போதுதான் கௌதமனுக்கு மற்றொரு உண்மையும் புலப்பட்டது: 'நீ யாரை விரும்புகிறாயோ அவர் உன்னைப் பொருட்படுத்த

மாட்டார்; யார் உனக்காக உயிரைக் கொடுக்கவும் காத்திருக்கிறாரோ, அவரிடம் உனக்கு எவ்விதக் கவர்ச்சியும் கிடையாது!' இது வாழ்க்கையில் பொதுவாக எதிர்ப்படும் அனுபவம்தான்; கௌதமனுக்குப் புதியது.

அம்பிகா நாடக மண்டலியுடன் அவன் ஊர் ஊராகச் சுற்றினான். மௌரியர் ஆட்சிப் பரப்பில் செல்வம் கொழித்தது. லலித கலைகளுக்கு நிறைய ஊக்கம் கிடைத்து வந்தது. இப்போ தெல்லாம் கௌதமனும் பணக்காரப் பிள்ளைகளைப்போல் சுகபோக வசதிகளுடன் வாழத் தொடங்கினான். மது பானம், புதுப்புது காமக் கிழத்திகள், அவர்களை விரைவிலேயே உதறிவிடுதல், தறிகெட்ட போக்கு—இவ்வளவையும் அம்பிகா பொருட்படுத்தாமல், அவனைத் தெய்வமாகப் போற்றி வந்தாள். அன்பைச் சொரிந்தாள். அவள் அன்புக்குப் பதில் அவன் அளித்ததெல்லாம் அலட்சியம், அவமதிப்பு. இரக்கமில்லாமல் நடந்து கொண்டான்; அவளை வருத்தித் தனக்குள் மகிழ்ந்து கொண்டான்.

கௌதமன் சம்பகாவைத் தேடிக்கொண்டு பல ஊர்களுக்குச் சென்றான். ஒருவேளை உயிரோடு இருக்கிறாளோ, ஆபத்திலிருந்து தப்பிப் பிழைத்திருப்பாளோ? ஆனால் அவளை எங்கும் பார்க்க முடியவில்லை. கடைசியில் சலிப்படைந்து, தேடுவதைக் கைவிட்டான்.

அம்பிகாவின் தீவிர அன்புக்கு எதிரில் தன் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

இன்று அந்தக் கௌதம நீலாம்பரன் பாடலிபுத்திரத்தில் தங்கி யிருக்கிறான். எப்போதும்போல் அம்பிகாவோடு பிரதான வேடத்தில் நடித்துக்கொண்டிருக்கிறான். ரசிகர்கள் அவனை, அவனுடைய நடிப்பாற்றலை மதிப்போடு, சிரத்தையோடு பார்த்துக்கொண்டிருக் கிறார்கள். காட்சிப் பிரியர்கள், நாடக ரசிகர்கள் அபிநயம்—நடிப்பு—உணர்ச்சிகளுக்குச் சொக்கிப்போகும் பித்தர்கள். இவர்கள் கௌதம நீலாம்பரனின் நிஜ சொரூபத்தை ஒருக்காலும் காண முடியாதவர்கள்.

# 6

நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பெண்கள் மனவேதனையோடு கண்களை மூடிக்கொண்டார்கள். கனவுகளில் மகிழ்வைக் கூட்டும் பெண்கள் வியப்பும் வேதனையுமாக வாய்பொத்தி உணர்ச்சியைச் சமனப்படுத்திக் கொண்டார்கள். இந்தப் பெண்களின் வரிசையில் ஒதுக்குப்புறமாக உட்கார்ந்திருந்தாள் சம்பகா. தன் தோழியுடன்

லயித்துப் பேசிக்கொண்டிருந்தாள்.

அரங்கத்தைப் பார்த்தும் அவள் திகைத்தாள். அங்கு கௌதமன் காட்சியளித்தான். எதிர்பாராத அதிர்ச்சி; அவள் உள்ளம்-உடல் எல்லாம் படபடத்தது. கண்கள் கலங்கிப் பனித்தன. அந்தக் கண்ணீர் மூட்டத்தில் கௌதமனின் முகம் அணைந்து கொண்டிருக்கும் விளக்கின் சுடர்போல் மினுக்கியது. அவள் உணர்ச்சி வசப்படாமல் இருக்க சிரமப்பட்டாள்.

கௌதமன் உணர்ச்சிமயமான காட்சியில் நடித்துக் கொண்டிருந்தான். ஏதோ உரக்கப் பேசியவாறு, அரங்கத்தின் விளிம்புக்கு வந்தான். சம்பகாவைப் பார்த்து விட்டான். சில கணங்கள் அவன் தன்னையே மறந்து அவளைப் பார்த்தான். பிறகு நிதானித்துகொண்டு நடிப்பைத் தொடர்ந்தான்; பார்வை அப்பக்கம் படரவில்லை.

சம்பகா ஊதா நிறப்பட்டாடை அணிந்து கொண்டிருந்தாள்; மணமாகிவிட்டதற்கு அறிகுறியாக அவள் வகிட்டில் செந்தூரம் துலங்கியது. மடியில் குழந்தை; பக்கத்தில் தோழிகள். இவ்வளவு காலம் தேடித் திரிந்து சோர்ந்த பிறகு, இப்படியொரு சந்திப்பு! எதிரே தரையில் சப்பணமிட்டவாறு மிக அமைதியாக அமர்ந்திருக்கிறாள்!

கௌதமன் வேறுபக்கம் நகர்ந்தான்; விரைவாக விலகினான். சம்பகா முதலில் தூயவளாக இருந்தாள்; இப்போது மேலும் அதிகப் புனிதவதியாகி விட்டாள்; அவள் தாய். அவனுக்குப் புலப்பட்டது; சந்தர்ப்பம், விபத்துகள், காலத்தின் விசித்திர விளையாட்டுகள் யாவுமே பெரிய உண்மைகள்தாம்.

கௌதமன் சமாளித்துக்கொண்டு நாடகத்தில் தன் பணியில் ஒன்றிப்போனான்.

அவள் தனக்குள்ளேயே மருகிக் கொண்டிருந்தாள்; பொங்கும் கண்ணீரைப் புலப்படுத்தாமல் துடைத்தாள். ஒருவன் அவளை மறக்க உலகத்தையே துறந்துவிட்டான்; அவன் நினைவிலிருந்து அவளால் விடுபட முடியவில்லை; அவன்தான் ஹரிசங்கர். மற்றவன் அவள் நினைவிலிருந்து தப்ப, துறவுக்குப் பதிலாக உலக வாழ்விலேயே உழன்று கொண்டிருக்கிறான்; இருந்தாலும் விரக்தியோடுதான் வாழ்கிறான்—பரதேசியைப்போல. அவன்தான் கௌதம நீலாம்பரன். அவளோ? உள்ளத்தாலும் உடலாலும் நலிந்தவள், வருந்துபவள். உலகைத் துறக்க முடியவில்லை. உலக வாழ்வில் வாழ்க்கையின் மகிழ்வைக் காணவும் அவளால் முடியவில்லை. இவையெல்லாம் என்ன? மாயையின் விளையாட்டுகள்.

பெண்ணாய் பிறந்தவர்களின் தலையில் எழுதியிருக்கிறதைத் தான் அவளும் ஏற்க வேண்டியதாயிற்று; அதுதான் பெண் பிறவியின் கடமைபோலும்! அரசன் கொல்லப்பட்டதும், அவளையும் மற்ற அரச குலப் பெண்களுடன் சிறைப்படுத்தினார்கள்; பாடலிபுத்திரத்

திற்கு அழைத்து வந்தார்கள். அயோத்திமா நகரின் ராஜகுடும்பத்துக் கன்னிகளை வெற்றிவாகை சூடியவர்கள் தரத்திற்கு ஏற்பத் தேர்ந் தெடுத்து மணந்து கொண்டார்கள். அவளைச் சாணக்கியரின் நெருங்கிய உதவியாளர், உயர்ந்த அதிகாரி மணந்துகொண்டார். அறுபது வயதுக்காரரான அந்தணர் மகாபுத்திமான்; நிதித்துறைப் பகுதியில் பொறுப்பதிகாரி, கோடி கோடியாய்க் குவிப்பதிலேயே அக்கறை கொண்ட ராஜ விசுவாசி.

சம்பகாவுக்கு வேறு வழியில்லை. அந்த வயோதிகக் கணவரைப் போற்றுவதும், அவருக்குத் தொண்டு புரிவதுமே அவளது அறம். அவளுக்கு அவர்தானே கண்கண்ட தெய்வம். அவள் தன் அற வழியே செவ்வையாக வாழ்ந்து வந்தாள். பாடலிபுத்திரத்திலிருந்து மற்ற ஆயிரக்கணக்கான இல்லறத் தலைவிகளைப் போலவே சம்பகாவும் பாங்கான குடும்பப் பெண்மணியானாள். அவளிடத்தில் இப்போது தனிச்சிறப்பு ஏதும் கிடையாது. அவள் மடியிலும் ஒரு குழந்தை இருக்கிறது; சிநேகிதிகளிடம் அவளும் ஊர்வம்பு-அரட்டைப் பேச்சுக்களில் சுவாரசியம் காண்கிறாள்; தத்துவம், தரிசனம், சாஸ்திரம் பற்றிப் பேசி விவாதித்த காலம் கடந்து விட்டது.

சிறிது நேரத்திற்குப் பின், நாடகத்தின் முதல் காட்சி முடிந்து, திரை சரிந்தது. சம்பகா பக்கத்திலிருந்த வேலைக்காரியின் செவியில் கிசுகிசுத்தாள். பணிப்பெண் அக்கம் பக்கத்தை ஒரு நோட்டம் விட்டபின், விருட்டென்று எழுந்து வெளியே சென்றாள்.

முதல் காட்சி முடிவடைந்ததும், கௌதமன் ஒப்பனைப் பகுதிக்குள் அமர்ந்து ஓய்வு கொண்டான்.

"உங்களைப் பார்க்க ஒரு பணிப்பெண் வந்திருக்கிறாள்." பின்னிக் கிடந்த மாலைகளைக் கழற்றியபடியே, முகத்தைத் திருப்பித் தகவல் கொடுத்தாள் அம்பிகா.

"யாரது?" கௌதமன் மெல்லக்கேட்டான். அவன் குரலில் தேங்கியிருக்கும் கடுமை, கொடுமைகள் அப்போது துளியும் இல்லை. அம்பிகா இந்த மாறுதலைக்கண்டு திகைத்தாள்.

"தெரியவில்லை. நீங்களே அழைத்துப் பாருங்கள்" தயங்கியவாறு பதில் சொல்லிவிட்டு, அம்பிகா ஆடை அணிகளை அள்ளிக்கொண்டு சக நடிகைகள் இருக்குமிடத்திற்குச் சென்றாள். கௌதமன் ஒப்பனைக் கூடத்திலிருந்து வெளியே வந்து, படிக்கட்டுகள் பக்கம் நின்றான்.

சிவந்தமேனிப் பணிப்பெண் நின்று கொண்டிருந்தாள். கௌதமனைக் குனிந்து வணங்கினாள். பிறகு,

"என் எஜமானியம்மாள் உங்களுக்கு வணக்கம் தெரிவித்தார்கள். நீங்கள் வீடு திரும்பும்போது அவர்களைச் சந்திக்க முடியுமா என்று கேட்டுவரச் சொன்னார்கள்."

கௌதமன் ஒரு படி கீழே இறங்கி வந்தான். சில கணங்கள்

மௌனியானான். பிறகு பதில் சொன்னான்: “நான் சந்திக்கவில்லை. உன் எஜமானியம்மாளிடம் சொல்: விழித்துக்கொண்டிருப்பவன் ஒரு நாள் தன்னை மறந்து தூங்கிவிடுவான்; இதேபோல் உறங்கிக் கொண்டிருப்பவனுக்கு ஒருநாள் விழிப்பு ஏற்பட்டுவிடும். எப்போதும் விழித்துக் கொண்டிருப்பவர்களைப் பார்க்கச் சொல்! நான் இப்போது விழித்துக் கொண்டிருக்கிறேன்; என் வழியில் எதுவும் குறுக்கிட முடியாது. மேலும், ‘பதிவிரதைப் பெண்டுக்குப் பிற ஆண் நிழல் போன்றவன் என்பதை மறந்து விட்டாளா?’ என்று நான் கேட்டதாகவும் சொல்! சரி, இனி நீ போகலாம்.”

பணிப்பெண் கூட்டத்திற்கிடையே சென்று, எஜமானியிடம் தகவலைச் சொன்னாள். கையோடு பதிலைத் தெரிந்துகொண்டு திரும்பினாள். கௌதமன் படியருகிலேயே நின்று கொண்டிருந்தான்.

“என் எஜமானியம்மா சொல்லுகிறார்கள்: உங்கள் கருத்து சரிதான். இப்போதும் விழித்துக்கொண்டுதான் இருக்கிறீர்களென்றால் மிக நல்லது. அடுத்த பேச்சுக்குப் பதில்: பதிவிரதைக்குப் பொருள் கொள்ள உங்களுக்கு என்ன தெரியும்? ஆனால் ஒன்று நியாயம், உங்கள் பாதையில் குறுக்கிட எவருக்கும் உரிமை கிடையாது. இனி நீங்களும் போகலாம்!”

பணிப்பெண் முகத்திரையை இழுத்துவிட்டுக்கொண்டு கூட்டத்திற்குள் மறைந்தாள்.

நாடகம் முடிந்த பிறகு, கௌதமன் எதிரே குழுமியிருந்த ரசிகப் பெருமக்களைப் பாராமலேயே மேடையிலிருந்து வெளியேறினான். ஒப்பனைக்கூடத்திற்குச் சென்று பட்டாடையும் அணிகலனையும் நீக்கினான். வெண்மையான சாதராவைத் தோளில் போட்டுக் கொண்டு, எளிய ஆடையுடன் செருப்புகூட அணியாமல் நாடக மண்டபத்திலிருந்து வெளியே வந்தான்; யாரும் அவனை இனங்கண்டு கொள்ள முடியாது. பிறகு, நகரத்தின் பிரதான வாசலை நோக்கி விரைந்தான்; சிறையிலிருந்து தப்பிய குற்றவாளி விரைவானே, அப்படி!

எல்லா இடத்திலும் மக்கள் சந்தடி, மருத்துவமனைகளில் நோயாளிகள் பிழைப்பையோ இழப்பையோ எதிர்நோக்கித் தவித்துக் கொண்டிருந்தார்கள். அங்காடித் தெருவில் வெள்ளி-செப்புக் காசுகளின் புழக்கம் ஒலித்தது. ஆயுதச் சாலையில் போர்க்கருவிகள் உருவாக்கும் சம்மட்டியொலி கேட்டது. நதித்துறைகளில் அமைந்த பட்டறைகளில் மரக்கலன்கள் உருவாகிக்கொண்டிருந்தன. தொலைவில் அரண்மனை மாடங்களுக்கு மேலுள்ள கும்மட்டங்கள் தெரிந்தன. ‘இந்தச் சமயத்தில் சாம்ராட் சந்திரகுப்தர் சாணக்கியருடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருப்பார்?’ இதை நினைத்ததும், கௌதமன் முறுவலித்துக் கொண்டான்.

ஓர் இளம் பரத்தை அவனைப் பார்த்தவாறே கடந்து சென்றாள். ஒருகால் இவளும் மற்ற கைதேர்ந்த வேசிகளைப்போல் அரசாங்கத்தின் ரகசிய வேவுகாரியோ என்னவோ? மனத்துள் கேட்டுக்கொண்டான்: 'எவராவது சாணக்கியரிடம் போய் கேட்கவேண்டும், யார் யாரை வேவு பார்க்கிறார்? என்று'. பிறகு தனக்குள் சிரித்துக்கொண்டான். இருள் சூழ்ந்தது. கோட்டை மதில்களிலிருந்த காவலர்கள் எச்சரிக்கைக் குரல் கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள். இந்தக்கோட்டை மதிலுக்கு அறுபத்தைந்து வாசல்கள்—'எந்த வாசல் என் வழி போகத் திறந்திருக்கும்?' என்று எண்ணலானான்.

காவலாளிகள் அவனை அரசாங்கத்திற்கு வேண்டிய அந்தணன் என்று எண்ணி வழி விட்டார்கள். வழியில் நெருக்கமான வனம், ஆறுகள், ஓடைகள் இருந்தன. அந்தப் பாதை பிரயாகைக்குச் செல்வது. கௌதமன் விரைந்து நடந்தான். ஸோன் நதியைக் கடந்து, பல நாட்கள் பயணம் செய்தான். நதிக்கரைகளில் எண்ணற்ற சாதுக்கள்—துறவிகள் தவம் புரிந்து கொண்டிருந்தார்கள். வானப் பிரஸ்த (கானக வாழ்வு) நிலைக்குப் பிறகு துறவு நிலை. தான் துறவு நிலைக்கு வந்துவிட்டதாகக் கௌதமனுக்குத் தோன்றியது. இதில் எந்த ஆசையும் இடம் பெறுவதில்லை. இறப்பு-பிறப்பு-இரண்டிற்குமே ஆசை எழாது. இதே மனநிலையில் அவன் போய்க்கொண்டிருந்தான். வழியில் நகரங்கள், அரசாங்கப் பண்ணைகள், ஆசிரமங்கள், மயில்களை வளர்க்கும் கிராமங்கள் என்று பல எதிர்ப்பட்டன. அவனுக்கு எங்கே இடம் இருக்கிறது?

இதில் அச்சத்திற்கு இடமில்லை. அவன் பூமியை நம்பி வந்தவன், வாழ்பவன். பூமி அவனுக்குத் தாய் 'பூமி எனக்குத் துணை புரியும்; புகல் தரும்?' அவன் உள்ளம் ஆறுதல் கூறியது.

மென்மையான புல்பத்தைகள், குளிர்ந்த பாறைகள், மண்ணின் மகிமை—எல்லாம் அவன் பாதங்களுக்குத் தெரிந்தன. கைகளை விரித்துக் காற்றைத் தழுவினான். அவன் உதடுகள் முணுமுணுக்கத் தொடங்கின: "நிலத்தாயே! உன் அழகான குன்றுகள், பனியுறைந்த மலைகள், காடுகள், சோலைகள் யாவும் முறுவலிக்கின்றன. நான் உன் காலடியில் நிற்கிறேன். நான் தோல்வி கண்டவனல்லன். எனக்கு எந்தக் காயமும்- புண்ணும் ஏற்படவில்லை. நான் நிறைந்த பிறவி—பூரணன். என்னை எவராலும் அழித்துவிட முடியாது. பூமித்தாயே! உன்னிடம் எவ்வளவு அரிய பொருள்கள் நிறைந்திருக்கின்றன. தாயே! எனக்கு இடம் கொடு! எனக்கு எங்காவது புகல் தந்தருள்!" (ரிக் வேதத்தில் ஒரு துதி)

அவனுக்கு வழி நடப்பிலேயே பல நாட்கள் கழிந்து விட்டன. பலவகைச் செடிகளும், மலர்களும் கொடிகளும் அவன் நடைபாதையில் தாழ்ந்து கிடந்தன. புள்ளினங்கள் அவனுடன்

சேர்ந்து ஒலித்தன. மழைத்திவலைகள் தாமரை இலைகளின் மேல் ஜலதரங்க வித்தை செய்து காட்டின; இளம் அலைகளைக் கிளர்த்தி மோதவிட்டன. கௌதமன் வரப்பு மேட்டில் நின்று, பனித்த கண்களால் அந்தக் காட்சியைப் பார்த்தான். மேகக்கூட்டத்திலிருந்து ஒருதுளி நீர் அவன் இமைகளுக்கிடையில் விழுந்தது. முத்துச் சிப்பிக்குள் சுவாதி தினத்தன்று உதிரும் நீர்த்துளியைப்போல. வான முகட்டில் கருமுகில்கள் முழக்கமிட்டன. அவன் உள்ளம் களிப்பில் திளைத்தது. அவன் உள்ளத்தில் புயல் அலைமோதிப் பாய்ந்தது; சிந்தனையில் அருவிகள் இன்னிசையெழுப்பின. இந்திரன் உதவி புரியப் பக்கத்தில் நிற்பதைக் கண்டான். மரத்தினடியில் ஒதுங்கினான்; அடிமரத்தில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டு நின்றான். மழை நீர்த் தாரைகள் அவனது அழகிய - வாடிய முகத்தில் வீழ்ந்து குளிர்வித்தன.

இரவு முழுவதும் மழை. புலரிக்குப் பின் இருளும் மழையும் விலகின. சோலைகளிலிருந்து சங்குகள் முழங்கின. நதித்துறைகளில் காலை அனுட்டானத்தில் முனைந்திருக்கும் பிராமணர்கள் உஷா தேவியை எடுப்பான குரலில் துதிப்பது கேட்டது.

மென்மையான காற்றலைகளுக்கு எதிரே கௌதமன் வழி நடந்தான்.

"தேவதைகளின் அன்னையே! ஒளி பரப்பிக்கொண்டு செல்! எங்களுக்கு உலகில் உயர்ந்த பதவிகளைக் கொடு!"

பிராம்மணர்களின் வந்தனையும் கோரிக்கையும் நதிப்புறத்தில் ஒலியாகப் பரந்தன. கோவில்களைச் சூழ்ந்து செல்லும் பாதையைக் கடந்து, காட்டுவழியில் கௌதமன் நடந்தான். எதிரே அயோத்தி தெரிந்தது.

தான் இருந்து, பழகிய சொந்த நகரின் எல்லையைத் தொட்டதும். உணர்ச்சிப் பெருக்கோடு தரையில் அமர்ந்தான். சொந்த மண்மீது முழங்கால்களைக் கட்டிக்கொண்டு குந்தியிருப்பதில் தனி மன நிறைவு கண்டான். சுற்றுப்புறம் சூனியத்தில் முடங்கியிருந்தது. எப்போதும்போல் அவன் தனிமையில் இருக்கிறான். உலகத்தின் தனிமதிப்பீடான மனிதன்—ஆதியும் அந்தமுமில்லாத ஐந்தறிவுப் பிறவி, களைத்துச் சளைத்தவன், தோல்வி கண்டவன், மகிழ்ச்சியோடு இருப்பவன், நம்பிக்கைவாதி, பகவானின் அம்சம், தானே பகவானு மாகவும் இருப்பவன்—கௌதம நீலாம்பரன்! எதிரே பெருமைமிக்க அயோத்தி மாநகர் தெரிந்தது. மழைப்பொழிவுக்கிடையிலும், பொன்னிறமாகப் பொலிந்தது அயோத்தி. கௌதமன் எழுந்து நின்றான். தன்னுள் பரந்திருக்கும் பகவானைச் சாடி அழைத்துத் தன் உணர்ச்சிகளை உரக்கவே வெளியிட்டான். குரலில் நம்பிக்கை, செருக்கு, தன்மானம்!

"பகவானே! நீ அக்கினி, நீ சூரியன், நீ காற்று, தண்மதி, தாரகைகள் நிறைந்த வானவெளி, நீதான் பிரமன், தண்ணீர், பிரஜைகளுக்கெல்லாம் தலைவன்—காவலன்!"

"நீ பெண்; நீ ஆண்; வாலிபனும் வாலைக்குமரியும் நீ; நீ கிழவன்-கிழவி; உன்முகம் எல்லாத் திசைகள்பாலும் நோக்கியுள்ளது; நீ எங்கும் பிறப்பவன்."

"நீ கருவண்டு; நீ பச்சைக்கிளி; நீ சூறாவளியோடு இணைந்த கார்முகில்; நீ எல்லாப் பருவங்களின் சொரூபம்; நீ கடல்."

"இரு பறவைகள் அன்பர்களாய் ஒரு மரக்கிளையில் அமர்ந்திருக்கின்றன. ஒன்று கனியைச் சுவைத்துக் கொண்டிருந்தது. மற்றது அதையே மலங்க மலங்கப் பார்த்துக்கொண்டிருக்கிறது. அதே மரத்திலொரு மனிதன் உட்கார்ந்திருக்கிறான். சோர்ந்து, தன் இயலாமையைக் கண்டு வியந்தவாறு. ஆனால் அவன் மகிழ்ச்சியாக இருக்கும் பிறரைப் பார்க்கும்போது அவருடைய அருமை—பெருமைகளை உணர்கிறான்; தன் துன்பத்தை மறந்து விடுகிறான்; துன்பம் விலகிவிடுகிறது. எவர் ரிக்வேதத்தின் இந்த சாசுவதமான தத்துவத்தை உணர்வதில்லையோ, அவர்கள் உள்ளத்தில் தேவதைகள் வாசம் புரிந்தாலும் என்ன பயன்? அத் தத்துவத்தை அறிந்தவர்கள் நிம்மதியாக வாழ்கிறார்கள்."

"அந்தத் தத்துவம் சூட்சுமத்திலும் சூட்சுமமானது, அதற்குப் பல உருவங்கள், அது சிவ சொரூபம்—அதாவது ஆனந்த மயம். மேலும், பேரொளி பரவும்போது, பகல்—இரவு எதுவும் இருப்பதில்லை; இருத்தல் இல்லாமை இரண்டுமே இடம் பெறுவதில்லை. சிவ தத்துவம் மட்டுமே எஞ்சியிருக்கிறது. அந்த எல்லையற்ற பேரொளி ஸாவித்ரி தேவியினுடையது. அதிலிருந்துதான் புத்தி பிறந்தது."

"ஸாவித்திரியின் ஜோதி பேரழகு படைத்தது. அந்த அழகைப் பார்க்க முடியாது; அத்தேவியின் வைபவத்திற்கும் மகிமைக்கும் ஒப்புவமை கிடையா. அது உள்ளத்தில் உறைவது."

"ருத்திரனே! நீ பிறவியற்றவன். துதிச் சொற்களுடன், உடல் நடுங்க உன் அருகில் வரும் என்னை இரட்சிப்பாய்!"

"அவன் விசுவம் முழுமைக்கும் ஒரே பட்சி. அவன் சூரியனுக்கு சமானம் - மேற்குக் கடலில் மூழ்கிய அஸ்தமன சூரியன். அவனை உள்ளபடி அறிந்த மனிதன் மரணத்திலிருந்து மீள்கிறான்."

"ஏனென்றால் இதைத்தவிர வேறு எந்தப் போக்கு வழியும் இல்லை."

கௌதம நீலாம்பரன் கண்களைத் திறந்தான். அவன் உடல் விதிர்த்தது. தம்பூராத் தந்தியை மீட்டியதுபோல, காலடிக்குக் கீழே தண்ணீர் பாயும் ஓசை கேட்டது. குனிந்து பார்த்தான். சரயூ நதி இரைச்சலுடன் சுதந்திரமாக ஓடிக்கொண்டிருந்தது. கௌதமன்

கண்களுக்கு மேல் கைகளைக் குவித்து வைத்துக்கொண்டு கூர்ந்து பார்த்தான். தெளிவாகத் தெரியவில்லை. மறுகரையில், காவியுடையணிந்த உருவம் நடமாடுவது மங்கலாகத் தெரிந்தது. பேயோ, பூதமோ?

கௌதமன் நதித் துறையில் உட்கார்ந்திருந்த பெண்ணிடம், "மறுகரையில் இருப்பது யார்?" என்று கேட்டான். அவள் குங்கும நிறத்தில் சேலை உடுத்தியிருந்தாள். கூந்தலில் சண்பக மலர்கள்.

"பிக்ஷுக்கள் போலிருக்கிறார்கள்" அவள் தன் போக்கில் பதிலளித்தாள், அலட்சியமாக.

"நான் அவனைச் சந்திக்கப் போகிறேன்."

"வேகமாகப் பாயும் இந்தப் பிரவாகத்தையா கடக்கப் போகிறாய்? தோணி கூட இல்லையே!"

"பாதகமில்லை. நதிகளே கரை தாண்டத்தானே ஏற்பட்டிருக்கின்றன!"

மிக சுகமான பருவம். மயில்கள் அகவின; சாதகப் புள்கள் ஒலித்தன; வண்டுகள் ரீங்கரித்தன. மலர்கள் கொப்புகளிலிருந்து விடுபட்டுக் கௌதமனின் தாள்களில் உதிர்ந்தன. மலர்களை வாரி அள்ளி நதியில் இட்டான். பிறகு ஆற்றில் தாவிக்குதித்து மறுகரையை நோக்கி நீந்தினான்.

பிரவாகத்தின் உந்துவேகத்தில் கரைப்பக்கம் அண்டினான். இதற்குள் அலைவேகம் உயர்ந்தெழுந்தது. கௌதமன் முழு வலிமையுடன் நீச்சலடித்துத் தன் போக்கை நிதானப்படுத்திக்கொண்டான். ஆனால் அலையின் உத்வேகம் அதிகம். அவனால் சமாளிக்க இயலவில்லை. நல்லகாலமாக பெரும்பாறை ஒன்று எதிர்ப்பட்டது. சண்டீதேவியின் சிதிலமான கோவிலின் ஒரு பகுதி அப்பிரவாகத்திற்கும் ஈடுகொடுத்துக் கொண்டு தலை நிமிர்ந்து நின்றது. அதன் ஒரு முனையைக் கௌதமன் பற்றிக் கொண்டான். மிகவும் களைத்திருந்தான். மேல் மூச்சு வாங்கியது. பாறை முனையைப் பற்றியவாறே ஒருகணம் கண்மூடி ஓய்வு கொண்டான். கால வெள்ளம் நதியின் பிரவாகத்தை இழுத்துச் சென்றது. நாலாபக்கமும் எல்லையற்ற அகண்டவெளி. ஒருகணம் தான் பத்திரமாக இருப்பதாக உணர்ந்தான். தான் பற்றியிருந்தது கடந்த காலத்தின் சின்னம். வருங்காலத்திலும் இப்படியே இருக்கப்போவது.

ஆனால் அதைப் பற்றிக்கொண்டிருக்க முடியவில்லை. விரல்கள் இல்லாத கைகள் சில கணங்களுக்கு மேல் உதவ முடியவில்லை.

சரயூ நதியின் பேரலைகள் கௌதம நீலாம்பரனின் தலைக்கு மேல் எழும்பி வியாபித்தன...

மறுபக்கம், ஒருவன் குதிரையிலிருந்து இறங்கி, கடிவாளக் கயிற்றை ஆல மரத்தின் வேரில் முடிந்தான். கறுப்பு வண்ணக்குதிரை. பிறகு நாலுபக்கமும் பார்வையை ஓட்டினான். அவன் பெயர் அபுல் மன்சூர் கமாலுதீன்.

எதிரே சரயூ கம்பீரமாக ஓடிக்கொண்டிருந்தது. தொலைவில் குடிசைகள் தென்பட்டன. சிவாலயங்களிலிருந்து பூஜை மணிகள் ஒலிப்பது கேட்டது. ஆலமரத்தடியில் இஸ்லாமியப் பக்கிரி ஒருவரின் புனிதக் கல்லறை இருந்தது. அவன் நதியில் குனிந்தது விரல்களை நனைத்துக் கொண்டான். பாறைகளுக்கிடையில் நீர்ச்சுழிப்பில் அவன் முகம் பிரதிபலித்தது. நிமிர்ந்து பார்த்தவன் துணுக்குற்றான்.. அவன் அங்கே என்ன செய்கிறான்?

சம்பா இன்னும் வரவில்லை. மறுமுறை நதியைப் பார்த்தான். கதம்ப மரத்தின் கிளை மலர்கள் குலுங்க எழும்பியிருந்தது. சில மலர்கள் அவன் தலையில் உதிர்ந்தன. தலைப்பாகையைக் கழற்றி, மலர்களைத் தடவினான். பிறகு, நகாசு வேலைப்பாடுள்ள வாளின் கைப்பிடியைத் தொட்டுப்பார்த்தான். பூக்கும்பலுக்கெதிரில் வாள் வைத்திருப்பது பொருந்தாத செயலாகத் தோன்றியது அவனுக்கு. வாளைக் கச்சுடன் கழற்றித் தரையில் போட்டான்.

அப்போது சம்பா நீந்திவந்து கரையேறினாள். அவனைப் பார்த்து, சிரித்துக்கொண்டே, "கொலைக்களத்திற்குப் போகிறவனைப் போல் இருக்கிறதே உன்னைப் பார்த்தால்!" என்றாள்.

"மறுபடியும் அதே பிடிவாதமான பழிப்பு? 'முயலுக்கு மூணு கால்' என்கிற சாதிப்பு! எவ்வளவு தடவை விளக்கம் தருவது: நான் போர் வீரன் இல்லை, சுல்தானின் நூலகத்தைக் கவனிப்பவன்; புரிந்ததா?"

"அப்படியானால் இந்தக் கச்சும் வாளும் எதற்குக் கட்டிக் கொள்ளுகிறாய்? இது கொலைக் கருவியாயிற்றே!"

"சம்பாராணி! இது ஆண்களுக்கு அணிகலன்; வாளும் தலைப் பாகையும் இல்லாவிட்டால் ஆணுக்கான ஒப்பனை நிறைவு பெறுவ தில்லை. நீ அவத் பிரதேசவாசி; மால்வா, புந்தேல் கண்ட் பகுதிகளைச் சேர்ந்த ராஜபுத்திர வீரர்களை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். எப்போதாவது பார்த்திருக்கிறாயா? என் நண்பன் ஒருவன் இருக் கிறான். ராஜபுத்ர வீரன்—உதயசிங் ராடௌர், கன்னோஜைச் சேர்ந்தவன் ஆஹா! எவ்வளவு மிடுக்கான வீரன்! இப்போது எங்கே இருக்கிறானோ? குவாலியர் மன்னர் கீரத் சிங்கின் படையணியில் இருந்தான். மால்வா நாட்டில் ஏதாவதொரு போர்க்களத்தில் பொருதிக்கொண்டிருக்கிறானோ என்னவோ...?" கமாலுத்தீன் சில கணங்களுக்குத் தன் நண்பர்களான போர்வீரர்களின் நினைவில் மிதந்தான்.

அந்தப் பெண் நீண்ட கரிய கூந்தலிலிருந்து தண்ணீரைப் பிழிந்து, உதறிவிட்டு, நடுப்பின்னலெடுத்துக் கொண்டு, பேச்சிலும் ஈடுபட்டாள்: 'இதோ பார்! போர் பற்றி இங்கே பேசாதே. உன்னைப் பார்க்கும் போதெல்லாம் இந்த வாளோடுதான் பார்க்கிறேன்; உடனே உன் பேரில் ஐயப்பாடு ஏற்படுகிறது"

"ஐயப்பாடு! அப்படியென்றால்?"

"உனக்கு அறிவுறுத்துவது வீண்" அவள் படியில் உட்கார்ந்தாள். கமாலுத்தீன் குறுகிக் கொண்டிருக்கும் ஆலமர நிழலைக் கவனித்தான்.

"நல்லது சம்பாவதி! உனக்கு ஆண்டவன்தான் நம்பிக்கையூட்ட வேண்டும். பொறுப்பை ஆண்டவனிடம் ஒப்படைத்து விட்டேன்." குதிரையை நாடிச் சென்றான்.

அருகிலேயே முஸல்மான் பக்கிரிகளின் கூட்டம் சென்று கொண்டிருந்தது. கூட்டத்திலிருந்து ஒரு வாலிபன் சம்பாவையும் கமாலுத்தீனையும் கூர்ந்து பார்த்தான்; பிறகு பார்வையைத் தாழ்த்திக் கொண்டான்.

"கூத்தாடிக் கும்பலோ?" கமாலுத்தீன் கேட்டான்.

"அப்படியில்லை. மிக அன்பானவர்கள்; நல்லவர்கள். இவர்களைக் கேலி செய்யாதே!" சம்பா சினந்தாள், "என்றாவது ஒருநாள் இவர்கள்தாம் உனக்கு உதவுவார்கள்."

"நீ காசிமா நகருக்குப் போய், கபீர்தாஸின் மாணவியாக ஏன் மாறவில்லை.?"

"உன்னையும் காசிக்கு அழைத்துப் போவேன். ஆனால் அதற்கு முன்பு நீ உன் உடைவாளை விட்டுத் தொலைக்க வேண்டும்."

"நல்லது! ஆண்டவன் திருவுள்ளம்!"—கமாலுத்தீன் நதிப்பக்கம் சென்றான். அங்கே கை நீட்டி, "சம்பா! அதோ கற்களின் கும்பாரம் தெரிகிறதே, அது என்ன?" என்றான்.

"ஓ அதுவா? பழைய பாழடைந்த கோயிலின் இடிபாடுகள்—ஆயிரம் வருடங்களுக்கு முந்தையது."

"அதோ, அந்தப் பக்கத்தில் குடிசைகள் தெரிகின்றனவே, அவை? அங்கே யார் வசிக்கிறார்?"

"அங்கும் ஸூஃபீ துறவிகள் வசிக்கிறார்கள். அவர்கள் பக்தர்கள். சரி, இப்போது நீ எங்கே போவாய்?"

"பஹராயிச் நகருக்கு. அங்கு எவ்வளவு நாள்கள் தங்க வேண்டியிருக்குமோ, தெரியாது."

"மழை வரப்போகிறது, கவனம்!"

"கவனமாகத்தான் இருக்கிறேன். அசட்டுப்பெண்ணே! ஆண்டவன் துணை!"

அவன் அவளை 'அசட்டுப்பெண்ணே!' 'பித்துக்குளி!' என்றெல்லாம் செல்லமாக அழைப்பான். அந்த அழைப்பில்தான்

எவ்வளவு ஆழமான அன்பு! அவள் கண்ணீரைத் தளும்ப விடாமல் அடக்கிக்கொண்டு, பசுமையாக முறுவலித்தாள். அவன் குதிரையில் ஏறி விரைந்தான். புழுதிப்படலம் அவன் உருவை மறைத்துவிட்டது. அவன் சென்ற சாலையையே சம்பா பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு அவள் தன் வழியே சென்றாள்.

# 7

பஹராயிச் ஒரு சிற்றூர். மஞ்சள் நிறம் பூசிய மண்சுவர் வீடுகள் சிதறியிருந்தன. புழுதி நிறைந்த சாலையில் மாட்டு வண்டிகள் போய் வந்து கொண்டிருந்தன. விவரிக்க இயலாத சுணக்கம் அப்பகுதியில் சூழ்ந்திருந்தது. முன்காலத்தில் இந்தப் பகுதி பெரும் நகரமாக விளங்கியதாம். இதற்கு சிராவஸ்தி என்று பெயர். அப்போது, இதை ஆண்டு வந்த சோம (சந்திர) வம்சத்து அரசர்கள்—வீர தீரத்திலும் பெருங் கீர்த்தியிலும் சிறந்தவர்கள்—ஆண்டார்கள். பிரதாபம் மிக்க சுலஹு தேவன் சிராவஸ்தியை ஆண்டுவந்த காலத்தில் சோதிடர்கள் வருமுன் அறிவித்தார்கள்: “கேடுகாலம் வரப்போகிறது. வட திசையிலிருந்து வாட்ட சாட்டமான—வலிமை மிகுந்த துருக்கர்கள் வந்து உங்களை அழிக்கப்போகிறார்கள்.”

பிறகு, கஜனியைச் சேர்ந்த மஹமூதின் படைத்தலைவன் படையெடுத்து வந்தான்; அவன் பெயர் மஸ்வூத் காஸீ. அவன்தான் சிராவஸ்தி மன்னன் சுலஹு தேவனை அழித்தான். தில்லிப்பகுதியை குதுபுத்தீன் ஐபக் ஆக்கிரமித்தான். அவன் தளபதி அஹமத் அக்தியார் கோசலம், மகதம், வங்காளம் பகுதிகளில் ஆண்டுவந்த இந்து மன்னர்களை அழித்தான்.

ஆனால், எப்படித் தெய்வத்தை மறுத்த சாக்கிய முனி புத்தர் கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளுக்குள் விஷ்ணுவின் அவதாரமாக ஏற்றுக் கொள்ளப்பட்டாரோ, அதே போல், ஆலய விக்கிரகங்களைத் தகர்த்தெறிந்த தளபதி மஸ்வூத் காஸீ கடந்த இருநூற்றாண்டுகளுக்குள் ‘அருள் பாலிக்கும் மகான்’ ஆகிவிட்டார். கோசல நாட்டு மக்களுக்குப் புதிய தேவதையாகி விட்டார்.

அபுல் மன்சூர் கமாலுத்தீன் முதல் முறையாக பஹராயிச் வந்திருக்கிறான். தானைத்தலைவன் மஸ்வூத் பெரியாரின் கல்லறையைச் சூழ்ந்த மதிலுக்கு அருகிலுள்ள மரத்தடியில் உட்கார்ந்தான். அப்பக்கம் வந்த இந்துப் பெண்களின் கூட்டமொன்றை வியப்புடன் பார்த்தான். அவர்கள் பித்தளைத் தாம்பாளங்களில் நிவேதப்

பொருள்களை எடுத்துக்கொண்டு கல்லறைக்குப் படைக்க வந்தார்கள்.

நாலந்தா, விக்கிரமசிலா, உஜ்ஜைன், அமராவதி ஆகிய இடங்களிலிருந்த சர்வதேசப் புகழ்பெற்ற பல்கலைக்கழகங்கள் அழிந்து விட்டன.

சிராவஸ்தியிலிருந்த பழைய ஆசிரமங்கள் மறைந்து விட்டன. அக்காலத்தில் விநோதமான மொழிகளில் எழுதிவைத்த நூல்களை இப்போது புரிந்துகொள்ள எவரும் இல்லை.

ஆனால், காஷ்மீர் சுல்தான் ஜைன் உல் ஆபுதீன், கௌடநாட்டு சுல்தான் அலாவுத்தீன் ஹுஸைன் ஷாஹ்—இவர்களைப்போல, ஜௌன்புர் சுல்தான் ஹுஸைன் ஷர்க்கீயும் தைவ விக்ரகங்களை உடைத்துப் போடுவதற்குப் பதிலாக, அந்தப் பழைய தத்துவார்த்த நூல்களில் ஆர்வம் கொள்ளத் தொடங்கினான். அவனுக்குத் தில்லி சுல்தான் பஹ்லோல் லோதியுடனும், சுல்தான் சிகந்தருடனும் போராட வேண்டிய தருணங்களைத் தவிர, மற்ற போதுகளில், தம்பூராவை மீட்டியவாறு ஸ்வர சாதனை செய்வதும், ராகங்களை இசைத்து மகிழ்வதும், பழைய ஏட்டுச் சுவடிகளை ஆராய்வதும்தான் பிடித்தமான பொழுது போக்குகள். சில தினங்களுக்கு முன்புதான் அயோத்தியைச் சேர்ந்த சில சம்ஸ்கிருதப் பண்டிதர்களிடமிருந்து சுல்தான் அறிந்து கொண்டான்— பஹ்ராயிச்சில் உள்ள ஒரு பழைய மடத்தில் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கும் முந்தியதான தாமிரப் பத்திரங்கள்—சம்ஸ்கிருதத்தில் எழுதியவை—இருக்கின்றன என்று. சுல்தானுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தன் நூலகத்தின் காப்பாளனான இளைஞன் அபுல் மன்சூர் கமாலுத்தீனை அயோத்திக்கு அனுப்பி, விவரமறிந்த பண்டிதர்களைச் சந்திக்கச் சொன்னான்.

கமாலுத்தீன் அயோத்தியில் சில நாட்கள் தங்கினான். அவன் சந்தித்த பண்டிதர்களின் ஒருவருடைய தங்கையின் பெயர் சம்பாவதி. சரயூ நதிக்கரையிலுள்ள பண்டிதர்கள் பழைய தரிசன சாஸ்திரங்களைத் துறந்துவிட்டு புதிய மோகத்தில் திளைத்திருந்தார்கள். அதற்குப் பெயர் பக்தி மார்க்கம். சுல்தான் நாடியது பழைய தரிசன சாஸ்திர நூல்களைத்தான். ஆனால் கமாலுக்கு இந்தப் பக்திப் பித்தர், சித்தர், பக்கிரி, ஸூஃபி ஞானி எவரிடமும் ஈடுபாடு கிடையாது. அவன் சரித்திரம் எழுத முனைந்தான். அவனுக்குத் தேவை வரலாற்றுச் சான்றுகள், தடயங்கள். சுல்தான் தெளிவில்லாத பல்வேறு நிலைகளைக் கொண்ட முறையில் வரலாறு எழுதுவதற்காக நியமித்திருக்கிறான். இப்போது அவனுக்கு நல்ல பொழுதுபோக்கு. ஆனால் சுல்தானின் புது ஆணை கமாலுக்குத் தலை வேதனை யளிப்பது. இந்துப் பண்டிதர்களின் உதவியுடன் சம்ஸ்கிருதம், பாலி, அர்த்தமாகதி முதலிய பண்டைய மொழிகளில்

வைத்திருக்கும் பயனற்ற நூல்களைப் பாரசீக மொழியில் பெயர்த்திட வேண்டுமாம்.

கமால் பழைய நூல்களைத் தேடி எல்லா இந்து மடங்களுக்கும் சென்றான். சிராவஸ்தியின் இடிபாடுகளிடையே அலைந்து திரிந்தான். அவை பொட்டல் வெளிகளில் கேட்பாரற்றுக் கிடந்தன. ஒருநாள் அத்தகைய இடிபாடுகளுக்கிடையில் பாறைகளையும், கம்பங்களையும், மரத்தூண்களையும் கும்பல் கும்பலாகக் கண்டான். நான்கு பக்கமும் சந்துகள் இருந்தன. இங்கு முன்பொரு காலத்தில் பிரபலமான கடை வீதி இருந்திருக்கும்; பெரிய மாளிகைகள் இருந்திருக்கும். கமால் வியப்பும் ஆர்வமும் உந்த அந்தப் பகுதிக்குள் சென்றான். ஒரு வீட்டின் இடிபாட்டிற்குள் நுழைந்தான். இது எவருடைய மாளிகையாக இருந்ததோ?

கமால் உள்ளே சென்றான்; அங்கிருந்த மடத்தைச் சேர்ந்த பண்டிதர் ஒருவரிடம் வினவினான். "இந்தப் பெரிய மாளிகையின் இடிபாடு பற்றி உங்களுக்குத் தெரியுமா? இங்கு யார் வசித்திருப்பார்?"

அந்தப் பண்டிதர் கமாலை உன்னிப்பாகப் பார்த்தார். அவன் கண்களில் ஏதோ ரகசியத்தைத் தேடுவது போல் இருந்தது. 'இந்த வெளிநாட்டுக்காரனுக்கு இதெல்லாம் ஏன் வீண் கேள்வி, கவலை?' என்று எண்ணிக்கொண்டார். பிறகு சொன்னார்: "இங்கு எத்தனையோ சக்ரவர்த்திகள் வாழ்ந்திருக்கிறார்கள். சந்திரகுப்த மௌரியர், அசோக மகாராஜா சமுத்திரகுப்தர் இப்படிப் பலர். சந்திரகுப்த மௌரியருக்கு முன்பு இங்கே தலைசிறந்த சித்திரக் காரர்களும், சிற்பிகளும், இலக்கிய மேதைகளும் வாழ்ந்திருக் கிறார்கள். ஆனால் அவர்களுடைய பெயர்கள் எல்லாம் தெரியாது. பெயர்கள் அழிந்து போகின்றன; ஆனால் மனிதன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்."

"எல்லாம் ஆண்டவன் செயல்!" கமால் மனத்துள் சொல்லிக் கொண்டான். 'இந்த நாட்டின் வரலாற்றை எழுதுவது இயலாத செயல். தாமிரப் பத்திரங்களில் எழுதி வைத்திருப்பவர்களின் பெயர்கள் தெரியாது; அவற்றை மொழிபெயர்க்க வேண்டுமாம்!' கமால் மடத்திலிருந்து புறப்பட்டு, முன்பு கண்ட மாளிகையில் இடிபாட்டுப் பகுதிக்கே வந்து சேர்ந்தான். முடமான கம்பத்தின் கீழ் உட்கார்ந்தான். 'என்ன செய்யலாம்?' என்று யோசித்தான்.

பழைய நினைவு அலப்பியது. பாக்தாத், நேஷாபுர் பற்றிய நினைவு அவனை வருத்தத் தொடங்கியது.

கமால் பாரத நாட்டுக்குப் புதியவன். அவன் ஜௌன்புர் வந்து சில ஆண்டுகள்தான் ஆகியிருந்தன. இருபத்திரண்டு வயசுவரை பாக்தாத் நகரத்துக் கல்விக்கூடம் மதர்ஸே நிஜாமியாவில் படித்துக் கொண்டிருந்தான். இப்நேஸீநா, அல்ஃபாராபீ, ஈரானிய இலக்கியம்

ஃபக்ருத்தீன் ராஜீ, ஸ்பெயின் நாட்டு இப்நேருஷ்த், இப்நுல் அரபி ஆகியவற்றை விரிவாகப் பயின்றிருக்கிறான். அறிஞர் பெருந்தகை இப்நேகுல்தூன் அவர்களை ஆசானாகக் கொண்டிருந்தான். அரபு நாடுகளின் வரலாற்றை முறையாக எழுத வேண்டுமென்று முடிவு செய்திருந்தான். இப்நேகுல்தூன் அவர்களுடன் கருத்தொருமை கொண்டிருந்த சிந்தனையாளர்களைச் சந்திக்க அவன் வட ஆப்பிரிக்காவுக்குப் போகத் திட்டமிட்டிருந்தான். காஹிரா வரைக்கும் வந்தவனுக்கு பாக்தாதிலிருந்து செய்தி வந்தது. அவன் தந்தை காலமாகிவிட்டாரென்று ஊர் திரும்பினான். அங்கிருந்து ஈரான் வந்து சேர்ந்தான். நேஷாபுரில் ஒரு நண்பன் வாயிலாகக் கேள்வியுற்றான்: வாள் வீச்சு வீரர்களுடன் எழுதுகோல் சூரர்களும், கல்விச் செம்மல்களும் இந்தியாவை நோக்கிச் செல்லுகிறார்கள். கமால் தனக்குப் பிடித்தமான நூலையும் எடுத்துக்கொண்டு மத்திய ஆசியா மார்க்கமாக, காஷ்மீர், லாகூர் நகர்களைக் கடந்து துக்லகாபாத் வந்து சேர்ந்தான்.

இந்தக் காலகட்டத்தில், உலகமே அதிசயமான போராட்ட—மாறாட்டங்களில் உழன்று கொண்டிருந்தது. ஆனால் கமால் உணர்ந்திருந்தான்; மனிதனுக்கு விபத்தும் சீர்குலைவும் ஏற்படுத்தாத எந்தத் திருப்பமும்—யுக மாறுதலும் வரலாற்றில் நிகழ்ந்ததே இல்லை. அரபு, ஈரான், ஸ்பெயின், வட ஆப்பிரிக்கா—அங்கெல்லாம் வாழ்ந்த முஸ்லிம் வித்தகர்கள், சிந்தனைச் சிற்பிகள் கூடிக் கலந்து, மிக விமரிசையாக அறிவுக் கருவூலமெனும் தீப வரிசையைக் கடந்த அறுநூறு ஆண்டுகளாக ஒளிரவைத்து வந்ததை, கோபி பாலைவனத்திலிருந்து எழும்பிய மஞ்சள் நிறப்புயல்கள் அணைத்து விட்டன. எங்கும் போர்வெறி, கதைத் தொழில், பேரழிவு. ஆனால் இந்த அராஜகம், அழிவு, பாதகங்கள், போர்க்கொலைகளுக்கிடையே எழும்பிய புழுதி மூட்டத்திற்குப் பின்னால் வழிவழிவந்த அறிவுத் தீபங்கள் மினுக்கிக் கொண்டிருந்தன. ஸூஃபி, கான்காஹ், ஆலிம் பிரிவினரின் கல்விக் கூடங்களில் நூல்கள் இயற்றப்பட்டு வந்தன. அறிவுத் துறையில் கொடுக்கல்—வாங்கலின் வளமைக்கான தொடர்பு நீடித்தது. மனிதத் தன்மையின் ஒளிவிளக்கு என்றுமே அணைந்ததில்லை. கம்பளி போர்த்திய மெய்ஞானப் பக்கிரிகள் ஒவ்வொருவராகப் புதிய இடங்களுக்கு வரத் தொடங்கினார்கள். இந்த ஞானவித்தகத் துறவிமார்கள் வங்காளம், பிஹார், அவத், ராஜஸ்தான், தக்கின்(தக்காணம்), குஜராத், சிந்த், பஞ்சாப் பகுதிகளில் புதிய மதக் கூடங்களையும் கேந்திரங்களையும் நிறுவினார்கள்...

ஷர்க்கீ அரசு பாரதத்தில் தனது பண்பாட்டிற்கும், கலாச்சாரத்திற்கும் பிரபல கேந்திரமாகியது. ஜௌன்பூர், பாரதத்தின் ஷர்க்கீ அரசின் கேந்திரமான 'ஷொராஜ்' போல் புகழ் பெறலாயிற்று.

அபுல் மன்சூர் கமாலுதீன் தில்லியில் சில நாட்கள் தங்கிய பிறகு ஜௌன்புர் வந்து சேர்ந்தான். அவனுக்கு மிக நிம்மதியாக இருந்தது.

அவனுக்கு எதிரில் முற்றிலும் புதிய விசித்திரமான உலகம் விரிந்திருந்தது. 'இந்தியா மிகமிக அழகான தேசம்தான்! ஆனால் இப்போது இது என் தாய்நாடு இல்லை; என் சொந்த தேசம் இல்லை...'

தன் தாய்நாட்டிலிருந்து விலகி, தொலைவில் வந்து இருப்பது அவனை வருத்தியது. இடிபாடுகளுக்கிடையே ஓர் உடைந்த தூணில் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவன் சிந்தனை லயிப்பில் கண்களை மூடிக்கொண்டான். நான் இங்கிருந்து ஏன் திரும்பிப் போய்விடக் கூடாது? ஜௌன்புர் போய்ச் சேர்ந்ததும், சுல்தானிடம் விண்ணப்பித்து மன்னிப்புக்கோரி, சொந்த நாட்டிற்கு—தமிஷ்க் நாட்டிற்குக் கிளம்பி விடவேண்டும். தமிஷ்க்! இந்தப் பெயர் கூட அவனுக்கு விநோதமாகத் தோன்றியது. தமிஷ்க் சென்று அவன் என்ன செய்யப்போகிறான்? நேஷாபுரில் இனி அவனுக்கு என்ன வேலை? பாக்தாதில் அவன் செய்ய வேண்டியதென்ன? இதைச் சிந்தித்தபோதும் கமாலுத்தீனுக்கு விசனமாகத்தானிருந்தது.

மேலும், எத்தனை வகை உதவாக்கரை மனிதர்களோடு அவன் தொடர்பு கொள்ள வேண்டியிருந்தது! இப்போதும் இருந்து வருகிறது. யாரோ தெம்மாங்கு பாடிச்செல்வது கேட்டது. ஒரு கண்ணைத் திறந்து பார்த்தான். ஓர் உழவன் துண்டைத் தலையில் சுற்றிக்கொண்டு, தெம்மாங்குப் பாட்டுப் பாடிக்கொண்டு குடிசைக்குத் திரும்புவதைக் கண்டான். இப்போது அவனுக்கு அந்தச் சொந்தமான புராதன கலாச்சாரத்தோடு தொடர்பு இல்லை. அதன் பின்புலத்தில் யூதர் கலாச்சாரம் விரிந்திருந்தது; கூடவே, யூனான், ரோம், ஈரான், ஸ்பெயின் நாடுகளுடன் அதற்குத் தொடர்பு இருந்ததில்லை. அதொரு தனி உலகம். அதன் சாதனைகளைக் குறித்துப் பல கதைகள் உள்ளன. யோகிகள் வானத்தில் பறந்தார்கள்; காமரூபத்தைச் சேர்ந்த (பழைய ராஜ்யப் பகுதி—வங்காளம், அஸாம், பீஹார் எல்லைப் புறங்களைக் கொண்டது) சூனியக்காரிகள் மனிதர்களை ஆடுகளாக மாற்றிவிடுவார்கள். வங்காளம், பீஹார் பிரதேசங்களிலிருந்த தாந்திரிகர்களின் கோவில்களில் மயிர்கூச்சு விளைவிக்கும் பயங்கரமான அதிசய மாயாஜாலங்கள் நிகழ்த்தப் பெற்றன!

கமால் ஒரு படியில் உட்கார்ந்து எதிர்ப்பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். அயோத்தியில் சம்பா பாடிக்காட்டிய பாடல்கள் அப்போது நினைவுக்கு வந்தன. அந்தப் புதிய மனிதன், அறியாத நாட்டிற்கு வந்து குளிரில், ஏதோவொரு பாறையில் அமர்ந்து, இரவின் நிழலைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்!

இளம் ஒளி வெளியெங்கும் பரவியது.

முழுமதி பாழடைந்த மாளிகையின் உப்பரிகையின் இடிந்த கம்பங்களின் இடைவெளியில் தென்பட்டது. நிலாக்கதிர்கள் சிவந்து கல்தரையில் ஒளிக் கோலமிட்டன. தரையில் பூ வேலைப்பாடுகள் அழிந்து மங்கலாகத் தென்பட்டன. விதவிதமான குறியீடுகள்! திரிசூலம், கல்ப விருட்சம், தாமரை, சிருஷ்டி சக்கரம், கமலாஸனம், அக்னி ஸ்தம்பம்—இப்படி அதிசயமான குறியீடுகளுக்கு என்னதான் பொருள் விளக்கம் கொண்டிருந்தார்களோ! இவற்றுக்கெல்லாம் என்ன பொருள்..?

கமால் வியப்புடன் அந்த ஓவிய வேலைப்பாடுகளைப் பார்த்தவாறு சிந்தித்துக் கொண்டிருந்தான். வெளியே இலுப்பைத் தோப்பில் பயங்கர அமைதி நிலவியது.

நேரம் ஆக ஆக, அந்த அச்சுறுத்தும் அமைதியில் மாறுதல் தோன்றி, விசித்திரமான ஒலிகள் எழத்தொடங்கின. இருண்ட, பாழடைந்த வீதிகளில் பெரிய ரதங்கள் ஓடத் தொடங்கின. ரதங் களில் தங்க நிறக்குடைகள் விரிந்திருக்கின்றன. குடைகளுக்கடியில் அறிமுகமில்லாத மனிதர்கள் அலங்கரிப்புகளுடன் அமர்ந்திருக் கிறார்கள். காதுகளில் சொர்ண குண்டலங்கள்; தோளில் அழகிய பட்டுச் சாதரா. இருளில் அவர்களுடைய கண்கள் கனலாக ஒளிர்ந்தன. அந்த மனிதர்கள் பயங்கரமாகச் சிரித்தார்கள். முகம் விகாரமாகக் கோணியது, 'நாங்கள் அழிந்து பட்டது போல், ஒருநாள் நீயும் நிர்மூலமாக்கப்படுவாய்!' என்று சூளுரைப்பது போல் இருந்தது. கமாலுத்தீனுக்கு எதிரில், உடைந்து கிடந்த வாசல் பக்கத்தில் சந்திரகுப்த மகாராஜா நின்று கொண்டிருந்தான். பாரத தேசத்தின் சக்கரவர்த்தி! இவன் எங்கிருந்து வந்தான்.? இவன்தான் ஏசு பிறப்பதற்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே மரித்து விட்டானே! ஆனால் இவனோ இப்போது இந்த இடிந்த—பாழடைந்த மாளிகைக் கருகில் நின்று சிரித்துக்கொண்டிருக்கிறான். இவனுக்குப் பின்னால் மற்றொருவன் தலைகாட்டுகிறான். மென்மையான குரலில் பேசுகிறான். புதியவன்: 'என் பெயர் அசோகன், பிரியதர்சி அசோகன். நான் பாரதம் முழு வதையும் ஆண்ட பேரரசன். இருந்தும் நான் மரித்த காலத்தில் எனக்கிருந்தது ஒன்றரை நெல்லிக்காய்கள்தான்" என்றான். பிறகு, தான் கையில் மூடிவைத்திருந்த அரை நெல்லிக்காயை கமாலுத்தீனுக்கு எதிரில் எறிந்தான்.

பிறகு பழைய ஆவிகள் வரிசையாக உலா வந்தன. யாவும் கடந்த கால மனித ஆன்மாக்கள். ரதங்களிலிருந்து இறங்கிச் சூழ்புறத்தில் பரவின.

"நான் பரத முனிவன்; நாட்டிய சாஸ்திரம் இயற்றியவன். நடனம், நாடகங்களுக்கான மரபுகளை ஏற்படுத்தி வைத்தவன்

நான்."

"நான் தக்ஷசிலாவைச் சேர்ந்த விஷ்ணுகுப்தன்; நான் அர்த்த சாஸ்திரம் இயற்றியவன். சாணக்கியன், கௌடில்யன் என்றும் என்னை அழைப்பதுண்டு."

"நான் போஜ ராஜன்"

"நான் வெறும் வாணியனுங்க; கங்கவா என்பேர்."

"இந்த இருளில் மேகங்கள் முழங்குகின்றன; நான் காளிதாசன்"

"நான் கன்னோஜைச் சேர்ந்த ராஜசேகரன்."

"என்னைப் பவபூதி என்று அழைப்பார்கள். நான் 'மாலதீ மாதவம்' எழுதியிருக்கிறேன்."

"நான்தான் பர்த்ருஹரி. நான் அப்போதே சொல்லியிருக்கிறேன்: 'இந்த உலகமே நாடகமேடை, நாமெல்லாரும் நடிகர்கள்—நான், நீ, அவர் இவர் யாவருமே! உண்மைதானே..."

மண் வண்டியை இழுத்துக்கொண்டு கவி சூத்ரகன் அங்கணத்திலிருந்து வெளியே சென்றான்.

வாட்கள் போராவேசத்துடன் மோதிக்கொள்ளும் ஒலி மேலோங்கியது. அவை கிளப்பிய தீப்பொறியில் இருள் பிரிந்தது. தலைகள் துண்டிக்கப்பட்டுத் தரையில் உருண்டன. ரணகளம், குருதி வெள்ளம், கோலாகலம், கோரமான கொலைவெறி!

எக்காளக் குரல்கள் ஒலித்தன, "நாங்கள் சந்தேலா ராஜபுத்திர வீரர்கள்...! நாங்கள் பகேலா வீரர்கள்...! நாங்கள் பர்மார் வீரர்கள்...! நாங்கள் ராடௌர் வீரர்கள்...! நாங்கள் ஜௌஹான் வீரர்கள்...! நான் ஆல்ஹா... நான் ஊதல்...!"

கமாலுத்தீன் கலவரத்துடன் எழுந்து உட்கார்ந்தான். வெள்ளி முளைத்திருந்தது. கருக்கல் வெளிச்சம் பரவத் தொடங்கியது. வெளியே இலுப்பைத் தோப்பில் உழவுக்குச் செல்லும் குடியானவர்கள் ஆல்ஹா-ஊதல் வீரப் பாடலை ஆவேசமாக இசைத்துச் சென்றார்கள். கமாலுத்தீன் திக் பிரமையுடன் சுற்றிலும் பார்த்தான். 'தான் எங்கு இருக்கிறோம்?' நிதானித்துக் கொள்ள நேரம் பிடித்தது. பிறகு புரிந்தது. இது சிலைகளை வணங்குபவர்களின் இடிபாடுகள்; இடம் பஹராயிச். அவனுடைய கருநிறக்குதிரை எதிரே கட்டப்பட்டிருக்கிறது. அது கனைப்பது கேட்கிறது. மழை சற்று ஓய்ந்திருக்கிறது. வெகு சுகமாக இளங்காற்று வீசுகிறது.

கமாலுத்தீன் இரண்டாவது முறையாக 'லாஹௌல்...' என்று தொடங்கி அல்லாவைத் துதித்தான். காலைத் தொழுகை நமாஸ் படிக்க வேண்டி மெள்ள எழுந்து நதிக்கரைக்கு நடந்தான்.

# 8

கமாலுத்தீன் பகல் முழுவதும் வடமொழிப் பண்டிதர்களுடன் அமர்ந்து, பழைய தாமிர சாஸனங்களைப் படித்தறியப் பாடுபட்டான். பிறகு சோர்ந்து போய், மடத்திற்கு வெளியே புல்தரையில் உட்கார்ந்து யோசித்தான்: 'மறுநாள் காலையில் அயோத்திக்குப் புறப்பட்டுவிட வேண்டும். பிறகு...' இந்தச் சமயத்தில் ஒரு மழைத்துளி அவன் முகத்தில் தெறித்தது; 'ஓ! ஆவணி தொடங்கி விட்டதோ! பருவங்களுக்குத்தான் எவ்வளவு மகிமை - பெருமை! ஒவ்வொரு மாதத்தின் பெயருடன் பருவ நிலையின் இனிய குறிப்பு தொக்கியிருக்கிறது; தன் நிலை, காட்சி, மாறுதல் எல்லாமே தெரிகின்றன. இது அவனுடைய நாடல்ல. ஆனாலும் இந்தப் பருவக் கவர்ச்சிகளிடமிருந்து தப்பிச் செல்லவும் முடியாது.

யாரோ சிம்டா தாளம் இசைத்துக்கொண்டு வருவது தெரிந்தது. ஒரு துறவி மழைக்கு ஒதுங்க அங்கே வந்தார். தன்போக்கில் ஏதோ பாடிக்கொண்டிருந்தார். கமாலுத்தீன் அவரை ஆவலுடன் கவனித்தான். பணிவாக, "ஜயராம்ஸ்ரீஜீ!" என்று வந்தனக்குரல் கொடுத்தான்.

துறவி திரும்பிப் பார்த்து, "சிப்பாய்! எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டார்.

"பாபா! நீங்கள் இங்கேயே இருக்கிறீர்களா?" கமால் பதிலுக்குக் கேட்டான்.

"நாம் ஜௌன்புரைச் சேர்ந்தவர்கள்."

"அடேடே! அப்போ நீங்கள் என் ஊர்க்காரர்!" உற்சாக மேலீட்டில் கமால் உறவு கூட்டினான். மறுகணமே இந்தக் கணநேர உற்சாகத்தின் பொருளின்மையை உணர்ந்து நாணினான் 'என் ஊர்?' ஜௌன்புர் அவனுடைய ஊரா? அவன் பாக்தாத்வாசி. அவனுக்கே சலிப்பாக இருந்தது.

"ஹரே ராம்! ஹரே ராம்! கல்யாண குண ராமா...!" சாதுத் துறவி கண்களை மூடி . ஆத்ம லயிப்புடன் பாடிக்கொண்டிருந்தார். சிறிது நேரம் கழித்து அவரே கமாலை அழைத்து ஒரு தகவலைச் சொன்னார்: "இன்றைக்குச் சில பக்கிரிகள் தர்க்காவுக்கு வேண்டுதலை செலுத்த ராபடீ நகரிலிருந்து வந்தார்கள். அவர்கள் சொல்லித்தான் தெரியும்: நம் சுல்தானுக்கும் தில்லி சுல்தானுக்கும் மறுபடியும் சண்டையாம். இந்த முறை நம்மவர் மீள முடியாதாம்... கடுமையான போராம்... ஹரே ராம்! நிர்க்குண ராம்! ராம பிரும்மம்...!" தொடர்ந்து தன் துதி கீதத்தை இசைக்கலானார்.

கமால் துணுக்குற்றான். துறவியை நெருங்கி, "சுவாமி! என்ன சொல்லுகிறீர்? மறுபடியும் சொல்லும்!" என்றான். இதற்குள் அங்கே

ஏழெட்டுக் குடியானவர்கள் குழுமி விட்டார்கள். பஜனை கீதம் எழும்பிப் பல குரல்களாக எதிரொலித்து. கமாலின் கேள்விக்கு யாரும் பதில் சொல்லத் தயாராயில்லை. அவன் அவசரமாக இடுப்பில் கச்சை விரித்துக் கொண்டு, மழையையும் பொருட் படுத்தாமல் புறப்பட்டான். சத்திரத்திற்குப் போனான். உள்கூடத்தில் அவன் வரவை எதிர் நோக்கிக் காத்திருந்தான் ராடௌர் வீரன் உதய சிங். அவனைக் கண்டதுமே அதிர்ந்து போனான். "நீயா! நீ இங்கே எப்படி வந்தாய்? நீ குவாலியரில் இருந்தாயே...!"

"குவாலியரிலிருந்துதான் வருகிறேன். என்னோடு இப்போதே கிளம்பு! பாதுஷா உன்னைக் கையோடு அழைத்து வரச் சொன்னார்."

"என்னைத் தேடியா இவ்வளவு தொலைவு வந்தாய்?"

"இப்போது பாதுஷாவும் இங்கு தான் பஹராயிச்சில் இருக்கிறார். நீ இங்கு ஞானம் - தியானம், ஏடு - சுவடி என்று காலம் தள்ளுகிறாய்1 உலகமே மாறிக்கொண்டிருக்கிறது. தில்லி சுல்தான் பஹலோல் உன் பாதுஷாவை ராபடீ நகரில் படையெடுத்து எதிர்கொண்டான். கடுமான தாக்குதல். சரி, நீ இப்படி உட்கார்! விவரமாகச் சொல்லு கிறேன்."

கமாலுத்தீன் கட்டிலில் உட்கார்ந்தான். உதயசிங் தொடர்ந்தான். "உன் அரசர் சுல்தான் ஹுஸேன் போருக்கு இழுக்கப்பட்டபோது, அவரால் தாக்குப்பிடிக்க முடியாது போகவே, உன் பாதுஷா யமுனையைக் கடந்து, எங்கள் ராஜாவிடம் உதவிபெறக் குவாலியர் வந்து சேர்ந்தார். எங்கள் ராஜா உதவிக்குத் தம் படையணியை அனுப்பி வைத்தார். நான் அந்தப் படையுடன் சென்றேன். காலபி களத்தில் போர் மூண்டது. பயங்கரமான போர்!." உதயசிங் சுத்த போர் வீரனுக்குரிய உற்சாகத்துடன் போர்க்களத் தகவல்களை விவரித்தான்.

தரையிலிருந்து ஒரு குச்சியை எடுத்து, கட்டிலில் வரைபடம் போட்டு படைநிலை, போர்த்தந்திரம், தாக்குதல்கள், முன்னேற்றம்—பின்வாங்கல் என்று எல்லா விவரங்களையும் வர்ணிக்கத் தொடங்கி விட்டான்: "இவை தில்லிப்படைகள், இங்கே நம்படைகள். நடுவில் யமுனை. இருதரப்பாரும் நதியைக் கடக்க முடியாது. நாட்கள் போய்க்கொண்டிருந்தன. பாடிவீடுகள் தண்டு இறக்கியபடி இருநந்தன. மோதலுக்கு வழியில்லை. ஒருநாள் எதிர்பாராத வகையில் சுல்தான் பஹோலின் படைகளைத் திரிலோக் சந்தர் காதும் காதும் வைத்தாற் போல் நதியைக்கடக்க வைத்து விட்டான்; துரோகிப் பயல்! திரிலோக் சந்தரைத் தெரியுமா உனக்கு?"

"தெரியாதே"

"பக்ஸர் பகுதி மன்னன். நீ பக்ஸர் போயிருக்கிறாயா?"

"போனதில்லை. நீ தகவலைச் சொல்லப்பா! பிறகு என்ன

நடந்தது?" கமாலுத்தீன் பொறுமையிழந்தான்.

"நடப்பதென்ன? தில்லிப் படைகள் எங்களைத் துரத்தின. நாங்கள் ஜௌன்புர் கோட்டைக்கு விரைந்தோம். அங்கேயும் போர். ஜௌன்புரை நிர்க்கதியாக விட்டுவிட்டு, இங்கு பஹ்ராயிச் வந்து சேர்ந்திருக்கிறோம். உன்னுடைய ஜௌன்புர் இப்போது அத்துவான மாகி வெறிச்சோடிக் கிடக்கும். அங்கே பகலிலேயே ஆந்தைகள் கத்துகின்றனவாம். சரி, நீ கிளம்பு! பாதுஷாதான் சொன்னார்: நீ பல மாதங்களாக இந்தப் பக்கத்தில் தங்கியிருக்கிறாயாம். காலையிலிருந்து உன்னைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். மடத்திலே இருக்கிற பண்டிதர்களிடம் நீ இங்கே இருப்பதைத் தெரிந்து கொண்டேன்."

கமால் வாள் கச்சை இடுப்பில் கட்டிக்கொண்டு, உதயசிங்குடன் படை முகாமை நோக்கி விரைந்தான். ராப்தி நதிக்கரையில் தண்டு இறங்கியிருந்தது. அங்குதான் முன்பு புத்தர் தர்மோபதோசம் செய்த—அஹிம்சை நெறியைப் பரப்பிய—ஜேதவனம் இருந்த இடம்.

பஹ்ராயிச்சிலிருந்து அவர்கள் கன்னோஜ் சென்றார்கள். அங்கும் பஹ்லோல் லோதி அவர்களைத் தோற்கடித்தான். இறுதியாக, சுல்தான் ஹுஸேன் சோர்ந்து சலித்துப்போய் பிஹாரில் புகலடைந்தான். அவன் ஆட்சிபுரிந்த ஜௌன்புரில் இப்போது தில்லியைச் சேர்ந்த இளவரசன் ஒருவன் ஆண்டு கொண்டிருக் கிறான்—பஹ்லோல் லோதியின் மகன். சுல்தான் ஹுஸேனின் ஷர்கீ அரசகுலம் நசித்து விட்டது. பாரத்தின் சிறந்த கலை வளர்க்கும் தலைநகர் ஒன்று அழிந்து விட்டது.

அபுல் மன்சூர் கமாலுத்தீன் - காஜீயார் ஷஹாபுத்தீன்(ஜௌன்புர் வாசி) அவர்களின் வாரிசு, வரலாற்றாசிரியன், ஆராய்ச்சியாளன், கல்வியில் சிறந்தவன், இப்போது அரசியல் சாலக்குகளில் தேர்ந்த நிபுணனாகி விட்டான். இரவு பகலாக முன்னாள் ஜௌன்பூர் சுல்தான் ஹுஸேனுடன் அமர்ந்து, தில்லி சுல்தானை எப்படி ஒழித்துக் கட்டலாமென்று மண்டை கலங்க யோசித்துக் கொண்டிருக் கிறான்!

இப்போது தில்லி சுல்தான் பஹ்லோல் காலமாகி விட்டான். அவனுடைய அழகான மகன் சிக்கந்தர் லோதி பாதுஷாவாகியிருக் கிறான். அவனுடைய தாய் இந்துப் பெண்- ஹேமாவதி என்று பெயர். இவன் தந்தையைவிட வலிமை—வீரம்—திறன் மிகுந்தவன் என்பதை நிரூபித்தான்.

பிஹாரில் புகலடைந்த முன்னாள் சுல்தான் குழுவினர், கடைசி முறையாக உயிர்ப் பணயம் வைத்து படை திரட்டிக்கொண்டு, தில்லிப் பேரரசுடன் பொருதார்கள். ஹுஸேன் ஷர்க்கீ இம்முறையும் புறமுதுகிட்டுத் திரும்பினார் புகலிடமான பிஹாருக்கே! இசைப் பித்தர் போர்த் திறனைக் காட்ட முடியவில்லை.

கமாலுத்தீனுக்குச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. அவன் நிறைய ரத்தக்களரிகளைக் கண்டுவிட்டான். எண்ணற்ற மனிதர்களை அவனே கொன்று குலைத்திருக்கிறான். எத்துணை அநாதைப் பெண்கள் அழுது—அரற்றித் தவிப்பதைக் கண்டிருக்கிறான்! தன்னுடன் சுல்தானின் தர்பாரில் மேன்மையும் மதிப்புமாக இருந்த கவிஞர் - கலைஞர் - அறிஞர் பெருமக்களையெல்லாம் தில்லி தர்பாருக்குப் போர்க்கைதிகளாக இழுத்துச் செல்லப்படுவதைக் கண்டான். வெற்றி கண்டவனும் கலை-கல்விகளில் நாட்டம் கொண்டவன்; கவிஞன்; கலை நேசன். இருந்தென்ன? கமாலுத்தீனுக்கு நெஞ்சு பொறுக்கவில்லை. அறிவுக் கருவூலங்களான நூல்கள் வெறும் குப்பைகள்! கல்வியறிவு வீண்! தத்துவ ஞானம் உதவாக்கரை!

ஏன் தெரியுமா? இவ்வளவு அரும் பெரும் சிறப்புக்கள் இருந்தும், அறியப் பெற்றும், மனிதகுல நாசம் நடந்து வருகிறது; மனித ரத்தம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ரண களங்கள் வெறியாவேசத்துடன் பரவுகின்றன. வரலாற்றில் அவனுக்கு எவ்வளவு பேரார்வம் இருந்ததோ, அவ்வளவுக்கு இப்போது அதில் வெறுப்பும் அருவருப்பும் ஏற்பட்டு விட்டன. அவன் சுல்தான்களின் வம்சாவழி, அவர்களுடைய காலம், கோலம், ஆட்சி நிகழ்ச்சிகள், பெருமை, சிறுமை சகலத்தையும் மறந்து விடவே விரும்பினான்.

அப்பாவி சுல்தான் ஹுஸேன் ஷர்க்கீ நாடற்று, ஆட்சிப்பீடமற்று, புதிய புகல் தேடி பிஹாரிலிருந்து வங்காளத்திற்குச் சென்றான். கௌட நாட்டுப்பகுதியை ஆண்டுவந்த வங்காளத்துச் சுல்தான் ஹுஸேன்ஷா புகல் நாடி வந்தவனுக்கு ஆதரவு தந்தான். கமாலுத்தீன் அரசனின் பூங்காவில் நிம்மதியில்லாமல் உலாத்திக்கொண்டிருந்த போது, "என் ஆத்மா எதை நாடி இங்கே வந்திருக்கிறது.?" தனக்குள் கேட்டுக் கொண்டான். அவனுடைய சுயத்தன்மை அந்தப் பயங்கர மான சூனியத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. வெறுப்பூட்டும் அமைதி மட்டுமே இருந்தது. அந்த மௌனத்தில் ஓர் எண்ணம் மட்டும் அடிக்கடி எழுந்தது. 'நான் இந்தச் சூழலில் உழன்று கொண்டிருக்கிற வரையில், நான் பிறரைக் கொன்று சாய்க்கத்தான் வேண்டும்; பிறரும் என்னைக் கொல்லக் காத்திருப்பார்கள்; முனை வார்கள். மனிதன் உண்மையில் மனிதனே இல்லை; கொலைவெறி பிடித்த ஓநாய்! எனக்கு உண்மையான மனிதன் எங்கிருந்து கிடைப்பான்-?'

பல ஓலங்கள் அந்த அமைதியைக் குலைத்தன. 'நான் இதோ எதிரே தென்படுகிறவனைக் கொல்லவேண்டும்; ஏன்? இவன் குடுமி வைத்திருக்கிறான்; பசுவைப் பூஜிக்கிறான். நான் முந்திக்கொள்ளா விட்டால், இவன் என்னைக் கொன்று போடுவான்; காரணம், என் தலையில் குடுமி இல்லை; நான் பசுவைக் கொன்று தின்பவன்.

அழகான அந்த சிவபுரியை—வாரணாசி நகரை அழிக்கவேண்டும்; அங்கு சிலைகள் உள்ள கோயில்கள் ஏராளம். சரி, அந்தச் சிலைகள்—தெய்வ மூர்த்திகள் எனக்கு என்ன தீங்கு செய்தன...?'

பருவங்கள் கடந்தன; காலம் மாறி வந்தது. கமாலுத்தீன் உள்ளத்தின் வெறுமையுணர்வைப் பொறுக்க முடியாமல் பதறிப் போனான். மீள்வதற்கு வேண்டி இன்பக் கேளிக்கைகளில் உழன்றான். சாரங்கி இசைக்கும்போது அவனுக்கு மரண ஓலம் போல் கேட்டது. லக்னோ நகர் கணிகைகளின் ஆடல் பாடல்களை அனுபவிக்கும் போது, சவங்கள் கோரமாகப் பல் இளித்துப் பேய்க்கூத்து ஆடுவது போல் இருந்தது. எல்லாமே அழிவை எடுத்துக்காட்டின. அவன் மூளையில் எப்போதும் மாறிமாறி அவலமாக ஒலித்துக் கொண்டிருந்தவை பலவகைக் குரல்கள், விசித்திரமான பாடல்கள், புரியாத மொழித்தொடர்கள். அவன் இந்த உள்ளுணர்வுகளின் கலவரங்களைச் சகித்துச் சகித்துச் சலித்தான். அமைதி இவ்வளவு பேயிறைச்சல் கொண்டிருக்கும் என்பது அவனுக்குப் புது அனுபவம். அவன் தவித்துப்போனான்.

ஒருநாள் யாரோ அவன் காதில் ஓதியதுபோல் ஒலித்துக் கொண்டிருந்தது: "வைரம் பிறப்பது அரிய செயல்; சோழியைக் கொடுத்து மாற்றிடலாகுமோ? வைரம் விலை மதிப்புக்கு அடங்காதது; வைரம் மிகமிக அரியபொருள்..."

கமாலுத்தீன் மனச்சள்ளையைப் போக்கிக்கொள்ள, புதிய கணிகையிடம் சென்றான். அவளைப் பாடச் சொன்னான். "குனகரீ பாடு! மது மாதவி பாடு! லலித ராகத்தில் இசை...!" அவள் தம்பூராவை மீட்டத் தொடங்குகிறாள். அவன் நிலைகுலைந்து அங்கிருந்து ஓடுகிறான். விலை மாதர்களின் இனிய பாடல்கள் ஒடுங்கி, வேறொரு குரல் அவனைக் குரூரமாகப் பின்தொடர்கிறது : "போர் முரசு ஒலிக்கிறது; படை முரசு முழங்குகிறது; படையெடுக்க வாரீர்! இடையறாமல் படை முரசு முழங்குகிறது..."

கமாலுத்தீன் மன்சள்ளையை விலக்க, பட்டிக்காடுகளில் சுற்றித் திரிந்தான். பெரிய ஊர்கள் அவனுக்குச் சலித்துவிட்டன. குக்கிராமங்களில் வண்ண மலர்கள் சுயேச்சையாக மலர்ந்திருப்பதைக் கண்டான்; குளங்களில் தாமரை அடர்ந்து மலர்ந்திருப்பதை ரசித்தான். மகிழ மரத்தடியிலும் புன்னைமர நிழலிலும் வைணவ பக்தர்கள் இருபாலரும் ராதையும் கண்ணனும் கலந்து குலாவி மகிழ்ந்த நிலைகளை விளக்கும் இனிய பாடல்களை ரம்மியமாக இசைத்துக் கொண்டிருந்தார்கள். அவனுக்கு இதமாக இருந்தது. அப்பால் பாழடைந்த மாளிகைகள் தென்பட்டன; புல் பூண்டுகள் மண்டிக் கிடந்தன. அங்கு முன்பு வங்காபதி, கௌடேசுவரர் முதலான பேரரசர்கள் வசித்தார்கள். பால வம்சம்—ஸேன வம்சம்

மேலோங்கிய காலத்தில் கோலோச்சிய அந்த வம்சத்து மன்னர்களின் அரண்மனைகள் எழும்பியிருந்த இடத்தில் இப்போது கல்லறைகள் நிறைந்த இடுகாடு பரந்திருந்தது. அதைச் சூழ்ந்த சுவர் இடிந்து கிடந்தது. அங்கே ஒரு கிழவன் உட்கார்ந்து, உடல் குலுங்க இருமிக் கொண்டிருந்தான். எதிரே கழனிகளில் உழவு நடந்து கொண்டிருந்தது. அதற்கருகில் மகாநந்தா நதி ஓடிக்கொண்டிருந்தது. அவன் தலைக்குள் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்த இரைச்சல் கொஞ்சம் அடங்கியது. அயோத்தியில் முன்பு யாரோ பாடிய இரு வரிகள் அவனுக்கு நினைவு வந்தன. அவ்வரிகளின் முழுப் பொருளும் இன்று அவனுக்கு மின்னல் போல் பளிச்சிட்டது:

"இன்றைக்கும் நாளைக்குமிடையே வாழும் கானகம்
என்றும் கலப்பைகள் பதியும் கால்நடைகள் மேயும்."

ஆம், இங்கெல்லாம் கால்நடைகள் மேயும், கால்நடைகள் கிடை கிடக்கும்.

மனச்சள்ளையும், உணர்ச்சியெழுச்சியும் அதிகரிக்கவே கமாலுத்தீன் வங்காளத்தை விட்டே போய்விடுவதென்று முடிவு செய்தான். சுல்தான் ஹுஸேன் ஷர்க்கீயை கௌட நாட்டுச் சுல்தானிடம் நிராதரவாக விட்டுச் செல்வது அவனுக்கே வெட்கக் கேடாகத் தோன்றியது.

"ஆனால் உணர்வுகள் சாசுவதமல்ல; நீர்க்குமிழிகளைப் போன்றவை." சுய சமாதானத்துக்காகச் சொல்லிக்கொண்டான். பிறகு ஒருநாள் மாளிகையைத் துறந்து வெளியேறி விட்டான். கங்கைக் கரைக்கு வந்ததும், நதியைக் கடக்கத் தோணியில் அமர்ந்தான். கப்பல் போன்ற அந்தத் தோணி எங்கே போகிறது என்பதுகூட அவனுக்குத் தெரியாது. நதியில் வெளிச்சம் தெரிந்தது. நங்கூரத்தைத் தூக்கி விட்டார்கள். துடுப்பு இயக்குபவர்கள் உற்சாகமாகப் பாடத் தொடங்கினார்கள். கமாலுத்தீன் பெரிய ஓடத்தின் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். அது பிரயாகைக்குப் போவது.

நாட்கள் கடந்தன. கங்கையின் மடியில் ஓடம் தவழ்ந்து முன்னேறியது. பயணிகள் நிறைந்திருந்ததால் கலகலப்புக்குக் குறைவில்லை. பாகல்புர் நகருக்காக ஒரு கிராமத்தில் ஓடம் நின்றது. கலியாணக் கூட்டம் அதில் ஏறிக்கொண்டது. பிள்ளை வீட்டாரின் கூட்டம், புதுமணப் பெண்ணைப் பல்லக்கில் அமர்த்திக் கொணர்ந்திருந்தார்கள். மணவாளன் மஞ்சளாடை உடுத்தியிருந்தான். மணமகள் நீண்ட பர்தாத் துணியை முக்காடிட்டிருந்தாள். பெற்றவரைப் பிரிந்து செல்லுகிறோமே என்கிற துயரம்; கேவிக்கேவி அழுது கொண்டிருந்தாள்.

கமாலுத்தீன் ஓடத்தின் விளிம்புப் பலகையில் சாய்ந்து உட்கார்ந்தவாறு இந்தக் காட்சியைக் கண்டுகொண்டிருந்தான்

.ஏதேதோ நினைவுகள்...

"சம்பாவதி! என்னை மணந்துகொள்ளேன்."

"ராம்! ராம்! என்ன பேச்சு இது? எனக்கு உங்கள் மௌல்விகளின் தாடியைப் பார்த்தாலேயே பயமாக இருக்கிறது. நீயும் ஒருநாள் ஜௌன்புர் காஜியாராகி, தாடி வளர்த்துக்கொண்டு கிழக்கோலம் போடுவாய்!"

"சம்பாராணி! இன்னும் காலதாமதமாகி விடவில்லை. யோசித்துச் சொல். இந்த வாய்ப்பை விட்டால், பிறகு எந்தக் கிழப்பண்டாவின் கழுத்திலாவது உன்னைக்கட்டி விடுவார்கள். நீ ஆயுள் முழுவதும் அவனுக்குத் தொண்டு புரிந்து நலியவேண்டும். அவன் மரித்ததும் நீயும் அவனுடன் சிதையில் உயிரோடு வெந்து சாகவேண்டும். உன்னைக் கட்டிச் சிதையில் போட்டுவிடுவார்கள். இதையெல்லாம் நீ நினைத்துப் பார்த்தாயா?"

"சாவதற்கு நான் தயங்கவில்லை. உன்னுடன் கூடச் சாகத்தயார்! நீ செத்துக்காட்டு!"

கமாலுத்தீன் இதைக்கேட்டதும் கலங்கிவிட்டான். "அதெப்படி? உனக்கும் எனக்கும் திருமணமே நடக்கவில்லையே! அப்படியானால் நீ... என்னை... அதாவது..."

"அதனாலென்ன? ஜன்ம ஜன்மாந்திரமாக நமக்குத் தொடர்பு இருந்து வருகிறதே."

"அப்படியா! இதென்ன பிதற்றல் ? நீ மறுபடியும் மாய வித்தைப் பேச்சைத் தொடங்கிவிட்டாயா?"

"இதிலே மாயவித்தை என்ன? நாங்கள் உன்னைத் தேர்ந் தெடுத்தோம்; உனக்குப் பணிந்து போகிறோம்."

"இதென்ன அதர்மப் பேச்சு? ஆண்டவன் மன்னிக்கட்டும்! நான் ஆண்டவனா?

"அப்படித்தான். மனதுதானே ஆண்டவனை உருவாக்கி வெளிப்படுத்துகிறது!"—சம்பா உரக்கச் சிரித்துக்கொண்டே அங்கிருந்து ஓடி விட்டாள்.

பாடலிபுரத்துத் தோணித்துறையில் பலர் இறங்கினார்கள்; பலர் புதிதாக ஏறிக்கொண்டார்கள். இவர்களில் சில வாலிபர்கள் இருந்தார்கள். செப்பிடு வித்தைகாரர்களின் கூட்டமும், யோகிகளின் குழுவும் இருந்தன. வெளிர் மஞ்சள் வண்ணத்தில் துறவாடை உடுத்தியிருந்த பௌத்தர் ஒருவர் தனியே நின்று கொண்டிருந்தார். சிறிது நேரமானதும், யோகிகளின் குழுவிலிருந்து ஒருவர், கமால் அருகே வந்தார். அறிமுகமான நபர்போல் தோன்றியது.

"எங்கே போகிறீர்கள்?" கமால் கேட்டான்.

"காசிக்கு"

"அங்கே என்ன...?"

“அங்கே என்ன இல்லை? அது சிவபுரி. அங்கே இருந்தாலே போதும். பரமானந்தம் ஏற்படுகிறது. அங்கு என் ஞானகுரு இருக்கிறார். அவர் புகழ் எங்கும் பரவியதாயிற்றே. உனக்குத் தெரியாது? இவ்வளவு வயதைக் கடந்து வந்திருக்கிறாய்! நீ ஜௌன்புரைச் சேர்ந்த கமாலுத்தீன்தானே?”

கமால் திகைப்புடன் அந்த யோகியைப் பார்த்தான்.

“நான் சுல்தான் சிகந்தரின் தளபதியாக இருந்தவன். சுநார் போர்க்களத்தில் உன்னோடு பொருதியிருக்கிறேன். நீ என்னைக் காயப்படுத்தியிருக்கிறாய். இதோ பார், என் வலது கையை” கமால் ஒளி குன்றிய கண்களால் பார்த்தான். விரல்கள் துண்டிக்கப்பட்டதால், கை மொக்கையாக இருந்தது. இடது கையால் தம்பூராவை மீட்டிக்கொண்டிருந்தான். அவன் சொன்னான்:

“இன்னும் கேள், நீ கௌட நாட்டில் கேளிக்கையில் ஈடுபட்டிருந்த போது, அவள் உனக்காகக் காட்டிலும், சோலையிலும் ஏங்கி, அலைந்து கொண்டிருந்தாள். அந்தப் பெண்ணின் துயரத்தை உன்னிடம் தூது வந்து சொல்ல ராஜஹம்ஸப் பறவை ஏதும் இல்லை.”

கமாலின் உள்ளம் படபடத்தது. இவர் சோதிடம் ஆருடம் எல்லாம் அறிந்திருப்பாரோ?

அவன் தொடர்ந்தான்: “நான் என் படையணியோடு அயோத்தி வழியாகச் சென்று கொண்டிருந்தேன். ராபடி போர்க்களத்தில் அப்பெண்ணின் சகோதரன் இறந்தான். அவள் காட்டுப்பாதையில் அழுது திரிந்தாள். ஒவ்வொரு படைவீரனைக் கண்டதும், நீதான் வந்துவிட்டாயென்று நினைத்தாள். நீ திரும்பி வருவதாக அவளுக்கு வாக்குக் கொடுத்திருந்தாயல்லவா? என்னிடம் வந்து வழக்கம்போல் அவள் உன்னைப்பற்றிக் கேட்டாள். எனக்கு ஏதும் தெரியாதென்று சொல்லிவிட்டேன். பிறகு அவள் சென்று விட்டாள்...”

யோகி ஒரு கணம் பேசாதிருந்தான். பிறகு “கமால்! உலகம் மிகப் பெரிது. நீ அவளைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. அவளும் உன்னைத்தேடி அடைய முடியாது. வாழ்வில் இருமனிதர்கள் ஒருமுறைதான் சந்திக்கிறார்கள். பிரிந்து விட்டார்களானால், பிறகு சந்திப்பது இயலாது. சந்திப்பது-பிரிவது இரண்டிற்கும் பொருள் தெரியுமா உனக்கு?” இதைச் சொல்லிவிட்டு, யோகி தம்பூராவை எடுத்துக்கொண்டு, தன் கூட்டாளிகளுடன் சேர்ந்து கொண்டான்.

கங்கை தன் போக்கில் ஓடியது. வெள்ளி விரிப்பு போல் ஒளிர்ந்தது. பல தோணிகள் சென்றன. அந்திவேளையில் காற்றில் பூரித்திருந்த பாய்மரத்துணிகளோடு அவை பவனி சென்ற காட்சி, ராஜஹம்ஸங்கள் பொய்கையில் நீந்தி உலாச்செல்வனபோல் இருந்தது. தோணிகளிலிருந்து கீதங்கள் இசைப்பது கேட்டது. பல வகைப்

பாடல்கள் யோகிகளின் 'ஸுமிரன்', பக்கிரிகளின் 'ஜிக்ர', வைணவ பக்தர்களின் 'பஜன்' பாடல்கள் கலந்து ஒலித்தன. வியாபாரக் கப்பல் போன்ற ஓடங்கள் பெரிய மண்டிகளை நோக்கி மிதந்தன. தூர தேசங்களைச் சேர்ந்தவர்களும் பயணிகளாக வந்திருந்தார்கள். அரபு, சீனம் ஆகிய நாடுகளிலிருந்து வந்திருக்கும் வித்வான்கள், திபெத் காஷ்மீரைச் சேர்ந்த புத்த பிக்குகள், அராபிய யாத்திரிகர், ஈரானிய ஓவியர்கள், ஜாவா நர்த்தகர்கள்—இப்படிப் பலர். நாட்டில் அமைதி நிலவியது. தில்லியில் சுல்தான் சிக்கந்தர் ஆட்சி புரிந்து வந்தான். வாழ்க்கையில் சுறுசுறுப்பும் துடிப்பும் இருந்தன. இவர்களையெல்லாம் பார்த்தபோது, கமாலுத்தீனுக்குத் தன் வெறுமை உறுத்தியது அவசரத் துடன் முணுமுணுத்தான்: "உள்ளத்தில் அமைதி கொண்டவர்கள் பாக்கியசாலிகள். எனக்கு இப்போது சாந்தி தேவை."

ஒதுங்கியிருந்த பிக்கு, கமாலை ஏறிட்டுப் பார்த்தான். இன்று வைகாசி பூர்ணிமா—வளர்பிறையின் நிறைநாள். இந்தத் தினத்தில் தான்—இதே இரவில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, கங்கைக்கு மறுகரையில், தாழ்வரைப்பகுதியிலுள்ள ஒரு சிற்றூரில் சித்தார்த்தர் பிறந்தார். இதே வைகாசி பௌர்ணமி தினத்தன்றுதான் அவருக்குப் புத்தநிலை ஏற்பட்டது. பதினான்காம் நாள் தண்மதி, கங்கையின் அலைகளில் மிதந்து ஓடியது. அதன் நிலவொளி கமால்—பிக்கு இருவர் முகங்களிலும் படர்ந்தது.

"ஐயா! என் எண்ணங்களிலிருந்து எனக்கு விடுதலை கிடைக்க உதவுங்களேன்." கமால் தீனமாகக் கோரினான்.

பிக்கு பொருள் புதைந்த பார்வையைக் கமால் மீது படர விட்டான். பிறகு நிதானமாகப் பேசினான்: "எண்ணங்கள்! எண்ணத் திற்கு சுய உணர்வு கிடையாது. மேலும் அது தானே வெளியே போக முடியாது. சிருஷ்டியைத் தவிர வேறு கடவுள் கிடையாது. கடவுளைக் கடந்த சிருஷ்டியும் இல்லை. சத்தியம்-அசத்தியம் இரண்டிற்கும் வேறுபாடு கிடையாது. ஆனால் இவற்றுக்கும் மேலான பரம சத்தியம் என்பது சூனியம்" பிக்குவின் பேச்சில் கம்பீரம் இருந்தது.

"எனக்கு இந்தச் சூனியத்தை-இந்த அமைதியைக் கண்டு பயமாக இருக்கிறது"-கமால்.

"சூனியம்-அமைதி-சூனிய நிலை. இறுதி உண்மை சூனியத்தின் உருவகம்!"

"நான் தனியாக எங்கே போவேன்? நீங்களும் எனக்குத் துணையாக வரமாட்டீர்களா?" மஹாயானப் பிரிவைச் சேர்ந்த பிக்குவைச் சந்தேகத்துடன் பார்த்தவாறே கமால் சொன்னான்.

தோணி ஒரு கிராமத்துத் துறையில் நின்றது. கமால், துறையில் இறங்கி சுற்றுப்புறத்தை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அங்கிருந்து தம் பயணத்தைத் தொடங்க வேண்டுமென்பது அவன்

அவா. எந்தப் பக்கம் போவது? அப்போது வைணவ பக்தர்களின் குழு தோணியிலிருந்து இறங்குவதைக் கண்டான். அவன் அவர்களைப் பின் தொடர்ந்தான்.

வெகுநாட்கள் வரைக்கும் கமாலுத்தீன் இப்படியே குறியில்லாமல் அலைந்து திரிந்தான். பல கிராமங்களைக் கடந்து, கானகப் பகுதிக்கு வந்து சேர்ந்தான். அந்தப் பகுதியின் பெயர் அவனுக்குத் தெரியாது. அருகாமையிலேயே நெசவாளரின் குடியிருப்பு இருந்தது. சந்தனத்தின் நறுமணம் காற்றில் கலந்து கமழ்ந்தது. ஆவணி தொடங்கிவிட்டது.

துளசி மணிமாலை அணிந்த வைணவ பக்தைகள் பலாமரத் தடியில் அமர்ந்து, தாளமிட்டுப் பக்திப் பாடல்களை இசைத்துக் கொண்டிருந்தார்கள். ரோஜா நிறக்கண்கள்-பச்சை வண்ண மேனி- இந்தக் கிள்ளைகளுக்குத்தான் எவ்வளவு எடுப்பாக இருக்கின்றன. துரயி வாத்திய மிசைத்துக்கொண்டு கமண்டலமும் கையுமாகத் தீர்த்த யாத்திரை மேற்கொண்டிருந்தார்கள். புதர்களிலிருந்து கௌதாரிகள் கூவுவது இனிமையாகக் கேட்டது. பொய்கைக் கரையில் ரஸபேலி மலர்கள் மணம் பரப்பின. இலுப்பைத் தோப்பிலிருந்து இனிய பாடல்கள் இசைப்பது கேட்டது. கமால் குளக்கரையில் அமர்ந்து இசையைச் செவிமடுத்துக் கொண் டிருந்தான். தான் அமைதியில் இருப்பதாகத்தான் அவனுக்குத் தோன்றியது. அமைதியிலும் பல வடிவங்கள் இருப்பதைக்கண்டு அவனுக்கு வியப்பாக இருந்தது. இந்த அமைதி பரம சத்தியம். பிக்குவின் விளக்கம் இப்போது அவனுக்குப் புரிந்தது. இசையொலிகளை அவன் கவனமாகக் கேட்கத் தொடங்கினான். இலுப்பைத் தோப்பிலிருந்து வைணவ பக்தைகள் இணைந்து லயிப்புடன் பாடும் மதுரமான பாடல்களின் சொற்கள் இப்போது தெளிவாகக் கேட்டன. அவை பரத்வானைச் சேர்ந்த பக்த கவி ஜயதேவ கோஸ்வாமியின் தீஞ்சுவைப் பாக்கள்! வைணவப் பெண்டிர் உளமுருகப் பாடினார்கள்.

வெம்மை படர்ந்த கானகத்தே
செம்மையாக்கப் புகந்த மலயம்
சூடேறிமணம் பரப்பிக்கொண்டு
நாடெங்கும் மகிழ் விக்கும் காற்று,
ஏலச்செடிகளின் புதர்களிலிருந்தே
மேலாகக் கவர்ந்த மணமும் வெளியாகும்.
நறவந் தேடித் திரியும் தேனீக்கள்
மறவாது மொய்க்கும் மலர்க்கூட்டம்...!

"வசந்தம் தொடங்கி விட்டது. இந்தப் பருவத்தில் தனிமை வேதனை தரும். கீழைக்காற்று மலர்க்கூட்டங்களைத் தழுவி பாறு

உலாவியது. சூடான உதடுகள் மூடிய கண்களை முத்தமிடுவதைப் போல, பகலவனின் செங்கதிர்கள் மாம்பிஞ்சுகளைத் தீண்டின. உள்ளங் கவர் கள்வன் கண்ணன் யமுனை நதிக்கரையில் சோலையில் புதர்களுக்கிடையே ஆடிப்பாடி மகிழ்கிறான்-மகிழ்விக்கிறான். மலர்கள் பூத்துக் குலுங்கும் இந்த இளவேனில் பருவத்தில் தனிமை வருத்தத்தான் செய்யும்!"

'ஆயர் குலக் கொழுந்து கண்ணன் கோபிகைமாருடன் ஆடிப் பாடிப் பொழுது போக்குவான். ராதை அவனுக்காக ஏங்கிக் காத்திருப்பாள்...' கமாலுத்தீன் தனக்குள் தருணத்திற்கு ஏற்றவாறு நினைத்துப் பார்த்தான்.

வைணவ பக்தர்கள் மற்றொரு பாடலைத் தொடங்கினார்கள். பாடலின் கருத்தில் கமால் வசமிழந்தான்.

"தொலைதூரப் பயணத்தை மேற்கொண்டிருக்கும் வழிப்போக்க னுக்குக் குயில் கூவுவது கேட்கிறது. உடனே அவனுக்குத் தன் ஊரில், ஆற்றங்கரையிலுள்ள மாந்தோப்பில் வண்டுகள் ரீங்கரிப்பது நினைவுக்கு வருகிறது. இதேபோல, கண்ணனுக்கு ராதையின் நினைவு வந்துவிட்டது! அவன் உள்ளம் கிளர்ந்தது..."

"அதே சமயத்தில் ராதை பார்த்தாள்: பட்டுப் பீதாம்பரம் உடுத்தி, வனமலர்களைச் சென்னியில் சூடி, சிவந்த மணியாரங்களைப் பூண்டு, பேரழகிக் கோபியருடன் கண்ணன் நடனமாடிக் கொண்டிருக் கிறான்...!"

கமால் கீதத்தைக் கவனமாகக் கேட்கலானான்:
"குயில் கூவும் இனிமை கண்டு
வழிப்போக்கன் வருந்துவதேன்?
கிடைக்காத மகிழ்வின் துன்பம்
நடைப்பயணம் காணா வேதனை
உழைப்பின் பயன் கிட்டாத்துயரம்
இழைந்தலையும் இன்பப்பெருக்கில்
தனிமகிழ்வில் மறைந்திருக்கும்
கனியாத் துன்பம் முடிவில்லா இன்பம்!"

கமால் பொய்கைத் துறையிலிருந்து எழுந்தான். பக்தர்களின் இசைக்குரல்களும், ஜயதேவரின் கீதங்களின் வரிகளும் மெல்ல மெல்ல இழைந்தன. கடைசியாக ஒரு வரி தெளிவாகக் கேட்டது: "நான் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன். காலங்கடந்து காதலிக்கத் தொடங்கியவனும் காதல் புரியத்தான் செய்கிறான்."

புள்ளினங்களின் இன்னொலிகளுக்கிடையே கமால் தறிகெட்டு அலைந்தான். ஓரிடத்தில் சிறு தோப்புக்கு அப்பால் கங்கை நதி சல சலத்துக்கொண்டு ஓடுவது தெரிந்தது. அலைந்து திரிந்து தான் வாரணாசிக்கு வந்திருப்பதை உணர்ந்தான். கங்கைக்கு மறுகரையில்

சிவபுரி வாரணாசியின் சிவாலயக் கலசங்கள் பொன்னொளி வீசி எதிர்கொண்டன. நூற்றுக்கணக்கான ஆலய மணிகள் முழங்கின. நறுமணத் தூபப் பொடிகள் புகைந்து காற்றை மணக்கச் செய்தன. காசிமாநகர்! அநாதிகாலமாக, முடிவு காணாத புனித நகர்!

காட்டுப் பாதையில், மர நிழல்களுக்கிடையே மனம் போனவாறு கமால் நடந்தான், பகற்பொழுது முடிய. கால்கள் தள்ளாடின; மிகவும் களைத்துவிட்டான். காட்டுப்பாதை முடிந்த இடத்தில் சேணியர் குடிவாழ்ப்பகுதி தொடங்கியது. கமால் தள்ளாடிக் கொண்டே பொது மேடையை நோக்கிச் சென்றான். அவனுக்கு அமர்ந்து இளைப்பாறியாக வேண்டும்.

இடையர்குல வாலிபன் விசாரித்தான்: "தம்பி! வெகு தொலை விலிருந்து வருகிறாய் போலிக்கிறதே? காலெல்லாம் புழுதி."

"ஆமாம். நீண்டதூரம் நடந்து வந்திருக்கிறேன்."

"என்னுடன் வா! சத்து மாவு வைத்திருக்கிறேன், இருவரும் சாப்பிடலாம்."-கமாலை மண்டபத்திற்கு அழைத்துச் சென்றான். கமாலை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "ஆடைகளைப் பார்த்தால் பணக்காரப் பிள்ளை மாதிரி இருக்கிறாயே! எங்கே இப்படி அலைந்து கொண்டிருக்கிறாய்? சுல்தானுக்கு வேண்டிய அதிகாரியோ?"

"நான் எந்த சுல்தானுக்கும் வேண்டியவனில்லை."

செருப்பைக் கழற்றிவைத்துவிட்டு, மண்டபத்தில் உட்கார்ந்தான். சுற்றுப்புறத்தைக் கண்ணோட்டம் விட்டதும் தன்னை மறந்து, மனத்துள் முணுமுணுத்துக்கொண்டான்: "சம்பாவதி! உன் கோரிக்கை யான நிபந்தனை இப்போது நிறைவேறிவிட்டது. நான் வாளை விட்டெறிந்து விட வேண்டும்; அப்போதுதான் என்னைக் காசிக்கு அழைத்துப் போவேன் என்று சொன்னாய். நீ சொன்னபடியே வாளை விட்டெறிந்து விட்டேன். நானாகவே காசிக்கும் வந்து சேர்ந்துவிட்டேன், நிபந்தனை விதித்த நீ எங்கே போனாய் இப்போது?"

எதிரே பரதேசிச் சாமிகளின் கூட்டம் சென்றது. எல்லாம் துறவு பூண்ட பண்டாரங்கள். காதுகளில் குண்டலங்கள், கையில் திரிசூலம், நதித்துறையை நோக்கிச் சென்றார்கள். சேணியர், இடையர், அநாதைகள் கூட்டம், தாளக்கட்டையை இசைத்தவாறு, பஜன் கீதம் பாடிக்கொண்டே பின் தொடர்ந்தார்கள்.

"சம்பா முன்பு சொன்னாள்—இந்தப் பண்டாரங்களைப் பரிக சிக்காதே! இவர்கள் அன்புடைய நல்ல மனிதர்கள். என்றாவது ஒரு நாள் இவர்கள் உனக்கு உதவி புரிவார்கள்." கமாலுத்தீனுக்கு இப்போது நினைவு வந்தது. அவன் உணவை முடித்துக்கொண்டு, சாமியார்களின் கூட்டத்தோடு மற்றவர்களைப் போலேவே பின்தொடர்ந்து சென்றான். அவர்கள் தம் பிரதான குருதேவரைத் தரிசிக்கச் சென்று கொண்டிருந்தார்கள்.

# 9

கபீர் காலையில் எழுந்ததுமே, தறிபோட உட்கார்ந்து விடுவார். நெசவு அவரது தொழில்; நெய்த துணிகளை அடுக்கித் தோளில் போட்டுக் கொண்டு, காசியில் தெருத்தெருவாக அலைந்து விற்பனை செய்வது அவருக்குப் பிழைப்பு. மாலையில், அவர் வீட்டுக்கு எதிரே மகிழ மரத்தினடியில் பக்தர்கள் கூடுவார்கள். தம்பூராக்கள் சுருதி கூட்ட, தாளக் கட்டைகள் அளபெடையாக ஒலிக்க, பஜன் கீதங்களின் இசை நிகழ்ச்சி தொடங்கும்.

காசிமா நகரிலுள்ள பண்டாக்களுக்கும், மௌலானாக்களுக்கும் கபீர் மேற்கொண்டிருக்கிற-பரப்பிக் கொண்டிருக்கற பக்தி தத்துவநெறி வெறுப்பூட்டியது. ஆனால் அவர்கள் என்ன செய்ய முடியும்? நாடு முழுவதும் இந்தப் புது மோகத்தில் ஈர்க்கப்பட்டிருக்கிறது. கடந்த முன்னூறு ஆண்டுகளாக பக்தி தத்துவ மார்க்கத்தில் மிகப் பெரிய-கவர்ச்சிகரமான அணிவகுப்பு பவனி வந்து கொண்டிருக்கிறது. பாதுஷாக்களும், சத்ரபதி ராஜாக்களும், மந்திரிகளும். சேனாபதிகளும், குறுநில மன்னர்களும் அப்பவனியில் உலா வந்தனர். இன்று அந்தப் பவனியில்-பக்திநெறியெனும் புதிய ஊர்வலத்தில் பாட்டாளிகள், நாவிதர்கள், சக்கிலியர், உழவர், எளிய தொழிலாளிகள் யாவரும் இடம் பெற்றிருப்பதைக் கமால் கண்டான். இது ஜனநாயக பாரதம். இங்கு கந்தலாடைச் சாமியார்களும், ஸூஃபி ஞானியரும், வைதிக ஸந்தக் கவி யோகியரும்தான் அருளாட்சி புரிபவர். இஸ்லாமின் சமத்துவக் கோட்பாடு இந்துப் பக்தர்களைக் கவர்ந்தது. அமைதி விரும்பும் ஸூஃபி ஞானிகள் இஸ்லாமை பாரதமெங்கும் பரப்பி வந்தார்கள். இங்கே வாளுக்கு வேலை இல்லை. பல நூற்றாண்டுகளாகத் தாழ்த்தி-இழிவுபடுத்தி வைக்கப்பட்டிருந்த தீண்டப்படாத மக்கள், இப்போது ஸூஃபி ஞானியர், இந்து பக்த கவிகள் ஆகியோருடன் கூடி அமர்ந்து ராம நாம சங்கீர்த்தனம் செய்து மகிழலானார்கள். இது விசித்திரமான அதிசய உலகம். இதில் இந்து-முஸ்லிம் சச்சரவுக்கு இடமில்லை. இங்கு அன்பின் பேராட்சி நிலவியது. மனிதர்களைத் தேடி அலைந்த கமாலுத்தீன், இதுகாறும் தான் கொண்டிருந்த கணிப்பை மாற்றிக்கொண்டான். இந்த உலகில் கொடிய ஓநாய்களைத் தவிர உண்மையான மனிதப் பிறவிகளும் வாழ்கிறார்கள் என்பதைக் கண்டான். தனக்கு மண்டபத்தில் உணவு-சத்து மாவு கொடுத்தானே ஆயர்குல வாலிபன், அவனைக் கொல்லவேண்டுமென்கிற வெஞ்சினம் கமாலுக்கு ஏற்படவில்லை. காரணம், அந்த எளியவனுக்கு நாடு பிடிக்கும் ஆசை கிடையது; அவனுக்கு இரு வேளை உணவு வயிறாரக் கிடைத்து விடுகிறது.

அவன் மனநிறைவுடன் கடவுளுக்கு நன்றி கூறுகிறான். அவனுக்கு நாடுகளிடையே நடக்கும் அரசியல் கெடுபிடிகள் பற்றி என்ன கவலை? அவன் எதிரே வரப்பில் அமர்ந்திருக்கும் குடியானவன் மடியில் குழந்தையை வைத்துக்கொண்டு கொஞ்சுகிறானே, கனி கொடுத்து மகிழ்கிறானே, அவனுக்கு என்ன கவலை, தில்லியில் யார் ஆட்சி நடக்கிறது, எவர் ஆட்சி கவிழ்ந்தது என்பது பற்றி? சுல்தான் ஹுஸேன் தில்லியை ஆண்டாலும் அந்த உழவன் இப்படியே உழுதுண்டு வாழ்வான், நிலவரி கட்டி வருவான்; சுல்தான் சிக்கந்தர் ஆண்டாலும் அவன் இப்படியேதான் இருப்பான். இந்தத் துருக்கர் களின் ஆக்கிரமிப்புக்கு முன்பு, பிருத்விராஜ் முதலானவர் ஆண்டுவந்த காலத்திலும், இவனுடைய பாட்டன்-முப்பாட்டன்மார்களும் இதேபோல் கோடையில் இளைப்பாறி வந்தார்கள், மாரியில் தீ மூட்டத்திற்கு எதிரே குளிர்காய்ந்தார்கள், வசந்த காலத்தில் தெம்மாங்கு இசைத்து மகிழ்ந்தார்கள்; பஞ்சம் ஏற்பட்டபோது ஆர்ப்பாட்டமில்லாமல் செத்து மடிந்தார்கள்!

மாலைப்பொழுதில் மக்கள் கீர்த்தனை நிகழ்ச்சியில் கலந்து கொள்ளக் குழுமினார்கள். கமாலுத்தீனும் அந்தக்கூட்டத்தில் கலந்து கொண்டான்.

பாக்தாதில் பிறந்து வளர்ந்து, இந்திய நகர் ஜௌன்புரில் செழிப்பாக வாழ்ந்து வந்த அபுல் மன்சூர் கமாலுத்தீன் வரலாற்று அறிஞன், ஆராய்ச்சியாளன், அரசியல் நிபுணன், படைவீரன், தத்துவ ஞானம், ஆத்மஞானம் ஆகியவற்றில் பித்துக்கொள்ளாத சிந்தனை யாளன்-இப்போது இறுதியாகக் காசிமாநகரில், பஞ்சகங்கா கட்டத்திற்கு வந்து சேர்ந்தான்!

ஆனால், பல அடிப்படைப் பிரச்சினைகளைப் பற்றிச் சிந்திக்கும் தத்துவபுத்திக்கு வேலை இல்லாமல் போகவில்லை. கபீர் தம் நேயர்களிடம் தெரிவித்தார்: "நல்லவர்களே! ஹரியிடம் அன்பு செலுத்துங்கள். உங்கள் துயரங்கள் தாமே விலகிவிடும்." துக்கம்தான் உண்மை; துன்பத்தின் மூலப்பொருளும் உண்மைதான்...! இதே கருத்தைத்தான் தோணியில் வந்த தாந்திரிக சித்தன் கமாலுக்கு விளக்க விரும்பினான். சரி, ஆனால் ஹரி யார்? கரை எங்கே இருக் கிறது? கரைக்குச் சென்றாலும் அங்கே என்ன கிடைக்கும்? உண்மை யான நம்பிக்கை என்பது என்ன? கடவுளைப்பற்றிய கற்பனைக்கு முடிவு? பற்றுதல் துறவு இரண்டினாலும் என்ன கிடைக்கும்? மோட்சம் என்பது என்ன–? ஆனால், ஞானத்தின் சிந்தனை உலகம் தான் எவ்வளவு விரிவானது! எந்தச் சிந்தனைத்தொடரை முதலில் பயிலத் தொடங்குவது? செயல், அறிவு, அன்பு இந்த மூன்றின் மார்க்கங்களும் அவனுக்கெதிரில் திறந்திருக்கின்றன. அவன் எந்த வழியில் முதலில் செல்ல வேண்டும்? இஸ்லாமியப் பள்ளிக்கூடங்

களில் இஸ்லாமிய தத்துவம் குறித்து, பிரச்சினைகள் பற்றி நீண்ட— தீவிரமான சர்ச்சைகள் நடந்தன. ஸூஃபி ஞானிகளும், தர்வேஷ் பக்கிரிமார்களும் தம் தம் கட்சிகளை- சாதனைகளைப் பற்றியவாறு முனைந்திருந்தார்கள். ஆண்டவனின் அன்பு வேண்டிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார்கள். கங்கைக்கரையில், மாந்தோப்புகளில் மறைந்திருக்கும் உபாஸனைக் கூடங்களில்தான் அந்தப் பெரியவர் களைக் கமால் பார்த்தான். அவர்கள் எல்லை கொண்டது—எல்லை கடந்தது இருநிலைகளுக்குமிடைப்பட்ட ஆன்மீக நிலைகளைக் கடந்திருந்த மேலோர்கள். சிலர் குருத்தியானத்தில் ஒடுங்கியிருந் தார்கள். யோகிகள் நிர்வாண நிலையைப் பெறவும், ஸூஃபி ஞானிகள் 'ஃபநா'(இறுதி) ஒடுக்கத்தை எய்தவும் சமாதி நிலையை மேற்கொண்டிருப்பதைக்'கண்டான். ஸூஃபி ஞானிகள் அவனிடம் சொன்னார்கள்: "இறுதி உண்மை ஒளிதான். அதுதான் நூர், நூர்(ஒளி). ஒளி இல்லாதது நிலையில்லாதது." வேறு சில பக்கிரிகள் கமாலிடம் சொன்னார்கள்: "இறுதி உண்மை உள்ளம்தான்." மேலும், புதர்களடர்ந்த கானகத்தில், கொடிப்பந்தல்கள் மிகுந்த சோலையில் அவன் அல்லாவின் அருள் திறன்களான 'ஜலால்'(வலிமை), ஜமால்(அழகு), கமால்(நிறைவு) தன்மைகளைக் கேள்வியுற்றான். இந்த இந்துஸ்தானத்தில் மெய்யடியார்களின் சிந்தனை வளம் என்றுமே குன்றியதில்லை. ஃபரீதுத்தீன் அத்தார், ஷேக் ஜலாலுத்தீன் தப்ரேஜி, பலாவுத்தீன் ஜகரியா, ஜலாலுத்தீன் சுர்க்போஷ், க்வாஜா மோயினுத்தீன் சிஷ்தீ, குதுபுத்தீன் பக்தியார் காசீ முதலான ஞானிகள் வாழ்ந்து தத்துவ போதனை புரிந்த தேசம் இந்துஸ்தானம். இவ்வளவு சான்றோர்கள் தோன்றிய நாட்டில் இருந்துகொண்டு, அறிவார்வம் கொண்டுள்ள எவன்தான் வாழாவிருப்பான்.

ஒருநாள் இரவு, மடத்தில், சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு வெகுநேரம் சிந்தித்தான். வித்வான்கள் சுலோகங்களை ஓதிக் கொண்டிருந்தார்கள். கமால் வெளியே நின்று கேட்டுக்கொண் டிருந்தான். அவன் மிலேச்சன் (முஸல்மான்); ஆதலால் மடத்துக் குள்ளே போகக் கூடாது. அவனுக்கு அந்தச் சுலோகங்கள் விநோதமாக இருந்தன. ஜௌன்புரில் இருந்த முஸல்மான்களும் காசிவாழ் பண்டாக் களும் வரிசையாக நின்று அவனைப் பார்த்துப் பல்லை நெறிப்பது போல் இருந்தது. எவரும் அவன் பேச்சைக் கேட்பதில்லை. அவன் சுவரடியில் உட்கார்ந்தான்.

"ஐயா! இரக்கம் உள்ளவரே! ஐயா! இரக்கம் உள்ளவரே!"

கமால் திரும்பிப் பார்த்தான். அருகில் மலைவாசிகள் சிலர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் தம்பூராவில் சுருதி கூட்டிப் பாடிக் கொண்டிருந்தார்கள்:

"ஐயா! இரக்கம் உள்ளவரே...!"

சோம்பல் முறித்துவிட்டுக் கமால் எழுந்தான், "கமாலுத்தீன் !" அவன் தன்னையே விளித்துக்கொண்டு சொன்னான்: "கபீர் உபாசித்துக் கொண்டிருக்கும் பெருமான் (ஸாஹப்) உன்னை அழைக்கிறார் என்று தெரிகிறது. அவர்தான் இவர்கள் குறிப்பிடும் 'இரக்கம் உள்ள ஐயன்.' நீ இரண்டு வழிகளைக்கண்டு விட்டாய். இப்போது அன்பு வழிதான் மீதி. அவ்வழி சென்று அன்பின் எல்லையை நீ காண்பாய். இனி நீ செல்ல வேண்டியது அன்பு வழிதான்."

கமால் நதித்துறைக்குச் சென்றான். கங்கையைக் கடந்து கபீர் வசித்து வந்த சோலைப்பகுதிக்கு வந்து சேர்ந்தான். நாட்கள் கடந்தன. சம்பாவின் நினைவு விசித்திரமான உருவில் அவன் மனத்தில் பதிந்தது. அமீர் குஸ்ரோவின் கவிதை ஒன்று நினைவு வந்தது. ஹஜரத் நிஜாமுத்தீன் ஔலியா அவர்கள் காலமாகிய போது பாடிய கவிதை இது

வெண்மதி வதனத்தின் நிலவுத் தேசுடையாள்
மென்முகந் தனில்கருங் கூந்தல் அளைத்திடக்
கிடக்கின்றாள்; குஸ்ரோநீ வீடுதிரும் பிடுவாய்!
இடமெங்கும் இருள்மூடத் தொடங்குவ தைப்பார்.

அன்பு செலுத்துவதன் பொருள் கமாலுக்குப் புரிந்தது. இதை அவனுக்குச் சம்பாதான் கற்றுக் கொடுத்தாள். கங்கையோடு யமுனை கலப்பதைப்போல், ஞானக்கவி கபீர்தாஸரோடு அவன் ஒட்டுறவு கொண்டிருந்தான். இரு நதிகளோடும சங்கமிக்கும் சரஸ்வதி நதியைப் போல், வெளியார்க்குப் புலப்படாதவாறு அந்தர்வாஹினியாகக் கலந்திருந்தாள் சம்பா. ஆனால் கபீர்தாஸருடன் கொண்டிருந்த ஒட்டுறவும் நீடிக்கவில்லை. காசி மாநகர்ப் பண்டிதர்களும் மௌல்வி களும் தில்லி சுல்தான் சிக்கந்தர் லோதியிடம் முறையிட்டார்கள்: "இந்த நெசவுக்காரன் பொதுமக்களைத் தவறான வழிக்கு இட்டுச் செல்லுகிறான். கண்டித்து வையுங்கள்." தில்லி சுல்தான் கபீருக்குத் தகவல் அனுப்பினான்: "காசி நகர் பண்டிதர்கள்—மௌல்விகள் முதலியவர்களின் கொள்கை வெறியிலிருந்து தப்பித்துக் கொள்ள வெளியூர் போங்கள்."

# 10

கபீர் வாரணாசியை விட்டு வெளியேறினார். கமால் மனச் சள்ளையைப் போக்கிக்கொள்ள மறுபடியும் நீண்ட பயணத்தை மேற்கொண்டான். கங்கை வழி செல்லும் தோணியில் ஏறி

வங்காளத்திற்குச் சென்றான். அங்கிருந்து கௌட நாட்டிற்குச் சென்றான். அங்குதான் பல ஆண்டுகளுக்கு முன்பு கமாலுத்தீன் தன் புரவலன் சுல்தான் ஹுஸேன் ஷர்க்கியை விட்டு விலகி வந்தான்.

பாட்னா வந்துபோது கமாலுக்குத் தகவல் கிடைத்தது. சுல்தான் ஹுஸேன் ஷர்க்கி கௌடப் பகுதியிலிருந்து பாகல்புர் சென்று, சில ஆண்டுகளுக்கு முன்பு அங்கேயே புகலடைந்த நிலையில் அல்லாவின் அருளடிவாரத்தில் கலந்துவிட்டார். சுல்தான் ஹுஸேன் ஷர்க்கி இசைத்துறையில் புதுவழியைத் தோற்றுவித்தவன், கலையார்வம் மிக்கவன், பல போர்களில் ஈடுபட்டு நலிந்தவன், காடுகளில் அலைந்து திரிந்தான், பிறகு ஒருநாள் இறந்தான். ஆனால் அவன் சுல்தானாக இறந்தான்; இசைக்கலைஞனாக—காவலனாக என்றும் வாழ்ந்தான். அவன் பெயரை- நினைவை அமர்த்துவமாக்கியது 'ஹுஸேனிபியா' எனும் ராகம்.

இப்போது கமால் இசைக்கலைஞன். புதிய புதிய சுர ஆலாபனைப் பரப்பில் அவன் புதிய உலகைக் கண்டான். நாத பிரும்மமே அவனுக்கு உபாஸனை இலக்கு. இசைதான் முதலும் மேலானதுமான உண்மை—இது அவன் கொள்கை இதைத்தான் ஸுஃபி ஞானியர் 'நவாயேஷ் மர்தீ' என்றும் கபீர் 'அநஹத் நாத்' என்றும் விளக்கினார்கள்.

கமாலுக்கு இசைதான் சகலமும். ஜயதேவரின் கீத கோவிந்தம், வித்யாபதியின் பதங்கள், சண்டீதாஸின் பஜன்கள். தோணிக்காரர் களின் ஏலோலம், குடியானவர்களின் உழவுப் பாட்டுகள், தெம்மாங்குகள்- எல்லாவற்றிலும் கமால் தேர்ச்சி பெற்றான்; அவற் றிலேயே அவன் வாழ்ந்து வந்தான். இந்த இனிய கலையுலகத்தில் படையெடுப்பு, படுகொலை, அரசியல் ஏற்றத்தாழ்வுகள், நாடு கடத்தல், மரண வேதனை, சாக்காடு, ஏதும் கிடையாது. சங்கீதத்தின் ஒருங்கிணைந்த லயிப்புதான் பரமேசுவரனைக் காட்டித்தரும் அத்வைத நிலை.

வங்காளத்தில் ஒரு கங்கைத் துறையில் அவன் தோணியிலிருந்து இறங்கினான். கிராமத்தின் பெயர் அவனுக்குத் தெரியாது. வெற்றிலைக் கொடிக்கால்கள், நெல் கழனிகள், செங்கழுநீர் மலர்கள் நிறைந்த ஏரிகள், ஆலமரத்தடியில் சிறு சமாதிக்கோவில். கமாலுக்கு இந்த இடம் மிகவும் பிடித்திருந்தது. அங்கேயே தங்கினான்.

கமால் நாடோடிக் கவிஞர்களுடன் தெருத்தெருவாய் சுற்றினான். கிழக்குப் பக்கமாக, நதியில் தானே ஓடத்தைச் செலுத்திக் கொண்டு சிட்டகாங் மலையடிவாரம் வரைக்கும் சென்றான். மற்ற வழிபோக்கர்களுடன் சேர்ந்து சீதா குண்டம் தரிசிக்கச் சென்றான். அங்குள்ள மலைக்காட்டில் புலிகள் திரியும். அங்குதான் சீதாப் பிராட்டியின் ஆலயம். தாழ்வரையில், சிவப்புப் பாறைகளுக்கிடையில் சிறுகுளம்; அதன் கரையில் வேறு சில கோவில்களும் இருந்தன.

பக்கத்து ஆலமரத்தடியில் பெண்கள் கும்பல் கும்பலாக அமர்ந்திருந் தார்கள்.

கமால் புதுமொழி ஒன்றைக் கற்று வந்தான். அது வளரும் மொழி. அவதி, பிஹாரி மொழிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. சம்ஸ்கிருத மொழிக்கு மிக அருகாமையில் உள்ளது. அதன் பெயர் வங்காளி. மிக இனிமையான மொழி. அதைத் தன்னுடைய மொழியாகவே கருதினான். அதிலேயே பேசவும், சிந்திக்கவும், எழுதவும் தொடங்கினான். மொழியார்வம் கொண்ட இதே கமாலுத்தீன் முன்பு ஜௌன்புர் சம்ஸ்தானத்துத் தர்பாருக்குப் படைத்தலைவனாக வந்து சேர்ந்தவன். ஆனால், ஜௌன்புரில் பிரபலமாகிய அபுல் மன்சூர் கமாலுத்தீனை உலகம் மறந்துவிட்டது. அவனுடைய முன்னாள் நிலையை யார் அறிவார்? இந்த அழகான வாலிபனின் காதோரமுள்ள கேசங்களில் சில நரையோடியிருக் கின்றன; சம்பக மரத்தடியில் உட்கார்ந்து, முஸ்லிம் பக்கிரியாரிடம் நாடோடிக்கதையான காஞ்சனமாலா பாடலைக் கேட்டுக் கொண் டிருக்கிறான். தம்பூராவை மீட்டி, வங்காளி நாடோடிப்பாடலை இசைத்துக் கொண்டிருக்கிறான்; பிறிதொரு சமயம், காகிதமும் எழுதுகோலுமாக அமர்ந்து கதையோ, கவிதையோ இயற்றிக்கொண் டிருக்கிறான் வங்காளி மொழியில்; இந்தக் கல்விவேட்கை கொண்ட இளைஞன் யார்? வங்காளி மொழியைப் பார்ஸி லிபியில் எழுதிக் கொண்டிருக்கிறான். பிற்காலத்தில், இவனைப்போலவே பல முஸ்லிம்கள் பார்ஸி எழுத்தில் எழுதிவைத்தவை அரிய இலக்கியத் தொகுப்புகளாகி வங்காளி மொழிக்குப் பெருநிதியாக அமையும் என்று இவன் எண்ணியிருப்பானா? இவனை அன்று அறிந்த வேறு யார்தான் இதையெல்லாம் அனுமானித்திருக்க முடியும்?

பல ஆண்டுகள்வரைக்கும் கமாலுத்தீன் கதைகளும் கீதங்களும் எழுதிவந்தான். அவனுடைய நிலைகள்: வரலாற்று ஆசிரியன், ஆராய்ச்சியாளன், அரசியல் நிபுணன், போர்வீரன், ஸூஃபி சிந்தனையாளன், கபீரின் சீடன், இப்போது கவிஞன்-பாடலாசிரியன்.

கமால் ஊர் ஊராக அலைந்தவாறு ஸோனார் கிராமத்திற்குச் சென்றான். அங்கு அவன் ஒரு பெண்ணை மணந்து கொண்டான். மணவாட்டியின் பெயர் சுஜாதா. சூத்திர சாதிப்பெண். ஒருநாள் அவளைக் குளக்கரையில் சந்தித்தான். தண்ணீர் மொள்ள வந்தாள். அவளுடைய நீண்ட கூந்தலையும், கரிய இமைகளையும் கண்டு மோகித்துப் போனான். இந்தப் பிராயமும், அறிவு முதிர்ச்சியும் காதல் புரியத் தகுதியற்றதுதான். ஆனால், அவன் ஆன்மீகமான-இதய லயிப்புள்ள பல்வகை உலகங்களில் ஊடாடிவிட்டு ஓய்ந்தபோது, அவனுக்கு அமைதியின் சிறப்பு அதிகமாகத் தெரிந்தது. வாழ்வின் குறிக்கோளே அதுதான் என்பதைக் கண்டான். அந்த அமைதியை

அந்தக் கிராமப்பெண்ணை மணந்து கொண்டதன் மூலம் பெற்றான்; இதுதான் பிறவிப்பயன் என்று தோன்றியது.

சுஜாதா கமாலின் மனைவி. சுஜாதாவின் இனம் குறித்த குறைபாடு எதுவென கமாலுக்குத் தெரியவில்லை. அவன் சுஜாதா என்ற பெயரை மாற்றி ஆமினா பீவி என்று வைத்தான். அவளுடன் அழகான குடிலில் குடித்தனம் நடத்தி வந்தான். வாழ்க்கைச் செலவுக்காக அவன் உழவுத் தொழில் புரிந்தான். நெல்விளைவித்தான். அவன் குடிலுக்கு எதிரே சிறுகுளம். வானத்தில் மேக மூட்டம் படர்ந்து, வானவில் எழும்பும்போது முல்லைப்பூக்களில் வண்டுகள் ரீங்கரிக்கும்; அதே சமயத்தில் கமால் குடிலுக்கு வெளிக்கூடத்தில் பாடகர்களான நண்பர்களுடன் அமர்ந்து ஆனந்த லஹரி வாத்தியத்தை இசைத்துக்கொண்டிருப்பான்; நண்பர்கள் பாடுவர்கள். ஆமினா ஒயிலான மேனி துள்ள குடமெடுத்து நீர் மொண்டு வரக் குளத்திற்குச் செல்வாள்.

காலம் கடந்து கொண்டிருந்தது. வங்காளத்தை ஆண்டுவந்த சுல்தான்கள் தமக்குள் போரிட்டு நலிந்தார்கள். அமைதிக்கு ஏங்கிய நாட்டில், சிறிது காலமாக அமைதி நிலவியது. இப்போது கௌட நாட்டு ஸையது ஸதாத் அலாவுத்தீன் அபுல் முஜிப்பூர் ஹுஸேன் ஷாஹ் அரியணையில் அமர்ந்திருந்தான். அவனது ஆட்சிக்காலத்தில் செழுமை, சௌகரியம், அமைதி எல்லாம் நிலவின. கல்வி- கலைகள் வளர்ந்தன. வங்காளத்தின் பெருமையை மேம்படுத்திய மன்னன் அவன். அவனுடைய காலத்தில்தான் கவிதிலகர் வித்யாபதி, டாகுர் மகா பிரபு சைதன்யர் இருவரும் கண்ணபிரான் புகழ்பாடி மலைப் பகுதியிலிருந்த பாறைகளைத் தாழ்வரை—சமவெளி நிலங்களுக்குக் கொணர்ந்து, புதிய அழகிய கட்டிடங்களை உருவாக்கினார்கள். அரசவையில் இலக்கிய மதிப்பீடுகளும், பாராட்டுதல்களும், கல்வி வளர்ச்சிக்கான கருத்தரங்கங்களும் இடம் பெற்றுவந்தன.

பல ஆண்டுகள் கடந்து போயின. கமாலுத்தீனின் புதல்வர்கள் வாலிபர்களானார்கள். இரு பிள்ளைகளுக்கும் ஜமால், ஜலால் என்று பெயர்கள். பெண்ணின் பெயர் ஸகீனா பீவி. கமால் தன் வழித் தோன்றல் களைப் பார்த்து மகிழ்ந்தே காலத்தைச் சுகமாக ஓட்டினான். இரு புதல்வர்களும் கட்டிடக்கலை நிபுணர்கள். கௌடத்திலும் சோனார் கிராமத்திலும் பல கட்டிடங்களை உருவாக்குவதில் ஈடு பட்டிருந்தார்கள். கமாலின் மனைவி காலமாகி விட்டாள். அவளைத் தன் கையாலேயே அந்தக்குளத்தின் கரையில் அடக்கம் செய்தான். அவனது கேசங்கள் நரைத்துவிட்டன. இப்போதும் அவன் பகல் முழுவதும் வெளிக்கூடத்தில் அமர்ந்து அறநெறிப் பாடல்களை இசைத்தும் இயற்றிக்கொண்டுமிருக்கிறான். வங்காளத்து சுல்தான் களின் ஆதரவில் மக்கள் இலக்கியங்களும் நாடோடி-கிராமியப்

பாடல்களும், புதிய வங்காளி மொழியும் வேகமாக வளர்ந்தன. கௌடப்பகுதியிலிருந்து வரும்போதெல்லாம் மகன் அங்குள்ள நிலைகளையும் அரசியல் நிலவரங்களையும் தந்தைக்கு விவரிப்பான். இப்போதெல்லாம் அத்தகைய தகவல்களுக்கு அவன் எவ்விதச் சிறப்பும் கொடுப்பதில்லை.

காலப்போக்கு இந்த உண்மையை வலியுறுத்தியது. அபுல் மன்சூர் கமாலுத்தீன் வங்கவாசி, வங்காளியாகவே ஆகிவிட்டான். ஆகையால், பல மாறுதல்களைத் தில்லிப் பேரரசு கண்டபோது, அவை குறித்துக் கமால் சிறிதும் சஞ்சலமடையவில்லை. இப்ராஹிம் லோதி தோல்வி கண்டான்; ஜஹீருத்தீன் பாபர் வென்றான்; தில்லிப் பேரரசனாக ஆனான். மூத்தமகன் வாயிலாக இதையெல்லாம் கேட்டபோது கமால் எந்த உணர்ச்சிச் சலனத்தையும் பெறவில்லை. மூத்த மகன் ஜலால், பல புதிய கட்டிடங்களைத் தில்லியில் நிர்மாணிக்க மொகலாயர் விரும்புவதாகவும், அதற்காகத் தம்மை அழைத்திருப்பதாகவும் கூறி விடை பெற்றான். அப்போதும் கமால் மௌனமாகத்தான் இருந்தான். அவன் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்து, தனக்கேற்ற போக்கிடத்தைத் தேர்ந்தெடுத்தான். அவனுடைய பிள்ளைகளும் தம்போக்கில் போய் தமக்கேற்ற குறிக்கோள் பகுதியை எட்டுவார்கள்.

ஆனால், இப்போது அமைதியான நிலை மாறப் போகிறது. வங்காளத்தில் ஸையத் அலாவுத்தீன் ஹுஸேனின் மகன் நஸிருத்தீனின் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. அண்மைக்காலம் வரைக்கும் தில்லியில் கோலோச்சி வந்த ஆப்கானியர் மொகலாயர்களிடம் படுதோல்வி கண்டபின், வங்காளத்திற்குப் புகல்தேடிவந்து, தெருத்தெருவாக அலைந்து கொண்டிருந்தார்கள்—முன்பு இவர்களிடம் தோல்வியுற்று, ஜௌன்புர் சுல்தானும் பரிவாரங்களும் இதே வங்காளத்தில் புகல் தேடி வந்து திரிந்து கொண்டிருந்தார்களே, அதே போலத்தான். இந்த ஆப்கானியர் எல்லா ஊர்களுக்கும் சென்றார்கள். எதிர்ப்படுபவர்களிடம் தம் பழைய பிரதாபங்களைக் கதைகதையாகப் பறைசாற்றிக்கொள்வார்கள். கௌட நகரின் தெருவில் ஒருநாள் கமால் போர்ச்சுகீசியன் ஒருவனையும் கண்டான். மிடுக்காகச் சென்று கொண்டிருந்தான் அவன். கமால் கைத்தடியை ஊன்றிய வாறு நின்று வியப்புடன் அவனைப் பார்த்தான். அன்று அதே சமயத்தில், கௌட நாட்டின் கடற்கரையில்-சடகாம் துறை முகத்தில் நின்றிருந்தது ஒரு கப்பல். போர்ச்சுகீசிய வீரர்கள் மெதப்பாக நகர்ப்புறங்களில் திரிந்து கொண்டிருந்தார்கள்.

காலம் விரைந்தது. கௌடநாட்டின் அரசியல் நிலைகுலையத் தொடங்கியது. நஸிருத்தீனின் இளவல் கயாசுத்தீன் அரியணையில் அமர்ந்திருந்தான்.

ஒருநாள் கமால் கேள்விப்பட்டான்: தில்லி பாதுஷா ஹுமாயூனுக்கும் ஷேர்கானுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. இதற்கு முன்பே, ஷேர்கான் வங்காளத்தைக் கைப்பற்றி, கௌட நாட்டின் ஆட்சியை கயாசுத்தீனிடமிருந்து அபகரித்துக் கொண்டுவிட்டானாம். அமைதியும் வளமும் நிலவிய வங்காளத்தில் சங்கடங்கள் சூழ்ந்தன. வங்கத்தைக் கைப்பற்ற வந்திருக்கும் தில்லிப் பேரரசை விரட்டி வாகை சூடினான் ஷேர்கான். இந்தப் போரில் கமாலின் மகன் ஜமால் களபலியானான். ஓர் இரவு ஷேர்கானின் படைவீரர்கள் கமால் வசிக்கும் கிராமத்தைச் சூழ்ந்து கொண்டார்கள். கொள்ளை-கொலை-தீ வைப்புகளுடன் கிராமத்தைச் சூறையாடினார்கள். கமாலிடம் கத்தினார்கள்: "கிழவா ! நீ துரோகி. உன் மகன் தில்லிக் காரனுடன் சேர்ந்துவிட்டவன். மொகலாயர்களின் அடி வருடி, கிழவா! பாட்டு இட்டுக்கட்டுகிற சோம்பேறி அபுல் மன்சூர் கமாலுத்தீன் இங்குதானே இருக்கிறான் ? வா வெளியே !"

உடல் தள்ளாட, கை விளக்கை ஏந்தியபடி கமால் குடிசை வாசலில் வந்து நின்றான். சிப்பாய்களை வியப்புடன் பார்த்தான். அவர்கள் ஆரவாரத்துடன் கமாலைத் தாக்க வந்தார்கள். கிழவன் கமாலின் கைகள் தள்ளாடின. வாசல் படியில் திடமாக நின்றான். தற்காப்புக்கு எந்த ஆயுதமும் அவனிடம் இல்லை. அவன் என்ன தவறிழைத்தான்? கமாலுக்கு எவரிடமும் காழ்ப்பு இல்லை. ஆப்கானியர் ஆண்டாலென்ன ? மொகாலயர் ஆண்டாலென்ன ? அவன் வேண்டியதெல்லாம் அமைதியான வாழ்வுதான். இது அவனுடைய நாடு, தாய் போன்ற நாடு. இங்கு அவனுடைய குழந்தைகள் பிறந்திருக்கின்றன; வாழ்கின்றன; மனைவியின் கல்லறை இங்குதான் உள்ளது. அவன் உழுதுண்டு வாழும் கழனி இங்குதான் இருக்கிறது. இங்குள்ள மொழியை அவன் தன் குருதிபோல் உள்ளமெல்லாம் உணர்வெல்லாம் நிறைந்திருக்குமளவுக்கு ஏற்று, வளர்த்து வந்தவன். பல கீதங்கள் புனைந்திருக்கிறான். அவன் இங்குதான் வாழ்வான். அவனை ராஜத்துரோகி, புரட்சிக்காரன் என்று கூற எவருக்கும் உரிமை கிடையாது. இது போர்க்களமல்ல; 'தாருஸ்ஸலாம்'-அமைதி இல்லம்! இப்படி சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே கமாலுக்கு புதிய எண்ணம் எழுந்தது: 'போர்க்களத்திற்கும் அமைதி இல்லத்திற்கும் இங்கு வேறுபாடு கிடையாது. போக்கில்தான் மாறுபாடு. சண்டைகள் இரு வேறுபட்ட மதங்களுக்கிடையில் நடைபெறுவதில்லை. அரசியல் சக்திகளுக்குள்தான் நிகழ்கின்றன.'

வங்கத்தை சேர்ந்த ஷேர்கான், தில்லியை ஆளும் ஹுமாயூன் இருவரும் இஸ்லாமியத் தொழுகை புரிபவர்கள்தாம். ஆனால் ஒருவன் மற்றவனை அழிக்கிறான்- புன்மை-கயமைகள் கலக்கும்போது அமைதி இல்லம் போர்க்களமாக மாறவே செய்யும்.

இந்தச் சிந்தனையெலாம் ஷேர்கானின் முரட்டு சிப்பாய்களிடம் எழுமா? அவர்கள் கமாலை உக்கிரமாகத் தாக்கினார்கள். கீழே சாய்த்து விட்டு, எக்காளக்குரல் எழுப்பியவாறு சென்றுவிட்டார்கள். கமால் தன் குடிசை வாசலில் குப்புற விழுந்து கிடந்தான். அவன் முகத்திலிருந்து ரத்தம் பெருகிக்கொண்டிருந்தது. சில கணங்கள் உயிருக்கு மன்றாடி விட்டு, அவலக் குரல் ஒடுங்கிச் சவமானான்.

இந்தியாவில் மொகலாயப் பேரரசர்களின் ஆட்சி நிலை பெற்றது. பழைய சட்டதிட்டம் மாறியது. கௌடம், லக்னவதீ, பட்னா முதலிய ஆட்சிப் பகுதிகள் இப்போது கனவுகளாகி விட்டன. துருக்கர்கள் கோலோச்சிய தில்லி, மொகலாயர் வசமாகியது. முன்பு இந்திரபிரஸ்தமாக இருந்தது, பிறகு தில்லியாகி, இப்போது துக்லகாபாத் எனப்பட்டது. அதுவே இப்போது பெருமைமிக்க தைமூர்களின் தலைநகராகி ஷாஜஹானாபாத் என்று பெயர் சூடியது.

இவ்வளவு மாறுதல்களைக் கண்டாலும், உழுது, உழைத்து வாழும் குடியானவன் அப்படியேதான் இருக்கிறான். உழவு மாடுகளை எப்போதும்போல் ஓட்டிச் செல்கிறான். ஆற்றங்கரைப் பாதையில் பாடிக்கொண்டே போகிறான். கங்கையைக் கடக்க ஓடம் செலுத்து கிறான். வழக்கம்போல் தத்துவார்த்த-பக்திச் சுவைப்பாடல்களை உன்னிக் கேட்கிறார்கள்.

வங்கத்தில் வாழ்ந்த விவசாயி அபுல் மன்சூர் கமாலுத்தீன் என்றும் வாழ்ந்து கொண்டிருப்பான். அவன் தன் சிறு தோணியில் அமர்ந்து பத்மாநதியில் திரிவான்; பிரவாகத்தை எதிர்த்துச் செல்வான். அந்தத் தோணி அசைந்து செல்கிறது. இருளை நோக்கி, புயலை எதிர் கொள்ள முன்னேறுகிறது. வெறிகொண்ட காற்றைச் சாடியவாறு அந்தக் கிழப் படகோட்டியின் தோணி முன்னேறுகிறது. புயலின் குரூரம், சாக்காடு இரண்டும், மெலிந்த அக்கிழவனுக்குப் பழக்க மானவை.

காற்றின் வேகம் அதிகரித்தது. தோணி தத்தளித்தது. துடுப்புத் தள்ளு வதை நிறுத்திக்கொண்டு, சிரில் லாந்தலை உயர்த்திப் பிடித்தான். அச்சத்துடன் நாலாபக்கமும் பார்த்தான். "பீட்டர்! நாம் சூறாவளியில் சிக்கிக்கொண்டு விட்டோமோ?" கலவரத்துடன் வினவினான்.

"அதெல்லாம் இல்லை. இது சாதாரணக் காற்றுதான். பயப் படாதே!" பீட்டர் பதிலோடு ஓர் அறிவிப்பையும் விடுத்தான்: "இந்தக் கறுப்புப் பன்றியைத் தன் கோரமான பாட்டை நிறுத்தச் சொல். பாய்மரத்தைக் கவனிக்கச் சொல். இல்லாவிட்டால் நாளைக் காலையில்கூட நாம் துறைக்குப் போய்ச் சேரமுடியாது."

"தூங்கிக்கொண்டிருக்கிறானா? கிழ நாயே!" சிரில் கீழே

குனிந்து பார்த்துவிட்டுக் கத்தினான். ஓடக்காரன் தலையை உயர்த்திப் பார்த்தான்; பிறகு பொறுமையாகத் தம் போக்கில் துடுப்பு போட்டுக் கொண்டிருந்தான்.

"இந்தப் பயல்கள் மிக மோசம், கீழ்த்தரம். பிரம்படி கொடுக்காத வரைக்கும் உடம்பிலே சுறுசுறுப்பு ஏற்படுவதில்லை." பீட்டர் தெரிவித்தான். சிரில் வெள்ளிப் பூண் போட்ட பிரம்பால் கிழவனின் இடுப்பில் அடித்தான். "ஏ ஆளு! உன் பெயரென்ன?"

"அபுல் மன்சூர்"

"அபுல் மன்சூர்! இன்னும் அதிக வேகமாகத் துடுப்புப் போடு! இல்லையோ, இந்தப் பிரம்பு உன் உடம்புத் தோலை உரித்துவிடும்! தெரிந்ததா?"

"சரி, எசமான்!" அவன் சுக்கானை இயக்கினான். ஓடம் விரைந்தது. இரு கரைகளிலும் அன்னாசி-வாழைத்தோட்டங்கள். தொலைவில் கிராமங்கள் இருப்பதை மினுக்கும் விளக்குகள் காட்டின. சிரில் ஓடத்திற்குள் குனிந்து பார்த்தான். அங்கே அபுல் மன்சூரின் சில பொருள்களைக் கண்டான்-அகல் விளக்கு, பாய், நமாஸ் விரிப்பு, இரு பித்தளைப் பாத்திரங்கள், பலகைச் சுவர்ப்பக்கம் தேங்காய் தொங்கியது. இவைதான் அந்தக்கிழ ஓடக்காரனின் சொத்துக்கள். சிரிலுக்கு வியப்பாக இருந்தது. கண்களை கசக்கிக் கொண்டு மறுமுறையும் பார்த்தான். நம்ப முடியவில்லை அவனால். உண்மையை எதிர்கொள்ள கேம்பிரிட்ஜ் தெருக்களில் உலவி வரும் தன்னை இந்தக் கப்பலில், இந்த அழகிய தேசத்தில், வங்காளத்தில் எது கொண்டு வந்து சேர்த்தது? இதற்கு இண்டியா என்று பெயர்.

லாந்தலை எடுத்துக்கொண்டு மறுமுறையும் நாலாபக்கமும் பார்த்தான். விளக்கொளி வழிகாட்டியது. கடலில் நிலவொளி தனிப் பாதையை வகுத்திருந்தது. மரங்களுக்கிடையிலிருந்து தண்மதி தயங்கிப் புறப்பட்டது.

# 11

சிரில் ஹாவர்ட் ஐஷ்லே, சிட்னியில் கேம்பிரிட்ஜ் ஸெக்ஸ் காலேஜிலிருந்து பி.ஏ. பட்டத்துடன் வெளியே வந்தபோது அவன் வயது இருபது. அவன் தந்தை மிக ஏழ்மையிலிருந்த பாதிரியார். அவன் தன் பேட்டைவாசியான செல்வந்தர் ஒருவரின் உதவியுடன் கேம்பிரிஜ் படிப்பை எட்ட முடிந்தது. பட்டம் பெற்ற பிறகு அவன் லண்டன் வந்தான்; மிடில் டெம்பிளில் சேர்ந்தான். அதற்கு அருகில்

ஃப்ளீட் தெருவில் சிற்றுண்டி விடுதிகளில் பத்திரிகை நிருபர்கள்—எழுத்தாளர்கள் கூடுவது வழக்கம். உலக விவகாரங்கள் அங்கு அடிபடும். சில சமயம், சிரில்கூட நண்பர்களுடன் அங்கு போவான்; அவர்களுடன் அரசியல்—உலக நடப்புகள் குறித்து விவாதிப்பான். ஒருநாள் இந்தக் கூட்டத்தில்தான் சிரில் பீட்டர் ஜாக்ஸனைச் சந்தித்தான். அவன் இந்தியாவில் வியாபாரம் செய்து கொண்டிருந்தான். அப்போது லண்டன் வந்திருந்தான். பீட்டர் பெரிய குரலில் தம் பிரதாபத்தைச் சொல்லிக் கொண்டிருந்தான்; வங்காளத்தில் அவுரித் தோட்டத்தில் தனக்கு எவ்வளவு லாபம் கிடைக்கிறது; இந்தியர்கள் எவ்வளவு முட்டாள்கள், அவர்களை ஆண்டு கொண்டிருப்பவர்கள் எத்துணை செல்வக் கொழிப்பில் திளைக்கிறார்கள். கல்கத்தா எத்தகைய சுவாரசியமான நகரம். "நீ இங்கே ஏன் வீணுக்குக் காலம் போக்குகிறாய்? என்னுடன் இந்தியாவுக்கு வந்துவிடு. உன்னைப் பார்த்தால் புத்திசாலியாகத் தோன்றுகிறாய். கொஞ்சம் சாமர்த்தியமாக இருந்தால் நாலே நாட்களில் தங்க மாளிகையே கட்டிவிடலாம்."

சிரில் தன் விருப்பத்தைத் தெரிவித்தான்.

"என்ன? கவிதை இயற்றப்போகிறாயா, நாடகம் எழுத விருப்பமா? வக்கீல் தொழில் மதிப்புமிக்கதாக்கும்? இதெல்லாம் வெறும் பிதற்றல்." பீட்டர் விமரிசித்தான்.

சில நாட்களுக்குப் பிறகு, பீட்டர் சிரில்லைத் தம் சித்தப்பாவிடம் அழைத்துப் போனான். அவர் கிழக்கிந்தியக் கம்பெனியில் ஒரு டைரக்டர்.

சிரில்லுக்குக் கல்கத்தாவில் வேலை கிடைத்தது. ஒரு நாள் அவன் டில்பரியிலிருந்து 'இண்டியாமென்' கப்பலில் அமர்ந்து பயணமானான். வெண்மையான டோவர் சிகரங்கள் அவன் பார்வையிலிருந்து மறைந்தன. தான் லண்டனை விட்டுப் பிரிவதை உணர்ந்தான். அங்குதான் அவன் வாழ்ந்த பகுதி கைண்டனில் உள்ளது; கைமூ நதி பாய்கிறது; அங்குதான் கோல்டு ஸ்மித், கூபர், கிரை பர்க் முதலியவர்கள் பிறந்தார்கள். அங்குதான் ஹோகார்த், கைன்ஜபரோ, ரெனால்டு முதலிய பிரபல ஓவியர்களின் அமரத்துவம் கொண்ட சித்திரங்கள் இடம் பெற்றிருக்கின்றன. லண்டனில் பூரண அழகும் அமைதியும் நிலவும். வங்கம், கனடா, தென் அமெரிக்காவிலிருந்து அரித்துக்கொணர்ந்த செல்வக்குவியல் இங்கிலாந்தைச் செழிக்க வைத்தது. பெரிய பெரிய மாளிகைகள் எழும்பியிருந்தன. ஏழைகள் பணக்காரர்களாகி விட்டார்கள்; செல்வந்தர்கள் மேலும் சீமான்களானார்கள். எங்கும் ஒரே பேச்சு; பணம், பணம், பணம்! இலக்கிய ஈடுபாடு கொண்ட, பொருள் மோகம் இல்லாதிருந்த சிரில்கூட செல்வக் கவர்ச்சியில் மயங்கி அந்த வழியில் செல்ல

லானான். அந்த ஏழை மாணவன் வங்காளத்திற்குச் சென்று செல்வந்தனாகி விட்டான். லண்டனில் அவனும் ஒரு மாளிகை கட்டுவான். அல்லது நாகரிகம் தெரியாத எவனோவொரு இந்தியப் படைத்தளபதியின் கையால் போர்க்களத்தில் மடிவான். அவனுடைய கல்லறை ஊர் பேர் தெரியாத நிலையில் மதராசிலோ மைசூரிலோ எழும்பியிருக்கும்.

சிரில் இதையெல்லம் நினைத்துப் பார்த்தபோது அவன் உடல் விதிர்த்தது. கப்பலின் 'டெக்' பகுதியிலிருந்து நகர்ந்தான். கடல் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. உலகில் இந்தச் சமயத்தில் என்ன என்னவெல்லாம் நடக்குமோ? தான் எவ்வளவு துச்சமான மனிதன் இந்த உலகில் என்பதையும் உணர்ந்தான். இந்தக் கப்பலில் எத்துனைவகை மக்கள்! எவ்வளவோ திட்டங்கள், ஆசைகள் அவர்களுக்கு. எல்லாருமே முன்பின் அறியாத ஓர் இலக்கை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். எல்லாருக்கும் என்னதான் முடிவு? கிழக்கிந்தியக் கம்பெனிகளின் வியாபாரிகள்; சென்னைக்குத் தலைமை நீதிபதி; உயர் குடும்பத்துச் சில கன்னிப் பெண்கள் இந்தியா சென்றால் நல்ல கணவர்கள் கிடைப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் வருகிறார்கள். டின்னர் டேபிளில் கப்பல் கேப்டன் ஹைதர்அலியுடன் பொருதிய போர் பற்றிக் கதையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறான். பாட்னா, டாக்கா நகர்களைச் சேர்ந்த அவுரி வியாபாரிகள் எப்போதும் தம் வியாபாரம் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறார்கள். கூடவே 'மடேயரா' மது அருந்தி மகிழ்கிறார்கள். சிட்னியிலிருந்து செக்ஸ் காலேஜிலிருந்து, கேம்பிரிட்ஜின் அமைதியான குவாடெங்கள் பகுதியிலிருந்து வெளி யேறியபிறகு, சிரில் இப்போதுதான் உண்மையான உலகைக்கண்டான்.

கப்பல் இப்போது மடகாஸ்கர் பக்கமாகச் சென்றது. இது கிழக்குப் பக்கம். கறுப்பர் அடிமைகள் நிறைந்த நாடு. கிழக்கு சிரிலை எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது. சீனா, இந்தியா, ஈரான், எகிப்து யாவும் சிரில்லைக் கூவிக் கூவி அழைக்கின்றன. "தம்பி! சிரில்! வா! உனக்கு நல்வரவு! உன்னை வரவேற்க நாங்கள் எல்லா ஆயத்தங்களும் செய்து வைத்திருக்கிறோம். பைபிள், துப்பாக்கி, வாள் எல்லாம் எடுத்துக் கொண்டுவா! எங்கள் தோலை உரித்து உருமாற்று!" கான்பூர், டாக்கா நகர்களில் வேரூன்றியுள்ள பழைய பாவிகள் சிரில்லுக்கு ஓதினார்கள். "புத்திசாலித்தனமாக நடந்துகொண்டால், சில வருடங்களுக்குள்ளேயே லட்சாதிபதியாகிவிடுவாய்."

"சிராஜுத்தெளலா என்பவன் யார்?" சிரில் பீட்டரிடம் கேட்டான்.

"சிராஜுத்தெளலா?" பீட்டர் வெறுப்புடன் சொன்னான். "நான் அவனைப் பற்றிய தகவல் பூராவையும் பிறகு சொல்லுகிறேன்.

நான் காஸிம் பஜாரில் இருந்திருக்கிறேன். அவன் மோசமான ஆள்; கயவன், கொடியவன். ஆனாலும் நமக்கு நம்பகமான நண்பன்-இப்போது அவத் பிரதேசத்தை ஆளும் நவாபைப் போல."

பீட்டர் ஜாக்ஸன் சிரில்லுக்கு பைஜாபாத், லக்னோ நகர்க் கதைகளை விவரிக்கலானான். பிறகு மைசூர், ஆர்க்காடு நவாபு களையும் மற்றவர்களையும் பற்றித்தெரிவித்தான். சிரில் பம்பாய் துறைமுகத்திற்கு வந்து சேர்வதற்குள் கடந்த இரு நூற்றாண்டுக்கால நிகழ்ச்சிகளையும், இந்துஸ்தானத்தைப் பற்றிய முழு வரலாற்றையும் நன்கு தெரிந்து கொண்டான். இந்துக்களின் மிருகத்தனம்—பேதைமையும் கொடுமையும் கலந்த விலங்குத்தனம்—சிவப்பு நாக்கை நீட்டிக்கொண்டிருக்கும் உருவத்தைப் பூஜிக்கிறார்கள். கணவன் மரித்ததும், விதவைப் பெண்களை கணவன்மார்களின் சடலங் களுடனேயே சிதைகளில் வைத்து எரிக்கிறார்கள். வெறுங்காலுடன் திரிகிறார்கள். பசு, குரங்கு, பாம்பு எல்லாவற்றையும் கடவுளாகக் கொண்டாடுகிறார்கள். முஸல்மான்களின் புன்மைச்செயல்கள்—பெண்களைப் பர்தா மறைப்பில் முடக்கி வைத்திருக்கிறார்கள்; ஒவ்வொரு ஆணும் பத்துப் பதினைந்து விவாகம் செய்து கொள்ளு கிறார்கள்; சரக்கில்லாத செருக்கு, மடமை, வறட்டு வீராப்பு நிறைந்த வர்கள்; இப்படிப் பல சலிப்பூட்டும் தகவல்களைப் பீட்டர் சொல்லிக் கொண்டேயிருந்தான். ஆனாலும் உண்மையைச் சொல்லித்தானே ஆகவேண்டும். இந்தியச் சுதேசிகள் மட்டமானவர்கள்; கீழ் சாதிக்காரர்கள்; செயலும் இயல்பும் தாழ்ந்து-இழிந்திருப்பவை. இதனால் தான் அவர்கள் மூளையும் மட்டரகமாக இருக்கிறது. வங்காளத்தில் ராயல் ஏஷியாடிக் சொஸைட்டி நிறுவப்பட்டிருக்கிறது. அது எங்கெல்லாமோ தோண்டியெடுத்து, ஆராய்ந்து பார்த்து எந்தக் காலத்துச் சமாச்சாரங்களையோ பேத்தலும் பிதற்றுலுமாக வெளிப் படுத்திக் கொண்டிருக்கிறது. சம்ஸ்கிருதம், அது, இது என்று வழக் கொழிந்த மொழிகளையெல்லாம் தேடித்துருவி ஆராய்கிறார்கள். அதில் மந்திர தந்திரங்கள் மாயாஜாலங்கள் எல்லாம் இருக் கின்றனவாம்! இவற்றைப் பார்த்துவிட்டு நம்மவர்களில் சில ஆராய்ச்சிக்காரர்கள், "இந்தியர்கள் ஒரு காலத்தில் நாகரிகமும் பண்பாடும் நிறைந்திருந்தார்கள்," என்று தீர்ப்புக் கூறுகிறார்கள்!

பீட்டர் ஒருவாறாகப் பேச்சை முடித்தான்.

இந்துஸ்தான்! இந்தியாவுக்கு வந்தாயிற்றே!

கப்பல் துறைமுகத்தருகில் நங்கூரமிட்டது. பயணிகள் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். நூற்றைம்பது வருடங்கள் முன்புவரைக்கும் சூரத் துறைமுகத்தில் மொகலாயர் எல்லைக் காவலர்கள் ஐரோப்பியர்களின் வாசாலகத்தைச் சமாளித்து வந்தார்கள். இப்போது ஐரோப்பியர் ஆட்சியே நடைபெறுகிறது. சிரில்லின் நண்பர்கள்—உடன்

வந்தவர் யாவரும் சீழ்க்கை இசைத்துக்கொண்டு படு மிடுக்குடன் கப்பலிலிருந்து இறங்கினார்கள். நாலா பக்கங்கலிலிருந்தும் கறுப்பு மனிதர்கள் அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்—கூலிகள். வெள்ளை யரின் சுமைகளை ஓடி ஓடிச் சென்று கப்பலிலிருந்து இறக்கினார்கள்.

பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்டின் விசேஷப் பல்லக்கு பீட்டரை எதிர்கொள்ள அனுப்பப்பட்டிருந்தது. பீட்டர் சிரில்லுடன் பல்லக்கில் அமர்ந்து மலபார் ஹில் பகுதிக்குச் சென்றான்.

மழை பெய்து ஓய்ந்திருந்தது. வெள்ளைக்காரர்களின் பங்களாக்கள் ஓடு வேய்ந்த கூரைகளில் படர்ந்துள்ள வண்ண மலர்க் கொடிகளால் தனிக்கவர்ச்சி பெற்றிருந்தன. பீட்டரையும் சிரில்லையும் எதிர் கொண்டழைக்க வெளிவாசல் வரைக்கும் வந்தார் வெள்ளைக் காரரான கனவான். பிறகு மாபெரும் வேலைப்பாடுள்ள மரத்தூண்கள் கொண்ட முன் கூடத்தில் அமர்ந்து தேனீர் அருந்தினார்கள்.

சிரில் ஜன்னல் வழியாகக் கடலைப் பார்த்தான். மூலையில் அடிமைப்பையன் சிரில்லின் பூட்சுகளுக்குப் பாலிஷ் போட்டுக் கொண்டிருந்தான். இந்தப் பையனை மடகாஸ்கரிலிருந்து மற்ற அடிமைகளுடன் இறக்குமதி செய்திருக்கிறார்கள். அவனைக் கண்டதும் சிரில்லுக்கு வேதனையாக இருந்தது. இரவு விருந்துக் கூடத்தில் சிரில்லுக்கு இரு பார்ஸிக்காரர்கள் (கனவான்கள்) அறிமுகப் படுத்தப்பட்டார்கள். இருவரும் கப்பல் கட்டும் தொழிலதிபர்கள். சரளமாக ஆங்கிலம் பேசினார்கள். எவ்வளவு வகை மக்கள் இந்த நாட்டில் இருக்கிறார்கள்! சிரில் வியந்தவாறே சிந்திக்கலானான்.

சில நாட்களுக்குப் பிறகு, சிரில் பீட்டருடன் தொழிற்சாலையைப் பார்வையிட சூரத் நகருக்குச் சென்றான். சிரில்லுக்குப் பல நினைவுகள் எழுந்தன. சூரத் நகரம்! மொகலாயர்களின் துறைமுகம், நூறு வருடங்களுக்கு முன்பு இங்கு லண்டனையும் பாரிசையும்விட மக்கள் தொகை அதிகமாக இருந்தது. எவ்வளவு செழிப்பாக இருந்திருக்கும்!

பம்பாய் திரும்பியதும், சென்னைபோகும் கப்பலுக்காகக் காத்திருந்தான் சிரில். பீட்டர் ஜாக்ஸன் இப்போது அங்குதான் தங்கி யிருந்தான். சிரில் தனியாகத்தான் சென்னை போகவேண்டும். பாரதத்தின் பல பகுதிகள் இப்போது சிரில்லுக்குப் பழக்கப் பட்டவையாகி விட்டன.

கப்பல் கொரமண்டல் கரைப்பக்கமாகச் சென்றது. பாண்டிச் சேரியில் பல பிரெஞ்சுக்காரர்கள் கப்பலில் ஏறினார்கள். அவர்கள் வேறு கப்பலில் பிரான்ஸ் போகிறவர்கள். அவர்களில் ஸார்போனைச் சேர்ந்த மாணவன் ஒருவனும் இருந்தான். சிரில்லுடன் ஒட்டிப் பழகினான். பெற்றோர்களைச் சந்திக்கப் பாரிஸிலிருந்து இந்தியா வந்திருந்தான். இப்போது பாரிஸ் திரும்புகிறான். தோளை

உலுக்கியவாறு ஒட்டுறவோடு அவன் பேசியதில் சுவாரசியம் இருந்தது. பாரிஸ் நகரச் செய்திகள், பல்கலைக்கழகத் தகவல்கள், புரட்சி பற்றிய விவரங்கள், கூடவே, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவத்தின் புதிய கோட்பாடு. அவற்றுக்கான வாழ்த்தொலிகள்–ஜயகோஷம்! புரட்சி வாழ்க! பிரான்ஸ் வாழ்க! இப்படியே அந்த வாலிபன் கப்பலி லிருந்து தோணிக்கு இறங்கிச் சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் பார்வையிலிருந்து மறைந்து விட்டது அந்தத் தோணி. குழந்தை உள்ளம். அவன் பெயர் என்னவோ? இந்த புரட்சிக்களத்தில் அவனுடைய முடிவு எப்படியிருக்குமோ? எங்கு பார்த்தாலும் ரத்தக்களரி. வங்கத்தில் போர்; தெற்கேயும் மோதல்கள். ஐரோப்பாவில் நெப்போலியன் மருட்சித் திகிலைக் கிளப்பிவிட்டிருக்கிறான். ஐரோப்பாவே எரிந்துகொண்டிருக்கிறது. இன்னும் பல தடவை எரியும். இந்தப் புரட்சியெழுச்சிகளில் கேம்பிரிட்ஜ், ஸார்போன் சர்வகலாசாலை மாணவர்கள் புயலில் சிக்கிய இலைகளைப்போல் அடித்துச் செல்லப்படுவார்கள். இப்படித்தான் என்றும் நடந்து வந்திருக்கிறது.

சிரில் ஹாவர்ட் ஐஷ்லே வங்கக் கடலின் நடுப்பகுதியை நோக்கி விரைந்து கொண்டிருக்கிறான் கப்பலில். அவனுக்கு எல்லாப் பக்கங் களிலும் சாவு வாய்பிளந்து நிற்பது தெரிந்தது. எதிரே மைசூர்க்காரர்கள், மராட்டியர்; வடக்கே ஆப்கானியர்களும் சீக்கியர்களும் வாளைத் தீட்டிக் கொண்டு கிளம்பியிருக்கிறார்கள். எங்கும் பயப்பிராந்தி; பேரழிவுகள்! தில்லியில் சங்கடம், பைஜாபாத்தில் சங்கடம், முர்ஷீதாபாத்தில் ஆபத்து. இதெல்லாம் சிரில்லுக்குத் தெரியாது. தில்லியின் நிலைமை கொஞ்சமும் அவனுக்குத் தெரியாது. தில்லி மன்னன் இரண்டாம் ஷா ஆலம் இப்போது கணிகை சந்தாபாயின் நடனத்தைக் கண்டுகளித்துக் கொண்டிருப்பதைக்கூட அவன் அறியான்.

சென்னைத் துறைமுகம் தென்பட்டது. சென்னையில் கப்பல் ஐந்தாறு நாட்கள் தங்கியது. சிரில் ஆர்காடு நவாபு பாலாஜாஹின் மாளிகையைப் பார்த்தான். ஸெயிண்ட் தாமஸ் ரோடிலுள்ள வெள்ளைக்காரர்களின் கடைகளை ஒரு நோட்டம் விட்டான். ஒருநாள் உலாவச் சென்றபோது யூரேஷியன் (ஆங்கிலோ இந்தியர்) காலனிப் பக்கம் போய்வந்தான்.

ஒரு வீட்டின் படிக்கட்டில் இளம்பெண் ஒருத்தி தென்பட்டாள்; கலப்பு இனத்தைச் சேர்ந்த கட்டழகி. சிரில்லைக் கண்டு வருத்தம் புலப்பட முறுவலித்தாள். பிறகு உள்ளே சென்றுவிட்டாள். கறுப்பு நிற மங்கை கைக்குழந்தையுடன் வெளியே வந்தாள். வாசல்படியில் அமர்ந்து அரிசி புடைத்துக் கல் பொறுக்கிக் கொண்டிருந்தாள். சிரில்லைக் கண்டதும் நாலு குழந்தைகள் வெளியே வந்தன. பிறகு

அவர்களுடைய தகப்பன் வந்தான். வறிய நிலையில் வாடும் ஐரோப்பியன். சிரில் அவனை ஆர்வத்துடன் பார்த்துக் கொண் டிருந்தான். "உள்ளே வாங்களேன்!" ஒரு சிறுவன் அழைத்தான். எல்லாருக்கும் பெருவியப்பு: ஒரு சுத்த ஆங்கிலேயன் அந்தப் பேட்டைக்கு வந்திருக்கிறானே! சிரில்லின் வெள்ளை இனம் இனக் கலப்பை எதிர்க்கும் தீவிர தூய்மைவாதி. பாரதத்தில் இன பேதத்தை அந்த இனத்தவர்கள்தான் கடுமையாக எதிர் கொண்டார்கள். கறுப்பர்-வெள்ளையர் இனங்கள் ஒதுங்கியதற்கு அவர்களே காரணம். மதராஸ் ப்ளாக்(கறுப்பு)டவுன், ஆங்கிலோ-இந்தியர் டவுன், வெள்ளையர் டவுன் என்ற பகுதிகளாகப் பிரிந்தன. சிரில் கேம்பிரிட்ஜில் இருந்தபோது பதினெட்டாம் நூற்றாண்டின் முற்போக்குக் கொள்கையான விடுதலை(லிபரலிஸம்) குறித்து வெகுவாகப் பிரச்சாரம் செய்திருக்கிறான். ஆனால் இங்கு கறுப்பர்-வெள்ளையர் பேதம் தெளிவாகப் புலப்பட்டது. இந்தியாவில் வந்தேறிய வெள்ளைக்காரர்கள் கறுப்பருடன் இனச்சேர்க்கை கொண்டதால், தம் தூய தரத்திலிருந்து தாழ்ந்து விட்டார்கள். சிரில் சிந்தித்தாவாறே மேலே நடந்தான். முதலில் தென்பட்ட பெண் மறுமுறையும் அவனெதிரில் தோன்றினாள். தன் வீட்டு வேலியைத் தாண்டி வந்து அவள் முன்னே சென்று கொண்டிருந்தாள். ஒருமுறை திரும்பிப் பார்த்து ஒயிலாக முறுவலித்தாள். அந்த யூரேஷியன் குமரி மிக அழகாக இருந்தாள். "உன்னைத் தானே! இதற்குப் பதில் சொல்லிவிட்டுப்போ!" என்று கேட்டுக்கொண்டே, சிரில் அவளருகில் சென்றான். "நீ இங்கேதான் இருக்கிறாயா?" அசடனைப்போல் கேள்வியை விடுத்தான் சிரில்.

"இப்போதுதான் என் வீட்டைப் பார்த்தீர்களே; நீங்கள் கல்கத்தா விலிருந்து வந்திருக்கிறீர்களா?"

"இல்லை; கல்கத்தா போய்க்கொண்டிருக்கிறேன். லண்டனி லிருந்து வருகிறேன்; பம்பாயிலிருந்து இங்கே வந்திருக்கிறேன்."

"நிரம்பத்தான் பயணம் செய்திருக்கிறீர்கள்"

"ஆம், ஆனால் இன்னும் பயணம் செய்யவேண்டியது நிறைய இருக்கிறது. நீ இங்கு எப்போதிருந்து இருக்கிறாய்?"

"எப்போதும் இங்குதான் இருக்கிறேன்."

"அப்படியா? நீ கிறிஸ்துவ மதம்தானே?"

"ஆமாம். இந்தியர் கிறிஸ்துவராக இருக்கக்கூடாதா?" —தான் துடுக்குத் தனமாகப் பேசிவிட்டதை உணர்ந்து துணுக்குற்றவளாக, "என் பாட்டனார் சுத்த ஆங்கிலேயர்—உங்களைப் போலவே தூய ஐரோப்பியர். என் தாய் இந்தியக்காரி."

சிரில் குழம்பினான். பீட்டர் ஜாக்ஸன் கப்பலில் வரும்போது உபதேசித்தது நினைவு வந்தது: 'ஆங்கிலோ-இந்தியர்களுடன் நெருக்கம்

வைத்துக் கொள்ளாதே! போன நூற்றாண்டில் நம் மூதாதையர் இங்கு வந்து, கறுப்புப் பெண்களுடன் மணவுறவு கொண்டு தனி இன விருத்தியே செய்துவிட்டார்கள். வெள்ளை இனத்தில் கருமை படர்ந்த கலப்பு இனம்.'

"உன் தந்தை என்ன செய்து கொண்டிருக்கிறார்?"

நீங்கள் வரும்போது பார்க்கவில்லை? படிகளில் சாய்ந்து உட்கார்ந்திருந்தாரே, அவர் தான். சாராயக்கடை நடத்துகிறார்."

"சரி, இப்படி உட்கார்ந்து பேசுவோமோ?" சிரில் சற்றுத் துணிவை வரவழைத்துக்கொண்டு அவளை அழைத்தான்.

குமரி சிறிது தயங்கி, பிறகு இசைவுடன் பெஞ்சின் பக்கம் வந்தாள். சாலையை ஒட்டி இருந்தது மாதாகோவில் பக்கம் செல்லும் அந்தப் பாதை. சிரில் அவளுடன் அளவளாவத் தொடங்கினான். பேச்சுக்கிடையில், உணர்ச்சி வசப்பட்டு, தன் நிலை மறந்து அவளை நேருக்கு நேர் பார்த்தவாறு, "நீ... நீ மிக அழகாக இருக்கிறாயே! என்னோடு கல்கத்தாவுக்கு வந்துவிடு!" என்றான்.

"அதெப்படி முடியும்?"

"ஏன் முடியாது?"

"நீங்கள் உயர் இனத்து ஆங்கிலேயர். மேலும்... இன்று சரி, நாளைக்கு என்னோடு பேசக்கூட உங்களுக்குப் பிடிக்காது. உங்களைப் போல் எத்தனையோ ஆங்கிலேய யாத்திரிகர்கள் மதராசுக்கு வந்து போகிறார்கள்." அவள் வருத்தத்துடன் தழைந்திருந்த மரக் கொம்பிலிருந்து ஓர் இலையைப் பறித்தவாறே பேசினாள். சிரில் நெகிழ்ந்து போனான். தான் அவள்பால் காதல் வயப்பட்டிருப்பதை உணர்ந்தான் . "நான் சொல்வதைக்கேள். வந்து.. வந்து..."

அவள் பெயரைக்கூட இதுகாறும் அவன் அரியவில்லை.

அவள் இங்கிதமறிந்து, "என் பெயர் மரியா டெரேஸா" என்றாள்.

"மரியா டெரேஸா! மரியா டெரேஸா!"

சிரில் அன்று இரவு கவர்ன்மெண்ட் ஹவுஸில் பால் டான்ஸில் கலந்து கொள்வதற்குப் பதில், ரகசியமாக யூரேஷியன் டவுனுக்கு வந்து சேர்ந்தான். மறுநாள் இரவும், அதற்கு அடுத்தநாள் இரவும் தொடர்ந்து வந்தான். நான்காவது நாள் காலையில் கப்பல் கல்கத்தாவிற்குப் புறப்பட்டது. சிரில்லுக்கு அப்போதுதான் 'எவ்வளவு பெரிய மடத்தனம் செய்துவிட்டோம்' என்று தோன்றியது. அவன் அந்தப் பெண்ணை மணந்து கொள்ள முடியாது. மேலும் அவன் மரியாவிடம் இது வரைக்கும் மணந்துகொள்வது பற்றிப் பேச்சே எடுக்கவில்லை. ஆனாலும் அந்தப் பேதைப்பெண், இந்தியப் பெண்களைப் போலவே சிரில்லைத் தன் கணவனாக வரித்து, தெய்வமாகப் போற்றி வழிபட்டுக் கொண்டிருக்கிறது. அவளிடம் விடைபெற்றுக்கொள்ள மாதா

கோயிலுக்கருகிலுள்ள பூங்காவிற்கு அவன் வந்தபோது துணுக் குற்றான். அந்தப் பெண் மூட்டையும் கையுமாக அவனுடன் புறப்படத் தயாராக வந்திருந்தாள்!

சிரில் தன் வாக்குவன்மை, மொழியாற்றல், இலக்கியத் திறன், நடிப்பு சாமர்த்தியம் எல்லாவற்றையும் கலந்து பயன்படுத்தி, மரியா டெரேஸாவை நம்பவைத்தான்: "இப்போது உடன் அழைத்துச் செல்வது இயலாது; கல்கத்தா போனதும் முன்னேற்பாடுகளைச் செய்துவிட்டு, கட்டாயம் அங்கு அழைத்துக்கொள்ளுகிறேன்." இதை கலைத் திறமையாகச் சொல்லும்போதே சிரில் தன் இழிதகமையையும் தாழ்மையையும் உணர்ந்து, உள்ளூர நாணினான், வருந்தினான்.

இந்தச் சிறிய உணர்ச்சி பூர்வமான சாகஸ சாதனைக்குப்பின், சிரில் தன் பயணத்தை மேற்கொண்டான். வங்கத்தின் கரையை எட்டும்போது சிரில் அநேகமாக அந்தப்பெண்ணை—தாம் கூடி மகிழ்ந்து குலாவிய குமரியை அறவே மறந்து விட்டான்.

கல்கத்தா டயமண்ட் ஹார்பரில் வந்து கப்பல் நங்கூரமிட்டது. பைலட் வரவை எதிர்பார்த்திருந்தது. பயணிகள் மேல் தட்டிற்கு வந்து சேர்ந்தார்கள். எதிரே வங்கத்தின் கடற்கரை. பிரயாணிகள் கப்பலிலிருந்து தோணிகளுக்கு வந்து சேர்ந்தார்கள். உயர்தர அதிகாரிகளை அழைத்துச் செல்ல பிரத்தியேகத் தோணிகள் வந்திருந்தன. இந்தக் களேபரத்தில் சிரில் யாரையும் அறியாதவனாகத் தனித்திருந்தான். பிறகு வாடகைத் தோணி ஒன்றில் ஏறிக்கொண்டான். தோணிக்காரர்கள் படையணி வீரர்களைப் போல், ஒருங்கிணைந்து துடுப்புப் போட்டார்கள். தோணி நகர்ந்ததும், கப்பலில் அமைதியைக் குலைத்த சந்தடியிலிருந்து விடுபட்ட நிம்மதியை சிரில் அனுப வித்தான். தோணி கப்பலைக் கடந்து சந்தடியற்ற கடல் பரப்பில் மிதந்து வந்தது. கரை அணுகிக் கொண்டிருந்தது. அக்கம் பக்கத்தில் யாத்திரிகர்களை நிரப்பிக் கொண்டு பல படகுகள் வந்தன. இருமருங்கிலும் மரங்கள் கடல் நீரைத் தொட்டுக்கொண்டிருந்தன. தொலைவில் நெருக்கமான காட்டிலிருந்து சிங்கங்கள் கர்ஜிப்பது காதில் விழுந்தது. ஓநாய்கள் ஊளையிடுவதையும் கேட்க முடிந்தது. தோணியில் கொசுக்கள் மொய்க்கத் தொடங்கின. கரை சேர இன்னும் தொலைதுரம் கடந்தாக வேண்டும். மாளிகைகள் நிறைந்த கல்கத்தா நகரைக் கற்பனையில் காணத்தொடங்கினான் சிரில். தங்கமும் வெள்ளியும் கொழிக்கும் அங்காடிப்பட்டினம். கிழக்கு நாட்டு லண்டன்! இரவு நெருங்கியது. தண்மதி ஓடத்துடன் காயல் நீர்ப்பெருக்கில் மிதந்து வந்தது. ஓடக்காரர்கள் தம் மொழியில் தெம்மாங்கு பாடிவந்தார்கள். சிரில் அவர்களுடைய இசையில் லயித்தான். அபூர்வ இனிமை லயம் அவர்களது குரல்களில்!

பிறகு காட்சி மாறத் தொடங்கியது. ஓடம் கார்டன் ரீச் அருகே

வந்தது. துறைமுகத்தை அடைந்ததும் சிரில் ஒரு பல்லக்கில் ஏறி அமர்ந்தான். சந்தடி நிறைந்த குடியிருப்புகளைக் கடந்து, அமைதியான பர்தார் பாரக்புர் பக்கம் விரைந்தது. அங்குதான் வெள்ளைக்காரர் களின் அழகான-எடுப்பான சுதேசி வீடுகள் அமைந்திருந்தன. டச்சுக் காரர்களின் பகுதியான சிராம்புர், பிரெஞ்சுக்காரர்களின் குடியிருப்புப் பகுதி சந்திரநகர் வரைக்கும் ஆங்கிலேயரின் சுதேசி வீடுகள் பெருகி யிருந்தன. கோட்டைக்கருகில், அரசாங்கக் கட்டிடங்கள் இருந்தன. அங்கு பல விழாக்கள் கோலாகலமாகக் கொண்டாடப்படுவது வழக்கம்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு, சிரில் தந்தைக்குக் கடிதம் எழுதினான்: 'நான் இங்கே செம்மையாகக் குடியமர்ந்து விட்டேன். ஆண்டவனின் நல்லருளால் செழிப்பாக இருக்கிறேன். என்னுடைய வங்காளி குமாஸ்தா ஆசுதோஷ் டே மிகச் சரளமாக இங்கிலீஷ் பேசுகிறான். எனக்கு வேலையில் பதவி உயர்வு கிடைக்கப்போகிறது. புறநகரில் அவுரி வியாபாரம் செய்யத் திட்டமிட்டிருக்கிறேன். என்னிடம் ஒரு முஸல்மான் கணக்குப்பிள்ளை இருக்கிறான்; அவனிடம் பார்சியும் வங்காளியும் கற்றுக்கொண்டிருக்கிறேன். என் வாழ்க்கை மிக இனிமையாகக் கடந்து கொண்டிருக்கிறது. நான் மிக்க மகிழ்ச்சியோடு இருக்கிறேன்."

பல ஆண்டுகள் கடந்தன. சிரில் கல்கத்தாவில் பெரிய மனிதர் களில் ஒருவனானான். அவன் பல்லக்கைச் சுமக்கும் போகிகள் எப்போதும் மிடுக்காக ஆடை உடுத்தியிருக்கிறார்கள். காவலாளிகள் வெள்ளிப் பூண் போட்ட பிரம்புகளை வைத்திருக்கிறார்கள். இரவில் தீவட்டிக்காரர்கள் சிரில்லின் அலங்காரப் பல்லக்கின் முன்னும் பின்னும் ஒளி காட்டிச் செல்லுகிறார்கள். பட்லர்கள், சமையல் காரர்கள் அவனது விருந்துக்கூடத்தின் புகழைப்பரப்பி வருகிறார்கள். ஹுக்காவை நிரப்பத் தனிப்பணியாள். ஆபீசில் சிரில்லின் பர்ஸனல் கிளார்க் ஒரு ஆங்கிலோ- இந்தியன் இருந்தான், பெயர் ரால்ஃப் ஜோஸப். அவனெதிரில் இருக்கிறபோது சிரில்லுக்கு நிம்மதி குலைகிற மாதிரி இருக்கும். அலுவலக நிர்வாக மேற்பார்வைக்கு ஒரு வங்காளி இருக்கிறான். பெயர் சர்க்கார். மற்றபடி, பல மெஸஞ்சர்கள் (செய்தி பட்டுவாடா செய்பவர்), சிப்பந்திகள், பணியாட்கள். ஒரு நபர் சிரில்லுக்கு, ஐம்பது அலுவலர்கள். இவர்களைத் தவிர, சிரில்லின் பங்களாவுக்கென்று தோட்டக்காரன், புல் செதுக்குபவன், வண்டிக் காரன், தண்ணீர் நிரப்புபவன், காவலாளி, ஏவலாளி எனப் பலரும் இருந்தார்கள். சிரில்லுக்கென்று தனி உல்லாசப் படகு, துடுப்புப் போடுபவர்கள், வேலைக்காரர்கள் வேறு. வெள்ளை நிற மாளிகையில் சிரில் ஐஷ்லேயின் தனி சாம்ராஜ்யம் இயங்கி வந்தது. இதில் அவன் வைத்ததுதான் சட்டம்; அவனே இதற்குத் தனியரசன். அவன்

நினைத்தால் தனக்குக் கீழ் பணிபுரியும் எவரையும் தலைகீழாகக் கட்டி அடிக்கலாம். யாரும் கேட்கமுடியாது. இதேபோல் பலமுறை அவன் செய்திருக்கிறான். சில ஆண்டுகளுக்கு முன்பு கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் படித்துவிட்டு, அந்த வட்டாரத்துத் தெருக்களில் வில்லியம் பிளாக்கின் நூலைத் தூக்கிக்கொண்டு கவிதை எழுத முனைந்து கொண்டிருந்த அதே சிரில்தான் இப்போது ஏதாவதொரு 'பப்' ஹோட்டலுக்குள் நுழைந்து, சில பென்ஸ் நாணயங்களைக் கொடுத்து உருளைக்கிழங்கு சூப், கட்லெட்டெல்லாம் சுவைத்துக் கொண்டிருக்கிறான்!

காலையில் ஏழுமணிக்குப் பணியாள் சிரில்லின் மாளிகைக் கூடத்தின் கதவைத் திறக்கிறான். அலுவலக உதவியாளர், சிப்பந்திகளுடன் வந்து மரியாதையாக வணக்கம் செலுத்திவிட்டு, முக்கியக் கடிதங்களையும் காகிதங்களையும் படுக்கையறையிலேயே கொணர்ந்து வைக்கிறார்கள். நாவிதன் துரைக்கு முகம் வழிக்கிறான். தலையில் 'விக்' பொருத்திக்கொண்டு வாஸ்கட் அணிந்து சிற்றுண்டி மேஜைக்கு வருகிறான். தேநீர் அருந்தியவாறு ஹுக்கா குடிக்கிறான். எதிரே அலுவலகப் பணிகள் குறித்துப் பேச வந்திருப்பவர்கள் ஒதுங்கி நிற்கிறார்கள். அவர்களைப் பார்க்காமலேயே சிரில் தகவல்களைக் கேட்டுக்கொண்டு உத்தரவுகளைப் பிறப்பிக்கிறான். பத்துமணிக்குப் பரிவாரம் புடை சூழ அலங்காரப் பல்லக்கருகில் செல்கிறான். சிரில் பல்லக்கில் ஏறிக்கொண்டதும், அது அலுவலகத்திற்கு விரைகிறது. நாலு மணிக்குத் திரும்பி வருகிறான். கல்கத்தா கனவான்களின் வழக்கப்படி எட்டுமணி வரைக்கும் தூங்குகிறான். பிறகு முகம் கழுவிக்கொண்டு, உடை மாற்றிக்கொண்டு, மிடுக்காக லேடீஸ்களைச் சந்திக்கச் செல்கிறான். குதிரைப் பந்தய மைதானம் சென்று காற்று வாங்குகிறான். பிறகு எங்காவது பெரிய இடத்தில் டின்னர்.

வியாபாரத்தில் கணக்கிலடங்காத லாபம் வந்தது. கவர்னர் ஜெனரல் அவன்பால் பிரியமாக இருந்தார். அவனுக்கு நிரந்தரமாகப் பெரிய பதவி மாகாணத்தின் தலைநகரில்—அநேகமாக லக்னோவில் கிடைக்கப் போவதாகப் பேசிக்கொண்டார்கள். பால்ரூம் நடனங்களில் அவனுடன் டான்ஸ் ஆடும் கன்னிப்பெண்கள் ஏங்குவார்கள்; 'இந்தக் கட்டழகனை மணக்க எந்த அதிர்ஷ்டக்காரி கொடுத்து வைத்திருக்கிறாளோ!'

ஆனால் மிஸ் பைமிலாவையோ, குமாரி சிநேகலதாவையோ மணந்துகொள்ளாமல், மிகப்புத்திசாலி, சாமர்த்தியசாலி என்றெல்லாம் புகழப்படும் சிரில் சாதாரணமான ஏற்பாட்டைச் செய்து கொண்டு விட்டான் —பொதுவாக இந்தியாவில் தழைத்து வளர்ந்த ஆங்கிலேய நவாபுகள் செய்வதைப் போலவே.

அதாவது சிரில் ஐஷ்லே ஒரு சுதேசிப் பெண்ணைத் தம்

மாளிகையில் வைப்பாக்கி சேர்த்துக்கொண்டான். ஆங்கிலேய நவாபு களை இங்கிலாந்தில் நன்றாக மட்டம் தட்டிக் கிண்டல் செய்வார்கள். அங்குள்ள கனதனவான்கள் ஆங்கிலேய நவாபுகளைத் தம்முடன் சேர்த்துக் கொள்வதில்லை. சம மதிப்பு அளிப்பதில்லை. நேற்றுவரை இந்த 'நவாபு'கள் இங்கிலாந்தில் தெருத்தெருவாகத் திரிந்து கொண் டிருந்த சாதாரண வியாபாரிகள். ஆனால் இந்தியாவுக்குப்போய் திடீர் சீமான்களாகி விட்டார்கள்.

பாட்னா, டாக்கா, காஸிம் பஜார், பாலாஸோர், ஹுக்ளி நகர்களில் கொழித்திருக்கும் வியாபாரிகள், முர்ஷிதாபாத், லக்னோ, பனாரஸ், குவாலியர், தில்லி தர்பார்களில் அயல் நாட்டுத் தூதுவராக விளங்கும் ராஜதந்திரிகள், வங்காளம், பிஹார், ஒரிஸா ஜில்லாக்களில் கோலோச்சும் கலெக்டர்கள், அவத் பிரதேசத்தில் மாடிவீடுகளைப் பரப்பியிருக்கும் ஆங்கிலேயத் தளபதிகள், சுதேசி மன்னர்களின் படைகளில் பெரும் பதவி வகிக்கும் ராணுவ அதிகாரிகள்-யாவரும் சிரில்லுக்கு நண்பர்கள். இவர்களுடைய நோக்கு-போக்குகளை சிரில் நன்கு அறிந்திருந்தான். பலாஸி போருக்குப் பிறகு செல்வம் செல்வாக்கெல்லாம் இந்தியர்களை விட்டுப் பிரிந்து, வெள்ளைக்காரர் களிடம் வசிக்கத் தொடங்கின. ஆங்கிலேயர் பக்கத்தில் அதிர்ஷ்டம் பொங்கியது. வெடியுப்பு, அவுரி இரண்டிலும் புகுந்த வெள்ளைக்கார வியாபாரிகள் கோடீசுவரராகி விட்டார்கள்! இவர்களுடைய வாழ்க்கை லட்சியம் இந்திய நவாபுகளைப்போல் உல்லாச வாழ்வு வாழவேண்டுமென்பதுதான். நவாபுகள், ராஜாக்கள், ஆங்கிலேயக் கனவான்கள்-மூன்று வர்க்கத்தாரும் தம்முள் ஒருங்கிணைந்து, மிக உயர்ந்த 'நாகரிக'மான மேம்பாட்டை உருவாக்கிக் கொண்டார்கள். திவான் பதவி, சட்ட ஆலோசகர் பதவி, வழக்கறிஞர் நிலை என்று மதிப்புமிக்க அந்தஸ்துகள் காத்திருந்ததால், பல வாலிபர்கள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார்கள். விரைவிலேயே இந்தியக் கனவான்களின் பழக்க வழக்கங்களை மேற்கொண்டு விட்டார்கள். கலெக்டராகப் பதவி ஏற்க வேண்டியதுதான், அந்த வெள்ளையன் தம் பெரும் பொழுதை ஜமீன்தார்கள், நவாபுகள் ஜமாவில் உல்லாசமாகக் கழிப்பான். பலாஸி யுத்தத்திற்குப் பிறகு, கிழக்கிந்தியக் கம்பெனிக்காரர்களின் குறிக்கோள் இந்தியாவிலிருந்து இயன்றவரை கொள்ளையடித்துக்கொண்டு சென்று, அங்கே தம்மை 'நவாபுகள்' என்று பிறர் அழைக்குமாறு பகட்டாக வாழவேண்டும் என்பதுதான். ஒவ்வொரு வெள்ளைக்காரத் துரையும் பல இந்தியப் பெண்களைத் தம் மாளிகையில் கேளிக்கைக்காக வைத்துக் கொள்வதில் பெருமை கண்டனர்.

சிரில்லும் சுஜாதாதேவியைத் தம் மாளிகைக்குக் கொணர்ந்து, தம்மை 'வெள்ளை நவாபு'வாகக் காட்டிக்கொண்டான். மற்ற போக

போக்கியங்களையும் அவன் தொடரத்தான் போகிறான்.

கரிய நீண்ட கூந்தல், இரக்கமூட்டும் கண்கள், வாளிப்பான எழில் கொழிக்கும் மேனி, கவர்ச்சி முகம்—சுஜாதாவிடம் சிரில் மயங்கியதில் தவறில்லை. அவள் டாக்கா அருகிலுள்ள ஒரு கிராமத்தில் இருந்தாள். அவள் தந்தை வறுமையில் வாடிக் கொண்டிருந்தான். டாக்காவில் பொருளாதார நெருக்கடி; பஞ்சம் வேறு. சுஜாதாவுக்கு ஏழு சகோதரிகள். மூவர் இளம் விதவைகள், நால்வருக்குத் திருமணமாகவில்லை. ஒரே சகோதரன்; சியாம்சரண் என்று பெயர். அவனுக்குக் கல்கத்தாவில் ஒரு மண்டியில் வேலை கிடைத்தது. சகோதரிகளைத் தன்னுடன் அழைத்து வைத்துக் கொண்டான். அந்த மண்டியின் முதலாளி சிரில் துரை அவர்கள்.

சிரில் துரை சிறு பிள்ளையாகத்தான் இருந்தான். அவன் கல்கத்தாவிலும் சுற்று வட்டாரத்திலும் பிரபலமாகியிருந்தான். ஒருநாள் காளிகாட் சென்று கொண்டிருக்கையில் சுஜாதாவைப் பார்த்தான். மேலும் அவன் உல்லாசப் பித்தன் என்று பேரெடுத்தவன். சுஜாதாவின் அண்ணன் வறுமை தாளாமல் பரிதவித்துக் கொண்டிருந்தான். சிராம்புர் போய் கிறித்துவ மதத்தில் சேர்ந்து விடலாமா என்று எண்ணிக்கொண்டிருந்தான். அப்போதுதான், சிரில்லின் நிர்வாக அதிகாரி சர்க்கார் சியாம்சரணைத் துரையிடம் அழைத்துச் சென்றான். மறுநாள் சுஜாதா சிரில் துரையின் மாளிகையில் குடியேற்றப்பட்டாள். இவ்வாறாக அந்த ஏழைக் குடும்பத்தின் வறுமை ஒழிக்கப்பட்டது.

சிரில் துரை சுஜாதாவை முறையாக மணந்துகொள்ளவில்லை. இதற்காக அவள் விசனிக்கவில்லை; மகிழ்ச்சியாகவே இருந்தாள். சொகுசாக மாளிகைவாசம் புரிந்தாள்; வேலைக்காரர்களை அதட்டி விரட்டி அதிகாரம் செய்தாள். அவளைப்போல் பல இந்திய அழகிப் பெண்கள் ஆங்கிலேயர்களின் அந்தப்புரங்களில் இடம் பெற்றிருந் தார்கள். அவர்களுடைய சந்ததிகள் மேல் படிப்புக்கு வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள். அவர்களுடைய தந்தைமார்கள் (ஆங்கிலேயர்) உயிரோடு இருக்கிறவரைக்கும் அந்தச் சந்ததிகள் சௌக்கியமாகவே இருந்துவந்தன.

ஆனால் சிரில் இதையெல்லாம் நினைத்துப் பார்த்தான். தான் இறந்தபின், தனக்கும் சுஜாதாவுக்கும் பிறக்கும் குழந்தைகளின் வருங் காலம் எப்படியிருக்கும்? அவர்கள் மதராசிலோ, கல்கத்தாவிலோ உள்ள அநாதை இல்லங்களில் சேர்க்கப்படுவார்கள். பெரியவர் களானதும் தம் பிள்ளைகளுக்கு உயரிய பதவிகள் அரசாங்கத்திலோ, தனியார் துறையிலோ கிடைக்காது போகும். அவர்கள் கிளார்க் குகளாகப் பணிபுரிவார்கள்; அல்லது ஏதாவதொரு ரெஜிமெண்டில் சேர்ந்து பாண்டு வாத்தியமிசைத்துக்கொண்டு, மராட்டியருடன்

போரிட்டுக் கொண்டிருப்பார்கள். பெண்கள் ஆங்கிலேய நவாபுகளின் ஆசை நாயகிகளுக்குத் தோழியராகவோ தாதியராகவோ இருப்பார்கள்; அல்லது எவனோவொரு ராணுவ அதிகாரிக்கு வைப்பாட்டியாக இருக்க வேண்டும். ஆங்கிலோ-இந்திய இனத்தின் நிலைமை எத்தகைய படுமோசமான விபத்து என்பதைச் சிரில் நினைத்துப் பார்த்தான். அப்போது சிரில்லுக்கு இளம் அழகி மரியா டெரேஸா நினைவுக்கு வந்தாள்; அவளை சென்னையில் ஆசை தீர ருசி பார்த்துவிட்டு வந்திருக்கிறோம் என்பதையும் நினைத்துக்கொண்டான். 'மிஸ் ஸைந்தியாவைத் தான் மணந்துகொண்டிருக்கலாமோ?' என்று எண்ணிப் பார்த்தான். சுஜாதா இனிமையாக அழைப்பது கேட்டது; அவசரமாக எழுந்து சென்றான். பிறகு பல்லக்கில் அமர்ந்து வெளியே உலவச் சென்றான். இது வழக்கம்.

வங்காளம், பிஹார் முழுவதும் சிரில்லின் காலடியில் பணிந்து கிடந்தன. அவன் எங்குவேண்டுமானாலும் செல்லலாம். தாலேஷ்வரி, ஹரிமங்கல், கர்னாபுலி, மதுமதி, சிபன்ஸாரி ஆறுகளில் சிரில்லின் ஓடங்கள் அவுரிக்கட்டுகளைச் சுமந்து போய் வந்து கொண்டிருந்தன. டாக்காவைச் சேர்ந்த நவாபுகளின் ஆடம்பரமான அலங்காரத்தோணி இப்போது சிரில் வசம் இருக்கிறது.

சிரில் வெள்ளிப் பூண் போட்ட பிரம்பைக் கிழவனின் முதுகில் குத்திட்டு, "அபுல் மன்சூர்! இந்தப் பிரம்பால் உன் முதுகுத் தோல் உரிபட வேண்டாமென்று விரும்பினால், வேகமாகத் துடுப்பைப் போடு!" என்று அதட்டினான்.

கிழவன் மேலும் முனைந்து துடுப்பைத் தள்ள சுக்கான் பக்கம் குனிந்தான். சுக்கானை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் சிரில். எவ்வளவு சொரணையற்றவர்களாக இருக்கிறார்கள் இந்த மனிதர்கள்! சமீபத்தில் (கி.பி. 1770ல்) எவ்வளவு பயங்கரமான பஞ்சம் நிலவியது! ஆறுகளில் கரைகாணாத வெள்ளப் பெருக்கம், தொற்று வியாதிகளின் பரவல், அழிவு, நலிவு—இவ்வளவுக்குமிடையில் இந்த ஜனங்கள் வெட்கம் கெட்டு வாழ்கிறார்கள். இதற்கு எல்லையே இல்லை.

சிரில் கடிகாரத்தைப் பார்த்தான். இரவு ஒன்பது மணி. இன்று இரவு ராஜா கிரீஷ் சந்திர ராயின் அரண்மனைக்குச் செல்லவேண்டும். கல்கத்தாவில் அரசாங்க அமைப்புகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. இரண்டொரு நாட்களில் சர் ஜான் ஷோர் நாடு திரும்பப் போகிறார்; புதிய கவர்னர் ஜெனரல் வரப்போகிறார். இங்கிருந்து திரும்பியதும், கவர்ன்மெண்ட் ஹவுஸ் போக வேண்டும். "இன்றைக்கு என்ன தேதி?" சிரில் பீட்டரிடம் கேட்டான். பீட்டர் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். சிரில் லாந்தலைத் தூக்கிவிட்டு, விலியம் ஹிகீ தயாரித்த 'பெங்கால் பட்ஜெட்'டைப் பார்த்தான்.

முந்தின நாள் செய்தித்தாளில் வெளிவந்தது.

1798 ஆம் ஆண்டு, ஜுன் மாதம், 8 ஆம் தேதி, சிரில் துணுக் குற்றான். அவன் லண்டனைவிட்டு இந்தியாவுக்கு வந்து ஐந்து வருடங்களாகி விட்டன. இந்த ஐந்தாண்டுக்காலத்தில் அவன் எங்கிருந்து எங்கே வந்து சேர்ந்திருக்கிறான்! அவுரி வியாபாரம் அமோகமாகத் தழைத்தது. குஜராத்தில் அவுரிச் சாகுபடி நொடிந்து விட்டது. அதை இட்டு நிரப்ப, ஆங்கிலேயச் சாகுபடிக்காரர்கள் தில்லியிலிருந்து வங்காளம் வரைக்கும் பரவினார்கள். வங்காளத்து விவசாயிகள் ஆங்கிலேயப் பண்ணைக்காரர்களிடம் பணம் கடன் வாங்கி, அவுரிச் சாகுபடி செய்தார்கள். கடன் கொடுத்தவர்கள் பல முறைகளில் விவசாயிகளைச் சுரண்டி ஒடுக்கி வந்தார்கள்; வருத்தினார்கள்.

பகல் முழுவதும் அவுரி வயலில் பாடுபடும் வங்காளி விவசாயி அபுல் மன்சூர் கமாலுத்தீன் அந்தச் சமயத்தில் தன் எஜமானன் சிரில் துரையை ஓடத்தில் வைத்து அக்கரைக்கு இட்டுச் சென்றான். தண்மதி பத்மாநதியில் பிரதிபலித்தது. காற்றில் குளுமை தவழ்ந்தது. வாழைத் தோப்பில் நரிகள் ஊளையிட்டன. இரவு பயங்கரமாக இருந்தது–

# 12

நதிக்கரையில் ராதேசரண் லாந்தலுடன் நின்று கொண்டிருந்தார். தொலைவில் தோணிவரும் ஓசை கேட்டது. லாந்தலைத் தரையில் வைத்துவிட்டு, போர்வையை இழுத்து மூடிக்கொண்டு அங்கேயே உட்கார்ந்தார். அருகில் ஊர்ப் பொதுத்திடலில் கிராம மக்கள் குழுமியிருந்தார்கள். மூங்கில் தோப்புக்குள்ளே ராதேசரணின் சிறிய வீடு இருந்தது. சுற்றிலும் பயங்கர அமைதி. இடையே ராஜா கிரீஷ் சந்திர ராயின் மாளிகையிலிருந்து வாத்திய இசைகள் இலேசாகக் கேட்டன. பாட்னா, லக்னோ நகர்களிலிருந்து நாட்டியக்காரிகள் —பாடகிகள் வந்திருக்கிறார்களாம். ராஜாவுக்கு வைசிரியார் துரை சிறப்புப் பட்டம் அளித்துக் கௌரவித்திருக்கிறார். அந்த மகிழ்ச் சியைக் கொண்டாடத்தான் இந்தக் கேளிக்கை விழா. கல்கத்தா விலிருந்து வெள்ளைத் துரைமார்கள் இதில் பங்கு கொள்ள வந்து கொண்டிருக் கிறார்கள். திடலில் என்றுமில்லாத வகையில் அமைதி நிலவியது.

“ஏதாவது சொல்லுங்களேன், தாத்தா!” பிரமோத் ஹுக்காவின்

அடிப்பாகத்திலிருந்து சாம்பலைத் தட்டிவிட்டு, வேதனையோடு சொன்னான்.

ராதாசரண் மௌனமாய் மூங்கில் காட்டின் சரசரப்பொலிக் கிடையே தோணித்துறையையே வெறித்துப் பார்த்துக் கொண் டிருந்தார். இம்மாதிரி இரவுகளில் மெய்யடியார்களான சத்திய பீர் பக்தர்களும், சத்திய நாராயண சாமியார்களும்* நெற்றியில் சந்தனப் பூச்சும், கையில் புல்லாங்குழலும், காவியுடையும், இடுப்பில் சதங்கைச் சங்கிலியுமாக இதோ பத்மா நதிக்கரையில் போய்வந்து கொண்டிருப் பார்கள். ராதேசரண் இதை நினைத்துப் பார்த்தார். 'சமீபகாலத்தில் சத்திய நாராயண சாமியார்கள் தென்பட்டால் அவர்களிடம் கேட்க வேண்டும்- நான் எதைத்தான் கேட்பேன்-?' சதங்கையொலிகள் அண்மையில் கேட்டன. ராதேசரண் வியப்புடன் திரும்பிப் பார்த்தார். எதிரே சத்தியபீர் பக்தர்களில்லை, சத்திய நாராயண சாமிகள் நின்று கொண்டிருந்தார்கள். மூங்கில் காட்டிலிருந்து வந்தவர்கள் ராதேசரண் வீட்டுப்பக்கம் திரும்பினார்கள். வெளியில் நின்று குரல் கொடுத் தார்கள்.

ராதேசரண் மனக்குழப்பத்துடன் அவர்களைப் பார்த்தார். சாமியார்களுக்குக் கொடுக்க வீட்டில் ஏதும் இல்லை. பல நூற்றாண்டு களாக இந்தச் சாமியார்கள் பக்கிரிகள், சாதுக்கள், பக்தர்கள் இப்படித்தான் ஊர் ஊராகத் திரிந்து, இரந்து பெற்று வாழ்ந்து வருகிறார்கள். கிராமத்து இந்துப் பெண்கள் இந்தத் துறவிகளுக்கு மாவு, அரிசி, பருப்பு என்று பிட்சை அளிப்பார்கள்; பதிலுக்கு ஆசிகள் பெறுவார்கள். போன வருடம் சுஜாதா இங்கு இருந்தாள். இவர்களுக்குப் பிட்சை அளித்தாள். "நீ மகா அதிர்ஷ்டசாலி, அம்மா!" என்று கூறி ஆசீர்வதித்தார்கள்.

இந்த வாழ்த்தைக்கேட்டு சுஜாதாவின் தாய் வெளியே வந்தாள். அன்று அவளுக்குப் பெருமையாக இருந்தது. இன்று? இப்போதும் அவள் வெளியே வந்து பார்த்தாள். அவர்களுக்குக் கொடுக்க வீட்டில் ஒன்றும் கிடையாது. ஸத்யபீர், மானிக்பீர், லக்ஷ்மீ, சண்டீ முதலான தேவதைகளிடம் அவளுக்குக் கோபம். 'இவர்கள் ஏமாற்று பவர்கள்-!' முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்; சாமியார்களை வெறித்துப் பார்த்தாள்.

"சுஜாதா எங்கே?"— சாமியார்களில் ஒருவர் கேட்டார்.

"கல்கத்தாவில் இருக்கிறாள், அவளுக்குக் கலியாணமாகி விட்டது" அந்த முதியவள் மெல்லச் சொன்னாள். அவள் மதம்

* கௌடப் பகுதியின் சுல்தான் அலாவுத்தீன் ஹுஸேன் ஷாஹின் ஸூஃபி தேவதையை வங்கத்து முஸல்மான்கள் 'ஸத்யபீர்' என்றும், இந்துக்கள் 'ஸத்யநாராயண்' என்றும் அழைப்பர்.

மாறி, வெள்ளைக்காரத் துரையின் மாளிகையில் காமக்கிழத்தியாக இருக்கிறாள் என்பதைக் கூறத் துணியவில்லை.

"நம்ப மாப்பிள்ளை என்ன செய்கிறார்?"

"கல்கத்தாவிலே வேலை"

"நல்லது! சௌக்கியமாக இருக்கட்டும்!" சாமிகள் மகிழ்வுடன் ஆசி கூறி விடை பெற்றார்கள். அவர்கள் ஒவ்வொரு வீட்டிலும், "தானம் செய்வதற்கு வீட்டில் ஒன்றுமே இல்லையே, நாங்கள் என்ன செய்வோம்?" என்று ஏங்கி வருந்திச் சொல்வதைக் கேட்டு வருகிறார்கள். இந்தக் கடும் பஞ்சம் அவர்களுக்குப் பழக்கமாகி விட்டது. கிழக்கிந்தியக் கம்பெனியின் கொடுமையும் கொள்ளையும் சுரண்டலும் காரணமாக 1770 ஆம் ஆண்டில் மிகக்கடுமையான பஞ்சம் தலை விரித்தாடியது. அது முடிந்து முப்பது வருடங்களாகி விட்டன. அப்போது கல்கத்தா நகர் வீதிகளில் பட்டினிச்சாவால் மக்கள் மடிந்து கிடந்தார்களாம். சவங்கள் எங்கு பார்த்தாலும் விழுந்து கிடந்தன. இப்போது கிராமப்பகுதியில் தலை விரித்தாடுகிறது. கிராம மக்கள் பட்டினியால் மடிகிறார்கள்.

"கொஞ்சம் இருங்கள் தங்கை மகனைக் கடைத்தெருவிற்கு அனுப்பியிருக்கிறேன். ஏதாவது வாங்கி வருவான்" சுஜாதாவின் தாய் சொல்லிப் பார்த்தாள்.

ஆனால் துறவிகள் நிற்கவில்லை. அவர்களுக்கு நிலைமை தெரியும். ஆசியுரைகளை வழங்கிவிட்டு மேலே நடந்தார்கள். தங்கை மகன் பிரபல்லனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவன் கடைத்தெருவிலிருந்து வீட்டுக்கு வரவில்லை; தோணித் துறைக்கருகில் அம்பலத்தில் மற்றவர்களுடன் போய் உட்கார்ந்து விட்டான். அவனுடைய நண்பர்கள் வேதனையோடு சுணங்கி உட்கார்ந்திருந்தார்கள். மூன்று நாட்களாக எண்ணெய் கிடைக்க வில்லை. அரிசியைக்கண்டு எத்தனையோ நாட்களாகி விட்டன. பாக்கு, புகையிலை, அரிசி, உப்பு முதலான எல்லா முக்கிய சாமான் களையும் கம்பெனி முதலாளிகள் கொள்முதல் செய்து பதுக்கிவைத்து விட்டார்கள். ஆறுகளிலெல்லாம் கம்பெனி வியாபாரிகளின் தோணிகள்தான் சரக்குகளை நிரப்பிக் கொண்டு போகின்றன. ஆனால் கடைவீதியில் எந்தச் சாமானும் யானை விலை-குதிரை விலை. அம்பலத்தில் மேலும் ஏழெட்டுப் பேர்கள் வந்து உட்கார்ந் தார்கள். பேச்சு தொடங்கியது.

"மகமூத் தாதா! நீங்களும் டாக்காவிலிருந்துதான் வருகிறீர் களா?" பிரமோத் பாசு கேட்டான்.

"நான், நஸீர் எல்லாருமே டாக்காவிலிருந்து வந்தோம். அங்கே சோற்றுக்கு வழியில்லை. கைத்தறியெல்லாம் நொடித்துப் போய் விட்டது. ஜனங்கள் கூட்டம் கூட்டமாகக் கிராமத்திற்கு வரலானார்

கள். கிராமம் தாங்கவில்லை அந்தக்கூட்டத்தை. உலகத்திலேயே பெரிய தொழில் கேந்திரமாக இருந்த பாரத தேசம் தொழில் களெல்லாம் நொடித்துப்போய், விவசாய நாடாக மாறிவிட்டது. அப்படியும் நிம்மதியில்லை. விளைச்சல் குறைவு; வரி, கிஸ்தி, வாய்தா எல்லாம் மிக அதிகம். இப்போது வறட்சிப் பஞ்சமும் சேர்ந்துகொண்டது! வேறு என்ன வேண்டும் பட்டினிச் சாவுக்கு?"

பிறகு ஏக்கத்துடன் நெடுவீர்ப்புடன் கிழ நெசவாளி கிராமத் தாரைப் பார்த்துக் கேட்டான்: "இனிமேல் நாங்களும் ஏர்பூட்டி உழுதுதான் வயிறு வளர்க்கவேண்டும். உங்கள் ராஜா எங்களைச் சாகுபடி செய்ய விடுவாரா?"

"தெரியாது" பிரமோத் சலிப்புடன் பதிலளித்தான். அவன் இதையெல்லாம் நினைத்துப் பார்த்து ஓய்ந்து விட்டான். கிராமத்தின் நிலைமை மோசமாகியது.

ராதேசரண் அம்பலத்தில் குழுமியிருந்த மக்களைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டார்: 'இந்தக் கண்களால் என்ன என்ன கோலங்களை-காலக்கோளாறுகளையெல்லாம் காண வேண்டியிருக்கிறது!' காரன் வாலிஸ் கொடுஞ்சட்டம் எளியவர்களை மேலும் நசுக்கி விட்டது. கால்களை ஒடித்துப்போட்டாற் போலாகிவிட்டதே! நாலைந்து வாலிபர்கள் அவர் பக்கத்தில் வந்து குந்தினார்கள். அவர்கள் வேதனையுடன் கேட்டார்கள் :

"தாத்தா! உங்கள் நவாபுகள் ஆண்ட காலத்தில்கூட இப்படித் தான் இருந்திருக்கிறதா?" ஆகதோஷ் கேட்டான். "என்ன?" என்று எங்கோ கவனமாகக் கேட்டார் ராதேசரண்.

"இப்போதிருக்கிற நிலைமை, பஞ்சம், கிராக்கி, கலகம், கலவரம்"

நீண்ட வெண்ணிறத் தாடியுடன் தளர்ந்திருந்த இரு கிழவர்கள் தேங்காயைச் சுரண்டித் தின்று கொண்டிருந்தார்கள். இருவரும் கேள்வி கேட்ட வாலிபர்களை ஏறிட்டுப் பார்த்தார்கள். இவர்கள் பக்ஸர் போர்க்களத்தில் பங்கு கொண்டவர்கள். கிராமத்தில் இத்தகைய கிழவர்கள் நிறைந்திருந்தார்கள். இவர்கள் மொகலாயர் ஆட்சியையும் நவாபுகளின் மாட்சியையும் புகழ்ந்து கொண்டிருப்ப வர்கள். கிழவர் தனகோபால் மஜூம்தார் உரக்கச் சொன்னார்: "மகாபாரதத்தில் எழுதியிருக்கிறது: நம் பெண்கள் பர்தா மறைப் பிலிருந்து விடுதலை பெற்றுச் சுதந்திரமாகத் திரிவார்கள். நம் குழந்தைகள் தெருக்களில் பட்டினிச் சாவால் மடிந்து கிடப்பார்கள். நம் பாதுஷாவின் ஆட்சி கவிழும். காலம் மாறப்போகிறது."

"மகாபாரதத்தை விட்டுத் தொலையுங்கள், தாத்தா!" பிரபுல்லன் எரிச்சலுடன் அவர் பேச்சைக் கண்டித்தான். "இந்தக் கிழவர் களிடத்தில் இது ஒரு துர்க்குணம். பேச்சுக்குப் பேச்சு சிராஜூத் தௌலா ஆட்சியை நினைவுபடுத்தி ஒப்பாரி வைப்பார்கள்."

"கல்கத்தாவுக்குப் போ! வேலை கிடைக்கும், சியாமுக்குக் கிடைத்த மாதிரி."

சியாம் ராதேசரணின் மகன். சிரில் துரையின் மண்டியில் வேலை பார்க்கிறான்.

"தாத்தா! வெள்ளைக்காரத் துரையிடத்திலே வேலை பார்த்தால் போதும்; பழைய காலத்தை நினைத்துக் கனவு காண வேண்டிய தில்லை."

ராதேசரண் அதிர்ச்சியுடன் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். இந்தப் பையன் பிரபுல்லன் மார்வாடி மாதிரி பேசிக் கொண்டிருக்கிறான். இந்த மனோபாவம் இவனுக்கு எங்கிருந்து வந்தது? ராதேசரணுக்கு மார்வாடிகளைக் கண்டால் வெறுப்பு. அவர் பழைய காலத்துப் படிப்பாளி. பார்சி பயின்றவர். மொகலாயர் ஆட்சியில் கணக்கு வழக்குகளைப் பார்த்துக்கொண்டு, வீட்டில் மத ஆசாரங்களை விடாமல், நியம நிட்டையுடன் வாழ்ந்து வந்தவர். ஆனால் மார்வாடிகள் வந்து புதிய சமுதாயத்தைத் தோற்றுவித்திருக் கிறார்கள். கம்பெனி சர்க் காருடன் ஒக்குமத்தாக இருந்து, வியாபாரம் செய்கிறார்கள். சூழ்ச்சி—சாமர்த்தியத்திற்கெல்லாம் உடந்தையாக இருக்கிறார்கள். இடையில் செல்வம் சேர்த்துப் புதுப்பணக்காரர்களாகி வருகிறார்கள். உள்நாட்டு சமஸ்தானாதிபதிகள், ஜமீன்தார்கள், ஏழைப்பட்டாளிகள், விவசாயிகள்— இவர்களுக்கிடையே வாழ்ந்து வளர்ந்து கொழித்து வருகிறார்கள். ஆங்கிலேயர்களுக்கு வலது கை இந்தப் புதிய மார்வாடி வர்க்கம்தான்.

"வெள்ளைக்காரத் துரையிடம் உத்தியோகம்..." தன கோபால் செருமிக் கொண்டான். பிறகு உத்வேகத்துடன் பேசத்தொடங்கினான். அவனுடைய தாடி லாந்தல் வெளிசத்தில் விசித்திரமாகக் காட்சி தந்தது. "வெள்ளைக்காரத் துரையா? நமக்கென்ன அங்கே வேலை? நம் பாதுஷா இன்னும் தில்லியில் பதவியில்தான் இருக்கிறார். அவர் துரைமார்களின் மூளைகளைச் சரிசெய்து விடுவார்!"

"கோபால் தாத்தா..! உங்கள் பாதுஷாவைக் குருடாக்கி வைத்திருக் கிறார்கள் வெள்ளைக்காரர்கள், தெரியுமா?"

"உங்களுடைய பாதுஷா திவான் பதவியைக் கிளைவ் கையிலே எதுக்காகக் கொடுத்தாராம்? அந்த ஏமாளிப் பாதுஷாவா வெள்ளை யர்களைச் சரி செய்யப் போகிறார்?" பிரபுல்லன் வேதனையுடன் சிரித்தான். இரு கிழவர்களும் குத்திட்டிருந்த முழங்கால்களுக் கிடையில் முகத்தைப் புதைத்துக் கொண்டார்கள். ராதேசரண் மனக்கலக்கத்தோடு அந்த வாலிபனைப் பார்த்தார். இவர்களைச் சமாதானப்படுத்துவது இயலாது. பாதுஷா விரும்பியே ஆட்சிப் பொறுப்பை கிளைவிடம் ஒப்படைத்தார் என்று சொல்லமுடியாது. கிளைவ் வலுக்கட்டயமாக அந்தப் பொறுப்பை வாங்கிக்கொண்டான்.

பட்டினி கிடந்து சாகும் இந்தப் பஞ்சகாலத்தில், 'இந்தியாவிலேயே வளமான பிரதேசம் வங்காளம்தான்' என்று கூறி எப்படி நம்ப வைக்க முடியும்? இதே வங்களம் 'பிர்தௌஸே ஹிந்த்' (இந்தியாவின் சொர்க்கம்) என்று அழைக்கப்பட்டது. அந்தக்காலத்தில் வங்காளம் ஆங்கிலேயரின் ஜமீன்தாரி முறைச்சட்டம் அமுலுக்கு வந்தும் நலிய வில்லை. அந்தக்காலத்தில் உள்நாட்டுப் பண்டங்களுக்கு ஏற்றுமதி வரி கிடையாது. இவையாவும் ராதேசரண் கண்ணெதிரிலேயே நிகழ்ந்த மாறுதல்கள். சில நாட்களுக்கு முன்பு, நிரந்தரமான ரெவின்யு சட்டங்களை அமல்படுத்த, ஊர் ஊராகச் சுற்றுப்பயணம் வந்த மாநிலக் கலெடக்டர் துரை இந்தக் கிராமத்திற்கும் வந்தார். கிராமத்தார்களைக் கூட்டி வைத்துப் பேசினார். ராதேசரணிடம் பிரத்தியேகமாக, "இதெல்லாம் உங்கள் நன்மைக்குத்தான் செய்கிறோம்." என்று சமாதானம் கூறினார். மேலும், "முஸல்மான் நவாபுகள் உங்களையெல்லாம் சுரண்டிக்கொண்டிருந்தார்கள்; அந்தச் சீர்கேட்டைப் போக்கவே இந்தப் புதிய ஏற்பாடுகள்" என்றார்.

ராதேசரண் சினந்து வாதாடினார்: "நீங்கள் தவறாகச் சொல்கிறீர்கள். எங்கள் நவாபுகள் ஆட்சியிலே சீர்கேடு ஏதும் இருந்த தில்லை. என் முன்னோர்கள் பல நூற்றாண்டுகளாக முர்ஷீதாபாத் நவாபுகளிடம் பணி புரிந்து வந்திருக்கிறார்கள். நான் இந்தத் தள்ளாத வயதில் கங்கைக் கரையில் வாழ்ந்து வருகிறேன்; கடந்த கால நினைவுகளை நான் இழந்து விடவில்லை. ஊராரை ஏமாற்றுவதற்காகப் பொய் சொல்கிறீர்கள்! நீங்கள்..." ராதேசரண் கோபத்தால் கொதிப்படைந்தார். கலெக்டரின் சேவகர்கள் அவரை இழுத்து வந்து வெளியே விட்டார்கள்.

அன்று அந்த அறையில் ஓர் ஆங்கிலேயப் பாதிரியாரும் இருந்தார். அவர் தம் பிரயாண அனுபவங்களை எழுதி வந்தார். அவர் இந்தக் கூட்டத்தையும் ராதேசரணின் கோபாவேசப் பேச்சையும் கேட்டபிறகும் நேர்மையின்றி எழுதிவைத்தார்; "வங்காளத்து இந்துக்கள் முஸல்மான்கள் நவாபுகளை வெறுக்கிறார்கள். முஸல்மான்கள் இந்துக்களை ஒழித்துக் கட்ட விரும்புகிறார்கள். இந்த நாட்டில் ஒற்றுமை கிடையது. உண்மையில் இதை ஒரு தேசம் என்றே சொல்ல முடியாது."

ராதேசரண் நதிக்கரையில் புல் தரையில் அமர்ந்திருந்தார். நவாப் அலீவர்தி இறக்கும் தருவாயில் இளைஞன் சிராஜிடம் சொன்னான். "பரங்கிகள் பாதுஷாவின் ஆட்சிப் பகுதியையும் மக்கள் சொத்தையும் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்டு விட்டார்கள். அவர்களுடைய வலிமை வளர்ந்திருக்கிறது. இனியாவது எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவர்கள் வசம் எந்தக் கோட்டையும் சிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்; அவர்களை

இங்கே படை திரட்டவும் விடக்கூடாது. இதில் தவறினால் தேசம் முழுவதும் அவர்கள் வசமாகிவிடும்."

அப்போது இருபத்து நான்கு வயதான சிராஜ் முர்ஷிதாபாதில் இருந்தான். வெள்ளைக்காரர்கள் அவனை அவமதிக்க வேண்டி, காஸிம்பஜாரிலிருந்த வியாபார கேந்திர மாளிகைகளில் நுழையக்கூடா தென்று தடை போட்டிருந்தார்கள். மற்றப்பகுதிகளைச் சேர்ந்த வியாபாரிகளுக்கு விதிப்பிலிருந்து விலக்கு அளித்திருந்தார்கள் ஆனால் நவாபின் ஆட்சிப் பகுதியிலிருந்த விற்பனைக்கு வரும் பொருள்களுக்கு நிறைய வரி விதித்தார்கள். கல்கத்தா போரில் வீழ்ந்தது. வெள்ளைக்காரர்கள் உறுதிப் பத்திரம் எழுதிக் கொடுத்து நவாப் சிராஜிடம் மன்னிப்புக் கோரினார்கள். சிராஜ் அவர்களுடைய வாக்குறுதியை நம்பி மன்னிப்பளித்தான். ராதேசரணின் தந்தை இந்தப் போர்களில் சிராஜுடன் இருந்தவர்! பிறகு ஆங்கிலேயர் ஹுக்ளி பகுதியில் கொலை கொள்ளைகளில் ஈடுபட்டபோது, சிராஜ் அவர்களுக்கு எழுதினான்: "நீங்கள் என் மக்களை ஏன் வதைக்கிறீர்கள்? தங்களைக் கிறிஸ்துவர் என்று சொல்லிக் கொள்கிறீர்கள். நீங்கள் பழையபடியே வெறும் வியாபாரிகளாக மட்டும் இருந்தால் எல்லாப் பழைய உரிமைகளையும் திரும்ப அளிக்கிறேன். வீணாகப் போர் புரிந்து மக்களை அழிக்கவேண்டாம். ஒரு பக்கம் என்னுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டிருக் கிறீர்கள்; மறுபுறம் வலுத்தாக்குதலில் ஈடுபட்டிருக்கிறீர்கள். மாரட்டியர்களையும் ஏவிவிடுகிறீர்கள். அவர்களுக்கு பைபிளிடத்தில் நம்பிக்கையோ அபிமானமோ இருக்க வேண்டிய அவசியமில்லை. அதனால்தானோ என்னவோ, அவர்கள் வன்செயல்களில் கொடூர மாக ஈடுபட்டு வருகிறார்கள். நீங்கள் பரமபிதா ஏசுபகவான்மீது ஆணையிட்டு வாக்குறுதி அளிக்கிறீர்கள்; பிறகு அதைக் குலைக்கிறீர்கள்!"

இதற்கு அட்மிரல் வாட்சன் பதில் எழுதினான்: "நான் உன் ஆட்சிப்பகுதியில் எரியூட்டி, தீயைப் பரவ விடுவேன்; அதை அணைக்கக் கங்கை நீர் முழுவதையும் பயன்படுத்தினாலும் போதாது. அப்படி அணைக்க முடியாத நெருப்பாக வைத்து எரிய விடுவேன்–" உடனே தீப்பந்தங்கள் கங்கைக் கரையெங்கும் எரிந்தன. நீர்ப்பெருக்கு ஒளி வெள்ளத்தில் கலந்தது.

சிரில் துரையின் ஓடம் துறைக்கு வந்து சேர்ந்தது. ராஜா கிரீஷ் சந்திர ராய் தம் பிரதான பரிவாரங்களுடன் துரையை எதிர்கொள்ளக் காத்திருந்தார். ராதேசரண் பதற்றத்துடன் எழுந்திருந்தார். வெளிச்சத்தில் அவர் கண்கள் கூசின. போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு, இருண்ட பாதை வழியாகத் தம் வீட்டிற்குச் சென்றார்.

# 13

இருபத்தைந்து வருடங்கள் கடந்துவிட்டன.

டாக்காவிலுள்ள தொழில்கூடங்கள் பாழடைந்து போயின. நாட்டிலுள்ள எல்லா இரும்புப் பட்டறைகளும் சில காலமாகவே வெறிச்சோடிக் கிடக்கின்றன. இந்திய நெசவாளிகள் இளைத்துச் சளைத்து நடைப்பிணங்களாகி விட்டார்கள். கிளைவ் துரை லண்டன் மாநகரைவிடப் பெரிதாக—வளங்கொழிப்பதாகக் கருதி வந்த முர்ஷிதா பாத் இப்போது வறுமைக்கூடமாகிப் பாழடைந்திருந்தது. கல்கத்தா சந்தடிமிக்க நகரமாகி விட்டது. இதே கல்கத்தாவில்தான் சிரில் துரையின் வானளாவிய கட்டிடங்கள் அலிபுர் ரோடில் இருந்தன. சிரில் ஹாவர்ட் ஐஷ்லே அவர்கள் ஐம்பது வயதாகிய அனுபவக்காரன். பழம் பெருச்சாளி, ஜான் கம்பெனியின் பிரதான தூண், அவத் ராஜ்யத்துப் பாதுஷாவின் நெருங்கிய நண்பன், இப்போது வேட்டை நாய்களை 'ஹலோ, ஹலோ!' என்று குலாவிய பின், பல்லக்கில் ஏறிச் செல்லத் தீர்மானித்திருந்தான். தினமும் இந்த நேரத்தில் காற்றுவாங்கச் செல்வது வழக்கம். இவருடைய மருத்துவ ஆலோசகர் அறிவுறுத்தியிருக்கிறார். 'உடல் நலத்தில் கவனம் வைத்துக் கொள்ள வேண்டும்; அதிகமாக உழைக்கக்கூடாது; கோபம் கொள்ள லாகாது. மிகக்கொஞ்சமாக மது அருந்தவேண்டும். தினமும் காற்று வாங்கப் போய்வர வேண்டும். இவற்றைக் கடைப்பிடிக்காவிட்டால் விரைவில் சாவு வந்துவிடும்.'

வைத்தியரின் ஆலோசனையைக் கேட்டதும் சிரில் துரைக்குச் சிரிப்பாக வந்தது. தான் தாழ்ந்த மனிதன் என்பதை உணர்ந்திருந்தான். வாழ்க்கையில் வளம் கண்ட, வெற்றி கண்ட சராசரி மனிதன், ஐம்பதாவது வயதை அடைந்திருக்கிறான். இத்தகைய கிழப்பணக் காரனைச் சுற்றி வைத்திய நிபுணர்கள் இருப்பது அதிசயமில்லை.

சில பணியாட்கள் தம்மிடம் வருவதைக் கண்டு சிரில் துரை நின்றான். பெரியதனத்திற்கேற்ற மிடுக்குடன் பல்லக்கில் அமர்ந்தான். கடிதம், செய்திக்குறிப்பு, ஆணைப்பத்திரங்களுடன் அஞ்சல்காரர்கள் அரசாங்க அலுவலகத்திலிருந்து வந்திருந்தார்கள். தன் உதவியாளர் மூலமாகச் சில முக்கியக் கடிதங்களை லக்னோவிலுள்ள சர்க்கார் பிரதிநிதி ரெஜிடெண்ட்டுக்கு அனுப்ப வேண்டும். வங்காளத்தின் நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது. சில ஜில்லாக்களில் முஸல்மான் குடியானவர்கள் புரட்சிக்கார மௌல்விகளின் தலைமை யில் கலகம் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள். அவத் பாதுஷாவிடம் சில ரகசியக் கடிதங்களைச் சேர்ப்பிக்க வேண்டும். புரட்சிக்காரர்களை நசுக்கத் தானே நதியா ஜில்லாவுக்குப் போக வேண்டும். (நதியா

ஜில்லாவில் பளாஸி மைதானத் தோட்டம் இருந்தது. அங்கு மாமரங்கள் பூத்து, வடுவைக்கத் தொடங்கிய காலத்தில்தான் ராபர்ட் கிளைவ் நவாப் சிராஜுடன் போரிட்டான்). நதியா கவர்ன்மெண்ட் ஹவுஸிலிருந்து வந்த கடிதங்களில் இந்தப் பெயரைக் கண்டதும், சிரில் துரைக்குப் பல செய்திகள் நினைவு வந்தன. பெயர்களுக்கும் சொற்களுக்கும் இப்படியொரு தொடர்புத் திறன்! சங்கடம்தான்! ஒவ்வொன்றுக்கும் மற்றதோடு ஏதாவதொரு தொடர்பு! உலகம் முழுவதுமே ஏதாவதொரு கதை—தகவல் தெரிவிக்கக் காத்திருக்கிறது. அவன் தன் கதையை யாரிடம் தெரிவிப்பான்...?

கடிதங்களில் கையொப்பமிட்டு, அஞ்சல் தூதுவரை அனுப்பி வைத்தபின், புறப்பட்டான் சிரில் துரை. கருமேகங்கள் திரண்டுவந்தன. எதிரே சில கரிய மனிதர்கள் பாடை தூக்கி வந்தார்கள். "ஹரிபோல்! ஹரிபோல்!" என்று கூவி வந்தார்கள். இதைக் கேட்கவே சிரில்லுக்குப் பயமாக இருந்தது. மரணத்தை நினைவுறுத்தும் சொற்கள் சிரில்லுக்கு விதர்த்தது. சவ ஊர்வலத்தில் முன் செல்லும் ஒருவனிடம் விசாரித்தான்: "இது யார்?"

"டாக்காவைச் சேர்ந்த ராதேசரண் பாபு"

சிரில் துணுக்குற்றான். 'சுஜாதாவின் தந்தையின் பெயர் ராதேசரணாயிற்றே! சுஜாதா யார்...?' "உலகில் எத்தனையோ ராதேசரண் இருக்கிறார்கள். மேலும் சிரில் சுஜாதாவின் தந்தையைப் பார்த்தது கூட இல்லை. எப்போதாவது மகளைப் பார்க்கக் கிராமத் திலிருந்து வந்து போவாராம். மிகவும் முரண்டு பிடித்த—பைத்தியக் காரக் கிழவர் என்று கேள்விப்பட்டிருந்தான்.

சிரில்துரை தலைப்பாகையைக் கழற்றிவிட்டு, தெரு ஓரத்தில் நின்றான். சவம் எதிரே சென்றபோது குனிந்து வணக்கம் தெரிவித்தான். பாடை தூக்கிச் சென்றவர்களும், உடன் சென்றவர்களும் இதைக்கண்டு அதிசயித்தார்கள். உயிரோடிருக்கிற வங்காளிகளை உதையும் செருப்படியுமாக எதிர்கொள்ளும் இந்த வெள்ளைக் காரத்துரை, இறந்துபோன ஒரு கிழ வங்காளிக்கு மரியாதை செலுத்துகிறாரே! ஏன்?

பாவம், ராதேசரண் பாபு! ஒருகால், சில கணங்களுக்காவது உயிர் பெற்றெழுந்து, இந்த அதிசய மரியாதையைக் கண்ணால் பார்க்க முடிந்தால்?

சவ ஊர்வலம் கடந்து விலகியது. 'ஹரிபோல்' கூவல்கள் இழைந்து மறைந்தன. பல்லக்குத் தூக்கிகள் பணிவுடன் கேட்டார்கள்: "எஜமான்! எங்கே போக வேணும்?"

சிரில் பல்லக்கினுள் உட்கார்ந்து கொண்டு, "எங்கேயாவது தூக்கிச்செல், கிளம்பு!"

சிரில் கலக்கமடைந்திருந்தான். வாழ்வில் பல ஏற்றத் தாழ்வுகளைக்

கண்டவன்; பல சாவுகளைப் பார்த்தவன். இந்த உலகை ஒவ்வொரு கோணத்திலும், விதம் விதமான கவர்ச்சியிலும் ஒன்றிப் பழகியிருக்கிறான். மனிதர்கள் எப்படியெல்லாம் வாழ்கிறார்கள்? எப்படியெல்லாம் மடிகிறார்கள்? இந்தக் கோரமான உலகியல் ஏன் தொடர்கிறது? ஓர் சுதேசிக் கவி பாடியிருக்கிறான்:

"ஆழ்நதியில் கரை காணாநீர்ப் பெருக்கு
ஊழ்போன்ற பெருவெள் ளம்பெரு குதுகாண்!
படகோட்டி வழிகாட்டி யெனவே கொள்வாய்
பயமின்றிக் கரைசேர நீ விரும்புவாயாகில்."

படகோட்டி எங்கே? அவனைச் சந்திக்க எவனுக்குப் பொழுது இருக்கிறது? ஆனால், ஆத்மாவின் இந்தத் தாபம் யுகம் யுகமாக மனிதனை உருத்திக் கொண்டிருக்கிறது. எக்காலத்திலும் இது மனிதனை விடுவதில்லை; பின் தொடர்கிறது. வாழ்க்கையில் அவன் என்னவெல்லாம் எதிர்பார்த்தானோ, நம்பியிருந்தானோ, அவற்றைவிட அதிகமாகவே வாழ்க்கை அவனுக்கு அளித்திருக்கிறது. மிக்க அருளுடன் அவனுக்குத் துணை நிற்கிறது. ஆனால் அவன் வாழ்க்கைக்கு என்ன கொடுத்திருக்கிறான்...?

சிரில் கலவரத்துடன் சுற்றுப்புறத்தைப் பார்த்தான். இந்த அழகான நகரம், இந்தச் செல்வம், இதன் மக்கள் எல்லாமே அவன் காலடியில் கிடக்கின்றன. நாலாபக்கமும் இருக்கிற மனிதர்கள் தன்னைப் பார்த்து முகம் சுளிப்பதுபோல் இருந்தது. நாற்சந்தி வந்ததும் போகிகள் சிவிகையை இறக்கி வைத்தார்கள்—சற்று இளைப்பாறி தோள் மாற்றிக்கொள்ள. எதிரே போர்த்துகீசியர் நடத்தும் மதுபானக் கடை இருந்தது. ஹுக்ளி துறைமுகத்திலிருந்து வந்த பிரிட்டிஷ்-இத்தாலிய மாலுமிகள் கடை வாசலில் கும்மாள மடித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு மங்கை தலையில் கறுப்புச் சல்லாத்துணியை அணிந்து கொண்டு வேகமாகக் கடைப்பக்கம் விரைந்தாள்: சிரில் துரையை அவள் திரும்பித் திரும்பிப் பார்த்து விட்டுச் சென்றாள்.

பல்லக்கை அங்கேயே நிறுத்தச் சொல்லி, வேகமாக இறங்கி, அந்த வெள்ளை மாதைப் பின்தொடர்ந்து விரைந்தான். கல்கத்தாவிலுள்ள இந்த மட்டரகமான மதுக்கடையில் தான் நுழைவதைக் கண்டால், பிறர் என்ன சொல்வார்கள் என்பதைக்கூட நினைத்துப் பார்க்காமல் சிரில் சென்றான். கல்லாப்பெட்டிக்கருகில் வயோதிக ஐரோப்பியன் உட்கார்ந்திருந்தான். சிரில் துரையைக் கண்டதும் பதறிப்போய் எழுந்து வரவேற்றான். உடல் நடுங்கியது; நா குழறியது.

சிரில் அந்த வயோதிகனை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். உலகமெங்குமுள்ள மதுக்கடைக்காரர்களுக்கு விவரிக்க இயலாத ரகசியமான முகத்தோற்றம் எப்படித்தான் அமைகிறதோ?

எல்லாருடனும் மௌனமான உறவு கொண்டவர்கள்— போக்கிரிகள், ஊதாரிகள், காவாலிகள், திருடர்கள், ரௌடிகள், குண்டர்கள்— சகலரோடும் பழகும் விசித்திரமான, சோகமயமான உலகம் இவர்களுடையது.

இதற்குள் சிரில் தொடர்ந்து வந்த மங்கை மாடியிலிருந்து ஏதேதோ கத்திக்கொண்டு மாடிப்படிக்கட்டிலிருந்து கீழே இறங்கி வந்தாள்.

அப்போது இரு மாலுமிகள் கத்திக்கொண்டு வந்தார்கள். அவர்களுடன் இரு அழகிய ஆங்கிலோ—இந்திய யுவதிகள் எக்களிப்புடன் வந்தார்கள். ஒருத்தி உரக்கச் சிரித்தாள். அந்தப்பெண்ணின் முகத்தில் தன் சாயலைக் கண்டான் சிரில். அவனால் அங்கு இருக்க முடியவில்லை. எழுந்தான்.

"சிரில் துரையவர்களே ! எங்கே புறப்பட்டு விட்டீர்கள் ?" அந்த மாது எதிரே வழியை மறித்துக்கொண்டு கத்தினாள். இவளைத்தான் சிரில் பின் தொடர்ந்து வந்தான். அவள் முகம் பொலிவிழந்திருந்தது. வாசல் கதவுத் தண்டியத்தில் சாய்ந்துகொண்டு அவள் சொன்னாள்: "சிரில் துரை அவர்களே! உங்கள் பெண்ணைச் சந்தித்து விட்டுப் போங்கள். நீங்கள் என்னைக் கல்கத்தாவுக்கு அழைத்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டு வந்தீர்களில்லையா ? நான் இருபத்தைந்து ஆண்டுகளாக உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இவள் நாலு வயதாக இருக்கும்போது, கல்கத்தாவுக்கு வந்தேன். மதராஸிலிருந்து வந்த என்னை உங்கள் வேலைக்காரர்கள் உங்கள் மாளிகைக்குள் நுழையவிடவில்லை. நான் என்ன செய்வேன் ? நான் பல கடிதங்கள் போட்டேன். நீங்கள் பதிலே போடவில்லை! நாங்கள் எப்படி வாழ்கிறோம் என்று இப்போது அறிந்து கொள்ள ஆசைப்படுகிறீர்களில்லையா ? பார்த்துக் கொள்ளுங்கள்– இப்படித்தான்– இங்குதான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் !"

அந்த மாதின் கண் கலங்கியது. தொடர்ந்து உரக்கப் பேசினாள்: "சிரில் துரை அவர்களே ! நீங்கள் இன்று வங்காள அரசாங்கத்தில் பெரிய அதிகாரி. எனக்காகக் கொஞ்சம் பண உதவிக்கு ஏற்பாடு செய்யுங்கள். சுதேசிப் பெண்களிடம் நீங்கள் நிரம்பத் தயவு வைத்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். நான் என்னவானாலும் ஓரளவுக்கு உங்கள் இனத்தைச் சேர்ந்தவள்"

சிரில் வெலவெலத்துப்போனான். வியர்த்துக் கொட்டியது. இதய நோய் வளர்ந்து மாரடைப்பில் அப்போதே இறந்துவிடுவான் போலிருந்தது. அச்சமயத்தில் தெருவில் ஒரு குதிரை வண்டி போயிற்று. அதில் 'கல்கத்தா இராணிகள்' பத்திரிகை நிருபர்கள் சிலர் இருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் சிரில்லுக்கு உயிரே போய்விட்டது போல் இருந்தது. நிலைமையை அறிந்த உதவியாள்

ஓடிவந்து, சிரில் துரையை அணைத்து அழைத்துச் சென்றான். சிரில்லைப் பல்லக்கில் உட்கார வைத்தான். மரியா டெரெஸா இடுப்பில் கை வைத்தவாறு நிலைப்படியில் நின்று சிரில்லையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு உள்ளே சென்று விட்டாள்.

"எஜமான்! பங்களாவுக்குத் திரும்பலாமா?" பல்லக்குத் தூக்கிகள் கேட்டார்கள்.

"வீட்டுக்கா? வேண்டாம். தோட்டத்துப் பங்களாவுக்குப் போங்கள்!" குரலில் ஆத்திரம் கனன்றது. தோட்டத்து மாளிகைக்குள் சென்றதும், மேலே என்ன செய்யலாமென்று யோசிப்பான்.

பல்லக்கு விரைந்தது.

"வேகம்! இன்னும் வேகம்!" போகிகளை விரைவு படுத்தினான். வாழ்க்கையின் முழு சொரூபமும் அவன் கண்ணெதிரே திரையிடப் பட்டிருந்து. வாழ்க்கையெனும் லஸ்தர் விளக்கினுள் அவன் அடைபட்டிருக்கிறான். நாலாபுறமும் பல வண்ணக்காட்சிகள் விரிந்து அவனை அச்சுறுத்துகின்றன. கவர்ன்மெண்ட் ஹவுஸிலுள்ள உதவியாளர்கள், நண்பர்கள், போர்ட் விலியம் காலேஜ் முன்ஷி, எழுத்தாளர், ஏஷியாடிக் சொசைட்டியின் ஆராய்ச்சியாளர், அவத் சம்ஸ்தானத்துக் கவிஞர், கலைஞர் லக்னோ கணிகை சம்பாதேவி—இவ்வளவு பேர்களும் ஒட்டுறவு கொண்டிருந்தும் சிரில் துரையின் வேதனையை குறைக்க முடியவில்லை. அவனுடைய வேதனைதான் என்ன? பெண்கள்? இல்லை. பெண்கள் விவகாரம் ஒருக்காலும் அவனைத் தொல்லைப் படுத்தியதில்லை. வெற்றி கண்ட, மகிழ்ச்சி நிறைந்த மனிதர்களின் வாழ்க்கையில் தனிப்பகுதி ஒன்று பத்திரமாக இருக்கும்—அழகிய அணங்குகளுக்கென்று ஒதுக்கிய பகுதி அது! அவர்களுடைய காதல், காதலில் வெற்றி-தோல்விகள், உணர்ச்சிப்பெருக்கு, குடும்ப வாழ்வில் வெற்றி-தோல்விகள்—யாவும் அந்த அணங்குப்பகுதியில் இடம் பெறும். தொடக்கத்தில் கவியுள்ளத்தோடு உலகைக்காண முற்பட்ட சிரில் ஐஷ்லே இப்போது வெற்றிகரமான வளர்ச்சிகண்ட செல்வந்த மனிதன். அவனுக்குள் தாபம்-விசனமெல்லாம் தான் யாரையும் காதலிக்கவில்லையே என்பதுதான். குறிப்பாக, தனக்கு எல்லா வளமைகளையும் மகிழ்ச்சிகளையும் அளித்துள்ள இந்திய நாட்டிடம் கூடத் தனக்குப் பாசபந்தம் ஏற்படவில்லையே என்று ஏங்கினான். மேலும் தன்னை வெவ்வேறு காலங்களில் விரும்பி உறவுகொண்ட பெண்களைக்கூடத் தான் காதலிக்காதது அவனை வேதனைப் படுத்தியது.

சிரில் ஐஷ்லே இந்த உலகத்தில் அனுபவிக்காதது இல்லை. ஆனால் தான் பெற்றதற்குப் பிரதியாக அவன் இவ்வுலகுக்கு ஏதும் கொடுக்கவில்லை. இது மிக துரதிர்ஷ்டமானது, வருந்தத்தக்கது.

அவன் காலத்தில் மதச்சார்பு செல்வாக்குப் பெற்றிருந்தால், ஒரு வேளை அவன் கடவுளிடம் புகல் அடைந்திருப்பான். ஆனால் உலகமே அறிவியல், விஞ்ஞானம், பௌதிகம் என்று புதுத்திசையில் சென்று கொண்டிருக்கிறது. பாங்க் ஆஃப் இங்கிலெண்ட், சர்ச் ஆஃப் இங்கிலாண்டைவிட மதிப்பு மிக்கதாகிவிட்டது. வாழ்க்கையின் குறிக்கோளே அதிகச் செல்வம் சேமிப்பது, தொழில் பெருக்கம், அதிகார மோகம், ஆட்சி செலுத்துவது, செல்வாக்கை வளர்த்துக் கொள்வது.

சிரில் தோட்டத்துப் பங்களாவுக்கு வந்து சேர்ந்தான். ஒரு வாரமாகக் காத்திருந்த கடிதங்களைக் கண்டான். ஆவன செய்து விட்டுத் தூங்கினான். பிறகு, அலுவலகத்திற்குப் புறப்பட்டான். ஹுக்கா குடித்து உற்சாகப்படுத்திக் கொண்டான். மனச்சள்ளைகள் இருந்தன. எனினும் கடமை, நீதி, சட்டம்-ஒழுங்குகளை நிலை நாட்டல் அவனுக்கு நாட்டமாக இருந்தது. நதியா பகுதிக்குச் சென்று எதிரிகளை ஒறுக்க வேண்டும். மனச்சள்ளை தூண்டியது: 'லக்னோ போய் மன மகிழ்வு கொள்; துயரை மற!'

சிரில் சௌரங்கி பகுதிக்குப் புறப்பட்டான். அங்கு அவனது அலுவலகம் இருந்தது.

# 14

அந்த வங்காளி வாலிபன் தலை நிமிர்த்திப் பார்த்தான். ஃபைல்களைக் குனிந்து பார்த்துக் கொண்டிருந்த வாலிபனின் சுருள் குழைகள் நெற்றியில் புரண்டன. மேஜை மேல் மக்கல் காகிதக்கட்டுகள் குவிந்திருந்தன. வெளியே உடியாப் பையன் லேசாக உறங்கியவாறே பங்கா விசிறியை இழுத்துக் கொண்டிருந்தான். சிரில் துரை வந்ததைக் கண்டதும், பையன் பதறி எழுந்தான். நிமிர்ந்து உட்கார்ந்து பங்காவை வேகமாக இழுக்கத் தொடங்கினான்.

'குடாஃப்டர் நூன், ஸார்!' வங்காளி வாலிபன் நாற்காலியிருந்து எழுந்து, மெல்லச் சொன்னான்.

"குடாஃப்டர் நூன்! உன் பெயரென்ன?"

"கௌதம நீலாம்பர தத்தா, ஸார்!"

"இதற்கு முன் உன்னை நான் இங்கு பார்த்ததில்லையே?"

"நான் நேற்றுதான் பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் ஆஃபீஸிருந்து இங்கு மாற்றலாகி வந்திருக்கிறேன்."

"நேற்றிலிருந்து வேலை பார்க்கிறாயா? பார்க்கச் சிறு பையனாக

இருக்கிறாயே!" இதில் உவகையுடன் விசாரித்தான். சுதேசி ஜனங் களுடன் வெள்ளையர் இப்படிச் சுமுகமாகப் பழகுவது முதலில் கார்ன்வாலிஸிற்குப் பிடிக்கவில்லை. பிறகு ஜான் கம்பெனிக்கு அரசாங்க அந்தஸ்து கிடைத்ததும் கார்ன்வாலிஸின் கொள்கை மாறியது. ஆங்கிலேயர் ஆள்பவர், இந்தியர் ஆளப்படுபவர் என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆகையால் எக்காலத்திலும் சுதேசி மக்களோடு சரி சமமாகப் பழகக் கூடாது என்று வெள்ளையர் தீர்மானித்திருந்தார்கள். 'ஹேஸ்டிங்ஸ் துரையாரின் காலம்' கனவாகி விட்டது. எனினும் சிரில் பழைய கால முறையில் ஊறிய 'நவாபு'. அவத் ரெஜிடென்ஸியிலிருந்து பழகியதால், அவனிடம் இந்தியத் தனம் அதிகமாகக் கலந்திருந்தது. அவனுக்கு அப்போது கார்ன் வாலிஸின் நினைவு வந்தது—குட் ஓல்ட் கார்ன்வாலிஸ்! காஜீபுர் போனவன் காலராவில் விழுந்து செத்தான். இப்போது அவனுடைய கல்லறைக்குள் எலும்புகள்கூடக் கரைந்து போயிருக்கும். சாவின் நினைவு வந்ததும், சிரில் துணுக்குற்றான்; அந்த நினைவு அவனை அச்சுறுத்தியது. ஒரு கணம் கண்களை மூடிக்கொண்டிருந்து விட்டு, வங்காளி வாலிபனைப் பார்த்தான்.

"நீ எங்கே படித்தாய்?"

"சம்ஸ்கிருத காலேஜ், பனாரஸ்; இங்கு கல்கத்தா காலேஜில் எஃப். ஏ. வரை படித்திருக்கிறேன். பி. ஏ வரையில் படிக்க ஆசை.."

"நல்லது; சந்தோஷம்!" சிரில் முகம் மலர்ந்து பேசினான்: "ஆபீஸ் நேரம் முடிந்த பிறகு என்னை வந்து பார்த்து விட்டுப்போ; அடிக்கடி வந்துபார்!"

பிறகு சிரில் தன் அறைக்குச் சென்றான்.

சில தினங்களுக்குப்பிறகு, சிரில் துரை நீலாம்பரதத்தைத் தன் அலுவலகத்திற்கு அழைத்தான். அங்கே வட்ட மேஜைக்கெதிரே வேறு நான்கு துரைகள் உட்கார்ந்திருந்தார்கள். நீலாம்பரன் வந்து நின்றான்.

"வெளியூர் போய் வரச் சம்மதமா?" சிரில் கேட்டான்.

நீலாம்பரன் சம்மதித்தான்.

"எப்போதாவது அவத் மன்னர் தர்பாருக்குச் சென்றிருக்கிறாயா? அவர் ஆட்சிப்பகுதிக்குப் போயிருக்கிறாயா?"

"நான் காசியைத் தாண்டி அப்பால் சென்றதில்லை."

"சில முக்கியமான தஸ்தாவேஜுகளை லக்னோ ரெஜிடென் ஸிக்கு அனுப்ப வேண்டும். உன்னை அனுப்ப விரும்புகிறேன். உன்னுடன் ஆயுதம் தாங்கிய வீரர்கள் துணை வருவார்கள். நான் வர இயலாது. ஜில்லாக்களில் சுற்றுப்பயணம் போக வேண்டும். வீட்டிற்குப்போய் பிரயாண ஏற்பாட்டோடு வந்து சேர். அகிலேஷ் பாபுவிடம் சொல்லி, கப்பலில் உனக்குத் தனி அறை ஏற்பாடு

செய்யச்சொல்"—சிரில் உத்தரவிட்டான்.

"எஸ், ஸார்! தாங்க் யூ, ஸார்!" நீலாம்பரன் திரும்பத் தன் அறைக்கு வந்து சேர்ந்தான். மற்ற துரைமார்கள். மௌனமாக சிரில்லைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கிழவன் சிரில் விசித்திரமான மனிதன். சுதேசிகளிடம் மிகக் கடுமையாகவும் நடந்து கொள்கிறான், நட்போடும் பழகுகிறான்.

கல்கத்தாவிலிருந்து பனாரஸ் செல்லும் கப்பல் இன்னும் நங்கூரத்தைத் தூக்கவில்லை. மழைக்காலம் தொடங்கி விட்டது. கௌதம நீலாம்பரன் பிரயாண ஏற்பாட்டுடன் புறப்பட ஆயத்த மானான். மழை நிற்கட்டும் என்று காத்திருந்தான். மானிக்தல்லா பகுதியில் அவனுடைய சிறு வீடு இருந்தது. அவன் தனியாக வசித்து வந்தான். அவனுடைய தாய்-தந்தை, உடன்பிறந்தார் எல்லாரும் ராஜஷாஹியில் விவசாயம் செய்து வாழ்ந்து வந்தார்கள்.

மாலைப்பொழுது, வெளித்தாழ்வாரத்தின் மூலைகளிலிருந்து சில வண்டுகள் ஒலித்தன. சந்துகளில் மழை நீர் வழிந்து நிரம்பியது. காற்று அடங்கியிருந்தது. அவன் வெளித்தாழ்வாரத்தில் பாயை விரித்து, லாந்தல் வெளிச்சத்தில் பெரிய இங்கிலீஷ் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். இடையிடையே ஆங்கில அகராதியைப் புரட்டிக் கொண்டிருந்தான். யாரோ வரும் காலடிச்சத்தம் கேட்டது. வெள்ளைச் சேலை உடுத்திய நாற்பது வயதுக்காரி எதிரே வந்து நின்றாள்.

நீலாம்பரன் அவசரமாக எழுந்து, கை கூப்பி வரவேற்றான். "என்ன அம்மணி! யாரைப் பார்க்க வேண்டும்?"

"உன்னைத்தான். நீ சிரில் துரையின் உதவிக் குமாஸ்தா தானே? என் பெயர் சுஜாதா; அவர் மனைவி."

"அப்படியா!" அவனுக்கு நினைவு வந்தது. ஆபீஸில் யாரோ சொன்னார்: 'சிரில் துரையின் அந்தப்புரத்தில் பல ஆண்டுகளாக ஓர் இந்துப்பெண் இருந்தாள். சில காலமாகத் துரை அவளை ஒதுக்கி வைத்து விட்டார்...?'

"துரை உன்னிடம் பரிவு கொண்டிருக்கிறாராமே. எனக்கு ஒரு உதவி செய்வாயா? நீ லக்னோ போகிறாயா?"

"ஆமாம், அம்மா!"

"சம்பாபாய் யார் தெரியுமா?"

"சம்பாபாயா? யார் அவர்?"

"லக்னோவிலுள்ள புகழ் பெற்ற பெரிய வேசை, கணிகை. துரை லக்னோ போகும் போதெல்லாம் அவளோடு தங்குவார்; ஆயிரக் கணக்கில் ரூபாய் செலவழிப்பார் அவளுக்காக. என்னை மறந்தே விட்டார். எனக்கு இந்த உலகில் யாரும் ஆதரவு கிடையாது.

வயதான தந்தை இருந்தார். காலமாகிவிட்டார். அண்ணனுக்கு வேலைத் தொந்தரவு. வீட்டில் அண்ணி ஏசாத நாளில்லை; இடித்துரைப்பதும், இளக்காரப் படுத்துவதும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது" சுஜாதாவின் கண்கள் கலங்கின. "எனக்கொரு மகள் இருக்கிறாள். பத்து வயது ஆனது, துரை அவளை லண்டனுக்கு தன் தங்கையிடம் அனுப்பி விட்டார். லண்டனிலிருந்து திரும்பி வந்தபோது, அவளுக்கு என்னை அடையாளமே தெரியவில்லை. மேலும் அவளுக்கு என்னைத் தன் தாய் என்று சொல்லிக் கொள்ளவே வெட்கமாக இருக்கிறது. நான் சுதேசி; கறுப்புப் பெண் இல்லையா?"

கௌதம நீலாம்பரனுக்கு என்ன ஆறுதல் கூறுவதென்றே தெரியவில்லை. சிரில் துரைக்கு ஒரு மகள் இருப்பதே அவனுக்குத் தெரியாது. "உங்கள் மகளின் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"மார்கரெட் அஜாவில், நான் அவளைப் 'பேலா' என்றுதான் கூப்பிடுவேன்."

"நீங்கள் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்துவிட்டீர்களா?"

"இல்லை. ஆனால் மார்கரெட் கிறிஸ்துவக்காரி, என் மதத்தைத் தாழ்வாக நினைக்கிறாள். போகட்டும்! நீ சம்பாபாயைப் பார்த்து, நான் சொன்னாதாகச் சொல்: 'சிரில் துரையிடம் உள்ள மோகத்தை விட்டுவிடலாம்.' நீ லக்னோவிலிருந்து திரும்பியதும் என்னைச் சந்திக்க முடியுமா? சம்பா என்ன பதில் சொன்னாள் என்பதை எனக்குத் தெரிவிப்பாயா?"

"நிச்சயம் வந்து தெரிவிக்கிறேன், அம்மணி!"

சுஜாதா விடை பெற்றாள். அவளைத் தெருவரைக்கும் கொண்டு வந்து விட்டான்.

"உங்கள் பல்லக்கு எங்கே?" என்று கேட்டான்.

"நான் நடந்து தான் வந்தேன். என்னைப்பற்றிக் கவலைப்படாதே; நான் போய்க்கொள்ளுகிறேன்.';'

தெருவில் இருளில் மறைகிறவரைக்கும் அவளுடைய வெண்ணிற ஆடை புலப்பட்டது. திருப்பத்தில் அவள் உருவம் மறைந்த பிறகு, அவன் திரும்பினான்.

# 15

லக்னோவில் ரூமி திட்டி வாசலில், காலையில் முரசம் கொட்டுவது வழக்கம். நாற்சந்தி அங்காடியிலும் சந்தடி தொடங்கிவிட்டது. செல்வந்தர்- ஜாகீர்தார்களின் மாளிகை-தோட்டங்கள் துப்புரவாக்கப் பட்டன. அலிகளான பெண்டுகள் சிரித்துப் பேசிக்கொண்டிருந்

தார்கள். தெருவோரங்களில் மதுபானக் கடைகளும், தாம்பூலக் கடைகளும் திறந்து ஒழுங்குபடுத்தப்பட்டன. திடலில் ராணுவ வீரர்கள் அணிவகுப்புப் பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். பல இனங்களையும் இடங்களையும் சார்ந்த போர்வீரர்கள் பாதுஷாவின் அரண்மனைக் காவலில் நிறுத்தப்பட்டிருந்தார்கள். ரமனா காடுகளில் புள்ளினங்கள் ஒலித்தன. கோமதி நதிக்கரையில் படகுகள் கட்டப் பட்டிருந்தன. இன்னும் அங்காடிக்காரர்களும் மற்றவரும் செல்ல, பாய்மரத்தோணிகள் புறப்பட நேரமாகவில்லை. ஹயாத் பக்ஷ், டேடி கோட்டி, ஸிங்காடேவாலீ கோட்டி, குர்ஷித் மன்ஸில்—எல்லா மாளிகைகளிலும் மேகங்கள் கவிந்திருந்தன. தோட்டங்களில் தூறல் தொடங்கியது. புதர்கள் காற்றில் ஆடி அசைந்தன. லக்னோ ஆவணி விழாவைக் கொண்டாட ஆயத்தமாகியது.

நண்பகலுக்கான முழவம் முழங்கியது. சத்திரத்துக்காரர்கள் வேலை மும்முரத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அலுவலங்களிலிருந்து மதிய உணவுக்கு வெளியே வந்தார்கள் பணியாட்கள். திவான்கானா மேடையில் விரிப்புகள் விரிக்கப்பட்டன. பேகம்மார்கள் விளாமிச்சை வேர்த் தட்டிகளுக்குப் பின்னால் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந் தார்கள். அந்தப்புரத் தாதிகள் வெற்றிலை மடித்து வைக்க அமர்ந் தார்கள். பெண்கள் ஆடைகளுக்குச் சாயம் தடவத் தொடங் கினார்கள். அடுக்களையில் சமையல் தொடங்கியாகிவிட்டது.

பகல் மூன்றாம் சாமத்து முரசு முழங்கியது. ரமனாக்காட்டில் மான்கள் துள்ளித் திரிந்தன. சிரையா ஏரியில் முகில்கள் கவிந்தன. மோதி மஹாலில் இளந்தூறல் விழுந்தது.

பிறகு நான்காம் சாமப்பொழுது தொடங்கியது. கதிரவன் மறையப் போகிறான். காற்றில் நறுமணம் கமழ்ந்தது. அவத் பாதுஷாவின் உல்லாச இரவு ஆடம்பரமாக அமையத் தொடங்கி விட்டது. நகர் முழுவதுமே அலங்கரிப்பும் கவர்ச்சியும் நறுமணமுமாகப் புத்தழகு பெற்றது. நீர் தெளித்த தெருக்களின் அடங்கிய புழுதி எழுப்பிய மண் வாடை, வாசனைப் பொருள்களின் கடைகளிலிருந்து கமழும் இரக்க மூட்டும் நறுமணம், கான்னோஜ் மல்லிகைக் குவியல், ஜௌன்பூர் ரோஜா மலர்க்குப்பல் தந்த சுகங்கள்; கோவில்களிலிருந்து கமழும் தூபப்புகை கலந்த வாசனை, பாதுஷாவின் மாளிகையில் பெருகும் அத்தர் பரப்பிய மணம்— சந்து-சாலைகளிலுள்ள வீடுகளின் ஜன்னல்களும் கதவுகளும் திறக்கப்பட்டுவிட்டன. தெரு-வீதிகளிலிருந் தெல்லாம் இசையொலிகள் வெளிப்படலாயின. அழகிய காரிகைகள், நாட்டிய நங்கைகள், பாடகிகள், கூத்துக்காரிகள் யாவரும் ஸாவன், லாவணிரி ராகங்களில் பருவப்பாடல்களைப் பாடிக்கொண்டு திரிந் தார்கள். வாலிபர்கள் கவிதை-பாடல்களை இயற்றி இசைத்துக் கொண்டிருந்தார்கள். கோலியாட்டத்திலும் மனமகிழ்வு கண்டார்கள்.

நதிக்கரையில் அமர்ந்திருந்த யோகிகள் சுரைக்காய்-தந்திவாத்தியத்தை மீட்டிக்கொண்டிருந்தார்கள். பட்சணக் கடைக்காரர்கள் பூரி-பலகாரம் சுட்டுக் குவித்துக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவரும் வேலையில் முனைந்திருந்தார்.

மனிதர்களே! மகிழ்ச்சியாக இருங்கள்! இந்த உலகம் அழிவானது. எத்தனை நாளுக்கு இந்த உலக வாழ்வோ? இன்று நாலு பேருடன் வாழ்வது அருள்வரம் என்று நினையுங்கள். நாளைக்கு என்ன நடக்குமோ? இரவு-பகலாய் மூச்சுக்காற்று இயங்குகிறது. ஆண்டவன் எங்கோ தொலைவில் இருந்துகொண்டு இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவன் எந்தச் சமயத்திலும் விரலை அசைத்து, "போதும், நிறுத்திக்கொள்!" என்று சொல்லி விடலாம்.

ஏ வலுவற்ற மனிதர்களே! நீங்கள் புலன்களுக்குப் புலப்படாத சிலந்தி வலையில் சிக்கியிருக்கிறீர்கள். சிலந்தியை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை. அப்பாவி மக்கள்... இதோ தெருக்களில் நடமாடு கிறார்களே. இவர்கள் வாழும் வகையறிந்தவர்கள். இவர்கள் பிரதானிகள், பிரமுகர்கள். ஏனென்றால் இவர்கள் ஒரு பெரிய பண் பாட்டின்- கலாச்சாரத்தின் முக்கியப் பிரதிநிதிகள். பதினெட்டாம் நூற்றாண்டில் பிரான்ஸ் எட்டிய நிலையைப்போல், இவர்கள் வாழ்க் கைக் கலையை உச்சநிலைக்குக் கொண்டு வந்து சேர்த்தவர்கள். இந்தப் பெயர்கள் இந்த உருவங்கள் தனிச்சிறப்புள்ளவை. சுஜாவுத் தௌலா, பஹூ பேகம், பேனீ பஹதூர், டிகைன்ராய். இந்த அவத் பிராந்தியவாசிகள்-யாவருமே எக்காலத்திலும் துன்பப்படுபவரு மில்லை, பிறரைத் துன்புறுத்துபவருமில்லை. இவர்கள் தொன்று தொட்டு காகரா, கோமதி நதிகளின் கரையோர ஊர்களில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து வருபவர்கள். ராமபிரான் ஆண்டு வந்த காலத்தில் இதே மக்கள் இருந்தார்கள்; சுஜாவுத் தௌலாவின் ஆட்சிக் காலத்திலும் இவர்களே பிரஜைகள். இதே குடியானவர்கள், இதே துறவிகள், யோகிகள். நதிக்கரையில் ஒரு யோகி கணப்புத்தீயில் குளிர்காய்ந்து கொண்டிருந்தார். இந்த யோகி ஒரு முன்னாள் போர்வீரர். தன் சகாக்களுடன் இவர் சுஜாவுத் தௌலாவின் படையில் சேர்ந்து பக்ஸர் போர்க்களத்தில் வெள்ளைக்காரர்களை எதிர்த்துப் போரிட்டிருக்கிறார். அமைதியை விரும்பும் இந்தக் குடியானவப் பெருமக்கள் தாயகத்தைக் காக்க நவாபின் படையில் சேர்ந்து, மராட்டியரை எதிர்த்துப் போரிட்டார்கள். எப்போதும் மகிழ்வுடன் திகழும் இந்த ஆயர்களும் இடையர்களும் அஜீமாபாத் வரைக்கும் சென்று வெள்ளைக்காரர்களுடன் பொருதியவர்கள்.

ஆங்கிலேயர்கள் சுஜாவுத் தௌலாவின் வலிமைமிக்க படை யிடம் பயந்து, சமாதானம் செய்து கொண்டார்கள். அதன்படி முப்பத்தையாயிரம் வீரர்களுக்கு அதிகமாகத் தம் படையில் வைத்துக்

கொள்வதில்லை என்று உறுதியளித்தார்கள். ஆனால் எப்போதும் போலவே தம் உறுதி மொழியைப் புறக்கணித்தார்கள். பைஜாபாத் நவாப் சுஜாவுத் தௌலா இறந்த காலத்தில், அவனுக்கிருந்த ஆறாத வேதனை, வெள்ளைக் காரர்களை இந்த நாட்டிலிருந்து விரட்டியடிக்க முடியவில்லையே என்பதுதான். சுஜாவுத் தௌலா மஹாதாஜி ஸிந்தியாவோடு தலைப்பாகை மாற்றிக்கொண்டு 'சகோதரன்' உறவு பெற்றவன். இவையெல்லாம் அல்ப ஆயுளுள்ள கதைகள்; தொடங் கியதுமே மறைந்தவை. காரணம், இவர்கள் கதை சொல்லி, கதைகேட்டு, தாமே கதையாகி விட்டார்கள்.

லக்னோ தேவகன்னியரின் தனியுலகம் போல் பொலிந்தது. சந்துகள், தெருக்கள், வீதிகள், சாலைகள் யாவும் கலகலப்பாக இருந்தன. பூங்காக்களும், சுனைகளும், பொய்கைகளும் தனிக்கவர்ச்சி யுடன் பொலிந்தன. இந்தக்கோட்டை, மயாலிகானின் சத்திரம், ஆஸி புத் தௌலாவின் நண்பர் ராஜா ஜாவூலாலின் பாலம்-எல்லாம் அறிமுக மானவையே.

கொஞ்சம் பொறுங்கள்! ஆஸிபுத் தௌலா! இந்துக்களும் மதிப்போடு போற்றினார்கள் இவரை. இன்றும் இந்துக் கடைக்காரர்கள் இவர் பெயரை மங்கல நல்வாழ்த்தாக உச்சரித்து விட்டு, கடையைத் திறக்கிறார்கள்!

இந்த நகரம் லக்னோ இசைக்கலையில் அயோத்தியும் வாரணாசியும் பிரபலமாவதற்கு ஆயிரம் ஆண்டுகள் முன்பே பிரபலமானது; இசையை வளர்த்தது. இங்கு உருவான ராகம் பைரவி பாரதமெங்கும் பரவிப்புகழ் பெற்றது. விரஜ மண்டலத்து ராஸதாரி கலைஞர்கள் கண்ணன் கோபியருடன் ஆன்மீக லீலை புரிந்த ராஸக்கிரீடையை அபிநயித்துக் காட்டுவது இங்கேதான். அந்தண நர்த்தகர்கள் கால் சதங்கை அணிந்து நிருத்தம் செய்கிறார்கள். சுற்றுப்புறமெங்கும் மரணத்தின் சிலம்பொலி கேட்கிறது. கடந்த எண்பது ஆண்டுகாலமாக இந்த நாடகம் பைஜாபாதிலும் லக்னோ விலும் அரங்க மேடைகளில் நடிக்கப்பட்டு வருகிறது. இதில் நடிக்கும் பாத்திரங்களின் பெருமையை வெளியார் அறியார். இந்த நடிகர் யாவரும் கூடி இந்த உலகைப் படைத்திருக்கிறார்கள்-அவத் பிரதேச மக்களின் தனி உலகம்! இதில் ஏழை-செல்வந்தர், ஆண்-பெண் யாவரும் அழுகிறார்கள்; சிரிக்கிறார்கள்; பாடுகிறார்கள்; இசைக்கிறார்கள; சண்டையிடுகிறார்கள். இவர்களில் சிலர் டாகுர் இமாம் பக்ஷ், லாலா ஹுஸேன், மிர்ஜா மேண்டு, நவாப் கம்மன் (ஆண்கள்) இமாமான் மஹரி, மிர்ஜா ஜங்கலீ, சுகபசன் லௌண்டீ, நவாப் பஸந்தீ பேகம். இவர்களுக்குத் துணிச்சல் ஆடை அணி மாதிரி; தன்மானம், உயிர்த்தியாகம் பண்புகள். நன்றியறிவு, கண்ணியம், நேர்மை இயல்புகள். கூடவே, ஜமீந்தார் வர்க்கத்திற்குள்ள எல்லாப்

புன்மைகளும் இவர்களிடம் இடம் பெற்றிருந்தன. இதனாலேயே இவர்கள் உணர்ச்சி வசப்பட்டவர்கள். சிறு காணிக்கைக்கும் நடனமாடும் கதக் கூத்தர்; காஷ்மீரத்துப் பாடகர்; ஜலதரங்கக்காரர்கள்; குழலூதுபவர், பிராமணர், வாஜபேயர்(வேள்வி செய்பவர்), தபேலாக் காரர்கள், கவிஞர், சோக கீதமிசைக்கும் இஸ்லாமியப் பாடகர், கதை கூறுவோர், காயஸ்தர்(கணக்கர்), போர் வீரர், தனி வீரர், சாராயக்கடைக்காரர், பக்தர்கள், நகல் புரிவோர், பல்வேடதாரிகள், புலவர், கலைஞர்... இங்கே வீரமும் சிருங்காரமும் இணைந்து பெருகிப் பரவும். இது உல்லாச வாழ்க்கைக்காரர்களின் சமூகம்.

லக்னோவிலிருந்து எழுபது மைல் தொலைவில் வங்கத்தைச் சேர்ந்த பைஜாபாத்—ராமன் ஆண்ட அயோத்தி. இதை சுஜாவுத் தௌலா தில்லி மாநகருக்கு இணையாக உருவாக்கினான். இங்கு ரோஜாத் தோட்டம். நதித் துறைகள், பெரிய பிரபல மசூதிகள். தில்லியில் இப்போது அற்ப சொற்பமான மொகலாயர்கள் அமர்ந் திருக்கிறார்கள். இந்த ஏளனத்திற்குரியவர்கள் ஓடித்திரிகிறார்கள்; ஒளிந்து கொள்ள இடம் இல்லாமல் தவிக்கிறார்கள்.

இங்கு லக்னோ—அவத் பகுதியில் இந்து—முஸல்மான்களிடம் எவ்வித மத வேற்றுமையையும் காண முடியாது. ஏனென்றால், கோட்டைக்குரிய டாகுர், மகல் உள்ள நவாபு—இருவருமே ஜாகீர் தார்கள். ஒருவரை மற்றவர் சார்ந்திருக்கவேண்டியவர். இவர்களுக்குட் பட்ட மக்களில் இரு இனத்தவரும் இருந்தார்கள். இவர்களுடைய காவல் படையினரிடம் இரு இனத்தவருமே தடியடி பெறுவார்கள். தார்மீகப் பிரிவை—இன மாறுபாட்டை மக்களின் சுத்தமான சொந்த விவகாரம் என்றே எண்ணிக் கொண்டிருந்தார்கள். முஹர்ரம் பண்டிகை ஊர்வலத்தில் கலவரம் ஏற்படுவதில்லை. மசூதிகளுக்கு எதிரே மேளதாள வாத்தியங்கள் இசைக்கப்படுவதில்லை. இந்துக்கள் முஸ்லிம்களைப் போலவே முஹர்ரம் பண்டிகையில் வேண்டுதல் செய்து கொள்ளுகிறார்கள். எப்படிப்பட்ட விசித்திரமான காலம்! நவாபின் பேகம்—பெண்டுகள் யாவரும் ஹோலிப்பண்டிகை கொண்டாட பைஜாபாதிலிருந்து மகல் இருக்கிற நகர் லக்னோவுக்கு வருகிறார்கள். ராஜ்யம் முழுவதிலும் இந்து மன்னர்கள் நிறைய மசூதி கட்டிக் கொடுத்திருக்கிறார்கள்.

சிரில் ஐஷ்லேயின் நண்பர் பிஷப் ஹைபரும் அவருடைய நண்பர்களும் இப்போது நாட்டின் பல பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்து, பிரயாண நூல் எழுதி வருகிறவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்: "இந்த நாட்டில் இந்துக்களும்-முஸல்மான்களும், ஒருசாரார் மறுசாராரைக் கொல்லவே விரும்புகிறார்கள். இந்த நிலைமையில் வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள நம் சர்க்கார் செய்யவேண்டியதெல்லாம், இந்தக் காட்டுமிராண்டி மக்களை வழிக்குக் கொண்டுவர, வெகு

சீக்கிரம் மிக அதிகமான பைபிள்களையும் துப்பாக்கிகளையும் இங்கே அனுப்பி வைக்க வேண்டும்."

லக்னோவாசிகளுக்கு இந்த உண்மை தெரியாது. போர்க்கருவிகள் நிரம்பிய கப்பல்கள் கல்கத்தா பக்கம் வந்து கொண்டிருக்கின்றன என்பதை அறியாமலே அப்பாவி மக்கள் இயங்கிவருகிறார்கள். ஆகா மீர் ஷாஹேஜமன் அவர்களின் முதலமைச்சர். நகரில் அமைதி நிலவு கிறது. இந்த நகரம்—அபுல் முஜப்பர் மொய்ஜுத்தீன் புகழ்பெற்ற ஷாஹேஜமன் காஜித்யுதீன் ஹைதரின் தலைநகர். கடைவீதிகளில் கூட்டம் நெரிகிறது. அங்காடிக்காரர்கள் தம்தம் பொருள்களைக் கலையழகு பொலியக்கூவி அறிமுகப்படுத்துகிறார்கள். உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் இந்த அங்காடிகளில் வந்து விற்பனையாகின்றன. ஸதாயத் அலிகான் காலத்தில் நிர்மாணித்த மாளிகைகளில் கோலா கல மகிழ்ச்சியொலிகள் எழுப்பிக் கொண்டிருக்கின்றன. இவ்வளவு எழிலும் மேன்மையும் சொகுசும் எதுவரைக்கும் நிலைக்குமோ?

எழில் கவர்ச்சி அழியக்கூடியது, நிலையற்றது. சாக்கிய முனிவர் கௌதம புத்தர் ஒருமுறை வாரணாசிக்கு அருகில் மருகதாவம் பூங்காவில் உபதேசித்தார்:

"எல்லாமே அழியக்கூடியவை. அழிவிலிருந்து தப்பித்துக்கொள்! துன்பத்திலிருந்து தப்பித்துக்கொள்! நிழலிலிருந்து தப்பித்துக்கொள்!"

ராமபிரான் ஆண்ட அயோத்தி மாநகர், பிரஸேனஜித் கோலோச்சிய சிராவஸ்தி, சந்திரகுப்தனின் பாடலிபுத்திரம், ஹுஸைன் ஷர்க்கியின் ஜௌன்புர், அலாவுதீன் ஹுஸைனின் கௌடபிரதேசம்— இங்கெல்லாம் அழகுநிலை தன் இறுதி எல்லை வரை வளர்ந்திருந்தது. இருந்தும் அவை அழிந்துபட்டன. ஒவ்வொரு அழகிலும் அழிவு மறைந்திருக்கிறது—இதை மறந்துவிடக்கூடாது!

வீதியில் சிங்காரப் பல்லக்கு விரைந்தது. பணிப்பெண் பல்லக்கின் கைப்பிடியைப் பற்றியவாறு அதனுடன் ஓடுகிறாள். பல்லக்குச் சுமப்பவர்கள் சிவப்பு வண்ண ஆடைகள் அணிந்திருக்கிறார்கள். தலைப் பாகையில் பொன்னிறத்தில் மீன் உருவங்கள் ஜரிகை வேலைப்பாடு செய்யப்பட்டிருக்கிறது. வழிப்போக்கர்கள் குதூகலத் துடன் சிங்காரப் பல்லக்கைப் பார்க்கிறார்கள். இந்தக் காலத்திலேயே மிக்க புகழ்பெற்ற கணிகை சம்பாவின் பல்லக்குதான் இது. காலம் மிக விசித்திரமானது! காலம் அழகு—அழிவு இரண்டையும் ஆள்கிறது.

பூங்காக்களிலும், உபவனங்களிலும் விழாக்கள் நடைபெறு கின்றன. ஆங்கிலேய ரெஸிடெண்ட் துரை பாதுஷாவுடன் கூட அமர்ந்து காலைச்சிற்றுண்டி அருந்துகிறார். எதிரே யானைகள் பொருதும் சண்டைக்காட்சி தெரிகிறது. தர்பாரில் பிரபல நர்த்தகர் பிரகாஷ்ஜி கத்தக் நடனமாடிக் கொண்டிருக்கிறார். மாந்தோட்டத் திலிருந்து 'மலார்' ராகம் ஒலிக்கிறது. மயான கட்டங்களில் இந்தக்

கோலாகல வாழ்விலிருந்து விடுபட்டவர் எரிக்கப்படுகிறார்கள். கால்நடைச் சந்தைப் பேட்டையில் கதை கூறுவோர் தம் தம் ரசிகர் குழாங்களை மகிழ்விப்பதில் முனைந்திருக்கிறார்கள். வித்வான்களும் பண்டிதர்களும் கூடி சாஸ்திர சர்ச்சைகள் செய்து கொண்டிருக் கிறார்கள். கஞ்சா—அபினி என்று போதை கொள்பவர் இறங்கிக் கொண்டிருக்கிறார்கள். சுரஸிங்கார், மஞ்ஜீரா, பகாவஜ் முதலிய வாத்தியங்களின் ஓசையில் வேறு சப்தமே கேட்கவில்லை. இடுகாடு களில் சவ அடக்கத்திற்காகக் குழிகள் தோண்டப்படுகின்றன.

நிலையற்றவை! எல்லாம் அழிபவை!

காலமே அழிவில்தான் அமர்ந்திருக்கிறது.

காலத்தைப் பல பகுதிகளாக்கியிருக்கிறார்கள். இருந்தாலும் ஒவ்வொரு கணமும், பொழுதும் பல பகுதிகளும் இணைந்திருக்கும் இறுக்கத்தைத் தகர்த்துக்கொண்டு முன்னேறும் காலத்திற்கு உதவுகின்றன.

ரூமீ தர்வாஜா தலைவாயிலிருந்து அந்திப்பொழுதுக்கான, நகாடா முரசு முழங்கப்போகிறது. பகல்பொழுதின் நான்கு ஜாமங் களும் கடந்து விட்டன. இரவு நாலு ஜாமங்களும் கரையப்போகின்றன. ஒவ்வொரு பெரும்பொழுது ஜாமத்திற்கும் எட்டுமணி நேரம். ஒவ்வொரு எட்டு மணிக்கும் பொழுது அறிவிக்கும் முரசு முழங்கு கிறது. மனிதப்பிறவியின் வரிசை தம்தம் சவக்குழியில் இறங்கப் போகிறது. காலம் மரணத்தின் மறுபெயர்!

# 16

ஆஸிஃப் ஆட்சிக்காலத்தில் அமைந்த தலைவாசல் ரூமீ தர்வாஜாவில் முழக்கும் கால பிரமாண முரசத்தின் ஒலி கௌதம நீலாம்பரனுக்குக் கேட்டது. சாலைத் தொடக்கத்தில் நிற்கும் எல்லைக் காவலர்களிடம் அவன் நுழைவுக்கான அனுமதிப் பத்திரத்தைக் காட்டினான். அவத் பாதுஷாவின் காவலர்களில் ஒருவன் கேட்டான்: “எங்கே போக வேண்டும், இப்லாவுக்கா?”

“ரெஜிடென்ஸிக்கு”

காவலன் கௌதம நீலாம்பரனை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தான். “பரங்கித் தொரைமாரோடு அய்யாவுக்குத் தொடர்போ?”

“ஆமாம்,” சற்று வெட்கத்துடன் சொன்னான்.

மற்றொரு காவலன் சொன்னான்: “ஆமப்பா! ஆண்டவன் ஏதாவதொரு வகையில் ஒவ்வொருவரையும் வாழ வைக்கிறான்.

அதிலே வெள்ளைக்கார ராஜாங்க சேவகமும் ஒரு வகை; சரி விடு!"

இந்தத் தருணத்திற்கு ஏற்ற உருதுக்கவிதை ஒன்றை முதல் காவலாளி பாடிக்காட்டினான். கௌதம நீலாம்பரன் பாராட்டு வானென்றும் எதிர்பார்த்தான். கௌதமன் சிறு வயதில் பார்ஸி ஓரளவு படித்திருக்கிறான். ஆனால் இந்தக் காவலர்களுடைய படு சுத்தமான உருது கௌதமனுக்குப் புரியவில்லை. இன்னும் இந்தியப் பகுதியில் சுதேசி மன்னரின் ஆட்சி நடப்பதைக்கண்டு வியப்பாக இருந்தது. அவனுடைய குதிரை வண்டி புறப்பட்டது.

புற நகர்கள் எதிர்ப்பட்டன. சாலையோரத்தில் ஆயர்கள் மாடுகளின் சுட்டிகளையும் சுழிகளையும் தரம் பார்த்துக் கொண்டிருந் தார்கள். அரசமரத்தடியில் சுள்ளிகளைப்போட்டு எரி மூட்டியிருந் தார்கள். கிழ யோகி அதனெதிரே குளிர் காய்ந்தார். பின்னால் பவானி தேவியின் மடம். காளிதேவியின் சந்நிதியை வெளியூரில் பார்த்ததில் கௌதமனுக்கு மிக்க ஆறுதலாக-தெம்பாக இருந்தது.

ரெஜிடென்ஸி போய்ச் சேர்ந்ததும், கௌதமனுக்கு ரெஜிடெண்ட் துரை, நவாப் கமால்ரஜா பஹதூர் அவர்களுடன் விருந்துக் கேளிக்கையில் பங்கு கொள்ளச் சென்றிருப்பது தெரிந்தது. தான் வந்திருக்கும் தகவலை அவத் பாதுஷாவின் செய்தித்துறை அதிகாரிக்கும் கோலாகஞ்சிலுள்ள நவாப் கமால் ரஜா பஹதூர் மாளிகைக்கும் கௌதமன் அனுப்பி வைத்தான்.

நவாப் அப்துல் மன்சூர் கமாலுத்தீன் அலி ரஜா பஹதூர் நுஸரத் கஞ்ஜ் (இருபத்து நான்கு வயதான நவாபின் முழுப்பெயர்) விருந்து உண்டபின், ரெஜிடெண்ட் துரையுடன் அமர்ந்து சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார். மிகச் செல்வாக்குள்ள செல்வந்தரின் பிள்ளை. முர்ஷீதாபாத், லக்னோ ஷாஹீ(அரச) குடும் பத்தாருடன் சம்பந்தம் கொண்ட இடம். பெரிய நிலப்பரப்பு கல்யாண்புரிலும் ஸந்தீலாவிலும் நவாபுக்குச் சொந்தம். மிக அழகிய வாலிபன்; குரலும் இனிதாக இருந்தது. நகரத்து விலைமாதர் கணிகையர் நவாப் கமாலிடம் மோகித்திருந்தார்கள். பதினாறு வயதிலேயே மணமாகி விட்டது. பிறகு தொடர்ந்து எண்ணற்ற இளம் அழகிய பணிப்பெண்களுடன் 'முத்தய'(தற்காலிக விவாகம்) ஆகியிருக்கிறது. சிறிது காலமாக பிரபல பேரழகி சம்பா கணிகையிடம் மோகம் கொண்டிருக்கிறார். ஆனால் இப்போதுதான் புரிகிறது, கல்கத்தாவிலுள்ள சிரில் துரையைப் போல் இந்தப் பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதி ரெஸிடெண்ட் துரையும் போட்டிக் காதலனாக முளைத்திருக்கிறான். இந்தச் சிந்தனையோடு சொக்கட்டான் ஆட்டத்தையும் சிந்தித்து ஆடிக் கொண்டிருந்தார். இந்தத் தருணத்தில் கௌதம நீலம்பரன் அனுப்பிய தகவல் வந்து சேர்ந்தது.

மகிழ்ச்சி தடைப்பட்டது. சிறிது நேரத்தில் சம்பா வரப்போகிறாள்.

ஆட்டபாட்டம், மதுபானமெல்லாம் உல்லாசக் கேளிக்கைக்கு ஊக்க மளிக்கும். இதற்குள் இப்படியொரு சோதனையா? துரைக்கு எரிச்சலாக இருந்தது. லார்ட் எம் ஹர்ஸ்ட் கல்கத்தாவுக்குக் கவர்னர் ஜெனரலாக வந்தது முதல், ஒழுங்கு முறை, சுறுசுறுப்பு, கட்டுப்பாடு களில் மிகக் கண்டிப்பாக இருக்கிறார். மற்றவர்களுக்கு எவ்வளவு உபத்திரவம்! வாரத்திற்கு மூன்று-நான்கு நாட்கள் உத்தரவு-தாக்கீது, விவரம், யோசனை என்று ஆட்களை அனுப்பிக்கொண்டே இருக் கிறார். உள்ளம் சம்பா தேவியின் சிங்கார நடனத்திற்கே ஏங்கிக் கொண்டிருந்தது. ஆனால் கடமை உணர்வு அந்தக் கவர்ச்சியைப் பலவீனப்படுத்தி விட்டது. ரெஜிடெண்ட் துரை உடனே பெலிகார்ட் பகுதிக்கு வந்து சேர்ந்தான்.

"இங்கே சம்பாபாய் எங்கே இருக்கிறாள்?" இரண்டாம் நாள் கௌதம நீலாம்பரன் ரெஜிடென்ஸி அலுவலகத்திலுள்ள ஒரு குமாஸ்தாவைக் கேட்டான். குமாஸ்தா ஹரிசங்கர் முறுவலித்தார். 'இந்த வங்காளி வாலிபர் குஷால் பேர்வழி போலிருக்கிறது. கணக்கு, பேப்பர், ஃபைல் கட்டு என்று முடங்கிக் கிடப்பார் என்றல்லவா நினைத்தோம்...'

"சம்பாபாய் மாளிகைக்குப் போகப்போகிறீர்களா?" குமாஸ்தா வியந்து வினவினார்.

"ஆமாம்." நீலாம்பரன் பயபிராந்தியுடன் பதில் சொன்னான். முகம் வாடியது; நாணிச்சிவந்தது. குமாஸ்தாவுக்கு இந்தத் திகில் வியப்பளித்தது. குமாஸ்தா ஹரிசங்கர் வாழும் சமூகத்தில் விலை மகள்களின் அந்தஸ்து உயர்ந்தது. அவர்கள் இல்லாமல் உயர்தர சமூகம் நிறைவற்றது, மூளியானது. ஹரிசங்கர் அலுவலகச் சேவகன் மூலமாகச் சம்பாபாயிக்குத் தகவல் அனுப்பி வைத்தார். "அவசியம் வர வேண்டும்; காத்திருக்கிறேன்" என்று சம்பா பதில் அனுப்பினாள்.

மாலைப்பொழுது வந்தது. சூழ்நிலையே நறுமணம் கமழ்ந்து மகிழ்வித்தது. தெருவெல்லாம் தாழம்பூக்களும் ரோஜா மலர்களும் தூவப்பட்டிருந்தன. நாற்சந்திகள் விளக்கொளிகளில் ஒளிர்ந்தன. அப்போதுதான் கௌதம நீலாம்பரன் 'ஹவாதார்' வண்டியில் அமர்ந்து சம்பாவின் பச்சை வண்ண மாளிகைக்கு வந்து சேர்ந்தான். வெளிவாயிலில் தனி அங்கி அணிந்த காவலாளிகள் 'பாரா' நின்றார்கள். கௌதமன் தயங்கியவாறே வண்டியிலிருந்து இறங்கி, படிகளைக் கடந்து முன் கூடத்திற்குள் நுழைந்தான். சால்வையை இழுத்துச் சரி செய்து கொண்டான்.

கூடத்தில் பலர் காத்திருந்தார்கள். தரையில் நிலவு போன்ற வண்ணப்பூச்சு; வெண்ணிற சர விளக்குகள் மேலிருந்து தொங்கின. அழகிய கண்ணாடி விளக்குகள்; எதிர் எதிராக உள்ள அறைகளில் தாமரைக் கொடிகள் படர்ந்திருந்தன. நான்கு பக்கங்களிலும் ஆளுயரத்

திற்கு நிலைக்கண்ணாடிகள். அவற்றில் பல புதிய மனிதர்களின் உருவங்கள் பிரதிபலித்தன. இத்தகைய சீமான்களை முன்பு அவன் கண்டதில்லை. யார் இவர்கள்? எங்கிருந்து வருகிறார்கள்? எங்கே போவார்கள்? இந்த நறுமணம் கமழும் அறையில் இவர்கள் எத்தனை நேரம் காத்திருப்பார்கள்? விதவிதமான உயர்ந்த ரக ஆடை அணிகளுடன் ஜொலிக்கிறார்கள்!

மிக்க ஒழுங்கு முறையோடு உட்கார்ந்திருந்தார்கள். நாகரிகமாக, அமர்ந்த குரலில் ஒருவருக்கொருவர் அளவளாவிக் கொண்டிருந் தார்கள். ஒரு மூலையில் ராஜா சிவகுமார் கவிஞர் 'வஃபா' வின் உருதுக்கவிதைக்கு விளக்கம் சொல்லிக்கொண்டிருந்தார். மற்றொரு பக்கம் இசை நுணுக்கம் குறித்துக் கருத்துப் பரிமாற்றம் நடந்து கொண்டிருந்தது. நீலாம்பர தத் நிலைப்படியருகில் கூசி நின்று, இந்தக் காட்சியைச் சிறிது நேரம் கண்டான். தன்னிடமிருந்த விலை மிக்க சட்டையொன்றை அணிந்திருந்தான்; தலைப்பாகை இருந்தது. எனினும் அவனுடைய கோலம் வெளியூர்க்காரன் என்பதைப் பறை சாற்றியது. நடுவில் அமர்ந்திருந்த நவாப் கம்மன் நீலாம்பரனைத் தம் பக்கத்தில் உட்கார வைத்து, நலம் விசாரிக்கலானார்.

"கல்கத்தா வரவேண்டுமென்று நமக்கு வெகு நாளாக ஆசை. வழிப்பயணம் மிக ஆபத்தானதாமே?" ஹுக்கா குடித்தவாறு கேட்டார். அவருடைய அழகிய முகத்தில் சரவிளக்கின் ஒளி படர்ந்தும் விலகியும் வேடிக்கை காட்டியது. அவர் ஆர்வத்துடன் வினவினார்: "வங்காளத்து ஜமீன்தார்கள் கொடுத்து வைத்தவர்கள். எவ்வளவு செல்வச் செழிப்பு! பெரிய பெரிய சீமான்கள் வங்காளத்தில் இருக்கிறார்கள். உங்கள் ஜமீன்தாரி எந்தப் பக்கம்?"

"நான் ஜமீன்தார் இல்லை. வேலை பார்க்கிறவன்."

"வேலை பார்க்கிறீரா?"-வெற்றிலைத் தட்டை நீட்டிய நவாப் கம்மன் உற்சாகமிழந்தார். கௌதம நீலாம்பரனுக்குச் சங்கடமாக இருந்தது. கௌரவ உணர்வுடன், "கம்பெனி சர்க்காரில் நல்ல உத்தியோகத்தில் இருக்கிறேன்."

பக்கத்திலிருந்து நவாப் கமால் உற்சாகமாக, "அப்படியா நல்லது தான்!" என்றார்.

"அப்படியானால் ஐயாவுக்கு இங்கிலீஷ் நல்லா தெரிந் திருக்கும்!"—மற்றொருவர்.

"கொஞ்சம் படித்திருக்கிறேன்."

"அப்படீன்னா? கடிதங்களைப் படித்துச் சொல்லுவீரா?"

நீலாம்பரன் சிரித்துக்கொண்டே, "ஆமாம்" என்று கூறி நிம்மதி யடைந்தான். இவர்கள் எளிய சுபாவம் உள்ளவர்கள், நேர்மையான வர்கள். இவர்களைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. தான் வாழ்கிற இந்த உலகத்திலேயே இவர்களும் வாழ்ந்து

வருகிறார்கள்—உலகம் தெரியாமல் வாழ்கிறார்கள் என்பதை நினைத்து அதிசயித்தான்.

இந்தச் சமயத்தில் இன்னிசைக்கான ஏற்பாடு தொடங்கியது. சுருதி கூட்டப்பட்டது. பக்கவாத்தியங்கள் ஒத்திகை பார்த்துக் கொண்டன. மின்னல் பளிச்சிட்டது போல் பரபரப்பு ஏற்பட்டது. பதினெட்டு வயதுப் பேரழகி, சண்பக மலரின் நிறம், வைர நகைகள், ஊதாநிறப் பட்டுப் பைஜாமா, பொன் ஆபரணங்கள், நறுமணம் யாவும் கூடிய வளாய் ஒயிலாக நடந்து வந்து, கூடத்தின் நடுவில் அமர்ந்து கொண்டாள். மிகக் கவர்ச்சிகரமாகக் குனிந்து கௌதம நீலாம்பரனுக்கு வணக்கம் செலுத்தினாள். பிறகு ஸஹானா ராகத்தில் ஆஸிஃபுத் தௌலா பாடிய 'கஜல்' கீதமொன்றை இசைக்கத் தொடங்கினாள்.

புதுமைகளின் தெருக்களிலே எப்போதும்
புதுமையின் விளையாட்டைக் காண்கிறேன்,
பொதுமைத் திறமைமையிது கடவுள் செயல்!

ரசிகர்கள் தன்மயத்துடன் அவளுடைய இனிய குரலில் லயித் திருந்தார்கள். கௌதமன் அவளுடைய ஒப்பற்ற எழிலில் கிறங்கிக் கொண்டிருந்தான்.

கல்கத்தாவைச் சேர்ந்த ஆங்கிலமறிந்த வங்காளி குமாஸ்தா லக்னோவின் மாய மோகக் கவர்ச்சியில் சிக்குண்டான். நாட்கள் கடந்தன. மழைகாரணமாக கல்கத்தா போகும் சாலை அடைபட்டது. ஜன்மாஷ்டமி (கிருஷ்ண ஜயந்தி) உற்சவம் தொடங்கியது. விரஜ பூமியின் ரஸதாரிகள் (குரவைக் கூத்தர்) கிருஷ்ண லீலா நடன நாடகம் நடத்தினார்கள். சம்பா ராதாவாக வேடம் தரித்தாள். கௌதமன் சம்பாவைப் பல இடங்களில் பார்த்தான். ஒரு சமயம், ஹிஸ்மெஜஸ்டி ஷாஹே ஜமன் காஸியுத்தீன் ஹைதரின் தர்பாரில் பார்த்தான்; அங்கு அவள் இனிமையாகப் பாடிக்கொண்டிருந்தாள். பொது விழாக்களிலும், பூங்காக்களிலும் சந்தித்தான். கோமதி நதியில் தோணியில் உல்லாசப் பயணம் செய்யும்போது கண்டான்; எல்லா இடங்களிலும் சம்பா காட்சியளித்தாள். சுஜாதா தேவி சொல்லி அனுப்பிய தகவலைச் சம்பாவிடம் தெரிவிக்க அவன் மறந்தான்.

கௌதம நீலாம்பரன் இராப்பொழுதுகளை உறக்கமின்றிக் கழித்தான். பகல் சந்தடி-சந்திப்புகளில் கழிந்தது.

இரவு சம்பாவின் சாம்ராஜ்யமாக இருந்தது. இதில் கௌதம நீலாம்பரன் குறுக்கிட முடியாது. அவனுடைய வாழ்க்கையிலும் சமூகத்திலும் வேசியை விரும்புவது வெறுக்கத்தக்கது. இருந்தும், அவன் சிந்திக்கலானான்: 'பெண் தேவிக்கு ஒப்பானவள்; லக்ஷ்மி, கௌரி, உமா, தாய், சகோதரி, மனைவி, மகள்-இவர்கள் வேசியாக

மாறவே கூடாது. இது கொடிய அநியாயம். துன்பங்களையும் துயரங் களையும் தாங்கிக் கொள்ளவே பெண் இனம் படைக்கப்பட்டிருப்ப தாகச் சொல்லப்படுகிறதே! இளம் விதவைகள், அநாதைப் பெண்கள், வாய்பேசாத பசுக்களைப்போல் சகலத்தையும் சகித்துக் கொள்ளு கிறார்கள். 'ஸதி'களாக உடன்கட்டை ஏறி மரிக்கிறார்கள். இதில் தான் அவர்களுக்குப் பெருமையாம்! ஆனால் இந்தச் சம்பாவோ? தான் எரிந்து மரிப்பதற்குப் பதில் பிறரைத் தவிக்கவைத்து—எரித்துக் கொல்லுகிறாள்!"

'பெண்களுக்குச் சுதந்திரம் கூடாது.'—மனு விதித்திருக்கிறார். பெண்களுக்கு ஏது சுதந்திரம்? அவர் கூறியது சரிதான். ராமா யணத்தில் ஏழாம் காண்டத்தில் எழுதி வைத்திருக்கிறது. 'ஆபத்து காலத்தில், விவாக காலத்தில், பூஜை-விழாக் காலங்களில் பெண்கள் வெளியே வரலாம், தவறில்லை. பெண்கள் வேதம் படிப்பதால் தீங்கு விளையும் என்று மனு எழுதி வைத்திருக்கிறார்.

ஜாகீர்தார்-ஜமீன்தார்களின் செல்வாக்கு மிகுந்த சமுதாயத்தில் பெண்களுக்குச் சுதந்திரம் அம்பலத்தில் அவிசாரியாக வந்து அமர்ந்த பிறகுதான் கிடைக்கிறது! சம்பாபாய் இத்தகைய நிலையில்தான் வளர்ந்திருக்கிறாள். இதைக் கௌதமன் புரிந்து கொள்ளவில்லை. காரணம், அவன் புதிய மத்திய தர இனத்தில் உதித்து வளர்ந்தவன். வங்காளத்தில் இந்த மத்தியதர சமூகம் புதிதாக உருவாகி வருகிறது. பழைய ஜமீன்தாரி வாழ்க்கை முறைகளை ஒதுக்கிவிட்டு, புதிய வாழ்க்கை நெறிகளுடன் நல்லொழுக்கங்களுக்கு மிக்க மதிப்பு; இவைகளைப் போற்றி வளர்ப்பதே இந்தப் புதிய இனம்தான்.

முன்ஷி ஹரிசங்கருடன் ஒருநாள் ஓடத்தில் ஏறி நதியைக் கடந்து கொண்டிருந்தான். எதிரே ரமனா காட்டில் செம்மறியாட்டுச் சண்டை விழாவாக நடைபெறுகிறது. முன்னால் பொன்னிறமான சிங்காரத்தோணி செல்வதைக் கண்டான். "கம்பெனி சர்க்கார், வாழ்க!" இனிய குரல் உரத்து ஒலிப்பதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சம்பா கலவரமடைந்துவிட்ட கௌதம நீலாம்பரனைப் பார்த்துக் கலகலப்பாகச் சிரித்தாள். லக்னோவாசியாக இருந்தால் இடக்காகப் பதில் சொல்லியிருப்பான். கௌதமன் பேசாதிருந்தான். எதிரே ஆகாமீரின் தோணி வந்து கொண்டிருந்தது. வேறு சில ஓடங்களில் பிரபல செல்வந்தர்கள், அதிகாரிகள், மந்திரி பிரதானிகள், பகட்டுத் துரைகள், புகழ்பெற்ற கணிகையர், புடைசூழ ரமனா காட்டுப்பக்கம் சென்றார்கள். சம்பாவின் தோணி அருகில் வந்தது. சம்பா ஒயிலாகச் சிரித்துக்கொண்டு, "இந்தத் தோணிக்கு வாருங்களேன்." என்று அழைத்தாள். கௌதமன் பதில் சொல்ல வில்லை. "ஏன் இவரையும் சேர்த்துக் கொண்டு மூழ்குவதற்கா?" ஹரிசங்கர் கிண்டலாகக் கேட்டார். தொடர்ந்து வேடிக்கையும்

சிலேடையுமாகப் பேசிக்கொண்டு போனார்கள். துறைக்கு வந்து சேர்ந்தார்கள். ஆட்டுச்சண்டை நிகழும் பாரஹ்தரி பக்கம் செல்லும் போது, கௌதமன் துணிந்து தீர்மானித்தான்: சுஜாதா தேவி ஒப்படைத்த பொறுப்பை நிறைவேற்றி விடுவது, மனப்பளுவை குறைத்துக்கொள்ள உதவும்.

சம்பா கால் சிலம்புகளைச் சரிப்படுத்திக்கொண்டு, படிகளில் ஏறிச்சென்றபோது, கௌதமன் கேட்டான்: "சிரில் துரையை உனக்குத் தெரியுமா ?"

அவள் மௌனமானாள்.

"சம்பாபாய்! நான் கேட்டது காதில் விழவில்லையா ?"

"சரி, தெரியும். அதனாலென்ன ?"

"அவருடைய மனைவி கல்கத்தாவில் இருக்கிறாள்.." கௌதமன் நினைத்தான், இதைக்கேட்டதுமே சம்பாவின் முகம் வாடிவிடும்; வேதனையும் கழிவிரக்கமும் அவளை வருத்தும், என்று. ஆனால் அவள் அலட்சியமாகப் பதில் சொன்னாள்: "அதனாலென்ன ? என்னோடு கூடிக் குலாவுகிறவர்களுக்கெல்லாம் பல மனைவிகள் இருக்கிறார்கள்; அதனாலென்ன ?"

"அவளுக்கு ஒரு பெண் இருக்கிறாள்" மிக முக்கியமான தகவலைச் சொல்கிற கவனத்தோடு பேசினான்.

"எல்லாருக்கும் பெண்கள் இருக்கிறார்கள்; பேரன் பேத்திகள் கூட இருக்கிறார்கள். நீங்கள் சொல்ல விரும்புவது என்ன ? சுற்றி வளைக்க வேண்டாம்."

"நீ சிரில் துரையுடன் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டாம். அவர் விரைவில் இங்கு ரெஜிடென்டாகப் பதவி ஏற்று வரப் போகிறார்."

சம்பா துணுக்குற்றாள். ஒரு கணம் கௌதமனை உற்று நோக்கினாள். "நீங்கள் விசித்திரமான அசட்டு மனிதர்! ஐயா! உங்களுக்கு இந்த எளியவளிடம் மோகம் பிறந்திருக்கிறது என்று சொல்லுங்கள்."

நீலாம்பரனுக்குத் தலை சுற்றியது. அசட்டுத்தனத்தின் எல்லையை எட்டியாகி விட்டது. பேசாமல் திரும்பிப் போய் விடலாமா என்று நினைத்தான். ஆட்டுச் சண்டை தொடங்க இருந்தது. நிரம்பக் கூட்டம். அவத் பாதுஷா அவர்களும், தர்பாரிகளும் தம் தம் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். ரெஜிடெண்ட் துரையும் வீற்றிருந்தார். கௌதமன் ஓர் ஓரத்தில் நின்றுகொண்டான். வேடிக்கை முடிந்தது.

திரும்பும்போது நவாப் கம்மன், ரெஜிடெண்ட் துரை இரு வருக்கும் பின்னால் கௌதம நீலாம்பரன் வந்தான். துறையில் அவரவர் தோணிகளில் ஏறிக்கொண்டார்கள். சம்பா தன் தோணியில்

கௌதம நீலாம்பரனை ஏற்றிக்கொண்டாள். வேறு யாரும் இல்லை. சம்பா அவனை உவகையுடன் பார்த்தாள். "இங்கே பாருங்கள்! நான் சிரில் துரையை ஒருமுறை அல்ல, ஆயிரம் தடவை விட்டுவிடத்தயார்! ஆனால் ஒரு நிபந்தனை. நீங்கள் என்னை விட்டுப் போய்விடக்கூடாது. உங்களை எனக்கு நிரம்பவும் பிடித்திருக்கிறது.'' அவன் மௌனியானான்.

சம்பா மெல்ல பேசத்தொடங்கினாள்: "கர்வமுள்ள வாலிபரே! நான் இதுவரைக்கும் எவரிடமும் இப்படி உள்ளத்தைப் பறி கொடுத்ததில்லை. இதற்காக நீங்கள் கர்வப்பட்டுக்கொள்ள வேண்டாம். இந்தப் பருவம் விரைவிலேயே சரிந்துவிடும்." தோணி துறைக்கு வந்தது.

சம்பா கௌதமனை வைத்த விழி வாங்காமல் நோக்கினாள். பிறகு சிரித்துக்கொண்டே, "வடிக்கட்டின மக்கு! சுவையாகப் பேசக் கூடத் தெரியவில்லை; இருந்தும் உங்கள் மேல் எனக்கு மையல் ஏற்பட்டிருக்கிறது! ஆண்டவனின் திருவிளையாடல்தானே இது!" அன்பு கமழச் சொன்னாள். நீலாம்பரன் ஏதும் பேசாமல் தோணி யிலிருந்து இறங்கினான். சம்பா தன் சிங்காரப் பல்லக்கை நோக்கிச் சென்றவாறு, "என் வீட்டுக்கு வருவீர்களில்லையா?" என்று கேட்டாள்.

"இல்லை!" நீலாம்பரன் சுருக்கமாகப் பதில் சொல்லி விட்டுத் தன் பல்லக்கில் அமர்ந்து கொண்டான்.

இதற்குப் பிறகு, கௌதம நீலாம்பரன் மூன்று நாட்கள் வரைக்கும் உறங்கவில்லை. இதற்கிடையில் சம்பாபாயிடம் இருந்து பலமுறை அழைப்புகள் வந்தன. திடுதிப்பென்று இந்த அழாகன பெண் ஏன் இப்படி நாடகமாடுகிறாள்? பெண்களின் போக்கை யார்தான் அறிய முடியும்? பெரிய பெரிய பணக்காரர்களும் வீராதி வீரர்களும் இவள் கண் வீச்சுக்கு ஏங்கி நிற்கும்போது, என்னிடம் என்ன அதிசயக் கவர்ச்சியைக் கண்டுவிட்டாள்? முன்ஷி ஹரிசங்கர் ஃபைல் கட்டுகளிலிருந்து முகத்தைத் தூக்கி, அவனைப் பார்த்தார். பிறகு, "கௌதமா! நீ ஏன் அவள் மாளிகைக்குப் போகவில்லை? அதிலே என்ன தவறு?'' என்று கேட்டார்.

நீலாம்பரன் அவத் வாசியான அந்தப் பழம் பசலிப் பெரிய வரிடம் காரணத்தைத் தெரிவிக்கத் தெரியாமல் வாழாவிருந்தான்.

"ஆண்டவன் பெண்களை நம் மனமகிழ்வுக்கும் உல்லாசப் பொழுதுபோக்குக்குமாகத்தான் படைத்திருக்கிறான்." ஹரிசங்கர் சொன்னதும், கௌதமன் திகைப்புடன் அவரைப் பார்த்தான். பிறகு நிதானமாகச் சொன்னான்: "பெண் புனிதமான படைப்பு, இத்தகைய வளை நீங்கள் உல்லாசப் பொழுதுபோக்குக்கான கருவி என்று கருதுகிறீர்களே!"

ஐப்பசி மாதம் தொடங்கியது. கல்கத்தா போகும் கப்பல்கள்

அலாகாபாதில் காத்திருந்தன. அரசாங்கக் காகிதக் கட்டுகளை எடுத்து வைத்துக்கொண்டு புறப்பட ஆயத்தமானான் கௌதம நீலாம்பரன். நதித்துறைக்குச் செல்லும் போது வண்டிக்காரனிடம், "இந்தப் பாதை எங்கே செல்கிறது?" என்று கேட்டான். கால்நடைச் சந்தைப்பக்கம் போவதை அறிந்து, வண்டியை ஒரு திருப்பத்தில் விடச் சொன்னான். சம்பாவின் மாளிகைக்கெதிரே வண்டியை நிறுத்தச் சொல்லி, இறங்கிப் போனான். கௌதமனைக் கண்டதும் சம்பா முகம் மலர்ந்தாள். "நல்வரவு!" கூறி வரவேற்றாள்.

"நான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்."

"கொஞ்சநேரம் தங்கிவிட்டுப் போங்கள். சர்பத் வரவழைக்கிறேன்." கௌதமனின் தயக்கத்தைக் கண்டு, "பிராமணர் சிற்றுண்டி விடுதியிலிருந்து வரவழைக்கிறேன்; சாப்பிட்டுப் போகலாம்," என்றாள்.

"எதுவும் தேவையில்லை"

"இப்படிச் சொல்வீர்கள் என்று தெரியும்"

"நான் உன்னை வாழ்த்திவிட்டுப் போக வந்தேன்"

"வாழ்த்திவிட்டுப் போகவா?"

கௌதமன் வாசற்படியில் நின்றுகொண்டிருந்தான். சம்பா பரிவுடன் சொன்னாள்: "இந்த ஊர் வழக்கம், வாழ்த்துக் கூறும்போது, 'ஹுஸேனுக்குள்ள துயரத்தைத் தவிர வேறெந்தத் துயரத்தையும் ஆண்டவன் கொடுக்க வேண்டாம்!' இந்த வாழ்த்தை நான் உங்களுக்குக் கொடுக்க முடியாது. ஹுஸேனுக்குள்ள துயரம் எது என்பதே உங்களுக்குத் தெரியாது. மேலும் துயரம் என்ன என்பதே உங்களுக்குத் தெரியவில்லை."

"சம்பா உன் வாழ்க்கை மிக உல்லாசமானது; என்னை விரைவிலேயே மறந்து விடுவாய். எனக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?" நீலாம்பரன் மெல்லச் சொன்னான். அவள் ஏதோ பேசத் தொடங்கினாள். அதற்குள் அவனே சொன்னான். "என்னை உனக்குப் பிடித்திருப்பதற்குக் காரணம், நான் மற்றவர்களைப்போல் இல்லாமல் இருப்பதுதான். மற்றவர்களைப்போல் நான் உன்மேனி மினுக்கத்தில் மையல் கொண்டிருக்கவில்லை. தனித்து நிற்கும் சிறப்புத் தன்மையை எவரும் விரும்புவது இயல்பு. நல்லது! நான் கிளம்புகிறேன்."

"ஆண்டவன் எவ்வளவு கருணை உள்ளவன்! ஹாஜா பாவூலாவின் அரியணையில் நீங்கள்தான் அமரப்போகிறீர்கள் போலிருக்கிறது! அதற்குத்தானே இவ்வளவு அவசரம்?" சம்பா சிரிக்க முயன்றாள்.

இருள் சூழ்ந்தது. நகரத்தின் நாலு பக்கங்களிலும் 'பஞ்ஜ்ஷாகா' தீவட்டிகள் ஏற்றி வைக்கப்பட்டன. சரவிளக்குகள் ஒளிர்ந்தன; 'கந்தில்' லாந்தல்கள் தெருக்களில் ஏற்றப்பட்டன. கீழே, தெருவில் திருமண ஊர்வலம் சென்றது. ஊர்வலத்தில், செயற்கை மேடைமீது

ஒருத்தி நடனமாடிக் கொண்டிருந்தாள். சீர் வரிசை ஊர்வலத்தில் பிள்ளை வீட்டுக்காரர்களும் இளவட்டங்களும் ஆடிப்பாடிச் சென்றார்கள். மற்றொரு செயற்கை மேடையில் வேடதாரிகளின் வித்தைகள் நிகழ்ந்தன. மங்கல வாத்தியங்கள் இசைத்தன. தீவட்டிகளின் வெளிச்சம் மாடி ஜன்னல்களைப் பிரகாசப்படுத்தியது. அந்த வெளிச்சத்தில் சம்பாவின் ஜரிகைத் துப்பட்டா பளபளத்தது. கீழே டோமனி இனப் பெண்கள் மங்கல கீதங்கள் இசைத்தனர். சம்பா ஜன்னலெதிரே வந்து கலியாண ஊர்வலத்தைப் பார்த்தாள். "எந்தப் புண்ணியவதிக்குக் கலியாணமோ? மங்கல ஊர்வலம்" சம்பா வாய்விட்டுச் சொன்னாள். நீலாம்பரன் திரும்பிப் பார்த்தான். சம்பா சொல்லிக் கொண்டிருந்தாள். "இந்த மணப்பெண்ணின் வகிட்டில் மங்கல செந்தூரம் துலங்குகிறது. கால்களில் மருதாணிச் சாயம்; மங்கல மூக்குத்தி..." பேச்சோடு தன் வகிட்டைத் தடவிப் பார்த்தாள். வியர்வைத் துளிகள் முத்திட்டிருந்தன; செந்தூரம் அங்கு இல்லை. 'இவள் நாடகமாடுகிறாளோ, மறுபடியும்?' கௌதம நீலாம்பரன் கலக்கத்துடன் சிந்தித்தான்.

"மனிதன் இவ்வளவு கொடுமைக்காரனாக இருக்கிறானே!" சம்பா உரக்கவே சொன்னாள்.

"எப்போதுமே ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் இப்படிக் குற்றம் சாட்டிக்கொண்டு வருகிறார்கள். இந்தத் தகராறே வீண்தான்."

"காலையில் வெகுதூரம் போய்ச்சேர்ந்திருப்பீர்கள்."

"ஆமாம்." நீலாம்பரன் ஜன்னல் வழியாகக் கீழே பார்த்தான். நகரம் முழுவதும் ஏதோவொரு விழாவுக்குச் செல்வதுபோல் போய்க் கொண்டிருந்தது. வளர்ந்த விடலைகள் மீசையை முறுக்கிவிட்டவாறு பீடு நடை பயின்றார்கள். பல இனத்துப் பணிப்பெண்களும் கும்பல் கும்பலாகப் போய்க்கொண்டிருந்தார்கள். வாலிப வீரர்கள் கத்தி பளபளக்கச் சுழற்றிக்கொண்டு சென்றார்கள். குடிப் பித்தர்கள் மதுபானக் கடைகளில் குழுமியிருந்தார்கள். உலகம் எப்படியெல்லாம் இயங்குகிறது. வடமொழிக் கவியரசன் பர்த்ருஹரி சரியாகத்தான் சொன்னான்: 'இந்த உலகம் ஒரு நாடக அரங்கம்' என்று! இந்த அரங் கத்தில் இப்படியுமொரு பயனற்ற-பொருளற்ற நாடகம் நடக்கிறது! இருள் கவிந்தது. அவனுடைய வண்டி கீழே காத்து நின்றது.

-- ஐயா! சீக்கிரம் இங்கிருந்து ஓடிப்போய்விடுங்கள்! கல்கத்தா போகிற வழி செவ்வையாக இல்லை; கல்கத்தா போய்ச்சேருங்கள். உங்களுக்கு அங்குதான் புகலிடம், ஏன் உங்கள் கால்கள் நடுங்குகின்றன-?

கௌதமன் பரபரப்புடன் அரசாங்கக் காகிதக் கட்டுகளைக் கவனமாகத் தூக்கிக்கொண்டு, வேகமாகப் படிகளைக் கடந்து வண்டிக்கு வந்து சேர்ந்தான். ஒருமுறை கூடத் திரும்பிப் பார்க்க

வில்லை. வண்டிக்குள் உட்கார்ந்து தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டான்.

வண்டி கூட்டத்தைக் கடந்து ஆகாமீர் மாளிகைப் பக்கம் வந்து சேர்ந்தது. வண்டியோட்டி இளைஞன் அதிகாரத் தொனியில் கூட்டத்தை விலக்கி வழி செய்து கொண்டு நகரத்துக்கு வெளியே வந்து சேர்ந்தான்.

நாவல் மரத்தடியில் சில யோகிகள் உட்கார்ந்திருந்தார்கள். அம்பாள் பவானியம்மனின் ஆலயத்திற்கு எதிரே தூபப் புகை எழும்பிக் கமழ்ந்தது. நீலாம்பரன் வண்டியிலிருந்து இறங்கி, கோவிலுக் கெதிரே சென்றான். அம்மனையும் காளிதேவியின் சொரூபமாகவே தரிசிப்பது அவன் வழக்கம். வணங்கியபின் மெல்ல விண்ணப்பித்துக் கொண்டான். "தாயே! உன்னுடைய இந்த லீலையையும் இங்கு கண்டேன். திரும்பிச் செல்கிறேன். உன் சக்தியால் இம்மாதிரி என்னை இக்கட்டான சந்தர்ப்பங்களில் பலவீனத்திலிருந்து காத்தருளவேணும்!"

ஒரு யோகி அவனை விசாரித்தார்: "இவ்வளவு சீக்கிரம் திரும்புகிறாயே!" முன்பே அறிமுகமானவர்.

"கானல் நீரின் கரையில் காலம் கடத்துவது புத்திசாலித்தனமல்ல. உங்களுடைய இந்த நகரம் கானல் நீர் போன்றது." நீலாம்பரன் லக்னோ நகரைச் சுட்டிக் காண்பித்துச் சொன்னான். நான்காம் ஜாமத்துக்கான முரசும் முழங்கியது. பைராகி அவனைக் கூர்ந்து பார்த்தார். "கானல் நீரின் தத்துவம் இவ்வளவு எளிதில் புரிந்து விடாது, குழந்தை!"

"பாபா! மாயாதேவி தன் பத்துக் கரங்களையும் விரித்து என்னை ஆட்கொள்ள விரும்பினாள். ஆனாலும் என்னைப் பாருங்கள், பத்திரமாகத் தப்பித்து வந்திருக்கிறேன்."

"நம்மில் எவருமே பத்திரமானவர் இல்லை, தம்பி! நாமெல்லாரும் குயவனின் பாண்டங்கள்—பொம்மைகள்! எல்லாரும் ஏதாவதொரு சமயம் உடைந்து விடுகிறோம்; உடைந்து விடுவோம். தன் திடத் தன்மையை எண்ணிக் கர்வப்படாதே." பைராகி ஒரு பிடி மண்ணை அள்ளி நுகர்ந்து பார்த்தார்.

"பார், இதில் எவ்வளவு வாசனை! இந்த மண்ணை எடுத்துப்போ! கடக் பிரதேசத்தில் யோக மாயாதேவியின் கோவில் இருக்கிறது. அதில் இந்த மண்ணைச் சேர்த்துவிடு." பைராகி மண்ணை கௌதமன் எதிரே நீட்டினார். அவன் தயங்கினான்.

"வாங்கிக்கொள்! இது லக்னோ நிலத்தாயின் பிரசாதம். கூடவே எடுத்துச் செல். இந்த மண்ணின் மகிமை. இதைவிட்டுப் பிரிந்த பிறகுதான் தெரியும்; இதன் நினைவு தொடர்ந்து வந்து கொண் டிருக்கும்." பைராகி புலமை செறிந்த மொழியில் பேசினார்.

"பாபா! நீங்கள் ஏன் துறவியானீர்கள்?"

"நீ என்னை அறிந்து கொண்டுவிட்டாயா?" சற்றுக் கலவரத்துடன் யோகி வினவினார்.

"எனக்கு எவரையும் தெரியாது."

"ஆம்; தெரிந்துகொள்வது மிகவும் சிரமம்தான்! தெரிந்திருப்பதை மறுபடியும் யார் தெரிந்து கொள்ள முனைவர்?"

இந்தக் கருத்தைக் கௌதமன் உபநிடதத்தில் படித்திருக்கிறான். பைராகி மெத்தப் படித்தவர் போலிருக்கிறது. அறிய ஆவல் கொண்டான்: "நீங்கள் யார் என்று தெரிந்து கொள்ளலாமா?"

"ஏனப்பா? வெள்ளைக்காரர்களுக்கு உளவு வேலை செய்கிறாயா?"

"இல்லை; நான் அப்படி இல்லை," மனத்தாங்கலுடன் பதில் சொன்னான்.

"உண்மைதானே?" நேருக்கு நேர் பார்த்துக் கொண்டே கேட்டார் யோகியார்.

"ஆம், உண்மைதான்"

"நல்லது. கேள்; நான் ராஜா பேனீ பஹதூரின் மகன். அவரைத் தெரியுமா? அவர் மிர்ஜா ஜலாலுத்தீன் ஹைதர் நவாப் ஷுஜாவுத் தௌலாவின் சாமந்தகர்; 'நாயபுஸ் ஸல்தனத்' என்ற பட்டம் பெற்றவர். அவத், பங்கால் பிரதேசங்களின் நவாபுகளுக்குத் துணையாகச் சென்று, உன் வெள்ளைக்கார சர்க்காரின் படைகளுடன் துணிந்து போராடியவர். கங்கைக்கரையில் போர்க்களம். ஒரு பக்கம் என் வீரத் தந்தை, பனாரஸ் அரசர் பலவந்த சிங், அவர் நண்பர்கள் ஹிம்மத் பஹதூர், ரோஹீலே வீரர்கள், மறுபக்கம் வெள்ளைக்காரர்களின் படையணி. வெள்ளைக்காரர்கள் என் தந்தையின் படைமீது திடீரென்று தாக்குதல் புரிந்தார்கள். எங்கள் தரப்பு வீரர்கள் நிலை குலைந்தனர். என் தந்தை குதிரைமீதேறி ஒவ்வொரு வீரனையும் அழைத்துச் சூளுரைத்தார்: "துர்பாக்கியசாலிகளே! எங்கே ஓடுகிறீர்கள்?" அவத் நவாப் வேதனையோடு கத்தினார்: "தங்களை மொகலாயர்கள் என்று கூறிக்கொள்கிறீர்களே, போர்க்களத்தை விட்டு ஓடுகிறீர்களே வெட்கமாயில்லை?" மற்றவர்களும் சூளுரைத்தார்கள்.

பயனில்லை. எங்கள் படைகள் பின்வாங்கி, துர்காவதி நதியைக் கடந்து ஓடின. ஆயிரக்கணக்கில் ஆற்று வெள்ளத்திலே அடித்துச் செல்லப்பட்டார்கள். இந்தியாவுக்கு அழிவுகாலம் தொடங்கி விட்டது.

இதையெல்லாம் கூறிப் பெருமூச்சு விட்டார். பிறகு வேதனை பொங்கச் சொன்னார். "உன் ஆங்கிலேய சர்க்கார் அப்போதே தெரிந்துகொண்டுவிட்டது. இந்த நாட்டில் மக்களிடையே, மன்னர்

களிடையே ஒற்றுமை கிடையாது, என்பதை. நண்பர்களாக இருந்த அவத் நவாபுக்கும் வங்காளத்து நவாபுக்கும் பகைமை ஏற்படுத்தினார்கள். இந்தியர்கள் ஒருவரைப்பற்றி மற்றவர் கோள் சொல்லிக் கொண்டு திரிவதை வெள்ளைக்காரர்கள் கண்டார்கள். குறுநில மன்னர்களும் சிறிய நவாபுகளும் ஒருபக்கம் தில்லி பாதுஷாவுக்குப் புகார்க்கடிதம் எழுதுகிறார்கள்; மறுபக்கம் கல்கத்தாவிலுள்ள கவர்னர் ஜெனரலுக்கு ரகசியமாக ஒத்துழைப்பு-உதவி என்று உடன்பாடு காண முனைகிறார்கள். இப்படியொரு தேசமா? இவர்கள் யாவருக்குமே தன்னம்பிக்கை, பிறர் மீது நம்பிக்கை இரண்டுமே கிடையாது. என் தந்தை அவத் நவாபின் மிக நெருங்கிய-நம்பகமான நண்பர். பகைவர்களின் வஞ்சக போதனைகளை நம்பி என் தந்தையை நம்பிக்கைத் துரோகி என்று குற்றம் சாட்டி ஏசினார். தண்டனை அளிக்கத் திட்டமிட்டார்."

"ஐயோ! கௌதம நீலாம்பரன் தன்னையுமறியாமல் சொன்னான்."

"அவத் நவாப் முண்டியான் போர்க்களத்திற்கருகில், என் தந்தையின் பாடிவீட்டில் சிறிது நேரம் ஓய்வெடுத்திருந்தார். உணவு அருந்தியபின் நவாப் என் தந்தையிடம் சொன்னார்: 'ராஜா நீயும் என்னோடு வேட்டைக்கு வாரும்!"

"உங்கள் தயவால் பல வேட்டைகளில் ஈடுபட்டிருக்கிறேன். நான் எதற்கு?"

"இல்லை; இம்முறை மிகச் சிறப்பாக இருக்கும். நீரும் வாரும்!" நவாப் தம்முடனேயே என் தந்தையை அழைத்துச் சென்றார். தந்தை புரிந்து கொண்டார். தம்மைச் சிறைப்படுத்தவே இந்தப் பாசாங்கு என்று. என்ன செய்ய? காட்டில் நவாபின் ஆணைப்படி என் தந்தையின் இரு கண்களிலும் அவுரிக்குச்சிகளை அழுத்தி குருடாக்கி விட்டார்கள். அவருடைய ஜமீன் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பதிமூன்றாயிரம் குதிரைப் படைகள், பதினெட்டு யானைகள், பீரங்கிப் படை, பெரிய ஜாகீர் பகுதி—இவ்வளவுக்கும் அதிபதியாக இருந்தவர் என் தந்தை. நான் இப்போது அந்தக் கானல் நீரின் சீமான்."

யோகி மௌனியானான்.

நீலாம்பரன் சிலையாக அமர்ந்து கேட்டுக்கொண்டிருந்தான். யோகி தீ மூட்டத்தில் சுள்ளிக்கட்டு ஒன்றைப் போட்டுவிட்டு, உட்கார்ந்தார். மெல்லப் பேசினார்: "கானல் நீரின் தன்மையை நான் அறிந்து கொண்டேன். உனக்குத் தெரியாது. நீ மதி மயக்கத்தில் உழன்று கொண்டிருக்கிறாய், இன்னும் இருப்பாய். நான் ஏற்றத் தாழ்வுகளைக் கண்டவன். அரசுகள் உருவானதையும் உருக்குலைந்ததையும் கண்டவன். கம்பெனி சர்க்காரின் மகிழ்ச்சி-ஆத்திரம்

பாதுஷாவின் குரோதம், மற்றவரின் வன்மம் எதைப்பற்றியும் எனக்குக் கவலை கிடையாது. என் தந்தை குருடாக்கப்பட்டு விட்டார். என்னைக் குருடாக்க ஆண்டவனால்தான் இயலும். சரி, நீ கிளம்பு! நேரமாகிறது. யோக மாயாதேவியின் கோவிலுக்குள் போய் வழிபட்டு விட்டுப்போ. அங்கே நாலு பக்கம் வெளிக்கூடங்கள், எண்ணற்ற வாசல்கள். ஒரு வாசலுக்குப் பிறகு மறுவாசல் திறக்கிறது. இதைப்போல உன்னை அதிசயத்தில் ஆழ்த்தும் வாசல் திறப்புகள் நிறைய மாறி மாறி வரும். அவற்றிலிருந்து மனிதன் மீண்டு வர முடியாது. இந்த உலகமே யோக மாயாதேவியின் ஆலயம்தானே! நீ இந்த மாயா மோகத்திலிருந்து விடுபட்டு வந்திருப்பதாக நினைக்கிறாய். நீ தவறு செய்கிறாய். சரி, கிளம்பு!"

நீலாம்பரன் யோகியாரை வணங்கினான். அவர் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு, காலடி மண்ணில் கொஞ்சம் எடுத்துக்கொண்டு திரும்பினான். வண்டி விரைந்தது. பாலத்தருகே வண்டி நின்றது. வண்டிக்காரன் கீழே இறங்கினான். எதிரே வெள்ளைக் காரப் போர்வீரன் குதிரையிலிருந்து இறங்கி, வழிப்போக்கன் ஒருவனைச் சவுக்கால் கொடுமையாக அடித்துக் கொண்டிருந்தான். ஆங்கிலத்தில் கீழ்த்தரமாக வைதான். அது மண்டியாவன் மிலிட்டரிப் பகுதி. படைவீரர் தங்குமிடம். சுற்றிலும் வெள்ளைக்காரத் துரைகளின் மாளிகைகள், சோல்ஜர்களுக்கான குடியிருப்புகள், ஆஸ்பத்திரிகள், உணவுக்கூடம், மாதா கோவில்—இவை இருந்தன.

வெள்ளைக்காரன் வழிப்போக்கனை நையப்புடைந்த பிறகு, குதிரை மீதேறி இருட்டில் மறைந்தான்.

"படுபாவி! நம் சோற்றைத் தின்றுகொண்டு, நம்மையே பகைக்கிறான்." வண்டிக்கார வாலிபன் கங்காதீன் குரோதத்துடன் ஏசினான். "ஷாஹே ஜமன் பாதுஷாவின் ஆட்சியிலேயே இந்த அக்கிரமம்!" இளைஞன் முணுமுணுத்தான். கௌதம நீலாம்பன் தன் எண்ணத்திலேயே மூழ்கியிருந்தான். இரவு ராஜா டிகைத் தராய் கட்டிவைத்த தர்மசாலாவில் தங்கினான். கங்காதீனின் ஆத்திரம் அடங்கவில்லை. முணுமுணுத்துக் கொண்டிருந்தான். ரெஜிடென்ஸி சிப்பாய்களையும், வங்காளி வாலிபரையும் கண்டதும் தர்மசாலாவில் உள்ளவர்கள் பேசிக் கொண்டார்கள்: "இவர் கல்கத்தா போகிறார். இங்கிலீஷ் தெரிந்தவர். இவரிடம் முறையிடுவோமே. இவர் போய் கம்பெனி சர்க்காரிடம் சொல்லி, நமக்கு விதித்திருக்கிற தாங்க முடியாத நிலவரியைக் குறைக்கச் சொல்லலாமே. குறைக்கப் போகிறார்களாமே? எப்போது என்பதையாவது இவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வோமே... லண்டனில் சட்டம் தயாரித்திருக்கிறார் களாமே; இங்கேயும் அதே செல்லும். வங்காளத்துக்கும் அவத் பகுதிக்கும் ஒரேவகைச் சட்டம் செல்லுமா? ஐயா! வங்காளி பாபு!

தயவு செய்து கிஸ்தி வரியைக் குறைக்கச் சொல்லுங்க, ஐயா! எங்கள் இடுப்பு ஒடிகிறது."

வெளிக்கூடத்தில் நீலாம்பரனைச் சூழ்ந்து கிராம மக்கள் உட்கார்ந்திருந்தார்கள். தம் குறைகளையும் வழக்குகளையும் முறையிடத் தலைநகருக்கு போகிறவர்கள். ஒரு வயோதிக இந்து ஜமீன்தார் கம்பை ஊன்றிக்கொண்டு வந்து, கௌதமனின் பக்கத்தில் உட்கார்ந்தார். "எங்கிருந்தப்பா வருகிறாய்?" என்று கேட்டார். கௌதமன் பதில் சொன்னான்.

"நீ எங்களுடைய விருந்தாளி. என் கிராமத்திற்கு வந்துவிட்டுப்போ. உனக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கிறோம். என் வீடு இங்கிருந்து ஒரு மைல் இருக்கும்."

கௌதமனின் நெஞ்சு தழுதழுத்தது. இந்த மக்கள் எவ்வளவு வெகுளிகள், அப்பாவிகள்! அவனுக்கு இந்த அவத்புரியை விட்டுப் போகிறோம் என்று வேதனையாகத்தான் இருந்தது. கிழவர் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுக் கௌதமனிடம் மெல்லச் சொன்னார்: 'தம்பி! உன் கம்பெனி சர்க்காரிடம் 'தயவு செய்து நிரம்பக் கொடுமைப்படுத்த வேண்டாம்; எங்களுக்கு தாங்கவில்லை' என்று சொல்லி வையேன்.' கௌதமன் மௌனமாக இருந்தான்.

"லக்னோவிலிருந்து வருகிறாயில்லையா?"

"ஆமாம்."

"அங்கே பாதுஷாவைப் பார்த்தாயா?"

"சந்தித்தேன்."

"நம்ம பாதுஷாவைக் கம்பெனி சர்க்கார் பணத்துக்காக மிகவும் நெருக்குகிறதாம்."

"எனக்குத் தெரியாது."

"உனக்கா தெரியாது? வங்காளி பாபு! சொன்னால் என்ன? உனக்கு எல்லாம் தெரியும்." சற்றுச் சினந்தே கிழவர் பேசினார்: "கம்பெனி சர்க்கார் எங்கள் பாதுஷாவுக்குக் கொடுத்த வாக்குறுதிகளையெல்லாம் ஒவ்வொன்றாக மீறிக்கொண்டிருக்கிறது. உனக்குத்தான் தெரியுமே, பக்ஸர் சண்டையில் தோல்வி கண்டபிறகு, அவத் நவாப் அவர்களுடன்..."

சரிதான்! இங்கேயும் பக்ஸர் சண்டை–அவத்புரி நவாப் கதை தொடங்கிவிட்டது! முதியவர் நீலாம்பரனை ஒரு கணம் உற்றுப் பார்த்தார். "உனக்கு இந்தக் கதைகளிலெல்லாம் அக்கறை இராது. ஆனால் அந்தக் காயங்களும் புண்களும் இன்னும் எங்களுக்கு ஆறவில்லை. எங்கள் பிரதேசத்தையே குட்டிச் சுவராக்கி விட்டது கம்பெனி சர்க்கார்... உனக்குத் தெரிந்திருக்குமே, பக்ஸர் போருக்குப் பிறகு, ஆங்கிலேயர் தோல்வி கண்டபின், அவத் நவாபுடன் கம்பெனி சர்க்கார் உடன்படிக்கை செய்து கொண்டது. அதன்படி முப்பத்

தையாயிரம் படை வீரர்களுக்கு மேல் வைத்திருக்கக் கூடாது என்று தீர்மானமாயிற்று. இப்போது மண்டியாவனத்தில் பார். ஆஸிபுத் தௌலா கல்கத்தாவிற்கு எழுதியிருந்தார், "வெள்ளைகாரப் படைகளே நாட்டிலே கிடைக்கிற வருமானத்தையெல்லாம் ஏப்பம் விட்டு விடுகின்றன. இங்கே உள்ளவர்களுக்கு—சொந்த வீட்டுக்காரர்களுக்கு உணவு கிடைக்கவில்லை. வயல்கள் களரடித்து விட்டன. இப்படி எத்தனை காலம் வரைக்கும் எங்கள் கழுத்தில் கத்தியைச் செருகி வைத்திருப்பார்கள்? இதற்கு விடிவு உண்டா? நாங்கள் மேலும் மேலும் வறுமையில் வாடிக்கொண்டிருக்கிறோம். தம்பி! நாங்கள் மிகவும் துன்பப்படுகிறோம். மன்றோ படையெடுத்தபோது, எங்கள் படைவீரர்கள் "ஹே ஹுஸேன்! ஹே ஹுஸேன்!" என்று கூவிக்கொண்டே சண்டையிட்டார்கள். என்ன போரிட்டு என்ன? பயனில்லை. இனிமேல் கம்பெனி கஜானாவுக்குக் கொடுக்க எங்களிடத்திலே ஒன்றுமில்லை." குரல் தழுதழுக்க கூறி முடித்தார் முதியவர்.

விளக்குச் சுடர் காற்றில் படபடத்தது. நீலாம்பரன் சுவரில் சாய்ந்து உட்கார்ந்தான்.

# 17

கல்கத்தா வந்து சேர்ந்ததும், கௌதம நீலாம்பரன் தனக்குப் பழகிவிட்ட வாழ்க்கையில் கலந்து விட்டான். அலுவலகம், புத்தகங்கள், ஆங்கில-வங்காளிப் பத்திரிகைகள், சொற்பொழிவு...

அவன் ஒருநாள் சுஜாதாதேவியைச் சந்திக்க தரம் தல்லா பகுதிக்குச் சென்றான். ஆனால் அங்கு போனபின்தான் தெரிந்தது அவள் காலமாகிவிட்டாள் என்பது. மழைக்காலத்தில் அவள் பூஜை செய்ய காளிகட்டத்திற்குச் சென்றாள். வழியில் பாம்பு தீண்டி மரித்து விட்டாள்... சிரில் துரை வெளியூர்ப் பயணம் மேற்கொண்டிருந்தார்.

நீலாம்பரன் தன் வீட்டுக்குத் திரும்பிவந்து, சிக்குப் பலகையை எடுத்து வைத்துக்கொண்டான்; விளக்கை ஏற்றி, அதனெதிரே ஆங்கில அகராதியைப் பிரித்து வைத்துக்கொண்டு பார்க்கலானான்.

அவன் மனம் வேலையில் வெறுப்புத் தட்டியது. மாணிக் தல்லா பகுதியில் அவன் வீட்டுக்குச் சற்றுத்தொலைவில் மிக அழகான பூங்கா மாளிகை இருந்தது. அந்தத் தோட்டத்தில் பல வாலிபர்கள் கூடுவது வழக்கம். அங்கு ராம் மோஹன் பாபு

வசிக்கிறார். ஒருநாள் நண்பன் ஒருவனுடன் கௌதமன் அங்கு சென்றான். ராம் மோஹன் பாபுவின் பேச்சைக் கேட்டதும் மிகவும் குழம்பிப் போனான். சமய சித்தாந்தங்கள் பற்றிய புதுமுறைப் பேச்சு அது. முன்பே கலக்கமுள்ளவனுக்கு இது மேலும் குழப்பத்தை ஏற்படுத்தியது. பிறகு அவன் காளி கட்டம் போய் வருவதை நிறுத்தி விட்டான். வீட்டில் உட்கார்ந்தே சிந்திக்கலானான்... ஸேராம்புர் பாதிரிமார்கள் கூறுவது சரிதானோ? அல்லது ராம் மோஹன் பாபு கூறுவதுதான் சரியோ? குழப்பம்தான் அதிகரித்தது. சலிப்படைந்து அவன் முடிவு செய்தான்: தீர விசாரித்து, கற்றறிந்து முடிவு காணாத வரைக்கும் எவருடைய கருத்துக்கும் உடன்படலாகாது. கம்பெனி சர்க்கார் வேலையைத் துறந்துவிட்டு, இந்து காலேஜில் சேர்ந்தான். அதே கல்லூரியில் நகரத்துப் பிரமுகர்-சம்ஸ்தானாதிபதி பிரின்ஸ் துவாரகாநாத் டாகூரின் மகன் தேவேந்திர நாத் படித்துக் கொண்டிருந்தான். இருவரும் வகுப்புகள் முடிந்தபிறகு, தனியாக அமர்ந்து மேலை நாட்டுத் தத்துவ தரிசனம் பற்றி விவாதிப்பார்கள். ஆத்மா-பரமாத்மா குறித்து ஆராய்ச்சி செய்வார்கள். தேவேந்திர நாத்திடம் ஸூஃபி பக்கிரிமார்களின் செல்வாக்கு அதிகம். இது நீலாம்பரனுக்கு விநோதமாக இருந்தது. இருவரும் மாலையில் ராம் மோஹன் ராயின் வீட்டிற்குப் போவார்கள். அங்கு வித்துவான்கள், மதநூல் வல்லார்கள், தர்மசாஸ்திரங்களில் தேறியவர்கள் சொற் பொழிவு ஆற்று வார்கள். ஏகேச்வரவாதிகளின் பாடல்களை இவர்கள் பாடுவார்கள்; தேவேந்திர நாத் பார்ஸி கஜல் பாடுவான்.

நீலாம்பர தத் பி.ஏ. தேறினான். அந்த ஆண்டு முதல் அவன் ராம மோஹன்ராயின் பிரும்ம சமாஜத்தில் சேர்ந்து பிரபலமானான். ஊக்க மிக்க துடிப்பான தொண்டன் ஆனான். ஒருநாள் செய்தித் தாளில் படித்தான்: "சர், சிரில் ஹாவர்டு ஐஷ்லே பக்கவாதத்தில் வீழ்ந்து செத்துப்போனார்." அப்போது அவருடைய துரைசானி லேடி ஐஷ்லே தன் இரண்டு வயதுப் பிள்ளையுடன் டார்ஜிலிங் போயிருந்தாள். இரு ஆண்டுகளுக்கு முன்புதான் அந்த இளம் பெண்ணை மணந்து கொண்டார் சிரில். பிஹாரில் பொட்டல் வெளியில் நடமாட்டமில்லாத பயணிகள் மாளிகை ஒன்றில் சிரில் மரணமடைந்தார். கிராமப் புறத்தில் சுற்றுப்பயணம் செய்துவிட்டுத் திரும்பியதும், பூட்சுகளைக் கழற்றிப் போட்டுவிட்டு, சாய்வு நாற்காலியில் படுத்தார். அப்போதுதான் பணியாள் அவருடைய நடத்தைகெட்ட, செருக்குமிக்க, அவலட்சணமான மனைவியின் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அதில் அவள் டார்ஜிலிங் சொஸைட்டியின் நிலவரம் குறித்துப் புதிய தகவல்களை எழுதியிருந்தாள். கடிதத்தைப் படித்து முடித்ததும் அன்' ட்ப் பத்திரிகைகளை நோட்டம்விடத் தொடங்கினார். திடீரென்று உடல்

சுவாதீனம் இழந்தது, தனக்கு இறுதிக்காலம் வந்து விட்டதை சிரில் உணர்ந்தார். பணியாளைக் கூப்பிட முயன்றார்; குரல் எழும்பவில்லை. மறுகணமே அவர் ஆவி பிரிந்து விட்டது.

கல்கத்தா பேப்பர்களில் சிரில்லைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள், நிகழ்ச்சிகள், அனுதாபச் செய்திகள் வெளி வந்தன. தன் ஆயுளில் நாற்பதாண்டுக் காலத்தை வங்காளத்தில் கழித்திருக்கிறார். பங்கால் ஏஷியாடிக் சொஸைட்டி, சிரில் நினைவஞ்சலியாக இரங்கல் கூட்டம் நடத்தியது. கல்லூரிகளில் சிரில் துரை நினைவு சொற்பொழிவுகள் நடைபெற்றன. பதினைந்து நாட்கள் வரையிலும் இதெல்லாம் சிரத்தையாக நடந்தேறின. பிறகு சகலரும் சிரில்லை மறந்து விட்டார்கள்.

லேடி ஐஷ்லே-மதராஸ் சீஃப் ஜஸ்டிஸின் தங்கை. நிறையக் குடிப்பவள். தன் மகனுடன் சொத்து சாமான்களை விற்றுப் பணமாக்கிக் கொண்டு, ஆடம்பர-அலங்கார அணிமணிகளுடன் லண்டன் போய்ச் சேர்ந்தாள். சிரில் கோடிக்கணக்கான ரூபாய்களை விட்டுச் சென்றார். அவருடைய மகன் சிரில் டெவின்டேரிக் ஐஷ்லே தந்தை தேடி வைத்த மூலதனத்தைக் கொண்டு மிகப் பெரிய வியாபார நிறுவனத்தைத் தொடங்கினான். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இப்போது பாரெங்கும் பரவியிருந்தது. பர்மாவில் துத்தநாகச் சுரங்கங்கள் பிரிட்டிஷார் வசம் இருந்தன. மலேயாவில் ரப்பர் காடுகள், சீனாவில் அபினி வியாபாரம் எல்லாம் பிரிட்டிஷார் உடைமைகள்!

இந்தியா 1857க்குப் பிறகு, விக்டோரியா மகாராணியின் சாம்ராஜ் யத்தில் சேர்ந்தது. மேற்கூறிய எல்லா இடங்களிலும் சர் சிரில் ஹாவர்டு ஐஷ்லே அவர்களின் புதல்வர் லார்டு சிரில் டேரிக் எட்வின் ஐஷ்லேவுக்குத் தந்தை வழிச் சொத்துக்கள் இருந்தன.

# 18

ஒருநாள் பேராசிரியர் கௌதம நீலாம்பர தத் குதிரை வண்டியிலிருந்து இறங்கித் தன் வீட்டின் முகப்புக்கு வந்தார். அப்போது தோட்டக்காரன் வந்து தகவல் கொடுத்தான்: "மடியாபுர்ஜ் நவாபு உங்களைச் சந்திக்க வெகுநேரமாகக் காத்திருக்கிறார். இப்போது தான் திரும்பிப் போனார்."

நீலாம்பர தத் திரும்பித் தெருப்பக்கம் போய்ப் பார்த்தார். எதிரே ஒரு கிழவர் கைத்தடியை ஊன்றியவாறு தெருவோரமாகச் சென்று கொண்டிருந்தார். நீலாம்பர தத் விரைந்து சென்று அவரைச்

சந்தித்தார்.

"ஆஹா! என் பிரிய நீலாம்பர தத்! உங்களைச் சந்திக்க முடியாதென்றே எண்ணினேன்," மகிழ்ச்சி ததும்பக் கிழவர் உணர்ச்சி வசப்பட்டார்.

"நவாப் சாகப்! உங்களைச் சந்தித்து வருடக் கணக்காகிறது. வாருங்கள்; கொஞ்ச நேரம் சாவகாசமாக உட்கார்ந்து பேசலாம். என் பேத்தி ஸ்கூல் போர்டிங் ஹவுஸிலிருந்து வந்திருக்கிறாள். நீங்கள் அவளைப் பார்த்திருக்க மாட்டீர்கள்." நவாப் சாகப்பின் கையைப் பிடித்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.

"நல்லது ஐயா! உம்மைப் பார்த்துவிட்டேன். உம்முடைய குழந்தைகளையும் பார்த்துவிடுகிறேன். பிறகு உயிரோடு திரும்பவும் இங்கே வருவேனா, இல்லையோ!"

"ஏன்? எங்கே போகப்போகிறீர்கள்? லக்னோவுக்கா?"

"புனிதமான கர்பலா தலத்திற்கு மெக்காவுக்குப் போகப் போகிறேன். இந்த உடம்பை ஆண்டவன் அங்கேயே புதைக்க வைக்க வேண்டும். இங்கே என்ன வைத்திருக்கிறது இனிமேல்?"—பெரிய குரல் தடைபட்டது. கண்களைத் துடைத்துக் கொண்டார். நீலாம்பர தத் அவரை அன்பும் ஆதரவுமாகப் பார்த்தார். பணியாள் தேனீர் கொண்டு வந்தான். டிராயிங் ரூம் சமகாலத்திய விக்டோரியன் வகையில் ஒப்பனை செய்யப்பட்டிருந்தது. சுவர்களில் பலப்பல ஓவியங்கள், போட்டோக்கள். முத்து வடங்களால் தயாரித்த திரைச் சீலை நுழை வாயில்களில் தொங்கிக் கொண்டிருந்தது. பக்கத்து அறையில் பியானோ இசைப்பது கேட்டது. நீலாம்பர தத் வாட்ட முற்றார். அறையை நோக்கிக் குரல் கொடுத்தார். "நீலிமா! வாசிப்பை நிறுத்தம்மா! இங்கே வந்து பார். மடியாபுர்ஜ் மாமா வந்திருக்கிறார்."

பதினைந்து வயதுப்பெண் உள்ளேயிருந்து வந்தாள்.

"இவள் என் பேத்தி. இவளை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். ஸ்கூல் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கிறாள்."

முதியவர் நவாப் பெண்ணை ஒளி குன்றிய கண்களால் உற்று நோக்கினார். பதினந்து வயதுக் குமரி விவாகம் செய்துகொண்டு, இடுப்பில் குழந்தையை வைத்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக, பள்ளிக்கூடத்திற்குப் போய் இங்கிலீஷ் படித்துக்கொண்டிருக்கிறாள்; பியானோ வாசிக்கிறாள். நவ நாகரீகம்...

நவாப் கம்மன் ஸோஃபாவில் அமர்ந்து வெளிப்பக்கம் பார்த்துக் கொண்டிருந்தார். கல்கத்தா நகரம் ஒளி வெள்ளத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. நீலாம்பர தத் அவருடன் உலக விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தார். இருவருக்கும் ஒருங்கே பிடித்தமான விஷயங்கள் இல்லாததால், பேச்சு கடந்த காலப் பெருமை பற்றியே இருந்தது. இது இருவருக்குமே பிடித்தமானது. அதிலும் நவாப்

போகிற அளவுக்குப் பின்னோக்கிச் செல்ல நீலாம்பர தத்தால் முடியவில்லை. அவர் வருங்காலத்தை எதிர் நோக்குபவர். லக்னோ நகரம் அழிந்ததும், மடியாபுர்ஜில் மற்றொரு லக்னோ அமைந்தது. அப்போது நவாப் கம்மன் சுல்தானுடன் மடியாபுர்ஜ் வந்து சேர்ந்தார். நீலாம்பர தத்தைச் சந்திக்க விரும்பினார் சுல்தான். நீலாம்பர் புகழ்மிக்க பத்திரிகை ஆசிரியராகி விட்டார். நீலாம்பர் வருடத்தில் இருமுறையாவது சுல்தான், நவாபு இருவரையும் சந்திப்பது வழக்கம். கல்கத்தாவில் ராஜா சுரேந்திர மோகன் டாகூரின் மாளிகையில் இசைக் கலையைப் புதுமை முறையில் மாற்ற வேண்டுமென்று இயக்கம் உருவாகி, இதற்காக நாட்டிலுள்ள இசைக் கலைஞர்கள் அங்கு கூடிய போது, நவாப் கம்மனையும் அதற்கு அழைத்திருந்தார் நீலாம்பர். தொடர்ந்து பல கூட்டங்களுக்கும் அழைத்து வந்தார்.

வரவேற்பு அறையில் விளக்குகள் ஏற்றப்பட்டன. நீலாம்பர தத்தின் வீட்டில், மாடியில் அவர் புதல்வன் மனோரஞ்ஜன் கல்லூரி மாணவ நண்பர்கள், ஆர்ட் ஸ்கூல் மாணவர்கள் யாவரும் ஒரு ஆங்கில நாடகத்திற்காக ஒத்திகை நடத்திக் கொண்டிருந்தார்கள். மனோரஞ்ஜனின் நண்பன் மைக்கேல் மது சூதன்தத் புதிய நாடகமொன்றை எழுதிக் கொண்டிருந்தான். எல்லாரும் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். கேம்பபில் மெடிகல் ஸ்கூல் மாணவன் ஒருவன் ஜன்னல் எதிரே அமர்ந்து ஆர்மோனியம் வாசித்துக் கொண்டிருந்தான். மனோரஞ்ஜன் தருலதாவின் புதிய ஆங்கிலக் கவிதையை ரசித்துப் படித்தான். ஆர்மோனிய ஒலி, மாணவர்களின் அட்டகாசச் சிரிப்பு, உரையாடல், விவாதம் எல்லாம் கலந்து பேரிரைச்சலாகக் கீழே எதிரொலித்தது. நவாப் கம்மன் கைத்தடியைத் தடவிக் கொண்டிருந்தார். இது வேறு காலம்—புதுயுகம். 1871ஆம் ஆண்டு நவாபின் உலகம் கிழடாகி விட்டது. நீலாம்பரன் நவாபின் வயதுக்காரனானாலும், அவர் காலம் இளமையில் பொலிவது. நவாப் கம்மன் இந்தப் புதுமை உலகில் தமக்குச் சிறிதும் இடம் கிடையாதென்பதை உணர்ந்தார். பிரிட்டிஷ் ஆட்சியின் தலைநகரில் புதுமுறை இல்லத்தின் ஒரு டிராயிங் ரூமில் அமர்ந்து நவாப் கம்மன் தம்மை கேலிக்குரியவராகக் கருதினார்; அவருக்கே அப்படித் தோன்றியது.

"நவாப் சாகப்! மனோரஞ்ஜன் லக்னோ கென்னிங் காலேஜில் லா லெக்சரராகப் போகிறான்" கௌதம நீலாம்பர தத்தின் குரல் கேட்டது. திகைத்தார். "நல்லது! நல்லது! அல்லா அருள் புரியட்டும்! நன்றாக முன்னுக்கு வரட்டும்.!" கைத்தடியை ஊன்றி எழுந்தார். விடை பெற்றுக் கொண்டு மடியா புர்ஜ் பகுதிக்கு வந்து சேர்ந்தார்.

இரவு முதிர்ந்தது. நவாப் கம்மன் சென்ற பிறகு நீலாம்பர தத் டிராயிங் ரூமில் உலாத்திக் கொண்டிருந்தார். சுழலும் அலமாரி

யிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துப் புரட்டத் தொடங்கினார். மனம் அதில் செல்லவில்லை. சுற்றுப்புறத்தைப் பார்த்தார். அலமாரிகளில் நிறையப் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. பத்திரிகைகளின் பைண்டு செய்யப்பட்ட ஃபைல்கள், சட்டத்துறைப் பத்திரிகைகள்(லா ஜர்னல்), கமிட்டிகளின் ரிப்போர்ட்டுகள், திட்ட நகல்கள், பிரேரணைகள்—பலப்பல பிரச்சினைகள்.

நீலாம்பர தத்திற்கு மூச்சு முட்டுவது போல் இருந்தது. காற்று இல்லை; புழுக்கம்-வெப்பம் வேறு. வெளியே தெருக்களில் விளக்குகள் மினுக்கிக் கொண்டிருந்தன. நகரங்களுக்கெல்லாம் ராணி போன்ற கல்கத்தா இப்போது அவரை அச்சுறுத்தியது. பயப்பிராந்தியுடன் வெளி வராந்தாவுக்கு வந்தார். இத்தகைய இரவுகளில்தான் துக்கப் பட்ட ஆவிகள் அருவமாக உலவும் சலசலப்பு கேட்பது வழக்கம். வெளி முற்றத்தில் வாழை முதலான மரங்களின் இலைகள் சலனமற்று நின்றன. நீர்த்தொட்டிக்கருகில் ஒரு நாய் வாலை ஒடுக்கிப் படுத் திருந்தது. மறுபிறப்பு பற்றி நம்பிக்கை கொண்டவராக இருந்தால், அந்த நாய் ஏதோவொரு துக்கப்பட்ட ஆத்மாவின் மறுபிறப்பாக இருக்கும் என்பதைச் சிந்தித்திருப்பார். வெளி முற்றத்தில் இறங்கி, பாத்திகளினூடே நடந்தார்.

பிறகு மதியைப் பார்த்தார். வானத்தில் மிதந்து தன் இல்லம் 'தத் ஹவுஸ்' மேலே வந்திருந்தது. அதன் ஒளிக்கிரணங்கள் நீர்த் தொட்டியில் படிந்தன. தண்மதி எத்தனையோ கதைகளை அவருக்குத் தெரிவித்தது. அன்று பௌர்ணமி தினம்.

அன்று இரவு மாணிக் தல்லா பகுதியிலிருந்து நீலாம்பர தத்திடம் விடை பெற்றுக்கொண்டு நவாப் கம்மன் கார்டன் ரீச் வந்து சேர்ந்தார். மடியா புர்ஜில் உள்ள அங்குதான் அவருடைய இல்லம். கட்டிலில் படுத்தவாறே சிந்திக்கலானார்.

'விநோதமான நிகழ்ச்சி!' மனிதன் ஒருமுறை இந்த உலகத்திற்கு வருகிறான்; பிறகு மடிந்து போகிறான். மடிந்தபின் இந்த உலகத்தைப் பார்ப்பதில்லை அவன். இப்படித்தான் பலரும் மறைந்து போயிருக் கிறார்கள். ஷாஹே ஜமன் காஜி உத்தீன் ஹைதர், நஸிருத்தீன் ஹைதர், முகம்மது அலிஷாஹ்—இவர்கள் மரித்தபோது நவாப் கம்மன் நேரில் பார்த்திருக்கிறார். இவர்களெல்லாரும் அவத் புரியில் ஆண்டவர்கள். இவர்களை மரணம் சடுதியில் கொண்டுபோய் விட்டது. பாவப்பட்ட சுல்தானே ஆலம் வாஜித் அலீ ஷாஹ் இப்போது அருகில் 'ராதா மன்ஸில்' மாளிகையில் இந்திர சபை (தர்பார்) கூட்ட ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்! தாம் இன்றும் பழையபடி கைஸர் பாகில் வசிப்பதாக நினைவு அவருக்கு. அவரும் ஒருநாள் காலமாகிவிடப் போகிறார். பாதுஷாவின் அரியணை, நாட்டை விட்டு வெளியேறல், அளப்பரிய ஆனந்தம், தாளமுடியாத

துன்ப வேதனை, சகலத்தையும் சாவு தீர்த்துவிடுகிறது. மரணத் திற்குப்பிறகு என்னென்னவெல்லாம் அனுபவிக்க வேண்டி யிருக்குமோ?

வெம்மை புழுக்கத்தைக் கிளர்த்தியது; மூச்சுத்திணறியது நவாப் கம்மனுக்கு. அவர் கட்டிலிலிருந்து எழுந்திருக்க முனைந்தார். நிலை தடுமாறிப் பின்பக்கமாக விழுந்துவிட்டார். கர்பலா புனிதத் தலத்திற்கு யாத்திரை செய்ய விரும்பியவர், வாழ்வின் இறுதியாத்திரையை இங்கேயே தொடங்கிவிட்டார். நவாப் அபுல் மன்சூர் கமாலுத்தீன் அலீரஜா பஹதூரின் வாழ்க்கைப் பயணம் முடிந்தது!

# 19

நவாப் ஸஃப்தர்ஜங் முதல் சுல்தானே ஆலம் வரைக்கும் ஒன்பது மன்னர்கள் அவத்புரியில் ஆட்சி செலுத்தி வந்தார்கள். சுல்தானே ஆலம் காலத்தில் ஸலீமன் துரை வந்தான். ஸஃப்தர்ஜங் தன் வலிமை-திறமைகளைக்கொண்டு இந்த அரசை நிறுவினார். தில்லிப் பேரரசு சரிந்தபின், இந்தியாவின் பகட்டான-பெரிய ஆட்சிப்பகுதி அவத் புரிதான். இதன் பாதுஷா பிரான்ஸ் நாட்டுப் பேரரசர் பதினான்காம் லூயியைவிடப் பராக்கிரமசாலியாகத் திகழ்ந்தார். ஸலீமன் மாவீரன்தான், எனினும் அவன் துணிச்சலுடன் நடத்திய திடீர்ப் படையெடுப்பில் அவத் பேரரசு சரிந்தது. உக்கிரமாக ஊதி விளக்குகளை அணைப்பதுபோல் அவத் பெருமைகளை ஸலீமன் அணைத்துவிட்டான்.

ஹைவலாக் வென்றான். சுல்தானே ஆலம் தோற்றார். இந்திரபுரி போலிருந்த லக்னோ அழிந்தது. நௌடங்கி நாடகக்குழு குலைந்தது. கணிகையர் மோகனக் கூத்துக்கள், இன்பத் தோட்டத்துக் கேளிக்கைகள், மொஹர்ரம், ராமலீலாக் கோலாகலங்கள் யாவும் பழங்கனவுகளாகி விட்டன. உல்லாச மாளிகை தில்குஷ் மஹால் இப்போது வெறிச்சோடிக் கிடந்தது. பேலோகாத் கோட்டை மாளிகையை வெள்ளையர் பீரங்கிகள் தகர்த்துவிட்டன. ஹஸரத் கஞ்ஜ் அங்காடி வீதியில் இப்போது ஆங்கிலேயர் கடைகள் இருக் கின்றன. அமீனாபாதில் கல்லூரிகளும் பள்ளிக்கூடங்களும் இடம் பெற்றிருக்கின்றன. பத்திரிகைகள் வெளிவருகின்றன. தொலைபேசிகள் ஒலிக்கின்றன. ஸ்ரீராமபிரான் ராஜ்யபாரம் செய்த அயோத்தியாபுரி மாயாஜாலம் போல் சீர்குலைந்து உருமாறி விட்டது. இறுதியாக ஆண்ட சுல்தான் சுதாரித்துக் கொள்வதற்குள் சரிந்து விட்டான்!

கல்கத்தாவாசியான பேராசிரியர் நீலாம்பர தத் மகனைச் சந்திக்க லக்னோவுக்கு வந்தார். ரயிலிருந்து இறங்கி, பீட்டன் வண்டியில் அமர்ந்து ரயில் நிலையத்தை விட்டு வெளியே வந்தவர், நகரம் உருமாறிப் போயிருப்பதைக் கண்டு துணுக்குற்றார். அவர் நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு 1823இல் இதே லக்னோவுக்கு வந்திருக்கிறார். அப்போது சுல்தான் ஆட்சி. இப்போது வெள்ளைக் காரர் ஆட்சி. இங்கு தூமிபேக் கொத்தவால் (ஊர்க்காவலர்) அதிகாரம் செலுத்திக் கொண்டிருந்தது போய், டெபுடி கமிஷனர் ஆளுகை புரிகிறார். அவர் ஸயாதத் அலிகானின் நூர்பக்ஷ் மாளிகையில் சுகவாசம் புரிந்து வருகிறார். ஸயாதத் அலிகானின் மற்றொரு மாளிகை ஹயாத் பக்ஷ் மாளிகை இப்போது பாங்கி அலுவலகமாகி விட்டது-'பாங்க் ஹவுஸ்' என்று பெயர் பூண்டது. கைஸர் பாகில் கெனிங் காலேஜ் நடக்கிறது. அங்குதான் மனோ ரஞ்ஜன் தத் சட்ட விரிவுரையாளராக இருக்கிறார். தெருக்கள், பேட்டை, பகுதி எல்லாம் முன்பு இருந்தவைதாம்; காலம்தான் மாறிவிட்டது. இருண்ட பேட்டைகளிலும், இடிபாடான இல்லங் களிலும் காலமாறாட்டத்தால் சீர்குலைந்த மக்கள் குன்றிப்போய் முடங்கிக் கிடந்தார்கள். செல்வந்தர்கள் கொள்ளையடிக்கப் பட்டார்கள்; பனாதைகள் பணக்காரர்களாகி விட்டார்கள். புரட்சி செய்தவர்கள் தூக்கிலிடப்பட்டார்கள். வெள்ளையரிடம் எஜமான விசுவாசம் கொண்டிருந்தவர்களுக்குச் சொத்துக்கள்—ஜாகீர்கள் கிடைத்தன. லக்னோவை விட்டு மன்னர் அக்தர் பிஸா (வாஜித் அலிஷாஹ்) வெளியேறியபின், அவருக்காக உள்ளூர் அன்பர்கள் அழுது அழுது அலுத்து விட்டார்கள். இதுதான் அவத் புரி! இங்கு ராமபிரானுக்கும் அந்தக் காலத்தில் நாட்டைத் துறந்து வனவாசம் செய்ய வேண்டியதாயிற்று.

பீட்டன் வண்டி நகரை நோக்கி விரைந்தது. கோச் சாரதி- முண்டாசு கட்டிய இளைஞன்; நீலாம்பர தத்தை ஏறிட்டுப் பார்த்தான். "பெரிய ஐயா! சாரட் வண்டிக்குப்பின்னால் குதிரைக் காரக் கிழவர் குந்தியிருக்கிறார். என் பக்கத்திலே உட்கார வைத்துக் கொள்ளட்டுமா? வயதானவர்; தடுமாறிக்கீழே விழுந்து உயிரை விட்டால் வீண் தொல்லை".

"சரி; உட்கார வைத்துக்கொள்ளேன்".

கிழவன் பின்பக்கத்திலிருந்து வந்து முன்பக்கம் வண்டியோட்டி பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். சாரட் வண்டி விரைந்தது. "ஐயா கல்கத்தாவிலிருந்து வர்றீங்களா?"

"ஆமாம்"

"நாங்களும் கல்கத்தா போயிடலாமான்னுதான் யோசிக்கிறோம்; இங்கே மனசு தரிக்கலே, சாமி!" இளைஞன் சொன்னான்.

“யாரப்பா?” கிழவன் வாலிபனின் காதருகில் கிசுகிசுத்தான். கிழவனின் பெயர் கங்காதீன்.

“கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறாங்க.” வாலிபன் உரக்கச் சொன்னான். அவன் பெயர் சம்பு.

“கல்கத்தாவா!” காது மந்தமான கிழவன் வியப்புடன் திரும்பிப் பார்த்தான். பார்வையும் பலவீனம்.

“ஆமாம்! சொன்னது புரியலே?” சம்பு சலித்துக் கொண்டான்.

“எசமான்! கடவுள் மாதிரி வந்திருக்கிறீங்க. என்னையும் கல்கத்தாவிலே கொண்டுபோய் விட்டிடுங்களேன். அங்கே எங்க பாதுஷா இருக்கிறாரு.” கிழவன் மிகத் தீனமாக வேண்டிக்கொண்டான்.

வாலிபன் சிரித்தான். “ஐயா! இந்தக் கிழவர் பேச்சைப் பொருட்படுத்த வேண்டாம். ரயிலிலிருந்து யார் இறங்கி வந்தாலும், இவர் இதையே சொல்லிக்கொண்டிருக்கிறார். அங்கே எங்கள் பாதுஷாவே திண்டாட்டத்திலே இருக்கிறார். இவரும் அவர்கிட்டே போய்ச் சேர்ந்து விடுகிறாராம்! இவர் இல்லாமதான் அங்கே குறையாக இருக்கிறாப்பல!”

நீலாம்பர தத் ஏதும் பேசவில்லை. பீட்டன் வண்டி அமீனாபாத் நோக்கி விரைந்தது.

“ஐயா இதுக்கு முன்னாலே லக்னோவுக்கு வந்திருக்கீங்களா?”;’

“வந்திருக்கிறேன்”.

“எப்போது?”

“ரொம்பக் காலத்துக்கு முன்னாலே. நீ அப்போ பிறந்திருக்கக் கூட மாட்டாய். காஜியுத்தீன் ஹைதர் ஆண்டு கொண்டிருந்த காலத்தில்”.

“தாத்தா! இந்தா ஐயா உன் காஜியுத்தீன் ஹைதர் ஆண்டு கொண்டிருந்த காலத்திலே இங்கே வந்திருக்காங்களாம்”. வாலிபன் கிழவனின் காதருகில் கத்தினான். பிறகு நீலாம்பர தத்தைப் பார்த்து, “கிழவர் அடிக்கடி சொல்லுவார்: காஜியுத்தீன் ஹைதருக்கு முன்னாலே வெள்ளித் தடி தூக்கிக் கொண்டு போகும் பரிவார சேவகனாக இவர் இருந்தவராம். என்கிட்டே வருவதற்கு முன்னாலே ‘ஷிகரம்’ வண்டி ஓட்டிக்கொண்டிருந்தார். பாதுஷாவுக்கு இவர் பேரிலே பிரியமாம்” என்றான்.

இதற்குள் கிழவன் கங்காதீன், “எசமான்! சுல்தானே ஆஜம் (காஜிவுத்தீன் ஹைதர்) அவர்களை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?” என்று கேட்டுவிட்டு, ஏக்கம் தாளாமல் குழந்தையைப்போல் விக்கி விக்கி அழுதான்.

நீலாம்பர தத் நெகிழ்ந்து போனார். இந்த மனிதர்கள் இவ்வளவு உணர்ச்சிவசப்பட்டவர்களாக ஏன் இருக்கிறார்கள்? அவருக்குப் புரியவில்லை. வெகு காலம் வரைக்கும் அறிவுச் செறிவைப்போற்றி

வந்தவர், இப்போது, உளப்பாங்கின் பெருமையை உணர்ந்து மெச்சிக் கொண்டார். பீட்டன், அமீனாபாத் நாற்சந்திக்கு வந்து சேர்ந்தது.

சட்டெனக் குதிரைகளை இழுத்து வண்டியை நிறுத்தினான்; எதிரே முட்டிக் கொள்பவள் போல் ஒரு கிழவி கிழிந்த சாதராவைப் போர்த்திக்கொண்டிருந்தவள் கைவிரித்துப் பிச்சை கேட்டாள். வண்டிக்காரன் கடிந்தான்: "வண்டியிலே சிக்கிச் சாகலாங்கிற எண்ணமா?" வண்டிக்குள்ளே அமர்ந்திருந்த நீலாம்பர தத் "இந்த லக்னோ என்ன கிழடுகளின் நகரமாகி விட்டதா?" என்று எண்ணினார். இங்கிருந்து வாலிபர்கள் யாவரும் வெளியேறி விட்டார்களா? பிச்சைக்காரி எதிரே வந்து குரல் கொடுத்தாள்.

நீலாம்பர தத் துணுக்குற்றார். குரல் பழக்கப்பட்டது போல் இருந்தது. இந்தக் குரல் மிக அழகாகப் பேசியிருக்கிறது; இனிய ராகங்களை இசைத்திருக்கிறது; கலகலவென்று நகைத்திருக்கிறது. முதியவர் நீலாம்பர தத் கண்ணாடியைச் சரியாகப் பொருத்திக் கொண்டு, வண்டிக்கு வெளியே உன்னிப்பாய்ப் பார்த்தார். அந்தப் பிச்சைக்காரி நின்று கொண்டிருந்தாள்.

"இவளுக்கு ஒண்ணும் கொடுக்காதீங்க, ஐயா! கோகின் (போதைப் பொருள்) பழக்கம் உள்ளவள். கிடைக்கிறதையெல்லாம் அதுக்கே செலவு செய்து விடுவாள்," என்று மெல்லத் தெரிவித்தான் சம்பு. நீலாம்பர தத் நடுங்கும் கையைப் பையில் விட்டு ஒரு ரூபாய் எடுத்து, பிச்சைக்காரிக்குக் கொடுத்தார். கிழவி அவரை ஏறிட்டுப் பார்த்தாள். வங்காளிக் கிழவர் என்பது புரிந்தது. கிழவர் அவளை இனம் கண்டு கொண்டார்; அவள் சம்பா; பேரழகியாகத் திகழ்ந்த கணிகை.

ஒரு ரூபாயைப் பெற்றதும் கிழவிக்குப் பிரமிப்பாக இருந்தது. இவ்வளவு தயாள குணமா? ஒரு காசு கேட்டதற்கு ஒரு ரூபாய் தருகிறாரே! உணர்ச்சிப்பெருக்குடன் அவள் பேசினாள்: "எஜமான்! நீங்க அமோகமாய் வாழணும். பேரன்—பேத்திகளை நல்ல நிலைமையிலே பார்த்து மகிழணும். நான் சிப்பாய் கலகத்தாலே சீரழிந்தவள், ஐயா! பாதுஷா அரசாண்ட காலத்திலே என் மாளிகை வாசலிலே யானை கட்டியிருந்தது. ஆனால் இப்போது அரைவயிறு சோற்றுக்கு இல்லாமல் திண்டாடுகிறேன். ஆண்டவன் உங்களுக்கு..."

சம்பு குதிரையை ஓட்டினான். வண்டி நகர்ந்தது. அவன் சொன்னான்: "இதே பேச்சுதான் இந்தக் கிழவிக்கு. வயதானவங்க எல்லாருமே இப்படித்தான் பழம்பெருமை பேசுகிறார்கள். சிப்பாய்க் கலகத்துக்கு முன்னே நான் சீமானாக இருந்தேன்... இப்படி இருந்தேன்... இந்தக் கிழவரையே பாருங்களேன். பாதுஷாவுக்குப் பரிவார சேவகராக அரண்மனையிலே மதிப்போடு இருந்தவராம்; இப்போது குதிரை தேய்க்கிறார், குளிப்பாட்டுகிறார், எனக்கு

உதவியாளாக!”

சம்பா அந்திப்பொழுதின் மங்கிய வெளிச்சத்தில் ஒரு ரூபாய் வெள்ளி நாணயத்தை அதிசயத்துடன் புரட்டிப் பார்த்தாள். மெல்ல நடந்துபோய் இருண்ட சந்துக்குள் நுழைந்தாள். அங்கே பொந்து போன்ற கடையில் கோகின் விற்கிறார்கள். கஞ்சா-அபினி-கோகின் குடிப்பவர்கள் அங்கே முடங்கிக் கிடக்கிறார்கள்.

நீலாம்பர தத் திரும்பிப் பார்த்தார். சம்பா நடுங்கும் கையில் ரூபாயை ஏந்தியவாறு பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அவளுக்கே நம்பிக்கை ஏற்படவில்லை போலும்! அவளுடைய நரைத்த தலைமயிர் வெள்ளையிழைகள் போல் பளபளத்தன. முகத்தில் நிறைய சுருக்கங்கள். பல ஒட்டுக்கள் போட்டுத் தைத்த சாதரா அழுக்கேறி இருந்தது.

நீலாம்பர தத் வண்டிக்குள் கண்மூடிச் சாய்ந்துகொண்டார். அவர் வைசாலி நகரின் சரித்திரப் புகழ்பெற்ற பேரழகி கணிகை ஆம்ரபாலியைக் கண்டுகொண்டார். கௌதம நீலாம்பர் உணர்ச்சி வசத்தில் கிடந்தார். கண்கள் பனித்தன.

கோமதி நதிக்கரையில் ‘ஷாஹே நஸப்’ மேட்டிற்கெதிரே ஸிங்காடோவாலீ மாளிகையில் மனோரஞ்ஜன் தத் குடியிருந்தான். அன்று இரவு அவன் தன் படுக்கையறையில் உறங்கிக் கொண் டிருந்தான். விளக்குகள் அணைக்கப்பட்டுவிட்டன. நீலாம்பர தத் வெளி வராந்தாவில் வந்து நின்றார். எதிரே கோமதி நதி. படித்துறை வராந்தாவின் முடிவில் தொடங்கியது. நீரோட்டத்தை வெகுநேரம் பார்த்துக் கொண்டிருந்தார். நடுநசி தொடங்கிவிட்டது நதிக்கரை யோடு நடந்தார். எங்கும் நிசப்தம். பின்னால் பேய்-பிசாசு-பூதங்கள் அணிவகுத்து வருவதாக எண்ணிக்கொண்டார். எதிரே தோணித் துறை; பாலத்திற்குக் கீழே பல தோணிகள் கட்டி வைக்கப்பட்டிருந்தன. சண்டீ தேவியின் ஆலயம் தென்பட்டது. மரங்களில் குரங்குகள் உறங்கின. பின்னால் பவனிவரும் பூதங்கள்—கோரைப் பற்கள் நீண்டு, நொண்டி நொண்டிக் குதித்துக் கொண்டுவரும் பூதங்கள் அவருக்கு அறிமுகமானவை.

அவத் ராஜ்யத்தை ஆண்ட பாதுஷாக்கள்- ஸயாதத் அலிகான், ஜான்பைலி, நஸிருத்தீன் ஹைதர், அவருடைய வெள்ளைக்கார நாவிதன், குஸஊதியா மஹல், கிழவர் முகம்மதலி ஷா, சிரில் ஹாவர்டு ஐஷ்லே, சுஜாதா, லார்டு மெக்காலே, பிஷப் ஹைபர்—இந்த ஆங்கிலேயப் பூதங்களையும் நீலாம்பர தத் அறிவார். இறந்தபின் அவர்கள் எந்த நரகத்திற்குச் சென்றார்களோ? பேயுருவில் இப்போதும் இங்கு திரிந்து கொண்டிருக்கிறார்கள். கௌதம நீலாம்பரன் உலகியல் மேன்மை- தாழ்மை, எழுச்சி-வீழ்ச்சி, வளமை-வறுமை எல்லாவற்றையும் கண் கூடாகக் கண்டிருக்கிறான். இனி எந்த விநோதம் மீதியிருக்கிறது

பார்க்க? நதி ஓடிக்கொண்டிருக்கிறது. இவற்றுக்கெல்லாம் பெயர்கள் உள்ளன. இவற்றுள் மனிதர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்கும் பெயர்கள் இருக்கின்றன. கற்களால் உருவான வீடுகள்; பக்கத்தில் கற்கள் சிதறிக் கிடக்கின்றன. காலம் சென்று கொண்டிருக் கிறது. கற்களில் உறைகிறது. மயானத்தில் சிதைத்தீக்கள் கனன்று கொண்டிருக்கின்றன. இன்று இரவு எத்தனை பிறவிகள்—யார் யாரெல்லாம் மரித்திருக்கிறார்களோ?

நீலாம்பர தத் மேலே நடந்தார். எதிரே மயானம். அங்கு காளி பரிவாரங்களுடன் தாண்டவமாடிக் கொண்டிருந்தாள். எல்லாப் படைப்புகளையும் இறுதியில் தம்முள் ஒடுக்கிக் கொண்டு விடுகிறாள். தன் ஆசாபாசங்களை எல்லாம் வென்று அவளுடைய தன்மையில் கலக்கும் பக்குவம் கொண்ட உபாசகர்கள்தாம் அவளைக்கண்டு பதறாமல் பூசனை செய்ய முடியும்.

எல்லா ஆசாபாசங்களையும் சாம்பலாக்கிவிடும் திறன் படைத்தது மயானம்! காளி தேவி சொல்லுக்கும் சிந்தனைக்கும் எட்டாத பராசக்தி; எல்லா உயிரினங்களையும் அழிவுக் கண்ணோடு பார்க்கிறாள்; சூனியத்தை முழுமையாக்குகிறாள்; முழுமைதான் பூர்ணம்! அது ஒளியும் சாந்தியும் நிரம்பிய நிலை. காளி சமாதி நிலையையே ஆடை அணியாகக் கொண்டவள்; அவளே எங்கும் பரந்து நிறைந்துள்ளவள்; எல்லையற்ற பரம்பொருள்; மஹா சக்தி; மாயைக்கும் மேம்பட்டவள்; அவளே மாயையாகி அகிலத்தையும் படைக்கிறாள்.

மயானத்தில் காளிதேவி சிவபிரானின் வெண்மையான சரீரத்தின் மேல் நிற்கிறாள். தீப்பிழம்புகளுக்கெதிரே, புகை மூட்டத் தினூடே காளி களி நடனம் புரிகிறாள். இவள் சாந்தரஸத்துடன் லலித நடனம் புரியும் போது சகல ஜீவராசிகளும் ஜய கோஷம் பிரிகின்றன.

கௌதம நீலாம்பர் காளி தேவியைச் சக்தியாகவும், கௌரி யாகவும், யோகமாயா ரூபத்திலும் தரிசித்தார். மயானத்தைக் கண்டதுமே அவருக்குக் காளி தரிசனம் கிடைத்துவிட்டது.

மதகுக் கவட்டையில் அமர்ந்து சிதைத்தீயைத் தரிசித்தார். பிறகு திரும்பி மாளிகைக்கு வந்து சேர்ந்தார்.

விடிகாலை நாலுமணிக்கு வீட்டு எஜமானி எழுந்து, வேலைக் காரியை எழுப்பி, "அடுப்பை மூட்டி, தேனீர் போடு; இன்னைக்கு ஆறு மணிக்கே குழந்தை பள்ளிக்கூடம் போக வேணும், கிளம்பு!"

பணிப் பெண் கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்தாள். குழாய்ப் பக்கம் சென்றாள். பெரிய எஜமான், சின்ன எஜமான் இரு

வருக்கும் ஷேவ் செய்துகொள்ளத் தண்ணீர் எடுத்து வைத்துவிட்டு, தேனீர் போடப்போனாள். குடும்பத் தலைவி பூஜையறைக்குச் சென்றாள். பூஜையறை இரண்டாவது மாடியில், கிழக்குப்பக்கம் பார்த்தவாறு இருந்தது. அறைக்குள் புழுக்கம், மழைக்காலத்து வெம்மையால் ஏற்பட்டது. கதவைத் திறந்ததும் கோபிநாதர் (கண்ணபிரான்) விக்கிரகம் எதிர் நோக்கியது. எப்போதும் போல் அந்தத் தைவப் படிமம் எதிரே சூனியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. மூர்த்திக்குக் குங்கும வண்ண ஆடை; சிரத்தில் மகுடம்; அதன் மேல் மயிலிறகு, ஒரு காலில் நின்று மற்றொரு காலைச் சாய்த்து வைத்துக்கொண்டு குழலூதும் நிலை. பித்தளை யிலான சிறு கோவில் மண்டபத்தில் மூர்த்தி வைக்கப்பட்டிருந்தது. தைவ மூர்த்தியின் திருமுகத்தில் பயங்கரமான மென் முறுவலிப்பு-புன்னகை தவழ்ந்தது. அறையில் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. பூஜைக்கூடத்திற்கு எதிரே மறுகோடியில் மற்றொரு அறை. கூடத்தில் இரு பெண்கள் படுத்திருந்தார்கள். மற்றொரு அறையில் அப்பெண் களின் சகோதரன் படுத்திருந்தான். பக்கத்தில் மேஜைவிசிறி சுழன்று கொண்டிருந்தது. கும்பட்டம் வைத்த அந்த அறையின் எட்டு வாசல் களும் திறந்திருந்தன. குளிர்ந்த காற்று வீசியது. அலமாரிகளில் பார்சி, உருது, ஆங்கிலப் புத்தகங்கள் ஏராளமாக இருந்தன. கட்டிலுக்குப் பக்கத்து மேசையில் நவீன முற்போக்கு உருதுப் பத்திரிகைகள் கும்பலாகக் கிடந்தன. சுவர்களில் நந்தலால் போஸ், அவ நீந்த்ர நாத் டாகுர், கஸ்தீகர், எம்.எல்.ஸென், ரவிவர்மா ஆகிய ஓவியர்களின் நீர் வண்ண ஓவியங்கள் அழகுற இடம் பெற்றிருந்தன. தலைமாட்டில் ஜவஹர்லால் நேருவின் படம் தொங்கியது. பல்கலைக்கழக மாணவர் குழுவின் போட்டோக்களில் 'டிராபி' வென்றவர்களின் குழுவினர், 1937, 38, 39-ஆம் ஆண்டுகளுக்கானவர் காட்சி தந்தார்கள். மூலையில் கோர்னிஸிற்கு மேலே ஒரு குழுவின் போட்டோ பழுப்பேறியிருந்தது. அதில் கி.பி. 1897 என்று குறிக்கப் பெற்றிருந்தது. இந்தக் குழுவும் கென்னிங் காலேஜைச் சேர்ந்ததுதான். இந்தப் படம் இப்போதுள்ள வாலிபனின் தந்தை மாணவராக இருந்த காலத்தில் எடுக்கப்பட்டது— அந்தக் காலத்துக் கோலம். அந்த மாணவன் ஃபேகல்டி ஆப் ஆர்ட்ஸின் சேர்மன் காலம் சென்ற டாக்டர் மனோரஞ்ஜன் தத்திற்குப் பின்னால் நின்று கொண்டிருந்தான். டாக்டர் மனோ ரஞ்ஜன் தத்திற்கு டாக்டர் மாதிரி நீண்ட தாடி(தாடி வைத்திருக்கிற வங்காளிகள் பொதுவாக டாகூர் மாதிரிக் காட்சி அளிக்கிறார்கள் என்பது வேறு விஷயம்). அவர் தம் கைத்தடியில் இரு கைகளையும் அழுத்தி வைத்தவாறு காமிராவையே முறைத்துப் பார்க்கிறார். டாக்டர் மனோரஞ்ஜன் தத் இந்த மாளிகையில் எழுபது வருடங் களுக்கு முன்பு குடியிருந்திருக்கிறார்.

கீழ் மாடியில் டிராயிங் ரூம். அதில் தீக் கணப்புக்கு மேலே ஒரு தைவ சித்திரம். அழகான நாற்காலியில் பழைய பாணியில் ஒரு கிழவன் உட்கார்ந்திருக்கிறான். இந்தப் படத்தைச் சுல்தான் ஆட்சிக்காலத்தில் ஓர் ஆங்கில ஓவியன் தீட்டியிருக்கிறான். கீழே உருதுவில் எழுதப் பட்டிருக்கிறது. ராய் ஜாதா பக்ஷீ முகம்மது சந்த். இந்த மாளிகையில் மூன்று கும்பட்டமுள்ள அறைகள். மூன்றாவது அறையின் தளம் பலகையிலானது. அங்கு இசைக்கருவிகள் இருந்தன. மாலையில் மாளிகைப் பெண்கள் சூரஜ் பக்ஷ் சாகபிடம் இசையும் நடனமும் பயிலுகிறார்கள். இங்குள்ளவர்களுக்கு இந்த மாளிகைதான் கேந்திர உலகம் (ஒவ்வொரு வீடும் அங்கு வசிப்பவர்களுக்குத் தனி உலகம் தான் !).

இந்த மாளிகையிலிருந்து பலருடைய இறுதிப்பயணம் தொடங்கியிருக்கிறது; புது மணவாட்டிகள் பல்லக்குகளில் இங்கு வந்து சேர்ந்திருக்கிறார்கள்; பல விழாக்களும் பண்டிகைகளும் இங்கு கொண்டாடப்பட்டிருக்கின்றன. இங்கு எத்தனையோ குழந்தைகள் பிறந்து, வளர்ந்து, ஓடியாடி, பருவங்களைக் கண்டிருக்கின்றன. வாழ்ந்த மக்களிடையே சண்டை-சச்சரவுகள், மகிழ்ச்சிகள், கேளிக்கைகள், அழுகை-சிரிப்புகள் யாவும் இங்கு நிகழ்ந்திருக்கின்றன. இவை யாவற்றையும் வாழாவிருந்து இந்த இல்லம் பார்த்து வந்திருக்கிறது. இதன் கதையை எவரும் கேட்பதில்லை. காலத்திற்கும் இந்த இல்லத்திற்கும் எப்போதும் ஓர் ஆதிக்கப் போட்டி. காலம் சூளுரைக்கிறது: "பார்க்கலாம்! நீ எவ்வளவு காலத்திற்குத்தான் எனக்கு அடையாளமாக-சாட்சியாக நின்று கொண்டிருக்கப் போகிறாய்?" இல்லம் மௌனமாகவே இருந்து வருகிறது. ஆண்டுகள், நூற்றாண்டுகள் மாறி விடுகின்றன. பருவங்கள் வந்து போகின்றன. இது போன்ற இல்லங்கள் காலக்கடலில் நங்கூரமிட்டு நிற்கின்றன. சில சமயங்களில் காலக்கடலின் பேரலைகள் இந்தத் திடமான தடயங்களையும் கலைத்துக்கொண்டு போய் விடுகின்றன. பிறகு சிறு சுவடுகள் கூட எஞ்சியிருப்பதில்லை. இருந்த இடம் கூட மாறி விடும்.

இந்த மாளிகையின் தோற்றம் நவாப் ஸயாதத் அலி கான் ஆட்சிக்காலத்தில், அவருடைய நிதி அமைச்சர் ராய் ஜாதா பக்ஷி மெஹதாப் சந்தின் முயற்சியால் ஏற்பட்டது. இப்போது அந்த மெஹதாப் சந்தின் கொள்ளுப்பேரன் இங்கு வசிக்கிறார். சாதாரண பாரிஸ்டர். இவருக்கு ஒரு மகன், இரு பெண்கள். மூவரும் படிக்கிறார்கள்; வாலிப வயது.

பாரிஸ்டரின் நேரம் பெரும்பாலும் காங்கிரஸ் கட்சியின் செயல்களுக்கே போய்விடுகிறது. மீதி நேரங்களில் முனைந்து உட்கார்ந்து 'ஜமானா', 'நிகார்' பத்திரிகைகளுக்கு உருதுக் கவிதைகள் பற்றி விமரிசனக் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருப்பார். இந்த

நிலைமையில் வழக்காடும் தொழிலை எப்படி மேற்கொள்ள முடியும்? ஜமீன்தார் சொத்து ஏராளமாக இருந்தது; வீட்டுச் செலவுக்கு கவலை இல்லை. இரு பெண்களுக்கும் திருமணச் செலவுக்குப் பணம்-பண்டங்கள் தனியாக ஒதுக்கப்பட்டிருந்தன. மகனை கேம்பிரிட்ஜுக்கு மேல்படிப்புக்காக அனுப்பி வைக்கப் போகிறார். அவரும் அங்குதான் படித்தார். இப்போது காலை வேளையில் பால்கனிக்கு மேலே மாடியில் கொசுவலை கட்டிய கட்டிலில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார். அவர் மனைவி போடும் சத்தம் எல்லாரையும் எழுப்பிக் கொண்டிருக்கிறது. போதாததற்கு பாதக் குறடு அணிந்து நடக்கும்போது எழும் ஓசை எவரையும் தூங்க விடுவதில்லை. பிறகு பூஜை அறையில் அமர்ந்து ராமாயணம் படிக்கத் தொடங்கினாளானால் வீடு முழுவதும் எதிரொலிக்கும். குளிர்ந்த இளங்காற்று வீசிக் கொண்டிருந்தது. எதிரே நதியில் பனிமூட்டம் கவிந்திருந்தது. மோதீ மஹல் பாலத்தில் சந்தடி தொடங்கவில்லை.

"எழுந்திரம்மா! குழந்தை! எழுந்திரு! இன்னைக்கு காலையிலே ஸ்கூல் ஆரம்பம்" பணிப்பெண் ஜமுனா சிறுமியை எழுப்பினாள். சிறுமி வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள். கட்டிலிலிருந்து குதித்துக் குளியலறைப் பக்கம் ஓடினாள். மூத்த பெண் சோம்பல் முறித்துக் கொண்டு படுக்கையில் புரண்டாள். நதியைப் பார்த்துக் கொண் டிருந்தாள். பதினெட்டு வயதுக் குமரி. கல்லூரியில் படிப்பவள். ஜூலை பதினாலுக்குக் காலேஜ் திறக்கிறார்கள். விரைவில் இவளுக்குத் திருமணம் நடக்கப் போகிறது. காலேஜைப் பற்றி இவளுக்குக் கொஞ்சமும் கவலை கிடையாது. நிம்மதியாகப் படுத்தபடியே நதியின் நீரோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

கும்பட்டம் உள்ள மூலை அறையிலிருந்து இப்பெண்களின் சகோதரன், செருப்பு மாட்டிக்கொண்டு அபினி குடித்தவன் போல் வெளியே வந்தான். கூடத்துத் தூணில் சாய்ந்து நின்று சோம்பல் சுணக்கத்துடன் நதியை நோட்டம் விட்டான்; பாலத்தைப் பார்த்தான். பெரிதாகக் கொட்டாவி விட்டு, சோம்பல் முறித்தான். துவாலையைத் தோளில் போட்டுக்கொண்டு, கட்டைக் குரலில் தெளிவில்லாமல் பாடியவாறு குளியலறைக்குச் சென்றான்.

"ஸ்கூலிலே உன் சினேகிதியிடம் சொல்லி, சாயந்திரம் இங்கே வந்து உன் அக்கா பாவாடைக்கு எம்பிராய்டரி பார்டரை முடித்து விட்டுப் போகச் சொல்!" எசமானி அம்மாள் பூஜை அறையிலிருந்து வெளியே வந்து சின்னப் பெண்ணிடம் அறிவித்தாள். அவள் அவசர மாகத் தேனீர் குடித்து விட்டுப் பள்ளிக்கூடத்திற்கு ஓடினாள். கீழே பால்கனிப் பக்கம் லாமார்ட்டினேயர் ஸ்கூல் பஸ்ஸின் ஹார்ன் அடித்தது. "சரி, அம்மா! சொல்லிவிடுகிறேன்." படிகளில் இறங்கி

விரைந்து கொண்டே பெண் பதில் சொன்னாள். வீட்டு எசமானியை பாரிஸ்டர் பம்பாய், கல்கத்தா, காஷ்மீர் எல்லாம் அழைத்துப் போயிருக்கிறார். வருடந்தோறும் நைனிடால், மிசௌரி என்று கோடையைக் கழிக்கப் போய்விடுவார். தம் பழக்க வழக்கங்களில் துளியும் மாறுதலை விரும்பாதவர்.

பெரிய பெண் மாடிக்கூடத்திலிருந்து கீழே குனிந்து பார்த்தாள். தோட்டத்துப் பாதையில் ஸ்கூல் பஸ் நின்று கொண்டிருந்தது. பஸ்ஸில் மூன்று நான்கு இந்தியப் பெண்களைத் தவிர மற்ற யாவரும் வெள்ளைக்காரப் பெண்கள். இந்தியப் பெண்களில் ஒருத்தி கையசைத்து உரக்கத் தெரிவித்தாள் "மேரீஸ் காலேஜிலிருந்து சாயந்திரம் இங்கே வருகிறோம்".

"நல்லது!" பெரிய பெண் பதிலளித்தாள்.

பஸ் வெளியிலுள்ள கேட்டைக் கடந்து சென்றது.

பையன் சீட்டி அடித்துக்கொண்டு கீழே இறங்கினான். சைக்கிளில் ஏறிக்கொண்டு யூனிவர்சிடிப் பக்கமாக விரைந்தான்; கையில் ஒரு நோட்டுப் புத்தகம் மட்டும் இந்தது.

பகலவன் வெளிக் கிளம்பி விட்டான். உலக இயக்கம் தொடங்கி விட்டது. பொழுது வளர்ந்து தேய்ந்து மாலைப்பொழுது நெருங்கியது. விளக்குகள் ஒளிர்ந்தன. நதிக்கரையிலுள்ள அந்தப் பழைய மாளிகையிலிருந்து பெண்களின் பலத்த சிரிப்பொலிகள் அடிக்கடி வெளிவந்தன. நாலைந்து வாலைக்குமரிகள் கீழ் வராந்தாவில் அமர்ந்து பேசிச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்குத் துயரம் என்பதே தெரியாது. இவர்களுக்கு துயரம் இன்னும் அறிமுக மாகவில்லை.

மாடிக்குப் பின்புறம் சூரியன் மறைந்தான். நதித் துறையிலிருந்து புறப்படும் தோணிகளில் விளக்குகள் எரியத் தொடங்கின. நதி தன் பயணத்தில் எப்போதும் போல் இயங்கியது.

# 20

பகலவன் நாவல் மரங்களுக்கிடையே சரிந்து மறையும்போது, பீட்டன் வண்டி மேரீஸ் காலேஜிலிருந்து திரும்பி, தன் இயல்பான சமகதியுடன் வந்து நதியைக் கடக்க மேம்பாலத்தை அடைவது வழக்கம். பாலத்தைக் கடந்து நீண்டு செல்லும் தரமான சாலைக்கு யூனிவர்ஸிடி ரோடு என்று பெயர். அதன் இரு மருங்கிலும் நதியை ஒட்டியே இரு சாதாரண வண்டிப்பாதைகள் போகின்றன. இங்கிருந்து நதிக்கரைப்

பக்கமாகவே சாந்த்பாக் பூங்கா வரையிலும் வீடுகள் எழும்பி யிருக்கின்றன; எல்லாம் பங்களாக்கள். அங்கு இஸபெல்லா தார்பன் காலேஜ் இருந்தது; அமைதியான இடம். எப்போதாவது ஓரிரு மோட்டார்கள் அந்தப் பக்கமாக வரும், போகும். கல்லூரி மாணவ-மாணவிகள் சைக்கிளில் அந்தப் பக்கமாகப் போய் வருவார்கள். புறநகர் டாலீகஞ்ஜ் பக்கம் 'இக்கா' குதிரை வண்டிகள் பைஜாபாத் ரோடு வழியாகப் போகும். அப்பால் முஸ்லீம் மகளிர் கல்லூரி. அதற்கப்பால் துவரை, கரும்பு வயல்கள்; பேப்பர்மில். மில் இயங்கும் ஓசை காலகதிக்குத் தடையாக ஒலித்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பக்கத்தில் மரப்பாலம் இருக்கிறது. அங்கிருந்து 'சிரையாஜீல்' ஏரிக்கும், 'பைம்ஸாகுண்ட்' சுனைக்கும் போகவேண்டும். அவற்றுக்கு அப்பால் சிக்கந்தர் பாக், பனாரஸீ பாக் தோட்டங்கள். இந்த வட்டாரம் முழுவதுமே அரசாங்க அலுவலகங்கள் இருந்த இடம். அதற்குப் பின்னால் காஜிவுத்தீன் ஹைதர் கால்வாய் ஓடுகிறது. அது ஹஜரத் கஞ்ஜ், லாமார்ட்டினேயர் காலேஜ், லாமார்ட்டினேயர் ரோடு, பசுமை மண்டிய புதர்க்காடுகள் எல்லாம் கடந்து தில்குஷா பாலஸ் பக்கம் பெருகுகிறது. அதற்கு அப்பால் பரந்த ராணுவ முகாம்.

மோதீ மஹல் பாலத்திற்கு அப்பால் மேரிஸ் காலேஜ்; கேஸர் பாக் பூங்காவின் நுழைவாசல்; பிறகு பூங்கா. அதற்கப்பால் அமீனாபாத் பூங்கா, அமீருத்தௌலா பார்க். பிறகு சாலைகள், கால்நடைச் சந்தை, நாற்சந்திப் பக்கம் நீள்கின்றன. அங்கு மெடிகல் காலேஜ் இருந்தது. அப்பால் ஷாஹ்மீனா தர்க்கா, இமாம்பாடா (சமாதிக்கூடம்), ஹுஸைனாபாத். அங்குதான் அக்பரீ தர்வாஜா, கோல் தர்வாஜா எனும் தலை வாசல்கள் இருந்தன. இந்தப் பகுதி முழுவதுமே பழைய லக்னோ நகர். புதிய லக்னோவிலிருந்து தொலைவில் இருந்தது. புதிய நகரில் பழைய நகரின் பல அமைப்புகள் இருந்தன. பாதுஷாவின் அரண்மனை இருந்த இடத்தில் கவர்ன்மெண்ட் ஹவுஸ் இடம் பெற்றிருந்தது. நதிக்கரையிலிருந்த மோதீமஹல் மாளிகை இப்போது இம்பீரியல் வங்கியாகிவிட்டது. ஹஜரத் கஞ்ஜ் பகுதியின் நடுவில் பேகம் மாளிகை இருந்தது. சதர்மன்ஸில் மாளிகை இப்போது கிளப் ஹவுஸ். இந்த லக்னோ மிகச் சீரும் சிறப்பும் கொண்ட நகரம். இங்குள்ள பொருள்கள்-இடங்கள் புதியவையானாலும் பழமை கொண்டவை. இந்தப் பட்டணத்தில் காலம் மிக மிடுக்காவும், பெருந்தன்மையாகவும், நிதானமாகவும் அடியெடுத்து வைக்கக் கற்றுக்கொண்டது.

இந்தச் சூழலில் பீட்டன் வண்டி அந்திவேளையில் மெல்ல விரைந்து மோதீமஹல் பாலம் வரைக்கும் வந்து சேருகிறது. பாலத் திலிருந்து இறங்கி யூனிவர்சிட்டி ரோடில் போகாமல், இடதுபக்கம்

திரும்பி மண் ரோட்டில் போவதும் உண்டு. அங்குதான் பழைய காலத்து நினைவுகளைக் கிளப்பும் சில மாளிகைகள் இருக்கின்றன. பீட்டன் ஓட்டும் கங்காதீன் உற்சாகமாக ஓட்டிச் செல்லுகிறான். குனிந்து உள்ளே பார்த்து, "சின்னம்மா! 'சிங்காடே வாலீ' மாளிகைக்குப் போகவேண்டாமா?" கேட்கிறான். பீட்டனிலிருக்கும் யுவதி தலயத் சிந்திக்கிறாள்.

இந்தக் கதையை இங்கிருந்து ஆரம்பிக்கிறேன். பழைய கதைகளைச் சொல்லப் பலவகைகள் இருக்கின்றன. எந்தவகையில் சொல்வதென்றே எனக்குப் புரியவில்லை. எந்தப் பாத்திரம் அதிக முக்கியத்துவமுள்ளது? கதையை எங்கிருந்து தொடங்குவது? உச்சகட்டம் எங்கே இருக்கும்? கதாநாயகி யார்? கதை முடிவு எப்படி அமைக்க வேண்டும்? கதாநாயகன் யார்? இந்தக் கதையைக் கேட்பவர் எவர்? என் அண்ணன் கமால் ஒருகாலத்தில் சொல்லிக்கொண்டிருந்தான்: "இதையெல்லாம் தீர்மானிக்கிறேன்" ஆனால் அவன் எதையும் தீர்மானிக்கவில்லை. பிறகு சம்பாபாயிடம் இதைப்பற்றிக் கேட்கலா மென்றால், யார் அவளிடம் போய் கேட்பது...? 'சரி, போகலாம்.' என்று நான் கங்காதீனிடம் சொல்லுவேன்... பிறகு? மெல்ல வண்டி மண்சாலையில் போகும். எல்லையில்லாத அமைதி. இதே வழியில் வெகுதூரம் போனால் மயானம் இருந்தது. நதிநீரில் மோதீ மஹலின் அழகிய கட்டிடம் நிழலாக நடுங்கிக் கொண்டிருக்கிறது. சதர் மன்ஸிலின் தங்க நிறக் கும்பட்டம், நஸப் அஷரபின் சமாதிக்கூடம் இவற்றின் படித்துறைகளுக்கடியில் பணிவோடு ஒழுகிக் கொண்டிருந்தது. 'சிங்காடேவாலீ' மாளிகையின் படித்துறையும் நதிப்பிரவாகத்தில் நனைந்திருக்கும். எட்டு கும்பட்டங்கள் கொண்ட இரண்டு மாடிக்கட்டிடம் இப்போது பாசி பிடித்துப் பசுமை பதிந்திருக்கிறது.

குளிர் காலத்தில் மாலையில் ஆதவன் விரைவில் மறைந்து விடுகிறான்.

'சின்னம்மா! நிர்மலா வீட்டுக்குப் போகவேண்டாமா?' கங்காதீன் பீட்டன் வண்டியின் கோச் பாக்ஸில் அமர்ந்தவாறு வினவினான். பிறகு வண்டி சிங்காடேவாலீ மாளிகையை நோக்கிப் போகிறது. 'இந்தா, அண்ணன் உனக்காக 'ஆமத் நாமா' புத்தகம் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்'. யுவதி லாஜ், மாடி முகப்பிலிருந்து குரல் கொடுக்கிறாள்.

அண்ணன்-ஹரிசங்கர் ஸ்ரீவாஸ்தவ் பல்கலைக்கழகத்தில் மாணவன்; பி.ஏ. வகுப்பில் பார்ஸி மொழியை சிறப்புப்பாடமாக எடுத்துக் கொண்டிருக்கிறான். நிர்மலாவின் அக்காள் லாஜ்(லாஜ்வதி)

*சாவகாசமாகக் கால்மேல் கால் போட்டுக்கொண்டு நதியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். 'ஞானம் குசுமாவுக்கு என்ன பதில் சொன்னான்? சொல்!' என்கிறாள்.*

*மேரிஸ் காலேஜில் பாலிடிக்ஸ் வகுப்பு தொடங்கிவிட்டது. லாஜ் அங்கு இறுதியாண்டுத் தேர்வில் தேறிவிட்டாள்; அவளுக்குத் திருமணமாகப் போகிறது.*

*'ராஜகுமாரி லாகூர் போகிறாள்'. நான் சொன்னேன்.*

*'லாகூரா! அடேயப்பா!'*

*'லாகூர் தொலைதூரத்தில் இருக்கிறதே. பூகோளத்தின் மறுபகுதிதான் அது. சிங்கப்பூர் போகிறமாதிரிதான்?*

*கால் சதங்கைகளைக் கட்டிக்கொண்டே நிர்மலா வெளியே வந்து தன் கருத்தைத் தெரிவித்தாள்: 'அப்படியா! முதலிலே அவளும் என்னோடு மேரிஸ் காலேஜில் படித்துக் கொண்டிருந்தாள். போனவருடம் அவள் படுக்கையில் கிடந்தபோது டாக்டர்கள் ஓய்வு தேவை என்று சொல்லிவிட்டார்கள். இப்போது எங்கள் தோழி மாலதியின் அண்ணன் தினமும் மாலையில் வந்து ஒருமணிநேரம் டியூஷன் சொல்லிக் கொடுக்கிறான். மேலும் அவள் சம்பு மஹராஜ் பரம்பரையைச் சேர்ந்த 'கத்தக்' நடன ஆசிரியரிடம் தினமும் பயிற்சி பெறுகிறாள். லாமார்டினேயர் பள்ளியில் நாங்கள் இருவரும் ஒரே வகுப்பில் படித்தோம். இரண்டு ஆண்டுகளுக்குப்பிறகு ஸீனியர் கேம்பிரிட்ஜ் பரீட்சை எழுதப்போகிறோம். 'எங்களில் ஒருத்தி லாகூர் போகப்போகிறாள் என்றால் விசித்திரமாக இருக்கிறது' என்று சிந்தித்த நிர்மலா ஏதோ துணிச்சலான செயலில் இறங்க முனைந்தவள் போல் பேசினாள்: "புதிய புதிய இடங்களைப் பார்க்க வேண்டுமென்கிற ஆவல் எனக்கும் ஏற்படுகிறது."*

*நதியில் மறையும் சூரியனின் கிரணங்கள் அலைகளில் வண்ண ஜாலங்களைக் காட்டின. சகல உலகமும், எல்லாப் படைப்புகளும், வாழ்வுக்கு அப்பால் நாம் என்னென்ன கற்பனைகள் செய்து வைத்திருக்கிறோமோ, அவை யாவும் எதிரே நதியின் அலைகளில் நடனமாடுகின்றன. பாதுஷா காலத்து மாளிகைகள், (நாங்கள் இப்போதும் அத்தகையதொரு மாளிகையில்தான் வசிக்கிறோம்) தொலைவில் தெரியும் சிவப்புக்கல் பாலம், போட்கிளப்பின் தோணிகள், சிங்காடேவாலீ மாளிகையின் பத்திரமான பாசிபிடித்த படிக்கட்டுகள்... புவியியல் வல்லுனர்களைப் போல் மூளையை வருத்திக் கொண்டு யோசிக்கிறோம். 'இதற்கெல்லாம் அப்பால் என்ன? இவற்றுக்குப் பிறகு என்ன ஆகும்?'*

*'அப்பி! நீங்கள் இங்கிருந்து விடைபெற்று எங்கே போவீர்கள்?' நிர்மலா கேட்கிறாள்.*

*'அண்ணா அழைத்துப்போகிற இடத்திற்கு; வேறெங்கே போவது?'*

நான் (தலயத்) எரிச்சலுடன் பதிலளிக்கிறேன்.

'அண்ணா எங்கே போவார்?'

'எனக்கென்ன தெரியும்?'

இந்தச் சமயத்தில் கமால் மூலையிலிருந்து எழுந்து வந்தான். மேஜையில் சாய்ந்து நின்றுகொண்டு, தலயத்தின் நீண்ட பேச்சு எப்போது முடியப் போகிறது என்று காத்திருந்தான். பிறகு, அவள் விட்ட இடத்திலிருந்து கமால் பேசத் தொடங்கினான்—க்யூ வரிசை மாதிரி.—

தலயத் 'அண்ணா' என்று குறிப்பிட்டது என் சித்தப்பா பிள்ளையை. இவர் என் சகோதரியின் கணவராகவும் ஆகலாம். இளம்பிராயத்திலிருந்தே இந்தப் பேச்சை நான் கேட்டு வருகிறேன். அண்ணா படித்து முடித்துப் பெரிய மனிதராகியதும் 'அப்பி' அவர் மனைவியாவாள். எனக்கு யாரும் சொந்தச் சகோதரர் கிடையாது. அந்த ஒன்றுவிட்ட அண்ணன்தான் என் கதாநாயகன். அண்ணா பல ஆண்டுகளாக எங்கள் வீட்டில் இருந்து வந்தார். சித்தப்பா சுவிட்ஜர்லாந்தில் திடீரென்று காலமாகியதும், அண்ணா இறுதி வணக்கம் செலுத்த அங்கு போனார். அப்போது அண்ணா லூஸான் நகரில் ஒரு ஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தார். பிறகு அண்ணாவை சுவிட்ஜர்லாந்திலிருந்து இங்கு வரவழைத்தார்கள். அண்ணா பம்பாயிலிருந்து நேரே எங்கள் வீட்டுக்கு-அலமோட்சாவுக்கு வந்து சேர்ந்தார். அப்போதைய காட்சி நினைவு வருகிறது. வந்ததும் கீழே பால்கனிக்கடியில் ஃபுல்சூட் அணிந்தவாறு நின்றார். சுவிஸ் ஸ்கூலில் அணியும் பச்சையும் நீலமுமாகக் கோடுகள் கொண்ட மஃப்ளர் அவர் முகத்தைப் பெரும்பாலும் மறைத்திருந்தது. கண் இமைகள் அழுது அழுது வீங்கியிருந்தன. மூக்கு சிவந்திருந்தது. அவர் என்னையும் அப்பியையும் அருகில் அழைத்து, அணைத்துக் கொண்டு, கேவிக்கேவி அழுதார். அப்பி அப்போது சிறுமி. அப்பி என் அக்காள்.

இதற்குப் பிறகு அண்ணா எங்களுடன் இருக்கலானார். எங்கள் தாத்தா அண்ணாமீது உயிரையே வைத்திருந்தார். எங்கள் தாய்க்கு அண்ணாவிடம் அளவிலாப் பாசம். அண்ணாவின் தாய் முன்பே காலமாகிவிட்டாள். குடும்பம் முழுவதும் அண்ணாவிடம் மிக வாஞ்சையாக இருந்தது.

அண்ணா எங்கள் சித்தப்பா மர்ஹூம் அவர்களின் ஒரே மகன். கோடை விடுமுறைக்குப்பிறகு, அண்ணா லாமார்ட்டினேயர் காலேஜில் சேர்ந்தார். இந்தக் காலேஜ் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு நவாப் ஆஸிபுத் தௌலாவின் பிரதான தர்பாரி ஜெனரல் க்லாட் மாரிட்டின் (பிரெஞ்சுக்காரர்) தன் பணத்தைப் பே ட்டு வெள்ளைக்காரப் பிள்ளைகளுக்காக இக்கல்விக்கூடத்தை நிறுவினார்.

இங்கு பிரச்சினை இதுதான்: இந்தக்கதைக்கு ஹீரோவாக அண்ணன் இருக்கலாமா? அண்ணனிடம் ஹீரோவுக்குள்ள சிறப்பியல்புகள் சகலமும் இருக்கின்றன. கதை கூறும்போதே பாத்திரங்களின் தராதரத்தையும் நிர்ணயித்துவிட விரும்புகிறேன். இதுகாறும் சொன்னதெல்லாம் ஒரு ஹீரோவுக்குத் தேவையான கவர்ச்சியுள்ள சூழ்நிலையை உருவாக்கியிருக்குமென்று நினைக்கிறேன். வாசக நேயர்கள் புத்திசாலிகள். சூழ்நிலையை ஏற்பார்கள். பழங் காலத்து ரசனையுள்ள வாசகர்களுக்கு இதைப்படித்ததும் சலிப்பும் எரிச்சலும் ஏற்படாது. மேலும் அண்ணன் நல்ல அழகன். பிரான்சிலும், சுவிட்ஜர்லாண்டிலும் ஆரம்பத்தில் படித்து வந்ததால் நடையுடை பாவனைகள் பிரஞ்சுக்காரர் மாதிரி இருந்தன. பிறகு நிறுத்தி நிதானித்து ஆங்கிலம் பேசத்தொடங்கியதும், எப்படித்தான் இஸபெல்லா தார்பன் கல்லூரி மாணவிகளின் உள்ளங்களில் உணர்ச்சிகளைக் கிளர்த்தினாரோ! எப்படித்தான் ஏங்க வைத்தாரோ அவர்களை!

அப்பியும் அண்ணாவும் ஒருவர் விஷயத்தில் மற்றவர் குறுக்கிடுவ தில்லை. இருவுக்குமே தனித்தனிக்குழு உண்டு. அப்பிக்கு அண்ணனின் நண்பர்களைக் கண்டால் பிடிக்காது. அண்ணன் அப்பியின் தோழி களைக் கிண்டல் செய்வார். லாஜ்வதி ஸ்ரீவாஸ்தவ் அப்பியின் மிகப் பிரியமான தோழி; என் காதல் நண்பர் ஹரிசங்கரின் தங்கை. சம்பாவைப் பற்றிப் பேச்சு வரும்போதெல்லாம் லாஜ்வதி ஏனோ மௌனமாகி விடுகிறாள். அப்பி பித்தியைப்போல் உட்கார்ந்து சிரித்துக் கொண்டிருப்பாள்; ஹரிசங்கர் அசடனைப் போல் சிகரெட் புகைக்கத் தொடங்கிவிடுவான். சம்பா எங்களில் எவருடனும் சேராதவள். ஒதுங்கியிருப்பவள்; எங்களுக்குப் புதிர் போன்றவள். நாங்கள் ஒருவரை மற்றவர் பரம்பரை பரம் பரையாக அறிவோம்; ஒரே சூழ்நிலை, ஒரே வர்க்க உணர்வு எங்களைப் பிணைத்து வருகிறது. ஆனால் சம்பாவின் பின்புலம் என்ன என்பது எங்களுக்குத் தெரியாது. எங்களுக்குத் தீர்மானமான ஐயப்பாடு உண்டு: சம்பா கீழ்மட்ட மத்திய தரக் குடும்பத்தைச் சேர்ந்தவளோ? அண்ணா லா காலேஜில் படிக்கும்போது, சம்பா பனாரஸிலிருந்து வந்து இஸபெல்லா தார்பன் காலேஜில் சேர்ந்தாள். இது நடந்தது 1941–ல்.

அப்பி லாமார்ட்டினேயர் ஸ்கூலிலிருந்து இஸபெல்லா தார்பன் காலேஜுக்கு வந்துவிட்டாள். அப்பி படிப்பை முடித்துவிட்டு வந்த வருடம், அண்ணாவுக்கும் அவளுக்கும் நிச்சயமாகி வந்த திருமணப் பேச்சு முறிந்தது.

எனக்கொரு சந்தேகம். நான் விரிவாக-விளக்கமாக அந்தக் காலத்துக் கதையைச் சொல்லிவிட முடியுமா? நான் விரும்புகிற அளவுக்கு வெளிப்படுத்த முடியாதுதான். பல செய்திகள்

அற்பமானவை. பாதுஷா பார்க் சுல்தான் காலத்தில் கொண்டிருந்த நுழைவாயில் கதவுகள், மலர்ப் பீடங்கள், தெரு வழியாகச் செல்லும் பணிப்பெண்கள், சிவப்புப் பாவாடை அணிந்து மதியப் பொழுதில் சாலையில் புளியம்பழம் பொறுக்கும் கிழவி ஒருநாள் ரயிலில் அறைபட்டுச் செத்தது—இதெல்லாம் எனக்குப் பெரிய தகவல்கள். வாசகர்களுக்கு இவை உதவாக்கரையாகப் படும். இவை யாவும் பழைய மதிப்புடன், செல்வாக்குடன் திரும்பவும் வரவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். இதற்குத்தான் 'கம்யூனிகேஷன்' என்று பெயர். நான் கலைஞன் இல்லை; ஆதலால் என்னால் கம்யூனிகேட் செய்ய முடியாது. ஆதலால் தற்போது உள்ளவற்றை ஏற்போம்.

இதோ பாருங்கள்: இது பெனெட் ஹால்; நான் இதன் உயரமான இடத்தில் அமர்ந்திருக்கிறேன். ரேடியோவில் பட்டமளிப்புவிழா குறித்து விமரிசனத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். கீழே கறுப்புக் கேப், கௌன் அணிந்தவர்கள் இங்குமங்குமாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். நேரம் விரைகிறது. கீழே புல் தரையில் மக்கள் குழுமியிருக்கிறார்கள். கார்கள் வரிசையாக நிற்கின்றன. அண்ணா சிவப்பு விரிப்புள்ள நீண்ட பாதையில் சம்பாவுடன் நடந்து போகிறார். ஒலி பெருக்கியில் நியூ தியேட்டர்ஸாரின் புதிய ரிகார்டு ஒலிக்கிறது. பஹாடீ ஸன்யாலின் குரல் எடுப்பாக ஒலிக்கிறது. எதிரே பல்கலைக் கழகத் துணைவேந்தர் வந்து கொண்டிருக்கிறார். அவருடன் பல பேராசிரியர்கள் அங்கிகளை அணிந்து கொண்டு வருகிறார்கள். ஆனால் ஒருகாலம் வரும்; மனிதர்களில் ஒருவர்கூட மீதமிருக்க மாட்டார்.

இப்போது நான் மைக்ரோபோனை என் மதிப்புக்குரிய நண்பன் ஹரிசங்கரின் கையில் கொடுக்கிறேன். "ஹலோ! ஹலோ!"

விளக்குக்குப் பின்னால் இருட்டில் மறைந்திருந்த ஹரிசங்கர் பதில் சொன்னான். குரல் மட்டும் கேட்டது. "ஹலோ... ஹலோ! நான் ஹரிசங்கர் ஸ்ரீவாஸ்தவ் பேசுகிறேன். கமாலின் நண்பன் நான். லாஜ்வதிக்கும் நிர்மலாவுக்கும் அண்ணன், சம்பாவின் நண்பன் நான். என் பங்கு இந்தக் கதையில் முக்கியமானது. என் பங்கிற்குப் பல கோணங்கள் இருக்கின்றன. எங்கிருந்து தகவலைத் தொடங்குவது "அரங்கில் எப்படிக் காட்சியளிப்பது என்பது சிக்கலானது."

தலயத் பேசத் தொடங்கியிருக்கிறாள். பீட்டன் வண்டி திருப்பத்திலிருந்து இறங்கித் தெருப்பள்ளங்களைக் கடந்து, ஒரு குலுக்கலுடன் சிங்காடேவாலீ மாளிகைக்குள் நுழைந்தது. அப்பியின் திருமணப்பேச்சு முறிந்த ஆண்டில் நடந்தது.

லாஜ்வதி உள்ளேயிருந்து வந்தாள். அவள் குங்கும வண்ணச் சேலை உடுத்தியிருந்தாள். திருமணமாகி விட்டது. அப்பியும் அவளுடன் வெளியே வந்தாள். லாஜ்வதியைப்போல் அப்பி காலில்

மங்கல அணி பூணவில்லை. நான் பீட்டன் வண்டியிலிருந்து இறங்கி உள்ளே ஓடினேன். 'அப்பி! நீங்கள் இங்கே எப்போது வந்தீர்கள்? ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வந்ததும் கமால் அண்ணா உங்களைப் பற்றிக் கேட்டார். நான் வண்டியில் பையாகுண்ட் பக்கமாக வந்து கொண்டிருந்த போது, சம்பாவின் வீட்டுப் புல்வெளியில் இரண்டு பேரையும் பார்த்தேன்?'

"யார் இரண்டு பேரையும்?"

'பெரிய அண்ணாவும் கம்மன் அண்ணாவும் சம்பாவின் வீட்டுக்கெதிரில் சரக்கொன்றை மரத்தினடியில் அமர்ந்திருந்தார்கள். சம்பா என்னைப் பார்த்துக் கையசைத்தாள்; முறுவலித்தாள். சம்பா பார்க்க மிக அழகாக இருந்தாள்'—ஒரே மூச்சில் சொல்லி முடித்தேன்.

அப்பியும் லாஜ்வதியும் ஏதும் பேசாமல் பாத்திகள் வழியாக நடந்தார்கள். நான் சொன்னதைக் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. நான் மல்லிகைப் புதரைக் கடந்து உள்ளே போனேன் நிர்மலாவைச் சந்திப்பதற்கு. அவளும் மாலதியும் மியூஸிக் ரூமில் அமர்ந்திருந்தார்கள்.

'பெரிய அண்ணா மிர்ஜாபுர், தில்லியெல்லாம் போயிருந் தாரில்லையா?' மாலதி கேட்டாள்.

'ஆம்; இன்று காலையில்தான் வந்தார். வந்ததும் சம்பா வீட்டிற்குப் போய்விட்டார். இப்போது அங்குதான் இருப்பார்;' நிர்மலா சொன்னாள்.

அப்போது எனக்கு கதீர் சாகப்பின் மனைவியின் பேச்சு நினைவு வந்தது. நான் காலேஜிலிருந்து திரும்பிவந்ததும் டீ குடிக்க உட்கார்ந்த போது அந்த அம்மாள் முகம் தாழ்த்திச் சொன்னாள்: 'பெரிய பெண் (அப்பி) கலியாணத்திற்குச் சம்மதிக்கவில்லையாமே.'

நிர்மலா சொன்னாள்: 'அப்பியின் கலியாணத்தின்போது உடுத்திக்கொள்ள நல்ல புடைவையாக வாங்கப்போகிறேன்.'

இந்த இடத்தில் பேச்சை நிறுத்திவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டாள் தலயத். எதிரே இருந்த கமாலைப் பார்த்து நிதாகமாகச் சொன்னாள்: "இதோ பார் அண்ணா! என் கடந்த கால அனுபவம் என்னளவில்தான் முக்கியத்துவம் வாய்ந்ததென்பதை உணர்கிறேன். பிறருக்கு-உலகத்தாருக்கு அது பயனற்றது. எவரும் அதில் அக்கறை காட்டமாட்டார்கள்."

"என்னுடைய கடந்த காலமும் எனக்கே உரியதுதான்." கமாலும் அதே கருத்தைத் தெரிவித்தான்.

"இந்த உலகத்துக்குத் 'தற்காலம்' குறித்துத்தான் ஆசை-அக்கறை எல்லாம்." ஹரிசங்கரன் குரல் ஒலித்தது.

தலயத் வேதனையோடு சொன்னாள்: "கடந்து போன நேற்றுதான் 'இன்று' ஆகிறது. 'இன்றைய தினம்' என்பது கடந்த காலத்தைச்

சார்ந்தது, வருங்காலத்தோடும் தொடர்பு கொண்டது. காலத்தின் இந்தச் சிக்கலைக் கண்டு நான் தொல்லைப்படுகிறேன். காலம் எப்படியெல்லாம் அல்லல் படுத்துகிறது! காலத்தின் பிடிப்பில் சிக்கிவிட்டேன். உங்களில் எவராவது எனக்கு உதவக் கூடாதா?"

"உனக்கு உதவுவதா? தலயத் பேகம்! விஞ்ஞான மேதை ஐன்ஸ்டீன்கூட உதவமுடியாது"—ஹரிசங்கர்.

"காலம் எப்போதும் தொடர்கிறது. என்றைக்குமே காலம் 'தற்காலம் - இன்று' என்பதாகவே இருக்கும்." தலயத் தீர்மானமாகச் சொன்னாள்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்த காலம் லண்டன் ஸெயிண்ட் ஜாஸ்வுட்டில், 1957 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம், 15 ஆம் நாள், மாலைப்பொழுது, இவர்களுடைய நிழல்கள் ஜன்னல் கண்ணாடி களில் விசித்திரமாகப் பிரதிபலித்தன வெவ்வேறு உருவங்களில். காலத்தின் நீண்ட இருண்ட சுவர்களில் சாலைகளும், தெருக்களும், சந்து பொந்துகளும் உள்ள சூழலுக்கிடையில் மூவரும்—கமால், தலயத், ஹரிசங்கர்—அமர்ந்திருந்தார்கள்.

காலப்பரப்பின் ஒரு உறுப்பில், இதே இருண்ட வேளையில் இதற்கு முன்பு 1940, ஜூலையில், சிங்காடேவாலீ மாளிகையின் வராந்தாவில் உட்கார்ந்து தலயத், நிர்மலா, மாலதி மூவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். தலயத்தைப் பொறுத்தவரைக்கும் அன்றைக்கும் இன்றைக்கும் வேறுபாடு இல்லை. ஆனால் இருவரும் வெவ்வேறு தன்மைகள். புத்தர்பிரான் கூறியிருக்கிறார்: "மனிதன் கணத்துக்குக் கணம் மாறிக்கொண்டிருக்கிறான்." உண்மைதான். பருவ மாறுதலுக் கேற்ப மனிதன் இயல்பாலும் செயற்கையாலும் மாறிக்கொண்டிருக் கிறான். மற்ற பௌதிகப் பொருள்களும் இப்படித்தான். மலைகளில் படிந்திருக்கும் பனிப்பத்தைகள் கரைந்துருகிப் பெருகுகின்றன. காற்று, காலம், இருள் எல்லாமே பனியோடு உறைந்திருக்கின்றன; அத்துடன் கறையவும் பெருகவும் செய்கின்றன.

"நாம் நம் கதையைத் திரும்பச் சொல்லிக்கொண்டு நமக்கு நாமே ஆசுவாசப்படுத்திக் கொள்ளுகிறோம். காரணம், நமக்குப் பயப் பிராந்தி பீடித்திருக்கிறது". ஹரிசங்கர் சொன்னான்.

"நாம் காலத்தையும் இருளையும் கண்டு அஞ்சுகிறோம். காலம் ஒருநாள் நம்மைக் கொண்டு போய்விடும்; இருள்தாம் இறுதிப் புகலிடமாக இருக்கும்" தலயத் கூறினாள்.

"கௌதம நீலாம்பரன் எவ்வளவு பயங்கொள்ளியாகி விட்டான்!" கமால் குறை கூறினான்.

"அவனைப்பற்றி இப்போது பேச்செடுக்காதே. நீ இப்படித்தான் முக்கிய பேச்சை விட்டு வெகுதூரம் போய் விடுவாய். வாழ்க்கையில் முக்கியமான விஷயம் என்னவென்பதைத் தீர்மானித்துக் கொள்ள

*வேண்டும்? நான் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தேன்; இன்னும் ஆயுளோடு இருந்தேனானால் பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகும் ஹரிசங்கராகத்தான் இருப்பேன். காலத்தின் அனுபவங்களை யெல்லாம் நம்மீது ஏற்றிக் கொண்டிருந்தோமானால், நாம் அழிந்து விடுவோம்."*

*காலத்தின் பெருக்கத்தில் தலயத் அமர்ந்திருந்தாள். அவளே காலத்தின் வேறொரு அமைப்பிலும் அமர்ந்திருந்தாள். இரு புள்ளி களுக்குமிடையே பல ஆண்டுகள் இடைவெளியாக இருந்தன. இந்த இடைவெளியில் மனிதன் முன்னேறுகிறான்; பின்நோக்கிச் செல்வது இயலாதது. ஆயிரக்கணக்கான தலயத்துகள் எண்ணற்ற துணுக்கு களாக எண்ணற்ற இடங்களில் பரந்திருந்தார்கள்—நிலைக்கண்ணாடி யின் துண்டுகளில் ஒரே முகத்தின் பலப்பல பிரதிபலிப்புகள் தென்படுமே அதைப்போல!*

# 21

*லக்னோ—கி.பி. 1940*

*எல்லா இடங்களிலும் விளக்குகள் எரியத் தொடங்கிவிட்டன. நதிக்கரையிலிருந்த தோணிகளில் விளக்குகள் ஒளி வீசின. நதியின் பயணம் நிற்காத நிகழ்ச்சி—இயல்பான இயக்கம். வெளிக்கூடத்தில் சரவிளக்கு எரியத் தொடங்கியது. ஈசல்கள் மொய்த்தன. பெண்கள் வராந்தாவில் உட்கார்ந்திருந்தார்கள்.*

*இரவு நேரமானதும், தண்ணீர்த் தொட்டிக்கருகில் உட்கார்ந் திருந்த கங்காதீன் வேலைக்காரியுடன் பேச்சை நிறுத்திவிட்டு, "குழந்தை! கிளம்பலாம்" என்று குரல் கொடுத்தான். தலயத் மற்றவர் களுக்கு வணக்கம் தெரிவித்து விட்டு, வண்டியில் வந்து அமர்ந்தாள். வண்டி ராய் பிஹாரீ லால் ரோட்டுப்பக்கம் விரைந்தது. சில பர்லாங் தூரம் கடந்ததும், சிமெண்ட் பங்களாவுக்குள் வண்டி நுழைந்தது. 'நைட் க்வீன்' மலர் கொள்ளையாக மணம் வீசியது. வீட்டிலுள்ள வர்கள் பின் பக்கத்துத் திண்ணயில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந் தார்கள். நாற்காலிகள், மேஜை விசிறி, தண்ணீர் ஜாடிகள், ஜன்னல் அறைக்குள் மல்லிகைக் கொடி-புதுமை வசீகரமாக இருந்தது. வராந்தாவில் நமாஸ் படிப்பதற்கான பெரியமணை இருந்தது. இந்தப் பங்களாவிற்குப் பெயர் 'குல்ஃபிஷான்' இதைப்போன்று ஒரேவகை மக்கள்தாம் வசித்து வந்தார்கள். எல்லாரிடமும் மோட்டார்கள் இருந்தன. இது திடமான வசதியான சமூகம். இவர்கள் பண்பான*

வர்கள். ஒழுங்குமுறைகள் இவர்களுடைய வாழ்க்கையில் இருக்கும். கௌரவப்பட்டவர்கள். இவர்களுடைய பழக்க வழக்கங்கள் ஒரே மாதிரி இருக்கும். இன்பம், துன்பம், பிரச்சினைகள் எல்லாம் ஒரே மாதிரியானவை இவர்களுக்கு. இவர்களிடமிருக்கும் அலங்காரப் பொருள்கள், மேசை நாற்காலிகள், தோட்டங்கள், செடிகொடிகள், புத்தகங்கள், ஆடை அணிகள் சகலமும் ஒன்றுபோல் இருக்கும். இவர்கள்-ஆசைகள், விருப்புகள், யாவுமே ஒரே ரகம்.

தலயத் பேகம் இல்லத்திலிருந்த சமையற்காரனும் மற்றவர் மாளிகைகளில் உள்ள சமையற்காரர்களைப் போலத்தான் இருந்தான். அவன் பெயர் ஹுஸேனி. அநேகமாக எல்லா அடுக்களைப் பணியாட்களின் பெயர் ஹுஸேனி என்றுதான் இருந்தது. தப்பினால் ஹஸேன் பக்ஷ் அல்லது மதார்பக்ஷ். எல்லாச் சலவைத் தொழிலாளிகளும் நத்தூ என்றே அழைக்கப்படுகிறார்கள். எல்லா வண்டிக்காரர்களுக்கும் கங்காதீன் என்று பெயர். பெரும்பாலான வேலைக்காரிகளின் பெயர்கள் புலாகன், ரசூலியா, ஹமீதன் கீமா, மஞ்ஜுருன்னிஸ்ஸா. ஹோட்டல் சர்வர்கள் 'அப்துல்'கள். இப்படித் தான் ஒவ்வொன்றும், ஒவ்வொருவரும்! கதை-நாவல்களில் வரும் பாத்திரங்கள் பொருள்களுக்கும் இப்படித்தான் பெயர் ஒற்றுமை! இதனால்தானோ என்னவோ 'நவீன இலக்கியம் வாழ்க்கையின் யதார்த்தமான சித்திரிப்பு' என்கிறார்கள்.

கார் டிரைவரின் பெயர் கதீர். மிர்ஜாபுரைச் சேர்ந்தவர்; ஆர்வமுள்ள மனிதன். கதீரின் மனைவி கமருன்னிஸா. ஒவ்வொருவருக்கும் தனித்தனி அபிலாஷைகள். மதியப்பொழுதில் வெம்மையிலிருந்து ஓய்வு பெற எல்லாரும் முடங்கிக் கிடக்கும்போது, கதீர் வீரச் சுவைப்பாடல் தகவலைத் தன்மயத்தோடு பாடுவது வழக்கம். ஓய்வு கிடைத்தபோதெல்லாம் குந்தியவாறு, காலி பெட்ரோல் டின்னில் தாளம் போட்டவாறு கதீர் பாடிக்கொண்டிருப்பார். கமருன்னிஸா எங்காவது மூலையில் உட்கார்ந்து பின்னல் வேலையில் முனைந்திருப்பாள். கணவரைப் பார்த்தும் தாம்பூலச் செல்லாவை எடுத்து வைத்துக்கொண்டு பீடா தயாரிப்பாள். கமருன்னிஸா நல்ல கருப்பு; நல்ல அழகு; கொடி போன்ற ஒயிலான மேனி.

கதீர்-கமருன் இருவருமே விவசாயக் குடும்பத்தவர்கள். டிரைவராவதற்கு முன்பு கதீர் தன் மாவட்டத்து உழவர் சங்கத்தில் உறுப்பினர். சர்க்கா நூற்புப் பிரசாரகன். சுதேசி இயக்கத்தில் சுயம் சேவகன். அந்தக் காலத்தில்தான் மோதிலால் நேருவின் புதல்வர் ஜவஹர்லால் நேரு கிராமம் கிராமமாகப் போய் சுயராஜ்ய பிரசாரம் செய்துவந்தார்; குடியானவர்களின் தலைவராக இருந்தார். ஜமீந்தாரி முறை ஏழைக் குடியானவர்களை எவ்வளவு கொடுமையாகப் பாதித்திருக்கிறது என்பதைக் கதீர் நன்கு அறிந்தவர். இதனால்தான், அவர்

டிரைவரானபின், 'குல்ஃபிஷான்' மாளிகைக்கெதிரே புல்தரையில் அமர்ந்து கமால் தன் நண்பர்களுடன் சோஷலிஸம் (சமூக உடமை) பற்றி நீண்ட நேரம் அளவளாவும் போது, கதீர் அருகில் நின்று அந்தப் பேச்சைப் புரிந்து கொள்ள முயற்சிப்பார். அவர் நினைவில் பசுமையாக இருப்பது, அவருடைய கிராமத்து ஜமீன்தார் டாகுர் பூல்சிங்கின் சிப்பாய்கள் ஒருநாள் வரி கொடுக்கவில்லை என்பதற்காகக் கதீரின் தந்தையை கம்பால் அடித்துக் கொன்று விட்டார்களே, அந்தக் காட்சிதான். பிறகு கதீர் அந்தக் கிராமத்தையே விட்டு வெளியேறிக் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார்; க்ளீனராகப் பிழைப்பைத் தொடங்கினார். இன்றும் வீட்டில் சாப்பாட்டுக்கு தட்டுப்பாடுதான்.

இப்போது லக்னோவில் நடப்பதெல்லாம் கதீருக்குப் புரிவதில்லை. பொருளாதாரச் சீர்குலைவுதான் துன்பத்திற்கும் அதிருப்திக்கும் எதிர்ப்புக்கும் காரணம். ஜமீன்தார்களுக்கும் குடியானவர்களுக்கும் மனத்தாங்கல் வளர்கிறது. போராட்டம் தவிர்க்க முடியாதது. பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த வர்க்கப் போராட்டத்தை வகுப்புக் கலவரமாக மாற்ற முயலுகிறது. பொதுமக்களின் கவனத்தைத் திசை திருப்ப அதன் சூழ்ச்சித் தந்திரம் இது.

கதீர்-கமரூன் தம்பதியின் அன்புப் பிணைப்பு மற்ற வேலைக்காரர்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கியது. வேலைக்காரர் விடுதிகள் உள்ள இடத்தில்தான் இவர்களுடைய குடியிருப்பும் இருந்தது. ஆனாலும் கமருன்னிஸா மற்ற பெண்களுடன் நெருங்கிப் பழகமாட்டாள். வேலைக்காரர் விடுதியில் டிரைவரின் அந்தஸ்து மற்றவரைவிட உயர்ந்தது என்பது அவள் கருத்து. மதியப்பொழுதில் வீட்டு வேலைகளை முடித்துக்கொண்டு, பங்களாவுக்குப் போய்விடுவாள், அங்குள்ள பெண்டுகளுடன் அளவளாவுவதற்கு. பெரியம்மாவின் படுக்கையறையில் 'மகளிர் கூட்டம்' நடைபெறும். அதொரு அரட்டைச் சங்கம். பெரிய பேகம் கட்டிலில் படுத்தபடியே 'நைரங்கயே காஸ்', 'இஸ்மத்' முதலான உருதுப் பத்திரிகைகளைப் படித்துக் கொண்டிருப்பார். மற்றொரு முதியவள் நமாஸ் பலகை மீது படுத்திருப்பாள். புதிதாகவும் சில பெண்கள் வந்திருப்பார்கள். வெற்றிலைச் செல்லா எல்லார் எதிரிலும் ஒவ்வொன்று இருந்தது. கமருன்னிஸா வந்ததும் கூட்டத்தில் களை கட்டும்.

"கதீர்கீ பீவி! வந்துவிட்டாயா! வாவா! உட்கார்!" என்று முகமன் கூறுவார்கள். கமருன் எல்லாருக்கும் மிக்க பணிவாய் வணக்கம் செலுத்துவாள். கைக்குழந்தையை ஒரு மூலையில் விட்டுத் தூங்க வைப்பாள். ஒரு அம்மாள் பீடா மடித்துக் கொடுப்பாள், அன்புக் காணிக்கையாக கமருன்னிஸாவுக்கு.

"கதீர்! இன்னைக்கு என்ன சமையல்?" ஒரு முதியவள்

கேட்பாள். இதற்குப் பதில் கிடைத்த பிறகு, வழக்கமான அரட்டை-வம்பளப்பு தொடரும். விலைவாசி நிலவரம், அக்கம் பக்கத்துத் திருமணங்கள், விழாக்கள், சடங்குகள், குடும்ப விவகாரங்கள், குற்றம் குறைகள், விமரிசனங்கள், தத்துவார்த்த போதனைகள்—இப்படி எல்லாப் பேச்சுக்களிலும் கமருன் ஈடுகொடுத்துப் பேசுவாள். அவளுக்கு அங்குள்ள மதிப்புப்பெயர் டிரைவர் மனைவி (டிரைவர் கீ பீவி). இதனால் இதே பெயரிட்டுத்தான் கதீரும் அவளை அழைப்பார்.

மாலைப்பொழுதில் கமால், அப்பி, தலயத், பெரிய அண்ணன் யாவரும் கல்லூரிகளிலிருந்து திரும்பியதும், மாளிகையில் கலகலப்பு அதிகரித்துவிடும். இதற்குள் மோட்டார்கள் பால்கனிக்குக் கீழே வந்து நிற்கும். கதீர், நவாப் சாகப்பை சீஃப் கோர்ட்டிலிருந்து அழைத்து வருவார். கார் சப்தம் கேட்டதும், கமருன்னிஸா முக்காட்டை இழுத்து மூடிக்கொண்டு, குழந்தையை இடுப்பில் வைத்துக்கொண்டு தன் விடுதிக்கு விரைவாள்.

பீட்டன் வண்டிக்காரன் கங்காதீன், பையா சாகப்பின் (பெரிய அண்ணன்) பணியாட்களில் முக்கியமானவன். கங்காதீன் அவரிடம் தனி மதிப்பும் நன்றியும் பாசமும் வைத்திருப்பதற்குக் காரணம், அவர் தந்தையிடம் அவன் வேலை பார்த்து வந்தான். அவர் காலமானதை அடிக்கடி நினைவு கூர்ந்து தழுதழுப்பான். கண்ணீர் வடிப்பான். அப்பிக்கும் பையா சாகப்பிற்கும் நிக்காஹ்(திருமணம்) நிகழப்போவதாக மற்றவர் சொல்லி வருவதைக் கேட்டுக் கொண்டிருந் தாலும், கங்காதீன் தன் கருத்தைத் தெரிவிக்க மாட்டான். மணக்கப் போகிறவரே ஏதும் பதில் சொல்லாதபோது, தான் எதற்காகக் கருத்துத் தெரிவிக்க வேண்டுமென்று இருந்துவிடுவான்.

# 22

தலயத் பேகம் 1940, டிசம்பரில் ஜூனியர் கேம்பிரிட்ஜ் பரீட்சை எழுத வேண்டும். செப்டம்பர் மாதம் அவளுக்கு டபிள் நிமோனியா கண்டு விட்டது. படுத்த படுக்கையாகி விட்டாள். "எனக்கு ஒரு வருஷம் படிப்பு போய்விட்டதே!" என்று புலம்பித் தீர்த்துவிட்டாள். இதற்கு யார் என்ன செய்ய முடியும்?

ஒருநாள் காலையில் ஹரிசங்கர் அவள் அறைக்கு வந்து சேர்ந்தான். தலயத்திற்கு ஆறுதல் கூறினான்: "நீ வருத்தப்படாதே. உன் நன்மைக்காக வேறு ஏற்பாடு செய்திருக்கிறோம். நீ ஏப்ரலில்

ஹைஸ்கூல் இறுதிப் பரீட்சை எழுதலாம்; பிறகு குஷாலாக ஐ.டி.காலேஜில் சேர்ந்து படிக்கலாம்". பேரார்வத்துடன் தலயத் மூச்சை அடக்கிக்கொண்டு கேட்டாள்: "ரகுவீர் மாமா இருக்கிற ஸ்கூலிலா?" தலயத் சமாதானமடைந்தாள்.

"ஆமாம்" என்று கூறிவிட்டு ஹரிசங்கர் போய் விட்டான்.

இந்தத் தகவல் தெரிந்ததும், நிர்மலாவும் அழுது ஆர்ப்பாட்டம் செய்து, லாமார்ட்டினேயர் கான்வெண்டிலிருந்து விலகி, தலயத்துடன் புது ஹைஸ்கூலில் சேர்ந்துகொள்ள ஏற்பாடு செய்துகொண்டாள்.

டட்டர்வாலா ஹைஸ்கூலுக்கு வரலாற்றுச் சிறப்பு உண்டு. அது சுல்தான் காலத்துக் கட்டிடம். கட்டிடத்தைச் சுற்றிலும் தடியால் ஆன மதில் மறைப்பு. ரகு மாமா ஸ்கூல் என்றும் இதற்குப் பெயர். பனாரஸ் யூனிவர்ஸிடியுடன் தொடர்பு கொண்டது. சில பெண்கள் இதில் சேர்ந்திருந்தார்கள். வீடு போன்ற சூழ்நிலை. பக்கத்து வீட்டில் ரகுமாமா குடும்பத்துடன் வசித்து வந்தார். பரம சாது; பக்தர். பழைய காலத்து மனிதர். காயஸ்த இனம். பெரிய குடும்பத்துப் பெண்கள் காரில் வந்து அங்கு படிக்கிறார்கள். லாமார்ட்டினேயர் முற்றிலும் மேனாட்டுப் பாணியான பள்ளிக் கூடம்; இந்த ஸ்கூல் தனி உலகம்-இந்திய கிராமியச் சூழல். தலயத்தும் நிர்மலாவும் மற்ற சக மாணவிகளைப் போலவே இரு வேறு சூழ்நிலைகளில் வளர்ந்து வந்தார்கள். இதை இண்டோ யூரோபியன் மரபு எனச் சொல்லலாம். இவர்களை வளர்க்க ஆங்கிலேய மாதுக்களும் கவர்னர்ஸாக வருகிறார்கள். இந்தியத் தாதி களும் வருகிறார்கள். ஆரம்பத்தில் கான்வெண்டில் படிக்கிறார்கள். திருமணமானதும் பழைய காலத்து மணப்பெண்களைப் போல் நாணுகிறார்கள். பொதுவாகப் பெண்களின் விருப்பத்திற்கு மாறாகத் தான் திருமணங்கள் நடைபெறுகின்றன. இவர்கள் 'மாடர்ன்' ஆகிவிட்டார்கள்; ஆனாலும் அல்ட்ரா மாடர்ன் ஆகவில்லை. மேலுக்கு இவர்கள் மேற்கத்திய நவ நாகரீகத்தை ஏற்றுக் கொண் டிருக்கிறார்கள். ஆனால் உண்மையில் தீவிர சுதேசிகள், பழைய பழக்க வழக்கங்களில் ஊறியவர்கள். இவர்கள் பெரிய இருபக்கச் சாலைகளுக்கிடையில் வீடு கட்டிக் கொண்டிருப்பவர்கள்– எந்தப் பக்கமானாலும் போகலாம். இது பிரிட்டிஷ்காரர்களின் காலனியாதிக்கமுள்ள சமூகம். ஜமீந்தாரி சமூகத்தின் உதவியுடன் மாறிவரும் பாரதத்தில் பழைய அடிப்படைகளில் நிறுத்தப்பெற்றிருக்கிறது.

19–ம் நூற்றாண்டில் பாரதமெங்குமெழுந்த அரசியல் விழிப்பு காரணமாக, பாரதப் பண்பாட்டிற்குப் புது மெருகு கொடுக்கும் இயக்கம் ஆரம்பமாயிற்று. தொடர்ந்து இந்திய சங்கீதம், இந்தியக் கலை, இந்திய வாழ்க்கை முறை ஆகியவற்றில் அதிக ஈடுபாடு

ஏற்படலாயிற்று. மேனாட்டு நாகரிகத்தில் மூழ்கிய 'கறுப்பு துரை'மார்களை ஏளனம் செய்யத் தொடங்கினார்கள். காங்கிரஸ் இயக்கம் இந்த இந்திய மறுமலர்ச்சிக்கு அதிக ஊக்கமளித்தது. ஆனால், தார்மிக-சமயத் தத்துவங்கள் புராதன இந்து கலாசாரம், இஸ்லாமியரின் பொற்காலம் குறித்துப் பெருமையாகப் பேசலாயின. இதனால் ஒருங்கிணைந்த இந்திய தேசியம், தூய இந்தியப் பண்பாடு இவற்றின் கோட்பாடுகளுக்கு மதிப்பு இல்லாமல் போயிற்று. இந்தியப் பொதுமை என்ன என்பதே பிரச்சினையாகி விட்டது. ஒரு அரசியல் கட்சி கூறியது: 'இந்தியப் பொதுமை, இந்தியத் தன்மை என்பதெல்லாம் இந்துக்கள் கிளப்பிவிட்ட மாய்மாலம்.' மற்றொரு அரசியல் கட்சியின் கருத்து: 'இந்த நாட்டின் சொந்தக் குடிமக்கள் இந்துக்கள்தாம்; முஸல் மான்கள் வெளிநாட்டுக்காரர்கள், அந்நியர்கள்." குல்ஃபிஷான் மாளிகையின் பணியாட்கள் விடுதிகளில் குடியிருக்கும் கமருன்னிஸா, ரம்தையா முதலிய பெண்களிடம் யாரோ வந்து கேட்டார்: "இந்தியாவின் அசல் பிரஜைகள் நீங்கள்தான்; உங்கள் கருத்து என்ன?"

தலயத், நிர்மலா போன்றவர்கள் மேல் நிலையிலுள்ள படித்த பெண்கள். இவர்கள் மேற்கத்திய-கிழக்கத்திய நாகரிகங்களின் கலவையில் முங்கி எழுந்தவர்கள். இதனால் இவர்கள் லாமார்ட்டி னேயர் கான்வெண்டிலிருந்து விலகி, சுதேசி (ரகுமாமா) பள்ளிக் கூடத்திற்கு வந்து சேர்ந்தபோது, அங்கு ஒன்றியதைப்போலவே இங்கும் ஒன்றிக் கலந்தார்கள்.

உலகப் பெரும்போர் தொடங்கி ஓராண்டு ஆகிவிட்டது. காங்கிரஸ் மந்திரிசபை ராஜிநாமா செய்து விட்டது. அரசியல் நிலைமை நாளுக்குநாள் மோசமாகி வந்தது.

மார்ச் மாதம் வந்ததும், பெண்கள் பரீட்சை எழுத பனாரஸ் செல்ல ஆயத்தமானார்கள். கமால், ஹரிசங்கர் இருவரும் நிர்மலா, தலயத் இருவரையும் வழியனுப்ப ரயில் நிலையத்திற்கு வந்தார்கள். கமால் சொன்னான்: "நீங்கள் முன்னே போங்கள். எங்கள் பரீட்சை முடிந்ததும் நாங்களும் வந்து சேர்கிறோம். ராம்நகர் மாம்பழம் சாப்பிட்டு வெகு காலமாகிறது". இது இவர்களுடைய பழைய வழக்கம். கோடை விடுமுறை வந்ததும், கமாலும் ஹரிசங்கரும் வீட்டை விட்டுக் கிளம்புவார்கள்; காடுமேடுகளில் திரிந்து அலை வார்கள். பிறகு ஊர் ஊராகச் சுற்றுவார்கள். அங்கே மாணவர் மன்றம், இங்கே மாநாடு, அந்த ஊரில் பொதுக்கூட்டம் என்று அவர் களுக்கு அலுவல்கள் இருந்துகொண்டே இருக்கும். 'தில்லி போகிறோம். இந்திரா—நேரு மீட்டிங் போட்டிருக்கிறார்; அலகாபாத் கூட்டத்தில் முடிவானது' இப்படிப் பல முன்னேற்பாடுகள்.

"பனாரஸ் வந்து, பிறகு எங்கே போகப்போகிறீர்கள்?" —நிர்மலா.

"நாங்கள் ஊர் சுற்றும் பண்டாரங்கள்; எங்களிடம் முன் கூட்டியே தயாரித்த பிரயாணத்திட்டம் ஏதம்மா? மனம்போன போக்கில் போய்ச்சேர வேண்டியதுதான்". தரையைப் பார்த்துக் கொண்டு சொன்னான். இரு பெண்களும் பிளாட்பாரத்தில் சூட்கேஸ் களுக்கருகில் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். ரகுமாமா பரீட்சை எழுதப்போகும் பெண்களை அழைத்துச் செல்ல முன்னேற்பாட்டுடன் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். இடம் பிடிக்க இங்குமங்கும் அலைந்து கொண்டிருந்தார்.

"பெரிய பண்டாரம்தான் நீங்கள், திகம்பர சாமியாரைப் போல!" நிர்மலா சிரித்துக்கொண்டே விமரிசித்தாள். சுவையான உரையாடல் தடைபட்டது.

ரயில் வந்தது. பெண்கள் பனாரஸ் பயணத்தைத் தொடங்கி னார்கள்.

# 23

சம்பா அகமத் பிஸெண்ட் காலேஜின் வகுப்பறையின் ஜன்னல் எதிரே வந்து நின்று, கீழே பார்த்தாள். அனல் காற்று வீசியது. சாலையில் ஒரு கொக்கு தொலைவில் பறந்து செல்வது தெரிந்தது. கீழே கல்லூரி மைதானம் கானல் வெம்மையில் சூடேறியிருந்தது. மழை எப்போது வருமோ என்று சம்பா யோசித்தாள். மணி அடித்தது. மாணவிகள் வகுப்பறைகளிலிருந்து வெளியே வந்தார்கள். லீலா பார்க்கவ் வந்ததும், சம்பாவும் அவளும் மாடியிலிருந்து இறங்கி வந்தார்கள். இருவரும் தாங்காவில் அமர்ந்து யூனிவர்சிடிக்குச் சென்றார்கள்.

இது சம்பாவின் வாழ்க்கை முறையாகிவிட்டது. பிஸெண்ட் காலேஜ், யூனிவர்சிடி, வீடு, குளிர்காலம், கோடை, மழை, பிறகு குளிர். பனாரஸில் தம்வீடு, பேட்டை, உற்றார், புத்தகங்கள். பதினெட்டு வயது இளநங்கை மூதாட்டியைப்போல் சிந்திக்கிறாள். கவிஞர்களைப் போல் உள் உணர்வு கொள்கிறாள்; குழந்தையைப் போல் சிரிக்கிறாள், மகிழ்கிறாள், வருந்துகிறாள். சம்பாவின் தந்தை மத்தியதரக் குடும் பத்தைச் சேர்ந்த கௌரவப்பட்ட மனிதர். தாயும் அப்படித்தான். அவர்கள் குடும்பத்தில் கவர்ச்சிகரமான நிலைமை அல்லது செய்தி ஏதும் கிடையாது. சிறப்புக் கதையோ, பாரம்பரியமோ ஏதும் கிடையாது. சம்பாவின் தந்தை வக்கீல். முராதாபாதைச் சேர்ந்தவர். சம்பாவின் தாய்ப்பாட்டன் வீடு பனாரஸில். அங்குதான் சம்பாவின்

தந்தை பிராக்டிஸ் செய்து கொண்டிருந்தார். சுமாரான வருவாய். அவர் வீட்டில் டெலிபோன், மோட்டார்கார், ரெஃப்ரிஜிரேடர் கிடையாது. அவர் வசித்த வீடும் மாளிகை அல்ல. சம்பா பெற்றோருக்கு ஒரே பெண். திருமணத்துக்கு வேண்டிய பணத்தைச் சேகரித்து வைத்திருந்தார். பெண் கேட்க நிறையப் பேர் வரலானார்கள். சம்பா பி.ஏ. தேறியதும் திருமணம் செய்யலாமென்று தீர்மானித்தார்கள். சம்பா எந்தக் கான்வெண்டிலும் படிக்கவில்லை; கோடைக்கு மசூரி சென்று ரோலர்-ஸ்கேட்டிங் விளையாடி மன மகிழ்வு கொள்வதுமில்லை. சம்பாவின் மாமா லக்னோவில் நல்ல நிலைமையில் இருந்தார். வஜீர் ஹஸன் ரோடில் அவருக்குப் பங்களா. சம்பாவின் தந்தைக்கு அரசியலில் கொஞ்சம் ஈடுபாடு. அவளுடைய சித்தப்பா முராதாபாத் சிடி முஸ்லீம் லீக் பார்ட்டியின் தலைவர்.

சம்பா கல்லூரியிலிருந்து திரும்பியதும், மாடியறையில் அமர்ந்து, எதிரே பொலியும் சிவாலயங்களின் பொற்கலசங்களைத் தன் மயத்துடன் பார்த்துக் கொண்டிருப்பாள். ஆங்கில நாவல்கள் படிப்பாள். ஜான் ஆஸ்டினிடம் தீவிர மோகம். மத்திய கால இலக்கியங்களிலும் - 19-ம் நூற்றாண்டின் கீட்ஸ், ராஜெடி முதலிய மேதைகளிடமும் ஈடுபாடு. யூனிவர்சிடி லைப்ரரியில் அவநீந்த்ர நாத் காணும்போது மிக்க மகிழ்வு கொள்வாள். சம்பா அஹமத் ஒரு ரொமான்டிக் இயல்பினள்.

லீலா பார்க்கவோடு சம்பா யூனிவர்சிடிக்குச் சென்றாள். இங்கும் பரீட்சை நடந்து கொண்டிருந்தது. தேர்வுச் சூழ்நிலை சுறுசுறுப்படைந்திருந்தது. சந்தடி, பரபரப்பு. எல்லாம் தெரிந்த முகங்கள். பெண்களும், வாலிபர்களும் சம்பாவின் தனியுலகைச் சேர்ந்தவர்கள். கூட்டத்தினிடையே இருக்கும்போது துணையோடு இருப்பது போன்ற மன நிறைவு கொண்டாள். தன்னுடன் ஒரு சமூகமே இருக்கிறதென்கிற திருப்தி அவளுக்கு. இவர்கள் என் உற்றார் உறவினர்; இந்தக்கூட்டம் என்னைப் பாதுகாக்கும். மாணவிகள், விரிவுரையாளர்கள், மதராஸி, வங்காளிப் பேராசியர்கள்—எல்லாருமே சம்பாவுக்கு உற்றவர் குழாத்தினர். பல்கலைக்கழகம் அறிவுக்குக் கருவூலம். அறிவுத்துறையில் மதச்சார்பு எப்படித்தான் நுழைகிறதோ? சம்பாவுக்கு இது விளங்காப் புதிர். மதக்காழ்ப்பு, வெறுப்பு, குறுகிய மனப்பான்மை, சந்தேகம்-பீதி, பிடிவாதம்—இந்தப் பேய்களைச் சம்பா அறிந்தவளில்லை. இருந்தாலும், தன்னைச் சூழ்ந்த உலகில் ஏதோ சந்தடி-சச்சரவு நடக்கிறது; இந்தக் களேபரம் அவள் அமைதியைக் குலைக்கிறது, வருத்தமளிக்கிறது; இந்த அளவுக்குத்தான் உணர்ந்திருந்தாள்.

எதிரே பெரிய திண்ணையில் விதானம் விரித்திருந்தது. அதனடியில் உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவிகள் இசைத்தேர்வு நடந்தது. லக்னோவிலிருந்து வந்த பெண்களும் அந்தக் கூட்டத்தில்

அமர்ந்திருந்தார்கள்.

மணியடித்தது; துணிப்பந்தலில் அமர்ந்திருந்த மாணவிகள் கலைந்து சென்றார்கள். இரு பெண்கள் மட்டும் குழந்தைகளைப் போல் படிகளில் ஏறி இறங்கி விளையாடிக் கொண்டிருந்தார்கள். இரு வாலிபர்கள் - தோற்றத்திலிருந்தே அந்தப் பெண்களின் சகோத ரர்கள் என்று தெரிந்தது - கூட்டத்திலிருந்து வெளிப்பட்டார்கள். ராம் நகர் சம்ஸ்தானத்துக் கார் காத்திருந்தது. நால்வரும் அந்தக் காரில் ஏறி உட்கார்ந்தார்கள். கார் தூசியைக் கிளப்பிக்கொண்டு விரைந்தது.

பனாரஸ் போனதும் தலயத், நிர்மலா இருவரும் தங்கியிருந்த இடம் மிக விசித்திரமானது. அந்த வீடு பெரிய நிலப்பரப்புக்குள் இருந்தது. மூன்றுமாடிக் கட்டிடம். சந்ததியில்லாத பிராமண விதவைக்குச் சொந்தமானது. அந்த அம்மாள் நல்ல பணக்காரி; அடிக்கடி திருத்தல யாத்திரை போய் வருவாள். அந்தப் பெரிய வீட்டில் வருவார் போவார் அதிகம்; பகலெல்லாம் பல கல்யாண ஊர்வலங்கள் வந்து குழுமிவிட்டாற் போன்ற சந்தடி. 'தியரி ஆப் மியூஸிக்' பற்றிய தேர்வு நடந்த தினம் கமாலும் ஹரிசங்கரும் வந்து சேர்ந்தார்கள். தலயத்தும் நிர்மலாவும் தேர்வு எழுதி முடித்துவிட்டு வெளியே வந்தபோது, சரஸ்வதி கோவிலுக்குக்கீழே, இரு பெண்களுக்குப் பக்கத்திலிருந்து கமாலும் ஹரிசங்கரும் வெளிப்படுவதைக் கண்டார்கள். அந்த இரு பெண்களில் ஒருத்தி மிகக் கவர்ச்சியுள்ள பேரழகி. வெளியில் அவள் மேனி பொன் வண்ணத்தில் மிளிர்ந்தது. இரு வாலிபர்களும் ராம் நகர் சம்ஸ்தானத்துத் திவானின் மாளிகையில் தங்கியிருந்தார்கள். திவான், கமாலுக்கும் தலயத் பேகமுக்கும் உறவினர். மதியப் பொழுதில் கொளுத்தும் வெயிலில் நால்வரும் நதியைக் கடந்து ராம் நகர் வந்து சேர்ந்தார்கள். அப்போது தலயத்துக்கு டிரைவர் கதீரின் நினைவு வந்தது. கதீர் அவளுக்கு ஆரம்பகாலத்து ஆசான்.

"கமருன்னிஸாவுக்கு புடவைகளும் வளையல்களும் வாங்க வேண்டும்" தலயத் சொன்னாள்.

"இன்னும் உன்னுடைய கொள்முதல் படையெடுப்பு தொடங்க வில்லையா ?" வேறு பக்கம் திரும்பிக்கொண்டு கமால் கேட்டான்.

"இல்லையே... பணம் கொடு !"

இரு பையன்களும் முறைத்துப் பார்த்தார்கள் "நாங்கள் வட்டிக் கடைக்காரர்கள் என்பது உன் எண்ணமா ?" கமால் சினந்தான்.

"நாங்கள் ஏழைப்பனாதை பிரும்மசாரிகள். நாங்களே தான தர்மம் வாங்கிப் பிழைக்கிறோம்"—ஹரிசங்கர்.

“ஆனால் எங்கள் மனசு மகாராஜாதான்”—கமால்

“சரியாகச் சொன்னாய் நீ!”—ஹரிசங்கர்.

“ஒரு நிபந்தனை. சரஸ்வதி கோவிலுக்குக்கீழே நின்று கொண்டிருந்த அந்தப் பேரழகி யார் என்பதைச்சொல். பனாரஸிலுள்ள எல்லா வளையல்களையும் வாங்கிக் கொடுத்து விடுகிறோம்.” கமால் ஆதுரம் பொங்கக் கேட்டான்.

“யார்? எந்தப் பேரழகி?” இரு பெண்களும் பார்த்துக் கொண்டார்கள்.

“விசாரித்துச் சொல்லுங்களேன்”—ஹரிசங்கர்.

“உங்களுக்காகப் பெண்களின் விவரங்கள் சேகரித்துக் கொடுப்பதே எங்களுக்குப் பெருந்தொல்லையாகி விட்டது.” நிர்மலா சலித்துக் கொண்டாள்.

இப்படியே வாக்குவாதம் செய்துகொண்டு ராம்நகர் போய்ச் சேர்ந்தார்கள். வெட்டிவேர்த் தட்டிகளுக்குப் பின்னால் உட்கார்ந்து பேசிக்கொண்டே பகல் பொழுதைக் கழித்தார்கள். மாம்பழம் சாப்பிட்டார்கள்; உறவினர்களுடன் அளவளாவினார்கள். திவானின் பேகம் காசிமா நகரிலுள்ள பணக்கார வீட்டுப் பெண்களை வர்ணித்து, ஹரிசங்கருக்கு ஜோடிப்பொருத்தம் செய்து, எல்லாரையும் மகிழ்வித்தாள்.

வைகாசி மாதம் கழிந்தது. ஆனியில் வெளியாக வேண்டிய ரிசல்ட் ஆடியில் வந்தது. சம்பா அகமத் தேறிவிட்டாள். ஊருக்குப் புறப்பட ஆயத்தமானாள். சம்பாபேகம் வரப்போவதாகத் தகவல் முன்னதாகவே லக்னோவுக்கு அனுப்பப்பட்டது. வழக்கம்போல், சம்பாவும் லீலாவும் புறப்பட்டார்கள். லீலாவை அவள் இல்லத்தில் இறக்கி விட்டபின், சம்பா தன் வீட்டுக்குப் போனாள். வேலைக்காரி தாங்கா வண்டியிலிருந்து முன்னால் இறங்கிக் கதவைத் திறந்தாள். சம்பா வீட்டுக்குள் நுழைந்து கூடத்தில் உட்கார்ந்தாள். வெளியே அமைதி. பக்கத்து வீடுகளில் வரிசையாக ரேடியோக்கள் ஒரே குரலில் செய்திகளைத் தெரிவித்துக் கொண்டிருந்தன. வரவேற்புக் கூடத்தில் சம்பாவின் தந்தை வாடிக்கைக்காரர் ஒருவருடன் பேசிக்கொண்டிருந்தார்.

“தபாலில் உன் பேருக்கு இந்தக் கவர் வந்தது” சம்பாவின் தாய் ஒரு நீலநிறக் கவரை அவளிடம் கொடுத்துவிட்டு, அடுக்களைக்குள் சென்று விட்டாள். இருள் கவியும் மாலைப்பொழுதில் அக் கடிதத்தைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினாள் சம்பா. அறிமுக மில்லாத பெண்ணின் கையெழுத்தாக இருந்தது. மசூரியிலிருந்து வந்தது; ஆங்கிலத்தில் எழுதியிருந்தது. “மை டியர் சம்பா!” என்று ஒட்டுறவுடன் விளித்து எழுதப்பட்டிருந்தது. “நீ எங்கள் கல்லூ ிக்கு வரப்போவதை அறிந்தேன்; மிக மகிழ்கிறேன்...” என்று தொடங்கி,

கல்லூரிச் சூழ்நிலையையும் விவரித்திருந்தது. இறுதியில் எழுதி யிருந்தது: "புதிய மாணவி என்கிற நிலையில் என் பொறுப்பில் நீ ஒப்படைக்கப் பட்டிருக்கிறாய். ஒரு வகையில் நான் உனக்கு இனிமேல் அஃபிஷியல் அட்வைஸர். ஆகையால் நீ பதினாறாம் தேதி கல்லூரி வந்ததும், புளோரன்ஸ் நிக்லஸ் ஹாலுக்குப் போகும் படிகள் பக்கம் நான் உன்னைச் சந்திக்கிறேன். உன் தேவைகளையும் பிரச்சினைகளையும் சரிப்படுத்த உதவுவேன்."

கீழே கடிதம் எழுதியவளுடைய கையெழுத்து இருந்தது- தஹ்மீனா ரஸா, ரோஸ் மவுண்ட், மசூரி.

'இந்தத் தஹ்மீனா ரஸா யார்? இவளுக்கு என் முகவரி எப்படிக் கிடைத்தது?'-சம்பாவுக்கு இது புதிராக இருந்தது. இந்த மாதிரி ரகசியப் போக்குகள் நாவல்களில்தான் வரும். உண்மை வாழ்க்கையிலேயே நிகழ்கிறதே! விசித்திரமான சூழ்நிலையில், பெரிய அதிசயமான உலகை நோக்கித் தாம் புறப்படப் போகிறோம் என்பதைச் சம்பா உணர்ந்தாள். அவள் நினைத்ததில் தவறேதும் இல்லை.

# 24

வாக்களித்தவாறு பதினாறாம் தேதி. தஹ்மீனா ரஸா சம்பா அஹமத்தை புளோரன்ஸ் நிக்லஸ் ஹாலில் படிக்கட்டுகளுக்கருகில் சந்தித்தாள். அங்கு வந்ததும் சம்பா தடுமாற்றத்துடன் இங்குமங்கும் பார்த்தாள். அவள் பிராயத்தவளான ஒரு பெண் முன்வந்து கேட்டாள்: "நீ தானே சம்பா அஹமத்?"

"ஆம்"

"நல்லது என்னுடன் வா!"

மறுகணத்திலிருந்தே சம்பா அந்தச் சாந்த் பாக் உலகில் கலக்க லானாள். அன்று இரவு கல்லூரிப் பொது மண்டபத்தில் புதிதாகச் சேர்ந்த பெண்களுக்குக் கல்லூரியின் ஒழுங்கு முறைகள்—சட்ட திட்டங்கள் குறித்துப் பிரசங்கங்கள் செய்யப்பட்டன. கல்லூரிச் சூழலில் உள்ள பல்வகை வாழ்க்கை முறைகளை அறிவித்தார்கள். அப்போதுதான் சம்பா தெரிந்து கொண்டாள்: கல்லூரி அலுவலகத் திலிருந்தே புதிதாகச் சேர்ந்திருக்கும் மாணவிகளின் முகவரிகளைப் பழைய மேல் வகுப்பு மாணவிகளுக்குக் கொடுக்கிறார்கள்; ஒவ்வொரு வரையும் புதியவர்களுக்கு ஆலோசகராக நியமிக்கிறார்கள்.

தஹ்மீனா ரஸாவின் தங்கை தலயத் ஆரா முதலாண்டு

வகுப்பில் சேர்ந்திருந்தாள். சம்பாவிடம் நெருக்கமாகப் பழகினாள் "சம்பாபாஜி! நான் உன்னைப் பனாரஸிலேயே பார்த்திருக்கிறேன்!" என்றாள்.

சம்பா மற்ற பெண்களுடன் 'குல்பிஷான்' மாளிகைக்கும் சென்றாள். அங்கு எல்லாரும் சம்பாவுடன் உள்ளன்போடு பழகினார்கள். சிங்காடேவாலீ மாளிகையிலும் சம்பாவுக்கு இனிய வரவேற்பு கிடைத்தது. சங்கர் ஸ்ரீவாஸ்தவ் அவளுக்காக தேனீர்த் தட்டை எடுத்து வந்து கொடுத்தார். ஒரு ஞாயிற்றுக்கிழமையின் மாலையில் சம்பா குல்பிஷான் மாளிகைக்குச் சென்றாள். தலயத், தஹ்மீனா இருவரும் பின்பக்கத்துக் கூடத்தில் பக்கவாட்டிலுள்ள அறையில், ஜன்னல் எதிரில் மெத்தையில் அமர்ந்திருந்தார்கள். வெங்காயம் - மிளகாய்க் கூடைகள் அருகில் இருந்தன. நிர்மலா உருளைக் கிழங்கைத் தோல் உரித்துக் கொண்டிருந்தாள். அன்றைக்கு ஏதோ ஒரு விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. சம்பாவும் மெத்தையோரத்தில் அமர்ந்து உருளைக் கிழங்கு உரித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில்தான் பெரிய அண்ணன் அங்கு வந்து சேர்ந்தான். டென்னிஸ் ராக்கெட்டைக் கையில் வைத்திருந்த அவன் தோற்றம் மிகக் கவர்ச்சியாக இருந்தது. பெரிய அண்ணன் பொதுவாக வீட்டுக்குள் வருவதில்லை. குறிப்பாக, தஹ்மீனாவின் தோழிகள் வந்திருக்கும் போது. காரணம், தஹ்மீனாவின் தோழியர்களின் கூட்டத்தோடு அவனுக்கு ஒத்துப் போகத் தெரியாது. தஹ்மீனாவின் உண்மையான - ஏற்புடைய தோழர்கள் கமாலும் ஹரிசங்கரும் தான்.

பெரிய அண்ணன் பெரிய அண்ணன்தான். அவன் போக்கே தனி. சம்பா உருளைக்கிழங்கு நறுக்கிக் கொண்டிருந்தவள் தன்மயப்பட்டு நிலை தடுமாறித் தன் விரலை வெட்டிக்கொண்டு விடவில்லை. எகிப்து நாட்டு அரசிளங்குமரன் ஹஸரத் யூசுப்பைக் கண்டதும் அரண்மனைப் பெண்கள் நிலை குலைந்து எலுமிச்சம் பழத்தை திருத்துவதற்குப் பதில் விரலை வெட்டிக் கொண்டார்களாம். நல்ல காலம்! சம்பா அப்படி நிலைகுலையவில்லை. பெரிய அண்ணன் இரவு விருந்து பற்றி தஹ்மீனாவிடம் ஏதோ கேட்க வந்தான். பேசிவிட்டுத் திரும்பினான். தன் அறைக்கு வந்து கங்காதீனை அழைத்து, "புதிதாக வந்திருக்கிறாளே, அந்தப்பெண் யார்?" என்று கேட்டான்.

"தெரியலைங்களே!" கங்காதீன் தடுமாறினான். இதுவரைக்கும் எந்தப் பெண்ணைப் பற்றியும் அவன் எவரிடமும் விசாரித்தது கிடையாது. மேலும் பெரிய பெண்ணுக்கும் அவனுக்கும் திருமணம் நடக்கப்போவதாகப் பேச்சு. கங்காதீன் ஊகமாகச் சொல்லி வைத்தான்: "பெரிய பெண்ணோடு பல சிநேகிதிகள் வருகிறார்கள்..."

"சரி, நீ போகலாம்".

கமால் வந்தான். அவனிடம் இதைப் போய்க் கேட்கலாமா? எஞ்சியவள் தலயத். அவள் இயல்பே படு வெகுளித்தனம். குறிப்பாகத் தெரிந்தாலே போதும். ஊர் பூராவும் பறைசாற்றி விட்டு மறுகாரியம் பார்ப்பாள். இதென்ன சங்கடம்? தஹ்மீனாவோடு அதிகாரப் பூர்வமாகப் பிணைக்கப்பட்டு விட்டதால், பிற பெண்களை ஏறிட்டுப் பார்ப்பதும் அவனைப் பொறுத்தமட்டில் முறை தவறியதாகும். இப்படியொரு சிறை அனுபவமா? பெரிய அண்ணன் உண்மையில் சூனியத்தில் தனித்து விடப்பட்டிருப்பதாக எண்ணினான். தன்னுடைய இனிய கனவுலகக் கிளர்ச்சியில் தானே சிக்கி அல்லல் பட்டான்.

அமலா சம்பாவிடம் சொன்னாள்: "இப்போது வந்து போனாரே, அவர் தஹ்மீனாவின் கைத்தலம் பற்றப் போகும் பாக்கியசாலி. ஆனால் தஹ்மீனாவோ அவரை நெருங்கவிடாமல் சோதனைக்கு உட்படுத்தி வருகிறாள். "

ஓ! இது எத்தகைய சுவடுமாறாத சூழ்நிலை! 'குல்பிஷான்' போன்ற பெயருள்ள மாளிகைகளில் வாழ்பவர்களைப் பற்றிச் சம்பா தெரிந்து கொண்டவற்றிலெல்லாம் இதே நிலைமைதான்!

இந்தக் கதைகளைக் கிட்டத்திலிருந்து பார்த்தால் எந்தப் புதுமையும் இராது. பிறர் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சுவையான கதையாகக் கருதுகிறவன், தானே — தன் வாழ்வே பிறருக்குக் கதை யாகும் என்பதை உணர்வதில்லை.

சம்பாவும் இதை அப்போது உணரத்தான் இல்லை.

# 25

மாரிக்காலம் விடைபெற்றது. கார்த்திகைப் பௌர்ணமி வந்தது. பிறகு தை-மாசி சாரல் காற்றுடன் வந்தன. அறைகளில் கும்மட்டிக் கணப்புகள் கனன்றன. தோட்டங்களில் பனி மூட்டம் கவிந்திருந்தது. இரவில் மலர்களில் பனித்துளிகள் முத்திட்டிருந்தன. சாந்த்பாக் பூங்காவில் கிறிஸ்துமஸ் பண்டிகைக்கான ஏற்பாடுகள் தொடங்கின. செல்வந்தர்கள் புது மோஸ்தரில் ஓவர் கோட்டுகள் தைத்துக் கொண்டார்கள். ஏழை-பனாதைகள் கடுங்குளிரில் பரிதவித்துச் செத்தார்கள். பெரிய இடத்துச் சீமான்கள் வேட்டையாடக் காட்டுக்கும் மலைச்சாரலுக்கும் செல்லலானார்கள். கல்கத்தாவின் பொலிவு அதிகரித்தது. குளிர்மிக்க பனிக்காலம் விலகி, இளவேனில்

வந்தது. மொக்குகள் விரிந்து மணம் பரப்பின. கோடை தொடர்ந்தது. குளிர்ப்பதனமுள்ள நிலவறைகளில் குடிபுகுந்தார்கள்; நன்னாரித் தட்டிகள் தொங்கவிடப்பெற்றன. மாவட்டத் தலைநகர்களிலுள்ள பூங்காக்களில் மல்லிகையும் முல்லையும் நறுமணம் பரப்பின. பருவப் பரிசாகக் கனிகள் உதிர்ந்தன. பிறகு வெப்பம் கொதிப்பேறியது. கோமதி நதிக்கரையில், மணல்பகுதியில் கர்பூஜ் பழங்கள் விளைந்தன. ஆவணி தொடங்கியது. மாந்தோட்டங்களில் ஊஞ்சல்கள் ஆடலாயின. இப்படியாக ஓராண்டு கடந்தது. மதிப்புமிக்க ஆயுட் காலத்தில் ஓராண்டு கழிந்தது.

இப்போது தீபாவளி வரப்போகிறது. தலயத் குல்பிஷான் மாளிகையில் பின் கூடத்துக் கோடியில் குப்புறப்படுத்துப் புரண்டு கொண்டிருந்தாள். அங்கிருந்து தோட்டம் மிக அழகாகத் தோற்றமளித்தது. வானத்தின் நீலவண்ணம் கண் ணுக்கு ரம்மியமாக இருந்தது. நிலத்தின் பசுமையுடன் நீலவண்ணம் கலந்து கரையும் காட்சியும், அமைதியும் உள்ளத்தைக் கிளர்த்தின. உள்ளே பெரிய அண்ணன் பிடில் வாசித்துக் கொண்டிருந்தான். தரையில் காதை அழுத்திப் படுத்துப் பார்த்தாள். கைநீட்டி எதிரிலிருந்த புல்லைப் பிடுங்கிச் சுவைத்துப் பார்த்தாள்.

ஓராண்டு கடந்து விட்டது. பெரிய அண்ணன் கல்லூரியை விட்டுவிட்டான். ஏதோவொரு போட்டித் தேர்வுக்குத் தயார் செய்துகொண்டிருந்தான். கமாலும் ஹரிசங்கரும் எம்.ஏ. இறுதி ஆண்டில் படித்துக் கொண்டிருந்தார்கள். அப்பி பி.ஏ. முடித்து விட்டாள். தலயத்தும் நிர்மலாவும் பி.ஏ. இரண்டாவது ஆண்டில் இருந்தார்கள். தஹ்மீனாவுக்குச் செல்லப் பெயர்தான் அப்பி. பெரிய அண்ணனின் இயற்பெயர் சையத் ஆமிர் ரஸா. பெரியவர்—சிறியவர் யாவரும் செல்லமாக பெரிய அண்ணன் என்றே அழைப்பார்கள். அவன் கொஞ்ச காலமாக ஒரு தினுசாகி விட்டான். காதல் பித்து ஏறியிருக்கிறது. சம்பாவிடம் எல்லாருமே உள்ளத்தைப் பறிகொடுத் திருக்கிறார்கள். கமாலும் ஹரிசங்கரும் சம்பாவை அலுக்காமல் புகழ் கிறார்கள். தலயத்திடம் அவர்கள் சொல்வதுண்டு, "நீ பெரியவளாக வளர்ந்ததும் உணர்ந்து கொள்வாய் சம்பா எத்தகைய சிறப்பான பிறவி என்பதை" தலயத் அசுவாரசியமாகச் சொல்வாள்: "சரி, சரி; அப்படியே இருக்கட்டும்.!"

அப்பியும் சம்பாவும் தோழிகளாகவே இருந்தார்கள். அப்பி பெருந்தன்மை மிகுந்தவள். எவரிடமும் உள்ளன்போடு கபடு இல்லாமல் பழகுபவள். அப்பி-சம்பா இருவரில் யார் உயர்த்தி? தலயத் இந்தத் தராதர நிர்ணயத்தில் இறங்கி இப்படி முடிவுக்கு வந்தாள். 'மனிதர்கள் வெளிவனப்பை மிகையாக விரும்புகிறார்கள். சம்பா நல்ல அழகி; அப்பி அப்படி இல்லை. இதுதான் சமாசாரம்'.

இவ்வாறு சிந்தித்தபின் தலயத்திற்கு மிக்க வேதனையாக இருந்தது. புற அழகுக்கு மக்கள் இவ்வளவு மதிப்பா அளிக்கவேண்டும்? எதிரே இருந்த புற்களைப் பறித்துச் சுவைத்தாள் தலயத்.

கமால் டேராடூன் நகரில், ஒரு வீதியில் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு நடந்தான். அவன் தீபாவளி விடுமுறையில் இப்படி வெளியூரில் சுற்றித் திரிவது வழக்கம். இந்தத் தடவை அவனுக்கு ஒரு பொறுப்பு இருந்தது. அவன் படித்த லாமார்ட்டினேயர் காலேஜில் புரொபஸராக இருந்த ஆங்கிலேய வாலிபன் சில வருஷங்களுக்கு முன்பு ஆக்ஸ்போர்டிலிருந்து வந்திருந்தான். அண்மையில் அவன் துறவியாகி எங்கோ சென்று விட்டான். அவனைத்தேடி அழைத்து வரவே கமால் இங்கு வந்திருக்கிறான். கமால் அந்தப் புரொபஸரின் அன்புக்குரித்தான மாணவன். ஹரிசங்கருடன் ஹரித்துவார், அக்கம்பக்கத்துக் கோயில்கள், மலையடிவாரம் எல்லாம் போய்த் தேடிப் பார்த்தான். ஒருநாள் யோக மாயாவின் கோவில் பக்கம் அந்தப் பிரிட்டிஷ் வாலிபன் கிடைத்தான். கைகூப்பி வேண்டிக் கொண்டான் அவன்: "தம்பி! நான் சங்கடமான உலகியல் வாழ்விலிருந்து விடுபட்டு வந்திருக்கிறேன். என்னைத் திரும்ப அழைத்துப் போகாதே! தயவு செய்து என்மீது கருணை காட்டு. நான் இப்போது நிம்மதியாக இருக்கிறேன். என்னை விட்டுவிடு!"

கமால் சொன்னான்: 'விளம்பரத்திற்காக நீங்கள் செய்திருக்கும் வித்தை இது என்று லக்னோவில் பேசிக் கொள்ளுகிறார்கள்.'

"தம்பி. தயவுசெய்து ஆண்டவனுக்கு வேண்டி நீ இங்கிருந்து போய்விடு!" காவி உடையைச் சரிப்படுத்திக்கொண்டு, அந்த வெள்ளைக்கார இளந்துறவி வாய்க்காலைத்தாண்டி காட்டுக்குள் புகுந்து மறைந்தான். இப்போது ஏமாற்றத்துடன் திரும்பிய கமால் டேராடூன் மோகினி ரோடில் முகம் கவிழ்த்து கிடக்கிறான். எப்போதும் போல் ஹரிசங்கர் அவனுடன் வந்து கொண்டிருக்கிறான்.

"ஹரி சங்கர்!"

"என்ன கமால்?"

"இந்தப் புரொபஸர் ஹாமில்டன் சொன்னது சரியாகத்தான் படுகிறது. நாம் சங்கடமான உலகியல் வாழ்வில்தானே உழன்று கொண்டிருக்கிறோம். மிக மோசமான வாழ்வு இது".

அன்று இருவரும் தியாகம், துறவு பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார்கள். மெய்ஞ்ஞான மார்க்கத்தில் அவர்களுக்கு அன்று ஈடுபாடு ஏற்பட்டது. அதே சிந்தனையில் லயித்திருந்தார்கள்.

ஹரிசங்கர் புது யோசனையைத் தெரிவித்தான். "வா! ஒவ்வொரு

மாளிகையின் பெயரையும் பார்த்துக்கொண்டே போகலாம். பெயர் வைப்பதில் இவர்களுக்கு இருக்கும் மனோபாவத்தைப் புரிந்து கொள்ளலாமே".

"நாம் ஒருக்காலும் வீடுகட்டிக்கொண்டு வாழப்போவதில்லை, அதிலும் அரண்மனை போன்ற மாளிகையை நாம் உருவாக்கப் போவதில்லை" கமால் சொன்னான்.

"நீ சொல்வது சரி. பூர்ஷ்வா மனப்பான்மை எவ்வளவு பரிதாப கரமான ஸெண்டிமென்டல், பார்! இந்த மாளிகையின் பெயரைப் படி!"

"ஃக்வாபிஸ்தான்—கனவு மாளிகை—சொப்னபூமி!"

"நீயே இத்தகைய மாளிகைகளில் —'குல்பிஷான்', 'கயாபான்' மாளிகைகளில் இருப்பவனாயிற்றே."

"எனக்குத் தெரியும்"

"கமால்! சற்று சிந்தித்துப்பார்! இங்கிருந்து அந்தக் கோடி வரைக்கும் அழகழகான மாளிகைகளைக் கட்டி வைத்திருக்கிறார்கள். உலகமெங்கும் கட்டிடங்கள் நிறைந்திருக்கின்றன."

"ஆம் வேடிக்கைதான்"

இருவரும் ஒரு மாளிகையின் வெளிப்பக்கத்தில் கட்டைப் பாலத்தில் உட்கார்ந்தார்கள். உண்மையில் வெள்ளைக்கார வாலிபப் பேராசிரியர் துறவு பூண்டது அவர்களை அமைதியிழக்கச் செய்து விட்டது. நல்ல படிப்பாளி, சிந்தனையாளன், விஞ்ஞானி, வாலிபன் துறவு பூண்டு காட்டுக்குப் போய்விட்டானே! என்ன ஆச்சரியம்! இதற்குத் தகுந்த காரணம் இருக்கத்தான் செய்யும்!

இருட்டுகிற வரைக்கும் இருவரும் மலர்கள் பரப்பும் நறுமணத்தை அனுபவித்துக்கொண்டே, அந்தப் பெருஞ்சாலையிலுள்ள பெரிய வீடுகளின் பெயர்களைப் படித்துக்கொண்டே சென்றார்கள்: 'நஸ்தான்,' 'தெளலத்கானா', 'ஷைமராங்க்', 'ஆஷியானா', 'ராஜ்மஹல்', கமாலின் தந்தையின் மாளிகை 'கயாபான' கூட எதிர்ப்பட்டது. இந்த மாளிகைத் தோட்டங்களின் வளர்ந்துள்ள மலைப் பிரதேசத்து மலர்ச் செடிகளில் பூத்துக்குலுங்கும் பூக்களின் சுகந்தம் வீதியெங்கும் பரவியது. இந்த உலகமே மிக அழகானது!

இருவரும் மறுபடியும் ஒரு மாளிகையின் வெளிப்புறத்துக் கட்டைச்சுவர்ப் பாலத்தில் அமர்ந்து, முகம் கவிழ்த்து யோசித்துக் கொண்டிருந்தார்கள். பாலத்திற்கடியில் வாய்க்கால் நிறைந்து தண்ணீர் ஓடியது. வீதியை ஒட்டியே செல்லும் வாய்க்கால் அது. தண்ணீர்பெருக்கில் கிழிந்த செருப்பு ஒன்று துள்ளிக் குதித்துக் கொண்டு மிதந்து போயிற்று.

# 26

இரண்டு ஆண்டுகள் மேலும் கடந்தன.

1942, ஆகஸ்டு மாதப் போராட்டம் பழைய காலச் செய்தியாகி விட்டது பண்டித் ஜவஹர்லால் நேரு, அபுல் கலாம் ஆஜாத் முதலிய தலைவர்கள் அகமத் நகர் கோட்டையில் சிறைப்பட்டிருந்தார்கள். உலகப் போக்கு மாறி வந்தது. விரைவான மாறுதல். சமூகத்தில் எல்லா இடங்களிலும் படையணியைச் சேர்ந்தவர்கள் தென் பட்டார்கள்.

குல்பிஷான் மாளிகையில் 'பெரிய அண்ணன்' என அழைக்கப் படும் சையத் ஆமிர் ரஸா இம்பீரியல் சர்வீஸ் தேர்வில் தோல்வி கண்டபின், கடற்படையில் உயர்பதவியில் சேர்ந்து விட்டான். தஹ்மீனா எம்.ஏ. இறுதியாண்டுக்கு வந்து சேர்ந்தாள். சம்பா எம்.ஏ. இறுதியாண்டுக்கு முந்திய ஆண்டில் படித்துக் கொண்டிருந்தாள்; கைலாஷ் ஹாஸ்டலில் தங்கிப் படித்து வந்தாள். தலயத், நிர்மலா இருவரும் ஆர்ப்பாட்டமான அண்டர் கிராஜுவேட் மாணவிகள், சம்பா வெகுநாட்களாகவே நகரில் புகழ்பெற்றுள்ள 'ஃபேஷனபிள் ஸ்மார்ட் இண்டலெக்சுவல் ஸெட்'டில் இருந்து வருகிறாள். எவ்வளவு பெயர்கள்! எவ்வளவு புதுமுகங்கள்! இளைய பருவங்கள்! இவ்வளவு இளம் அழகிகளும் ஒரு குழுவினராக ஒன்றி இருந்தார்கள். இவ்வளவு கூட்டத்திலும் சம்பா தனித்தே இருந்தாள். இறுதியான மதிப்பீட்டில் தெளிவாகிறது. மனிதன் தனிப்பட்டவன்தான் என்பது. இப்படி இருந்தும் நாம் நாலா பக்கங்களிலுமுள்ள மனிதர்களிடையே பலதரப் பட்ட பொதுமையை, ஒருங்கிணைப்பை நிலைநாட்ட முயன்று கொண்டிருக்கிறோம். இந்தப் பொதுமை தவறானது. சாத்தியமில் லாதது என்பது தெரிந்ததும், நாம் எவ்வளவு சாமானியமானவர் -சிறப்பற்றவர் என்பதையும் உணர்ந்து கொள்கிறோம்.

இதைத்தான் ஒருநாள் திடீரென்று சம்பா சையத் ஆமிர் ரஸாவிடம் சொன்னாள். அன்று சையத் ஆமிர் சென்னைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தான். சம்பாவைச் சந்திக்க கைலாஷ் ஹாஸ்டலுக்குப் போயிருந்தான். அவள் லைப்ரரிக்குப் போய்க் கொண்டிருந்தாள். சைக்கிளைத் தள்ளியவாறு சாலையில் நடந்தாள். சையத் ஆமீர் ஏமாற்றத்துடன் சொன்னான்: "நான் இங்கிருந்து ஓடப் போகிறேன். நல்லகாலம். இதற்கான வாய்ப்பு கிடைத்திருக்கிறது. நீ... நீ.... என்னை மணந்துகொண்டு, என்னுடன் வந்து விடுகிறாயா?"

சையத் ஆமிர் அழகான வாலிபன்; மிக நாகரிகமானவன். கடற்படையில் சேர்ந்தது மேலும் கவர்ச்சிமிக்க பொலிவை அவனிடம் காட்டியது. சார்லஸ்வாயருக்கு கடற்படைச் சீருடை அணிவித்துப்

பார்த்தால் எப்படி இருக்கும்?

சம்பாவின் முகம் இனந்தெரியாத உணர்ச்சியில் வாடியது. இது மிக முக்கியமான விஷயம். ஓர் ஆண் அவளைத் தன் வாழ்க்கைத் துணைவியாகுமாறு கோருகிறான்; அந்த ஆணழகனை அவள் மிகவும் நேசிக்கிறாள்.

ஆனால் அவள் சொன்னாள்: "அதிசயமாகத்தான் இருக்கிறது. இப்படிக் கேட்க உங்களுக்கு வெட்கமாக இல்லை?"

"என்னை ஏன் இந்தப் பூங்காப் பாதையில் நடக்க வைக்கிறாய்?" சையத் ஆமிர் சினந்து கேட்டான்.

"நான் உங்களை எந்தப் பூங்காவுக்கும் அழைத்துச் செல்லவில்லை."

"நீ உன் மனச்சாட்சிக்கு ஒப்பக் கூறுவாயா, என்மீது பிடிமானம் உனக்கு இருந்ததில்லை, என்று? அதிலும், உன் தோழி தஹ்மீனாவை எனக்கு மணம் செய்து வைக்கப்போகிறார்கள் என்பதை நீ அறிந்தே என்னிடம் ஈடுபாடு கொண்டிருந்தாயில்லையா?"

சம்பா பதில் பேசவில்லை. சரியான கேள்விதான். 'உண்மைதான்... தன்னிடமுள்ள குறைகளை முதல்முறையாக உணர்ந்து கொண்டாள். கொள்கைகள், கோட்பாடுகள், தத்துவ சிந்தனைகள் எல்லாம் இருந்தாலும், நடைமுறை வாழ்க்கையில் அவற்றுக்கு எதிராகத்தான் வாழ்கிறோம். கொள்கைக்கும் செய்கைக்கும் முரண்பாடு இயல்பாகிவிட்டது. நாம் உண்மையில் மிகவும் பலவீனமானவர்கள்'.

சையத் சம்பாவின் கருத்தோட்டத்தைப் புரிந்து கொண்டான். "நீயும் மிகச் சாதாரண-கீழ்மட்டப் பெண்ணாகத்தான் இருக்கிறாய்".

"நான் அசாதாரணமானவள்-தனிச்சிறப்பு வாய்ந்தவள் என்று என்றைக்கு வீறாப்பு கொண்டிருக்கிறேன்?" இருவரும் பாத்ஹா பாக் பூங்காவின் வெளிக் கேட்டிற்கு அருகே வந்து விட்டார்கள்.

"நீங்கள் ஏன் என்னுடன் வந்து கொண்டிருக்கிறீர்கள்? நான் என் வேலையாகப் போகிறேன். நீங்கள் உங்கள் வீட்டுக்குப் போய்ச் சேருங்கள்!"

"எனக்கென்று எந்த வீடும் கிடையாது".

"அப்படிப் பார்க்கப்போனால் நம்மில் எவருக்கும் சொந்தமான வீடு கிடையாது. சரி, நான் இப்போது தத்துவார்த்தப் பேச்சில் இறங்க விரும்பவில்லை. உங்களுக்கென்று ஒரு வீடு இருக்கிறது: அதற்கு 'குல்பிஷான்' என்று பெயர். ஆண்டவனே! எவ்வள்வு போலியான பெயர்-! அங்கு தஹ்மீனா இருக்கிறாள். அங்கே போய்ச் சேருங்கள்."

"நீ இவ்வளவு சாதாரணப் பெண்ணாக இருப்பாயென்று நான் நினைக்கவில்லை. என்னுடன் சண்டை பிடிக்கிறாய்! உன்னுடைய எல்லா எதிர்விளைவுகளும் மிகச் சாதாரணமானவை. நீ தாழ்ந்த

நிலைக்குத் திரும்பி விட்டாய். உன்னைப்போன்ற பெண்கள்தான் இந்த உலகில் அதிகம். முதலில் என்னை நெருக்கமாக விரும்பினாய்; இப்போது என்னுடன் வாழத் துணியவில்லை. அதிசயம்தான்!"

"சர்வ சாதாரணமான ஆண்களைப் போலவே நீங்களும் என்னுடன் வம்பு செய்கிறீர்கள். ஆக, இதிலிருந்து ஒன்று தெளிவாகியது, நம்மில் எவரும் தேவலோகவாசி இல்லை. வணக்கம்!" சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டுச் சைக்கிளில் அமர்ந்து டாகூர் லைப்ரரிப் பக்கம் விரைந்தாள்.

சையத் 'குல்பிஷான்' மாளிகைக்கு வந்து, சாமான்களை அக்கறையாக எடுத்து வைத்துக்கொண்டான். பயணத்திற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்தான். அன்றைய தினம்தான் தஹ்மீனா எம்.ஏ. இறுதிப் பரீட்சையை எழுதிவிட்டு வந்தாள். வீட்டில் விருந்து தயாரிப்பு மும்முரமாக இருந்தது. பெரிய பெண் மேல்படிப்பை முடித்திருக்கிறாள். பெரிய பிள்ளை கடற்படையில் அதிகாரியாகியிருக்கிறார். இனி திருமணம் நடக்கத் தாமதமேன்?

இரவு சையத் ஆமிர் ரஸா காரில் அமர்ந்து ஸ்டேஷனுக்குப் போய்ச்சேர்ந்தார். வீடு பூராவிலும் ஒரு சிடு சிடுப்பு-சலிப்பு பரவியது. கமாலும் ஹரிசங்கரும், தஹ்மீனாவுக்கு எதிரே போகாமல் தப்பிச் சென்றார்கள். கோடைவிடுமுறை தொடங்கியது. சம்பா பனாரஸ் திரும்பினாள். குல்பிஷான் மாளிகைக்காரர்கள் வழக்கம் போல் சுகவாச மலைப்பிரதேசத்திற்குச் செல்ல ஏற்பாடு செய்யலானார்கள். நைனிடாலுக்குப் புறப்பட்டார்கள். அத்தை அழைத்ததற்காக கமால் மசூரி சென்றான்.

ஜூலை மாதத்தில் எல்லாரும் மலைப்பிரதேசங்களிலிருந்து இறங்கத் தொடங்கினார்கள். 'குல்பிஷான்' மாளிகையில் கலகலப்பு திரும்பியது. லீவில் சையத் வந்து சேர்ந்தான். மூன்று நாளும் தன் அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தான். கிளம்புவதற்கு முதல்நாள் அம்மா பேகமின் அறைக்குப் போனான். அந்த வீட்டுத் தலைவியிடம், "உங்கள் பெண் எம்.ஏ பாஸ் செய்துவிட்டாள். என் வாழ்த்துக்கள்!" என்று நிதானமாகச் சொன்னான்.

அம்மா பேகம் எதுவும் பேசவில்லை.

"இனிமேல் அவளுக்குத் திருமணம் செய்து வைத்து விடுவதுதான் நல்லது. இது என் கருத்து."

"மாப்பிள்ளை யார்?" சூடாகக் கேட்டாள் குடும்பத் தலைவி.

"வேறுயார்? நான் தான்" சையத்தும் அதே சூட்டோடு பதில் சொன்னான்.

"உனக்கு இதைச் சொல்ல வெட்கமாக இல்லை? சித்தப்பா பெண்ணை—முறைப்பெண்ணை விட்டுவிட்டு, வெளியிடத்துப் பெண்மீது மோகம் கொண்டு திரிகிறாய். எங்களால் வெளியே தலை

காட்ட முடியவில்லை. எங்கு பார்த்தாலும் இதே ஏச்சுப் பேச்சு."

"நான் என் கடைமையிலிருந்து தவருகிறேனென்று நீங்கள் எப்படி முடிவு செய்தீர்கள்? தஹ்மீனா பேகமின் கணவனாக நான் விளங்க வேண்டும் என்பதற்காகத்தானே இந்த வீட்டில் வளர்க்கப் பட்டிருக்கிறேன். செய்நன்றி மறக்கமாட்டேன்." சொல்லிவிட்டு வெளியே வந்து விட்டான் சையத் ஆமிர்.

நற்செய்தி வீடு பூராவும் பரவியது. மங்கல கீதம் இசைக்க ஏற்பாடாகியது. பணிப்பெண் ஒருத்தி இந்தச் சுபமான செய்தியைத் தஹ்மீனாவிடம் தெரிவித்தாள். தஹ்மீனா வெகுண்டாள். உரக்கக் கூவினாள்: "இனி உலகமே புரண்டு தலைகீழானாலும் சரி, நான் அவரை மணந்து கொள்ள மாட்டேன்." பிறகு அவள் விக்கி விக்கி அழுதாள்.

பிறகு அந்த வீட்டில் 'எமர்ஜென்ஸி' பிரகடனமாயிற்று. நாலா பக்கங்களும் தொலைபேசிகளும், டிரங்க்கால்களும் பறந்தன. மசூரிக்கு, கமால் பெயருக்குத் தந்தி அடித்தார்கள், அவன் வந்து அக்காவுக்கு எடுத்துச் சொல்லட்டுமென்று. ஒவ்வொருவரும் தம்மால் முடிந்த வரை தஹ்மீனாவைச் சமாதானப்படுத்திப் பார்த்தார்கள். தஹ்மீனா இணங்கவே இல்லை. இரவெல்லாம் அவள் அழுதே கழித்ததைத் தான் வீட்டில் இருந்தவர்கள் கண்டார்கள்.

கமால் மசூரியிலிருந்து வந்து வீட்டு நிலைமையைப் பார்த்தான். பிறகு பனாரஸ் சென்று சம்பாவைச் சந்தித்தான். அங்கு பெரிய அண்ணனையும் கண்டான். இப்போது சையத் சம்பாவுடன் என்ன பேச வந்தானோ? கமாலைக் கண்டதும் எழுந்து போய் விட்டான்.

நிலைமை மெல்ல மெல்ல சகஜநிலைக்கு வந்தது. சம்பா எப்போதும் போல் தோழியர் குழுவுடன் ஒட்டுறவு குன்றாமல் இருந்து வந்தாள். இதனால் சம்பாவுக்கும் தஹ்மீனாவுக்குமுள்ள தோழமை குன்றவில்லை. இருவருமே உள்ளன்போடு நெருங்கிப் பழகி வந்தார்கள். இருவரில் எவரும் மறந்தும் சையத் பற்றிப் பேச்செடுப்பதில்லை. இருவருமே தம்மைப் பற்றி மேலான எண்ணம் கொண்டிருந்தார்கள்—'நான் பெரும் போக்கு; ஒழுங்கு முறை நிறைந்தவள். மற்ற பெண்களைப் போல் உணர்ச்சிவசப் படவோ, அற்பத்தனமாக நடந்து கொள்ளவோ இடம் கொடுக்க மாட்டேன்!'

மேலும், இதிலொரு உண்மை! நாம் எதைப் பெரும் சங்கடமாக நினைத்து வருந்துகிறோமோ, அதுவே காலம் கடந்தபின், 'இதற்காகவா இவ்வளவு வருந்தினோம்? முட்டாள்தனம். வீணுக்கு அல்லல் பட்டோமே!' என்று கழிவிரக்கம் கொள்கிறோம்.

# 27

*பஞ்சத்தின் கொடுமைக்கு இரையாகிய மக்களுக்கு உதவி புரியக் கமால் கல்கத்தா புறப்பட இருந்தான். தில்லியிலிருந்து மாமாவின் கடிதம் வந்து சேர்ந்தது. மாமா, சகோதரியின் கணவர். லாஜ்வதியைச் சகோதரியாக நேசித்து வந்தான் கமால். அவளுக்குத் திருமணமாகி ஓராண்டாகி விட்டது. அவள் கணவர்தான் தில்லியில் ஏதோவொரு அமைச்சரகத்தில் அண்டர் செக்ரெட்டரி. லாஜ்வதியின் தங்கை நிர்மலாவுக்கு விவாகம் ஆக வேண்டும்; பெற்றவர்களுக்கு இது ஒரு கவலை. மாமா (லாஜ்வதியின் கணவர்) எழுதியிருந்தார்: "நீதான் கல்கத்தா போகிறாயே. சர் தீபநாராயணின் மகன் கௌதமன் இப்போது கல்கத்தாவில்தான் இருக்கிறான். அவனுக்கு நிர்மலைக் கொடுக்கலாமென்று எங்கள் எண்ணம். அவனும் உங்களைப்போல் பங்கால் ரிலீஃப் தொண்டிற்காக அங்கு வந்திருப்பான். இல்லாவிட்டால் விசுவபாரதி பல்கலைக்கழகத்தில் ஏதாவது படித்துக் கொண்டிருப்பான். அவன் எங்கு இருந்தாலும் நீ அவனுடன் பேசிப்பழகி, அவனுடைய தன்மையை - போக்கைத் தெரிந்து கொண்டு எங்களுக்கு எழுது. நான் கேள்விப்பட்ட வரையில் அவன் இயல்பு மேம்போக்காக அல்லது உங்கள் மாதிரி 'பொஹிமியன்' ரகமாக இருக்குமென்று கேள்வி."*

*கமால் கடிதத்தைச் சட்டைப்பையில் வைத்துக்கொண்டான். கமாலுக்கு வேண்டியவர்தான் மாமாவும். பஞ்சத்தால் மக்கள் ஈக்கள் - கொசுக்களைப் போல மடிந்து கொண்டிருக்கிறார்கள். நாடு அழிவை நாடிப் போய்க்கொண்டிருக்கிறது. மாமாவுக்கு மைத்துனியின் கலியாணக் கவலை வாட்டுகிறது! கமால் உணர்ச்சிமிக்க மாணவர் தொண்டன். தஹ்மீனா - பெரிய அண்ணா விவாக விவகாரம் வெளிப்படையானபோது, விவாகப் பேச்சே கமாலுக்குச் சலித்துவிட்டது.*

*கமால் தலயத்திடம் சலித்துக்கொண்டே சொன்னான்: "நான் கல்கத்தாவில் பஞ்சத்தில் மடிந்த மனிதச் சடலங்களைத் தூக்கிப் போய் அடக்கம் செய்வேனா, அல்லது நிர்மாலாவுக்கு மாப்பிள்ளை தேடிக்கொண்டு திரிவேனா?" ஆனாலும் கடமையுணர்வுடன் மாமா தந்த முகவரியைக் குறித்துவைத்துக் கொண்டான். பிறகு கல்கத்தா வுக்குப் பயணமானான்; அவனுடன் பல கல்லூரி மாணவ-மாணவிகள் வந்தார்கள். வழியெல்லாம் இந்தத் தொண்டர் குழாம் இக்பால், ஜோஷ், டாகூர், நஜ்ருல் இஸ்லாம் முதலியவர்களின் உணர்ச்சிமிக்க பாடல்களைப் பாடிச்சென்றார்கள். ரயில் ஜன்னலி லிருந்து வளம் கொழிக்கும் வயல்கள் தென்பட்டன. அதைக்*

கண்டதும், இது என் நாடு; இது என் தாய்நாடு. தேசபக்தி, புரட்சி, தேசீய எழுச்சி, பிரிட்டிஷ் அரசுக்கு எதிராகக் கொதித்தெழல், மன ஆதங்கம்— இவையெல்லாம் சேர்ந்து அவனுள்ளத்தில் விசித்திரமான விளைவுகளைக் கிளர்த்தின.

கங்கைக்கரையில், மிக அழகான சிற்றூரின் ரயில் நிலயத்தில் புகைவண்டி நின்றது. ஜன்னல் வழியாக வெளியழகைப் பார்த்தார்கள். நாலு பக்கமும் குளங்கள், பசுமையான கழனிகள், மூங்கில் காடுகள், தொலைவில் சூரியன் கங்கையின் அலைகளுக்கிடையே தவழ்ந்து மேற்கே மறையத் தொடங்கினான். புகை வண்டி நிலையத்தில் இரு பல்லக்குகள் நின்றிருந்தன. பிளாட்பாரத்தில் கிராமவாசிகளின் கூட்டம் நிறைந்திருந்தது. அரிசியைத் தேடி கல்கத்தாவுக்குப் படை யெடுப்பவர்கள் இவர்கள். எதிர்முகமாக மற்றொரு தண்டவாளத்தில் மிலிட்டிரி ஸ்பெஷல் டிரெயின் நின்று கொண்டிருந்தது. கார்டு அறிவித்தார்: "இந்த மிலிட்டிரி டிரெயின் கிளம்பிய பிறகுதான் பயணிகள் ரயிலைவிட முடியும். நாலைந்து மணி நேரம் தாமதமாகும்."

"ஏன் அப்படி ?" கமால்

"இது வார் டைம்"—கார்டு போகிற போக்கில் சொல்லி விட்டுச் சென்றார். மாணவர்களும் மாணவிகளும் ரயிலிலிருந்து கீழே இறங்கி விட்டார்கள். கமாலும் நண்பர்களும் பாடியும் பேசியும் பொழுதைக் கழித்தார்கள். ரயில் கிளம்புகிற வழியைக் காணோம்.

திடீரென்று ரேகா கத்திக்கொண்டு பிளாட்பாரத்தில் ஓடினாள். மற்றவர்களும் அவளைத் தொடர்ந்து விரைந்தார்கள். ஒரு மூலையில் குடியானவர்களின் சிறு கூட்டம் பயப்பிராந்தியுடன் உருக்குலைந்து உட்கார்ந்திருந்தது. தாடி மீசை வளர்ந்த ஒரு வாலிபன் இறந்து கிடந்தான். அவனுடைய அழகிய இளம் மனைவி அலறி அழுது கொண்டிருந்தாள். அவர்களுடைய இரு குழந்தைகளும் கூடவே புலம்பிக் கொண்டிருந்தன.

"கமால்! இங்கே வா! சவ அடக்கம் செய்யவேண்டிய பணி நமக்கு இங்கிருந்தே ஆரம்பமாகிவிட்டது. தயாராகு!" நரேந்திரன் அறிவித்தான்.

புலம்பலுக்கிடையே அந்த இளம் விதவை தகவல் சொன்னாள். அவளும் கணவன் அபுல் மன்சூரும் குழந்தைகளுடன் சோறு தேடக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டார்கள். ஒரு வாரமாக அவர்கள் பட்டினி. மிலிட்டிரி டிரெயினிலிருந்து விட்டெறியப்பட்ட ரொட்டித் துண்டுகளைப் பொறுக்கிக் குழந்தைகளுக்குக் கொடுத்தாள். அவள் குரலும் மிகத் தீனமாக ஒலித்தது. மயங்கிப் படுத்தாள். எல்லார் எதிரிலும் அவள் மெல்ல மடிந்தாள்.

ஆங்கிலோ இண்டியன் ஸ்டேஷன் மாஸ்டர் அங்கு வந்தார். அதிகாரக் குரலில் "இங்கே என்ன களேபரம் பண்ணுகிறீர்கள்?

தினமும் இங்கே நூறு-ஐம்பது என்று பட்டினிப் பட்டாளம் செத்துக் கொண்டிருக்கிறது. யாருக்கென்றுதான் கவலைப்படுவது? இது ஆஸ்பத்திரி இல்லை. இந்த வங்காளிகள் என்றைக்குமே பட்டினிப் பட்டாளம்தான். நீங்கள் ஏன் இதற்கெல்லாம் கவலைப்படுகிறீர்கள்?"

"இங்கே சுடுகாடு எங்கே இருக்கிறது?" கமால் சினத்தை யடக்கிக்கொண்டு கேட்டான்.

"எனக்குத் தெரியாது. நீங்கள் இவர்களுக்கெல்லாம் குழி தோண்டிப் புதைக்கப் போகிறீர்களா? தட் இஸ் வெரி ஃபன்னி!"

கல்லூரி மாணவர்களில் சிலர் இடுகாட்டையும், மௌல்வி யையும் தேடிச் சென்றார்கள்.

பிளாட்பாரத்தில் இருள் கவிந்திருந்தது. மூங்கில் காடுகளில் புகுந்து காற்று ஓங்கி ஒலித்தது. கமால் தன் ஹோல்டாலிலிருந்து ஒரு போர்வையை எடுத்து இரு சவங்கள் மேலும் போர்த்தினான். கந்தலான சிவப்புச் சேலை உடுத்திய ஆமினா பீவி, பல ஒட்டுகள் போட்ட நீல நிறச் சட்டையணிந்த அபுல் மன்சூர் — இருவருடைய சடலங்களும் ஒரே போர்வைக்குள் மறைந்தன. பக்கத்திலேயே கங்கை நதி ஓடிக்கொண்டிருந்தது. ஓர் ஓடம் போவது தெரிந்தது. ஓடத்தில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. ஓடத்தில் யாரோ உருக்கமான நாடோடிப் பாடலை எடுப்பாகப் பாடிக்கொண் டிருந்தார்கள். கமாலுக்குப் பொருள் புரியவில்லையானாலும், பாடும்விதம் உள்ளத்தைத் தொட்டது. மரங்களுக்கருகில், லார்டு கார்ன்வாலிஸ் காலத்தில் கட்டிய பெரிய தூண்களும், அகலமான கூடமும் உள்ள ஜில்லா கலெக்டரின் நேர்த்தியான மாளிகை இருந்தது. அதற்குப் பக்கத்தில் பெரிய ஜமீந்தார் ராஜா கிரீஷ் சந்த்ர ராய் மாளிகை. அங்கு ரேடியோ ஒலித்துக்கொண்டிருந்தது. பி.பி.சி. யின் இரவு ஒலிபரப்பு. கமாலின் உள்ளம் சாம்பியது. கண்களை மூடிக்கொண்டான். இந்த வங்காளம் ரவீந்திரநாத் தாகூர், சரோஜினி தேவி, சரச் சந்திரர் முதலானவர்களின் நாடு, நாவலாசிரியர்களுக்கும் கவிஞர்களுக்கும் பிரியமான நிலைக்களன்.

நாம் எல்லாருமே பலதரப்பட்ட நூல்களின் பாத்திரங்கள், பொருள்கள், வரலாற்றுச் சான்றுகள், சொற்கள், புள்ளி விவரங்கள், அறிக்கைகள், காங்கிரஸ், முஸ்லீம் லீக் முதலிய அரசியல் கட்சிகளின் சொற்பொழிவுகள், கம்யூனிஸ்ட் பார்ட்டியின் மானிஃபெஸ்டோ (கொள்கை அறிக்கை) — எல்லாமே நம் கொள்கைப் பிரதிபலிப் புகள்தாம். சென்ற வாரம் டாக்டர் அஷரப் சொற்பொழி வாற்றினார்:

"அடிமை நாடுகள் விடுதலைக் கோரிக்கையை எழுப்புவது லெனின் சித்தாந்தங்களும் கருத்துரைகளும் காட்டித்தந்த விளைவு. பாகிஸ்தான்... முஸல்மானாக இருந்தால் போதும், உடனே அவன்

பாகிஸ்தானியாகி விடுவானா? இல்லாதுபோனால், வேறு எப்படி இருப்பான்...?"

லெனின், ஸ்டாலின், கார்க்கி, டாக்டர் அஷ்ரப், ஸஜ்ஜாத் ஜஹீர், ஜின்னாசாஹப், மகாத்மா காந்தி, பண்டித் ஜவஹர்...

கமாலின் மூளைக்குள் நிகழ்ச்சிகள், பெயர்கள், மானிடச் சிறப்புகள் யாவும் வரிசையாக உலாவந்தன. ஆனால் எல்லாவற்றிற்கும் கேந்திரமான புள்ளி இப்போதைக்கு இந்த இரு சடலங்கள்தாம். எல்லா நிகழ்ச்சிகளின் - சித்தாந்தங்களின் தொடர்பும் இணைப்பும் இந்தக் கேந்திரப் புள்ளியிடம் வந்து சிதிலமடைந்து விடுகின்றன.

மறுநாள் காலையில் பொதுத்தொண்டர்கள் கல்கத்தாவுக்குப் புறப்பட்டார்கள். மாலையில் டிரெயின் ஹால்டா ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தது. மாணவர்களும் மாணவிகளும் தம்முடைய தங்கு மிடங்களுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். பிரமோத் குமாரின் இல்லத்தில் யாவரும் சந்திப்பதாக ஏற்பாடு செய்து கொண்டார்கள். மறுநாளே எல்லாரும் அங்கு கூட வேண்டும். கமால் மாணிக் தல்லா சென்றான்; அங்கே அவனுடைய மாமா 'மடியாபுர்ஜ நவாப்' இருந்தார்.

# 28

மாணிக் தல்லா பகுதியில், பழமையான கட்டிடத்தின் எதிரே மூடிய வண்டியொன்று வந்து நின்றது. இதன் கட்டிடக் கலைப்பாணி கம்பெனி சர்க்கார் ஆண்ட காலத்தியது. இத்தகைய கட்டிடங்கள் கல்கத்தாவில் பல இடங்களில் இருந்தன. பெரிய தூண்கள், அகலமான கூடம், வெனீஷியன் திரைச் சீலைகள். உள்ளே அறைகளில் தங்க நிற பிரேம்போட்ட பிரிட்டிஷ் காட்சிகள். காஷ்மீரில் தயாரித்த படுதாக்கள்; சீனப் பொம்மைகள், கலங்கள், வெளியே சிறு பூங்கா, நறுமணம் பரப்பும் மலர்கள்.

மேல் மாடியில் பெண்களின் குரல்கள் கலகலப்பாக ஒலித்தன. ஒருத்தி கத்தினாள்: "அடேடே! கம்மன் அண்ணா வந்துவிட்டார்!" வீடு பூராவும் இதன் எதிரொலிப்பு பரவியது. பணியாட்கள் வாசல் பக்கம் விரைந்தார்கள். நவாப் அவர்கள் மருமகனை எதிர்கொள்ளச் சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்தார்.

இந்த மாளிகை ஐம்பது ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு

வங்காளிப் பெரியவர் நீலாம்பர தத்தின் குடும்பத்தாரிடமிருந்து, மடியாபுர்ஜ் நவாப் கமால் ரஜா பஹதூரின் இளைய மாமா (சகோதரியின் கணவர்) விலைக்கு வாங்கினார். இங்கு அதற்கு முன்பு பிரும்ம சமாஜத்தாரின் விழாக்கள்-சிறப்புக்கூட்டங்கள் விமரிசையாக நடைபெற்றன. மேல்மாடி அறையொன்றில் தத் குடும்பத்தாரின் பழைய போட்டோக்கள் தொங்கிக் கொண்டிருந்தன. ஒரு குரூப் போட்டோவில் மகரிஷி தேவேந்திர நாத் டாகூர் நடுவில் அமர்ந் திருந்தார். அந்த அறையில் ஒரு பக்கம் சலவைக்கல் மேடை இருந்தது. அதில் அமர்ந்துதான் மகரிஷி தேவேந்திரநாத் தாகூர் பஜன்கீதங்களை ஆர்மோனியத்தில் உருக்கமாக வாசிப்பாராம். இந்த மாளிகையின் அப்போதைய சொந்தக்காரர் புரொபசர் பாபு மனோரஞ்ஜன் தத்; அவர் காலமானதும் அவர் பிள்ளை இந்த மாளிகையை விற்றுவிட்டு, பாலிகஞ்ஜில் பெரிய பங்களா கட்டிக் கொண்டார். அவர்களுடைய குடும்பத்தில் வந்தவர்களில் பலர் பெரிய உத்தியோகங்களில், பதவிகளில் இருந்திருக்கிறார்கள்; பலர் ஐ.ஸி.எஸ். அதிகாரிகள், பலர் பிரபல கம்யூனிஸ்டு தலைவர்கள். இவர்களுடைய பெண்கள் ஐரோப்பாவில் கல்வி பயின்றவர்கள். பாபு மனோரஞ்ஜன் தாஸ் தத் அவர்களின் ஒரு பேத்தி சட்காம் மலைப்பிராந்தியத்து அரசர் ஒருவருக்கு ராணியானாள்.

தற்சமயம் இந்தப் பழைய மாளிகையில் வசிப்பவர் லக்னோ விலிருந்து அகதியாக வந்த நவாப் பரம்பரையைச் சேர்ந்தவர். ராஜா மானியத்தொகை பென்ஷன் போல் கிடைத்து வருகிறது. அதை வைத்துக்கொண்டு இங்கு கல்கத்தாவில் நிம்மதியாக வாழ்ந்து வரு கிறார். இவர் போன்றவர்களின் தொழிலே உயிர் வாழ்ந்து வருவதுதான்.

நவாப் கமால் ரஜா பஹதூர், லக்னோ பாதுஷா சுல்தானே ஆலம் வாஜித் அலிஷாஹ் அவர்களுடன் லக்னோவிலிருந்து மடியாபுர்ஜ் வந்து சேர்ந்தார். நவாப் அலி ரஜா நவாப், கமாலின் கடைசித் தங்கையின் கணவர், சித்தப்பா பிள்ளையுங்கூட. 19ஆம் நூற்றாண்டின் கடைசியில் கல்கத்தா மிகவும் நவீன நகரமாக விளங்கியது. அங்கு பல கல்லூரிகள் இருந்தன. புதிய வங்காளி நாவல்கள் எழுதப்பட்டன. அவற்றில் இந்து மதக் கோட்பாடுகளின் புத்தெழுச்சிப் பிரசாரம் மேலோங்கியது. நாடெங்கிலும் அரசியல், கலாச்சார இயக்கங்கள் பிரபலமாயின. ஆனல், நவாப் அலி ரஜா பஹதூருக்கு இந்தக் கொந்தளிப்புகளைப் பற்றிச் சிறிதும் கவலை கிடையாது. அலிகர் நகரில் எம்.ஏ.ஓ. கல்லூரி திறக்கப்பட்டது. அப்போதும் நவாப் அவர்களுக்கு ஆங்கிலக் கல்வியில் அக்கறை கிடையாது. அவருடைய பொழுதெல்லாம் லக்னோ, தில்லி, ஆஜீமாபாத் நகரங்களில் நடைபெறும் கவியரங்குகளில் பங்கு கொள்வதிலேயே கழியும். மானியத்தொகை கிடைத்துவந்ததால்

கவலையில்லாமல் வாழ்க்கை நடந்தது. மேலும் பிரிட்டிஷ் ஆட்சி வேறு அவர் போன்றவர்களுக்கு அரவணைப்பாக இருந்து வந்தது.

அவருடைய குடும்பத்தில் முதல் முறையாக ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அவருடைய மாப்பிள்ளை-லக்னோவில் இருந்தவர்-தம் பிள்ளையை அலிகர் கல்லூரிக்கு அனுப்பி வைத்தார். நவாப் அலி ரஜாவின் இரண்டாவது மாப்பிள்ளை பாட்னாவில் இருந்து வந்தார். முற்போக்கு எண்ணமும், கால மாறுதல்களை ஏற்கும் பக்குவமும் கொண்டவர். அவர் சட்ட மேற்படிப்புக்கு வெளிநாடு சென்றார், பாரிஸ்டர் பட்டம் பெற.

நவாப் அலி ரஜாவின் லக்னோ மாப்பிள்ளை ஆங்கிலக் கல்வியில் ஈடுபாடு கொண்டதோடு மட்டுமல்ல, அரசியலிலும் பங்கு கொண்டிருந்தார். காங்கிரஸ் அனுதாபி. லக்னோவிலுள்ள அவருடைய கோலாகஞ்ஜ் பங்களாவில் தலைவர்கள் அடிக்கடி கூடுவதுண்டு. இந்தத் தலைவர்கள் அரசாங்கத்திற்கு நம்பகமான ஆதரவாளர்கள்; எனினும் அரசியல் சுதந்திரம், அதிக வசதிகள், சமூக சீர்திருத்தம் முதலியவற்றை விரும்பினார்கள். எண்ணற்ற முஸல்மான்கள் இந்தத் தேசீய இயக்கத்தில் சேர்ந்தார்கள். பிறகு போகப் போக இந்தியாவில் முஸல்மான்களின் அரசியல் நிலை, கொள்கைப்போக்கு திசை மாறத்தொடங்கியது. நூறு ஆண்டுகளுக்கும் முன்பிருந்தே இந்துக்கள் ஆங்கிலக் கல்வியை மேற்கொள்ளத் தொடங்கிவிட்டார்கள். இதே இந்துக்கள் முஸல்மான்களின் ஆட்சிக்காலத்தில் பார்சி மொழி பயின்று அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டிருந்தார்கள். கிழக்கிந்தியக் கம்பெனியின் கைக்கு ஆட்சி மாறியதும், தாமதமின்றிச் சூழலுக்கேற்ப தம்மைச் சரிப்படுத்திக் கொண்டார்கள். மொகல் மன்னர்களிடம் முன்ஷிகளாக (கணக்கர்) இருந்த இந்துக்கள் இலகுவாகக் கிழக்கிந்தியக் கம்பெனியில் கிளர்க்கு களாகிவிட்டார்கள். நூறாண்டுகளுக்கு முன்பிருந்தே மேற்கத்திய தத்துவ சித்தாந்தங்களின் செல்வாக்கை இந்துக்கள் ஏற்கத் தொடங்கிவிட்டார்கள். ஆங்கிலேயர்கள் முஸல்மான்களை 1857க்குப் பிறகு பல வகைகளிலும் குலைத்து வந்தார்கள். இந்துக்களிடையே பூர்ஷ்வா இனம் தோன்றியது. தலைமை மோகம், பெருந்தன்மை அரசியல் கொள்கை(லிபரல் கொள்கை) வளர்ந்தன. முஸல் மான்கள் ஃப்யூடல் ஸ்டேஜைக் (நிலப்பிரபுத்துவ பிற்போக்கு நிலை) கடக்க வில்லை. அவர்கள் உள்ளத்தில் சுல்தான்—நவாப் தன்மையும் கனவும் நிலை கொண்டிருந்தன.

ஆங்கிலேயருக்கும் ஜமீன்தார்களுக்கும் ஏற்பட்டிருந்த ஒட்டுறவு மிக்க பயனுள்ளதாகியது. வங்காளத்தில் இனாம் நிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாயில் முஸ்லீம் பள்ளிக்கூடங்கள் நடைபெற்று வந்தன. கிழக்கிந்தியக் கம்பெனி இனாம் நிலங்களையெல்லாம்

கைப்பற்றிக்கொண்டுவிட்டது. பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன. முஸல்மான்கள் பின்தங்கியவர்களாயினர். இந்துக்கள் கால மாறுதலுக்கு ஏற்பத் தீவிரமாக ஆங்கிலக் கல்வியை மேற்கொண்டார்கள். முஸல்மான்களின் குறுநில ஆட்சியுரிமை (ஜாகீர்தாரி) ஒழிந்தது. முஸல்மான்களின் கலைத்திறன் மதிப்பிழந்தது. தொழில், பொருளாதாரம் இரண்டிலும் லார்டு கார்ன்வாலிஸின் நிரந்தரத் திட்டத்திற்கு ஆதரவு தந்த இந்து ஜமீன்தார்களும், நடுத்தர வர்க்கத்தினரும் மேலாதிக்கம் பெற்றார்கள். வங்காளத்தில் குடியானவர், உழவர் பெரும்பாலும் முஸல்மான்கள். ஜமீன்தார்கள், மிராசுதாரர்கள் இந்துக்கள் என்ற நிலைமை ஏற்பட்டது. சமுதாய வர்க்கங்களின் தலைகீழ் மாறுதல்களைக் கொண்ட இந்தச் சூழ்நிலையில் முதல் முறையாக வங்கத்தில் புத்தெழுச்சி தோன்றியது. புதிய இந்து பூர்ஷ்வா வர்க்கம் சமுதாயத் தலைமைக்கும் ஆட்சித் தலைமைக்கும் தம்மைத் தயாராக்கிக் கொண்டுவிட்டது.

வங்காளத்தில்தான் முதல்முதலாக இந்து மத மறுமலர்ச்சி தொடங்கியது. இதற்கொரு சான்று பங்கிம் சந்திர சட்டர்ஜி, 1770இல் ஏற்பட்ட கொடிய பஞ்சம், சன்னியாசிகளின் புரட்சி—இவற்றை நிலைக்களனாகக் கொண்டு பிரபலமான புதினமான 'ஆனந்த மடம்' எழுதினார். இந்த நாவல் முஸல்மான்களுக்கு எதிராக எழுதப்பட்டது. முஸல்மான்களை அடியோடு அழித்து விட வேண்டுமென்பது இந்த நாவலின் அறிவுரை. இந்தியாவின் புதிய சமுதாயமான ராஜ விசுவாசமுள்ள பூர்ஷ்வா பிரிவின் பிரதிநிதி பங்கிம் சந்திரர். இந்த நாவலில் ஆங்கிலேயரின் நீதி பரிபாலன முறையைப் புகழ்ந்திருக்கிறார். 1770இல் ஏற்பட்ட கொடிய பஞ்சத்திற்கு கிழக்கிந்தியக் கம்பெனியின் சூறையாடலும் சுரண்டலும்தான் காரணம் என்பதை அறிந்திருந்தும் 'ஆனந்த மடம்' நாவலில் சன்னியாசிகள் புரட்சிக்கோலம் பூண்டு முஸல்மான்களோடு போராடுவதுடன், ஆங்கிலேயருடனும் போராடுகிறார்கள். இது குறித்து, பங்கிம் சந்திரர் எழுதியிருக்கிறார்: "ஆங்கிலேயர்கள் இந்தியாவை வாழ்விப்பதற்காக வந்தவர்கள். இந்த உண்மையை புரட்சிக்கார சன்னியாசிகள் உணரவில்லை." ஆங்கிலேயர் ஆட்சியாலும் ஆங்கில மொழியாலும்தான் இந்துக்களுக்கு விடிவு காலம், முன்னேற்றம், மேன்மையெல்லாம் கிட்டுமென்பது நாவலாசிரியர் கருத்து. (இதேபோல், முஸ்லீம் மறுமலர்ச்சி இயக்கத் தலைவர்கள் ஆங்கிலக் கல்வியையும் ஆங்கிலேயர் ஆட்சியையும் தமக்குச் சாதகமாகச் சொல்லி வருகிறார்கள்). இதில் முக்கியமான ஒரு விஷயம், முஸல்மான்களுக்கு எதிராக வெறுப்பையும் பகைமையையும் பரப்பும் நாவல் ஆனந்த மடத்தின் ஒரு கீதம் 'வந்தே மாதரம்' தேச வணக்கப் பாடலாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவ்வாறு

முஸல்மான்கள் தேசிய ஒற்றுமைக்குப் பதிலாக வீண் சந்தேகத்திற்கு இலக்கானர்கள். இவ்வாறு ஒவ்வொரு நிலையிலும் தேசிய ஒருங் கிணைப்பில் தடங்கல்கள் குறுக்கிடலாயின.

அரசாங்க அலுவல்களில் இடம் பெறும் போட்டியில் இந்துக்கள் முஸல்மான்களைப் பின்தங்க வைத்துவிட்டு முன்னேறினார்கள். முஸல்மான்களிடம் அச்சமும் கவலையும் வளர்ந்தன. இந்த நிலையைத் தக்க தருணத்தில் ஆங்கிலேயர்கள் வளர்த்து விட்டார்கள்.

அரசாங்க விசுவாசமுள்ள மத்திய தர முஸல்மான்களின் புதிய வர்க்கம் உருவாயிற்று. கிராமப் புறங்களில் கடுமையாக உழைத்து அரைகுறையாக வயிறு வளர்த்து வரும் நெசவாளர், குடியானவர் முதலான முஸ்லீம் பாட்டாளிகளை முஸ்லீம் லீக் தலைவர்கள் கவனிக்கவில்லை. லீக் தலைவர்களுடைய முனைப்பு முயற்சி களெல்லாம் முடிந்தவரைக்கும் பணம் சேர்ப்பது, நல்ல அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்துகொள்வது.

முதல் உலகப் போர் தொடங்கியது; டாக்டர் அன்சாரி தலை வராக வெளிவந்தார். கிலாபத் போராட்டம் நடந்தது. காந்திஜி முன்னணிக்கு வந்தார். காங்கிரஸ் வெளிப்படையாகவே சுயராஜ்யக் கோரிக்கையை அறிவித்தது. நாட்டின் நிலைமை தீவிரமாக மாறத் தொடங்கியது. மக்களிடையே புதிய தீவிர உத்வேகம் எழுந்து பரவியது.

நவாப் அலி ரஜா பஹதூரின் மாப்பிள்ளை தாலூக்காதார் நகீ ரஜா பஹதூர் வெளிப்படையாக தேசீய இயக்கங்களில் பங்கு கொள்ளாதவர். அவத் பிராந்தியத்தைச் சேர்ந்த தாலுகாதார்கள் 1857இல் அவத் ராஜ்யத்தைப் பாதுகாக்க, ஒன்று கூடி ஆங்கி லேயர்களை எதிர்த்துப் போராடியிருக்கிறார்கள். ஆனால், பிறகு ஆங்கிலேயர் கை மேலோங்கியதும், அவர்களுக்குத் தாசர்களாகி விட்டார்கள். ஆங்கிலேயர்களுடன் ஒத்துப் போனால்தான் ஏழைப் பாட்டாளிகளான குடியானவர்களை ஒடுக்கி வைத்திருக்க முடியும். இது லக்னோவில் 'நவாப்' சர்ஹார் கோர்ட் கலெக்டராக இருந்த காலம். அவன் தாலூக்காதாரர்களின் அந்தஸ்த்தை ஏற்றுக் கொண் டான். லக்னோ பிராந்திய தாலூகாதாரர்களுக்கு அது பொற்காலம்; ஒரு பக்கம் தேச சுதந்திரத்திற்கான இயக்கம் புயல்போல் வளர்ந்து கொண்டிருந்தது. மறுபக்கம் பழைய கல்தான் காலத்து எதேச் சாதிகாரப் போக்கிற்குப் புத்துணர்வு ஊட்டப்பட்டு வந்தது. இந்தக் காலத்தில்தான் மகாராஜா மஹமூதாபாத், டாகூர் நவாபு அலி, ராய்ராஜேச்வர் பலி ஆகிய தாலூக்காதார்கள் பழங்கனவு கண்டு கொண்டிருந்தார்கள்.

இதே காலத்தில்தான் நவாப் நகீராஜா பஹதூரின் புதல்வன் (அலிகரில் படித்தவன்) நவாப் அபுல் மகா ரம்தகீ ராஜா பஹதூ க்கு

மூத்த மனைவி அல்லா அமீனிடம் ஒரு மகன் பிறந்தான். அந்தப் பையனுக்குத் தாய்ப்பாட்டன் மடியாபுர்ஜ் நவாப் கமாலுத்தீன் அலி ரஜா பஹதூரின் பெயராக 'கமால்' என்று வைக்கப்பட்டது. அந்த இல்லத்தில் கமாலுக்கு முன்பே இரண்டு வயதில் பெண் இருந்தாள். தஹ்மீனா பேகம் என்று பெயர். கமால் அந்த வர்க்கத்து மற்றப் பிள்ளைகளைப்போல் முதலில் டேராடூனில் தொடக்கப் படிப்புக்காக அனுப்பப் பட்டான். பிறகு லாமார்ட்டினேயர் காலேஜில் படித்தான். இந்தக் கல்லூரி பிரிட்டிஷ் பரம்பரைக்கும், இந்திய மன்னர் பரம் பரைக்கும் கோட்டை போல் இருந்தது.

கமாலுக்குத் தன் இளமைப் பிராயத்து நினைவு தெளிவாக இருந்தன. அந்தக்காலத்தில் வீட்டுப் பெரியவர்கள் வாயிலாக அரசியல் பேச்சுக்களைக் கேட்டிருக்கிறான். இப்போது குடும்ப நிலவரம் முன்போல் இல்லை. இந்தக் குடும்பத்தார்கள் அரசாங்க அலுவல்களில் ஈடுபடத் தொடங்கியிருக்கிறார்கள். கமாலின் சித்தப்பா-பெரிய அண்ணனின் தந்தை-பாரிஸ்டர், காங்கிரஸ் தலைவர். நல்ல வாலிபப் பருவத்தில் அவர் அகால மரணமடைந்தார். பாட்னாவிலிருந்த மாமா காங்கிரஸ் தலைவர்; அடிக்கடி சத்தியாக் கிரகங்களில் ஈடுபட்டுச் சிறை சென்று வருகிறார். கமாலுக்கு ஒத்துழையாமை இயக்கம் நடந்த காலம் நினைவு வந்தது. லக்னோ மாமா கமாலையும் அழைத்துக்கொண்டு பொதுக்கூட்டத்திற்குப் போவார். மேடையில் ஏறி, தடுமாற்றமான உருதுப் பேச்சோடு, தேசியப் பாடல்களை இசைத்துக் காட்டுவார். போலீஸ் வந்து கூட்டத்தினரை தடியடிப் பிரயோகம் செய்து கலைக்கும். அரசியல்-தேசிய விடுதலை இயக்கம் வெறும் பத்திரிகை ஆர்ப்பரிப்பாக மட்டு மில்லாமல், நடைமுறை வாழ்க்கையோடு ஒன்றிவிட்டது.

கமால் பெரியவனானதும், தான் இந்தியனாக இருப்பதில் கர்வம் கொண்டான். இதில் பெருமளவு கடந்த காலப் பெருமையைச் சார்ந்தது. 'நாம் இப்படி இருந்தோம், அப்படி இருந்தோம்...' இதே பாணியில்தான் தேசீயத் தலைவர்களும் சொற்பொழிவாற்றி வந்தார்கள். சூட் கோட்டுகளுக்குப் பதில் கதர் ஷெர்வானி இடம் பெற்றது. மாமாவின் உறவுப் பையன் ஜாமியா-மிலியாவில் படித்து வந்தான். அவனைப்போலவே தில்லியில் படிக்க வேண்டுமென்று கமால் பிடிவாதம் பிடித்துப் பார்த்தான். நடக்கவில்லை. யாரும் செவி சாய்க்கவில்லை. இப்போது, கர்னல் ப்ரௌன் ஸ்கூல், லாமார்ட்டினேயர் காலேஜ் ஆங்கிலேய மாணவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், கமால் இந்திய மாணவன்; இந்தியா அவனுக்கு மிகவும் பிரியமான தேசம்! இந்த இந்தியா எத்தகைய தேசம்? இதற்கான விளக்கத்தை அவன் சிந்திக்கவில்லை. இளம் பிராயத்தி லிருந்தே பழகிப்போன தேசம் இது. அவன் இங்குதான் பிறந்தான்.

அவனுடைய மூதாதையர்களும் ஏழெட்டு நூற்றாண்டுகளாக இந்த தேசத்தில்தான் பிறந்திருக்கிறார்கள். இந்த தேசத்தில் கடுகுக் கொல்லைகளும், தோட்டங்களும், சீதாதேவியின் கோவிலும் உள்ளன. அவனுக்கு அறிமுகமான எத்தனையோ பேர்களுக்கும் இந்தியாதான் சொந்த நாடு. வெள்ளைக்காரத் துரைமார்கள் வசிக்கும் சிவில் லைன்ஸ் பகுதிகூட இந்தியாதான். இங்கு வசிப்பவர்கள் மாலையில் நாய்களை உலவ அழைத்துச் செல்லுகிறார்கள். மேலும், கமாலின் தாய், அத்தை, மற்ற உறவுப் பெண்கள் யாவரும் இந்தியப் பிரஜைகள் தாம். அவர்கள் தமக்குள் பேசிக்கொள்வது, உருதுமொழி, பழமொழிகள், பாடல்கள், பண்டிகைகள், பழக்கவழக்கங்கள், முஹல் பெண்கள் கூறிய பழைய கதைகள், ராமாயணக்கதை, மற்ற புராணக் கதைகள், தேவதைகள் பற்றிய கதைகள், முஸல்மான் ஔலியாவின் கதைகள், பாதுஷாக்களின் சரிதங்கள் இவையாவும் கமாலின் மானசீகமான உணர்வுப் பின்புலன். கடந்த காலம் குறித்துக் கர்வம், நிகழ்காலம் பற்றிக் கழிவிரக்கம், வருங்காலம் பற்றிய நம்பிக்கை-இவைதான் கமாலின் சிந்தனைப்புலனை உருவாக்கியவை. காந்தி போன்ற உடையுடன் திரிந்தவர்கள் — பக்த கவிகள், ஞானிகள், கபூர், துளசி தாஸ், துகாராம் முதலியவர்களின் வழி வந்தவர்கள். இவர்கள் குடியானவர்களின் நேரிய பிரதிநிதிகள். இவர்களும் ஏழை விவசாயி களைப் போலவே குட்டை வேட்டியும், வெறுங்காலுமாகத் திரிந்தவர்கள். நேரு இந்தப் புதிய தலைமுறையின் சின்னமாக விளங்கினார். அவர் உள்ளத்தில் எல்லா தேசிய உணர்வுகளும் நதிவெள்ளம் போல் பெருக்கெடுத்துப் பாய்ந்தன.

இந்தியாவில் எண்ணற்ற ரகசியங்கள் இருந்தன — மதம், தரிசனம், கலை, ஆன்மீகத் தத்துவங்கள், வேதாந்த இலக்கியங்கள், இசை, ஓவியம், சிற்பம், நாடோடி இலக்கியம், பேரிலக்கியம்—என்ன தான் இல்லை? ஒரு பக்கம் ஆங்கிலேய நாகரிகம், துரைமார்களின் ஆட்சி நடந்து வந்தது. அசெம்பிளியில் தீர்மானமான சட்ட திட்டங்கள் செயலாக்கப்பட்டு வந்தன. கவர்னர்களுடைய தர்பார் நடந்தது. வெள்ளைக்கார அதிகாரிகள் 'குல்பிஷான்' மாளிகையில் விருந்துண்ண வருவது வழக்கம். வெள்ளைக்காரர்களின் கோலா கஞ்ஜ் மாளிகையிலிருந்துதான் முஹர்ரம் பண்டிகை ஊர்வலம் புறப்படும். இங்குள்ள ஆங்கிலேயர்கள் ஹேலிபரி ஆபீசர்களின் வாரிசுகள். இவர்களுக்குப் போதிக்கப்பட்டிருக்கிறது. "இந்துஸ்தானிகள் உங்கள் பங்காளாவுக்கு வணக்கம் செலுத்த வந்தால், அவர்களை வெளி வராந்தாவிலேயே உட்கார வையுங்கள். இவர்களில் இன்னின் னாரை உள்ளே டிராயிங் ரூமுக்கு அழைத்துச் செல்லவேண்டும். இவர்களை வெளியே நிற்கவைத்தே காணிக்கையையும், வணக்கத் தையும் பெற்றுக் கொண்டு திருப்பி அனுப்ப வேண்டும். இன்ன

இன்ன பிரமுகர்கள் வீட்டு விருந்தில் கலந்துகொள்ளச் செல்லலாம்.”

கமால் நல்லூழ் காரணமாக, ஆங்கிலேயர்களுடன் சரிசமமாகப் பழகும் வர்க்கத்தில் உதித்தவன். அந்த நற்பேறு கமால் குடும்பத்தாருக்கு அடிக்கடி கிடைத்து வந்தது. இந்த வர்க்கம்தான் இந்தியாவின் ‘ஃப்யூடல் வர்க்கம்.’

1934-ல் பண்டித் நேரு இந்த இனிய நம்பிக்கையை வெளியிட்டார் “முஸ்லீம் அரசியல் வட்டாரத்தில் ஃப்யூடல் கோட்பாடுகள் இடம் பெற்றிருந்தாலும், அவர்களுடைய கீழ்மட்ட நடுத்தர வர்க்கம் தொழில்-உத்தியோகத்துறையில் பின் தங்கியதுதான். ஆனால் இந்த வர்க்கத்திடம் சமுதாயப் பிரக்ஞை மேலோங்கித் திடமாக இருப்பதால், இந்த வர்க்கத்தார் இதே ரக இந்து வர்க்கத்தாரைவிட சோஷலிஸ சமுதாயத்தை நோக்கி விரைவாக முன்னேறுவார்கள்.” நேருஜி மேலும் சொல்லி வந்தார்: “நம் நாட்டு முதலாளிகள், தொழிலதிபர்கள், ஆலை முதலாளிகள் யாவரும் மிகப் பிற்போக்கானவர்கள். இவர்கள் புதிய யுகத்திற்கு ஏற்ப மாறவில்லை. காங்கிரஸில் இந்துக்களின் ஆதிக்கம் மிகுதி, பெரும்பான்மை இந்துக்கள் சாதிச் சார்புள்ளவர்கள்; அவர்கள் போக்கே வகுப்புணர்ச்சியின் அடிப்படையில்தான் இருக்கிறது. இந்த நிலையில் முஸல்மான்கள் அச்சமும் ஐயப்பாடும் கொண்டிருப்பது இயல்பு; தவிர்க்கமுடியாதது. இந்த நிலைமையை ஆங்கிலேய அரசாங்கம் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி வருகிறது. தேசத்திலுள்ள பிரபுத்துவப் பரம்பரை (ஃப்யூடல்) பொதுமக்கள் பொருளாதாரத்தில் தன்னிறைவு கொள்வதை விரும்பவில்லை. அதனால் பிரிட்டிஷ் அரசுடன் சதித்திட்டமாக உடன்பாடு செய்து கொண்டிருக்கிறது. மத்திய தர வகுப்பிலுள்ள புத்தி ஜீவிகளிடையே ஏதேச்சாதிகார மனப்போக்கு எழும்பி வருகிறது. இந்த ஆபத்துக்களையெல்லாம் எதிர்த்துப்போராட நம் வலிமை முழுவதையும் ஒன்று திரட்டவேண்டும்.” ஜவஹர்லால் நேரு மிகத் தீவிர சோஷலிஸ்ட். கமால் போன்ற இளைஞர்களின் சமூகம் நேருவின் நேரிய வாரிசாக இயங்கி வந்தது.

ஜாகீர்தாரர்கள், நடுத்தர வர்க்கத் தலைவர்கள், அறிவாளிகள், பல்கலைக்கழகத்துத் துடிப்பான மாணவர்கள்—இவர்களுடைய உலகங்களைத் தவிர, தனியொரு உலகமும் இருந்தது. அதுதான் உண்மையான இந்தியர் உலகம். இந்த உலகம், அஸ்ஸாமிலும், தென்னிந்தியாவிலும் உள்ள தேயிலை-காபித் தோட்டங்களில் உழைப்பவர், கான்பூர், பம்பாய், கல்கத்தா, அகமதாபாத், டாடாநகர் தொழிற்சாலைகளில் உழைக்கும் பாட்டாளிகள். தேசமெங்கிலுமுள்ள லட்சக்கணக்கான கிராமங்களில் வாழும் குடியானவர்கள், தொழிலாளிகள்—இவர்களுடைய உலகம்தான் அது! குடியானவர்கள் விஷயமாக ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் சட்டம் ஒன்றை ஏற்படுத்தி

யிருந்தது அந்நிய அரசு. வங்காளத்தில் முஸல்மான்களிடமிருந்து (சுல்தான்களிடமிருந்து) ஆட்சியுரிமையைப் பறித்திருந்ததால், அங்குள்ள முஸல்மான்களைப் பொருளாதாரச் சீர்குலைவுக்கு உட்படுத்தி, தாழ்வுறச்செய்து, அவர்களுடைய இடத்தில் இந்துக்களை அமர்த்தி வளமடையச் செய்தது. பஞ்சாபை வெள்ளைக்காரர்கள் சீக்கியர்களிடமிருந்து கைப்பற்றினார்கள்; அதனால் அங்கே முஸல்மான்களைத் தூக்கி விட்டார்கள். எந்த எந்த மாகாணங்கள் அதிக காலம் ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தில் இருந்தனவோ, அவை யாவும் அதிகம் அழிவைக் கண்டன—வங்காளம், பிஹார், ஒரிஸா, மதராஸ் (தென்னிந்தியா). வங்காளத்தில் அடிக்கடி கொடிய பஞ்சம் தலை விரித்தாடியது. பஞ்சாப் ஆகக் கடைசியில் தான் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்குள் வந்தது. ஆகையால் அதிக மகிழ்ச்சியுடனிருந்த மாகாணம் இதுதான். உத்திரப் பிரதேசத்துக் குடியானவர்கள் ஏழ்மையை அதிகம் கண்டவர்கள். காங்கிரஸ் போராட்டத்தில் குடியானவமக்கள் ஆர்வம் கொண்டு பங்கெடுத்துக் கொள்ளலானார்கள். அவர்கள் எதிர்பார்த்தது, சுயாராஜ்யத்திற்குப் பொருள் வேளாண்மை-விவசாயத் துறையில் சீர்திருத்தம். அதாவது, ஜன்ம ஜன்மாந்தரமாக அனுபவித்துவரும் கொடுமைகளிலிருந்து கடன் தொல்லைகளிலிருந்து விடிவு ஏற்பட்டுவிடும். மேலும், அரசியல் அரங்கில் புதிய கொள்கை ஒன்று உதயமாயிற்று—கம்யூனிஸம்—பொதுவுடைமை. இதில் முனைந்திருந்தவர்கள் பெரும்பாலும் ஐரோப்பிய பல்கலைக் கழகங்களில் படித்துத் தேறிய வாலிபர்கள்-தீவிர சிந்தனையாளர்கள்.

1937இல், கமால் லாமார்ட்டினேயர் காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது, லக்னோவில் இரு மகத்தான நிகழ்ச்சிகள் நடைபெற்றன. முஸ்லீம் லீகின் அகில இந்திய மாநாடு, காங்கிரஸ் மந்திரிசபை அமைப்பு.

1942, ஆகஸ்ட், 7, க்விட் இண்டியா ரிஸல்யூஷன் நிறைவேற்றப் பட்டது. நாடெங்கும் போராட்டம் தொடங்கியது. கல்லூரி மாணவர்கள் இதில் முன்னணியில் இருந்தார்கள். பத்தாயிரம் இந்தியர்கள் போலீசாரின் துப்பாக்கிச்சூட்டில் மரித்தார்கள். வங்காளத்தில் ஊழிக்கால அவலம் தலைவிரித்தாடியது. இது வரையிலும் வங்கத்தில் பஞ்சம் பட்டினிக்கு முப்பத்து நான்கு லட்சம் மக்கள் இரையாகியிருக்கிறார்கள்.

முப்பத்து நான்கு வருட மானிடர்கள்—

முப்பத்து நான்கு லட்சம் ஆமினாக்கள், அபுல் மன்சூர்கள்...

கமால் மறுநாள் காலையில் சிற்றுண்டியை விரைவாக முடித்துக் கொண்டு, 'தத்-ஹவுஸ்' வீட்டிலிருந்து புறப்பட்டான். பிரமோத்தா வீட்டிற்குச் சென்றான். அங்கு எல்லா நண்பர்களும் கூடுவதாகத் தீர்மானமாகியிருந்தது.

# 29

பார்க் சர்க்கஸ் பகுதியில் பிரமோத்தா. இல்லத்தில் மாணவ மாணவிகளின் கூட்டம்-கல்லூரியில் பயில்பவர், இந்திய மக்கள் நாடக மன்றம்- இப்டா|வைச் சேர்ந்தவர்கள், கட்சித்தொண்டர்கள், லக்னோ வைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள்.

பிரமோத்தா கல்கத்தா மாணவர் சங்கத் தலைவர். இப்போது அவர் வீட்டு முன்கூடத்தில் நல்ல கூட்டம். பஞ்ச நிவாரண நிதி திரட்டக் கலை நிகழ்ச்சி நடத்த ஏற்பாடாகியிருந்தது. அதற்கான ஒத்திகை நடந்து கொண்டிருந்தது. மூலையில் ஆர்மோனியம் இருந்தது. இரு பெண்கள் ரவீந்திர நாத் டாகூரின் 'சித்ராங்கதா' கீதங்களைப் பயின்று கொண்டிருந்தார்கள். ஹாலின் ஓரத்தில் கண்ணாடி பதித்த வராண்டாவில் பிரமோத்தாவின் தங்கை ஓவியக்கூடம் அமைத்திருந்தாள். அங்கு ஒரு பையன் வெண்மையான சால்வை அணிந்து, சித்திரமொன்றிற்கு இறுதி ஒப்பனை செய்து கொண்டிருந்தான். டிராமாவுக்குப் பிறகு, ரிலீஃப் ஃபண்டுக்காக இந்த ஓவியத்தை ஏலத்தில் விடப்போகிறார்கள். எல்லாரும் தத்தம் அலுவல்களில் ஈடுபட்டிருந்தார்கள்.

தூரிகையைச் சுத்தம் செய்தபின், நெற்றியில் தொங்கிய கேசத்தை ஒதுக்கிவிட்டுக்கொண்டு, அந்த ஓவிய வாலிபன் கூடத்தின் வாசல் பக்கம் வந்து நின்றான். எல்லாரும் தத்தம் அலுவல்களில் முனைந் திருப்பதைக்கண்டு, துயரம் கலந்து முறுவலித்தான். இந்த இளைஞன் உத்திரப் பிரதேசத்தைப் சேர்ந்தவன்-ஜமீன்தார் மகன். கல்கத்தாவிற்கு டாகூரின் பல்கலைக்கழகத்தில்-விசுவபாரதியில்-பயில வந்திருக் கிறான். எம்.ஏ.பட்டமும், சட்டப்படிப்பும் அலகாபாதில் முடித் திருந்தான். இப்போதும் அவனுக்குப் புரியவில்லை, மேற்கொண்டு என்ன செய்வதென்று. பல திட்டங்கள் இருந்தன—பத்திரிகை நடத்துவது, அரசியலில் பங்கு கொள்வது, நூல்கள் எழுதுவது, பல்துறை ஆய்வு. புதுப் புது பார்வைக் கோணங்களை அறிமுகப்படுத்தி உலகப் புகழ் பெறவேண்டும். கலை விமரிசகனாகவும் திட்டம். அரசியல் கோட்பாட்டில் இந்த வாலிபன் தீவிரப் பொதுவுடைமை வாதி. பொதுவாக எல்லாத் தந்தைகளையும் போலவே அவனுடைய தந்தையும் அறிவுறுத்தினார் "ஐ.சி.எஸ் தேர்வுக்கு முயற்சி செய்!" அவர் ஆங்கிலேய சர்க்காருக்கு உறுதுணை; பிரபல முதல் தர பாரிஸ்டர். காலேஜ் படிப்பை முடித்ததும், அவன் தந்தையிடம் சொன்னான்: "அப்பா! என்னை விசுவபாரதிக்கு அனுப்பிவையுங்கள்."

தந்தை அவனை முறைத்துப் பார்த்தார். "என்னப்பா, சீமான் வீட்டு மகனே! சித்திரக்காரனாக ஆசையா? மூளை கலங்கியிருக்

கிறதா?" எந்தத் தந்தையும் இப்படித்தான் சொல்லியிருப்பார். இவன் ஒரே மகன். கடைசியில் மகனுடைய பிடிவாதத்துக்கு இணங்கினார். இரண்டு வருடமாக போல்புர் விசுவபாரதியில் இருந்து வருகிறான். மற்ற மாணவர்களுடன் பஞ்ச நிவாரண நிதி சேமிப்புக்காக கல்கத்தா வந்திருக்கிறான்.

"லக்னோவிலிருந்து வந்திருப்பவர்களைச் சந்திக்கவில்லை?" பக்கத்தில் நின்ற ஒருவன் கேட்டான். இளைஞன் கூட்டத்தைக் கடந்து கமால் உட்கார்ந்திருந்த பக்கம் சென்றான். கமால் உத்வேகத்தோடு பாடிக்கொண்டிருந்தான். நண்பர்கள் சூழ்ந்திருந்தார்கள். இதுவும் நாடகத்தில் ஒரு பகுதிக்கான ஒத்திகைதான். மற்றொரு மாணவன் கமால் அருகில் நின்றுகொண்டு, எப்போது பாட்டு முடியப் போகிறதென்று காத்திருந்தான். எல்லாப் பக்கங்களிலிருந்தும் வங்காளியில் கத்திப் பேசுவதுதான் அதிகம் ஒலித்தது.

கமால் அந்த வாலிபனை ஏறிட்டுப் பார்த்தான். பாட்டை முடித்துவிட்டு, ஹார்மோனியத்தை மூடி வைத்துவிட்டு, "நொமஷ்கார்" என்றான். வாலிபன் புன்முறுவலுடன், பதிலுக்கு "ஆதாப் அர்ஸ்" என்றான்.

கமாலுக்கு மிக நிம்மதியாக இருந்தது. வங்காளியில் பேசிப்பேசி அவனுக்குத் தலை வேதனையாகி விட்டது.

"கௌதம நீலாம்பரன்"—வாலிபன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

"கமால் ரஸா" பதில் கிடைத்தது. இருவரும் கை குலுக்கினார்கள். இருவருடைய ஆடை அடையாளம் ஒன்று போலவே இருந்தது. இறுக்கமான பைஜாமா, சட்டை, நேரு வாஸ்கெட், மேலே காஷ்மீர் சால்வை. இதே ஆடை முறைதான் இந்தக் குழுவினர் எல்லாருக்கும்.

"கௌதம்! நீ எங்கே இங்கு வந்து சேர்ந்தாய்? இந்த வங்காளிகள் பேசிப்பேசியே காதடைக்க வைத்து விட்டார்கள். கிளம்பு! நாம் சௌரங்கீ வரைக்கும் உலாத்திவிட்டு வரலாம்."

"வாயேன்! என் ஓவியங்களைக் காட்டுகிறேன்." கௌதம் அருணாதேவியின் சித்திர சாலைக்குள் நுழைந்தவாறு சொன்னான்:

"நீ ஹரிசங்கரைச் சந்தித்தாயா?" கமால் கேட்டான்.

"யார் ஹரிசங்கர்?" ஓவியனுக்குரிய மிதப்பான பாணியில் கேட்டான். உதடுகளில் சிகரெட் அழுந்தியிருந்தது. அவன் ஒரு படத்தைப் பூர்த்தி செய்து கொண்டிருந்தான்.

"ஹரிசங்கர் என் நண்பன். மிகச் சுவாரசியமானவன்; நல்ல சிந்தனையாளன்."

"எங்கே இருக்கிறான்? கூப்பிடேன்" கௌதமன் நவாபைப்போல் ஆணையிட்டான்.

"உன் மூளை எங்கே வேலை செய்கிறது? அவன் இங்கே எங்கே

இருக்கிறான்? பாவம், லக்னோவில் சுகவீனமாகிப் படுத்திருக்கிறான்."

"நீங்கள் எல்லாரும் எதற்காக லக்னோவில் இருக்கிறீர்கள்?" பிரஷ்ஷை ஓரமாக வைத்துவிட்டு, கௌதமன் கேட்டான்.

"பின்னே எங்கே இருக்க வேண்டும்?"

"நீ கேட்பது சரிதான்."

"இந்தப் படத்திலுள்ளவருக்கு நீ மூக்கைச் சரியாக வரையவில்லை."

"உதடுகளை அமைப்பது சிரமமாக இருக்கிறது."

"அரே அல்லா! நான் ஒன்று கேட்டால் நீ ஒன்று பதில் சொல்லுகிறாயே!"

"இந்தா சிகரெட் "

"நீ ஆர்ட்டிஸ்டா?"

"ஏன்? என்னைப் பார்த்தால் புல் செதுக்குபவன் போலவா இருக்கிறது?"

"அடடே! உன்னைப் பற்றித்தான் என் அக்கா புருஷன் எழுதியிருந்தார்."

"யார் அந்தப் பெரியவர்?"

"எங்கள் லாஜ்வதியின் கணவர்"

"லாஜ்வதி யார்?"

"இதென்ன கூத்து? என் அக்கா கணவர் உன்னைத் தெரிந்து வைத்திருக்கிறாரே."

"என்னைப் பலபேர்கள் தெரிந்து வைத்திருக்கிறார்கள்."

"இப்படியொரு மயக்கம் உனக்கு இருக்கிறதா?"

"உனக்கேதும் மயக்கம் கிடையாதோ?"

"இல்லாமலென்ன-"

"நல்லது..." கௌதமன் முன்போலவே சித்திரத்தில் ஆழ்ந்து விட்டான்.

"சாந்தி நிகேதனில் நாலைந்து வருடங்கள் தங்கியிருந்தால் போதும். விழுந்து புரண்டு ஆர்ட்டிஸ்டாகி விடுவாய். ஆனால் இப்போதைக்கு அந்த நம்பிக்கை இல்லை." கமால் ஓவியத்தை கவனமாகப் பார்த்து விட்டுத் தன் கருத்தைத் தெரிவித்தான்.

"வெறும் ஆர்ட்டிஸ்ட் இல்லை; பங்களூர் போய் ராம் கோபாலிடம் பரத நாட்டியம் கற்றுக்கொள்ளவும் தீர்மானித் திருக்கிறேன்." கௌதமன் மாற்று யோசனையையும் தெரிவித்தான்.

"இந்தத் தீர்மானம் உதவாக்கரையான அடியேனுக்கும் இருந்தது. இதை வெளியே சொன்னதும், என் தங்கைகள் கேலி செய்தார்கள். விழுந்து விழுந்து சிரித்தார்கள். பெண்களே வெறும் ஹம்பக். ஆர்ட்டைப் புரிந்துகொள்ளும் திறன் அவர்களுக்கு இல்லை."

"உனக்கு அக்கா தங்கைகள் இருக்கிறார்களா?"

“ஆம்; உனக்கு ?”

“இல்லை...”

“வருத்தப்பட வேண்டியதுதான். சகோதரிகள் இருந்தால், வாழ்க்கையில் சாந்தமான, எழிலும் மென்மையும் உள்ள தன்மைகள் இருந்துவரும்”

“உம்; பிறகு ?”

“என்ன ?”

“நீ ஏதோ சொன்னாயே...”

“நீ பார்ட்டியில் இருக்கிறாயா ?”

“பார்ட்டி! இன்னும் அவ்வளவுக்குத் தகுதி பெறவில்லை. இதற்குத் தனித்திறமை வேண்டும்.”

“சரியாகத்தான் சொல்கிறாய். மேலும் நீ பார்க்கவே அப்படியொன்றும் புரட்சிகரமான மனப்பான்மை உள்ளவனாகவும் தோன்றவில்லை.” கமால் நிதானமாகச் சொன்னான்.

கௌதமன் சினந்தான். கமால் சொன்னான்: “உன் குருதேவரிடம் மகாத்மாஜி என்ன சொன்னார் தெரியுமா? வீட்டில் தீப்பற்றிக் கொண்டு எரிகிறது. நீங்கள் புள்ளினங்களின் இன்னிசையை ரசித்துக் கொண்டிருக்கிறீர்கள்; இதுதான் உங்கள் போக்கு.

கௌதமன் பிரஷ்ஷை உதறிவிட்டு வைத்தான். “மடத்தனமாகப் பேசாதே! உன் ஹரிசங்கரும் உன்னைப் போலவே சிறுபிள்ளைத்தனம் கொண்டவன்தானா ?”

“நீ என் பெரிய அண்ணாவையும் சந்திக்க வேண்டும்.”

கௌதமனின் பேச்சைச் சட்டை செய்யாமல் புது யோசனையைக் கமால் தெரிவித்தான்.

“அவர் யார் ?”

“என் சித்தப்பா பிள்ளை. லக்னோவில் இருக்கிறார். ஆனால் இப்போது கடற்படையில் சேர்ந்திருக்கிறார்.”

“லக்னோவில் இப்படிப்பட்டவர்கள் அதிகம் போலிருக்கிறது. ஏன் இப்படி ?”

“அதனாலென்ன ?”

“சரி, வா போகலாம்” ஓவியத்திரையை இழுத்து மூடி விட்டுக் கௌதமன் எழுந்தான்.

“கிராண்ட் ஹோட்டலுக்கா? பெரிய பூர்ஷுவா ரகப் பேர்வழியாக இருக்கிறாயே!”

“உளறாதே“

“சரி, நான் ஒவ்வொரு விஷயத்திலும் மிக வெளிப்படையான, தெளிவான கருத்துக்களைக் கொள்ளவே விரும்புகிறவன்”—கமால்.

“ஷுட்...”

“க்ளாஸ்-வகுப்பு-இனம் குறித்து உன் கருத்து? வரப்போகிற

யுகம் 'ப்ரோலொதாரியத்' (Proletariate) தாழ்ந்த குலத்தவர்களுக் குரியதாக இருக்கும். இதை நீ ஒப்புக்கொள்ளுகிறாயா?"

"ஆம்"

"கை கொடு!" இருவரும் கை குலுக்கினார்கள்.

"ஃப்யூடல் சமூகம் தானே சாகும் என்று நினைக்கிறாயா?"

"ஆமாம்" இருவரும் மறுபடியும் கைகுலுக்கினார்கள்.

"உனக்கு ஃப்யூடல் சமூகத்திடம் உண்மையான திடமான வெறுப்பு இருக்கிறதா? அதை வேரோடு களைந்து விட்டுத்தான் ஓய்வாயா?"

"நீயே ஃப்யூடல் சமூகத்தைச் சேர்ந்தவன்தானே?"

"உனக்கு எப்படித் தெரியும்?" கமால் ரகசியம் வெளியாகி விட்டதே என்பது போன்ற கலவரத்துடன் கேட்டான்.

"இப்போது சமீபத்தில் யாரோ சொல்லக்கேட்டேன், மடியாபுர்ஜ் குடும்பத்தாருடன் உனக்கு உறவு உண்டு; 'தத் ஹவுஸ்'காரர் நவாபுக்கு நீ..."

"ஆமாம், ஆமாம். அதைவிடு. போனது போகட்டும். வரலாறு என் கையிலா இருக்கிறது? நான் என்னை முழுக்க முழுக்கத் தாழ்ந்த வர்க்கக்காரனாக்கிக்கொள்ள முழு முயற்சி செய்து கொண்டிருக் கிறேன்."

"உன் ஹரிசங்கர் கூட ஃப்யூடல்தானோ?"

"அப்படித்தான்; ஆனால் இதற்கு அவன் என்ன செய்வான்?"

"தேவலையே! நான் பரிசுத்தமான மத்தியதரக் குடும்பம்." கௌதமன் தெரிவித்தான்.

"இதற்காக விசனப்படாதே. நாமெல்லோருமே அந்தப் புதிய சமுதாயத்தின் அங்கங்கள்தாம். அதாவது பிறவி எடுக்கப்போகிறதே அந்தச் சமுதாயம்—பொதுமக்கள் சமுதாயம்."

இவ்வாறாகத் தூய மாணவர் ரகத்து விவாதத்திற்குப் பிறகு, இருவரும் வெளியே சென்றார்கள்.

கமால் லக்னோ திரும்பி வந்ததும், லாஜ்வதியின் கணவருக்குக் கௌதம நீலாம்பரனை வெகுவாகப் புகழ்ந்து கடிதம் எழுதியிருந்தான்.

இதே ஆண்டு கோடையில் கௌதமன் லக்னோ வந்தான். 'குல்பிஷான்' மாளிகைக்கு ஃபோன் செய்தான். வீட்டிலுள்ளவர்கள் ரேடியோ ஸ்டேஷன் போயிருப்பதாகப் பதில் வந்தது. ரேடியோ ஸ்டேஷனுக்கு ஃபோன் செய்து கேட்டதில், அப்போதுதான் சிங்காடேவாலீ மாளிகைக்குச் சென்றார்கள் என்பது தெரிந்தது. இதென்ன கொடிக்காயின் பெயரை வீட்டுக்கு வைத்திருக்கிறார்கள். பொருத்தமில்லாத பெயர். கர்பூஜ் பழம், தர்பூஜாப்பழம், முள்ளங்கி

முதலானவைகளின் பெயர்களையும் வீடுகளுக்கு வைக்கிறார்கள். கௌதமனுக்குச் சிரிப்பாக இருந்தது. இந்த வீட்டுக்கார்ரகள் 'சிங்காடா' காயை அதிகம் விரும்பிச் சாப்பிட்டிருப்பார்களோ என்னவோ?

கௌதமன் சிங்காடேவாலீ இல்லத்திற்கு ஃபோன் செய்தான். சம்பா ரிசீவரை எடுத்துக் குரல் கொடுத்தாள்: "ஹலோ!"

"ஹலோ! ஆதாப் அர்ஸ்! என் பெயர் கௌதமன். நீங்கள் அங்கேயே இருப்பதானால், நான் உங்களைச் சந்திக்க அங்கே வந்து சேருகிறேன்."

"நீங்கள் இங்கு அவசியம் வாருங்கள்." சம்பா பதிலளித்தாள்.

கௌதமன் அங்கு பேய்ச்சேர்ந்தான். நதியின் படித்துறைக்கு எதிரே உள்ள வராந்தாவில் எல்லாரும் அமர்ந்திருந்தர்கள். கௌதமன் வினவினான்: "தலயத் ஆரா பேகம் உங்களில் யார் என்று தெரிந்து கொள்ளலாமா?"

"நான்தான், சொல்லுங்கள்"

"மிஸ் தலயத் பேகம்! மனம் போனபடி எழுதுகிறவரின் பேனாவை யாரும் நிறுத்தி வைக்க முடியாது. ஆனால் நீங்கள் இப்படிச் செய்திருக்க வேண்டாம்."

"நீங்கள் 'இப்டா' சார்பில் கல்கத்தாவில் அரங்கேற்றம் செய்த நாடகங்களைப் பற்றி நான் கமால் வாயிலாக அறிந்து கொண்டேன். நான் உங்களுக்கு மார்ஜின் கொடுக்கிறேன்; பதினைந்து நிமிடங் களுக்குள் எங்களைக் கவர்ந்துவிடவேண்டும். இதே அளவு நேரத்திற்குள் நாங்கள் உங்களைக் கவர்ந்துவிடுகிறோம். அதாவது, செல்வாக்கைப் பதிப்பது. இதற்குப் பிறகு நீங்கள் நார்மலாகி விடுங்கள். நார்மலாக இருப்பது எப்போதுமே நல்லது. சரி, நீங்கள் தொடங்குங்கள். உங்கள் செல்வாக்கை எங்கள் பேரில் ஏற்றிடுங்கள். நீங்கள் விசுவபாரதியில் பயின்று வருவதாகக் கேள்விப்பட்டேன். இங்கு பெரிய பெரிய கலைஞர்கள் அமர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொரு துறையிலும் தேர்ந்தவர்கள். இவர்கள் தனித்தனியாக, வரிசையாக, பிறகு ஒன்று சேர்ந்து உங்களை 'இம்ப்ரஸ்' செய்ய விரும்புவார்கள். முதலில் நீங்கள் உங்கள் அரசியல் கோட்பாடு பற்றிப் பேசுங்கள். நீங்கள் ரியாக்ஷனரி இல்லையே? இந்துமகாசபைக்காரரோ?"

"நீங்கள் முஸ்லீம் லீக்கோ?" கௌதமன் அதே குரலில் சென்னான்.

"கமால் அண்ணா சொல்லியிருக்கிறார். நீங்கள் சின்ன குருதேவராகப் போகிறீர்கள், என்று."

"சீடர்களை உருவாக்கி வருகிறீர்களா?" நிர்மலா கேட்டாள்.

"பொதுவாக இல்லை. சில சமயங்களில் அப்படிச் செய்வதும் உண்டு."

"கௌதம் என்பது உங்களுடைய புனைபெயரா?"

“அப்படியில்லை. பஹராயிச்சிலுள்ள மெத்தப் படித்த பண்டிதர்கள் எனக்கு இந்தப் பெயரை வைத்தார்கள்.”

“பெரிய அண்ணா இன்னும் வரவில்லை. அவர் ஃபோன் செய்தார், இங்கு டீக்கு வந்துவிடுவதாகச் சொன்னார்.”

தலயத் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, “பெரிய அண்ணா ‘ரைடிங்’-திடீர்த் தாக்குதல் செய்யப் போயிருந்தார்; இப்போது ‘ஸ்விம்மிங்’ செய்துவிட்டு வந்து சேருவார்.” இதைக்கேட்டதும் மற்றவர்கள் சிறிது வெட்கிப்போனார்கள்.

“ஆண்டவனே! அவர் யார் பெரிய ஸினி ஸ்டாரோ? அசோக் குமார் முதலானவரைப்போல்...” கௌதமன்.

“பெரிய அண்ணாவை நீ கட்டாயம் சந்திக்க வேண்டும்”—கமால்.

“அவத் பிரதேசத்து தாலூக்காதாரர் பற்றி எனக்கு அதிகம் தெரியாது.. நீங்கள் எல்லாரும் அதேமாதிரி ரைடிங்-ஸ்விம்மிங் செய்கிறவர்களா? உண்மையாகவே, எல்லா மிடில் கிளாஸ் ஜனங்களைப் போலவே, நான் சீமான்கள் சமூகத்திடம் மோகம் கொண்டிருக்கிறேன். போர் மூள்வதற்கு முன்பு, நான் வெளிநாடு போயிருந்தேன். பிரிட்டிஷ் லார்டுகளைக் காண ஆவல் கொண்டேன். சுற்றி அலைந்தும் ஒரு லார்டு கூடத் தென்படவில்லை. தற்செயலாக ஒரு லார்டைக் கண்டு, அவர் பின்னால் சென்றேன். பிறகு தெரிந்தது அந்த நபர் லார்டு இல்லை, அண்டர்டேக்கர் என்பது. அங்கு கீழ்நிலைச் சிப்பந்திகள் கூட லார்டுபோல் டிரஸ் செய்துகொள்ளுகிறார்கள்.”

“நாங்களும் கீழ்நிலைச் சிப்பந்திகள்தான்” கமால் சொன்னான்.

“மேலும் கடந்த காலத்தின் சமாதிகளுக்குக் காவலர்கள் நாங்கள்”—ஹரிசங்கர்.

“ஆனாலும் எங்களை நீ நேசித்தாக வேண்டும். நாங்கள் எங்களுக்குள்ள உள்ளக் கவர்ச்சியைத் துணைகொண்டு வாழ்கிறோம்.”

“நான் உன்னை நிச்சயம் விரும்புவேன், நேசிப்பேன், என் உள்ளம் பரந்தது.” கௌதமன் மிடுக்காகப் பதிலளித்தான்.

சம்பாவும் குழுவில் சேர்ந்திருந்தாள். குழுவின் சட்ட திட்டங்களுக்கு இணைந்து வந்தாள். அந்தக் குழுவிடம் அனுதாப உணர்ச்சி-பரிவு இருந்தது. காரணம் அது தனித்திருந்ததால். நாம் எவ்வளவு இரங்கத்தக்க வகையில் துணை தேடித்திரிகிறோம். சூழ்நிலையைப் போலவே குழுவும் ஒரு கதாபாத்திரம்-கற்பனைகளின் வெளி உருவம். மானிடத் தொடர்புகள் மிக்க மென்மையான அடித்தளத்தில் இருக்கின்றன. இவை வழக்கமாக அறுபட்டு வருகின்றன. இதனால் தான் அநீஸ், மீர்தகீமீர் போன்ற கவிஞர்கள், ‘வாழ்க்கைக்கு மிக்க கவனம், மிக ஜாக்கிரதை தேவை” என்று கூறியிருக்கிறார்கள். கண்ணாடி வீட்டில் எங்கும் கண்ணாடிப் பண்டங்களை நிரப்பி

வைத்திருப்பதைப்போன்றது இந்த வாழ்க்கை. வாழ்வின் தொழிற் சாலையே கண்ணாடிப்பொருள் தொழிற்சாலைதான்.

கமால் சொன்னான்: "சம்பா! நாலுபேர் மனப்போக்கிற்கு ஏற்ப நீங்கள் வாருங்களேன். நீங்கள் எங்களுடைய வாழ்வை அமைத்துக் கொடுங்கள்; நாங்களும் உங்கள் வாழ்வு அமைய உதவுகிறோம். உங்களைத் தனியாக விட்டுவிடமாட்டோம். உங்கள் மனத்தைக் கொஞ்சம் கட்டுப்பாடு-ஒழுங்கு முறைக்குப் பழக்கப் படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் ரொமாண்டிக் பர்ஸனாலிட்டியாக இருப் பதால்தான் சங்கடமெல்லாம்."

டிஸிப்ளின்-ஒழுங்குமுறை வாழ்க்கையில் கையாள முடியக் கூடியதா? இங்கு ஒவ்வொரு தரப்பிலும் ஊகம், கற்பனை, பிரிவுகள்! கமால் சொன்னான்: "சம்பா! நீங்கள் ஆர்ட்டிஸ்டாக இருந்தால் சரியாக இருக்கும். இப்போதைய கொந்தளிப்புகளை நன்றாகச் சித்திரிக்கிறீர்கள். ஆனால் அதை எழுத்து வடிவில் வெளிப்படுத்தாம லிருக்கிறீர்கள். உங்களையும் வெளிப்படையாக அறிமுகப்படுத்திக் கொள்வதில்லை. இதனால்தான் சொல்கிறேன், டிஸிப்ளின் உங்களுக்கு மிகத் தேவை."

"இந்த ஆர்ட்டிஸ்டுகளும், எழுத்தாளர்களும் டிஸிப்ளின்—பாஷன்ஸ் உள்ளவர்களா?" சம்பா கேட்டாள்.

"பாஷன்ஸ் இல்லாதவர்களாக இருக்கலாம். ஆனால் கலையை உருவாக்கும் படைப்பு முறையில் தங்கள் தன்மையைத் தேடிக் கொள்கிறார்கள். சம்பா! நீங்கள் ஓவியம் வரையலாமே."

"நீதான் என்னைப் பத்தாம்பசலியாக மதிப்பிட்டிருக்கிறாயே. வேண்டாம், கமால்! நான் இப்போது இருப்பதே சரி. நான் உங்க ளுடன் சேர்ந்திருப்பேன். நான் தஹ்மீனாவோடும் இணைந்திருப்பேன்."

"கூடவே, மனத்திற்கும் அறிவிற்கும் பரஸ்பரம் எத்தகைய பொதுமை இருக்க வேண்டுமென்பதையும் தீர்மானித்துக் கொள் ளுங்கள்; சிக்கல் தீர்ந்துவிடும்."

"மறுபடியும் அதே பேச்சா?"

"நீங்கள் சோதனை செய்து பார்க்க விரும்புகிறீர்களா? நல்லது, தன்னிடமே சோதனையைக் காட்ட வேண்டாம். உலகம் உங்களுக்குப் பல படிப்பினைகளைக் கொடுக்கும்; அப்போது நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள்."

இப்படியாகத்தான் இவர்கள் புல்தரையில் அமர்ந்தோ, சாலையில் நடந்துகொண்டோ விவாதிப்பது வழக்கம். இப்போ தெல்லாம் சம்பா, தஹ்மீனா, நிர்மலா, தலயத் நால்வரும் அநேகமாகச் சேர்ந்தே இருக்கிறார்கள். ஒருநாள் தஹ்மீனா சம்பாவிடம் சொன்னாள்: "இதோ பார்! 'பெரியவர்' நிலையில் நாம் ஒரு பிரச்சினையை ஆராய பெரிய அண்ணா டிசம்பரில் மதராசிலிருந்து

இங்கு வருகிறார். இந்த ஆண்டு நீ எம்.ஏ. முடித்து விடுவாய். ஆத்மார்த்தமாகப் பல சோதனைகளைத் தாங்கிக் கொள்வது, துணிச்சல்காரியாக விளங்க விரும்புவது, இதையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு, பெரிய அண்ணாவை மணந்துகொள் !"

"பிதற்றாதே !"

"இதில் பிதற்ற என்ன இருக்கிறது"

"நீதான் அவரை மணந்து கொள்ளேன்."

"நான் உன் நிழலாக இருந்து உயிர்வாழ விரும்பவில்லை."

"பிதற்றல்..."

சிறிது நேரம் கழித்து தஹ்மீனா சொன்னாள்: "பெரிய அண்ணனே வாழ்க்கையின் முழு நோக்கமாக இருக்கலாகாது. இப்படி உயர்த்தி வைத்துப் பெருமைப்படத் தக்கவர்கள் இல்லை இந்த ஆண்கள்."

"உண்மைதான்"

"வாழ்க்கைக்கு மிகப் பொருத்தமான-ஆதரிசமான கட்சி கம்யூனிஸ்ட் பார்ட்டிதான். ஆமாம் என்று சொல் !"

"ஆமாம்" சற்று நிதானித்துச் சொன்னாள் சம்பா.

தலயத் அடுத்த அறையில் உட்கார்ந்திருந்தாள். இந்த உரையாடலைக் கேட்டு அவள் மகிழ்ந்தாள். 'இவர்கள் சரியாகச் சிந்திக்கத் தொடங்கியிருக்கிறார்கள். நல்ல காலம்' —நிர்மலாவுக்கு ஃபோனில் இதைத் தெரிவித்தாள். அவளும் நல்ல காலம்தான் என்று ஒப்புக்கொண்டு, மகிழ்ந்தாள்.

சையத் ஆமிர் ரஜா டிசம்பரில் லக்னோ வந்தான். சம்பாவின் முந்திய கொள்கை-நோக்கு எல்லாம் மாயமாய் மறைந்தன. நாளெல் லாம் விவரிக்க இயலாத மகிழ்ச்சியுடன் வளைய வந்தாள்.

இதற்கிடையில் கௌதம நீலாம்பரனும் வந்து சேர்ந்தான். அவனுக்கு ஆங்கிலத் தினசரி ஒன்றில் வேலை கிடைத்துவிட்டது.

இந்தக் காலகட்டத்தை இவர்கள் யாவருமே ஒருசேரக் கடந்து வந்தார்கள். இது மிகச்சிறந்த வாழ்க்கைக் காலம். இது கடந்தபின், இதைப் போல் திரும்பக் காணமுடியாத அளவுக்கு மிகச் சிறந்த வாழ்நாட்களின் பரப்பு இந்தக் காலம்.

# 30

"சாந்தா! இது மிகச் சாந்தமான இடம். புதர்களில் குயில்கள் அமர்ந்திருக்கின்றன. மாந்தோப்புகளுக்கிடையே ஒற்றையடிப் பாதை வழியாக, தோட்டக்காரி தாளக்கட்டைளை இசைத்துக்கொண்டு

செல்கிறாள். இந்தப் பகுதியில் ஓய்வுபெற்ற பிரபல கலெக்டர்கள், ஜமீன்தார்கள், பாரிஸ்டர்கள் எனப் பெரிய சீமான்களின் மாளிகைகள் இருக்கின்றன. நிழல் கவிந்த சாலையில் நீண்ட மஞ்சள் வண்ண மலர்கள் கொட்டிக் கிடக்கின்றன. ஞாயிற்றுக்கிழமைகளில், காலை வேளையில் இங்குள்ள பெண்கள் பர்மாக் குடையைப் பிடித்துக் கொண்டு தோழியர் இல்லங்களுக்குப்போவது அழகான காட்சி. சிலர் புல்வெளியில் அமர்ந்து 'நிட்டிங்' வேலையில் ஈடுபட்டிருப் பார்கள். மிக அறிவுச் செறிவோடு மேல்தரமாகப் பேசிக் கொண்டிருப்பது இவர்கள் பொழுதுபோக்கு. இவர்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் ஒழுங்குமுறை, அழகு, பாங்கு. பங்களாக் களில் அறைக்கு அறை பெரிய வாசல் கதவுகள், கதவுகளையொட்டி மணியலங்காரங்களாலான அலங்கார மறைப்புகள், அகலமான படிகள், உயரமான நாற்காலிகள். வளர்ந்த புல் புதர்களுக்கிடையில் இந்த மாளிகைகள் மறைந்திருக்கின்றன. மாடியில் இத்தாலியப் பாணித் தூண்களைக் கொண்ட கூடங்கள். இத்தகைய பேரில்லங்கள் இப்பிராந்தியம் முழுவதும் உருவாகியிருக்கின்றன. ஆழமான-திடமான அஸ்திவாரங்கள் இந்த மாளிகைகளுக்கு. வராந்தாப்படியில் ஒரு காலத்தில் பங்கா இழுக்கும் கூலியாள் தூங்கி விழுந்து கொண்டிருப்பான். நான் பிறந்த பஹராயிச் நகரிலும் இதேபோன்ற வீடுகள் உண்டு. அவற்றில் ஒன்றில்தான் நான் பிறந்தேன். சாந்தா! இந்த வீடுகள்-மாளிகைகள் பற்றிய கதையில் இறங்கி விட்டேன். வளர்ச்சியைக்கண்டு பிரமிக்கும் என் இயல்பான குதூகலம் எனக்கே இப்போது சலிப்பூட்டுகிறது. இப்படியெல்லாம் வீடுகளைக் கட்டி வைத்திருக்கிறார்களே, என்னவெல்லாம் பெயர்கள் சூட்டியிருக் கிறார்கள், பார்த்தாயா?"

"பெயர்களுக்குத் தனிக்கவர்ச்சி, கருத்து, குறிப்பு எல்லாமிருக் கின்றன. எடுத்துக்காட்டாக—சம்பா பேகம்! நல்ல-அழகான பெயர் தானே? சொல், சாந்தா! நீ தொலைவில் இருக்கிறாய். நான் எல்லாப் பொருள்களையும் என் நோக்காலாயே பார்க்கப்பட வேண்டுமென்று விரும்புகிறேன். சாந்தா! நீ என்னை மிரட்டி பல நாட்களாகி விட்டனவே. உன்னுள்ளே இருக்கும் தாய்மையிடம் நான் கோரிக்கை விடலாகாதா? சாந்தா! நீ இங்கு என் பக்கத்திலிருந்தால் இங்குள்ள வர்களை அறிமுகம் செய்து கொள்வாய்."

"இங்கே சுவையான சமாசாரம் ஒன்று இருக்கிறது. இப்போது இங்கு அதிகாரபூர்வமில்லாத வகையில் 'பிள்ளை பார்க்க' என்னை அழைத்திருக்கிறார்கள். நிர்மலா ராணி படித்த பெண்ணாக இருந்தும், பொது வழக்கப்படி சாதாரணப் பெண்களைப்போல் கொஞ்சம் வெட்கப்படுகிறாள். ஹார்மோனியத்தில் அவளைப் பாடச்சொன்ன போது மறுத்துவிட்டாள். என்னை அவளுக்கு வரன் பார்க்கிறார்கள்

என்பதை ஒருகால் அறியாதிருக்கலாம். ஆக, நிர்மலாவுக்கு என்னிடம எந்தக் கவர்ச்சியும் காணக்கிடைக்கவில்லை. இவளுக்குப் பேசவே நேரம் போதவில்லை. இவளுக்குத் தீவிரமான செயல்திட்டங்கள் இருக்கின்றன—கேம்பிரிட்ஜ் போகப் போகிறாள், டாக்டரேட் செய்யப் போகிறாள். நிர்மலா, தலயத் இருவரும் சூட்டிகையான பெண்கள். ஆண்டவன் இவர்களிடமிருந்து நம்மைக் காப்பாற்றுவாராக! எப்போது பார்த்தாலும் அப்படியொரு பேச்சு...!"

"பிரசங்கத்தை எழுதி முடித்தாகிவிட்டதா?" நிர்மலா கேட்டாள்.

"எழுதிக்கொண்டிருக்கிறேன்."

"காண்பியுங்கள்"

"அடாடா! அம்மணி! உண்மையில் பிரசங்கத்தை நான் எழுதவே தொடங்கவில்லை. முக்கியமான கடிதம் எழுதவேண்டியிருக் கிறது."

"இதுவா கடிதம் எழுதச் சமயம்? சரி, நான் சொல்லுகிறேன்..."

அறையில் குழுமியிருந்த எல்லாரும் ஒரு 'கவ்வாலி' பாடத் தொடங்கிவிட்டார்கள்.

"நீங்களும் போய்ப்பாடுங்களேன்" நிர்மலா அடுத்த உத்தரவை விடுத்தாள். அதாவது, இந்த சிங்காடேவாலீ அரண்மணைக்கு வந்து 'கவ்வாலி' பாடுவது அவ்வளவு முக்கியமான-பெரிதான விஷயம் போலும்! அவன் நிர்மலாவைச் சலிப்புடன் பார்த்தான். 'அசட்டுப் பெண் எவ்வளவு மகிழ்ச்சியோடு இருக்கிறாள்!'

இதே சமயத்தில் திரும்பிப் பார்த்தான். பால்கனிக்கடியில் வாசல்படியில் பெரிய அண்ணன் நின்று கொண்டிருந்தான். பயங் கலந்த புன்முறுவல் விரிந்தது. அவரை எதிர்கொள்ள எல்லாரும் வெளிக்கூடத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

"மிக உணர்ச்சி நெகிழ்ச்சியுள்ள மனிதராக இருப்பாரோ?" கௌதமன் மெல்லச் சொன்னான்.

"பெண்களைக் கண்டு மிரள்கிறார். பாவம்! நல்ல பண்பாளர்" நிர்மலா சொன்னாள்.

"நல்ல பண்பாளரென்றால்? நாங்களென்ன காவாலிகளா?" ஹரிசங்கர் எதிர்ப்புத் தெரிவித்தான்.

"இவருடைய பேதை நெஞ்சத்துள் ஏதோ சிக்கல் விழுந்திருக் கிறது" கௌதமன் அறிவித்தான். ஹரிசங்கர் முஷ்டியைக் காண் பித்தான் சவால் விடுவதுபோல். பெரிய அண்ணன் மேலே பார்த்து விட்டு, சம்பாவைச் சந்திக்கச் சென்றான். சம்பா நாற்காலியிலிருந்து எழுந்து தரையில் அமர்ந்து சையத் ஆமிர் ரஜாவுக்குத் தேனீர் தயாரிக்கத் தொடங்கினாள். கௌதமன் சலிப்புணர்வைக் காட்டிக் கொண்டு, தீவிரமாகச் சொன்னான்: "இந்த வழக்கமும் உள்ளதுதான்."

"பெரிய அண்ணன் நன்றாக நடனமாடுவார்" நிர்மலா.

"கிராமிய நடனமா, சாஸ்திரீய நடனமா?" கௌதமன் ஆர்வத்துடன் கேட்டான்.

"பழைய பால்ஸ் நடனத்தில் தேர்ந்தவர்" நிர்மலா மெல்லத் தெரிவித்தாள்.

"உள்ளே ஏதோ சர்ச்சை தொடங்கியிருக்கிறது." ஹரிசங்கர் இரைந்து பேசிக்கொண்டிருந்தான்.

"அப்பப்பா நீங்கள் என்னமாகத்தான் இப்படி இரைந்து கத்துகிறீர்கள்!"—கௌதமன்.

"வாழ்க்கை பல யுகங்களில் பாகுபட்டிருக்கிறது." கமால் கருத்துத் தெரிவித்தான்.

"நல்லது! அப்படியென்றால்..."

"இது வெறும் பேச்சு யுகம்; பேச்சு, பேச்சு, பேச்சு..."

"செய்து காண்பிக்கவும், நன்கு அமையவும் எப்போது காலம் வரும்."

"அப்பனே! இந்த உலகம் தோன்றியது முதல், தர்ம தூதர்களும், வேதாந்த ஞானிகளும், சிந்தனையாளர்களும் பேசி, விவாதித்துப் பொழுது போக்காதிருந்தால், உலகத்து மாபெரும் நூலகங்களி லெல்லாம் கழுதைகள் மேய்ந்துகொண்டிருக்கும். நாங்கள் பேசுகிறோம், நீ கேட்கிறாய்—இந்த நிலைமைக்காக நீ நன்றியுடன் பெருமைப்பட வேண்டும். எங்கள் பேச்சைக்கேட்க உன் காதுகள் ஏங்கித் தவிக்கும் காலம் வரும். பார்த்துகொண்டிரு!" கமால் தெளிவாகச் சொன்னான்.

"காலம் எல்லாவற்றையும் அழித்துவிடுகிறதென்பதை ஒப்புக் கொள்கிறாயா?" கௌதமன்.

"ஆமாம்" கமால் ஒப்புக்கொண்டான்.

ஆதவன் நதியில் முழ்கிக் கொண்டிருந்தான். மாளிகைக் கலசங் களின் பொன்னிறம் மங்கலாக ஒளிர்ந்தது. எதிரே நதியில் ஓர் தோணி அமைதியாக முன்னேறியது.

"குறிப்பு ரகசியங்கள் நிறைந்ததென்று நினைக்கிறாயா?" கௌதமன் கமாலிடம் கேட்டான்.

"ஆமாம்."

"இதோ எதிரே போய்க்கொண்டிருக்கிறதே தோணி, இதன் குறிப்பீட்டில் பெரிய ரகசியம் பொதிந்திருக்கிறது." கௌதமன் பேச்சு மற்றவர்களைக் கவர்ந்தது. ஹரிசங்கர் அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். எல்லாரும் எழுந்து நதித்துறையில் இறங்கித் தண்ணீர்க் கருகில் நின்றார்கள். நதி காலப்பிரவாகத்தின் சின்னம். கற்காலத்தின் கெட்டியான சின்னம். இந்த எல்லா உலகின் அழிவும் எலியைப்போல் மடிவதுதான். எலியைப்போலவே மதிப்பற்றது இந்த உலகம். வேதாந் தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

“இந்த நதி நம் வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டு.” ஹரிசங்கர் தனக்குள் சொல்லிக்கொண்டான். “எனக்கு நதியிடம் தனிக்காதல். உனக்கு?” கமாலைப் பார்த்துக்கேட்டான். கமால் ஒப்புதலாகத் தலையசைத்தான்.

“நான் நதி வெள்ளத்தில் மூழ்கி மரிக்கப்போகிறேன்.” கௌதமன் அறிவித்தான்.

“கௌதமன் நீ என்ன பூர்ஷ்வா பிரதிநிதியாகிக் கொண்டிருக்கிறாயா?”தலயத் அருகில் வந்து கேட்டாள்.

“இல்லை! இது காலத்தின் கோலம் தலயத் ஆரா பேகம்” கௌதமன் துணுக்குற்றான். பாலத்தின் மறுபுறத்திலிருந்து ஏதோ பறை முழங்கும் ஓசை கேட்டது. மாலைப்பொழுதின் அமைதியில் அந்த முழக்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். “சரி, நாம் போய்ப் பூதங்களைத் தேடிப் பார்ப்போமே?”

“பார்க்கலாமே!”

நால்வரும் புல்வெளிக்குத் திரும்பி வந்தார்கள்.

“சம்பா பேகம்! பெரிய அண்ணா! அப்பி!” கௌதமன் குனிந்து மரியாதையுடன் விளித்தான். பிறகு, “வாருங்களேன்! நாமெல்லாரும் போய் பூதத்தைத் தேடுவோமே” என்றான்.

அவர்கள் பேசாமல் கார் பக்கம் சென்றார்கள். இருள் கவிந்த நேரம். மரப்பாலத்தைக் கடந்து கார் போய்க் கொண்டிருந்தது.

“பாதையின் ஒரு திருப்பத்திலிருந்து மனிதன் திரும்பி வர முடியாது.” ஆமீர் ரஜா சொல்லிக் கொண்டான். கமால் காரை நிறுத்தினான். “வாருங்கள், நதியின் அலைகளை எண்ணிப் பார்ப்போமே,” என்றான்.

பாலத்திற்குக் கீழே பல வண்ணங்களில் தோணிகள் வரிசையாக மிதந்த காட்சி மிகக் கவர்ச்சியாக இருந்தது. தோணிகளில் அமர்ந்திருந்தவர்கள் வண்ண வண்ண ஆடைகள் உடுத்தியிருந்தார்கள். பலவகை அணிமணிகள் வேறு. வைர நகைகளின் பொலிவில் நதி நீர் பளபளத்தது.

தோணியில் இருந்தவர்கள் கையசைத்து இவர்களை அழைத்தார்கள். அவர்களுடைய குரல்கள் தெளிவாகக் கேட்கவில்லை. பேச்சும் புரியவில்லை. புள்ளினங்களின் கலவர ஒலிகளைப் போல் இனியதாக, தெளிவின்றி, அச்சுறுத்தவதாக இருந்தது. நதிக்கரையில் நாய்களும், ஓநாய்களும் கத்திக் கொண்டிருந்தன. மயானத்தில் சிதைகள் படபடத்து ஒலியோடு எரிந்தன. புதை குழிக்குள் அடக்கம் செய்ய சவப்பெட்டிகள் உருவாகிக் கொண்டிருந்தன.

“இங்கிருந்து போய் விடுவோம், வாருங்கள்! போதும் பார்த்தது!” சம்பாவின் குரல் நதி வெள்ளத்தினுள்ளேயிருந்து ஒலிப்பது போல் கேட்டது.

"இந்தக் குரல்களிலிருந்து தப்பி எங்கே போய்விட முடியும்?. இவை இறுதிக் குரல்கள்," கௌதமன் சொன்னான். மற்ற பெண்கள் கலகலத்தார்கள்.

"எனக்கு தலை சுற்றுகிறது. என்னைப் பேய்பிசாசுகளிடமிருந்து காப்பாற்றேன்" ஆமீர்ரஜா பாலத்தில் தலையைச் சாய்த்துக் கொண்டான். சம்பா அவனருகில் நின்றாள்.

"நல்ல ஆணழகன்! நான் உன் மனத்தைப் புரிந்து கொண்டிருந்தால்..."—சம்பா

"நீ புரிந்து கொள்ள மாட்டாய். என்னை யாருமே புரிந்து கொள்ள மாட்டார்கள்."—ஆமீர் ரஜா.

கார் புறப்பட்டது. கமால் பாடத் தொடங்கினான். நிலவு திடீரெனப் பளிச்சிட்டது. எல்லாருடைய முகங்களும் பொலிவுடன் தோன்றின.

"பாலம்! எங்கே பார்த்தாலும் பாலங்களைக் கட்டித் தொலைத்திருக்கிறார்கள்." கௌதமன் முணுமுணுத்தான்.

சிக்கந்தர் பாக் சாலைக்கு வந்து சேர்ந்தார்கள். பக்கத்தில் ஒரு யானை ஆடி அசைந்து கொண்டு சென்றது. அதன்மேல் அவத்புரியின் சுல்தான் காஜிவுத்தீன் ஹைதர் வீற்றிருந்தார். சம்பா அந்தத் தோற்றத்தைப் பார்த்தாள்; கோமாளியைப்போல் அவர் தென்பட்டார்.

"அவரிடம் குறைந்தபட்சம் 'ஹவ் டூ யூ டூ'வாவது கேட்டு வையேன்."

"இவர் வெள்ளைக்கார நாகரிகத்தில் மூழ்கியிருப்பவர். பெரிய மேனாட்டுச் சக்கரவர்த்தியைப்போல் அலங்காரம் செய்து கொண்டிருக்கிறார் பாரேன்!" கமால் சொன்னான்.

ஷாஹேஜமன்(அவத் மன்னர்) அம்பாரியில் தலை குனிந்து உட்கார்ந்திருந்தார். கார் மேலே விரைந்தது. எவரும் பேசவில்லை. கௌதமன் ஆரம்பித்தான்: "இவர்கள் என்ன யோசித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை யாராவது எனக்குச் சொன்னால், சொன்னவருக்குப் பரிசு கொடுப்பேன்."

சம்பா சொன்னாள்: "நான் மணிக்கணக்காக விவாதித்தேன். இப்படியும் இவர்கள் என்னதான் விரும்புகிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. கூட்டத்தோடு இருப்பது வீண். தனிமைதான் பயனுள்ளது, இயல்பானது."

கமால் காரை நிறுத்தினான். எதிரே லாமார்ட்டினேயர்கல்லூரி இருந்தது. "இங்கே அவர்கள் எனக்கு என்னவெல்லாம் கற்றுக் கொடுத்தார்கள்!" கமால், ஆமிர்ரஜா, ஹரிசங்கர் மூவரும் திரும்பி, "நீ எதற்காக இத்தனை அதிகம் படிக்கிறாய்?" என்று கௌதமனிடம் கேட்டார்கள்.

"இது விசித்திரமான கோளாறாகிவிட்ட மூளை. இதை அறிவுறுத்துவது வீண்" தலயத் சொன்னாள். கௌதமன் மௌனமாக இருந்தான்.

காரிலிருந்து எல்லாரும் இறங்கிக் கட்டிடத்திற்கு எதிரே நின்றார்கள். ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தார்கள். உள்ளேஇருட்டு; அமைதி. காலையில் இங்கே வகுப்புகள் நடக்கும். சுவரில் இந்தியப் பெண்—பேகம் சாஹியாவின் படம் பொருத்தியிருந்தது. ஜேஃபனி தீட்டியது; ஜெனரல் மார்ட்டினின் மனைவி. தலயத் ஜன்னல் இடுக்கில் மூக்கை உராய்ந்தவாறு நின்று கொண்டிருந்தாள். மற்றவர்கள் குனிந்த தலையுடன் ஏரிப்பக்கம் சென்றார்கள்.

"இங்கே வா! என் பக்கத்தில் வாயேன்!" தலயத் திரும்பிப் பார்த்தாள். ஜெனரல் மார்ட்டினின் இந்திய மனைவி ஏரிக்கரையில் நின்று கொண்டிருந்தாள். கையசைத்து மறுபடியும் தன்னருகில் வரும்படி அழைத்தாள்.

"என்னோடு பேசேன். என்னுடன் யாருமே பேசுவதில்லை. பகல் பூராவும் இங்கே கலகலப்பும் சந்தடியும் அலை மோதுகிறது. பாடங்கள் போதிக்கப்படுகின்றன; சொற்பொழிவுகள், விரிவுரைகள் நடக்கின்றன. என் பக்கம் எவரும் திரும்பிப் பார்ப்பதே இல்லை." அந்த மாது கேவி அழத்தொடங்கினாள். தலயத் ஆறுதல் சொன்னாள்.

"என் பேச்சைக் கேள். நீ எல்லையற்ற குறியில் கவனத்தைச் செலுத்து. காலத்தின் தனித்தனிப் பகுதிகள் உண்மையாகவே..."

"இனிமேல் ஒருக்காலும் படிக்கமாட்டேனென்று வாக்களி!" கமால் உரத்த குரலில் கௌதமனிடம் தெரிவித்தான்.

"இங்கிருந்துதான், ஒரு ஆங்கிலேயப் பேராசிரியர் புத்தகம்-படிப்பையெல்லாம் துறந்துவிட்டு, இமயமலைச் சாரலுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டாராம். இப்போதும் அவர் அங்கு உயிரோடு இருக்கிறாரா அல்லது புலி சிங்கம் ஏதாவது அவரைக்கொன்று புசித்து விட்டதா என்பது தெரியாது. பறவைகள் அவர் தாடியில் கூடு கட்டிக்கொண்டு வாழலாம். ஏதாவதொரு குகைக்குள் அமர்ந்து நாரத முனிவரின் தெய்வீக கானத்தைக் கேட்டு மகிழ்ந்து கொண்டுமிருக்கலாம்" ஹரி சங்கர் சொன்னான்.

"ஓம்- ஓம்- ஓம்-" இந்தக்குரல் சூழ்நிலையெங்கும் எதிரொலித்தது. ஒரு நடுக்கம் கண்டது, "ஹரி... ஹரி..." ஏரிக்கரையிலிருந்து திரும்பினார்கள். லால் பஜரீவாலே சாலைக்கு வந்து சேர்ந்தார்கள். சம்பா ஒரு மலர்க்கொடியைத் தொட்டுப் பார்த்தாள். ஓர் இலை உதிர்ந்து பாதையில் விழுந்தது.

"இலையில் விஷ்ணு மறைந்திருக்கிறார்! ஹரே! ஹரே...!" சம்பாவும் இதை எதிரொலித்தாள்.

நிலவறைக்கடியில் ஜெனரல் மார்டின் படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறான். மேலே உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது.

நூல் நிலையத்தின் மாடியிலிருந்து ஒரு பறவை பறந்து சென்றது. நூல்களின் சொற்கள் பெரும் ஊர்வலமாகப் புறப்பட்டு நாலா பக்கங்களிலும் பரவின. லத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் முதலிய மொழி களின் பொருளற்ற சொற்கள். இவற்றின் பொருள்கள் கொள்ளி வாய்ப் பிசாசுகளைப் போல் வாய்பிளந்து நிற்கின்றன. பல சொற்கள் மேல்தளத்தில் வைக்கப்பட்டிருந்த பீரங்கிகள் மீது ஏறி அமர்ந்தன. மெல்லிய-கரிய கால்களை அசைத்துக் கொண்டிருந்தன. பீரங்கி முழக்கத்துடன், அறிவித்து: "என் பெயர் லார்ட் கார்ன் வாலிஸ். என்னை ஸ்ரீரங்கப் பட்டணத்தில் பயன்படுத்தினார்கள்." மேல் தளத்தில் வைக்கப்பட்டிருந்த சிங்கப் பதுமைகளும், மற்ற பொம்மை களும் உரக்க உரக்க ஆர்ப்பரிக்க ஆரம்பித்தன; அட்டகாசம் புரிந்தன. பிறகு தலயத் உரக்கச் சிரித்தாள். "வாருங்கள்! தில்குஷா மாளிகைக்குப் போவோம்."

சிறிது நேரத்திற்குப் பிறகு கமால் வந்து சேர்ந்தான். இடையில் எங்கோ போயிருந்தான். "நீ எங்கே போயிருந்தாய்?" கௌதமன் சினந்து கேட்டான்.

"பாதுஷா காஜிவுத்தீன் ஹைதரின் அரண்மனையில் வசந்த விழா மிகக் கோலாகலமாகக் கொண்டாடுகிறார்கள் என்று கேள்விப் பட்டிருந்தேன். 'ஃபரஹ்பக்ஷ்' மாளிகையில் மிகக் கோலாகலமான விழாக்காட்சிகள். அலங்கார அறைகளின் மூலைகளில் வெள்ளைக் காரர்கள் முக்காலிகளில் அமர்ந்து பேக் பைப் வாசித்துக் கொண்டிருந் தார்கள். ஒவ்வொரு அறையில் ஒவ்வொருவன். பிறகு ரஜப் அலீ ஃபஜல் அலீ கவ்வாலி வசந்த கீதம் இசைத்தான். கூடத்தில் வெள்ளைக்காரர் குழு பாண்டு வாத்தியங்களை இசைத்துக் கொண் டிருந்தது. லண்டனில் கோலோச்சும் மாட்சிமை பொருந்திய பிரிட்டிஷ் சக்ரவர்த்தியின் நல்வாழ்வுக்கு வேண்டி மதுபானம் செய்தார்கள். பாதுஷா காஜிவுத்தீன் ஹைதருக்கு இன்ஜீனியரிங் பித்து உண்டு. உலகெங்கிலுமுள்ள பல தரப்பட்ட மெஷின்களைச் சேகரித்து வைத்திருந்தார். தாமஸ் டைன்ஹம் ஒரு ஸ்டீமரை உருவாக்கிக் கொடுத்தான். அதைக் கோமதி நதியில் வெள்ளோட்டம் விட்டுப்பார்த்தார் பாதுஷா. ராபர்ட் ஹோம் எனும் ஓவியன் சித்திரம் வரைந்து கொண்டிருந்தான். பிஷப் ஹைதர் இருந்தார். என்னைக் கண்டதும் கர்த்த கருணை மகிமைகளை உபதேசிக்கத் தொடங்கினார். மாடிப்படித் தொடக்கத்தில் நின்றுகொண்டு பாதுஷா வெள்ளைக்கார விருந்தாளிகளை எதிர்கொண்டழைத்தார். பிறகு எல்லாரையும் தன்னுடைய ஓவியக் கூடத்திற்கு அழைத்துச் சென்றார்.

சாப்பாட்டு மேசைகளில் ஆங்கிலேயர் வழக்கப்படி உணவுகள் பரிமாறப்பட்டன. தர்பாரே ஆங்கிலேயர் மயமாக-லண்டன் பாணியில் அமைந்திருந்தது. எனக்கு மூச்சுத் திணறியது. மெல்ல சமாளித்துக்கொண்டு நான் 'ஃபரஹ்பக்ஷ்' உல்லாச மாளிகையிலிருந்து விடுபட்டு வந்து கொண்டிருந்தேன். வழியில் ரெஸிடெண்ட் துரை தலைப்பாகை, அலங்கார அங்கியெல்லாம் அணிந்து இந்திய மன்னரைப்போல் அலங்கரித்துக்கொண்டு, ஆடம்பரப் பல்லக்கில் அமர்ந்து செல்வதைக் கண்டேன். நான் கேட்டேன்: "எங்கே எழுந்தருளிக் கொண்டிருக்கிறீர்கள்?" பதில் வந்தது: "பாதுஷாவின் பவனி-காரனேஷனில் பங்குகொள்ள." நான் கேட்டேன். "எந்தப் பாதுஷா? ஒருவருடைய தர்பாரிலிருந்துதான் நான் இப்போது வந்து கொண்டிருக்கிறேன்." பதில் சொன்னார்: "அவர் இறந்து விட்டார். அவருடைய புதல்வன் நஸிருத்தீன் ஹைதர் இப்போது அரியணையில் அமர்ந்திருக்கிறார். வேடிக்கைதான்! நண்பா! ஹரிசங்கர்! இந்தப் பாதுஷாக்கள் சாகவும் செய்கிறார்கள்!" கமால் சொல்லி ஓய்ந்தான்.

இதற்குள் எல்லாரும் 'தில்குஷா' மாளிகைத் தோட்டத்திற்கு வந்து சேர்ந்தார்கள். பௌர்ணமி நிலவு முழுமையாகப் பிரகாசித்தது. மஞ்சள் நிற மாளிகைக்குப் பின்புறத்தில், ஆங்கிலேயப் படைவீரர்களின் சவக்குழிகள் இருந்தன. இவர்கள் சிப்பாய் புரட்சிக் கலகத்தின் போது 1857 இல் மடிந்தவர்கள். புதர்களுக்கிடையே சென்று அவர்கள் சுவக்குழியின் மேல் பொருத்தப்பட்டிருக்கும் கற்களைப் படித்துப் பார்த்தார்கள்: "லெப்டினென்ட் பால், ஃபோர்த் பஞ்சாப் ரைஃபிள்ஸ்," "கேப்டன் மெக்டானல்ட், 93 ஹைலேண்டர்ஸ்", "லெப்டினென்ட் சாலீ டைஷ்வுட்..."

"ஹல்லோ! ஹவ் டூ யூ டூ?" மூவரும் எதிரே வந்து மகிழ்ச்சியுடன் கைகுலுக்க முன்வந்தார்கள்.

"ஹலோ! சார்லி! பைப் இந்தா!" கௌதமன் புகை பிடிக்க உதவினான்.

பிறகு நவாப் குதஸியா மஹல் மல்லிகைப் புதரிலிருந்து வெளிவந்து சொன்னார்: "எனக்கு யாராவது மன அமைதியை அளித்தால், நான் அவருக்கு என் அரசு முழுவதையுமே அளித்து விடுகிறேன்."

"நான் அடிக்கடி யோசிப்பதுண்டு; நீங்கள் எதற்காக விஷம் தின்று உயிரைவிட வேண்டுமென்று தெரியவில்லை." தன் கல்லூரித் தோழியிடம் பேசுவது போல் ஒட்டுறவோடு கேட்டு வைத்தாள் சம்பா. நவாப் குதஸியா மஹலிடம் பேசுகிறோமென்கிற நினைவு இல்லையோ? பெண்கள் ஒருவரையொருவர் அறிந்து வைத்திருக்கிறார்கள். இருபத்து நான்கு வயதுள்ள அவத் பாதுஷாவின் பேகம்,

மிக ஒயிலாகப் பாறைமீது அமர்ந்தாள். நல்ல எழில், மற்றவர்கள் உலாத்தியவாறே தில்குஷா மஹலின் இடிபாடுகள் பக்கம் போய்ச் சேர்ந்தார்கள்.

"ஒருநாள், பிரெஞ்சுக்காரர் ஒருவர் இங்கு பறக்கும் கூண்டை வானவெளியில் செலுத்திக்கொண்டு வந்தார். நல்ல கூட்டம், என் மாமனார் ஷாஹேஜமன் கூட வந்திருந்தார். என்ன ஆச்சரியம்! அந்த பிரெஞ்சுக்காரர் பறக்கும் கூண்டில் அமர்ந்து பன்னிரண்டு மைல் தூரம் பறந்துபோய், நகரத்திற்கு அப்பால் புறாக்கூண்டுப் பக்கம் இறங்கினார். நீ எப்போதாவது 'குப்பாரா' (கூண்டு) மேலே ஏறிப்பறந்திருக்கிறாயோ?" பேகம் சம்பாவிடம் கேட்டாள்.

"இல்லை. நீ ஏன் விஷத்தைத் தின்றாய்?" சம்பா வற்புறுத்திக் கேட்டுப் பார்த்தாள். பேகம் தட்டிக் கழித்தாள். கையிலிருந்த கண்ணாடியில் தன் அழகைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"நீ மிக்க புகழோடு விளங்கினாய். உன்னைவிட அதிகம் வள்ளல் தன்மையும் நேர்மையும் கொண்டிருந்த பேகம் எவளும் லக்னோ அரியணையில் அமரவில்லை. நீ ஒப்பற்றவள். லட்சக் கணக்கான ரூபாய்களை நீ ஏழைகளுக்கு வழங்கியிருக்கிறாய். இவ்வளவு கொடைத்தன்மைக்கும் அன்புக்கும் பதிலாக இந்த உலகம் என்ன கொடுத்தது? சொல்லேன்! தயவு செய்து சொல்லேன்." சம்பா வினவினாள்.

"நான் எங்கு பார்த்தாலும் நீதான் தென்படுகிறாய்" பேகம் எங்கோ பார்த்துக்கொண்டு சொன்னாள். பூங்காவிலுள்ள மலர்கள் மணந்தன.

"அப்போது மழைக்காலம். நீ அங்கு உலா வந்தாய். பாதுஷா உன்னிடம் பிணக்கம் கொண்டிருந்தார். என்ன கோபமோ? இதை நீ பொறுக்க மாட்டாமல் விஷத்தைக் குடித்து விட்டாய். ஏன் இப்படிச் செய்தாய்? என்ன காரணம், சொல்லேன்? நம் உயிரை விடுகிற அளவுக்கு மதிப்புக் கொண்டவனா மனிதன்? ஆண்களைச் சிறிதும் சட்டை செய்யக்கூடாது." சம்பா விரலை அளந்து காட்டினாள். குதஸியா மஹல் பதில் சொல்லவில்லை.

"இதோ பார்! ராஜா காலிபேஜங் வருகிறார். இன்று பௌர்ணமி தினமில்லையா? பாதுஷாவும் இங்கு உலவ வந்து சேருவார். என்னை இங்கு பார்த்தால் கோபம் கொள்வார். நான் போய் விடுகிறேன்."

"எங்கே போகிறாய்?" சம்பா கலவரப்பட்டுக் கேட்டாள்.

"எங்கேயுமில்லை. நாங்களெல்லாரும் இங்கேதான் இருந்து கொண்டிருப்போம். நாங்களும் நீங்களும் வெவ்வேறா? ஆனால் இப்போது நீயும் இங்கிருந்து போய்விடு. இப்போதைய உன் தோழர்கள் உன்னை அதோ அழைக்கிறார்கள், பார்!"

"சம்பாபாஜீ! சம்பாபாஜீ!" இரவின் அமைதியில் கமாலின் குரல் எடுப்பாக ஒலித்தது. பாறையிலிருந்து எழுந்து தில்குஷா மஹல் பக்கம் சென்றாள். இடிபாட்டின் உயரமான படியில் மற்றவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவத் பாதுஷாவின் —நாஸிருத்தீன் ஹைதரின் வெள்ளைக்கார மனைவிகள் பகட்டான ஆடைகள் அணிந்திருந் தார்கள். முழங்கைகளை ஊன்றிக்கொண்டு அமர்ந்தவாறு, மிக ஈடுபாட்டுடன் கிட்டார் இசையைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு அந்த துரைசானிகள் கூடி நின்று போல்கா நடனமாடி மகிழ்ந் தார்கள். சம்பாவுடன் வந்தவர்கள் படிகளில் இறங்கித் தோட்டத் திற்குள் சென்றார்கள். சம்பா தனிமையில் இருந்தாள்.

"மாத்மோஜேல், வூஜேத் தரீஷார்மா! மாத்மோஜேல்!" சம்பா திரும்பிப் பார்த்தாள். பாதுஷா நஸிருத்தீன் ஹைதர் ஆதரித்த பிரெஞ்சுக்கார நாவிதர் எதிரே புன்சிரிப்புடன் நின்று கொண் டிருந்தார். பட்டுக்குஞ்சலங்கள் கொண்ட ஜரிகைச் சாதராவைப் பாறைமீது விரித்து, "இப்படி அமருங்கள்!" என்று வேண்டிக் கொண்டார்.

சம்பா வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"மாத்மோஜேல்! தன் கைவினைத் திறனுக்காக நீங்கள் வேண்டிய மட்டும் கர்வம் கொள்ளலாம். முடிந்தவரைக்கும் மகிழ்ச்சியோடு இருங்கள். வருந்துவது வீண். இங்கே வாருங்கள்: இறந்த பெண்களின் கீதத்தைப் பாடிக் காட்டுகிறேன்." கிட்டார் வாத்தியத்தை மீட்டத் தொடங்கினான் அந்தப் பிரெஞ்சு நாவிதன். இதுதான் மரித்த பெண்களின் பாலெட் இசை:

"எனக்குச் சொல்லுங்கள்!
லேடி புலோரரா! பேரழகி ஹாய் பேஷ்யா!
ஒயில்மிக்க தாயிஸ்!
நீங்கள் எங்கே மறைந்து கொண்டீர்கள்?
ஜோன் ஆப் ஆர்க் எங்கே சென்றாள்?
ஆங்கிலேயர் உயிரோடு எரித்துவிட்டனரோ?
இவர்களுக்கெல்லாம் என்னதான் முடிவு?
கடந்த காலத்தின் பனிப்புதையலை யார் கண்டார்?"

"மாத்மோஜேல்! அழகிகள் இருமுறை இறக்கிறார்கள். உங்கள் அழகிற்குக் கர்வப்படுங்கள். செல்வச்செழிப்பு, மதிப்பு, செல்வாக்கு குறித்துக் கர்வப்படுங்கள்! காலம் மிகக் குறுகியது. விரைவில் இவை யாவும் உங்களை விட்டுப் போய்விடும். என் பேச்சைக் கேளுங்கள். நான் பாரிஸ் நகர நாவிதன். பாதுஷாவின் முடியலங்காரம் செய்தவன். நிறைய வெகுமதி பெற்றேன். இருபத்து நான்கு லட்சம் ரூபாய் சேகரித்தேன். லக்னோ நகர் முழுவதிலும் என் ஆணை செல்லும். பாதுஷா என் பேச்சைத் தட்டமாட்டார். நான் இட்டது சட்டம்.

நாட்டின் பிரதான அமைச்சர் நான்தான். இப்போது எவருக்கும் என் பெயர் நினைவு இராது."— தன் ஸாடின் செருப்புகளை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

சம்பா படிகளை விட்டு இறங்கி வந்தாள். அவன் குரல் ஒலித்தது: "நான் வேறெங்காவது சென்று அலைகிறேன். உத்தரவு கொடுங்கள் மாத்மோஜேல்!" அவன் குனிந்து மிக்க ஒயிலோடு தெரிவித்தான். அவன் ஸ்டைலே தனி. கமால் முதலியவர்கள் மோட்டார் அருகில் சென்றார்கள். "வாருங்கள்! சதர்மன்ஸில் மாளிகையின் மாடிக்கூடத்திற்குப் போய் நடனமாடலாம்" கமால் ஊக்கமளித்தான்.

கார் வெளிக்கேட்டைக் கடந்து, காஸல்ஸ் ரோடுக்கு வந்து சேர்ந்தது. சிங் காஜிவுத்தீன் ஹைதர் சிற்றாறு வழியாகச் சென்று ஹஜரத் கஞ்ஜ் அடைந்தார்கள். பிறகு கைஸர்பாக் பக்கம் திரும்பி னார்கள். எதிரே வெள்ளி மாளிகை நிலவொளியில் பளபளத்தது.

"வசந்த விழாக்கொண்டாட்டம். திருவிழாக்கோலம் பூண்டிருக் கிறதே!" தலயத் மகிழச்சி பொங்கச் சொன்னாள்.

"சுல்தான் ஆலம் கூட ஒபரா நடனமாடுகிறாரோ! எனக்கு இன்றுதான் தெரியும். உள்ளே போகலாம்." நிர்மலா வியந்தாள்.

"நமக்கு அழைப்பு இல்லை" கமால் தயங்கினான்.

"வேலைக்காரர்களுக்குப் பின்னால் ஒளிந்து நின்று கொண்டு வேடிக்கை பார்க்கலாம்" ஹரிசங்கர்.

அவர்கள் ஓசைப்படாமல் மாளிகைக்குள் சென்றார்கள். மேடையில் இந்திரசபையின் அலங்கரிப்பு. தூண்களில் வெள்ளித் தகடுகள் பொருத்தப்பட்டிருந்தன. எல்லாப் பக்கங்களிலும் கண்ணாடிகள் வனப்பைப் பிரதிபலித்தன. கமால் முதலியவர்கள் மெல்லச் சென்று மேடைக்குப் பின்னால் நின்று கொண்டார்கள்.

புக்ராஜ்பரீ - பிரபலப் பாடகி - அழகி 'கஜல்' பாடத் தொடங்கினாள். உருக்கமான, உணர்ச்சிகளைக் கிளர்த்தும் பாடல். கூடத்தில் மகிழ்ச்சியொலிகள் எழுந்தன. கமால் முதலியவர்கள் ஓரமாக நகர்ந்து, ஒரு கதவுப்பக்கம் வந்து சேர்ந்தார்கள். பாடகி கவர்ச்சியோடு பாடிக்கொண்டிருந்தாள்.

'இந்திர சபை' அரங்கத்தில் ஒபரா நடனம் தொடங்கியது. கமால் குழுவினர் வெளிச்சத்தில் எட்டி எட்டிப் பார்ப்பதை ஒப்பனையறையில் அமர்ந்திருந்த 'ஸப்ஜ்பரீ' எனும் நர்த்தகி கலவரத் துடன் கறுப்புத்தேவரிடம் சொன்னாள்: "இந்தப்பக்கம் பார்! வருங் காலப் பூதங்கள் நம்மைப் பார்த்து முறைக்கின்றன."

கறுப்புத்தேவன் உரக்கச் சிரித்தான் "புதிய பாராட்டுதல் கிடைத்ததா? எந்த மாதிரிப் பூதங்கள்?"

கமால் ஒரு பணியாளிடம் கேட்டான்: "ஸப்ஜ்பரீ யார்?

"யாரைய்யா நீ! இது கூடவா தெரியாது? சம்பாபாய்தான் 'ஸப்ஜ்பரி.' அவத் மன்னர் ஷாஹேஜமன் காஜிவுத்தீன் ஹைதர் காலத்தில் மிகச் செல்வாக்குடன் திகழ்ந்தவள். என்ன அழகு! என்ன கவர்ச்சி! அது மாதிரி எவளுக்கும் வராது; அந்த ஒய்யாரம் அவளுக் குத்தான் பொருந்தும். ஆண்டவன் அவளுக்கு எவ்வளவு இனிமை யான குரலைக் கொடுத்திருந்தான்! என்னமாய் பாடுகிறாள்! நீ லக்னோவில் இருந்ததில்லையா?" இதைக் கேட்டதும், கமால் அங்கிருந்து விரைவாக நகர்ந்தான். இதற்குள் கறுப்புத்தேவன் உரக்கக் கூவினான்:

"நான் இந்துஸ்தானம் சென்று இளையராஜாவை அழைத்து வந்தேன். ஏ ஸப்ஜ்பரீ! உன் காதலனைத் தெரிந்துகொள். நீ உன் காதலனை..."

இப்போது இளையராஜா குல்ஃபாம் மேடையில் தோன்றினான். அவன் உரக்கப் பாடினான்:

"நான் மாளிகையில் வாழ்கிறேன்
இன்பமாய் வாழ்வதே என் தொழில்
இளையராஜா நான் இந்தியாவிற்கு
இணையற்ற என் பெயர் குல்ஃபாம்!"

தொடர்ந்து அவன் உரக்கப் பாடினான்:

"பொழுது புலர்கிறது என் பெருமையைக் காட்ட
அமுதக்காதலி! இனிமையாகப் பாடு!
இன்பவுலகக் கட்டழகிகளுக்கிடையில்
மென்மையாக ஆடிப் பாடி மகிழ்விப்பாய்!"

கமால் முதலியவர்கள் வெளியே வந்தார்கள். இளையராஜாவின் குரல் பின்தொடர்ந்தது:

"நீ பறந்து செல்வாய் இன்பவுலகில்
நான் கை விரித்து நிற்பேன் காமக்கோட்டத்தில்!"

வெளியே 'ஜலபரி' தலைவாசல், சீனீபாக் பூங்கா யாவும் நிலவொளியில் ஒளிர்ந்தன. கொடிப் புதர்களிடையே கண்ணபிரானின் ராஸக்கிரீடை (கோபியருடன் ஆடிப்பாடல்) கவர்ச்சியாக நடந்து கொண்டிருந்தது. ஜானே ஆலம் (சுல்தான்) காவியுடை அணிந்து ஒரு மரத்தின் கீழே அமர்ந்திருந்தார். உற்சவ விழாவுக்கு வந்திருந்த நகரத்தார் யாவரும் காவியுடை அணிந்திருந்தார்கள். கத்தக் நடனக் கலைஞர் துர்க்கா பிரசாத் மகிழ மரத்தடியில் ஆடிப்பாடி விளக்கம் செய்து கொண்டிருந்தார். செயற்கை ஊற்றிலிருந்து சுகந்தமான தண்ணீர் பொங்கிக் கொண்டிருந்தது. எல்லாப் பக்கங்களிலும் மலர்கள் பூத்துக் குலுங்கின. நீர் மண்டபத்திலிருந்து பெண் துறவி ஒருத்தி உருக்கமாகப் பாடிக் கொண்டிருந்தார். நிலவொளியில் அவள் இசை கரைந்தது. கமால் முதலியவர்கள் விழாவுக்கு

வந்தவர்களுடன் சேர்ந்து வெளியே வந்தார்கள். சதர் மன்ஸில் மாளிகை இளம் இருட்டில் கவிந்திருந்தது. உள்ளேயிருந்து வால்தஜ் வாத்திய இசை கேட்டது. வெளியே கார்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தன. வெளிக்கேட்டைக் கடந்து காரை ஓரமாக நிறுத்தினார்கள். வெளியே படித்துறைக்கு கீழே கோமதி நதி ஓடிக் கொண்டிருந்தது. அமைதி சூழ்ந்திருந்தது. படிக்கட்டில் நஸிருத்தீன் ஹைதர்ஷா வெறுங்காலுடன் உட்கார்ந்திருந்தார். ஒரு செருப்பை ஆற்று வெள்ளத்தில் விட்டெறிந்தார். அது கொஞ்சதூரம் மிதந்து சென்றதும், கை தட்டினார்; பணியாள் வந்து நிற்பான், என்கிற நினைப்பு. அப்படியாரும் வந்துவிடவில்லை. மாளிகையில் பால்ரூம் டான்ஸிலிருந்து எழுந்த அட்டகாச ஒலிதான் கேட்டது. பிறகு அவரே எழுந்து போய் செருப்பை எடுத்து வந்தார். அடுத்தபடியாக மற்றொரு செருப்பை நீரோட்டத்தில் விட்டெறிந்தார். அருகில் வந்ததும் தாமே எழுந்து கைப்பற்றிக் கொண்டார். இப்படியொரு குதூகலமான பொழுதுபோக்கு. வெகுநேரம் வரைக்கும் இந்த வேடிக்கை நடந்து கொண்டிருந்தது. கடைசியில் கௌதமன் அவர் எதிரே சென்று சிகரெட்டை நீட்டினான்:

"வேண்டாம், நான் குட்குடிதான் குடிப்பது வழக்கம். யாராவது இருக்கிறாரா?"

"மன்னிக்க வேண்டும். நாங்கள் வந்திருக்கிறோம்" கௌதமன் கலவரத்துடன் சொன்னான்.

"நீங்கள் யார்?" எங்கோ கவனத்துடன் கேட்டார்.

"நாங்கள்... நாங்கள்தான்..."

அவர் ஏதும் பேசவில்லை.

"இவரை இங்கேயே விட்டு விட்டுவா, போகலாம். இவரிடம் நமக்கென்ன வேலை?" கமால் மெல்ல கௌதமனிடம் சொன்னான்.

"வாருங்கள்! புரொபஸர் பானர்ஜியிடம் போகலாம்," மற்றவர்கள் குரல் கொடுத்தார்கள்.

எல்லாரும் காரில் கிளம்பினார்கள். பாதுஷா பாக் பூங்காவின் பிரதான வாசலுக்குள் நுழைந்தார்கள். இங்கும் பூங்கா மலர்களால் மணத்தது. ஓடைக்கரையில் பழைய கலைக்கூடம் நிலவொளியில் மூழ்கியிருந்தது. டாகூர் லைப்ரரியின் கட்டிடம் அமைதியாக எடுப்பாகக் காட்சி தந்தது. "சொற்களுக்கு அதிக சக்தி உண்டு" அக்கட்டிடம் தெரிவித்தது. "என்னிடம் வாருங்கள்: உங்கள் கவலைகளையெல்லாம் மறக்கடித்து விடுகிறேன்."

"சொற்கள் துன்பம்-கவலைகளை மறக்கடிப்பதில்லை; மேலும் ஆழமாக்கி விடுகின்றன." கௌதமன் பதில் சொன்னான்.

"மௌனம் எல்லாவற்றிலும் உயர்ந்தது. இதனால்தான் பலர் முனிவர்களாகிவிடுகிறார்கள்." ஹரிசங்கர் சொன்னான்.

“அமைதி எவ்வளவு கொடியது என்பதை நீ எப்படி அறிவாய்? மௌனம் மனிதனைக் கொன்று விடுகிறது.”—கமால்.

அவர்கள் ஓடையின் குட்டைப் பாலத்தில் உட்கார்ந்தார்கள். பல்கலைக்கழகக் கட்டிடங்களில் நிலவு படிந்தது. அது நாஸிருத்தீன் ஹைதரின் அரண்மனைப் பூங்கா—பாதுஷாபாக். பாவம்! அப்பாவி பாதுஷா!

பிறகு அவர்கள் பேராசிரியர்களின் பங்களாக்கள் பக்கம் சென்றார்கள். தொலைவில் மரக்கூட்டங்களுக்கிடையில் மறைந்திருந்த புல்வெளியில் புரொபஸர் பானர்ஜி மௌனமாக உலாத்திக் கொண்டிருந்தார்.

“இவர்களால் எப்படித்தான் இவ்வளவு தீவிரமாக யோசிக்க முடிகிறதோ?” முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு கமால் சொன்னான்.

யூனிவர்சிடி பகுதியைக் கடந்து அவர்கள் சாலைக்கு வந்து சேர்ந்தார்கள். அந்தச்சாலை யூனிவர்சிடி ரோடோடு சென்று மோதீமஹல் பிரிட்ஜைக் கடந்து செல்வது. பிறகு அவர்கள் மண் ரோட்டில் இறங்கி, சிங்காடேவாலீ மாளிகைப் பக்கம் சென்றார்கள்.

நடு இரவுக்கான பறை முழங்கியது. கௌதமன் நதிப்பிரவா கத்தைப் பார்த்தான். சிங்காடேவாலீ மாளிகையின் படித்துறைக்கு மேல், வராந்தாவிலுள்ள தூணில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்தான். சம்பா, தலயத், நிர்மலா, தஹ்மீனா நால்வரும் மற்றொரு படியில் அமர்ந்திருந்தார்கள். கமால், ஹரிசங்கர், ஆமிர் ரஜா மூவரும் ஆற்றோட்டத்தில் கால்களை நனைய வைத்தவாறு அமர்ந்திருந் தார்கள். நதி பிரவகித்துக் கொண்டிருந்தது. எதிர்க்கரையில் நஸஃப் அஷ்ரஃப், மோதீ மஹல், சதர்மன்ஸில் மாளிகைகள் மௌனமாக நின்று கொண்டிருந்தன. தோணி ஒன்று மிதந்து சென்றது.

கௌதமன் இளையராஜா பாடியதை முணுமுணுத்தான்: “பொழுது புலர்கிறது என் பெருமையைக்காட்ட, அமுதக்காதலி! இனிமையாகப் பாடு! இன்பவுலகக் கட்டழகிகளுக்கிடையில், மென்மையாக ஆடிப்பாடி மகிழ்விப்பாய்!”

“கௌதம்! நீ இந்திரசபைப் பாடல்களை இசைக்கத் தொடங்கி விட்டாயா?” தலயத் சொன்னாள். கௌதமன் சோம்பல் முறித்துக் கொண்டு எழுந்து நின்றான்.

“சரி, கிளம்புங்கள்! இரவு பூராவும் இப்படியே உட்கார்ந்து— திரிந்தே கழித்துவிட்டோம்.”—கமால்.

அவர்கள் கலைந்து, தூக்கத்திற்காகப் புறப்பட்டார்கள்.

“நான் சாந்தாவின் கடிதத்தை முழுவதும் படித்தாகவில்லை.” கௌதமன் தன் இருக்கைக்குச் செல்லும்போது மனக்குறையுடன், ஏக்கத்தோடு நினைத்தான்.

# 31

புரொபஸர் பானர்ஜி உலகப் புகழ்பெற்ற பொருளாதார நிபுணர். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் மாலைப் பொழுதில் மாணவ மாணவிகள் சைக்கிளில் அவர் இல்லதிற்குப் போகும் பாங்கைக் காணலாம். பேராசிரியர், மாணவ மாணவிகளை இலவ மரத்தடியில் அமர வைத்து அல்லது, கூடத்தில் மேஜைமீது உட்காரவைத்து கவலை தோய்ந்த குரலில் பேசிக்கொண்டிருப்பார். இந்தக் கூட்டத்தில் கௌதம நீலாம்பரன் சிறப்பிடம் பெற்றிருந்தான்.

"புரொபஸர் ஸார்!" ஒரு நாள் சம்பா கேட்டாள்: "உள்ளக் கிளர்ச்சிகளின்-உணர்வுகளின் போராட்டத்திலிருந்து எப்படி விடுதலை பெறுவது? நாலு பக்கங்களிலும் உள்ளப் போராட்டங்களின் நிழல்கள்தான் பரந்திருக்கின்றன. கானகத்தில் புயல்வீசும்போது, மர நிழல்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்கின்றனவே—கலந்து குளறு படியாகின்றனவே, அதைப்போலத்தான் நெருக்கடியும் மோதலும் ஒவ்வோர் இடத்திலும் இருக்கின்றன. மதங்கள், அரசுகள், நாடுகள், மனிதர்கள், சம்பிரதாயக் கோட்பாடுகள் யாவுமே பரஸ்பரம் சிக்கி, மோதிக் கொண்டிருக்கின்றன. என்னைச் சுற்றிலும் அச்சத்தின் ஆதிக்கம்தான் சூழ்ந்திருக்கின்றது. அவநம்பிக்கை, வெறுப்பு, கவர்ச்சி, அச்சம், நன்றிக்கடன், நம்பகம்—இவற்றின் கொந்தளிப்புதான் என்னுள். உள்ளமும் அறிவும் மிகத் தீவிரமான மோதலைச் சமாளித்தாக வேண்டியிருக்கிறது.

"நான் பனாரசில் படித்துக்கொண்டிருந்தபோது, 'இரு வேறு மதங்கள் பற்றிச் சிந்தித்ததில்லை. காசியின் சந்துகள், தெருக்கள், சிவாலயங்கள், கங்கைத் துறைகள் யாவுமே என் தோழி லீலா பார்க்கவுக்கு விருப்பமானவை போலவே எனக்கும் உரித்தானவை. பிறகு என்ன ஆயிற்றோ? நான் பருவப் பெண்ணானதும், நான் உணரவேண்டியதாயிற்று: இந்தக் கோவில் படித்துறை, தெருக்க ளெல்லாம் எனக்கு உரியவையல்ல என்று. நான் நெற்றியில் திலக மிட்டுக் கொள்வதில்லை; என் தாய் தபலேச்வர் ஆலயத்தில் அர்ச்சனை செய்து ஆரத்தி எடுக்க வைத்து வணங்குவதற்குப் பதிலாக நமாஸ் (தொழுகை) புரிகிறாள். இதிலிருந்து தெரிந்து கொள்கிறேன்: என் சமயக் கோட்பாடு, பண்பாடு வேறு என்பதை. பிஸன்ட் காலேஜில் மூவண்ணக் கொடிக்குக் கீழே நின்றுகொண்டு நானும் 'ஜன கண மன' பாடியிருக்கிறேன். ஆனால் என்னை மற்றவர்கள் மூவண்ணக் கொடிக்குக் கீழே சம்பந்தமில்லாத யாரோ அந்நியள் ஒருத்தி நிற்பதாகத்தான் எண்ணினார்கள். அப்படி அவர்கள் நினைப்பதாக எனக்குத் தோன்றியது. எனக்கோ இந்த

இந்தியாதான் தாய்நாடு; வேறு தாய்நாட்டை நான் எங்கு போய்த் தேடுவேன்? எங்கிருந்து கொண்டுவரமுடியும்? இந்த நாட்டைத் துறந்து செல்லும் எண்ணம் எனக்கு எழவே மாட்டேனென்கிறதே! மேலும், ஐரோப்பாவில் உலகப்போர் தொடங்கியது, புதிய பிரச் சினையை எழுப்பியிருக்கிறது. படையெடுத்த நாடு சொந்த நாட்டு மக்களை வெளியேற்றுகிறது. அந்த மக்கள் அரசியல் புகல் தேடி அகதிகளாகப் பிறநாடுகளில் அண்டி வாழ்கிறார்கள். இவர்களிலும் இரு வகையினர். தாமே தாயகத்தைத் துறந்தவர்கள்; தாயகத்திலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள். முஸ்லீம் அரசியலிலும் ஒரு புதிய குரல் கேட்கத் தொடங்குகிறது. என்னோடு கூடப் பல முஸல்மான்கள் இந்த நாட்டைத் துறந்து வரத் தயாராக இருக்கிறார்கள், புதிய நாட்டை உருவாக்க விரும்புகிறார்கள் என்பதை அறிகிறேன். எனக்குப் பலமுறை இந்த எண்ணம் பிடிக்கவும் செய்கிறது. காரணம், ஐடியலிஸம் மனிதனின் இயற்கைக் குணம். இது இல்லாவிட்டால் உலகில் எந்தப் புதுமையும் உருப்பெறாது; பரவாது, புதிய கருத்துக்களோ கனவுகளோ வெற்றிபெறாது. ஆனால் இந்தப் புதுக்கனவு பிறர் கனவோடு மோத வேணடியதாகி விட்டது. கொந்தளிப்பு, மோதல்களை மறுபடியும் நான் எதிர்கொள்ள வேண்டியதாகி விட்டது. ஆம், அமைதி-போராட்டம் பற்றிய சங்கதிகள் சிக்கலானவை. ஆனால் அமைதிக்கு என்ன பொருள்? நம்பிக்கை-நேர்மை-இதன் பொருளை நிர்ணயிப்பது யார்? பிரிவினைப் பித்து, மிக மோசமானது, அழிவைக் கொடுப்பது என்பது எனக்குத் தெரியும். ஒருமுறை நாம் பிரிந்து விட்டோமானால், பிறகு ஒன்று கூடுவது முடியாது."

பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த புரொபஸர் மரக்கிளையில் உட்கார்ந்திருந்த குருவியைப் பார்த்தவாறு மெல்லச் சொன்னார்: "வெள்ளைக்காரர்கள் இங்கு வந்தேறியதற்கு முன்பு இந்த நாட்டில் இந்து-முஸ்லீம் கலகங்கள் ஏற்பட்டதில்லை; போர்கள் தாம் நடந்திருக்கின்றன. இது குறித்து நீ சிந்தித்திருக்கிறாயா? அந்தப் போர்களும் அரசுகளுக்கிடையேதான் நிகழ்ந்தன. இந்து மன்னர்களின் படைகளில் முஸல்மான் தளபதிகள்; பாதுஷாக்கள் சார்பில் இந்து வீரர்கள் போர்க்களம் புகுந்திருக்கிறார்கள். இவை அரசுகளுக்குள் ஏற்பட்ட மோதல்கள். பிறகுதான் ஆங்கிலேயர்கள் இந்திய வரலாற்று நூல்களைத் தம் போக்கில் எழுதிவைத்து, இந்திய மக்களிடையே வெறுப்பை வளர்த்து விட்டார்கள். இன்று நமக்குள் ஏற்பட்டிருக்கிற மதக் காழ்ப்பும், இனவெறியும்..."

"மதமும் இனமும் உங்கள் கருத்தில் உதவாக்கரையா? நீங்களே கைதேர்ந்த வைணவராயிற்றே!"

"வைணவ சமயம் பக்தி நெறியில் தழைத்தது. இதன் அடிப் படையே தூய அன்பு-பரிவுதான்."

“புரொபஸர் ஸார்! எல்லா மதங்களுக்கும் அடிப்படை தூய அன்பும் பரிவும்தான். இதொரு பெரிய விஷயமில்லை.”

“நீ என்ன கசப்பான செய்திகளைப் பேசுகிறாய். இப்படிப் பேசாதே!”

“புரொபஸர் ஸார்! இங்கு எல்லா பக்கங்களிலும் கசப்புணர்வு தான் பரவியிருக்கிறது. நான் என்ன செய்வது? நேற்று நாங்கள் அங்கு கடந்த காலத்தைக் கண்டோம்; அதன் மோசமான அலங்கோலங் களைக் கவனித்தோம். வீட்டுக்குத் திரும்பிய பிறகு, வெகுநேரம் விழித்துக் கொண்டிருந்தேன். விடிகிறவரைக்கும் உறக்கம் வரவில்லை. நான் யோசித்துக் கொண்டிருந்தேன்: நமக்கும் வரலாற்றுக்கும் என்ன சம்பந்தம்? எப்படி இருக்க வேண்டும்? நாம் தொடர்ந்து குற்றம்- தண்டனை என்று எதிர் கொண்டே வந்திருக்கிறோம். கடந்த காலத்தின் தீம்புகளுக்கு நாம் கழுவாய் தேடித்தான் ஆக வேண்டும். இன்று இந்தக் கணம் வரைக்கும் நடந்தவைகளின் செல்வாக்கு என்னிடம் படிந்திருக்கிறது. இதற்கான பிராயச்சித்தத்தை வருங்காலச் சந்ததிகள் செய்தாக வேண்டுமென்று நினைக்கிறேன். என் காரணமாக இந்த உலகம் அழியுமா? சுகமாக வாழுமா? வளமாக இருக்குமா? வரலாற்றில் வெறுப்பு, மதக் கெடுபிடி பற்றிச் சிந்திக்க சிந்திக்க எனக்கு அது அநாகரிகமாகப் படுகிறது. எந்த இந்துவுக்கும் என் பேரில் இனபேதம் காரணமாக வெறுப்புக் கிடையாது. ஆனால் சாதி சார்பான பரம்பரைப் பற்று என்னை வெறுக்க வற்புறுத்துகிறது.”

“இது உன்னுடைய ஆத்மார்த்தமான பாரதம். இதில் அரசியல்-பொருளாதாரத் துறைகளில் ஏற்பட்ட அதிருப்திகள் எப்போது கலவரத்தை ஊக்குவித்திருக்கின்றன. பதினெட்டாம் நூற்றாண்டில் வங்கத்தில் தோன்றிய சன்னியாசிகள் கலகம், அவத், வங்கம் பகுதிகளில் எழுந்த வாகபிகளின் போராட்டம். மதத்தலைவர்களும் உபதேசியார்களும் தமக்குள் வெட்டுப் பழிகொண்டு சண்டையிட்டு வந்திருக்கிறார்கள். அட ஆண்டவனே!”—கமால்.

“இந்தியாவில் சிறுபான்மையோரின் பிரச்சினை இருக்கத்தான் செய்கிறது என்பதை ஒப்புக் கொள்ளுகிறாயா?” சம்பா கேட்டாள்.

“நிச்சயமாக இங்கு ருஷ்யாவைப்போல் ‘மல்ட்டி நேஷனல் ஸ்டேட்’ (பல தேசீயங்கள் ஒருங்கிணைந்த யூனியன்) அமைய முடியும்.”

“சம்பாபாஜி! எனக்கு மதம்-சமயம் ஏதும் தேவையில்லை. இப்போது எனக்கு வேறு குறிக்கோள்கள் இருக்கின்றன. மனிதனுக்கு நிம்மதி வேண்டும். இதற்குப் பிறகுதான் அவன் மதத்தலைவர்—தார்மிகக் குருமார் பற்றிச் சிந்திக்க முடியும்.” கட்சிக் கண்ணோட்டத்துடன் பதில் சொன்னான் கமால். அவன் புதிய தலைமுறையின் பிரதிநிதி. அறிவுப்பூர்வமான கொள்கைகளைப் பகுத்தறிவு நோக்குடன்

அணுகுபவன், நேர்மையானவன், சிந்தனாவாதி. சம்பா அவனைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

"இன்னொரு விஷயம்..." கமால் கூறினான்: "உன்னிடம் நகர்ப் புறத்து அரசியல் கோட்பாடுகள்தான் இருக்கின்றன. கிராமப்புறத்தைப் பற்றி உனக்கு ஏதும் தெரியாது. பிற்போக்குவாதிகளான— முன்னேற்றத் திற்குத் தடையாக இருந்துவரும் முதலாளிகள் நகரங்களில் ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள். தங்கள் சுரண்டல் ஆதிக்கத்தை நிலை நாட்டிக் கொள்ள குழப்பமும் கலவரமும் நிறைந்த அரசியலைத் தூண்டி விடுகிறார்கள். நம்முடைய (முஸல்மான்களுடைய) அரசியல் போக்கு தனி உரிமை பெறுவதற்கும், விடுபட்ட சலுகைகளைத் திரும்பப் பெறுவதற்குமே போட்டியிட்டுக் கொண்டிருக்கிறது. இதன் குறிக்கோள் முஸல்மான்களுக்கு இவ்வளவு வேலைவாய்ப்புகள், சீக்கியர்களுக்கு இவ்வளவு, இந்துக்களுக்கு இவ்வளவு— இதெல்லாம் நடுத்தர வர்க்கத்து அரசியல் போக்கு, துர்ப்பலமானது," கமால் தொடர்ந்தான்: "என் பாட்டனார் கான் பஹதூர் நவாப் தகீர்ஜா பஹதூர் ஆக் கல்யாண்புர் முஸ்லீம் லீக் கட்சியில் சேர்ந்துவிட்டார். காங்கிரஸ்காரர்கள் பெரிய சிறிய நிலக்கிழார்களை ஒழித்துக்கட்ட முனைந்திருக்கிறார்கள் என்று நினைக்கிறார் அவர். பிற்போக்குக் கொள்கைகளுக்கு இறுதி ஆதரவாளர்—அனுதாபி அவர். எனக்கு அவரிடம் அனுதாபம்தான் ஏற்படுகிறது. என் பெற்றோர்கள் சிந்திக்கும் முறைகளை நான் உணர்கிறேன். நான் அவர்களுடன் வாக்குவாதம் செய்யமாட்டேன்."

"அவர் பாகிஸ்தானில் முஸல்மான்கள் சௌகரியமாக வாழ்வார்கள் என்று நினைத்தால், அதை மறுக்க நீ யார்? தனி கருத்துச் சுதந்திரத்தை நீ ஒப்புக் கொள்வதில்லையா?" சம்பா கேட்டாள். தலயத் அவளை ஆர்வத்தோடு பார்த்துக் கொண் டிருந்தாள். "சம்பா! புரொபஸர் டீ குடிக்க அழைக்கிறார்" என்றாள் தலயத்.

புரொபஸர் பக்கத்தில் அமர்ந்திருந்த கௌதம் எழுந்து நின்று சம்பாவுக்கு வணக்கம் செலுத்தினான்.

"சம்பாபாஜி இப்போது தீவிர முஸ்லீம் லீக் தலைவியாகி விட்டார். இன்றைய பேப்பரில் ஜின்னாசாகபின் அறிக்கை வெளியாகி யிருக்கிறது—இந்துக்களைப் பொது வாழ்வில் ஒதுக்கி வைக்க வேண்டும்—சோஷியல் பாய்க்காட்! நாளை முதல் சம்பாபாஜி நம் கூட்டங்களுக்கு வரமாட்டார்கள்" கமால் குத்தலாகச் சொன்னான்.

மாலைப்பொழுதில், மரங்களில் பொருத்தப்பட்டிருந்த பல்பு களின் நீலவொளியில், புல்வெளியில் அவர்கள் அமர்ந்திருந்தார்கள். சூழ்நிலையின் வேதனை அதிகரித்தது.

# 32

கைலாஷ் மாணவியர் விடுதியில் ஆண்டு விழாவுக்காக அனார்கலி நாடகம் நடந்தது. முடிந்ததும் திரை விழுந்தது. பார்வையாளர்கள் பேசிக்கொண்டே வெளியே வந்தார்கள்.

கமால் சொன்னான்: "சம்பாபாஜி! இப்படி மேடையேறி நடித்துக்கொண்டே இருங்கள். அனார்கலியைவிடச் சிறந்த கதை உங்களுக்கு நாடகமாடக் கிடைக்கவில்லையா? மனமகிழ் பேதைமைக்கும் எல்லை இருக்கவேண்டும். இப்படியா?" பிறகு கூட்டத்தில் கலந்து மறைந்தான் கமால்.

கௌதமன் அருகில் வந்து சொன்னான், "கமால் மீது உங்களுக்குக் கோபமா? அன்று புரொபஸர் வீட்டில் அவன் உங்களிடம் கடுமையாகப் பேசிவிட்டான். அவன் சார்பில் நான் உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன்."

"எனக்குக் கமாலிடம் கோபமில்லை, கௌதமன்! யாரிடமும் கோபித்துக்கொள்ள எனக்கு உரிமையில்லை."

"நீங்கள் வீரத் தியாகியாக விளங்கப் போகிறீர்கள். எதற்காக இந்தச் சோர்ந்த வேதனைப்பேச்சுப் பேசுகிறீர்கள்?"

"நீங்கள் மிக மோசமானவர்கள்-மட்டரகம்!" சம்பா கடுமையாகச் சொன்னாள்.

"நாங்கள் வெகுளிகள், திறந்த மனதுள்ளவர்கள். ஆனால் திறந்த மனதுள்ளவர்களில் மற்றொரு ரகமும் உண்டு; பெரிய அண்ணா போன்ற ரகம்."

" நீ ஏன் இப்படிப் பேசுகிறாய்? எனக்கு இப்படித் தோன்றுகிறது; நான் பெரிய துப்புரவான காலரியில் நிற்கிறேன். எனக்கு எதிரே ஒன்றன்பின் ஒன்றாகப் பல திரைகள் விலகிக் கொண்டிருக்கின்றன. இப்போது இறுதித்திரை-கறுப்புத்திரை மீதமிருக்கிறது."

"சம்பாபாஜி! உங்களுடைய பிரச்சினை ப்யூர்லி பர்ஸனல்-உங்களுக்கே சொந்தமானது. உங்களுக்குப் பெரிய அண்ணனிடம் அளவில்லாக் காதல்-இதுதான் எல்லாப் பிரச்சினைகளுக்கும் மூலம். மீதமெல்லாம் வெறும் பிதற்றல்கள்; வேறு பிரச்சினைகள் என்பவையெல்லாம் வெறும் சொல் ஜாலம்-பொருளற்ற சொற்கள்." கௌதமன் வழக்கப்படி பெரிய உபதேசியாரைப்போல் தத்துவ விளக்கமாகப் பேசினான்.

"தலயத் சரியாகத்தான் சொன்னாள்: நீயும் பகட்டாகத்தான் விளம்பரப்படுத்திக் கொள்ளுகிறாய். உன்னோடு பேசுவது, கலீல் ஜிப்ரானின் அல்முஸ்தஃபாவோடு உரையாடுவதுபோல் இருக்கிறதப்பா!"

கௌதமன் கலவரமடைந்தான்: "சம்பாபாஜி! தயவு செய்து கோபம் கொள்ளாதீர்கள். என்னை உங்கள் வீட்டுக்கு அழைத்துப் போய் காபி போட்டுக் கொடுங்கள். அங்கே இதைப்பற்றி நாம் தீர்க்கமாக விவாதிப்போம். தயவுசெய்து கோபிக்காதீர்கள். மனிதன் ஒருமுறைதான் பிறக்கிறான்... சரி, வாருங்கள், போகலாம்!"

காலேஜுக்குப் பின்னால், சாந்த்பாக் பகுதியில் லெக்சரர் சீதாதீட்சித்துடன், சிறிய 'காட்டேஜ்' இல்லத்தில் இருந்து வந்தாள் சம்பாபாஜி. இருவரும் அங்கு வந்து வெளிவராந்தாவில் உட்கார்ந்தார்கள். எதிரே கொய்யாத் தோப்பில் கிளிகளை விரட்டுவதற்காகக் காவல்காரன் குரல் எழுப்பிக் கொண்டிருந்தான். கௌதமன் பிரம்பு நாற்காலியில் அமர்ந்து வாழைத்தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். சம்பா காபி போட்டுக்கொண்டு வந்தாள். சம்பா எதிரே சோபாவில் உட்கார்ந்து கொண்டதும், "சம்பாபாஜி! நீங்கள் மிகப் பெரியவர்—வெரி கிரேட்! ஆண்டவன் ஆணையாகச் சொல்லுகிறேன்."

"உண்மையாகவா!"

"சம்பாபாஜி! ஒன்று மட்டும் சொல்லுங்கள்"

"கேளேன்."

"நீங்கள் பெரிய அண்ணனை எத்தனை வருடங்களாக அறிவீர்கள்?"

"பல வருடங்களாக"

"இத்தனை வருடங்களாக என்ன செய்தீர்கள்?"

"படித்துக்கொண்டிருந்தேன்."

"பிறகு?"

'மேலும் படித்துக்கொண்டிருந்தேன்."

"இதற்குப் பிறகு?"

"பிறகும் படித்துக்கொண்டுதானிருப்பேன். வேறு என்ன செய்ய வேண்டுமாம்"—சம்பா சிடுசிடுத்தாள்.

"அப்படியானால், இத்தனை காலமாகப் பெரிய அண்ணனை எப்படிப் பொறுத்து வந்திருக்கிறீர்கள்? அவரை முதலில் சந்தித்த போது, உங்களுக்குப் பதினேழு-பதினெட்டு வயது இருக்குமே. அவரைப் பற்றிய நினைவு உங்கள் உள்ளத்தில் சீமாட்டிகளின் உல்லாசப் பொழுதுபோக்குபோல் பதிந்துவிட்டது. இத்தனைக்கும் நீங்கள் சீமாட்டி இல்லை! உங்களுக்கு ஒன்று மட்டும் தெளிவாகச் சொல்ல விரும்புகிறேன்: நீங்களே கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் புலப்படும்; அதாவது உங்கள் காதல்..."

"பிதற்றி வழியாதே!"

"பிதற்றலா? ஆண்டவா! நீங்கள் சரியான முரட்டு 'ப்லூ ஸ்டாக்கிங்' இலக்கியப் பண்டிதை. காதலில் கெடுதி என்ன? காதல் மிக நேர்த்தியானது. நானே அதில் சில தடவைகள் சிக்கியிருக்கிறேன்.

ஆனால் நடுத்தர வர்க்கத்துப் பெண்கள் இந்த மாதிரிப் பேச்சைத் தவறு என்று நினைக்கிறார்கள். சம்பாபாஜி! ஸாரீ! இவ்வளவு மோகனமான நேரம். இப்போது உங்களை சித்தார் வாசிக்கச் சொல்லி ஆனந்தமாகக் கேட்கவேண்டும். மாறாக, உங்களைப் பிரச்சினைகளின் சிக்கலைப் பற்றி விவாதிக்க வைத்து விட்டேனே.. மடமை."

"பிறருடைய பிரச்சினைகளின் சிக்கல்கூட வலுவான பெரிய ராக்கெட்தான். மேலும் உங்களைப் போன்ற மாணவர்களை உட்கார வைத்துத் தினமும் கல்லூரியில் பாடம் நடத்துகிறேன் என்பதை மறந்து விட்டீர்கள்..."

"எனக்குத் தெரியும். நீங்கள் இப்படிப் பேசுவீர்களென்று. நம் வாழ்க்கை முழுவதுமே இப்படி ஒரே வகைப் பேச்சுக்களிலேயே கழிந்து விடுகிறது." முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு வெளியே பார்த்தான். "பெரிய அண்ணன் 'ரொமாண்டிக்'காக இருப்பதற்கு என்ன 'மேனரிஸம்'களைக் கையாண்டிருப்பார் என்பதை அறிவேன். என்ன பேச்செல்லாம் கொஞ்சலாகப் பேசியிருப்பார் என்பதும் தெரியும். அவர் பிரெஞ்சு மிக நன்றாகப் பேசுவாராமே?"

"அது சரி, நீயேன் அவரைக்கண்டு எரிச்சல் கொள்ளுகிறாய்?" சம்பா கேட்டாள்.

கௌதமனின் முகம் நாணிச் சிவந்தது. "என் எரிச்சலைப் பற்றி உங்களுக்கென்னவாம்?" இவ்வளவு திடமான ஆண்மகன் இவ்வளவு பலவீனமாகவும் இருப்பதைக் கண்டு சம்பா ஆச்சரியப்பட்டாள்.

"நான் சொல்ல வந்தது இதுதான். எங்கள் குழுவில் எல்லாரும் பெரிய அண்ணனை மூத்த சகோதரராக எண்ணி மரியாதை காட்டி வருகிறார்கள். நீயும் இதை மதித்தாக வேண்டும். இங்கு வந்த பிறகாவது நாகரிகமாகப் பழகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். எப்போது பார்த்தாலும் வம்பு, வாக்குவாதம், புரட்சி, கலகம், போராட்டம்! இங்கேதான் கள்ளுக்கடை மாதிரி சந்தடி சச்சரவு குறைவில்லாமல் இருக்கிறதே; நீ வேறு வந்து சேரவேண்டுமா?"

"சம்பாபாஜி! நீங்கள் பெரிய அண்ணனை மணந்து கொண்டிருந்தால் வேடிக்கையான கோமாளியாக மாறியிருப்பீர்கள். தஹ்மீனா சமாசாரம் வேறு. அவர் இதற்காகவே பிறந்திருக்கிறவர். நீங்களோ... அது தனி!"

இப்போது சம்பா பெருமையாக வெட்கிப்போனாள். மன நெகிழ்வை மறைத்து, பெரிய தோரணையில், "நான் உங்கள் கருத்தைக் கோரவில்லையே!"

"நான் எங்கே கருத்துரை வழங்குகிறேன். என் கருத்துரையை ஏற்க உங்களுக்குத் துணிவு இருந்திருக்குமானால், இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது. ஆனால் நீங்களோ.... ப்சு! இந்த மெத்தப் படித்த

பெண்ணைப் பாரேன்" கௌதமன் எழுந்து நடை போட்டவாறே மேடை நடிப்பு வசனத்தைப் போல் சொல்லிக்கொண்டான்: "-இந்த மெத்தப் படித்த பெண் எகானாமிக்ஸ் நிபுணி. வட்டார மொழிச் சொற்கள் இயல்பற்றி ஆராய்ந்து மூளையை வாட்டிக்கொள்ளும் மேதை அப்பாவிப் பெண். வருடக்கணக்காக எத்தகைய சங்கடத்தில் சிக்கித் தவிக்கிறாள்! நவீன மோகலயத்தில் சிக்கித் தவிக்கும் அப்பாவிப் பெண்." அறையின் நடுவே நின்று கொண்டு கத்தினான்.

"கௌதமன்! நீ வெறும் பைத்தியம்தான்." என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

"அட ஆண்டவா! இதென்ன வினோதம்? ஒழுங்காக—வழக்க மாகக் கிளப்புக்குப் போய் ஓல்டாவால்த்ஜ் நடனமாடுகிற, பிக்னிக் பார்ட்டிகளில் கல்லூரிப் பெண்களை மூவியல் ஃபிலிம் பிடித்து மகிழ்கிற, பெண்ணைப் போல் மென்மையான அழகுபடைத்த, இதற்காகக் கர்வம் கொண்டிருக்கிற ஒரு வாலிபரை நீங்கள் பிடித் திருப்பதாக-விரும்புவதாகச் சொல்லுகிறீர்கள்! சரி, அப்படியொரு காதல் கொள்ளச் சம்மதமானால், என்னைத் தான் காதலித்து வையுங்களேன். இல்லாவிட்டால் கமால், ஹரிசங்கர்-இவர்களிடத்தில் என்ன குறை? இவர்களைத் தவிர எத்தனையோ பேர்கள்! இவர்கள் எல்லாரையும் விட நான் தனி ரகம்-அலாதியானவன் என்பது வேறு விஷயம்." பிறகு, மறுகணமே தீவிர நிலையில் பேசலானான்: "வேண்டாம், சம்பாபாஜி! இதில் சங்கடம் இருக்கிறது. நீங்களெல்லாம் பரம்பரைப் பெருமைக்காக உயிரை விடுபவர்கள். இந்தப் பெருமை களுக்கென்றே தனிப் புகழ்ப்பா அந்தாதி வேண்டும். உங்களுடைய பரம்பரைப் பெருமை, பெரிய அண்ணனின் கவர்ச்சிப் பெருமை, குல்ஃபிஷான், சிங்காடேவாலீ மாளிகைகளின் பழம் பெருமைகள்! மன மகிழ்வு-வெறும் மன மகிழ்வின் விளைவு என்ன? சரி, ஏதாவது புதிய காரியம் செய்கிறீர்களா?"

"காலேஜில் பாடம் சொல்லிக் கொடுக்கிறேனே." சம்பா தன் வசமிழந்த நிலையில் இருப்பதாக உணர்ந்தாள். எதிர்பாராத, இரக்க மற்ற தாக்குதலுக்கு அவள் ஆளானதால், அவளுடைய கவசமெல்லாம் நொறுங்கி விட்டது. பல வருடங்களாகவே தன் கருத்துக்களையும் கொள்கைகளையும் உணர்வுகளையும் மிகச் சிறந்தவையாக எண்ணி வந்திருக்கிறாள். இப்போது ஒரே கணத்தில் அவளுக்குத் தன் மீதே பரிதாபம் ஏற்பட்டது. துயரம் அழுத்த, உரத்த குரலில், "இப்போது ஒவ்வொருவரும் கலைஞராகிவிட முடியாது."

"நீங்கள் கலைஞராக வேண்டாம். இப்போதெல்லாம் கலைஞர் களின் பட்டாளங்களே எல்லா இடங்களிலும் திரிந்து கொண்டிருக் கின்றனவே, ஏதாவது அடிப்படையாக, உருப்படியான காரியத்தைச் செய்யுங்களேன். எவ்வளவு காரியங்கள் செய்வதற்கு இருக்கின்றன!"

நாலா பக்கமும் பார்த்துவிட்டுக் களைப்புடன் நெட்டுயிர்ப்புட்டு, "உங்களுக்கு எந்தக் காரியமும் தோன்றவில்லையா?" என்று கேட்டான்.

"தோன்றாமலென்ன? தெரிகிறது. ஆனால், வாழ வேண்டியிருக்கறதல்லவா? வேலை பார்க்கிறேன்; முன்னூறு ரூபாய் மாதம் கிடைக்கிறது. என் தந்தை சாதாரண ரக வக்கீல்தான். நான் உன் போன்ற சீமான்களைப் போல் ஏழ்மையைப் பற்றிய கேள்வி ஞானம் கொண்டவளல்ல; உண்மை நிலையை அனுபவப் பூர்வமாக அறிந்திருப்பவள்."

"பெரிய அண்ணாவோடு திருமணம் ஆகியிருந்தால் நீங்களும் கிளப்புக்குப் போய் 'ஓல்ட்வால்த்ஸ்' நடனமாடிக் கொண்டிருப்பீர்கள்; ரைடிங் புரியப் போயிருப்பீர்கள், இல்லையா?" கபடு இல்லாமல் கேட்டு வைத்தான்.

"ஏன்? சிவப்புக் கொடியைப் பிடித்துக்கொண்டு தெருவிலே ஓடவேண்டுமா?"

"அப்படியானால் திருமணம் உங்களுக்கு எக்னாமிக்ஸ் பிராப்ளங்களைத் தீர்ப்பதுதான்-போதிப்பதுதான் என்று சொல்லுங்கள். சம்பா பேகம்! நான் உங்களை மற்ற பெண்களைவிடத் தனித்தவளாக நினைத்தேன். சரி, உங்களுக்கு அந்த சீமான் வீட்டுப்பிள்ளைமீது இவ்வளவு மையல் ஏன்?"

"தெரியாது." சிறுமியைப்போல் வெட்கித் தவித்தாள் சம்பா. அவளுக்குச் சற்று வேதனையாகவும் இருந்திருக்கும். கௌதமன் அறைக்குள் உலாத்தியவாறு, "அப்படியா! உங்களுக்கு வாளிப்பு மேனிகள் பிடித்திருக்கின்றனவா? கவிதை இயல்பு கொண்டவள்-லலிதமான சுபாவம் பூண்டவர் நீங்கள்!" சுவர்க் கண்ணாடியில் புருவத்தை உயர்த்தித் தன் முகத்தைப் பார்த்துவிட்டு, "என்னையும் இப்படி யாராவது உயர்ரகமாகக் காதலிக்க முடியுமா? சரியாகப் பார்த்தால், நான் அப்படியொன்றும் அழகில்லாதவன் இல்லை." என்றான்.

"சாந்தா உன்னை உயர்ரகமாகக் காதலிக்கவில்லையோ?"

இதைக் கேட்டதும் கௌதமன் திகைத்து நின்று விட்டான். அவன் கவசம் உடைபட்டதைக் கண்டு மகிழ்ந்தாள்.

"கௌதம்! வீரப் பெருமகனே! நீயும் கண்ணாடி மாளிகையில் தான் இருக்கிறாய். பிறர்மீது கல்லெறியும்போது இதை நீ நினைவில் கொள்ளவேண்டும்."

"உனக்குச் சாந்தாவைப் பற்றி என்ன தெரியும்?"

"நீ அவளை விரும்பவில்லையா? அவள் யாராக இருந்தாலும் சரி, உன் ஒன்றுவிட்ட அண்ணனின் மனைவி; உன்னைவிட ஐந்து வயது மூத்தவள். நாம் எவரை உபதேசகர் என்று எண்ணுவது, யாருக்கு உபதேசிப்பது? இப்போது நீ அந்த சாந்தா நீலாம்பரை

மறந்து கொண்டிருக்கிறாய். வெகு நாட்களாக நீ அவளுக்கு இங்குள்ள தகவல்களை விவரித்துக் கடிதம் எழுதவில்லை. அவள் உனக்கு இண்டலெக்சுவல் தோழி. அவளை நீ மணந்து கொள்ள முடியாது. நிர்மலாவையும் மணக்க முடியாது. தீரர் கௌதம்! இது பெரிய சமாசாரம். இதில் உன் கொள்கைகள் கவைக்குதவாதவையாகிவிடும்; செல்லுபடியாகா. நான் ஆமிர் ரஜாவை விரும்புகிறேன். அவருக்கும் எனக்கும் இன்டலெக்சுவல் தோழமை இல்லை. ஆனால், கௌதம்! எனக்கு உன்னையும் பிடித்திருக்கிறது. இதற்கு என்ன செய்ய? மனிதத் தொடர்புகள் விசித்திரமானவை. எனக்கு மெல்ல மெல்ல நீ பிடித்தமாகிக் கொண்டிருக்கிறாய். நான் மோசமானவளா? இல்லை. மனிதர்களை நேசிப்பது என் இயல்பு. நான் இவ்வளவு சப்பைக் கட்டு கட்டுவதெல்லாம், உன் கண்ணாடி வீடும் நொறுங்கி விட்டது என்பதைக் காட்டத்தான். அதை, பாவம்! நீயே நொறுக்கி விட்டாய். இன்னும் கொஞ்ச காலத்திற்கு அதை வைத்திருக்கக் கூடாதோ?" வேதனையோடு சொல்லி முடித்தாள் சம்பா.

கௌதமன் ஏதும் பேசவில்லை. சம்பாவுக்கு அவனிடம் இரக்கம் ஏற்பட்டது. எவ்வளவு இனிமையான வாலிபன் ஹரிசங்கர்-கமால் போலவே மேம்போக்கானவன்; மகா விஷமக்காரன், வாயாடி. இவர்கள் இருவரும் எங்கேயிருந்துதான் தேடிக் கொண்டு வருகிறார்களோ இந்த மாதிரிக் 'குரூக்'கை!

"உனக்கு சாந்தாவைப் பற்றி என்ன தெரியும்?" கௌதமன் முறைத்தான். அவன் சம்பாவைக் கண்டித்தான். அதட்டுகிற அளவுக்கு நெருக்கம் கொண்டான். இனி அவளை அவன் ஏசலாம்; விமரி சிக்கலாம். இந்த ஒட்டுறவு சம்பாவை விசனப்படுத்தியது. அவள் நிதானமாகச் சொன்னாள்:

"கௌதம்! இந்தக் கூட்டத்தை மன்னித்து விடப்பா! நலிவு கண்ட கூட்டம் நாங்கள்; திறந்த புத்தகங்கள். எங்களிடம் 'மிஸ்டிரி' ஏதும் கிடையாது. நீ என்னை மிகவும் புரிந்து கொண்டிருக்கிறாய். ஒவ்வொரு மனிதனும் மிகவும் வெளிப்படையானவன்தான். நல்ல வெளிச்சத்தில் இருக்கிறோம். இருளோ, நிழலோ கிடைக்காது, நீ போய் மறைந்து கொள்ள. நான் உன்னைப் பார்க்கும் போது, நானும் வெளிச்சத்தில் அப்படியே நிற்பது போலவும், நீ என்னை முன்னும் பின்னுமாக நோட்டம் விடுவது போலவும் தோன்றுகிறது. ஆனால் நான் உன்னை முன்னும் பின்னுமாகப் பார்த்துக்கொண்டிருக்கிறேன். அதனால் எனக்குத் தெரியும் நீ என்னை..."

"முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சம்பா! பேச்சை நிறுத்து. சொற்கள் நம்மைக் கபளீகரம் செய்து விடும்."

"சொற்களை அழித்துவிடலாம். பொருள் அப்படியே இருக்குமே! நாம் என்ன செய்யமுடியும்?" சம்பா ஆற்றாமையோடு சொன்னாள்.

தலயத் ஒருநாள் 'சிங்காடேவாலீ' மாளிகையில் நிர்மலாவிடம் சொன்னாள்: "இதைக்கேட்டாயா? பெரிய அண்ணன் கௌதமனைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்!"

"கௌதமனைக் கண்டா? அடக் கடவுளே! இது பெரிய தமாஷ் தான். அந்த அப்பாவியைப் பார்த்து யாராவது பொறாமைப்படக்கூட முடியுமா? அவன் மகா 'டிஃபென்ஸ்லெஸ்' ஆசாமியாயிற்றே!"

"ஆமாம். அதாவது, அவன் வந்து..."

களவாணிகள் கூட்டம் மாதிரி இவர்களிடையே பாசம் பரிவு அதிகம். "ஆனால் சம்பாபாஜியே ஒருவேளை...?" நிர்மலா ஏதோ யோசித்துக் கொண்டிருந்தவள் திடீரென்று சொன்னாள்.

"சீச்சீ! இந்த மாதிரி அசட்டுப் பேச்செல்லாம் பேசாதே!"

"இதிலே அசட்டுத்தனம் என்ன? காலக்கோளாறு உள்ளது தானே?" நிர்மலா பெருந்தோரணையோடு சொன்னாள்.

"பிசகு!" தலயத் தீவிரமாக எதிர்த்தாள். "சம்பாபாஜி! இவ்வளவு முதிர்ச்சியடையாதவளில்லை, சரி, கௌதமனை நீ காதலிக்க முடியுமா? காதலிக்கிறாயா?" கொடூரமாகக் கேட்டுவிட்டாள்.

"கௌதமனையா? வாழ்ந்தது! இவ்வளவு சகஜமாகப் பழகிய பிறகு அதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. காதல் கொள்வதற்குக் கொஞ்சம் ஒளிவு மறைவு, கூச்சம் தேவை, மைடியர்!" நிர்மலா வெகுளித்தனமாகச் சொன்னாள்.

"இந்த ஒளிவு, மறைவு. கூச்சம் இத்யாதிகளை எதிர்த்துப் போர் தொடுக்கப் போகிறோம்." தலயத்.

"பின்னே என்னவாம்!" நிர்மலா ஆமோதித்தாள்.

"உண்மையாகவே" சம்பாபாஜி இப்படியாகத் தானே தொடர்ந்து "காதல் புரிவதானது நம்முடைய சைக்காலஜியைக் குளறுபடி செய்துவிட்டது. ஆண்டவன் திருவிளையாடல்! எப்போது இங்கு வந்தாளோ, நினைவிருக்கிறதா? நாம் ஃப்ஸ்டு இயரில் இருந்தோம் அப்போதிருந்தே இந்த சமாசாரம் நடந்து கொண்டிருக்கிறது. எவ்வளவு மட்டமான சமாசாரம் இது!"

"மிக மட்டமான சமாசாரம்தான்." நிர்மலா மறுமுறையும் ஆமோதித்தாள்.

"பெரிய அண்ணன் இவ்வளவு தீவிரமாக இருக்கும்போது இவள் ஏன் அவரை மணந்துகொள்ள மாட்டேனென்கிறாள்? மர்மம் புரியவில்லையே!" இதற்குள் சைக்கிளில் கௌதம நீலாம்பரன் வந்து சேர்ந்தான்.

"இந்த எளியவனின் வயிற்றுப் பிழைப்பு இங்கிருந்து கிளப்பப் பட்டுவிட்டது. என்பதை விண்ணப்பிக்கவே வந்திருக்கிறேன்."— கௌதமன்.

"எங்கே போகிறாய்?"—தலயத்.

"இப்படிக் கொஞ்சம் வெளிநாடு வரைக்கும். பத்திரிகைக்காரர் அனுப்பி வைக்கிறார்."

"இப்படிக் கொஞ்சம் வெளிநாடு வரைக்கும்!" தலயத் அப்படியே சொல்லிக்காட்டி, " என்ன ஹம்பக் இது! நாங்கள் வெளிநாட்டுக்குப் போகவே முடியாதவர்கள் மாதிரியும், நீ என்னவோ கொல்லைக் காட்டுக்குப் போய் வருவது மாதிரியும் பெருமைப்பட்டுக் கொள்கிறாயே! நீ போ; நாங்களும் பின்னாலேயே வந்து சேருகிறோம்." என்றாள்.

"டியர்! மிக வருத்தமாக இருக்கிறது, நீ போகிறாயே என்று. ப்சு..." ஹரிசங்கர்.

தலயத் உள்ளே நிர்மலாவிடம் சென்றாள்.

"வாத்தியார் கிளம்புகிறார்."

"நானும் இப்போது கேட்டேன்." நிர்மலா அழுது கொண்டிருப் பதைக் கண்டு தலயத் துணுக்குற்றாள்.

"அட மடப்பெண்ணே! எதற்காக அழுகை? கலியாணம் செய்துகொண்டு நீயும் கூடப் போய்ச் சேரேன்! உனக்கும் இவனுக்கும் எப்போதே நிச்சயமானதுதானே."

"என்னையா கலியாணம் செய்து கொள்வான்? சம்பாவைச் சுற்றிக் கொண்டிருக்கிறானே. எனக்குப் போட்டியாக ஆயுள் பூராவும் அவளையே மொய்த்துக் கொண்டிருப்பான். நான் சம்பாவுக்கு நிழலாக வாழ்ந்து கொண்டிருக்க வேண்டுமா?" நிர்மலா அழுது கொண்டே சொன்னாள்.

"சம்பாபாஜி! அடீ சம்பா! உன்னை விட மோசமானவள் யாரும் இல்லையடி! நீ இன்னும் யார்யாருடைய தலைவிதியைச் சீர்குலைக்கப் போகிறாயோ!" தலயத் சினந்தவாறு குந்தியிருந்தாள். "முட்டாள் பெண்ணே! அழுது தொலைக்காதே!" குரல் தடைந்து ஒலிக்கவில்லை. கூடத்தில் கௌதமனும் ஹரிசங்கரும் எக்காளமிட்டுச் சிரிப்பது கலகலத்தது.

தலயத்திற்குச் சம்பா பேரில் இவ்வளவு அதிக வெறுப்பு இதற்கு முன் ஏற்பட்டதில்லை.

சம்பா ஜன்னலருகில் சென்று வானத்தைப் பார்க்கலானாள். பக்கத்து அறையிலிருந்து ஒரு சிறுமி கண்ணபிரானின் காதல் கீதத்திலிருந்து ஒரு வரியைப் பாடிக்கொண்டிருந்தாள்: "என் கண்ணனில்லாமல் என் வாழ்வு நிறையக் காணேனே! அமையக் காணேனே...!" சம்பாவிற்குப் புதிய உண்மை புலப்பட்டது. காதல் என்பது உண்மையில் விரகம்தான்-பிரிவுத் துன்பம்தான்.

புல் தரையில் பெண்கள் உலாத்திக் கொண்டிருந்தார்கள்.

சோஷியல் ரூமில் பியானோ ஒலித்துக் கொண்டிருந்தது. எல்லா பக்கங்களிலும் கோபிகையின்-கண்ணனின் காதலியின் உள்ளம்தான் தென்பட்டது. சம்பா கீழே இறங்கி வந்தாள். பாதுஷா பாக் பூங்கா விற்குச் சென்றாள். புரொபஸர் வீட்டில் பெரிய கூட்டம். அவள் துணுக்குற்றாள். சில பேச்சுக்கள் அவள் திகைப்பைக் கிளத்தின: "...நேரடி நடவடிக்கை... கல்கத்தா.... கல்கத்தாவில் இரண்டாயிரம் பேர் செத்திருக்கிறார்கள்!"

இதெல்லாம் என்ன? கனவில் யாரோ தன்னை உலுப்பி விட்டதுபோல் இருந்தது. கௌதமனும் அங்கு இருந்தான். ஏதோ அவசரம் அவசரமாக எழுதிக்கொண்டிருந்தான்.

"என்ன நடந்தது?" பயப்பிராந்தியுடன் அவள் கேட்டாள்.

"உன் லீடர் ஐயாக்களிடத்திலே கேளுங்க, சம்பா பேகம்!" கூட்டத்திலிருந்த ஒருவன் சொன்னான்.

சம்பா திக்பிரமையுடன் திரும்பித் திரும்பிப் பார்த்தாள்: "என் லீடர்களா...?" தொண்டை வறண்டது.

"ஆமாம், உன் தலைவர்கள்தான். மிக ஆர்ப்பாட்டமாக லீக் தலைவருக்கு ஓட்டுப்போடப் போனீர்களில்லையா!" மற்றொருவன் ஏசினான்.

சம்பா கௌதமனைப் பார்த்தாள். ஆனால் அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். பலர் சம்பாவை முறைத்துப்பார்த்தார்கள். வெறித்த பார்வை. வேறொருவன் ஹரிசங்கர் பக்கம் திரும்பினான்: "உன் கம்யூனிஸ்டு பார்ட்டியின் தலைகால் தெரியாமல் போகிற போக்கைப் பார்த்தாயா? பாகிஸ்தானின் கோரிக்கை பொதுமக்களின் கோரிக்கையாம்!"

"நாம் அமைதியை விரும்புகிறோம்." கௌதமன் திரும்பத் திரும்பச் சொன்னான்.

"அமைதி! சாந்தி!... த்தூ...! இந்தக் காந்தியவாதிகளைப் போன்ற 'ஃப்ராடு' மோசடிக்காரர்களை வேறெங்கும் பார்க்க முடியாது." மற்றொருவன் சாடினான்.

சம்பாவால் அங்கு நிற்க முடியவில்லை. திரும்பி வந்து விட்டாள். கைலாஷ் ஹாஸ்டலில் அவசரக் கூட்டத்தைக் கட்சி யூனியன் கூட்டியிருந்தது. சம்பா அதைக் கடந்து போனாள். சாந்த் பாக் மாளிகையிலிருந்து வாத்திய இசை வெளிப்பட்டது. ராய் பிஹாரிலால் ரோடிலிருந்து எதிர்ப்பட்ட வீடுகளைப் பார்த்தாள். அவளை எதிர்கொள்ள எந்த வீட்டுக் கதவும் திறந்திருக்கவில்லை.

மறுநாள் காலையில் சம்பா கேள்விப்பட்டாள்: அந்தக் குழுவினர் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்திருக்கிறார்கள். நிர்மலா, தலயத், தஹ்மீனா எல்லாருமே போயிருக்கிறார்கள்; அவள் மட்டும் தங்கியிருக்கிறாள்.

மாதங்கள் கடந்தன.

அந்தக் குழுவினர் கல்கத்தாவிலிருந்து மற்ற வங்காளப் பகுதிகளிலும், பிஹாரிலும் "அமைதி", "அமைதி" என்று பிரசாரம் செய்து கொண்டு சுற்றி வந்தார்கள். இரவில் காந்திஜியுடன் அமர்ந்து 'ரகுபதி ராகவ ராஜா ராம்' பாடிப் பஜனை செய்வார்கள். பகலில் காயமடைந்தவர்களுக்கு மருந்து போட்டுக் கட்டுவார்கள்.

பெண்கள் ஊர் திரும்பி விட்டார்கள். லக்னோ வாழ்க்கை எப்போதும்போல் தொடர்ந்தது. ஒருநாள் பத்திரிகையில் சம்பா படித்தாள்: 'பிஹாரில் பல்கு நதிக்கரையில் கலகக்காரர்கள் சில அமைதித் தொண்டர்களைத் தாக்கி இருக்கிறார்கள். தாக்கப் பட்டவர்களில் கமால், கௌதம், ஹரிசங்கர்...' சம்பா பதறிப் போனாள். உடனே சைக்கிளில், 'குல்பிஷான்' மாளிகைக்கு விரைந்தாள். கேட்டுப் பக்கத்தில் ஸ்டேஷன் வேன் நின்றுகொண்டிருந்தது. சாமான்களை ஏற்றிக் கொண்டிருந்தார்கள். தஹ்மீனா, தலயத், நிர்மலா மூவரும் புறப்படத் தயாராக இருந்தார்கள். தஹ்மீனா தகவல் தெரிவித்தாள்: "நல்ல காலமாக ஹரிசங்கரின் சித்தப்பா கயாவில் இருந்தாராம். காயமடைந்தவர்களைக் காரில் ஏற்றிக் கொண்டு கோரக்புர் போய்ச் சேர்ந்தாராம். அங்கே அவர் சிவில் சர்ஜன். இப்போது நாங்கள் கோரக்புர் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம்."

"சம்பா நீயும் வாயேன்!" தஹ்மீனா சொன்னாள்: "நீ கொஞ்ச நாளாகவே இங்கு வருவதில்லையே; உனக்கு நிறைய வேலை இருக்குமென்று நினைத்தோம். காலேஜ்தான் மூடியாகிவிட்டதே, எங்களோடு வா, போகலாம். திரும்பும்போது உன்னைப் பனாரசில் விட்டு வருகிறோம்."

ஆக சம்பாவை அந்தக் குழு திரும்ப அழைத்துக்கொண்டது.

மூன்று வாலிபர்களும் கோரக்புர் சிவில் சர்ஜனின் பங்களாவின் பின்பக்கத்து வராந்தாவில் படுத்துக்கொண்டு, தொண்டை வலியெடுக்கக் கத்திப் பாடிக் கொண்டிருந்தார்கள். மூவரும் காயமடைந்தவர்கள். பகல் பூராவும் தெரிந்த பாட்டுக்களைப் பாடிப்பாடிப் பொழுது போக்குவதுதான் வேலை. கௌதமன் தினமும் கிடைக்கும் செய்திகளுக்கு ஏற்பத் தன் வருங்காலத் திட்டத்தை மாற்றிக் கொண்டிருந்தான். இடதுகை விரல்களில் பிளாஸ்டர் போட்டிருந்தது. விசனத்தோடு ஏங்கலானான்: "இந்த மூன்று விரல்களும் பழையபடி சரியாகுமா? பயன்படுமா?" ஒருநாள் கத்திவிட்டான்: "சம்பா! இனி நான் பியானோ வாசிக்கவே முடியாது; தெரியுமா உனக்கு?"

"ஏன் வாசிக்க முடியாது? 'மார்பிட்' நோயாளி நிலையில்

சிணுங்கிக் கொண்டிருக்காதே!" கமால் சாடினான். அவனுக்கு முழங்கால் எலும்பில் முறிவு.

மூவரும் நடமாடக்கூடிய நிலைமையைப் பெற்றதும் ஊர் திரும்ப ஆயத்தமானார்கள்.

"வாங்கப்பா! கொஞ்சதூரம் ஊர் சுற்றிவிட்டு வரலாம். இனிமேல் இங்கே எப்போது வரப் போகிறோமோ?" கமால் அழைத்தான். இவன் இப்போதெல்லாம் அதிகம் பேசுவதில்லை. ஏதோ சிந்தித்துக் கொண்டிருக்கிறான். ஆனால் கௌதமனை 'மன நோயாளித்தனம்' காட்டாதே என்று உபதேசிக்கிறான்!

"நாம் இந்தப் பக்கத்துக் கிராமப்புற நிலைமையையும் காண வேண்டும். மிர்ஜாபுர் போவோம். அங்குதான் நம் டிரைவர் மனைவி கம்ருன் பிறந்தகம் இருக்கிறது; பார்த்துவிட்டு வரலாம்."

"இங்கு போக்குவரத்துக்கு யானைதான் வாகனவசதி." அனைவரும் யானையில் அமர்ந்து கபிலவஸ்து சென்றார்கள். கிராமமக்கள் அவர்களை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கமால் மிக சிரத்தையாக ஒரு பாறையைத் தன் துவாலையால் துடைத்தான்.

'இப்போது புத்தர் காலத்தில் இருந்த தாமரைப் பொய்கை பொன்னிற மான்கள், சோலைகள், மலர்க்கொடிகள் எல்லாம் எங்கே போயின?' சம்பா தனக்குள் கேட்டுக்கொண்டாள். "படு அமைதியப்பா!" கமால் பயந்த குரலில் சொன்னான்.

"ஆழ்ந்த அமைதிதான். திரும்பிப்போகலாம். யானைகள் காத்திருக்கின்றன," ஹரிசங்கரின் அறிவிப்பு.

கமால் முகம் கவிழ்ந்து அமர்ந்திருந்தான்.

"சங்கர், வரலாறு என்பதே பெரிய மோசடி. அது நம்மைத் தொடர்ந்து வழக்கமாக வஞ்சித்து வருகிறது." கமால் உள்ளம் சோம்பிச் சொன்னான்.

"சரியாகச் சொன்னாய்!" எப்போதும் போலவே ஹரிசங்கர் அவன் பேச்சை ஆதரித்தான்.

அவர்கள் மெல்ல நடந்து யானைகளிடம் சென்றார்கள். அவர்களுடைய நிழல்கள் விசித்திரமாகத் தோற்றமளித்தன.

# 33

திரும்பி வரும்போது சம்பா பனாரஸில் இறங்கிக் கொண்டாள். உடன் வந்தவர்களுக்கு வாழ்த்துக் கூறிவிட்டு, தாங்காவில் வீடு வந்து சேர்ந்தாள். ராமலீலா பண்டிகைக்கான விழாக்கோலம் தொடங்கி

விட்டது. தெருவிற்குள் நுழைந்ததுமே தன் வீட்டின் வெளிக்கதவு தென்பட்டது. குளிர்காலத்து இரவு, கடல் பிரகாசத்துடன் கப்பல் தென்படுவதுபோல், இருள் வெள்ளத்தில் அவள் வீடு விளக்கொளியில் ஒளிர்ந்தது. சம்பா உள்ளே சென்றாள். உறவுப் பெண் ஒருத்திக்குத் திருமணம். உற்றம் சுற்றமென்று கூடியிருந்தது. ஆளோடி, உள்கூட மெல்லாம் திரை மறைப்புகள் தொங்கிக் கொண்டிருந்தன. சம்பா இருள் சூழ்ந்த அறையில் கட்டிலில் படுத்தாள். கால்மாட்டில் ஒரு குழந்தை நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தது. பெண்கள் பாடினார்கள். ஒரு குழந்தை உறக்கத்திலிருந்து எழுந்து அழுதது. சம்பா கண்களை மூடிக் கொண்டிருந்தாள். சமையலறையில் அகல் விளக்கு எரிந்து, புகைக் கருமை சுவரில் படிந்திருந்தது. தாளிப்பு வாசனை கமழ்ந்தது. "வீடு! வீடு! நம் வீடு...!"

இரவின் அமைதி கானமாகியது. அதைக் குலைக்க ஜன்னலருகில் மாட்டு வண்டி கிறீச்சிட்டுக் கொண்டு சென்றது. வண்டிச் சக்கரங் களுக்கு எப்படித்தான் இப்படிக் கொடூரமாகக் கிறீச்சிட முடிகிறதோ! சம்பாவுக்குப் பழைய நினைவு வந்தது. ஒருநாள் வேலைக்காரி ரசூலன் சொன்னாள்: "வண்டிச் சக்கரங்கள் இப்படிக் கோரமாகச் சத்தம் போடுவது அபசகுனம். தெய்வக் குற்றம் ஏற்பட்டிருக்கும்; அவக்கேடான கெட்டகுறி...!"

சம்பாவுக்கு நெஞ்சம் படபடத்தது, 'என்ன ஆகுமோ? என்ன நடக்குமோ?' தொடர்ந்து தர்க்க புத்தி அறுவுறுத்தியது: 'ஒண்ணும் ஆகாது. எல்லாம் சரியாகத்தான் நடக்கும். இப்போது அப்படி யொன்றும் படுமோசம் ஏதும் நடந்துவிடவில்லை. ஆனால் கமால் சொல்வது.... அவன் கிடக்கிறான், அவன் யார் சொல்ல? இந்தக் கம்யூனிஸ்டுகள் என்னதான் சொல்லுகிறார்கள்? ப்சு... அவர்கள் செல்வாக்குதானே ஓங்கியது...' இந்த யோசனையினூடே நீலாம்பர், கமால், கௌதம் இவர்களின் ஊக்கம், உத்வேகம், தலயத்தின் வாயாடித்தனம், தஹ்மீனாவின் பெரும்போக்கு, எல்லாம் அவள் சிந்தனையைச் சுற்றி வந்தன. தொடர்ந்து தான் யார், தன்னை மற்றவர்கள் என்ன நினைக்கிறார்கள், கௌதமன் தன்னைப் பற்றி என்ன கருதுகிறான்—என்றெல்லாம் யோசித்துப் பார்த்தாள். ஆமீர் ரஜாவின் நினைவு எழுந்தபோது சம்பா சலிப்படைந்தாள். 'அவன் எக்கேடு கெட்டாவது போகட்டும்...'

காலையில் நேரங்கழித்து எழுந்தாள்.

நாட்கள் நகர்ந்தன. ராமலீலாக் கொண்டாட்டம் கோலாகலமாக நடந்தேறியது. சூர்ப்பனகையின் மூக்கறுபட்டது; ராவணனின் 'கொடும்பாவி' எரிக்கப்பட்டது. பரதன் சந்திப்பு நடிக்கப்பட்டது. மெலிந்த உடலில் பவுடர் பூசிக்கொண்டு, ஜிகினா ஒட்டிய கிரீடம் தரித்து, ராம-லட்சுமணர்கள் காட்சி தந்தார்கள். செருக்கும் பெரு

மதிப்பும் புலப்பட சிம்மாசனத்தில் அமர்ந்தார்கள். மற்ற மனிதர் களுக்கு அந்த ராம-லட்சுமணர்களிடம் தெய்வ சான்னித்தியம் காட்சியளித்தது.

விடுமுறை முடிந்தது. சம்பா லக்னோ வந்து சேர்ந்தாள். தீபாவளிப் பண்டிகை எங்கும் ஜகஜோதியாகத் திகழ்ந்தது. வறியவர்-நிறைந்தவர் யாவரும் தீபாவளி கொண்டாடினார்கள். வீட்டுக்கு வீடு திருமகள் வழிபாடு. குல்பிஷான் மாளிகையில் மூதாட்டி அத்தையம்மாள் இளையவர்களை எச்சரித்தாள்: "குழந்தைகளா! வெளியே கண்டபடி அலைந்து கொண்டிருக்காதீர்கள். இரவு மாய மந்திரம், செப்பிடுவித்தையெல்லாம் நடக்கும். பயந்து போவீர்கள்" எதிரே நாற்சந்தியில் ஒரு தொன்னையில் இனிப்புப் பட்சணம் இருந்தது: பக்கத்தில் விளக்கு எரிந்தது. யார்கொண்டு வந்து வைத்தாரோ?

"நினைவிருக்கிறதா? முன்பொரு சமயம், மந்திரம் போட்டிருந்த சிறு கலயம் பறந்து வந்து நம் பங்களா வராந்தாவில் விழுந்தது." தலயத் சொன்னாள். பழைய சிந்தனை தொடர, மற்றவர்களுடன் சேர்ந்து புல்தரைக்கு வந்து, வானத்தைப் பார்த்தாள். முதியவள் அத்தை அம்மா உரக்கச் சொன்னாள் : "இன்றைக்கு இரவு லக்ஷ்மி தேவி தன் ஆந்தை வாகனத்தில் அமர்ந்து, உலகம் பூராவும் சுற்றித் திரிவாள். எந்த எந்த வீட்டுக்குள் நுழைவாளோ, தெரியாது... குழந்தைகளா! வெளியே புல்வெளிக்கெல்லாம் போகாதீர்கள்!" மற்றொரு எச்சரிக்கையும் விடுத்தாள்: "மழைக்கால சர்ப்பம் தீபாவளி விளக்கை நக்கி விட்டுப் புற்றுக்குள் போய் புகுந்துகொள்ளும். வழியில் நின்றால் ஆபத்து."

நாற்சந்திகளிலும், தெருமுனைகளிலும் சொக்கட்டான்- சூதாட் டங்கள் நடந்து கொண்டிருந்தன. ராம் அவதார், கதீர் இருவரும் மும்முரமாகச் சூதாடிக் கொண்டிருந்தார்கள். (இந்தப் பிறவியில் சூதாடாவிட்டால், அடுத்த பிறவியில் மூஞ்சூறாகப் பிறக்க வேண்டி வருமாம்!—ராம் அவதார் சொன்னது.) பிறகு 'பையாதூஜ்' பண்டிகை (பெண்கள் சகோதரர்களை விருந்து வைத்துப் போற்றும் பண்டிகை). மாதங்கள் கடந்தன. கிராமங்களில் 'நௌடங்கி' தெருக்கூத்துக்காரர் களின் கவர்ச்சிப் பாடல்கள் ஒலிக்கத் தொடங்கின. வெண்ணிற ஆடை அணிந்த கிறிஸ்துவப் பெண்கள் பாடினார்கள்:

"ஓஹோ ஹோ! ஹோ! ஹோ!
புனித கர்த்தர் வந்தாரே
புவனம் முழுதும் ரட்சிக்கவே
கர்த்தர் வந்தாரே!
வானுலகம் விளங்கிடவும் புண்ய
கர்த்தர் வந்தாரே...!"

பிறகு கிச்சடிப் பண்டிகை. கும்பமேளாவுக்கு திருமுழுக்காடத் திரிவேணி சங்கமத்திற்குச் சாரி சாரியாகச் சென்றார்கள். பிறகு வசந்த பஞ்சமியில் சரஸ்வதி பூஜை. வெண்மையான படிமங்களை பல வண்ணப் பட்டாடைகளால் அலங்கரித்துப் பக்தர்கள் மகிழ்ந் தார்கள். தெய்வத்தைத் தரிசித்து மனநிறைவைக் கண்டார்கள். குயவர்கள் வனைந்து தந்த பொம்மைகளிலும் தெய்வசான்னித்யம் இருப்பதாகக் கருதினார்கள். பங்குனி மாதம் வந்தது. சிவராத்திரி விழாவுக்கான ஏற்பாடுகள் தொடங்கின.

முஹரம் பண்டிகை கலகலப்பூட்டியது. ஒவ்வொரு முஸ்லீம் வீட்டிலும் புல், மெழுகு, காகிதம் கொண்டு 'தாஜியா'க்கள் (சமாதி போன்ற வடிவமைப்பு) தயாராயின. தன் கலைத்திறனையெல்லாம் மனிதன் இதற்கே செலவழித்தான். இவர்களும் பட்டுப்பல்லக்கு, ஊஞ்சல், 'தாபூத்' (சவப்பெட்டி), ஆகியவற்றில் அல்லாவைக் காண் கிறார்கள். எல்லா இடங்களிலும் சோக கீதங்கள் ஒலித்தன. மார்ச் மாதம் வந்ததும் ஹோலிப்பண்டிகைக்கான தடபுடல்கள். சூழ்நிலையே இரக்கமூட்டுவதாக—செந்நீர், சிவப்பு வண்ணத் தூள்களால் சிவந்தது. தெருவெல்லாம் 'கபீர்' கீதங்கள் ஒலித்தன.

இதெல்லாம் அறிவு மயக்கம்; மன பேதலிப்பு, காட்சிப் பொழுதுபோக்கு. எதற்குமே பொருள் கிடையாது. சொந்த மகிழ்ச்சி—மன நிறைவுதான் மூலப்பொருள். எங்கே கிடைத்தாலும், எப்படிக் கிடைத்தாலும் சொந்த மகிழ்ச்சியை ஏற்றுக்கொள், அனுபவி! உன் கொள்கை-கோட்பாடுகள், உன் சிறைவாசங்கள், உன் காங்கிரஸ், உன் முஸ்லீம் லீக்—எல்லாமே வெறும் பேத்தல்கள். மனிதனின் தலை விதியை நிர்ணயிக்க விரும்பும் உங்கள் செயல்களால், எவ்வளவு ரத்தக் களரி, அழிவுகள்! இதெல்லாம் வேண்டாம். எனக்கு வேண்டியது சொந்த தனிப்பட்ட மன மகிழ்வுதான். வீடு, அமைதி, குழந்தைகள், கணவன், அன்பு, மகிழ்ச்சி.

"சம்பா பேகம்! நீ என்ன இப்படி வெட்கக்கேடான முறையில் சிந்திக்கிறாய்! ஷேம்! ஷேம்!!" ஜன்னல்புறம் கால்களைத் தொங்கப் போட்டுக்கொண்டு அமர்ந்திருந்த அவளுடைய தர்க்கவாதத் திறன் சாடியது. காற்றில் அதன் எதிரொலி கேட்டது. பலத்த மழை பொழிந்தது. வானமும் பூமியும் ஒன்றாகியதுபோல் கொட்டியது. ஆறு, நதி, வாய்க்கால்களெல்லாம் நிரம்பி வழிந்தன.

சம்பா சாலைக்கு வந்து சேர்ந்தாள். எதிரே புரொபஸர் பானர்ஜியின் பங்களா. இன்று அங்கு வரவேற்புக் கூடத்தில் பெருங் கூட்டம் குழுமியிருந்தது. இன்று உலகத்தின் பல முக்கிய பிரச் சினைகளில் முடிவுகளெடுக்கப்பட்டன. 'இவர்கள் இங்கு இப்படி யெல்லாம் முடிவுகள் எடுக்கும் போது, என்னைப் பற்றி ஏன் நினைத்துப் பார்க்க மாட்டேனென்கிறார்கள்? நான்-சம்பா அகமத்

இங்கே தனியாக நின்று கொண்டிருக்கிறேன்' ஜன்னல் பக்கம் உள்ளே எட்டிப்பார்த்தாள். பேராசிரியர் வெள்ளை வேட்டியும், ஜிப்பாவும் அணிந்து மௌனமாக நின்றார். கௌதமும் கமாலும் இருந்தார்கள். கௌதம் புதிய இந்தியத் தூதரகத்தோடு மாஸ்கோ போக இருந்தான்.

தில்லி, சிம்லா, நெ.10, ஔரங்கஸீப் ரோடு, வாய்ஸ் ரீகல் லாட்ஜ், பங்கீ காலனி—இந்தச்சொற்கள் சம்பாவின் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தன. ஜன்னல் பக்கத்திலிருந்து அவள் நகர்ந்தாள். விரைந்து சாலைக்கு வந்து சேர்ந்தாள். இப்போது அவளுக்கெதிரில் இரு உலகங்கள். ஒரு பக்கம் இந்த மனிதர்கள்; இவர்களுடைய மன அறிவு, ஆதர்சங்கள், போராட்டங்கள். ஆனால் இங்கு வருங்காலம் தெளிவில்லாமலிருந்தது. மறுபக்கம் சாந்தி இருந்தது. 'ஆமிர் ரஜா பாகிஸ்தான் போகப் போகிறார். ஏன் போகமாட்டார்? கமாலைப் போல் கோணல் புத்தி கொண்டவரா என்ன? இங்கே இவருக்கு என்ன வருங்காலம் இருக்கிறது? புதிய தேசத்தில் விரைவில் முன்னேறி பெரிய பதவியை எட்டிவிடலாம். சொந்த மகிழ்ச்சி, சொந்த முன்னேற்றம், சொந்த நோக்கங்கள்—நியாயந்தானே? அரசியலே பூரா வாழ்க்கையுமாகி விடாதே! பிறருக்காக நான் ஏன் யோசிக்கவேண்டும்? பிறர் எனக்கு என்ன சாதித்து விட்டார்கள்...?' சம்பா விரிவாகச் சிந்திக்கத் தொடங்கிவிட்டாள்.

'நான் ஆமிர்ரஜாவை மணந்துகொண்டு பாகிஸ்தானத்திற்குப் போவேன்—எவ்வளவு எளிதான காரியம்!' சந்தடியெல்லாம் அடங்கி விட்டமாதிரி இருந்தது.

அமைதி நிலவியது. கற்பனையில் தன் பெயரை புதிய அமைப்பில் சொல்லிப் பார்த்துக் கொண்டாள்: 'பேகம் ஆமிர்ரஜா, கராச்சி.' அச்சா...! ஆனால், இந்த அப்பாவிகள் அடிக்கடி நினைவு வருவார்களே! ஆனால், இப்போது மனிதன் எல்லா விருப்பங் களையும் நிறைவேற்றிக்கொள்ள முடியாதே.' சம்பா 'ஷாஹீபாடக்' கேட் வரை வந்து சேர்ந்தாள். பின்னால் கௌதமன் வந்து கொண்டிருந்தான். "சம்பாபாஜி! குதா ஹாஃபிஸ்!" கௌதமன் குரல் ஒலித்தது.

"மாஸ்கோ போகப் போகிறாயா?"

"ஆமாம். கமால் ஜூலையில் வெளிநாடு கிளம்பி விடுவான். தலயத், நிர்மலாகூட கேம்பிரிட்ஜ் போகிறார்கள். அவர்களுக்கு அங்கே இடம் கிடைத்துவிட்டது."

சம்பா 'பத்ஹாஹ்பாக்' பூங்காவின் நுழைவாயிலில் நின்றாள் அவளுக்குப் பொறுக்கவில்லை. "நான் என்ன செய்யவேண்டும் என்பதை எனக்குச் சொல்லக்கூடாதா?" இரைந்தாள்.

"நீங்கள் எந்த விஷயத்தில் என்னிடம் யோசனை கேட்டிருக் கிறீர்கள்? நீங்கள்தானே சொன்னீர்கள்: யார் யோசனை கூறுவது?

யார் எவருக்கு உபதேசியாராக அமைய முடியும்? நான் இழிந்தவன் இல்லை, அற்பனில்லை; யதார்த்தவாதி—வெறும் யதார்த்தவாதி."

"என் விஷயத்தில் உனக்கு இவ்வளவுதான் அக்கறையா? இவ்வளவு சொற்கள்தானா எனக்கு?"

"நீங்கள்தான் சொற்களின் பொருளை அறிய விரும்புவதில் லையே! நான் சொல்வது வீண் பேச்சாகும். சரி, வணக்கம்! 'குல்பிஷான்' மாளிகைக்குப் போங்கள்; நான் காலையில் தில்லி போகிறேன்; அப்பியிடம் சொல்லி விடுங்கள்." கௌதமன் சென்று விட்டான்.

கமால் அங்கு வந்தான்.

"சம்பாபாஜி! நல்வாழ்த்துக்கள்! உன் அபிமான பாகிஸ்தான் அமைந்து விட்டது." கமாலின் வெறுப்பு, கசப்பு, நிராசை கவிந் திருப்பதைக்கண்டு பிரசங்கம் செய்யப்போகிறான்; திட்டித் தீர்க்கப் போகிறான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் கமால் பேசாதிருந்தான். இனிமேலே பேசியோ, ஏசியோ பயனில்லை என்ற நிலையில் இருப்பதுபோல் இருந்தது. இப்போது எதிரே இருப்பது முடிவெடுக்க வேண்டிய-செயலாற்ற வேண்டிய உலகம். கமால் வெளிகேட்டை வெறித்துப் பார்த்துவிட்டு அப்பால் சென்றான்.

சம்பா தனியாக நின்று கொண்டிருந்தாள்; மலர்கள் கவிந்த இளம் இருள். அறிமுகமானவர்கள் சம்பாவைத் தனிமையில் விட்டு விட்டுத் தன் வழியே போய்விட்டார்கள். சம்பா சாலைக்கு வந்தாள். சந்தடியைக் காணோம். எதிர்ப்பட்ட வீடுகளெல்லாம் அவளுக்கு 'குல்பிஷான்' மாளிகையாகத்தான் தோன்றியது. இன்று அதுவும் புதுமையாக இருந்தது. காரணம் அங்கே இவளைக் கைப்பிடிக்க ஒருவன் காத்திருந்தான். அவன் கைத்தலம் பற்றி அழைத்துப் போவான்; அவள் பின் செல்வாள். வாழ்வில் காதல், சுகம், உல்லாசம், மலர் மொக்குகள் இவற்றுக்கு இடம் உண்டா இல்லையா? மனிதன் எவ்வளவு காலம்தான் நிழல்களை ஒட்டியே போய்க்கொண்டிருப்பான். சம்பா அவனிடம் சொல்லப்போகிறாள்—'இதோ, நான் காத்திருக்கிறேன். கொந்தளிப்பெல்லாம் அடங்கி விட்டது. ஓய்ந்திருக்க வேண்டிய தருணம் இது. இந்தப் பித்தர்கள் போராட்டம், கலகம், ஆர்ப்பாட்டம் என்று தலையைப் பிய்த்துக் கொண்டு திரியட்டும். இவர்களும் அலுத்துச் சலித்து, முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு 'எங்காவது ஒடுங்கப் புகல் கிடைக்காதா?' என ஏங்கித் திரியும் காலம் வரும். ஏற்றுக்கொள், வந்து சேர்ந்துவிட்டேன். உல்லாச மகிழ்வின் முழுப்பொருளையும் நான் அறிந்திருக்கவில்லை. நீ அதற்கு ஓர் எடுத்துக்காட்டு. இங்குதான் சகலத்திற்கும் எடுத்துக் காட்டு—'ஸிம்பல்' உண்டே! இந்த ஜனங்கள் வாழ்க்கை முழுவதையும் ஸிம்பல்களாலேயே நிரப்பி வைத்திருக்கிறார்கள்! எனினும் நான்

உன் பக்கம் வந்து சேருகிறேன்.'

குல்ஃபிஷான் மாளிகையின் வெளிக்கேட்டில், சம்பா தோட்டக் காரன் ராம் அவதாரைக் கண்டாள். "பையா சாகப் (பெரிய அண்ணன்) இருக்கிறாரா?" தன் குரல் நடுங்குவது போல் இருந்தது. திருட்டுத்தனமாகக் கன்னம் வைத்து உள்ளே நுழைய வந்தவள் போன்று திகிலடைந்தாள்.

"பையா சாகப் இப்போதுதானே வெளியே போனாங்க."

"எங்கே?"

பணியாள் கங்காதீன் வந்து சேர்ந்தான்.

"பையா சாகேப் எங்கே போயிருக்கிறார்?"

ராம் அவதார் கசப்புணர்வோடு பதிலளித்தான்: "அங்கேதான். துலுக்கனுகளின் பாகிஸ்தானுக்கு! நீங்களும் போய்ச்சேருங்களேன். எல்லாரும் போயிடுவீங்க. நாங்க இங்கே தனியாகக் கிடக்கப் போகிறோம்." பிறகு நிதானத்துடன், "அவர் பம்பாய் போயிருக் கிறாராம். அங்கே கப்பல்களைப் பங்கு போட்டுக் கொள்ளுகிறார் களாம். முஸல்மான்களின் கப்பல்களைச் சேகரித்துக்கொண்டு கராச்சி போவாராம். டிரைவர் கதீர் சொன்னார்," என்று தெரிவித்துவிட்டு, பழங்களைக் கொத்தவந்த கிளிகளைக் குரலெழுப்பி விரட்டச் சென்றான் ராம் அவதார். ஒரு கல்லையும் எறிந்தான்.

சம்பா திரும்பி வந்தாள். பையா சாகப் போயாகிவிட்டது. அவர் வாழ்க்கையில் குதிரைகள், கார்கள், பெண்கள்— இவற்றைத் தவிர புதியதொன்று சுவையூட்ட வந்திருக்கிறது. புதிய தேசம், பதவி, முன்னேற்றம், புதிய பிரச்சினைகள்— ஆண்களுடைய உலகமே தனி!

'இந்த மனிதனுக்காக நான் எவ்வளவு காலத்தை விரயமாக்கி விட்டேன்! நான் ஒரு மூடம்.' கூடவே இதையும் உணர்ந்தாள்: 'ஆமிர்ரஜா ஆணழகன்; நல்ல கம்பீரம். அவரோடு மிக ரம்மியமாகப் பொழுது போக்கியிருக்கிறேன். நினைவுக் களஞ்சியத்திற்கு இத்தகைய சுவையான தருணங்களும் தேவைதாம். ஆனாலும் எனக்கு அவரிடம் மோகம் கிடையாது, நிச்சயமாக இல்லை.'

ஆமிர் ரஜாவின் முந்திய உலகம் எதிரே விரிந்தது. குல்ஃபிஷான் மாளிகையின் புல்வெளி, ஓரத்தில் வளர்ந்திருந்த யூகலிப்டஸ் மரங்கள்; மாளிகையைச் சேர்ந்த மதிப்புள்ள உறுப்பினர்கள்—கமால், கங்காதீன், அவர்களுடைய மேட்டுக்குடிமை, தஹ்மீனா. இன்றும் அவர் மீது தஹ்மீனா காதல் கொண்டிருக்கிறாள். ஆமிர்ரஜா நல்ல அழகன்தான்; ஆனால் மகா கர்வி. ஏன்தான் அவருக்கு இப்படியொரு கர்வமோ? சம்பாவுக்குச் சிரிப்பு வந்தது. மனிதனுக்கு எதற்காகத்தான் கர்வப்படத் தோன்றுகிறதோ? தன் 'பர்ஸனாலிட்டி'க்காகவா? கௌதம நீலாம் பரனுக்குத் தன் அறிவாற்றலில் கர்வம். கமாலுக்குத் தான் கொள்கை களில் திடமாக ஊன்றியிருப்பதில் கர்வம். தஹ்மீனாவுக்குத் தன்

இனிய-மென்மையான இயல்பில் கர்வம். ஜனங்கள் ஏன் இவ்வளவு அகந்தை கொண்டிருக்கிறார்கள்?

சம்பா நடந்து கொண்டே வானத்தைப் பார்த்தாள். மழை தொடங்கியது. காற்று கண்டபடி வீசியது. இலைகளின் படபடப்பில் எல்லையற்ற மகிழ்ச்சி தேங்கிக் கிடந்தது. 'இந்தச் சுதந்திரச் சூழலைத் தன்னைப்போல் பிறரும் உணர்வார்களா?' சம்பா யோசித்தாள். 'கௌதமன் தன் உறவினனின் மனைவி சாந்தாவைக் காதலிக்கிறான்.'

"ஹாஹ்ஹா! ஹவ் ஃபன்னி." தனக்குள் சொல்லிக் கொண்டாள். வேகமாக நடந்தாள். வெகுதூரம் வரைக்கும் நறுமணம் கமழும் நிலப் பரப்பு விரிந்திருந்தது. நதிப்பக்கமாக நடந்தாள். எதிரே சுரைக்காய் கொடிப்பக்கம் டிரைவர் மனைவி கம்ருன் நின்று கொண்டிருந்தாள். சம்பாவை நலம் விசாரித்தாள். சம்பாவுக்கு அவளுடன் பேச ஆசை. அங்கே உட்கார்ந்து கொண்டாள். பிறகு மழை வலுக்கவே, கம்ருன் ஜாகைக்குச் சென்றாள். சிறிய குடியிருப்பு, வராந்தா ஈரமாக இருந்தது. கம்பளிப் போர்வையில் அப்பளங்கள் உலர்ந்து கொண் டிருந்தன. "சூடேறட்டுமென்று கம்பளியில் உலரப் போட்டிருக் கிறேன்" கம்ருன் பேச்சை ஆரம்பித்தாள். அவள் ஊகித்துக் கொண்டாள், ஏதோ தகவல் இருக்கிறது; அதற்காகத்தான் சம்பாபாஜி வந்திருக்கிறார் என்று.

"சின்னம்மா! உங்களுக்கெல்லாம் ஆண்பிள்ளைகளுடைய மனசு புரிகிறதே இல்லை. எங்களுக்குத் தெரியும் ஆண் கொஞ்சம் சந்தோஷப் பட்டால் போதும், நமக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கும். மேலும், ஆண்களைக் குஷிப்படுத்துகிறது ஒன்றும் சிரமமான காரியமுமில்லை. நாங்க தஹ்மீனாவுக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னோம். பெண்ணாய்ப் பிறந்துட்டோம். தன் நிலைமையைத் தெரிந்து கொள் ளணுமில்லையா? வீணுக்குப் பையா சாகப்போடு சண்டை போட்டுக் கொண்டாங்க. இப்போ என்ன ஆச்சு? அந்தப் பெண்கிட்டே ஒருவார்த்தைகூடப் பேசாமல் பையா சாகப் பாகிஸ்தான் போய் விட்டார். அந்தப் பெண் இங்கே உட்கார்ந்து அழுது கொண்டிருக் கிறாள்! என்ன பிரயோஜனம்?"

"பையா சாகப் இல்லாவிட்டால் வேறொரு சாகப். ஆணுக்கா பஞ்சம்? எல்லா ஆண்களும் ஒரே மாதிரியாகவா இருப்பார்கள்?" சம்பாவின் குரல் தைரியமிழந்து, தீனமாக ஒலித்தது.

"எல்லா ஆண் பிள்ளைகளும் ஒரேமாதிரிதான்! உங்களுக்குப் பீடா தயார் பண்ணுகிறேனே"—கம்ருன்.

"வேண்டாம் கம்ருன்! நான் கிளம்புகிறேன்." சம்பா குடையை விரித்தாள். ஒற்றையடிப் பாதை வழியாகச் சென்று, மரங்களிடையே மறைந்தாள்.

கம்ருன் விசனத்துடன் சம்பாவைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

“இந்தப் பெண்கள் நிலைமையைப் புரிந்து கொள்ளவே மாட்டேங் கறாங்களே!” அவள், பக்கத்தில் வந்த ராம் அவதாரின் மனைவி ராம் தையாவிடம் குறைபட்டுக் கொண்டாள்.

“பெண்களுக்குத் தைரியம் போதாது, பயப்படுறாங்க. கொஞ்சம் இங்கிலீஷ் படிச்சுட்டதனாலே, உலகமே தெரிஞ்சுட்ட மாதிரி நினைப்பு. துணிச்சல் இல்லாத பெண்கள்!” ராம் தையா தலை யசைத்து விமரிசித்தாள்.

# 34

தலயத் தம்பூராவை எடுத்துகொண்டு தாழ்வாரத்துக்கு வந்தாள். ‘அப்கே ஸாவன் கர் ஆஜா....’ என்று பாடத் தொடங்கினாள். குரல் எழும்பவில்லை. அறைக்குள் தஹ்மீனா ரவிக்கை தைத்துக் கொண் டிருந்தாள். மழை நின்றிருந்ததால் புழுங்கியது. தலயத் அறைக்குள் வந்தாள். தஹ்மீனா ஓர் அதிசயத்தைப் பார்ப்பதைப்போல் ஏறிட்டுப் பார்த்தாள். மின்விசிறி கரகரத்துக்கொண்டு சுழன்றது. வெளியே மரத்தின் மேல் ஒரு குயில் தொடர்ந்து கூவிக்கொண்டிருந்தது. தொலைவில் தோட்டக்காரனின் குரல் கேட்டது. தலயத்திற்குத் தன்னம்பிக்கை பிறந்தது.

“அப்பி! இதெல்லாம் உணர்ச்சிமயமான சமாசாரங்கள்— பரிவு, பிணைப்பு எல்லாம்.” பெரிய தத்துவவாதிபோல் பேசத் தொடங்கினாள். கௌதமனுடன் பழகிப் பழகி இப்படிப் பேசுவதில் பெருமை கண்டாள்; நம்பினாள்.

“நீயும் ஞானோபதேசம் புரியத் தொடங்கி விட்டாயா?” தஹ்மீனா சலிப்புடன் கேட்டாள்.

துணுக்குற்ற தலயத், “அப்பி! இது உண்மை. பிரச்சினைகளுக்கு முக்கோணப்போக்கு ஏற்பட்டு விடுகிறது. உன் பிரச்சினை, ஷபயா சாகப் பிரச்சினை, சம்பாபாஜியின் பிரச்சினை—இவற்றுக்கிடையே பரஸ்பரச் செயலூக்கம்-இண்டர் ஆக்ஷன்.. அதாவது.”

தஹ்மீனா அவளை வெறித்துப் பார்த்தாள்: “நீ கேம்பிரிட்ஜ் போகப் போகிறாயில்லையா?” என்று கேட்டாள். தலயத்துக்கு மட்டம் தட்டினாற் போலாகிவிட்டது. அப்பி தன்னை முட்டாளாக மதிக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டாள்.

“உங்களுக்கு எதிரில் நான் படு மக்குதான்.” தலயத் குரலில் வேதனை.

“இல்லை; நீ மகா புத்திசாலி; ஆனால் பெண்ணாகவும்

இருக்கிறவள்."

"அப்பி! நீ படுமோசம். இவ்வளவு பிற்போக்காகவா இருப்பாய்! நீ படித்துத் தேர்ந்ததெல்லாம் கழுதையாகவா?" உரக்கக் கத்தி விட்டாள். பிறகு, "நீ இயக்கத்தில் தீவிரப்பங்கு கொண்டிருந்தவள். கூட்டத்தில் எப்படியெல்லாம் ஆவேசமாய் பேசியிருக்கிறாய். சம்பா பாஜி போன்ற ரியாக்ஷனரியைக்கூட நீ படிப்பாளியாக்க முயற்சித் தாய். இப்போது 'பெண்' என்கிற சீட்டை ஒட்டிக்கொண்டு திருப்தி காண்கிறாய்! ச்சை! போராடு! செயல்புரி! பையா சாகப் போனால் என்னவாம்? போகட்டுமே! கோழி கூவாவிட்டால் பொழுது புலராதோ? அவரை மணந்துகொள்ள விருப்பமுமில்லை, இப்போது அவர் போனதற்காக வருந்தி அழவும் வேண்டியிருக்கிறது—இது என்ன புதிரோ? புரியவில்லை. பையா சாகப் எங்காவது தொலைந்து போகட்டும். அவர் புத்தியையும் நீதான் குளறுபடியாக்கி வைத்தாய். நிர்மலா சரியாகத்தான் சொன்னாள்: ஆண்களை இவ்வளவு உயர்த்தி வைக்கலாகாது; வைத்தால் அவர்கள் மூளை கெட்டுப் போகும். ஆறுவருடகாலம், உனக்கெதிரேயே சம்பாபாஜியைக் குலாவிக்கொண் டிருந்தார். இப்போது நல்லவருக்கு அடையாளமாகச் சொல்லாமல் கொள்ளாமல் போய்விட்டார்! இங்கே நீ மருகி மருகி அழுது கொண்டிருக்கிறாய். அந்த மனிதனைச் செருப்பாலேயே அடிக்கணும்!"

"தலயத்! உனக்கு பெரிய அண்ணன் அவர். மரியாதைகெட்ட தனமாகப் பேசாதே!"

"நீ அவருக்காகக் கரிசனப்பட்டுப் பரிந்து பேசு; இது ஒன்றுதான் குறைச்சல்." தலயத்துக்கு வேதனை அழுகையாக வெடிக்கும்போல் இருந்தது. பையா சாகப்பைவிட அப்பியிடம்தான் அவளுக்கு இப்போது கோபம் கோபமாக வந்தது. வயதிலே தஹ்மீனா மூத்தவளாக மட்டும் இராதிருந்தால், ஏசுகிற ஏச்சில் எல்லா நன்றியும் பரிவும், பிற்போக்கு மோகமும் பறந்து போயிருக்கும். தலயத் எழுந்து வெளியே போய்விட்டாள். சைக்கிளில் நிர்மலா வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். டிபன் சாப்பிட்டாள்; பிறகு நிர்மலா, மாலதி, ஹரிசங்கர் மூவருடனும் உட்கார்ந்து துருப்பாட்டம் ஆடினாள். பிறகுதான் அவள் கோபம் தணிந்தது.

தலயத் போனதும் தஹ்மீனா தையல் மிஷினிலிருந்து எழுந்தாள். ஜன்னல் எதிரே வந்து நின்றாள். 'முதல் காட்சி முடிவடைந்தது'. தனக்குள் சொல்லிக்கொண்டாள். காற்றில் சூறாவளி வேகம், குல் ஃபிஷான் மாளிகையின் அடித்தளங்கள் ஆட்டங்கண்டுவிட்டன. எங்கள் எல்லாருக்குமே தனிப்பட்ட புயல்கள் வீசிக்கொண்டிருந்தன. இவர்களை வைத்து நாடகமெழுதினால், என்னுடைய பாத்திரச்

சித்திரிப்பின் குறிப்பு இப்படியிருக்கும்:

"நவாப் குலப்பெண், தஹ்மீனா பேகம், வயது இருபத்தைந்து; எம்.ஏ முதல் வகுப்பு, மாநிறம், மெல்லிய மேனி, உணர்ச்சிவசப் பட்டவள்; உள்ளூர துக்கத்தைச் சகித்துக் கொண்டிருப்பவள்; வீட்டில் அப்பி என்று அழைக்கப்படுபவள்; எளிமையாகப் பழகுபவள்; மென்மையான இயல்பு; கர்வி?"— இவ்வளவு போதாதா?

தஹ்மீனா வராந்தாவுக்கு வந்தாள். மழை நின்றிருந்தது. வெளித் திண்ணையில் உறவுக்காரப் பிள்ளைகள் உட்கார்ந்திருந்தார்கள். எதிரே ஓடிப் பிடிக்கும் விளையாட்டு நடந்து கொண்டிருந்தது. கமால் அங்கிருந்து எட்டிப் பார்த்தான். தஹ்மீனா ஜன்னல் வழியாக அவனைப் பார்த்தாள். இவர்களும் நாடக பாத்திரங்கள்தான். கனவில் நடமாடி வந்தார்கள்; அரங்கில் இலேசான இருள். தஹ்மீனா வெளியே வந்தாள்.

கமால் குழந்தைகளுடன் ஓடி விளையாடிக் கொண்டிருந்தான். "ஹலோ! அப்பி!" முகமன் கூறிவிட்டு விளையாட்டில் முனைந் திருந்தான். நடுவே தகவல் தெரிவித்தான்: "சம்பாபாஜி புறப்படு கிறார்கள்..."

"என்ன ஆயிற்று? எங்கே?"

"பிரான்ஸ்!" கமால் ஓடிக்கொண்டே ஒரு சிறுமியைத் துண்டால் தட்டினான். அவள் கலகலவென்று சிரித்தாள். எழுந்து அவனைத் துரத்திப் பிடிக்க ஓடினாள்.

"எப்படிப் போகிறாள்?" தஹ்மீனா கத்தினாள்.

"யூனிவர்ஸிட்டி ஸ்காலர்ஷிப் கிடைத்திருக்கிறது." குழந்தை களுடன் விளையாடிக்கொண்டே வெளியே போனான். சாலையில் நின்று குல்ஃபிஷான் மாளிகையை ஒருமுறை பார்த்துவிட்டு, சிங்காடேவாலீ மாளிகைக்குச் சென்றான்.

ஆகஸ்டு மாதம், பலத்த மழை. வானமும் நிலமும் இரண்டறக் கலப்பதுபோல் வெள்ளக்காடு. சிங்காடேவாலீ மாளிகையில் ஓலைத் தடுக்கில் அமர்ந்துகொண்டு வானத்தில் கருமுகில்களின் போர்க் கோலத்தைக் கண்டு கொண்டிருந்தார்கள். சுகமான சூழ்நிலையைக் கண்டதும், தலயத் மறுபடியும் தம்பூராவை மீட்டத் தொடங்கினாள். மல்ஹார் ராகம் விரிந்தது. குரல்தான் எங்கோ மூழ்கிக் கிடந்தது.

மழைநீர் தூயதாக இருந்தது. ஆவணி மாதத்து இருள் மூட்டம் குருதி கலந்தாற்போல் பரவியிருந்தது. இதனால் மேகம், நீர்த்தாரை, சேறு எல்லாமே குருதி படிந்தாற்போல் இருந்தன. இதைக்கண்டு தலயத் நிலை குலைந்தாள். கோமதி நதியும் குருதிப்புனலாக வழிந்தது. மனிதர்களின் விழிகளிலிருந்து கூட ரத்தம் வடிந்தது.

தலயத் அதிர்ந்துபோய் நிர்மலாவையும் ஹரிசங்கரையும் பார்த்தாள்.

# 35

ஒரே குடும்பத்துப் பிள்ளைகளிடையே சண்டை—அண்ணன்-தம்பி சண்டை போர்க்கோலம் பூணத்தொடங்கியதும், அர்ஜுனன் காண்டீபத்தைக் கையிலெடுத்து, கண்ணபிரானிடம் சொன்னான்: "ஜனார்த்தனா! என் ரதத்தை இரு படைகளுக்கும் இடையில் கொண்டுபோய் நிறுத்து. எந்தப் பக்கம் சார்ந்து, எந்தப் பக்கத்தைத் தாக்கிப் போராட வேண்டுமென்பதைப் பார்த்துக்கொள்கிறேன்."

ஸ்ரீ கிருஷ்ண பகவான் ரதத்தை இரு சேனைகளுக்கும் நடுவே கொண்டு வந்து நிறுத்தினார். அர்ஜுனன் பார்த்தான்: இரு படையணிகளிலும் தம் மூதாதையர், உற்றார் உறவினர்கள், சகோதரர், குருமார்கள், தோழர்கள்தாம் எதிர் எதிரே நின்று கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்கிடையே போர்! அப்போது குந்திதேவியின் புதல்வன் அர்ஜுனன் துயரத்துடன் சொன்னான்: "ஹே கிருஷ்ணா! இந்தக் கோலத்தைக் கண்டதும் என் கை கால்கள் தளர்ந்து சோர்ந்து விட்டன. நெஞ்சு வறண்டு விட்டது. என் உடம்பு நடுங்குகிறது. தலைமயிர்கள் பீதியால் குத்திட்டு நிற்கின்றன. ஹே கேசவா! என்னால் நிமிர்ந்து நிற்கக்கூட முடியவில்லை. என் மூளை குழம்புகிறதே. தீய சகுனங்கள் தென்படுகின்றன. மாதவா! நான் என் சொந்தக் குடும்பத்தினரை, என் நண்பர்களை, குருமார்களைக் கொல்ல விரும்பவில்லை.

"ஏனென்றால், குடும்பம் அழிந்தால் பழைய மரபுகள் குலைந்து போகும். ஆன்மீகப் பரம்பரை அழிந்தால் குடும்பமே நசியும். பெண்களின் ஒழுக்கம் கெடும்; நற்பண்பு, நன்னடத்தை குலைந்து போகும். பெரியோர்களின் கௌரவம் அழிந்துபோகும். பெரியோர்களை மதித்துப் பின்பற்றுபவர்கள் அரிதாகி விடுவார்கள்.

"மதுசூதனா! இருவரில் யார் தலை சிறந்தவர் என்பது எனக்குத் தெரியாது—நாங்களா? எதிரிகளா? நாங்கள் அவர்களைத் தோற்கடிக்கவேண்டுமா? அல்லது அவர்கள் எங்களைத் தோற்கடிக்க வேண்டுமா? ஒன்றுமே புரியவில்லையே கோவிந்தா...!"

# 36

இந்துஸ்தானம் - கி.பி. 1947

# 37

சிரில் டேரிக் எட்வின் ஹாவர்ட் ஐஷ்லே கடிகாரத்தைப் பார்த்தான். பிகெட்லி ட்யூப் ஸ்டேஷனில் உலகுக்கெல்லாம் நேரம் காட்டும் பெரிய கடிகாரத்திற்குக் கீழே உலாவத் தொடங்கிவிட்டான். அவனுக்கு இப்போதொரு குழப்பம். இப்படிச் சந்திப்பது அவனுக்குப் பிடிக்காததுதான். அவன் சம்பா அகமத்திற்கு வாக்குக் கொடுத்து விட்டான் இன்றைக்குத் தியேட்டருக்கு அழைத்துப் போகிறேனென்று. வாக்கைக் காப்பாற்ற வேண்டியது மிக அவசியம். சலிப்பு மேலிடவே, மறுபடியும் நியூ ஸ்டேட்ஸ்மென் அண்ட் நேஷன் பத்திரிகையை மறுபடியும் புரட்டத் தொடங்கினான். அதில் கௌதம நீலாம்பரன் பெயரில் ஓர் கடிதம் பிரசுரமாகியிருந்தது. இந்தியாவின் பிரிவினை, உலகப்போர், அமைதி - சமாதானம் பற்றி எழுதப்பட்டிருந்த கடிதம். அதைப்படித்ததுமே அவனுக்குப் பரபரப்பு; உடனே சுரேகா அஹூஜா வீட்டுக்குச் சென்று இது பற்றி நண்பர்களுடன் விவாதிக்க வேண்டும். இப்போது இப்படியொரு கமிட்மென்டு இருந்து தொலைக்கிறதே! சிரில் இரண்டாம் லார்டு பார்ன்ஃபீல்டின் இளைய மகன். இவனுடைய பாட்டனார், முதல் லார்டு சிரில் டேரிக் எட்வின் ஐஷ்லேதான். இந்த 'அரிஸ்டோகிரட்'(பிரபுக்கள்) குலத்தைத் தோற்று வித்தார். சிரில்லின் முப்பாட்டனார் சர் சிரில் ஐஷ்லே ஏழைப்பாதிரி யாரின் பிள்ளை; பதினெட்டாம் நூற்றாண்டில் குமாஸ்தாவாக வங்காளத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கு கிழக்கிந்தியக் கம்பெனியில் அதிகாரியாகி, உயர்ந்து, அவுரி வியாபாரத்தில் புகுந்து லட்ச லட்சமாகச் சம்பாதித்து விட்டார். அவத் பாதுஷாவின் தர்பாரிலும் அவருக்குப் பலத்த செல்வாக்கு இருந்ததாம். இறப்பதற்கு முன்பு, ஏதோவொரு மாகாணத்தின் பிரதம நீதிபதியாக விளங்கினாராம். அவருடைய ஒரு புதல்வன் வாலிபனானதும் இங்கிலாந்தில் ரப்பர் வியாபாரத்தைத் தொடங்கினார்; அமோகமாக சம்பாதித்தார். கிராமம், மாளிகை எல்லாம் வாங்கினார். 'லார்டு' பட்டம் பெற்றார். பார்லிமெண்டில் அங்கத்தினரானார். இப்படியாக முறையாகப் பிரபுக்கள் குழாத்தில் சேர்ந்து கொண்டார். இவர்தான் முதலாம் லார்டு பார்ன்ஃபீல்டு. இவருடைய புதல்வர் இரண்டாம் லார்டு பார்ன்ஃபீல்டு மேலும் மதிப்புமிக்க பிரபு மகனாராகத் திகழ்ந்தார். அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் அயல் நாட்டிலாக்காவில் அதிகாரி யாகப் பதவி ஏற்று அரிய-பெரிய செயல்களைப் புரிந்து புகழ் ஈட்டியவர். துருக்கியர்களையும் ஆட்கானியர்களையும் ஒறுத்து ஒடுக்கி வைத்தார். இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்திற்கு எதிராகப் பார்லிமெண்டில் சட்டங்கள் கொண்டுவந்து தேற வைத்தார்.

உண்மையான 'டோரி'க்காரராக கறுப்பர்களை—குறிப்பாக இந்தியர் களை மனப்பூர்வமாக வெறுத்தார். அவருடைய பாட்டனார் 'நவாப்' சிரில் ஐஷ்லே உண்மையிலேயே பெரிய உல்லாசப் பிரியர். கோழிச்சண்டையில் அவருக்கு ஆர்வும் அதிகம். ஹுக்கா பிடிப்பார். ராயல் அகாடமியைச் சேர்ந்த பிரபல ஓவியர் ஜோஃபானி அவர் உருவைத் தீட்டித் தந்தார். சித்திரத்தில் பெரிய தூண்கள் கொண்ட மண்டபத்தில், சுகாசனத்தில் வீற்றிருந்து ஹுக்கா குடித்துக் கொண்டிருக்கிறார்; கருநாகம் போன்ற சுதேசி வேலையாள் மயிலிறகு விசிறி வீசிக்கொண்டிருக்கிறான். இந்தச் சித்திரம் 'மனோரே'வின் நடுக்கூடத்தில் இருந்தது.

இரண்டாம் லார்டு பார்ன்ஃபீல்டு இரண்டாவது உலகப் பெரும் போரில் ஜெர்மானியரின் குண்டு வீச்சுக்கு இலக்காகி விட்டார். அவருக்கு இரு புதல்வர்கள். மூத்த பிள்ளை மூன்றாம் லார்டு பார்ன்ஃபீல்ட்; இப்போது குடும்பச் சொத்து, வியாபாரம், பெருமை எல்லாவற்றிற்கும் வாரிசுதாரர். சிரில் இரண்டாவது பிள்ளை.

பார்ன்ஃபீல்ட் குடும்பத்தாரின் அதிர்ஷ்டம் இப்போது மக்கி மடியத் தொடங்கிவிட்டது. மலேயாவில் அவர்களுடைய ரப்பர்த் தோட்டங்களில் கம்யூனிஸ்டு கொரில்லாக்கள் பதுங்கியிருக்கிறார்கள். கினியாவில் மாவோவின் உபத்திரவம் அதிகமாகிவிட்டது. இந்தியா வுக்கு சுதந்திரம் கிடைத்து விட்டது. ஆக, சொத்தெல்லாம் போய் விட்டது. இப்போது ஞாயிற்றுக் கிழமைகளில் பரம்பரை மாளிகை 'பார்ன்ஃபீல்ட் ஹால்' உல்லாசப் பயணிகள் பணம் கொடுத்து சுற்றிப் பார்க்கும் காட்சிப் பொருளாகிவிட்டது. மாளிகையில் விலை மதிப்புள்ள பழைய பொருள்கள் ஏராளமாக இருந்தன. நான்கு பக்கங்களிலும் நூற்றுக்கணக்கான ஏக்கர் பரப்புக்குப் பூங்கா அமைந்திருந்தது. இப்போதைய லார்டு பார்ன்ஃபீல்டு அவர்களை வியாபாரம், விளைநிலம், தோட்டம், வருமானம் ஆகியவைகளில் எழுந்த சங்கடங்களும், பணக்கஷ்டமும் சேர்ந்து வயதுக்கு மீறிய மூப்பை முன்னதாகவே ஏற்படுத்திவிட்டன.

ஆனால், இளைய மகன் சிரில் இந்தப் பௌதிகச் சங்கடங்களை யெல்லாம் பொருட்படுத்தாமல் கேம்பிரிட்ஜில் தத்துவம்-வேதாந்தம் படித்துக் கொண்டிருந்தான். இளைய மகன்; சொத்துரிமை கொண்டாட முடியாது; தன் தேவைகளைத் தானே சம்பாதித்துக் கொள்ள வேண்டும். இன்னொரு சிக்கல், ரோஸ்மேரியை மணந்து கொண்டது. அது முதல் மூத்தவர் தம்பியுடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்டு விட்டார். அவர் லேடி சிந்தியாவை மணந்து கொள்ளத் தூண்டினார். அந்தக் கலியாணம் நிகழ்ந்தால் அரச குடும்பத்தார்கள், லார்டுகள், யாவரும் பங்கு கொள்வார்கள். சிரில்

ஒரு ட்யூக்கின் மருமகனாக விளங்குவான். இங்கிலாந்தில் அரிஸ்ட் டோக்ரஸி வட்டாரத்தில் எஞ்சிய சில பிரமுகர்கள் ஒருவருக் கொருவர் உறவு கொண்டு வாழவே விரும்பினார்கள். அது இந்தச் சோதனைக் காலத்தில் அவசியமானதுங்கூட. ஆனால் இந்தக் கிறுக்குப் பிள்ளை சிரில் எல்லாவற்றையும் குட்டிச்சுவராக்கி விட்டானே. முதலில் நினைத்தார், பயல் கம்யூனிஸ்டாகி விட்டான் என்று. ஆனால் அந்தச் சந்தேகம் பொய்த்தது. அவனுடைய மனைவி ரோஸ்மேரி நடுத்தர வர்க்கத்துப் பெண். ஆர்ட்டிஸ்டுகள் அளித்த ஒரு விருந்தில் இருவரும் சந்தித்தார்கள். அங்கு ஆர்ட்டிஸ்டுகள் இரவு கண் விழித்து விழாக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். ரோஸ்மேரியும் ஒரு ஆர்ட்டிஸ்ட் - பொம்மைகள், படிமங்கள் செய்பவள். தேர்ந்த கைவினைக்காரியுமில்லை. இதனாலேயே சிரில்லுக்கு அவள் மிகவும் பிடித்திருந்தாள். எல்லாவகையிலும் தேர்ந்த பூரணக் கலைவாணி மிக அபூர்வம். இவளிடத்தில் முழுமையைக் கொணருவது மிகவும் அவசியம் என்று நினைத்தான் சிரில். அதனாலேயே அவளை மணந்து கொண்டான்; லண்டனி லிருந்து தன் அண்ணனுக்கும் ஃபோன் செய்தான். ரோஸ்மேரி ஊர் பெயர் தெரியாத அநாமதேயம், ஏழை; போதாக்குறைக்கு ரோமன் கத்தோலிக். லார்ட் பார்ன்ஃபீல்ட் கொதித்தெழுந்தார். சிரில் எதையும் லட்சியம் செய்யவில்லை. அவன் தன் போக்கில் ஹெகல், காண்ட் ஆகிய தத்துவதர்சிகளை ஆராய்ந்து கொண்டிருந்தான். சிரில் கேம்பிரிட்ஜில் படித்து வந்தான். அவன் மனைவி ஸ்டை போர்ட்ஷயர் சர்க்கரை ஆலையில் பணிபுரியலானாள். சிரில்லுக்குச் சில சமயம் விரலில் திருமண மோதிரம் மின்னுவதைக் கண்டு வியப்பாக இருக்கும். அப்போது அவனுக்கு சட்டென்று தான் திருமணமானவன் என்பது நினைவு வரும். தொடர்ந்து, தனக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; அவள் மிகவும் அன்பான பெண் என்பதும் நினைவு வரும்.

மாதத்தில் ஓரிரு தடவைகள் மனைவி ரோஸ்மேரியை அவன் சந்தித்துக் கொள்வதுண்டு.

ஒருநாள் சில நண்பர்களுடன் தன் குடும்பத்து மாளிகை 'ஸ்டெட்லி ஹோம்' பார்க்க, ஒரு ஷில்லிங் கொடுத்து டிக்கெட் வாங்கிக்கொண்டு போனபோது, சிரில்லுக்கு பெருமகிழ்ச்சி ஏற்பட்டது. அவன் அண்ணனும் அண்ணியும் பிரான்ஸ் தென்பகுதிக்குப் போயிருந்தார்கள். வீட்டுப்பராமரிப்பு அலுவலர்கள் மாளிகையைச் சுற்றிக் காண்பித்துக் கொண்டு வந்தார்கள. அவர்கள் புதியவர்கள். யாருமே சிரில்லை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. மாளிகை யெங்கும் சுற்றிப் பார்த்தான். இங்கு தான் பிறந்தது எவ்வளவு விசித்திரமான நிகழ்ச்சி என்று சிந்திக்கலானான். அந்த மாளிகை

அப்பேட்டையின் கோடியில் இருந்தது. ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு நிர்மாணிக்கப்பட்ட புராதன மாளிகை. தோட்டத்தில் நீர்த்தொட்டிகள் இருந்தன. மலர் மண்டபம் இருந்தது. இத்தாலிய சலவைக்கல் சிற்பங்கள் மலர்க்குவியலுக்கிடையில் காட்சி தந்தன. ஒரு காலத்தில் இந்தத் தோட்டத்தில் சிரில் ட்வீட் சூட் அணிந்து உலா வந்திருக்கிறான். மாளிகையின் மேற்குப் பகுதிக்குப் போவான். அங்கு பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த இரு சன்னியாசிகளின் சடலங்கள் அடக்கம் செய்யப்பட்ட சமாதிகள் இருந்தன. பல புதை குழிகள் வெற்றிடமாகக் கிடந்தன; மழைநீர் தேங்கியிருந்தது. இந்தக் குழிகள், சமாதிகளுக்குருகில் மணிக்கணக்காக அமர்ந்து சிரில் பிறப்பு-இறப்பு குறித்துத் தீவிரமாகச் சிந்தித்திருக்கிறான்.

வெளியார்களுக்கு இந்த மாளிகையின் ஒவ்வோர் இடமும் வரலாற்றுச் சிறப்புக் கொண்டது. சிரில்லுக்கு அப்படியில்லை. அவனுக்கு எதுவும் தனிச்சிறப்புள்ளதாகத் தோன்றவில்லை. சீமான்களின் இந்தப் பிரபுக்கள் வர்க்கம் இத்தகைய ஆடம்பரத்தை வளர்த்து வைத்திருப்பதைக் கேலிக்கூத்தாகக் கருதினான். தன் கொள்ளுப்பாட்டன் 'நவாப்' சிரில் ஹாவர்ட் ஐஷ்லேயின் சுய வாழ்விலும் எந்தச் சிறப்பையும் அவன் காணவில்லை. எத்தனை இந்தியர்களைச் சீர்குலைத்து, சுரண்டி இவ்வளவு செல்வத்தையும் சேமித்தாரோ! தன் மாளிகையிலேயே புதிய காட்சியாளன்போல் அவன் நுழைந்து பார்த்தபோது, அவனுக்குப் பூர்வ சாந்தியும் சந்தோஷமும் ஏற்பட்டன. மற்ற நவீன அறிவாளிகளைப்போல் தானும் ரோமன் கத்தோலிக்காகி விடக்கூடாதே என்று அஞ்சினான். எந்தச் சிந்தனைத் தளையிலும் சிக்கித் தடுமாறுவதை விடச் சுதந் திரமாக இருப்பதையே அவன் விரும்பினான். பௌதிகவாதிகளின் சுதந்திரத்திற்கு திட்ப நுட்பமாகப் பொருள் விளக்கம் சூட்டப்படுகிறது. இந்த நிலைக்கு வந்ததும், உபநிடதங்களின் மறைபொருள்கள் கூட விளங்கி விடுகின்றன.

சிரில் ஐஷ்லே சரியான பொருளில் நவீன மனிதன். இந்தக் காலத்திற்கு உரித்தான எல்லா மானசீகக் குழப்பங்களுக்கும், ஆன்மீக வழியில் அதிருப்திக்கும் உணர்ச்சிவசமான கவலைகளுக்கும் ஐயப் பாடுகளுக்கும் இரையானவன். 'ரோரிங் ட்வெண்டீஸ்' (Roaring Twenties) காலத்தில் அவனுடைய இளமைப்பருவம் கழிந்தது. 1930-39க்கிடையில் அவன் தன்னுணர்வு பெற்றான். லண்டனில் அவனிருந்த டவுன் ஹவுஸில் அடிக்கடி கலைஞர்கள் கூடுவது வழக்கம். கலைஞர்கள் அவனுடைய சிறிய தாயார் லேடி ஏலனைச் சந்திக்க வருவார்கள். இவள் இந்தப் பரம்பரைப் பித்தான பழமைவாதிக் குடும்பத்தில் வந்து வாழ்க்கைப்பட்டவளானாலும், சகல புதிய - புதுமை இயக்கங்களை ஆதரிப்பவள். இது மிக விசித்திரமான யுகம்.

அன்றாடக் கூலிக்காரர்கள்—இடதுசாரிகள் செல்வாக்குப் பெறும் யுகம். ப்ளூம்சரிக்காரர்கள் ஃபாஸிஸ்ட் விரோதிகள். ஓடன், டே-லூயிஸ், ஸ்பெண்டர் முற்போக்குவாதிகளின் ஆசான்களக ஆனார்கள். கிரிஸ்டோஃப்ரவுட், ஸெட்ரிக், மாரிஸ், பென் நிகல்ஸன் ஆகியோரின் ஓவியங்கள் செல்வாக்குப் பெற்றுள்ள காலம் இது. கலை, இலக்கியம், நாடகம், இசை, பாலே, உள் ஒப்பனை (இன்டீரியர் டெகரேஷன்)—ஒவ்வொரு துறையிலும் புதுமை இயக்கம் தலை தூக்கியது. சிரில் வென்சஸ்டரிலிருந்து கேம்பிரிட்ஜ் அனுப்பப்பட்டான். '(நான் ஈடன் போனதில்லை: வென்சஸ்டரும் ஈடனைப்போலவே பயங்கரமானதுதான்'). அங்கு சிரில் சிட்னி ஸக்ஸெஸ் காலேஜில் சேர்க்கப்பட்டான். பிறகு தொடர்ந்து மனமகிழ் பொழுதுபோக்கு, மானசிக ஒழுக்கச்சிதைவு, கற்பனை சஞ்சாரம் எல்லாம் ஆரம்ப மாயின. இதற்குள் உலகப் போர் மூண்டது. சிரில் ராணுவத்தில் சேர்ந்தான். போர் விமான ஓட்டியாகி, பல அழகிய ஜெர்மன் நகர்களைக் குண்டுகள் பொழிந்து நாசமாக்கினான். அப்போதுதான் அவன் இந்தியத் தத்துவவாதியாக, கவியாக, இசைக்கலைஞனாக உருவானான்.

போர்க்காலத் தொண்டிற்குப் பிறகு சிரில் கல்லூரிக்குத் திரும்பி வந்தான். போருக்குப் பிற்காலத்திய உலகம். நேற்றைய பகைவர் இன்றைய நண்பர்; முந்திய தோழர் இன்று விரோதிகள். ஆசியாவின் நிலையே மாறிவிட்டது. அமைதிக்கான பிரச்சாரம் அதிகரித்தது. மூன்றாவது உலகப் பெரும்போருக்கான ஆயத்தங்கள் நடக்கின்றன. முன்பு முற்போக்காக இருந்த நாடு இப்போது பிற்போக்காக மாறியிருக்கிறது. எந்தக் கோட்பாட்டிலும் உறுதி நிலை இல்லை. காலம் போலியாக இயங்கியது. எல்லா நேரமும் உண்மைக்குப் புறம்பானதுதான். கேம் நதிக்கரையில் நடந்து கொண்டே சிரில் சிந்தித்தான். இப்போது முன்போலவே மானசீகக் கருத்துச் சிதைவும் கலக்கமும் தொடரத் தொடங்கியது. போரின் கொடுமைகளையும், மனிதர்களின் தில்லுமுல்லுகளையும் பார்க்கும்போது சிரில்லுக்கு மனக்கசப்பு அதிகரித்தது. மைக்கேல், டேனிஸ் இருவரும் அவனுக்கு நண்பர்கள். மைக்கேல் யூதன்; டேனிஸ் மைக்கேலைப் போல் நடுத்தர வர்க்கத்தவன்; கவிதை புனையும் பித்துக்கொண்டவன். இவர்களைத் தவிர சிரில்லின் நண்பர் குழாமில் கறுப்பரும் வெள்ளையருமாகப் பல மாணவ-மாணவிகள் இருந்தார்கள். சிரில்லை சொந்த நாட்டுப் பெண்கள் அவ்வளவாகக் கவர்வதில்லை. காரணம், அவர்கள் எல்லாருமே ஒரே மாதிரியாக இருக்கிறார்கள். இரண்டாம் உலகப் போருக்குப் பின் உலகமே 'சர்வதேசத் தோழமை', 'உலக சகோதரத் துவம்', 'கலாசாரப் பரிவர்த்தனை' (இவை யாவுமே பகட்டான மோசடிகளே) என்று பிரச்சாரம் செய்யும் யுகத்தில் பிரவேசித்துக்

கொண்டிருந்தது. எங்கெங்கிருந்தெல்லாமோ-உலகின் மூலை முடுக்கு களிலிருந்து பெண்கள் படிப்புக்காக இங்கிலாந்துக்கு வரலானார்கள்- கறுப்புப் பெண்கள், தூரக்கிழக்குப் பிரதேசத்து மஞ்சள் வண்ணப் பெண்கள், நீக்ரோ பெண்கள். ரோஸ்மேரி சொந்த நாட்டுப் பெண்— வெள்ளைக்காரிதான். இருந்தாலும் அவளைச் சிரில் மணந்து கொண்டான்.

இப்போதெல்லாம் பல நாடுகளின் கலாச்சார அறிமுகங்கள் தினசரி மாலை நிகழ்ச்சிகளாகியிருக்கின்றன. பல ஆசிய நாட்டு மாணவர்கள் ஒன்றுகூடி, வெள்ளைக்கார மாணவர்களுக்குத் தம் தம் நாட்டின் கலாச்சாரப் பழமைகளைப் பிரகடனப்படுத்தப் பெரு முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். ஓரியண்டல் டான்ஸ்கள் நடைபெறுகின்றன; கவிதைகள் படிக்கப்படுகின்றன; புதுமைக் கீதங்கள் இசைக்கப்படுகின்றன. அமெரிக்காவில் இந்த நிகழ்ச்சிகள் ராக்கெட் வேகத்தில் பிரபலமாகிக் கொண்டிருப்பதைச் சிரில் அறிந்தான். விரைவிலேயே இந்த தூரக்கிழக்கு, மத்திய கிழக்குத் தமாஷாக்கள் அவனுக்குச் சலித்துவிட்டன. இப்போதெல்லாம், அவன் அறைக்குத் திரும்பியதும், எவராவது, "இன்று தாய்லாந்துக்காரர்களோ, இந்தோனேஷியாக்காரர்களோ 'கல்ச்சுரல்-ஈவினிங்' கொண்டாடு கிறார்கள்" என்று தெரிவித்தால், உடனே ஜன்னல் வழியாக வெளியே குதித்துத் தப்பி ஓடிவிடலாமா என்றே தோன்றுகிறது. இதை டேனிஸ் ஒருநாள் பெரிய ரகசியத்தைக் கண்டுபிடித்துவிட்ட மாதிரி நண்பர்களிடம் தெரிவித்தான்.

ஒருநாள், புதிய குழு ஒன்று கேம்பிரிட்ஜ் வந்தது—லக்னோவி லிருந்து வந்த இந்தியர் குழு. புதிதாக வந்த இந்தக் கறுப்பரைப் பல நாட்கள் வரைக்கும் சிரில் சந்திக்கவில்லை. இவர்கள் தீக்கனல் கக்கும் தீவிரவாதிகள் என்பது சிரில்லுக்குத் தெரியும்.

அந்தவாரக் கடைசியில் சிரில் லண்டன் போயிருந்தான். சில நண்பர்களுடன் ஓர் இடத்திற்குப் போயிருந்தான். அங்கு கலாச்சார மாலைபொழுது நிகழ்ச்சி நடைபெற்றது இந்தியர்கள் ஏற்பாடு செய்திருந்தது. சிரில்லும் நண்பர்களும் பூட்சைக் கழற்றிவிட்டு மரியாதை முறைமைக்காக மேடைக்கெதிரே தரையில் சப்பணமிட்டு அமர்ந்து கெண்டார்கள். தாகூர் ஜயந்தி கொண்டாடப்பட்டது. டேனிஸ் தியானத்தில் மூழ்கி விட்டான். குழுமியிருந்தவர்களிடையே ஆன்மீகச் சூழ்நிலை பரவியிருந்தது. சிரில் கால் சட்டைப் பிடிப்பைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். சப்பணமிட்டு உட்கார முடியவில்லை. இயல்பாகத் துறவிகளைப்போல் அமர்ந்திருக்கிற ஆங்கிலேயர்களைப் பார்த்து சலித்துக் கொண்டான். 'இவர்கள் யார்? தகிடுதத்தக்காரர்களாக இருப்பார்கள்.' சோம்பல் முறித்துக் கொண்டு சிந்தித்தான். அப்போது கொடி போன்ற பெண், அரங்கில்

தோன்றினாள். மைக்கில் ஏதோ அறிவித்தாள். சிரில்லுக்கு ஏதும் புரியவில்லை. கைதட்டல் அதிகமாக இருந்தது. அந்த ஹாலில் பெண்கள்தான் அதிகம். பலதரப்பட்ட வாலிபர்கள் குழு-கட்சி-சங்கத் தலைவர்களின் தோரணையில் அமர்ந்து, குரூப்-குரூப்பாக அளவளாவிக் கொண்டிருந்தார்கள். இந்தப் பெண்களிடத்திலும் சிரில் எந்தப் புதுமையையும் காணவில்லை. ஆனால், இவர்கள் ரோம் முதலிய நகரங்களுக்குப் போனார்களானால் நன்றாக இருக்கும்; இத்தாலியிலும் பிரான்சிலும் இவர்களுக்கு அதிக மவுசு இருக்கும் என்று எண்ணினான். வேறு ஏதும் யோசிக்கத் தோன்றவில்லை. தாகூரைப் பற்றி அவன் அதிகம் சிந்திப்பதில்லை, யோசிக்க விரும்பு வதில்லை. இப்போதெல்லாம் சிரில் கிறித்துவத்திலும், மேற்கத்திய ஐரோப்பியப் பண்பாட்டிலும் ஆர்வம் கொள்ளத் தொடங்கி யிருக்கிறான்.

இப்போது கறுப்பாடை அணிந்த பருமனான நங்கை மேடையில் தோன்றினாள். மிகக் கவர்ச்சியான குரலில் தாகூர் பாடலைப் பாடினாள். டேனிஸ் சிரில்லிடம் கேட்டான்: "இவர் யார் தெரியுமா?"

"தெரியாவிட்டால் என்ன நஷ்டம்? இந்தியக் கலாச்சார சங்கத்தில் உறுப்பினராக இருப்பார். பழம் பெருமை பேசுவார். அடாமிக் தியரியை முதல் முதலில் சங்கராச்சாரியார்தான் உலகுக்குக் காட்டினார் என்று பிரசங்கிப்பார்" சிரில் சலிப்புடன் சொன்னான்.

பெரிய ரகசியத்தைக் கூறுவதுபோல், "இவர்தான் மிஸஸ் சுஜாதா முகர்ஜி", என்றான் டேனிஸ். தொடர்ந்து, "இங்கு பத்திரிகைக் காரர்களிடம் இவருக்கு வலுவான செல்வாக்கு. நீ 'அப்ஸர்வர்' பத்திரிகையின் நிருபராக இந்தியா போக விரும்பினால் இவரைக் 'கல்டிவேட்' செய்வாயாக!"

சிரில்லுக்கு உத்தியோகப் பிரச்சினையும் இருந்தது. படிப்பு முடிந்ததும் என்ன செய்வது? பி.பி.ஸி.யில் சேரலாமா? அங்கு முன்பே அவனைப் போன்ற ஆங்கிலேய அறிவியல் நிபுணர்கள் நிரம்பியிருக்கிறார்கள். ஏதாவதொரு பிலிம் கம்பெனியில் ஸ்கிரிப்ட் ரைட்டராகப் போக ஆசைதான்; வாய்ப்புக் குறைவாயிற்றே. காரணம், பிரிட்டிஷ் படத் தயாரிப்பாளர்கள் அமெரிக்கர்களுடன் சேர்ந்து பிலிம் எடுக்கிறார்கள். இது சிரில்லுக்குப் பிடிக்கவில்லை. தூய ஆங்கிலேயன் என்ற வகையில் அமெரிக்கர்களைக் கண்டால் சிரில் லுக்கும் பிடிக்காது; உள்ளூர வெறுத்தான். சரி, கல்வித்துறைக்குப் போனாலென்ன? கல்லூரி மாணவர்களான தத்தாரிப் பயல்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க அவன் விரும்பவில்லை. காலனி ஆட்சியில் வேலைக்கு அமரலாமா? வேண்டவே வேண்டாம். அப்படியானால், பத்திரிகைத் துறைதான் அவனுக்கு ஏற்றது. அங்கேயோ பலத்த போட்டா போட்டி!

கலை நிகழ்ச்சி முடிவடைந்ததும், டேனிஸ் சுஜாதா தேவியிடம் சென்றான். அவள் 'அப்ஸர்வர்' பத்திரிகையின் சிறப்புப் பகுதி எழுத்தாளர் (காலமிஸ்ட்) பில் கிரேக்குடன் பேசிக்கொண்டிருந்தாள். "ஹலோ டேனிஸ்!" என்று முகமன் கூறி வரவேற்றாள்.

"மிஸஸ் முகர்ஜி! எங்களை உங்கள் வீட்டுக்கழைத்துச் சென்று காபி தரக்கூடாதா?"

"தாராளமாக எல்லோரும் போவோமே!"

பெரிய கூட்டம் சுஜாதா தேவியுடன் செல்ல முன் வந்தது. இவர்கள் காஜி நஸருல் இஸ்லாமின் பிறந்த தின விழாவைக் கொண்டாட ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். சிரில்லுக்கு இந்தக் கூட்டம் பிடித்திருந்தது. இவர்கள் தனி உலகம் அமைக்கப் போகிறார்கள். இவர்களுக்கென்று தனிக்குறிக்கோள், அமைப்பு, ஒழுங்கு முறைகள் இருந்தன. இவர்களுக்குள் திருமணங்கள் நிகழ்ந்தன. அதாவது, இந்த லண்டனில் தனி இந்திய லண்டன் பகுதி அமைந்தது.

"கிளம்புங்கள்! கிளம்புங்கள்!" ஒருவரையெருவர் அழைத்துக் கொண்டு கிளம்பினார்கள். ஸ்ரீமதி முகர்ஜியின் குடியிருப்பு சாய்லஸி பகுதியில், மிகப் பகட்டான மாளிகையில் இருந்தது. சிரில்லும் போனான். அவனிடம் பெண்கள் பதவிசாகப் பேசிக் கொண்டிருந் தார்கள். மனம்விட்டுப் பேசினார்கள். இவர்களில் ஒருத்தி பெயர் தலயத்; மற்றவள் நிர்மலா. மாணவர்களின் பெயர்கள் சிரில்லுக்கு நினைவில்லை. இதே ஆண்டில் கேம்பிரிட்ஜ் வந்து சேர்ந்தவர்கள் இந்த இரு பெண்களும் என்பது சிரில்லுக்குத் தெரிந்தது.

ஸ்ரீமதி முகர்ஜி மேற்கு வங்காளத்து பரீத்புரைச் சேர்ந்தவள். 'கல்ச்சர்' இவருக்கு வாழ்க்கை இலட்சியம். திருமணமானபின் கணவரோடு ஒத்துக் கொள்ளவில்லை. ஸ்ரீமதி முகர்ஜி இப்போது வருடக்கணக்காக லண்டன் வாசம் புரிந்து வருகிறார். இவர் மகன் பாரிஸ் நகரில் கலைஞனாக வாழ்ந்து கொண்டிருக்கிறான்.

சிரில் இதற்கு அடுத்த தடவை லண்டனில் ஸ்ரீமதி முகர்ஜியைச் சந்திக்கச் சென்றபோது, அவர் ஜெனிவா போயிருப்பதாகப் போர்ட்டர் தெரிவித்தான். வெளியே வந்து கொண்டிருந்தபோது, படிக்கட்டில் அறிமுகமான யுவதி தென்பட்டாள்; புன்முறுவலுடன் எதிர் கொண்டாள்: "ஹலோ!"

சிரில் நினைவு கூர்ந்தான்: இவள் அன்று தாகூர் ஜயந்தி விழாவின்போது, அரங்கில் நிகழ்ச்சி நிரலை அறிவித்தவள். சம்பாவும் நினைவு கொண்டாள். அன்று விழாவிற்குப் பிறகு டேனிஸ் 'இவர் ஒரு லார்டு மகன்' என்று சிரில்லை அறிமுகப்படுத்தினான்.

"நானும் மிஸஸ் முகர்ஜியைச் சந்திக்கத்தான் வந்தேன்"–சிரில் சொன்னான்.

"அவர் ஜெனிவா போயிருக்கிறாராமே".

"நீங்கள் இங்கேதான் படிக்கிறீர்களா?"

"இல்லை; நான் பாரிஸில் இருக்கிறேன். நீங்கள் நிர்மலா ஸ்ரீவஸ்தாவை அறிந்திருப்பீர்களே. அவள் கர்ட்டன் காலேஜில் இருக்கிறாள்."

"ஓஹோ! நான் அவரைச் சந்திக்கவில்லை."

"கமால் ரஸாவைத் தெரியுமா?"

"சுரேகாதேவி அவரைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். சந்திக்க வாய்ப்பு வரவில்லை."

பேசத் தொடங்கி பதினைந்து இருபது நிமிடங்கள் இப்படித்தான் கழியும்—அவரைத் தெரியுமா? இவரைத் தெரியுமா? என்கிற விசாரிப்பில்.

"நர்கீஸ் காவஸ்ஜியை உங்களுக்குத் தெரியுமா?"

"எனக்கு யாரையும் தெரியாது. என் நண்பன் டேனிஸுக்குத் தெரிந்திருக்கிற மாதிரி என் நண்பர்கள் கூட்டம் அவ்வளவு விரிந்ததல்ல".

சம்பா கலகலப்போடு நன்றாகச் சிரித்தாள். நடந்து சென்றார்கள். செலிஸி சுரங்கப்பாதை அணுகியது. பிரிய வேண்டிய இடம்.

"நீங்கள் கேம்பிரிட்ஜ் பக்கம் வந்தால் நான் உங்களைச் சந்திக்க ஆவலாயிருக்கிறேன்."

"குட் பை!" சம்பா புன்சிரிப்புடன் விடைகொடுத்து, விடை பெற்றுக்கொண்டு, நடையைத் துரிதப்படுத்தி, எஸ்கலேட்டரிலிருந்து இறங்கினாள். முதல் சந்திப்பு இப்படி உறவு கூட்டியது.

இப்போது அரைமணி நேரமாகச் சிரில் பிகைட்லி அண்டர் கிரவுண்டில் சம்பாவை எதிர்பார்த்து நிற்கிறான். கடந்த இரண்டு வருடங்களாகச் சம்பாவைப் பல தடவைகள் சந்தித்திருக்கிறான். இன்று சம்பா அவனுக்குத் தகவல் கொடுத்திருந்தாள்; பாரிசிலிருந்து இன்றுதான் லண்டன் வந்திருக்கிறாள். சிரில்லை வழக்கமான சந்திப்பு இடத்தில் காண்பாள்; இருவரும் சுரேகா வீட்டிற்கு சாப்பிடப் போகவேண்டும். அங்கு மற்ற நண்பர்கள் குழுமியிருப் பார்கள். சிரில் நிலை கொள்ளாமல் தவித்தான். சுரேகாவின் கணவர் குல்ஷனோடு விவாதிக்க வேண்டும். கௌதம நீலாம்பரன் எழுதிய கடிதத்தில், இந்தியா பிரிக்கப்பட்டதன் முழுப்பொறுப்பையும் பிரிட்டிஷ்காரர் மேல் சுமத்தியிருந்தான். சுரேகா சொல்லியிருந்தாள்: இந்தக் கௌதம நீலாம்பரன் கனல் கக்கும் தீவிரவாதி. அண்மையில் தான் மாஸ்கோவிலிருந்து மாற்றலாகி லண்டன் வந்திருக்கிறான்.

சிரில் சஞ்சலத்துடன் 'இண்டர் நேஷனல் டைம்' கடிகாரத் திற்குக் கீழே உலாத்திக் கொண்டிருந்தான்.

# 38

கேம்பிரிட்ஜில் ஒரு கடையிலிருந்து நிர்மலா ஃபிட்ஜ் வில்லியம் லைப்ரரிக்குப் போய்க்கொண்டிருந்தபோது கௌதம நீலாம்பரனைக் கண்டாள்.

"நிர்மல்! உன்னை ஊரெல்லாம் தேடிக் கொண்டிருக்கிறேனே." கௌதமன் உவகையுடன் அருகில் வந்தான். "நீ இந்த நேரத்தில் லைப்ரரியில் இருப்பாயென்று கமால் சொன்னான். எப்படி இருக்கிறாய்?"

நிர்மலாவுக்கு வியப்பாக இருந்தது. கண்களை மூடிக் கொண்டாள். கௌதமன் அப்போதும் எதிரே நின்று பேசிக்கொண்டிருந்தான். "நீ இங்கே எப்படி வந்தாய்?"

"உங்களைச் சந்திக்க லண்டலிருந்து வந்திருக்கிறேன்".

"ஃபாரின் சர்வீசில் இருக்கிறாயாமே?"

"சரியாகத்தான் கேள்விப்பட்டிருக்கிறாய்?"

"மகிழ்ச்சியாக இருக்கிறாயா?"

"ஓ யெஸ்!"

பேச்சு முடிந்தது. கௌதமன் நிர்மலாவை உற்றுப் பார்த்தான்! அவள் வளர்ந்திருக்கிறாள்; அளந்து பேசுகிறாள்; பெரியமனிதத் தோரணை வந்திருக்கிறது.

"லைப்ரரியைச் சுற்றிக் கொண்டிரு! கமாலும் தலயத்தும் கோஹிநூரில் காத்திருப்பார்கள். வாயேன், போகலாம்!"

நிர்மலா பேசாமல் அவனுடன் சென்றாள். பக்கத்தில் கறுப்பு கவுன் அணிந்த மாணவர் கும்பல் கடந்து சென்றது. சிரில் ஐஷ்லேயைப் பற்றி நிர்மலா கௌதமனிடம் சொல்லிக்கொண்டு வந்தாள். தீவிர வெள்ளைக்காரன்; அவனும் கொஞ்சம் குஷால் பேர்வழிதான். அவனும் சம்பா பாஜியின் சீடனாகி விட்டான்.

"அப்படியா! சம்பாவை நீங்கள் சந்தித்ததுண்டா?"

"அடிக்கடி சந்திப்போம்"

"மகிழ்ச்சியாக இருக்கிறாளா?"

"எனக்கென்ன தெரியும்? மகிழ்ச்சி என்பது உறவாடுகிற விஷயம்"

கௌதமன் மௌனியானான். கிங்ஸ் காலேஜுக்கெதிரே நடந்து வந்தார்கள். சாரல் வீசிக்கொண்டிருந்தது.

"கொஞ்ச காலத்திற்குப் பிறகு சம்பா பாஜியும் சுஜாதா முகர்ஜி மாதிரி ஆகிவிடுவாள் என்று தோன்றுகிறது. இது மிகவும் வருந்தத் தக்கது. சுஜாதா முகர்ஜியை உனக்குத் தெரியுமா?"

"தெரியும்"

"காலம் வலுவில் தாக்கிவிட்டுக் கள்ளத்தனமாக அப்பால்

போய்விடுகிறது. எவ்வளவு வருந்தத்தக்கது!"

கௌதமன் இப்போதும் பேசவில்லை.

"சுஜாதாதேவி பதினைந்து வருடங்களுக்கு முன்பு எப்படி இருந்திருப்பார்! அவருடன் இரண்டு வார்த்தை பேசமாட்டோமா என்று ஏங்கியவர்கள் ஏராளம். பேசிவிட்டால் பெருமிதப்பட்டுக் கொள்ளுவார்கள். இப்போது தன் பிள்ளை வயதுக்காரர்களைக் கூட்டிவைத்துக்கொண்டு மன மகிழ்வு காண்கிறார். அடிக்கடி காபிக்கு அழைக்கிறார். புத்தகங்கள் எழுதுகிறார். ஃப்லீட் ஸ்டிரீட்டில் அவருக்கு நல்ல செல்வாக்கு. அவருடைய வாழ்க்கைக் குறிக்கோள், சொந்த மகிழ்ச்சி இரண்டுக்கும் பதிலாக புகழ்ச்சியைத்தான் பெற்றிருக் கிறார். சம்பா பாஜியும் இப்படித்தான் ஆகி விடுவாள் போலிருக்கிறது. சம்பா பேரில் குற்றமில்லை. காலம் அப்படித் தாக்கிவிட்டது. இதற்காகப் பிறரைத் தாக்குவதில் மகிழ்வு காண்கிறாள்!"

கௌதமன் துணுக்குற்றான்; நிர்மலாவை விழி விரித்துப் பார்த்தான். அவள் கண்கள் கலங்கியிருந்தன, முகத்தைத் துடைத்துக் கொண்டு நிர்மலா சொன்னாள்: "இது சிரில்லின் மோகம். காரணம், அவன் லார்டு ஐஷ்லேயின் மகன். நீ எப்படி சர் தீபநாராயணின் புத்திர சிகாமணியோ, பையா சாகப் எப்படி சர் ஜகீரஜா பஹதூரின் வாரிசோ அதைப்போல!"

"நிர்மலா! நீ சம்பா பாஜியைத் தாழ்வுபடுத்துகிறாய். இது அநீதி!" கௌதமன் மெல்லச் சொன்னான்.

"இல்லை, கௌதமன்! இது உண்மை. சம்பா நம்பிக்கை இழந்தவள்; நம்மையும் நம்பிக்கை இழக்க வைக்கிறாள். நேற்று கமால் சொல்லிக் கொண்டிருந்தான். சம்பா பாஜியின் கவர்ச்சித் திறன் மங்கி மறைந்து கொண்டிருக்கிறதே, ஏன்? இதற்குத் தலயத் சொன்ன சரியான பதில்—சம்பா அப்படியேதான் இருக்கிறாள்; நாம் வளர்ந்து முதிர்ச்சி கண்டு விட்டோம்."

கௌதமன் கவலைக்குறியுடன் நிர்மலாவைப் பார்த்தான். அவள் பேசிக் கொண்டிருந்தாள்:

"பாரிசில் இருந்தாள். அங்குள்ள வேலையை அரை குறையாக விட்டுவிட்டு, இங்கிலாந்திற்கு வந்திருக்கிறாள். இப்போது இங்கு லண்டனில் ஏதோ வேலை கிடைத்திருக்கிறதாம். இங்கும் படிக்கத் தொடங்கப் போகிறாளாம். தன்னைக் குறித்து எந்த முடிவும் எடுக்க முடியாமல் தவிக்கிறாள். அவளுக்கு ஏதாவது ஒரு செண்டிமெண்டல் தோழமை இருந்து கொண்டிருக்க வேண்டும்; இல்லாதபோது தேடிக் கொண்டிருக்க வேண்டும்."

ஜீஸஸ் லைனிலிருந்து டிரம்பெட் இசைக்குமொலி கேட்டது. கௌதமன் திகைத்து நின்றான். "யாரது? இப்படி ஏதாவது சோக ராகம் இசைத்துக் கொண்டிருக்கிறான் அடிக்கடி!" நிர்மலா

பாதிப்பைக் காட்டிக் கொள்ளாமல் பேசினாள். கௌதமன் பாதிக்கப் பட்டிருந்தான். நிர்மலா சொன்னாள்: "பையாசாகப் (ஆமிர் ரஜா) கூட லண்டன் வந்திருக்கிறார். பாகிஸ்தான் ஹவுஸில் டிப்ளொமெட் அதனால் எங்களைச் சந்திப்பதில்லை."

இருவரும் கோஹினூர் பகுதிக்கு வந்து சேர்ந்தார்கள். ஏதோ சிந்தனையில் மூழ்கியிருந்தவள் சட்டென்று திரும்பி, "கௌதமன்! மனிதர்கள் ஏனிப்படித் துடைகாலிகளாக இருக் கிறர்கள்?"

கௌதமன் பேசவில்லை. சாலை ஓரத்தில் மஞ்சள் நிற மலர்கள் நிறைய மலர்ந்திருந்தன. மழைத் தாரைகள் ஜலதரங்கம் வாசிக்கத் தொடங்கின.

"நிர்மலா" கௌதன் நின்றான்.

"சொல்லுங்கள்"

"நீ என்னை மணந்து கொள்கிறாயா?"

"ஒருக்காலும் முடியாது"

"ஏன்? ஏன் நிர்மல்?" கௌதமனுக்கு நாக்குழறியது.

'ஏனென்றால், நீயும் துடைகாலி, தோசி! சரி, வா, உள்ளே போகலாம், மழையில் நனையாதே!"

நிர்மலா உண்மையாகவே பெரிய மனுஷியாகி விட்டாள். இருவரும் உணவு விடுதிக்குள் நுழைந்தார்கள்.

# 39

காலையில் ஆறுமணிக்கு சம்பா எழுந்தாள். இரவு இரண்டு மணி வரையிலும் சுரேகா வீட்டில் வம்பளந்து கொண்டிருந்தார்கள். சம்பாவும் இருந்தாள். எதற்காகத்தான் ஜனங்கள் நேரம் போவது தெரியாமல் பேசிக் கொண்டிருக்கிறார்களோ? குளியலறையிலிருந்து ஜோன் கார்ட்டர் தலையை நீட்டிப் பார்த்தார். "இன்று உன் உத்தி யோகத்திற்கு முதல்நாள், சீக்கிரம் கிளம்பு!" என்று நினைவூட்டினார்.

சம்பா சிற்றுண்டியை முடித்துக் கொண்டு பஸ்ஸில் உட்கார்ந்தாள்; செயிண்ட் ஜான்ஸ்வுட் வந்து சேர்ந்தாள். பில் கிரேகின் குடியிருப்புக்கு வந்து, அறிவிப்பு மணியை அழுத்தினாள். "கம் இன்!" உள்ளேயிருந்து குரல் வந்தது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். அறையில் கும்மட்டிக்கு எதிரில், ஒரு அல்சேஷியன் நாய் குளிர் காய்ந்து கொண்டிருந்தது. பில் கிரேக் சோஃபாவில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தார். சம்பாவைப் பார்த்ததும், "ஹலோ! மைடியர்! என்ன சாப்பிடுகிறாய்?' என்று

கேட்டார். "ஒன்றும் வேண்டாம், நன்றி!" என்று கூறிவிட்டு சம்பா உட்கார்ந்தாள்.

"ப்ரூஃப் திருத்தத் தெரியுமா?" பதிலுக்குக் காத்திராமல் ஒரு கட்டுப் ப்ஃரூபை பில் கிரேக் சம்பாவிடம் போட்டுவிட்டுச் சமையலறைக்குச் சென்றார். அவர் மனைவி சாந்தா காஷ்மீர் சில்க் புடவை கறுப்பு கார்டிகன் அணிந்து மாடிப்படியிலிருந்து இறங்கி வந்தாள். மிக அழகாக இருந்தாள். சுறுசுறுப்பாக டைப்ரைட்டர் எதிரே அமர்ந்தாள். தன் முன்னாள் கணவரோடு விவாகரத்து செய்து கொண்டபின், கௌதமனை மணந்து கொள்வதற்குப் பதிலாக, சாந்தா இந்தப் பில் கிரேக்கை ஏற்றுக்கொண்டாள். 'வாழ்க்கையே விசித்திரமான குளறுபடி!' சம்பா வியப்புடன் சிந்திக்கலானாள். "குட்மார்னிங், மிஸஸ் கிரேக்!" மதிப்போடு விசாரித்தாள் சம்பா.

"உன்னைப் பற்றிக் கௌதமன் வாயிலாக நிரம்பக் கேள்விப் பட்டிருக்கிறேன். இந்த உலகம் மிகச் சிறியது," டைப் செய்து கொண்டே சாந்தா சொன்னாள்.

பில் கிரேக் காபி டிரேயுடன் வந்து சேர்ந்தார். சாந்தாவிடம் அசாதாரணமான கர்வம் குடி கொண்டிருப்பதைச் சம்பா உணர்ந்தாள். பில் கிரேக் மிகச் சாந்தமான மனிதர்; பணிவு அதிகம். "ப்ரெங்க்ராஸேவுக்குக் கூட உன்னை மிகவும் பிடித்திருக்கிறது", பில் சொன்னார்.

சம்பா வியப்புடன், "யாரது பிரெங்க் ராஸே?" என்று கேட்டாள். பில் சாவதானமாக அல்சேஷியன் நாயைச் சுட்டிக் காட்டினார். பிறகு காகிதக் கட்டுகளுடன் பிரஸ் செல்ல ஆயத்தமானார். சம்பாவுக்கு பில் கிரேக்கின் பப்ளிஷிங் ஹவுஸில் ப்ரூஃப் ரீடர் உத்தியோகத்தின் முதல் நாள் அது.

"உன் வாழ்க்கைத் திட்டம் என்ன?"

லஞ்ச்சுக்காக இடை நேரம் வந்தபோது, சம்பாவிடம் சாவகாசமாகக் கேட்டார். அவர் மனிதர்களிடம் கூடப் பிழைத்திருத்தம் செய்யக்கூடிய ப்ரூஃப் ரீடர்.

"இது பெரிய சீரியஸான கேள்வி"— சம்பா.

"நீ குழப்பமடைந்திருக்கிறாயோ?"

"ஆமாம்"

"நீயும் வலையில் விழுந்து சிக்கியவள்தானோ?"

"ஆமாம்"

பில் கிரேக் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டார்; பேசவில்லை. எல்லாரும் இப்படிச் சிக்கியிருக்கிறார்கள். அவருடைய துணைவி சாந்தா முதலில் ஸ்ரீமதி சாந்தா நீலாம்பர் எனப்பட்டவள்; ஆங்கிலத்திலும் மராட்டியிலும் புதினங்கள் எழுதி வந்தாள். மற்றும், சிரில் ஐஷ்லே, ஏனைய எழுத்தாளர்கள், இலக்கிய கர்த்தாக்கள்,

சிந்தனைச் செம்மல்கள், மேலை நாட்டுக்காரர்கள், மேற்கத்திய ஐரோப்பியன் கலாசாரம், 'புதிய ஆசியா'வின் பிரதிநிதிகள். எல்லாருமே இங்கு இருந்தார்கள்—பலதரப்பட்ட நகரங்களுக் கிடையில் அந்தரத்தில் தொங்குபவர்களைப் போல். இவர்களுடைய கிறிஸ்துவ, இஸ்லாமிய, இந்து, பௌத்த ஆன்மாக்களுக்குத் துன்பங்கள் அனுபவிப்பது இன்றியமையாததாகி விட்டது. இவர்களைப்பற்றி டோயன்பி பத்துப் புத்தகங்கள் எழுதியிருக்கிறான். இருந்தும் இதுகாறும் மகிழ்ச்சி தரும் எந்த முடிவுக்கும் அவன் வரவில்லை.

புதிதாக, பாரதம் தன் ஆன்மீகச் சிறப்பையும், கலாசார மேம்பாட்டையும் காட்டி மேலை நாடுகளில் ஆக்கிரமிப்பே செய்து வருகிறது. இது பிரச்சார யுகம். பத்திரிகைகள், பிரச்சார வெளியீடுகள், கையேடுகள், அறிக்கைகள், அச்சாகி சுற்றித் திரியும் உலகம் இது—வெறும் சொற்களின் உலகம். பில் கிரேக் இத்தகைய சொற்கள்-சப்தங்களின் வியாபாரி. சொற்களின் சக்தியிலும், வெறுமையிலும் நம்பிக்கை கொண்டிருந்தார். இவர்கள் எல்லாருக்குமே தனக்கென்று சுழலும் உலகம் சிறைபோல் இருந்தது. இதிலிருந்து வெளிப்படுவது எளிதல்ல. ஒருவழி இருந்தது. அது பயங்கரமானது. சம்பாவைப் பார்த்துப் பில் கேட்டார்: "நீ கம்யூனிஸ்டாக எப்போதுமே இருந்த தில்லையா?"

சம்பா பதில் சொல்லாமல் உருளைக் கிழங்கைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். பில் அவளை ஊக்கப் படுத்தினான்.

"நீ கதைகள் எழுதேன். நான் உன்னை 'பில்ட்-அப்' செய்கிறேன். இந்தியாவைப் பற்றிய கதை-நாவல்களுக்கு இப்போது நல்ல வாய்ப்பு இருக்கிறது. ஆர்.கே.நாராயணன், முல்க்ராஜ் ஆனந்த் இல்லையா? நீயும் எழுதேன்" தீர்மானமாகச் சொன்னார்.

"எனக்கு எழுதவே வராது".

"அப்படியா! இதெப்படி வராமல் இருக்கும்? உன் குரூப்பில்தான் எல்லாருமே எழுத்தாளர்களாயிற்றே"

"நான் குரூப்காரர்களைப்போல் இல்லை."

"அப்படியானால் உனக்குள்ள ஒரு மேனியா, நீ இண்டிவிஜுவ லிஸ்ட் என்பது, இல்லையா?" பில் கேட்டார்.

அந்த இடம் பிரபல உணவு விடுதி. மிகப்பெரிய மனிதர்கள் கூட பகலுணவுக்கு இங்கு வந்து கூடுவது வழக்கம். பக்கத்திலேயே பி.பி.ஸி. ஸ்டுடியோக்கள் இருந்தன. சில இந்தியப் பெண்கள் உணவு விடுதி அறையிலிருந்து வெளியே வந்து கவுண்டர் பக்கம் போனார்கள்; சம்பா நிற்பதை அவர்கள் கவனிக்கவில்லை. ஒரு பெண் டிரேயைக் கையில் எடுத்துக்கொண்டு, உருதுவில் சொன்னாள்: "சம்பா அகமத் இருக்கிறாளே, அவளுக்குத் தொழில் பிற பெண்களின் கணவன்-காதலன்மார்களை மயக்கி வைத்துக் கொள்வதுதான். நான்

'ஸ்காண்டல் மாங்கரிங்' செய்வதாக உனக்குச் சந்தேகமிருந்தால், நிர்மலா ஸ்ரீவாஸ்தவைக் கேளேன். அவளுக்கு டி.பி. வந்துவிட்டது, பாவம்!"

"நிர்மலாவுக்கு டி.பி.யா?" மற்றொருத்தி வியப்புடன் கேட்டாள்.

"ஆமாம். அவள் லிட்ஹர்ஸ்ட் சானிடோரியத்திற்குப் போகப் போகிறாள்."

இருவரும் பேசிக்கொண்டே அப்பால் போய்விட்டார்கள். சம்பாவுக்குத் தவிப்பாக இருந்தது. அவர்களிடம் ஓடிச்சென்று "நிர்மலா எப்படி இருக்கிறாள்? அவளுக்கு எப்படி டி.பி. வந்தது?" என்று கேட்க வேண்டும்போல் இருந்தது. ஆனால் சமைந்து போய் உட்கார்ந்து விட்டாள். ஜன்னலுக்கு வெளியே பலதரப்பட்ட மக்கள் சாரிசாரியாகப் போவது தெரிந்தது. பல அறிமுகமான முகங்களும் தென்பட்டன. பல வெண்மையான மசூதிகள். அவற்றில் அவர் களுடைய பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. ஜரீனா ஹுஸேன், சுரேகா, அஹுஜா அமலாபாய், ஃபீரோஸ் ஜுபீன்... பிறகு ஆமிர் ரஜா வந்தார். சம்பா அவரைப் பல ஆண்டுகளுக்குப் பிறகு இங்கு சந்திக்கிறாள். அவரிடம் எந்த மாறுதலையும் காணோம். முந்தியதை விட அதிக விலை மதிப்புள்ள சூட் அணிந்திருக்கிறார்; முன்னைக் காட்டிலும் அதிக தன்னம்பிக்கையுடன் நடக்கிறார். அவரும் சம்பாவைப் பார்த்தார். துணுக்குற்று பிறகு சமாளித்துக் கொண்டு, பணிவன்போடு வணக்கம் செலுத்தினார். ஏதும் பேசாமல் சென்று ஒரு மூலையில் மேஜைக்கெதிரே உட்கார்ந்தார்.

சம்பா கடிகாரத்தைப் பார்த்தாள். கைப்பையை எடுத்துக் கொண்டு பில் கிரேக்குடன் அலுவலகத்திற்குச் சென்றாள்.

# 40

தலயத் கேம்பிரிட்ஜில் படிப்பை முடித்தபின், ஃப்ளீட் ஸ்டிரீட்டில் ஒரு செய்தித்தாளில் அலுவல் புரிந்து வந்தாள். ஒருநாள் மாலையில் ப்ரூஃப் காபியைக் கீழே அனுப்பிவைத்த பிறகு, அவள் விக்டோரியா பக்கம் நடந்தாள். அங்குள்ள பழைய ஆர்ட் ஸ்கூலில் புராதன சிற்பங்களைக் கண்டு ரசித்துவிட்டு வருவது வழக்கம்; அங்கு சிற்பக் கலையும் கற்று வந்தாள். அங்கு இருட்டு அறைகளில் நடந்து கொண் டிருக்கும் வகுப்பைப் பார்த்தாள். லைஃப் கிளாசில் சில மாணவர்கள் துயரத்தோடு உட்கார்ந்திருக்கும் நீக்ரோ பெண்ணை (அவள் துயரத் தோற்றத்தில் அம்மணமாக உட்கார்ந்திருந்தாள் மாடலாக) அலுப்புத்

தட்டும்படியாகப் பார்த்துக்கொண்டு ஈஜல் மீது அலட்சியமாகக் கோடுகள் போட்டுக் கொண்டிருந்தார்கள். மேலே போர்ட்டியேட் வகுப்பில் ஒரு வயோதிக பிச்சைக்காரன் கையில் பீர் கிண்ணத்தை வைத்திருந்தவாறு ஸ்டூலில் குந்தியிருந்தான். இவன் கூட முறுவலிக்க வில்லை. தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த ஆர்ட்டிஸ்ட்—சிவந்த தாடி கொண்டவன்—ஓர் அறையின் மூலையில் அமர்ந்து மைடோலின் வாத்தியத்தின் தந்திகளை மீட்டுக்கொண்டிருந்தான். அவனுக்குத் தலயத்தைக் கண்டால் மிக வெறுப்பு. கோபத்துடன் தலயத்துக்கு மரியாதை வணக்கம் செலுத்தினான். அவள் புன் சிரிப்புடன் அதை ஏற்றுக்கொண்டு வெளியே வந்தாள்.

இதொரு தனி உலகம். விக்டோரியா மகாராணியார் காலத்து ஆர்ட் ஸ்கூல். தலயத் வெஸ்டண்ட் பக்கம் சென்றாள். கடைகளுக்கு எதிரே அலைந்து திரிந்தாள். வீட்டுக்குத் திரும்ப அவளுக்கு அச்சமாக இருந்தது.

ஹேமார்க்கெட்டில் படிகளைக் கடந்து, 'ரைட்டர்ஸ் அண்டு ஆர்ட்டிஸ்ட் கிளப்'பிற்குள் எட்டிப் பார்த்தாள். பில் கிரேக் தென் பட்டார். தன் துயரத்தை மறக்க பீர் குடித்துக் கொண்டிருந்தார். மிக்க வாட்டத்தோடு பிரெஞ்சு நாவலாசிரியையுடன் அளவளா வினார். நிறைய அனுதாபம், மனப்பூர்வமான பரிவு, புத்திசாலித்தனம் எல்லாம் அவள் முகப் பொலிவிலிருந்தே அறிமுகமாயின. சாந்தா இன்னும் தன் கணவனைப் புரிந்து கொள்ளவில்லை. இந்த ஹேமார்க் கெட் 'ரைட்டர்ஸ் அண்டு ஆர்ட்டிஸ்ட் கிளப்' தனி உலகம். தலயத் மாடியிலிருந்து இறங்கி சாலைக்கு வந்து சேர்ந்தாள்.

தலயத்தும் கமாலும் செயிண்ட் ஜான்ஸ்வுட்டில் இருந்தார்கள். கமால் ஒரு லாபரெட்டரியில் வேலை பார்த்து வந்தான். இந்தப் பகுதியில் கலைஞர்கள், நடிகர்கள், பல தரப்பட்ட இண்டலெக் சுவல்கள் நிரம்பியிருந்தார்கள். மரங்களடர்ந்த சாலைகளின் முக்கங்களில் பாசி படிந்த பழைய மாதா கோவில்கள் மறைந்திருந்தன. ஒரு திருப்பத்தில் இத்தாலியன் ரெஸ்டாரெண்ட் இருந்தது. அதனுள் ஒரு மூலையில் போலிஷ் யூத ஓவியன்அமர்ந்திருப்பது வழக்கம். உணவு அருந்துபவர்களை ஆர்வத்தோடு வரி ஓவியம் வரைவான். அதை அவர்கள் விலை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள் என்கிற நம்பிக்கை அவனுக்கு. ஆனால் யாரும் வாங்குவதில்லை. செயின்ட் ஜான்ஸ்வுட் பகுதியிலுள்ள இந்த அழகிய வீடுகளில் வாழும் மேற்கத்திய மக்களின் வாழ்க்கையில் புயல் வீசிக் கொண்டிருந்தது. காதல், விவாகரத்து, மானசிக அல்லல், சள்ளை, கறுப்புக் காபி முதலியவற்றிலேயே இவர்களுடைய வாழ்க்கை கழிந்தது. இவர் களுடைய அறைகள் 'ஆர்ட்டீ' வகையில் அலங்கரிக்கப்பட்டிருந்தன. பெண்கள் தலைமுடியை 'போனிடைல்' செய்துகொண்டு, காதணியாக

ஜிப்ஸிரிங் தொங்கவிட்டுக் கொண்டிருப்பார்கள். டைட்டான கறுப்பு பேண்ட் அணிவார்கள். தாய் தந்தைகளை வெறுப்பார்கள். தன்போக்கில் உளவியல் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பார்கள். பதினேழு பதினெட்டு மாணவ-மாணவிகளில் சிலர் செக்ஸ், மார்பிடிட்டி பற்றி நாவல்கள் எழுதுவதில் முனைந்திருக்கிறார்கள். பல பிரபல சிந்தனையாளர்கள் மணிக்கணக்கில் பழைய ஆசியக் கலாச்சாரங்கள், ரோமன் கத்தோலிக் மதக் கோட்பாடு, தர்மம், வேதாந்தம், சமணம், பௌத்தம் என்று கண்மூடிச் சிந்தித்துக் கொண்டிருக்கப் பழகி விட்டார்கள். எல்லாருமே கடுமையாகத் தர்க்கவாதம் புரியவும், பகுத்தறிவு தரும் துன்பத் தாக்குதல்களைச் சகிக்கவும் பக்குவம் பெற்றிருந்தார்கள்.

சுரேகா சாலை ஓரத்து வீட்டில் இருந்தாள். அவள் கணவன் குல்ஷன் அஹுஜா 'லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸ்'-ல் படித்துக் கொண்டிருந்தான். சுரேகா பரத நாட்டியத்தில் புகழ் பெற்றுவிட்டாள். 'ராயல் அகாடமி ஆஃப் டிரமடிக் ஆர்ட்'டில் கோரியோக்ராபி கற்று வந்தாள். சோப்ராவும் அவர் மனைவியும் இவர்களுக்கு அயல் வீட்டார். ஆஷா சோப்ராவுக்குச் சிற்பக்கலையில் ஈடுபாடு. சதீஷ் பி.பி.ஸி. யில் இந்திப் பிரிவில் பணி புரிந்து வந்தான். சாந்தா, பில் கிரேக் கூட பக்கத்தில்தான் இருக்கிறார்கள். அமலாராய் நர்க்ஸ் இருவரும் கவுஸ்ஜி சேல்ஸி பகுதியில் நவீனமான-கிராக்கியான ப்ளாக்கில் குடியிருந்தார்கள். அமலாராய், தலயத், நிர்மலா மூவரும் பள்ளித்தோழிகள். அமலாராயின் பங்களா லக்னோவில் 'சிங்காடே வாலீ' பங்களா, 'குல் ஃபிஷான்' மாளிகைகளுக்குப் பக்கத்தில் இருந்தது. இப்போது அமலாராய்க்கு இண்டியன் ஃபாரின் சர்வீசில் வேலை; ஃபீரோஸ் ஸ்விஸ் காட்டேஜில் இருந்தாள்; உருதுவில் பி.ஹெச்டி செய்து கொண்டிருக்கிறாள். ஜரீனா இங்கு யூனிவர்சிடியில் ருஷ்யா-பார்ஸி-உருது மொழிகளில் பி.ஏ. ஹானர்ஸ் படித்து வருகிறாள். இப்படி எல்லாத் தோழிமார்களும் இங்கு வந்து கூடியிருக்கிறார்கள். இவர்களுடைய வாழ்க்கையே ஓய்ச்சலற்ற, கொந்தளிப்புள்ள நிலையில்தான் இருந்தது. கான்ஃபரன்ஸ்கள், டிராமாக்கள், அரசியல் கூட்டங்கள், ஊர்வலங்கள்—எப்படி ஓய்வோ அமைதியோ காண முடியும்?

இதுவும் தனியொரு உலகம் தான். இது இண்டோ-பாகிஸ்தானி லண்டன். இது இந்த ஆங்கிலோ—சாக்ஸன் தலைநகருக்குள் பல படிகளுக்குக் கீழ், பல படிவங்களில் அமைந்திருக்கிறது. இந்த எல்லாத் தனி உலகுகளும் பரஸ்பரம் அறிமுகமின்றி, விசாலமான தொரு பேருலகில் புகல் கொண்டிருந்தன.

பொய்யான - போலியான நகரம்...

# 41

சம்பா நர்கீஸின் அறைக்கு வந்து நாலுபக்கமும் பார்த்தாள். "எனக்கொரு புடவை எடுத்துக்கொடேன்" குளியலறையிலிருந்து நர்கீஸ் குரல் கொடுத்தாள். பக்கத்தறையில் ஒரே ரிக்கார்டைத் திரும்பத் திரும்ப ஒலிக்க வைத்துக் கேட்டுக் கொண்டிருந்தாள். அன்றைக்குத் தான் அவளுடைய புதிய புத்தகமொன்று அச்சாகி வெளிவந்தது. பில் கிரேக் கீழே கோர்ட்யார்டில் குல்ஷனோடு உலாத்திக் கொண்டிருந்தார். சம்பா அலமாரியைத் திறந்தாள்—ஈவினிங் கவுன், புடவைகள், செருப்புகள், கைப்பை காட்சி தந்தன. ஒரு தட்டில் தந்தத்தில் செய்த கோவில் இருந்தது. அதற்குள் சின்னஞ்சிறு தெய்வ மூர்த்தி செதுக்கி வைக்கப்பட்டிருந்தது. 'பார்சிக்காரர் இப்படித் தெய்வ மூர்த்தியைப் பூஜிப்பதுண்டோ? ஒரு வேளை ஜரதுஷ்டிரர் மூர்த்தியோ? அல்லது வேறா?' சம்பா நினைத்தாள். 'நம் எல்லாருடைய அடித்தளத்திலும் சின்னஞ்சிறு கோவில் இருக்கிறது; அதில் ஏதாவதொரு மூர்த்தி பூஜிக்கத் தக்கதாக இருக்கத்தான் செய்யும். அதற்கு என்ன பெயரோ? ஏசு, கிருஷ்ணன், ஜரதுஷ்டிரர்... இந்த உருவம் கடைசிவரைக்கும் பெயர் தெரியாமல் இருக்கும். இறுதிக் காலத்தில் கண்ணை மூடுகிறபோது, அவனுக்கு எந்த உருவம் காட்சி தருமோ...?'

சாந்தா உள்ளே வந்து நர்கீஸுக்குச் சிவப்புப் புடவை ஒன்றை எடுத்தாள். "அலமாரியை மூடு! அலமாரியை மூடு!" சம்பா கத்தினாள்.

"ஏன்? யாரைப் பார்த்துச் சொல்லுகிறாய்?"

"ஒரு நாளைக்கு எத்தனை தடவைதான் இந்த அலமாரியை நர்கீஸ் திறப்பாள் என்று யோசித்துக் கொண்டிருந்தேன்."

"என்ன?" சாந்தாவுக்குப் புரியவில்லை.

"அதிலிருந்து வண்ண வண்ண உடைகள் வெளிப்படுகின்றன."

"அதனாலென்ன?"

"அத்தர், பாரிஸ் சென்ட், டோஃபா. மூலையில் சிறு கோவில்; அதற்குள் ஒரு மூர்த்தி; அது இந்த அலமாரிக்குள் அடைந்து கிடக்கிறது. உன்னுடைய அலமாரியிலும் இந்த மாதிரிப் பொம்மை இருக்கிறதா?"

"என் அலமாரியில் வரைபடங்கள் இருக்கும்". சாந்தா குமுட்டிக்குப் பக்கத்தில் உட்கார்ந்தாள். சம்பாவை உற்றுப் பார்த்துவிட்டு, "நீ கொஞ்சம் லூஸோ?" என்று கேட்டாள்.

"நீ அப்படியில்லையா?"

"உன் பேச்செல்லாம் சுத்த ஞானத்தின் எல்லையை எட்டுகின்றன. அந்தப்பக்கம் போகாதே. ஆபத்து!" சாந்தா பதில் சொன்னாள்.

சுரேகா வெள்ளைப் புடவை உடுத்திக்கொண்டு, கூந்தலைத் துணியில் சுற்றி முடிந்து வெளியே வந்தாள். ஜன்னல் எதிரே நின்று டாகூர் கார்டனைப் பார்க்கலானாள். சுரேகா, "வாழ்க்கை! வாழ்க்கை!" என்று கூவி, மகிழ்ச்சியுடன் காற்றில் கைவிரித்து நின்றாள்.

"வாழ்க்கை என் எதிரே குன்றிப்போய் நிற்கிறது—வெண்ணிற ஆடை உடுத்திக்கொண்டு சிரிக்கிறது; முணுமுணுக்கிறது; பயந்திருக்கிறது; துணிச்சலையும் காட்டுகிறது. ஒவ்வொரு சொல்லுக்கும் இரு வெவ்வேறு பொருள்கள். வாழ்க்கை-! நான் ஒருமுறை கௌதமனிடம் சொன்னேன்: நானும் நீயும் எப்போதுமே வேறுபட்டுத்தான் இருப்போம்." சாந்தாவைப் பார்த்துக்கொண்டு சம்பா சொன்னாள்.

"கௌதமன் இன்னும் சர்க்குலேஷனில்தான் இருக்கிறானா?" சாந்தா உரக்கவே கேட்டாள்.

"என்னது?" சம்பா திகைத்தாள்.

"அதாவது..." சாந்தா சிகரெட் பற்றவைத்துக்கொண்டு, திறந்த புத்தகத்தைப் படித்துவிட்ட மாதிரி, சம்பாவின் அந்தரங்கங்களைத் தெளிவுற அறிந்தவளாகத் தீர்மானத்துடன் கேட்டாள். "கௌதமன் இன்னும் சர்க்குலேஷனில்தான் இருக்கிறானா? அல்லது, அவன் லைப்ரரியின் அலமாரித்தட்டில் திரும்ப வைக்கப்பட்டு விட்டானா?"

"தெரியாது"

"உன் மெம்பர்ஷிப் காலம் முடிவடைந்து விட்டதோ?"

இந்தச் சாந்தா கிரேக் கர்வி மட்டுமல்ல, கயமையும் கொண்டவள் என்று தோன்றியது சம்பாவுக்கு.

"இதே கேள்வியை நான் உன்னிடமும் கேட்க முடியும்?"

சாந்தா சுணங்கி முறுவலித்தாள். அவளுடைய கர்வம் கலந்த புன்முறுவல், ஆடை அலங்காரம், தோரணை—இவற்றை எதற்குத் தான் சம்பா பின்பற்றத் தொடங்கியிருக்கிறாளோ? நல்ல அழகி, வாழ்க்கையில் வெற்றி கண்டவள், புகழ் கண்டவள், கேரியர் வுமன்! இவளும் சாந்தாவைப்போல் ஏன் இருக்கலாகாது?

சாந்தா தன்னம்பிக்கையுடன் சம்பாவைப் பார்த்தாள்.

"நான் அவனுடைய இல்யூஷனை (பொய்த் தோற்றத்தை) அழிக்க விரும்பவில்லை. இதில் ஒரு சங்கடம், அவன் ஒரு கவி".

"அப்படியா? நிஜமாக எனக்கு இது தெரியாதே!" சம்பா கிண்டலாகச் சொன்னாள்.

"இது உனக்குத் தெரிந்திருக்காதுதான். நீ உன் எண்ணங்களிலேயே தேவைக்கு மேல் மூழ்கியிருக்கிறாய். மனிதர்கள் தியாகங்களை எதிர்பார்க்கிறார்கள். நீ உன்னைப் பலியிடாமல் அவனைப் பெறமுடியாது. நீ பாரிசிலிருந்து இங்கு எதற்காக வந்தாய்? கௌதம் இங்கு இருக்கிறான் என்பதற்காகத்தானே படிப்பை நடுவில் நிறுத்தி

விட்டு இங்கு ஓடி வந்தாய்?"

"பிதற்றாதே! இப்படி யார் சொன்னது உனக்கு?" சம்பாவுக்கு நல்ல கோபம். இதற்குமேல் அவளால் பொறுக்க முடியாது.

"ஆனாலும் சொல்லித்தான் ஆகவேண்டும். இந்தக் காட்டு வாத்துக்குப் பின்னால் ஓடுவது மாதிரிதான்."

"நீ கட்டுக்கதை எழுதுகிறவள். அதனால்தான் என்னைப் பற்றியும், தாறுமாறாகக் கற்பனை செய்து வைத்திருக்கிறாய்!"

"இப்போது பில் கிரேக் உன்னைப் 'பில்ட் அப்' செய்யப் போகிறானாம்! அவனுக்கு ஆசை." சாந்தா வெகு இயல்பாகச் சொல்லிவிட்டு எழுந்தாள். காயப்போட்டிருந்த படங்களை அடுக்கி வைக்கலானாள்.

தஹ்மீனா ரஜா, நிர்மலா ஸ்ரீவாஸ்தவ், சாந்தா கிரேக்.

"அப்படியா!" சம்பா தன் கோட்டு, கையுறைகளை எடுத்துக் கொண்டு எழுந்தாள்: "என்னைக்கண்டு வெறுக்கவேண்டும்! என்னை ஒதுக்கிவிட வேண்டும்! இவ்வளவுதானே? சரி நான் கிளம்புகிறேன். நர்கீஸ்! சுரேகா! சாந்தா! குதாஹாஃபிஸ்...! நான் நாளை இங்கு வரமாட்டேன் வேலைக்கு." கதவுப்பக்கம் சென்றவள் திரும்பிப் பார்த்து "நாளை என்ன? இனி என்றைக்குமே இங்கே வேலைக்கு நான் வரமாட்டேன்! குட் நைட்." என்று கூறி வெளியேறினாள்.

வெளியே ரோட்டிற்கு வந்து சேர்ந்தாள். வீட்டு ஜன்னல்கள் அழகான மழை மூட்டத்தில் மறைந்திருந்தன. மூலையில் மலர் விற்கும் கிழவி ஓவர் கோட் அணிந்து, சுவர் பக்கம் திரும்பி அமர்ந்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்தாள். சம்பா தன் அறைக்குச் சென்றாள். அங்கு சிரில்லின் கடிதம் கிடந்தது. அதில் எழுதியிருந்தான்: 'ந்யூஹமில் உனக்கு அட்மிஷன் கிடைத்திருக்கிறது. செப்டம்பரில் நீ இங்கே வரப்போகிறாய். இடையிலுள்ள கோடைக் காலத்துச் சில மாதங்களை இத்தாலி, ஸ்பெயின் நாட்டு நகரங்களில் கழித்துவிட்டு வாயேன். சலிப்பும், குதூகலமும் கலந்த நகரங்கள் அவை. நான் வடக்கே போகிறேன். ரோஸ்மேரி சுகவீனமாயிருக்கிறாள்.'

...ரோஸ்மேரி???

# 42

கோஹிநூர் இல்லத்தில் ஓர் ஜன்னலருகில், மேஜை மேல், நிர்மலாவுக்கு எதிரே அமர்ந்து, வெளியே மழை பொழிவதைப் பார்த்துக் கொண்டிருந்தான் கௌதமன். கமால், "மன்னிக்கவும்!" சொல்லிவிட்டு,

வேறொரு நண்பனிடம் பேச பக்கத்து மேஜைப்பக்கம் போய்விட்டான்.

"நீ சம்பாவைப் பற்றிச் சொன்னதைக் கேட்க எனக்கு வருத்தமாக இருக்கிறது". கௌதமன் இப்பிடிச் சொல்வதற்கு முன்பு கூட சம்பாவைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தான். நிர்மலா கண்ணீரை சிரமப்பட்டு மறைத்துக் கொண்டாள். சில நிமிடங்களுக்கு முன்புதான் இந்த மனிதன் தன்னை மணந்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டான். நிர்மலா பேசாதிருந்தாள்.

"நாமெல்லாரும் அவளிடம் நியாயமாக நடந்து கொள்ளவில்லை. நாம் அவளைத் தவறாகவே புரிந்து வைத்திருக்கிறோம். எடுத்துக் காட்டாக..." கௌதமன் உரக்கவே சொன்னான்: "சம்பா ஒருநாளும் பையா சாகப்பை அப்பியிடமிருந்து பறிக்க விரும்பியதில்லை."

"எப்படியாவது இருக்கட்டும். இது என் எண்ணம். இனி நாம் சம்பா பாஜி பற்றி விவாதிக்க வேண்டாம். உன் எண்ணத்தில் சம்பா பர்ஃபக்டாக இருக்கலாம். நாங்கள் சம்பாவை சிறு பிராயத்திலிருந்தே அறிவோம் என்பதை நீ மறந்திருக்கிறாய்".

"இந்தப் பூச்சாண்டி காட்டடல் நன்றாக இருக்கிறது. நீங்கள் ஏன் தான் சிறு பிராயத்துப் பழக்கம் என்கிற ஆலாபனையை விடமாட் டேன்கிறீர்களோ? உன்னையோ சம்பா அகமத்தையோ சிறு பிராயத் திலிருந்து அறியாதவர்கள் வெறும் மூடங்கள், அப்படித்தானே?"

இப்போது கௌதமனைச் சுற்றிலும் வெளிச்சம் அதிகமாயிற்று; நிர்மலாவும் அவன் எதிரே வெளிச்சத்தில் பொலிந்தாள். திடீரென்று கௌதமன் விளக்கை அணைத்து இருளாக்கினான்.

'மனித இயல்பையும் செயலையும் கடமையாக விமரிசிக்கும் கௌதமன், சம்பா போன்ற ஒரு ஃப்ராடை பர்ஃப்க்ட் என்று கருது கிறான்! கடவுளே! உன் லீலா விநோதமே அலாதி!' நிர்மலா சிந்தித்தாள்.

"நிர்மல்-! நான் உன் தவறான கணிப்பைப் போக்க விரும்புகிறேன். சம்பாவைப் பற்றி எனக்கென்ன? நான் சுத்த துடைகாலி—தோசிப் பயல்! நீ சரியாகத்தான் சொன்னாய். ஆனாலும் நான் உன்னை மணந்துகொள்ள விரும்புகிறேன்."

"பதிலுக்கு? இல்லை! வெரி ஸாரி, கௌதம்!"

"நிர்மலா! என்னைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யேன். நிர்மலா!" இப்போது அவன் மறுபடியும் இருட்டில் புகுந்தான். பள்ளிக்கூடப்பிள்ளை மாதிரி பரிதாபப்படத் தக்கவனாக இருந்தான். ஆண்கள் புத்திசாலிகளாமே? யார் சொன்னது? ஆண்களைவிட மூடப்பிறவிகள் வேறு கிடையாது.

நிர்மலாவுக்குத் தான் வளர்ச்சி பெற்றுவிட்டதாகத் தோன்றியது. அவள் இனித் தனியாகவே விளக்குகளை அணைத்துவிட்டு, இருட்டில் போவாள். இது உத்தமமான அனுபவம். இனி இருட்டில் இருந்தவாறே

வெளிப்புறத்தைப் பார்ப்பாள். இப்போது அவள் சுலேமானி தொப்பி அணியலாம். இந்தத் தொப்பியைப்பற்றி, சிறு வயதிலேயே குல்ஃபிஷான் மாளிகையின் சர்வெண்ட்ஸ் குவார்ட்டர்ஸில், டிரைவர் கதீர் கதை கதையாகச் சொல்லியிருக்கிறான்.

இப்படிச் சுலேமானி தொப்பி அணியும் வாய்ப்பு எல்லாருக்குமா கிடைத்து விடுகிறது? கௌதமா! உனக்கு நன்றி! நான் வளர்ச்சி காண நீ உதவியிருக்கிறாய். நான் உன்னை மணந்து கொள்ள முடிந்தால் மகிழ்ச்சிதான். ஆனால் என் அறிவு வளர்ந்துவிட்டதே! கௌதம் அவர்களே! நீங்கள் சம்பா பாஜியையே போற்றிக் கொண்டிருங்கள். ஒருக்கால் உங்களுக்கும் முக்தி வழி புலப்பட்டு விடும்!

அன்று இரவு நிர்மலாவின் எக்ஸ்ரே ரிப்போர்ட்டிலிருந்து தெரியவந்தது, சுவாசப்பையில் காச நோய் பற்றியிருக்கிறதென்று.

# 43

சம்பா கேம்பிரிட்ஜ் போனபோது, தலயத்தும் நிர்மலாவும் படிப்பை முடித்துக்கொண்டு கிளம்பி விட்டார்கள். இப்போதெல்லாம் சம்பா உயர் வர்க்கத்து ஆங்கிலேயப் பெண்களைப்போல் பேசுகிறாள். கேம்பிரிட்ஜின் மூட மரபுகளைச் சம்பாவும் ஏற்றுக் கொண்டு விட்டாள். கண்ணாடிக்கெதிரில் நின்று தனியாகச் சிந்திக்கிறாள்: 'சம்பா அகமத் இப்போது எந்த நிலைக்கு வந்திருக்கிறாள்? இப்போது அவள் கீதா உபதேசக் கதைகளில் ஒன்றாக, தெய்வீக பிரபாவ அதிசயமாகி விட்டாள். பனாரஸ் வசந்த காலேஜில் படித்த மாணவியான சம்பா இப்போது எங்கே போனாள்? பையா சாகப் ஆமிர் ரஜா ஒருநாள் குல்ஃபிஷான் மாளிகையில் காய்கறி நறுக்கிக் கொண்டிருக்கும்போது பார்த்துக் கிளர்ச்சி கொண்டாரே, அந்த சம்பா எங்கே? ஆமிர் ரஜாவின் கருத்து-மனப்போக்கு இப்போது சம்பாவுக்குக் கேலிக் கூத்தாகத் தோன்றியது. நடிகனைப்போன்ற கவர்ச்சித் தோற்றம் கொண்ட பாகிஸ்தான் டிப்ளமெட் ஆமிர் ரஜாவின் வாழ்க்கையில் மேலான ஆவல், மாலையில் எந்த ரக சூட் அணிவது, எந்தப் பெண்ணுடன் தியேட்டர் போவது என்று முடிவு செய்வதுதான்.

ஒருநாள், விடுமுறை தினத்தன்று சம்பா மற்ற மாணவ மாணவிகளுடன் கிராமப்புறத்துத் தேனீர் விடுதிப் பூங்காவில் உட்கார்ந்திருந்தாள். ஓர் இத்தாலிய மாணவன் ஆப்பிள் மரத்திற்குக் கீழே அமர்ந்து கிட்டார் வாசித்துக் கொண்டிருந்தான். பக்கத்தில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து மைக்கேல் சுணக்கத்துடன் ஆப்பிள்

தளிர்களை முகர்ந்து கொண்டிருந்தான். அன்று அவன் அறிவித் திருந்தான், இஸ்ரேலுக்கு குடிபெயரப் போவதாக. மணிக்கணக்காக அரசியல் குறித்து விவாதித்துவிட்டு, களைத்துப்போய் டீ குடிக்கக் காத்திருந்தான். "நான் இந்த வளமான அழகிய இங்கிலாந்தைத் துறந்துவிட்டு, இஸ்ரேலில்—பாலைவனப் பிரதேசத்தில் கற்களை உடைத்துச் சாலை அமைக்கப் பாடுபடுவேன்," அவன் சொன்னான். இதைக்கேட்ட சிரில், "மைக்கேல் ! நீ நிச்சயம் அப்படிச் செய்வாய் எனக்குத்தெரியும். யூனிவர்சிடியைச் சேர்ந்த பல யூதப் பேராசிரியர்கள், விஞ்ஞானிகள், இசை மேதைகள் இப்போது இஸ்ரேலில் கல்லுடைத்து ரோடுகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்."

"பார்வையிலேயே நல்ல சக்தி இருக்கிறது. சில கவிதைகளைப் பாரேன் !" டேனிஸ் சொன்னான்.

"சக்தியினால் அழிவு ஏற்படுகிறது"-சிரில்.

வெளிகேட்டில் கார் வந்து நின்றது. கௌதம நீலாம்பரன், கமால், தலயத், மற்றும் சிலர் இறங்கி டீ ஸ்டால் பக்கம் போனார்கள். எதிர்ப்பக்கம் இருந்தவர்களை அவர்கள் கவனிக்கவில்லை.

"புதிய கொள்கைகளுக்குள் ஷாவனிஸம் மிகப்பயங்கரம். உன்னுடைய ஜாயனிஸம், பாகிஸ்தானிகளின் ஜாயனிஸம், பாரதத்தில் புராதன கலாசாரத்தைப் புத்துயிர்ப்பிக்கும் சமய மறுமலர்ச்சி..." சிரில் மைக்கேலிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

"பொருளாதார முன்னேற்றத்திற்கும் மதத்திற்கும் என்ன சம்பந்தம்? இது பாகிஸ்தானிகளுக்குத் தெரிவதில்லை", குல்ஷன் சொன்னான்.

"வெறுப்புக் கொள்ளும் மனப்பாங்கு. இன்றைய உலகமே வெறுப்பின் அடிப்படையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. ஏசு தவறாகச் சொல்லியிருக்கிறார்; உலக இயக்கத்திற்கு ஆதாரமே அன்புடைமைதானாம் ! உண்மை நிலை, நாம் எல்லாருமே காட்டு விலங்குகளைப்போல் ஒருவரை ஒருவர் கொன்று தின்கிறோம்."

"நான் காட்டு விலங்கா ? நான் ஹைஃபா சென்று சாலைகள் போடப்போகிறேன். அதுதான் என் பணி" மைக்கேல் வாட்டத்துடன் சொன்னான்.

"ஒரே ஒரு நாளைக்கு இந்த உலகத்திலுள்ள எல்லாப் பிரச்சார அமைப்புகளும் செயல்படாமலிருந்தால் எவ்வளவு அமைதி கிடைக்கும்?" சம்பா மெல்லச் சொன்னாள்.

"இதெப்படி முடியும்? நமக்குத்தான் பொழுது விடிந்ததும்-சாயும் போதும் கோயபல்ஸ் படத்திற்கு மலர் சூட்டிப் பூசனை செய்தாக வேண்டுமே. நீ காந்தி மாதிரி பேசுகிறாய். இந்தக் காலத்துக்கேற்ற மாபெறும் தேவதூதன் கோயபல்ஸ்தான்—டாக்டர் கோயபல்ஸ் வாழ்க!" குல்ஷன் உணர்ச்சிவசப்பட்டான்.

"உண்மைதான். நாம் நம்மையறியாமலேயே ஃபாசிஸ்டுகளாக இருக்கிறோம். நாம் அழிவையும் சீர்குலைவையுமே விரும்புகிறோம். காதல் பித்தர்களின் 'மரணயோகம்' இப்போது எனக்கு நன்றாகப் புரிகிறது"—டேனிஸ்.

'அழகுணர்ச்சியைக் குலைத்து விடுவதை நான் விரும்ப வில்லை."—சம்பா.

"நாமெல்லாரும் மறைமுகமான பாசிஸ்டுகள். நம் கைகளில் கண்ணுக்குப் புலப்படாத மிஷின் கன்கள் இருக்கின்றன-கருத்து, கொள்கைகளாலான மிஷின் கன்கள். இவற்றால் பிறரைத் தாக்கு கிறோம். கிழவிகள்தான் அமைதியை விரும்புகிறார்கள். ஆனால் உலகுக்குக் கிழவிகள் தேவையில்லை". டேனிஸ் சம்பாவைப் பார்த்த வாறு சொன்னான். அவன் கண்ணுக்குச் சம்பா துயர்ப்பட்ட, கிழத் தாயாகத் தோற்றினாள்.

"எனக்கு எப்போதுமே சீர்குலைவுதான். ஆனால் என் உறவினர் களின் சவக்குவியல் மேல் அமர்ந்து உனக்காக இசையமைத்தேன்; கருத்தொளியைப் பரப்பினேன். அறிவு விளக்கை ஏற்றி வைத்தேன். நான் கொடிய விலங்கா? நான் வெறும்..." மைக்கேல் தலைநிமிர்ந்து பேசினான்.

"சாலை போடக் கற்களை உடைக்க விரும்புகிறாயல்லவா? அனுமதிக்கிறோம். மைக்கேல்! உன் பாதையிலேயே செல்!" -டேனிஸ்.

"பிறருடைய சொந்த நோக்கில் குறுக்கிட்டு, அதைக் குலைக்க விரும்புவது பெரிய குற்றம். மூஸா அறுதியிட்ட பத்துக் கட்டளைகளில் இந்தக் குற்றம் பற்றிக் குறிப்பிடவில்லை. அதனால் நானும் உனக்கு அனுமதி அளிக்கிறேன்", சிரில் சொன்னான்.

ஏஞ்ஜலோ கிடாரைக் கீழே வைத்தான்; மைக்கேலைப் பார்த்துச் சொன்னான்: 'நீ யூதன்; ஆனால் இங்கிலீஷ்காரனுங்கூட. நீ அடிக்கடி விமானத்தில் வெடிகுண்டுகளை நிரப்பிக்கொண்டு என்னுடைய அழகான நகரங்களில் குண்டுகளைப் பொழிந்து அழித்திருக்கிறாய்; எனினும் நான் உன்னை மன்னிக்கிறேன்.'

சுரேகா சொன்னாள்: "மைக்கேல்! நீ யூதன் மட்டுமல்ல; ஆங்கி லேயனுங்கூட. இதனால் எங்களைவிட உயர்ந்தவனாக எண்ணிக் கொண்டிருக்கிறாய். இப்போது நீ வெகு ஆசையாக உற்சாகமாக ஆசியாக்காரனாகப் போகிறாய். உன் உள்வேர்கள் பாலஸ்தீனத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறாய். ஆனால் அவை உண்மையில் கோல்டர்ஸ்க்ரீனில் இருக்கின்றன. எனினும், நாங்கள் உன்னை மன்னிக்கிறோம்..."

சுணக்கமான அமைதி நிலவியது. மரக்குப்பல்களில் வண்ணத் துப்பூச்சிகள் பறந்து கொண்டிருந்தன. எதிரே நதியில் ஓடம் சென்றது. ஏஞ்ஜலோ மறுபடியும் கிட்டார் இசைக்கத் தொடங்கினான்.

# 44

கௌதம நீலாம்பரன் நண்பர்களுடன் தேனீர் அருந்த விடுதிக்குள் சென்றான். லவுஞ்சில் அமர்ந்து டீ வரவழைத்தார்கள். கௌதமன் சில கடிதங்களை வெயிட்டரிடம் கொடுத்துத் தபாலில் போட்டுவரச் சொன்னான். கௌதமன் குழுவினர் லண்டனிலிருந்து வருகிறார்கள்; லிட்ஹர்ஸ்ட் போய்க்கொண்டிருக்கிறார்கள். அவர்களுள் பில் கிரேக்கும் இருந்தார்; சாந்தா, தலயத், நர்கீஸ் இருந்தார்கள். இவர்களும் ஏதோவொரு சர்வதேசப் பிரச்சினையைத் தீர்ப்பதில்தான் முனைந்திருந்தார்கள். கமால் ஜன்னல் வழியாக வெளியே தோட்டத்தைப் பார்த்தான். இறக்கத்தில் ஆறு ஓடியது. பிரப்பங்காடு, பிரிம்ரோஜ் இலைகளினூடே வெண்ணிற லாஞ்ச் ஒன்று தென்பட்டது. வெளியேயிருந்து வந்த தலயத் அறிவித்தாள்: அங்கே சம்பாபாஜியும் சிரில்லும் மற்றவர்களும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

கௌதம் முதலியவர்கள் நிர்மலாவைக் காணப் போய்க்கொண்டிருந்தார்கள். சானிடோரியத்தில் நிர்மலாவுக்கு இது மூன்றாவது வருஷம். ஒரு பக்கத்து சுவாசப்பையில் ஆபரேஷனாகி விட்டது. அவளுடைய டாக்டர் சர் ரோனல்ட் கிரே பூரணமாகக் குணமாகி விடுவாளென்று நம்பிக்கை கொண்டிருக்கிறார். சனிக்கிழமைகளில் நிர்மலாவின் நண்பர்கள் தோழிகள் அவளைப் பார்க்க வருவார்கள். கௌதமனும் முடிந்தபோது கமால், தலயத் இருவரையும் அழைத்துக்கொண்டு பார்க்க வருவான். அவளுக்கு ஆபரேஷன் நடந்தபோது ஹரிசங்கர் வாஷிங்டனிலிருந்து அங்கே வந்திருந்தான். கௌதமன் மிக அக்கறையாக நிர்மலாவைக் கவனித்து வந்தான். இருவரும் ஒருகாலும் சம்பாவைப் பற்றிப் பேசவில்லை. வாழ்க்கை மகா சிக்கலாக, மும்முரமாக, ஏற்றத்தாழ்வாக, பொருந்தாத நிலையில் இருப்பதால், அறிமுகமானவர்கள் எல்லாரோடும் பழக்கம்-நெருக்கம் வைத்துக்கொள்வது சாத்தியமில்லை. நேரம் பொழுது எங்கே இருக்கிறது?

கௌதமன் இப்போது பிரபலமாகி விட்டான். இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை, பொருளாதாரப் பிரச்சினைகள் குறித்து இரு புத்தகங்கள் எழுதியிருக்கிறான். அவை வெகுவாகப் புகழப்பட்டன. சர்ச்சைக்கு இடமாயின. அவன் பெயர் பரவியது. நிர்மலாவின் நோய் நிலை அவன் வாழ்வில் ஒரு புரட்சியை ஏற்படுத்தியது. மனிதனுக்கு அவனுடைய உள்ளம்தான் நரகம். அதனுள் எத்தனையோ உலகங்கள், மனிதர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள். இந்த மனவுலகில் கௌதம நீலாம்பரனும் எங்கோ ஒரு மூலையில் இடம் பெற்றிருக்கிறான்; அங்கும் புயல்கள் வீசுகின்றன. அவனுள்

ளத்தில் யாரோ ஒரு பெண் மங்கல சின்னம் பொலிவுறக் காத்திருக் கிறாள். அவள் யாரோ? அந்தப் பரந்த உலகில் இணைப்புப் பாலமாக, மயிரிழையை விட மெல்லிய வாழ்க்கை அமைந்திருக்கிறது. அதில் நிர்மலா நின்று கொண்டிருக்கிறாள். வாழ்க்கையை ஏளனப் படுத்தக்கூடாது. இதயம் மிகப்பெரிய பொருள். அதையும் நையாண்டி செய்யலாகாது.

ஒரு கோபிகையின் உள்ளம் அகிலத்திற்கும் கேந்திரம். "சம்பா தோட்டத்தில் உட்கார்ந்திருக்கிறாள். அவளைப் பார்த்துவிட்டு வரலாம். சந்தித்து வெகுகாலமாகி விட்டது" தலயத் கூறினாள்.

கௌதமன் கடிகாரத்தைப் பார்த்தான். "இப்போது வேண்டாம். நேரே லிட்ஹரிஸ்ட் போகலாம். இல்லாவிட்டால் திரும்பி வர நேரமாகிவிடும்."

அவர்கள் டீ ஷாப்பிலிருந்து எழுந்து காருக்குள் வந்தார்கள். கார் புறப்பட்டது.

கார் திரும்பிப் போவதைச் சம்பா பார்த்தாள்.

ஏஞ்ஜலா மரத்தடியில் அமர்ந்து கிட்டார் வாசித்துக் கொண் டிருந்தாள். ரோஷன், மைக்கேல், டேனிஸ், சுரேகா, குஷன் உட்பட அனைவரும் உலாத்திக்கொண்டே நதிக்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். சம்பா சாய்வு நாற்காலியிலிருந்து குனிந்து ஒரு புல்லைப் பறித்தாள்.

"என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?" சிரில் எதிரே உட்கார்ந்திருந்தான்.

"ஒன்றுமில்லை"

"உன் நண்பர்கள் காரில் போனார்களே..."

"ஆமாம்"

"நான் கவனித்து வருகிறேன். நீ கூட்டத்தோடு சேர்ந்து கலக்கவும் விரும்புவதில்லை; ஆனால், கூட்டத்திடம் பற்றுதல் அதிகம் கொண்டிருக்கிறாய். இது வினோதமான நன்றியுணர்வு. இதனால்தான் உங்களுடைய பழைய காலம் ஒன்றாக இருக்க முடிந்தது. நீ விசித்திரமான முரண்பாடுகளின் ஒரு கோவை. உன்னைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமாக இருக்கிறது." சிரில் ஓய்ந்தான்.

"இத்தாலியன் போல் பேசாதே! சகிக்கவில்லை."

"உன்னிடத்தில் இதுவுமொரு சங்கடம். சொந்தநிலைக்கு வந்தும் நீ கதவை அடைத்து விடுகிறாய். கோழை! உன் பயங்கொள்ளித் தனத்தையும் குறைபாடுகளையும் உணர்கிறாயா?" சிரில் நாற்காலியி லிருந்து எழுந்து மரத்தடியில் சாய்ந்து நின்றான். "பொய் சொல்லு கிறாய். பொறாமைப்படுகிறாய். பிறர் மகிழ்ச்சியைக் கண்டு எரிச்சல் கொள்ளுகிறாய், பிறர் மீது ஆதிக்கம் செலுத்த எப்போதும் முனைப்பு. தன்னைவிடப் பிறர் உயர்ந்தவர் என்று ஒப்புக் கொள்ள முடிவதில்லை.

விருப்பமில்லை. சம்பா! காலத்தின் மிக மோசமான பலவீனம் தன் செல்வாக்கிழப்பை உணரவோ, ஏற்கவோ, எதிர்பார்க்கவோ முற்படுவதில்லை. நம் காலம் கடந்துவிட்டதென்பதை யாரும் ஒப்புக்கொள்வதில்லை; பரிதாபம்! சம்பா! நீ சுஜாதா முகர்ஜி மாதிரியாகிவிடாதே! உன் விபரீத மாறுதலை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். பத்தாண்டுகளுக்குப் பிறகு, செலஸியில் ஒரு ஸ்டுடியோவில் ஆர்ட்டிஸ்டுகளுக்கும் புத்திஜீவிகளுக்கும் பேட்ரன்னாகவோ, ஆசிரியையாகவோ ஆகி விடுவாய்! மைகாட்! நினைக்கும் போதே எனக்குப் பயமாக இருக்கிறது."

"நான் இவ்வளவு இரங்கத்தக்கவள்தானா?"

"நாம் எல்லாருமே இரங்கத்தக்கவர்கள்தான். இவ்வளவெல்லாம் இருந்தும் நீ எனக்கு மிகப்பிரியமானவள். உன் நேர்மை மிகச் சிறந்தது. பிறரை மன்னிக்கும் பெருந்தன்மை உன்னிடம் இருக்கிறது. அப்படித் தானே?"

"இருக்கலாம்"

இருவரும் எழுந்து டீ ஸ்டாலின் லவுஞ்சுக்கு வந்து சேர்ந்தார்கள். மைக்கேலும் மற்றவர்களும் அப்பால் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. லவுஞ்சில் ஒரு சோபாவில் சில காகிதங்கள்-பத்திரிகைகள் கிடந்தன. கௌதமன் மறதியாக விட்டுச்சென்றவை.

"நீ நட்புடன் பழகக் கூடியவள். மற்றவை உன்னிடம் சிதிலங்களாகத்தான்—இந்தக் காகிதங்களைப்போல் சிதறிக் கிடக்கின்றன". சிரில் பக்கத்திலிருந்த ஒரு கவரை எடுத்தான். அதில் கௌதமனின் முகவரி இருந்தது. அதைக் கசக்கி கணப்பில் எரிந்தான்.

"சிரில்! நான் என்ன அவ்வளவு அப்பட்டமாகவா இருக்கிறேன்?"

"நீ இவனை அதிகம் நேசிக்கிறாயல்லவா?"

முன்பொரு சமயம் இதே போன்ற கேள்வியைக் கௌதமன் சம்பாவிடம் ஆமிர்ரஜா குறித்துக் கேட்டான்.

"அவன் ஏன் உன்னைச் சந்திக்கவில்லை?"

"தெரியாது. அவனுக்கு நேரமேது?"

"நீ பொய் சொல்கிறாய் சம்பா!"

அவள் உயரத்தில் இருந்தாள். தனக்குக் கீழே இருப்பவற்றை நன்றாகப் பார்த்தாள். 'நான் என்னை ஏன் இப்படிச் சிதற அடித்துக் கொண்டேன்? இப்போது காலம் கடந்து விட்டது. இனி.... இனி என்ன செய்ய முடியும்? எல்லா வாய்ப்புகளும் விலகிப் போய்விட்டன'.

வெளியே மழையில் சில கார்கள் வந்து நின்றன. சில பிரபல ஷேக்ஸ்பியர் நாடக நடிகர்கள் லவுஞ்ச் பக்கம் வந்தார்கள். அவர்களில் ஒருவனைச் சிரில்லுக்கு அறிமுகம். அவர்கள் கணப்புக்கருகில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

விட்ஹர்ஸ்ட் சானிடோரியம் நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலப் பரப்பில் உருவான பெரிய கவர்ச்சியான கட்டடம். சுற்றிலும் மலர்ச் செடிகள், கொடிகள், மரங்கள். அமைதி மழையையும் மீறிப் பரந் திருந்தது. மனத்துக்கினிய இந்த சுவர்க்கத்தில் பல நோயாளிகள் டெலிவிஷன் காட்சியைப் பார்த்துக்கொண்டே தன் இறுதியை வரவேற்றார்கள் அல்லது, வேறுவகை முடிவைக் காணும்வரை காலந்தள்ள வெளியுலகுக்குத் திரும்பியிருந்தார்கள். பல கட்டிடங் களில் ஒன்றின் மூலையில் நிர்மலாவின் அறை. தலையணைகளை முட்டுக்கொடுத்து, சாய்ந்து படுத்திருந்தாள். மகிழ்ச்சியுடன் எதிரே இருப்பவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சாந்தா, கமால், பில் கிரேக் மூவரும் கட்டிலுக்கெதிரே உட்கார்ந்திருந்தார்கள். கௌதமன் வெறொரு பக்கத்தில் மலர்ச்செடி களுக்கருகில் அமர்ந்து பார்னார்ட்டுடன் பேசிக்கொண்டிருந்தான்.

"கௌதம்ஜி! நீங்கள் புதிய செய்தியாகிக் கொண்டிருக் கிறீர்களே!" நிர்மலா அவனைப் பார்த்துச் சொன்னாள். கௌதமன் எழுந்து நிர்மலா பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

"ஏதாவது விழாக் கொண்டாட்டத்திற்கு ஏற்பாடாகிக் கொண் டிருக்கிறதா?" நிர்மலா தலயத்திடம் கேட்டாள்.

"வெகு மும்முரமாக"-பிறகு தலயத் பேசவில்லை. ஒவ்வொரு வருடமும் விழா ஏற்பாடுகளில் நிர்மலா முனைந்து முன்னே நிற்பாள். கடந்த மூன்று வருடங்களாக இவள் இல்லை. கமால் ஆறுதலாகச் சொன்னான். "இந்த ஆகஸ்டு விழாவிற்கு மட்டும் உன்னால் வந்து உழைக்க முடியாது. ஆண்டவன் அருளால், அடுத்த ஆண்டு நீதான் தலைமை தாங்கி விழாவை நடத்தப் போகிறாய்!"

"ஆண்டவன் அருளால்..." நிர்மலா சிரித்துக் கொண்டாள்.

"நேற்று பையா சாகப்பைப் பார்த்தேன். இன்று உன்னை வந்து பார்ப்பதாகச் சொன்னார்"-கௌதமன்.

"என்னைப் பார்க்க இங்கு பல தடவை வந்து போயிருக்கிறாரே. அவர் விஷயத்தில் பெண்களுடைய இடம்-சூழ்நிலை எப்படி இருக்கிறதாம்?"-நிர்மலா.

"சரியாகத்தான் நடந்து கொண்டிருக்கிறது"—தலயத்.

"விழாவுக்கு வேறு யாரையெல்லாம் கூப்பிட்டிருக்கிறாய்?" — நிர்மலா.

"புரொபஸர் டோயன்பி, ஸ்டீபென் ஸ்பெண்டார் இருவரையும் நான் அழைத்திருக்கிறேன்"—தலயத்.

"இது விற்பனையாகிவிட்ட-விலைபோன இன்டலெக்சுவல் களின் யுகம். இந்த யுகத்தில் ஆர்ட்டிஸ்டுகளின் விலைமதிப்பு நிர்ணயமாகி விட்டது. கலைஞர்களுக்கு உலகில் மதிப்பு இல்லை என்று யார் சொல்ல முடியும்? பாரேன்! ஆசிய நாட்டுக் கலைஞர்கள்

எப்படியெல்லாம் ஸ்காலர்ஷிப் பெற்றுக்கொண்டு கூட்டம் கூட்டமாக அமெரிக்கா வந்து சேருகிறார்கள்!"

"ஆசியக் கலைஞர்கள் கும்பல் கும்பலாக சோவியத் யூனியனுக்கும் செஞ்சீனாவுக்கும் கூடத்தான் போய்க் கொண்டிருக்கிறார்கள்." பில் கிரேக் சொன்னார். அவர் கடுமையான நடுநிலைவாதி.

வெளியே தேவதாரு மரக்காடுகளில் செம்மை ஒளி பரவியது. "சரி, நாம் கிளம்புவோம். லண்டன் போய்ச் சேர்வதற்குள் நடு இரவாகிவிடும்".

"நீங்கள் போய்விடுவீர்கள். நான் தனிமையில் கிடப்பேன்" நிர்மலா துணுக்குற்றாள்.

"நீ தனிமையில் இல்லை, நிர்மல்! உன்னுடன் நாங்கள் எல்லாருமே எப்போதும் இருக்கிறோம்"-கமால் கட்டிலுக்குள் குனிந்து சொன்னான்.

"நிர்மலா! நான் அடுத்த வாரம் வர முடியாமல் போகலாம். பண்டிட்ஜி (நேரு) இங்கு ஒரு கான்ஃபரன்ஸில் கலந்து கொள்ள வரப் போகிறார்." கௌதமன் பரிவோடு சொன்னான்.

"எனக்காக உன் வேலையில் இடைஞ்சல் ஏற்பட வேண்டாம்" நிர்மலா தீனமாகச் சொன்னாள்.

எல்லாரும் காலரிகளைக் கடந்து வெளியே வந்தார்கள். ஜன்னலில் நின்று கொண்டு நிர்மலா அவர்களுடைய உருவங்கள் தேய்ந்து மறையும்வரை உவகையோடு பார்த்துக் கொண்டிருந்தாள். தேவதாரு மரங்களிடையே இருளில் அவர்கள் போனதிசையைப் பார்த்துவிட்டுப் படுக்கைக்கு வந்தாள்.

# 45

மழை நின்றதும், சம்பாவும் சிரில்லும் அந்தக் கிராமப் புறத்துத் தேனீர் விடுதியிலிருந்து வெளியே வந்தார்கள். லாஞ்சில் அமர்ந்து மற்றவர்களுடன் கேம்பிரிட்ஜுக்குத் திரும்பி வந்தார்கள். வழியில் நதியின் ஓரங்களில் பல பூங்காக்கள் அமைந்திருந்தன. மரக்கிளைகளை மாடிப்படிகளாக நீரோட்டத்தையொட்டி அமைத்திருந்தார்கள்.

நாளையிலிருந்து விடுமுறை. சம்பா சிரில்லைக் கூர்ந்து கவனித்தாள் எல்லாம் சொல்லியாகிவிட்டது இனி ஏதும் மீதமில்லை. சிரில் ஐஷ்லேயிடமும் ஒவ்வொரு விஷயத்திலும் மூளித்தனம் வரத் தொடங்கியிருக்கிறது. பழைய கண்ணன் பாடலைச் சம்பா முணு

முணுத்துக் கொண்டிருந்தாள்.

மறுநாள் அவர்கள் கேம் நதிக்கரையில், படகுத்துறையில் உட்கார்ந்திருந்தார்கள். சிரில்லின் பொன்னிறக்கேசம் காற்றில் அலைந்தது. சம்பாவுக்கு அவன் தன் கணவனைப்போல் உற்றவனாகத் தோன்றினான். உடலில் விதிர்ப்புப் பரவியது. சிரில் தனக்குற்ற கணவன் இல்லை; வேறொருத்தியின் கைப்பிடித்தவன். அந்தப் பெண்ணைச் சம்பா இன்றுவரை கண்டதில்லை. நதிக்கரையில் தோணிகள் கட்டப்பட்டிருந்தன. பசுக்கள் கும்பலாக வந்து தண்ணீர் குடித்தன; நீரில் தம் நிழல்களைக் கண்டு திருப்தியடைந்தன.

சிரில் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த தோணி மீது அமர்ந்து, "சம்பா! உன் பின்புலன் பற்றிக் கொஞ்சம் விவரித்துச் சொல்லேன்" என்றான். சம்பா பேரில் அவனுக்குத் தனிப்பரிவு. பேதைப்பெண் வெகுதூர தேசத்திலிருந்து வந்திருக்கிறாள். தன் ஆதரவில் இங்கு உட்கார்ந்திருக்கிறாள். மிகவும் பாதுகாப்பின்றி இருந்தாள். கடந்த காலத்தில் இவள் பத்திரமாக இருந்திருக்கலாம். ஆனால் அவளுடைய உலகம் எதுவோ? உலகம் மாறிக்கொண்டே இருக்கிறது. வாழ்வுகளும், பிறவிகளும் மாறி வருகின்றன. இந்தப் பெண் தொன்றுதொட்டு அறிமுகமானவளாகவே தோன்றுகிறாள். ரோஸ்மேரி அவனுக்குப் புதியவளாகத் தோன்றினாள். இதை எண்ணியதுமே அவனுள் கிலி படர்ந்தது. சம்பாவுடன் விவரிக்க இயலாத-புலப்படாத பிணைப்பில் இணைந்திருப்பதாகத் தோன்றியது. சிரில்லுக்குத் தன் பேரிலும், சம்பா பேரிலும் பரிதாப உணர்வுதான் கிளர்ந்தது.

"நீயும் என்னை வைத்து நாவல் எழுதப் போகிறாயா?" சம்பா கேட்டாள்.

"இல்லை. வேறு யார் எழுதப் போவது?"

"பில் கிரேக்."

"நான் எழுத விரும்பவில்லை."

"நான் உனக்கு அதிசயப் பிறவியாகத் தோன்றுகிறேனோ?"

"இந்த உலகில் நீ அப்படியொன்றும் அதிசயப்பிறவி இல்லை. உன்னைப்போன்ற பெண்கள் ஏராளமாக இருக்கிறார்கள்—புத்தி சாலியான, இளகிய மனசுள்ள, மனத்துக்கினிய பெண்கள்!"

"இந்த மூன்று அடைமொழிகளால் என்னை முழுமையாக அறிந்து கொள்ளலாமாக்கும்!" சம்பா கண்களை மூடிக்கொண்டு சுய மதிப்பீடு செய்து கொண்டாள். தனது பழைய பின்புலனை நினைத்தாள். பனாரஸ் பகுதி, தன் இல்லம். கூடத்தில் நாற்காலிகள். தந்தை ஹுக்கா குடித்துக் கொண்டிருக்கிறார். வழக்குக் கட்டுக்களைப் பரிசீலித்துக் கொண்டிருந்தார். இந்தக் காட்சியைச் சிரில்லுக்கு விளக்குவது தேவையில்லாதது. அதைத்தாண்டி மேலே சிந்தித்தாள். லக்னோ, ஐ.டி.காலேஜ், கைலாஷ் ஹாஸ்டல், குல்ஃபிஷான்...

ஆனால் குல்ஃபிஷான் அவள் வீடு இல்லை. அவள் வீடாக ஆகியிருக்கலாம்...

"அதோ பார்! உன் கடந்த காலத்திலிருந்து கிளம்பி யார் வருகிறார், பார்!" சிரில் சொன்னான். கமால் தொலைவில் வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

"ஹலோ சம்பாபாஜி! ஹலோ சிரில்!" கமால் அருகில் வந்ததும் பரிந்துரைத்தான்.

"ஹலோ!"

"நேற்றுக் காலையில் நாங்கள் உங்களை ரோட்-ஹவுஸில் பார்த்தோம்."

"ஆமாம்."

"நாங்கள் கொஞ்சம் அவசரத்தில் இருந்தோம்."

"அதனாலென்ன? நீ உட்கார்!"

கமால் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த தோணி மீது உட்கார்ந்தான்.

"நான் சிரில்லுக்கு லக்னோ பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன்." சம்பா தெரிவித்தாள்.

"அவசியம்" கமால் மரியாதைக்குத் தன் ஆதுரத்தை வெளிப் படுத்தினான். 'இவள் இங்கேயே உட்கார்ந்திருக்கிறாள். உலகம் எவ்வளவு தொலைவுக்குப் போய்விட்டது!' வருத்தத்துடன் கமால் யோசித்தான். கமாலின் கவலையை ஊகித்துக் கொண்ட சம்பா, "நீ என்னை ஒருக்காலும் புரிந்து கொள்ளப் போவதில்லை, கமால்!" என்றவள் தொடர்ந்தாள்: "நீ எப்போதும் என்னைத் தவறாகவே புரிந்து கொண்டிருக்கிறாய். நான் பிறரைப் பூஜிப்பவள் என்பது உன் கணிப்பு. நான் கண்டு அனுபவித்த தொடர்புகொண்ட பொருள்களை மறக்க முடியவில்லை. நான் அதிகப் புத்திசாலியாக இருந்திருந்தால் உன் ஃபிலாஸஃபியைக் கற்றிருப்பேன். எனக்கும் தன்னுணர்வு ஏற்பட்டிருக்கும்."

பிறகு சிரில்லைப் பார்த்து, "மாரிக் காலத்திற்குப் பிறகு 'சாந்த் பாக்' பூங்காவின் மாறிவரும் வனப்பை நீ கண்டிருந்தால்? ராம் நகரின் மண்சாலை உனக்குப் பழக்கமாகியிருந்தால்... வேண்டாம் சிரில்! நான் உனக்கு என் பின்புலம் பற்றி விளக்க இயலாதவள். மிகச் சிரமம்; நீ புரிந்து கொள்ளவும் மாட்டாய்."

"நான் சொல்லுகிறேன்," கமால் முன்வந்தான். நினைவால் அவன் பழைய காலத்திற்கே போய்விட்டான். அந்தக் காலத்திய காட்சிகளின் உள்நிலையை அவனைவிடச் சிறப்பாக அறிந்தவர் வேறு யார்? அது அவனுடைய பேரன்புக்குரிய இந்தியா!

"கேள்! ஞானவதி கழுத்தில் குழைகள் தவழ ஏமன் இயற்றிய பாடலொன்றை ரசித்துப் பாடிக் கொண்டிருக்கிறாள். அந்தப் பாடலின் பொருளை எப்படி விளக்குவது? இயலாது. திருமண

நாட்களில் வெளிக்கூடங்களிலும் படுதா மறைப்புகள் தொங்கும்; மணைகள் மீது அமர்ந்து மீராசின் பெண்கள் மங்கல கீதங்கள் இசைப்பார்கள். கண்ணனைப் போற்றும் பாடல்கள்! இதன் உள் சுவையை மேற்கத்திய சமூக இயல் நிபுணன் ஒருவன் எப்படி அனுபவிக்க முடியும்? அந்தக் காட்சியின் அழகைத்தான் எவ்வாறு ரசிக்க முடியும்? 'என் கார்முகில் வண்ணன் கண்ணன், என் மன்னன்!' இந்தக் காட்சியை?"

"மேலும், என் வீட்டு மீராசின் பெண்கள் பாடுவார்கள்—'மங்கலம் பாடுவோம், கோலம் போடுவோம், மல்லிகை மாலை கொண்டுவா!' சிரில்! மல்லிகை மாலை பார்த்திருக்கிறாயா?" சம்பா கேட்டாள்.

இப்படியே இருவரும் பல பழைய காட்சிகளை வர்ணித்தார்கள். நௌடங்கி நாடகம், கிராமியப் பாடல், விழாக்கள், முஷையரா கவியரங்கம், கவ்வாலி பாட்டுக் கச்சேரி இப்படிப் பல காட்சிகளை விவரித்தார்கள். கமால் பல பிரபல உருதுக் கவிஞர்களான இந்துக் களைப் பெருமையுடன் குறிப்பிட்டான். அவனால் தொடர்ந்து கடந்த கால நினைவுகளில் கரைந்திருக்க முடியவில்லை. வெளியேறத் தவித்தான். ஆனால் எதிரே கடந்த காலத்தின் உயிர்ச் சின்னமாகச் சம்பா அமர்ந்திருந்தாள். காலத்தின் சூறாவளியில் சம்பா ஒரு சருகுபோல் பறந்து அல்லல்படுவது போல் தோன்றியது. அவள் தன் கைப்பிடிக்கு வரவில்லை. எட்டவே முடியவில்லை. பயப்பிராந்தி யுடன் அவன் எழுந்தான்.

"கமால்! எனக்கு வேறேதாவது சொல்லேன்!" சிரில் ஏதோ மாஜிக் வித்தையால் பாதிக்கப்பட்டவன்போல் கேட்டுக் கொண்டான்.

"வேறு எதைச் சொல்வேன்?" கமால் விசனத்துடன் பதில ளித்தான். போட்ஹவுஸ் படிகளைக் கடந்து நின்றான். எதிரே நதிப் பிரவாகத்தைக் கண்டான். அந்தக் கேம்நதி கோமதிநதியாக மாறியது.

"கமால் இதைக்கேள்!" சம்பா ஏதோ நினைவை உயிர்ப்பித்துக் கொண்டு பேசினாள்: "இரவுக் காட்சி. நாய்கள் குரைக்கின்றன. எங்கும் அமைதி. பறவை-பூச்சிகள் முதற்கொண்டு தூங்குகின்றன. கர்பூஜ் தோட்டத்தில் காவலாளிகள் சுற்றி வருகிறார்கள். தோட்டக் காரர்கள் கட்டைகளால் தட்டிக் கொண்டிருக்கிறார்கள். கல் இயந் திரங்கள் சுழன்று மாவைத் தள்ளுகின்றன..."

"நாம் அந்நேரங்களில் பெரும்பாலும் ஹரிசங்கரின் அறையில் கூடுவது வழக்கம். அது மாடியறை. கீழே நதி ஓடிக் கொண்டிருக்கும். அந்த அறையில் கூடியிருந்து உலகத்துப் பிரச்சினைகளை அலசி ஆராய்வோம். அந்த மாதிரி அறையும், அது போன்ற குழாமும் உலகமெங்குமே இருக்கிறது. உலகின் வடிவமைப்பு இன்னும் இறுதியாகவில்லை; தெளியவில்லை. பல திரைகள் வீழ்கின்றன; விலகுகின்றன. மனிதத்தன்மையின் குருதியில் நம் கைகள் கறைபட்

டிருப்பதாக நமக்கே தோன்றுகின்றன. இந்த ரத்தக்கறையை நாம் கழுவவேண்டும். ஆனால், நாம் என்ன செய்திருக்கிறோம், பார்!" சம்பா தன் கைகளை விரித்துக் காட்டினாள்.

பிறகு தொடர்ந்தாள்: "ஒருநாள் நம் கைகளில் ரத்தக்கறை படிந்திருப்பதைக் கண்டோம். இந்தியாவின் பழம் பெருமைகளைப் புகழ்ந்து பேசும் பிரச்சாரகர்களின் கைகளும் ரத்தக்கறை பட்டவை தான் என்பதையும் கண்டோம். நம்மில் பலர் இந்தக் குற்றத்திற்குக் கழுவாய் செய்ய விரும்பவில்லை. மனிதத்தன்மையின் மேன்மையான மதிப்பையும், சமயக் கோட்பாடுகளின் மகோன்னதத்தையும் பற்றி வானளாவப் புகழ்ந்து கொண்டே திரிந்தார்கள்."

"இவர்களைத் தவிர வேறு சிலரும் இருந்திருக்கிறார்களே! உண்மையான தூய மனிதர்கள்." கமால் சம்பாவைப் பார்த்தான்.

"கதீர், கமருன் போன்றவர்கள்தானே?"

கமால் மௌனமாக ஒப்புதல் தந்து, பார்வையாலேயே அவர்களைப் பற்றிப் பேசவும் வேண்டினான். அவனுக்கு அவர்கள் சிறந்த மனிதப் பிறவிகளாகத் தோன்றினார்கள்.

"ஆமாம். காரோட்டி கதீர், கம்ருன், தோட்டக்காரன் ராம் அவதார், ராம்தையா, நம் கிராமத்துக் குடியானவர்கள், வண்டிக் காரர்கள், பெட்டிக்கடைக்காரர்கள், பூவேலைப் பின்னல் செய்தே குருடான கைவினைக்காரர்கள், பல்லக்கு சுமக்கும் போகிகள்—இவர்கள் எல்லாருமே நம்முடைய பின்புலத்தார்கள்தாம். இவர்களை மிஸ்டர் சிரில் ஒருக்காலும் அறிந்து கொள்ள முடியாது." கமால் பேச்சை முடித்தான்.

சம்பா இன்னும் பழைய சிந்தனையிலேயே இருந்தாள். அவள் சொன்னாள். "ஆம்! நம் நதிகள் ஜீவ சிந்தனைகள். நதியும் தொடர்ந்து ஒரு காரக்டர்தான். அவற்றின் பெயர்களைக் கேள்—சரயூ, சாரதா, மந்தாகினீ, மதுமதி, கோமதி...!"

கமாலுக்குச் சலிப்புத் தட்டியது. "பெண்களிடம் இதொரு சங்கடம். பேசத் தொடங்கினால் ஓயமாட்டார்கள். கலையுள்ளம் படைத்தவர்கள் என்பது வேறு விஷயம். நதியைப்பற்றி நான் அதிகம் அறிவேன். எனக்கு எல்லாமே நினைவு இருக்கின்றன. பேச்சுவாக்கில் கௌதமனைக் குறிப்பிடுகிறாள். அவன் இவளை மறந்து வெகு காலமாகி விட்டது. இதை எப்படி இவளிடம் சொல்வது?" கமால் சலிப்புடன் சம்பாவைப் பார்த்தான்.

'இந்தப் பெண்கள் ஏன்தான் இப்படி உணர்ச்சி வசத்தில் உழன்றே தன்னைக் குலைத்துக் கொள்ளுகிறார்களோ? ஆயிரம் ஆயிரம் வருஷங்களாக இப்படியொரு காம்ப்ளக்ஸில் இவர்களைச் சிக்கவைத்தது எது? அவர்கள் சதிகளாக, பத்தினிப் பெண்டுகளாக இருந்தார்களாம். பிறகு சீதை தோன்றினாள்; பிறகு கோபியர்

கூட்டம். இவர்களுக்கு இந்த உலகத்தில் வேறு வேலையே கிடையாதோ? எவனாவது ஒரு அப்பாவியைப் பிடிக்க வேண்டியது; அவனுக்குப் பூஜை, ஆராதனை, வழிபாடு! இந்த அசட்டுப் பெண்கள் எல்லாருமே இப்படித்தான் சிந்திப்பார்கள் போலிருக்கிறது. ஏசு கிறிஸ்து பெருமான் கிடைத்தாலும், அவரையும்கூடத் தங்கவிட மாட்டார்கள்!

"கௌதமனைக் கட்டாயம் கேட்கிறேன். இப்போது நான் போக வேண்டும். நாளை யூத் ஃபெஸ்டிவலில் கலந்து கொள்ள ஜெர்மனி போகவேண்டும். இரவே லண்டன் போய்ச் சேர்ந்து விட்டால், தலயத் என் பயணத்திற்கு வேண்டிய சாமான்களைத் தயார் செய்து வைத்திருப்பாள்." கமால் உரக்கவே சொன்னான்.

"நாங்களும் வருகிறோம்." சிரில் எழுந்தான். அவர்கள் நகர்ப்பக்கம் வந்தார்கள்.

சம்பா கேம்பிரிட்ஜ் வந்ததும், ஹாஸ்டலுக்குச் சென்றாள். கீழே சாலை அமைதியாக ஓய்வு கண்டது. சம்பாவுக்கு மாடியில் அறை. செயிண்ட் ஜான் கடிகாரத்தில் பன்னிரண்டு மணி ஒலித்தது. தொலைவில் ஜீஸஸ்லேனில் யாரோ டிரம்பெட்டில் சோககீதம் இசைத்துக் கொண்டிருந்தார்கள்.

நேரமில்லை! சீக்கிரம்! சீக்கிரம்! மனிதர்களைப் பார்! அவர்களுடைய முகங்கள் எவ்வளவு விகாரமாக இருக்கின்றன. பார்! குரூபிகள். இவர்களை விட்டு ஓடு! நான் எங்கே போவேன்? என் பகைவர்களை, நண்பர்களை, பாதையின் எந்த முக்கத்தில், எந்தத் திருப்பத்தில், அறிமுகமில்லாத திடீர் முடிவிடங்களில், எல்லைகளில் விட்டு வந்தேனோ? ஒருகால் அவர்கள் எங்காவது நாற்சந்தியில் குந்தியிருக்கிறார்களோ? இது நான், அது நீ; மற்ற எல்லாமே-எல்லாருமே என் புரொஜக்ஷன்கள்-நிழல்படங்கள். 'நான்' மட்டும் நிலையானவள். எதிரே சிவப்பு விதானம் கொண்ட கூடத்தில் மணிகள் ஒலிக்கின்றன. காட்டுப்பாதையில் நடக்கும் நான் வன தேவதைகளின் ஒலிகளைக் கேட்டேன். அவை பனிமூட்டத்தில் நீந்தி வந்து என்னை அடைந்தன. குளிர்ந்த நீர்த்தாரைகளில் நீந்திக் கொண்டே நான் உன்னை நினைவு கூர்ந்தேன். எதிரே சிவப்பு விதானமுள்ள மாடி. வசந்தம் பொலிகிறது. ஒற்றையடிப் பாதைகள் விடிகாலையில் உதிர்ந்த மலர்களுள் மறைந்திருக்கின்றன. அவர்கள் இருவரும் இன்னும் இங்கு வந்து சேரவில்லை.

அவர்களுக்கு இங்கே திருமணம் நடக்கப் போகிறது.

ஏரியில் மழை பொழிகிறது. நான் என்றுமே உன்னுடன் இருப்பேன்—என் பெண்மை மாறாதவரையில்...!

லூயிஸ் மெக்னீயின் (Louis Mc Neice) கவிதை ஒலிக்கிறது:

ஆங்கிலக் கவிதையாகவே ஒலிக்கிறது—

I loved my love with a platform ticket,
A jazz song.
A hand bag, a pair of stockings of Paris Sand...
I loved her longs
I loved her between the lines and against the clock.
Not until death
But life did us part.

I loved her with peacock's eyes
And the wares of carthage,
With blasphemy, camaraderice
and bravado and lots of other stuff.

I loved her with my office hours, with flowers and Sirens.
With my budget, my latchkey
and my daily bread,
And so to London and down the
ever-moving Stairs.

சம்பா ஜன்னல் கதவுகளை மூடிவிட்டு, ஹாஸ்டலை விட்டு வெளியே வந்தாள். மூன்றாம் சாமத்தின் அமைதி எங்கும் நிலவியது. 'நாளை காலேஜ் முடியாகிவிடும். நான் எங்கே போவேன்? என்ன செய்வேன்? இந்த சோதனை முயற்சிகூட வெற்றிகரமாக இல்லை.' சம்பா தலையை உயர்த்தி வெகுதூரம் வரைக்கும் பார்வையை ஓட்டினாள். தோட்டங்கள், பூங்காக்கள், கேம்பிரிட்ஜின பசுமைப் பரப்பின்மேல் கார்முகில்கள் கவிந்திருக்கின்றன. சம்பா 'பைக்ஸ்' பகுதியைத் தாண்டி பிட்ஸ் வில்லியம் லைப்ரரிக்குப் போகும் பாலத்திற்கு வந்து சேர்ந்தாள். "ஷோலோம் அலேக்கும்!" சைக்கிளில் விரைந்தவாறே ஒரு யூத மாணவன், பாலத்தில் அமர்ந்திருந்த மற்றொரு யூத மாணவனுக்கு வணக்கம் செலுத்திவிட்டுச் சென்றான்.

"உனக்குக் கடவுள் அருள் இருக்கட்டும்!"

"உங்கள் எல்லாருக்குமே கடவுள் அருள் இருக்கட்டும்" சம்பா மனத்துள் ஒலித்துக் கொண்டாள்.

வாழ்க்கையே படுவேகமும் கடுமையும் கொண்டிருக்கிறது. அதற்குத் தத்துவ விசாரணை வேறா? சுகத்தை நாடி மக்கள் எவ்வளவு இழிவினராகி விடுகிறார்கள்! பாலத்தின் மீதமர்ந்து சித்திரம் வரைந்து கொண்டிருந்த யூத மாணவன் சம்பாவைப் பார்த்து முகம் மலர்ந்தான். "இங்கே வந்து உட்காரேன்! நான் உன்னைப் படம் வரைகிறேன்." சம்பாவிடம் கோரினான். அவன் மனசு ஒடிய வேண்டாமே என்று பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள். "இன்று நம் காலேஜ் வாழ்வுக்குக் கடைசி நாள்.

நாளைக்கு நீ எங்கே போய்ச் சேருவாயோ? இப்போதே உன்னை ஒரு 'ஸ்கெட்ச்' எடுத்து வைத்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்லி வேகமாகப் பென்சிலை ஓட்டினான்.

வரைபடம் உருவாகிக் கொண்டிருந்தது. சம்பா எட்டிப் பார்த்தாள். 'ஸ்கெட்ச்' தாறுமாறாக இருந்தது. அவள் பொறுமையாக, பதவிசாக அமர்ந்திருந்தாள். "இதுதான் என் சரியான தோற்றமாக இருக்கலாம்." தனக்குள் சொல்லிக் கொண்டாள். 'இந்த அரைகுறை ஆர்டிஸ்ட்தான் என்னைச் சரியாகச் சித்திரத்தில் வரைவதில் வெற்றி கண்டிருக்கிறான்.'

"படம் பிடித்திருக்கிறதா?" மாணவன் உவகையோடு வினவினான். "நான் உன்னை மகிழ்ச்சி நிறைந்தவளாகக் காண விரும்புகிறேன். இதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

"என்னை மகிழ்ச்சியுள்ளவாளாக்க உன்னால் முடியாது." கடுமையான குரலில் சொன்னாள்.

"உன்னை மகிழ்விக்கக் கூடியவன் யார்?" சற்று விசனத்தோடு யூத மாணவன் கேட்டான்.

"இது மிக நிர்த்தாட்சண்யமான, கேவலமான கேள்வி."

"மன்னிக்க வேண்டும்" மாணவன் முகம் வாடிவிட்டது.

"நல்லது! குதாஹாஃபிஸ்! ஷோலோம் அலேக்கும்!"

சம்பா புன்சிரிப்புடன் அவனைத் தேற்றினாள்.

"அலேக்கும் ஷோலோம்!" அவள் நதிப்பக்கம் நடந்தாள். அங்கு மைக்கேல், டேனிஸ் இருவரும் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் பக்கம் சென்றாள்.

"சிரில் இன்னும் கிடைக்கவில்லையே!" டேனிஸ் கவலையோடு உரக்கக் கேட்டான்.

"இல்லை."

"எங்கே மாயமாய் மறைந்தான் அந்த சிரில்..." டேனிஸ் கேட்டதும், இரு வாலிபர்களும் சினந்து சம்பாவை முறைத்துப் பார்த்தார்கள்.

"நான் சிரில்லுக்கு கார்டியனில்லை, டேனிஸ்!" சம்பா மெல்லச் சொன்னாள்.

"சம்பா! என்னை மன்னிக்க வேண்டும்." நான் உன் மீதா ஆத்திரப்பட்டேன்.." மைக்கேல் பணிவுடன் சொன்னான். "சரி வா; போகலாம். கடைசித் தடவையாக கோஹிநூரில் சாப்பிட்டு வருவோம்."

"கடைசித் தடவையா...?" எல்லாருமே ஒரு சேர முணுமுணுத் தார்கள். சம்பா இந்த மனநெகிழ்விலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்பினாள். முடியவில்லை. "உண்மைதான்; இன்றைய தினம் கேம்பிரிட்ஜ் மாணவ வாழ்க்கையின் இறுதி நாள்."

ரெஸ்டாரண்டில் உட்கார்ந்துகொண்டு அவர்கள் சிரில்லைப் பற்றி ஏதும் பேசவில்லை. 'மனிதர்கள் ஏன்தான் இவ்வளவு பரிவும் பற்றும் கொண்டிருக்கிறார்களோ! ஒருவருக்கொருவர் கழிவிரக்கம் கொள்ளக் காரணம்? இவர்கள் என் நலன் விரும்பிகளாகவும் இருக் கிறார்கள். நான் ஏன் மறுபடியும் தாழ்வு நிலைக்கு இறங்குகிறேன்?' சம்பா சிந்தித்தாள்.

சில நாட்களுக்கு முன்பு, சம்பா பேச்சுவாக்கில் சிரில்லிடம் ரோஸ்மேரியின் நலன் குறித்துக் கேட்டுவைத்தாள்.

"தேறியிருக்கிறாள். அந்த ஏழைப் பெண் உடல் நலமில்லாத போதும் வேலை பார்க்கிறாள், எனக்காக வேண்டி. கேம்பிரிட்ஜில் என் படிப்பு நிறைவேற வேண்டி..." சிரில்.

"ஆனால் நீயோ வேறு பெண்களைக் காதலித்துப் பொழுது போக்கு!" ஏதோ கவனத்தில் சம்பா சொல்லி விட்டாள். துணுக்குற்று சிரில் ஜன்னலுக்கு அப்பால் குதித்தான்; சினந்தான். முகம் சிவந்திருந்தது. அன்று முதல் சிரில்லைக் காணவில்லை.

எதிர்பாராமல், வெளியே மழையில் நனைந்துகொண்டே சிரில் நிற்பதைக் கண்டார்கள். டேனிஸ் அவனிடம் ஓடினான். அவன் உடன் வரச் சம்மதிக்கவில்லை.

"உள்ளே வா! இதென்ன சிறுபிள்ளைத் தனம்?" வெளியே வந்து சம்பா பரிவோடு கடிந்துகொண்டாள்.

"என்னிடத்திலே பணம் இல்லை. எப்படி வருவது?" டேனிஸிடம் மெல்லச் சொன்னான்.

சம்பாவுக்குச் சுருக்கென்று தைத்தது. இதே இடத்தில்தான் ஒரு வாரத்திற்கு முன்பு சம்பா சிரில்லைச் சாடினாள். 'நீ பிற பெண்களைக் காதலித்துக்கொண்டு சுற்றுவதற்காகத்தானே உன் மனைவி அங்கே வேலை பார்க்கிறாள்.' அந்த நினைவு இப்போது அவளைத் தைத்தது.

சம்பாவைப் பார்த்து சிரில் நிதானமாகச் சொன்னான்: "ரோஸ்மேரி இந்த வாரம் எனக்குச் செக் அனுப்பவில்லை. காரணம், நான் அவளிடம் இருந்து விவாகரத்து செய்து கொள்ள முடிவு செய்திருப்பதாக நானே அவளுக்குத் தெரிவித்து விட்டேன். இப்போது உனக்கு மகிழ்ச்சிதானே?"

"உன்- உன் மூளை முற்றிலும் கோளாறாகிவிட்டது. இப்படியா-!" சம்பா தடுமாறிக்கொண்டே சொன்னாள். அந்தக் கணத்திலேயே அவள் உணர்ந்தாள்: மைக்கேலும் டேனிஸும் தன்னைக் குரோத வெறுப்புடன் பார்க்கிறார்கள்; இதோ குரோத வெறுப்பை முன்பு தஹ்மீனா, நிர்மலா, சாந்தா கிரேக் மூவரின் பார்வைகளிலும் கண்டிருக்கிறாள்.

"ஆமாம்" சிரில் பதிலளித்துவிட்டு, மழைக்கோட்டுக்குள் கைவிட்டு சிகரெட் தேடினான். டேனிஸும் மைக்கேலும் ரெஸ்டா

ரண்டுக்குள் திரும்பிச் சென்றார்கள். சம்பா, சிரில் இருவர் மீதும் மழை கொட்டிக்கொண்டிருந்தது. "கிளம்பு, போகலாம். மழையில் நனைந்து கொண்டிருப்பதில் என்ன லாபம்?" சம்பா அழைத்தாள்.

"எந்தக் காரியத்தில்தான் லாபம் இருக்கிறது?" சிரில்.

"உன் மூளை எங்கோ போய்விட்டது, சிரில்!"

"ஒவ்வொரு நிகழ்ச்சியும் தன்னிடத்தில் தனித்ததாகத்தான் இருக்கிறது. அதை மறுமுறை கொணர முடியாது. ஒவ்வொரு கணமும் அப்படித்தான். கடந்த கணத்தைத் திரும்பக் கொணர முடியாது. உன் வாழ்க்கை... நான்... இந்தப் பொருள்கள். காலத்தின் துன்ப முடிவுக்காக நீ சிரித்து மழுப்ப முடியாது."

"சரி, கிளம்பு! நான் உன்னோடு வருகிறேன்." சம்பா மெல்லச் சொன்னாள். இருவரும் நடைபாதையில் சோர்ந்து தளர்ந்து-இடு காட்டுக்குப் போவது போல் சென்றார்கள். அறிமுகமான பெண்களோ-பையன்களோ தென்பட்டபோது சிரில் மிக இதயத் தயக்கத்துடன் "ஹலோ! ஹலோ!' என்று சொல்லிப்போனான்.

"நீ உண்மையாகவே எனக்காக... அதாவது. நீ... என்னை வேண்டி..." சம்பாவால் பேசமுடியவில்லை. "கடைசியில் நீ எப்படி இவ்வளவு பெரிய முடிவை மேற்கொண்டாய்?" தனக்காக ஒருவன் ஒரு முடிவு செய்வதை அவளால் இதுவரையில் புரிந்துகொள்ள முடியவில்லை.

"இல்லை, அதெல்லாம் இல்லை. உன்னுடைய வெறிபிடித்த நாய் என்னைக் கடித்துவிட்டது." சிரில் தன்னுணர்வுடன் பதில் சொன்னான். "சில சமயங்களில் எனக்கு உத்வேகக் காய்ச்சல் வந்து விடுகிறது. மூளை கொந்தளிக்கிறது. அப்போதெல்லாம் நான் இத்தகைய விசித்திரக் குளறுபடிகளைச் செய்துவிடுகிறேன்."

சம்பா நாற்சந்திக்கு வந்ததும், சட்டென்று ஹாஸ்டல் பக்கம் திரும்பினாள்.

"எனக்கு லாபம் ஏற்படுத்தத்தான் என் ஹாஸ்டல் பக்கம் வந்து கொண்டிருந்தாயா?"

"நான் உன்னுடன் பேச விரும்பவில்லை, சிரில்! நான் உனக்கு எவ்வித லாபமும் ஏற்படுத்த முடியாதவள்."

"இதுதான் உன் இறுதியான-உண்மையான பதிலா?" சிரில்லின் முகம் வெளிறிவிட்டது.

"இறுதியானது, உண்மையானது, நிச்சயமானது! இதில் சந்தேகத்திற்கே இடமில்லை." சம்பாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"நல்லது! நல்லது! தெருவில் கத்தாதே. சம்பா! என்னை மன்னித்துவிடு. குற்றம் என்னுடையதுதான். கடவுள் அருள் பாலிப் பாராக" சிரில் மூச்சை அடக்கிக்கொண்டு சொன்னான். மழை

உக்கிரமாகியது. வீடுகளில் தொங்கிய திரைகள் நடுங்கின. குளிர்ந்த காற்றில் ரோஜா மணம் கமழ்ந்தது.

மாலையில் சில பேப்பர்களைக் கொண்டுவர, சம்பா சிரில்லின் கல்லூரி, ஸிட்னி ஸக்ஸெஸ் போயிருந்தாள். இரவு டிரெயினில் பல நண்பர்கள் சொந்த ஊர்களுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். பலர் மழைக்காக வெளிக்கதவுப்பக்கம் ஒண்டியிருந்தார்கள். வெளி மண்டபத்துக் கதவுகள்—பதினைந்தாம் நூற்றாண்டில் செய்யப்பட்ட பெரிய மரக்கதவங்கள்--கடைசி முறையாகத் திறந்து மூடப்படப் போகின்றன. இதற்குப் பிறகு இங்கு வரப்போகிறவர்கள் பல மாறுதல்களைக் காணப்போகிறார்கள். சம்பா எதிர்ப்பட்டவர்களிட மெல்லாம்—தோட்டக்காரர், சமையல்காரர் ஆகியோரிடம்— விடை பெற்றுக் கொண்டாள்; வணக்கம் வாழ்த்துக்கள் தெரிவித்தாள். ஏதோ போர்க்களத்திற்குப் புறப்படுபவளைப்போல! உலகமே முடியப் போகிறதோ?

கல்லூரி முழுவதிலுமே பேரமைதி. மழை இரைச்சலும், இலை களின் சலசலப்பும் மட்டுமே ஒலித்தன. சிரில் ஐஷ்லே, கமால் ரூமில் ஜன்னலுக்கெதிரே சோஃபாவில் அமர்ந்து பகுத்தறிவுப் போட்டியில் முனைந்திருந்தான். சம்பா உள்ளே வந்தாள். இதைக் கவனிக்காமலேயே அவன் விடை காண்பதில் முனைந்திருந்தான். சம்பா மற்றொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அருகில் அமர்ந்ததும், தனக்குத் தோன்றாத ஒரு புதிருக்கு அவளிடம் விடை கேட்டான். சிந்தித்து அவள் விடை சொன்னாள்.

“நீ சொன்னது சரியாகவே இருக்கும்.” சுத்தமான பிரிட்டிஷ் தோரணையில் சொன்னான்.

சம்பா திகைத்தாள். எதிரே பழைய சிரில் இல்லை, பொன்னிற முடியுள்ள வாலிபன், ஒரு பிரிட்டிஷ் பிரபுவின் மகன், பரம்பரைவாதி, மேம்போக்கானவன், செருக்குள்ளவன் அமர்ந்திருப்பதை உணர்ந்தாள். இந்த வாலிபனோடு சில ஆண்டுகள் கல்லூரியில் படித்திருக்கிறாள்; சகமாணவன் என்கிற காரணத்தால் நலம் விசாரித்துவிட்டுப்போக வந்திருந்தாள். ஆனால் அன்று பார்த்த வாலிபனா இவன்? ஒரு மாணாக்கனாக இருந்தபோது மணிக்கணக்கில் பித்தான பேச்சில் ஈடுபட்டிருப்பான்; உல்லாச ஓடப்பயணம் செய்வான்; வயல் வரப்புகளில் ஓடித்திரிவான், பாடுவான். சம்பாவின் உள்ளம்—ஆத்மா இரண்டின் சுழலிலும் நிர்ப்பயமாகக் குதிக்க ஆயத்தமாக இருந்தான்; காலை நேரங்களில் மழையில் நனைந்து கொண்டு அவளிடம் தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டி வந்தான். இந்த வாலிபன் லார்டு வாரன்ஃபீல்டின் இளையமகன் சிரில் டேரிக் எட்வின் ஐஷ்லே. இப்போது இவன் பகுத்தறிவுப் போட்டியில் சரியான சொல்லைத் தேடி மூளையைக் குழப்பிக் கொண்டவாறு, சம்பாவிடம்

கேட்கிறான்: "நீ இன்னும் போகவில்லையா? எந்த டிரெயினிலே கிளம்பப் போகிறாய்?"

"ஆறரை மணி டிரெயினில்!" கடிகாரத்தைப் பார்த்துவிட்டுக் கேட்டாள்: "நீ எப்போது லண்டன் வரப்போகிறாய்?"

"நான் எப்போது வந்தால் என்ன? நாம் இனி சந்திக்க முடியாது. என் ஆயுள் பூராவும் உன்னைச் சந்திக்காமல் இருக்கவே விரும்புகிறேன்."

சம்பா வாயடைத்திருந்தாள். காற்றின் குளிர்சசி அறைக்குள் ஈரிப்பைக் காட்டியது. சட்டென்று சம்பா கலகலப்பாகப் பேசத் தொடங்கினாள். யூனிவர்சிடியை விட்டபின், தன் குழுவினர் கொண்டுள்ள திட்டங்களை விவரிக்கத் தொடங்கினாள்: "நான் மேலே சட்டம் படிக்கப் போகிறேன்."

"வாழ்த்துக்கள்! அதற்குப் பிறகு என்ன செய்யப் போகிறாய்?"

"சோதிடம் ஆருடம் ஏதும் தெரியாதே எனக்கு; அறுபத்திரண்டில் என்ன செய்யப்போகிறேன்; அறுபத்தைந்தில் என் தீர்மானம் எப்படி இருக்கும் என்று நான் எப்படிச் சொல்வேன்?" பதிலில் மகிழ்ச்சிப் பொலிவைக் காட்டத் தவறவில்லை.

"இதுவும் சரிதான்", பத்திரிகையில் முகத்தைப் புதைத்துக் கொண்டான்.

"நீ அநேகமாக டாக்டரேட் வாங்கிய பிறகு, இங்கு விமரிசன மென்று தடித்தடிப் புத்தகங்களை எழுதிக் கொண்டிருப்பாய். உலகம் கசமுசக்கும்."

"இருக்கலாம்."

"அல்லது டாக்டரேட்டில் சலிப்பேற்பட்டு பாங்க் ஆஃப் இங்கிலாண்டில் வேலைக்குச் சேர்ந்து விடுவாய்!"

"அப்படியும் இருக்கலாம்."

"சரி, இனி நான் கிளம்ப வேண்டும்." கடிகாரத்தைப் பார்த்துவிட்டு சொன்னாள்.

"நான் உன் இடத்திலிருந்தால் இப்படி நேரம் போக்க மாட்டேன். டிரெயினுக்கு நேரம் நெருங்கிக்கொண்டிருக்கிறது." சிரில் எழுந்து நின்றான்.

வாசல் கீழே இருந்தது. பல நூற்றாண்டுகளாக எண்ணற்ற மாணவர்கள் இதே வாசல்புறத்தின் வழியாக வெளியேறியிருக்கிறார்கள்; நின்று வணக்கம் சொல்லியிருக்கிறார்கள்; வெளியுலகுக்குத் தள்ளப்பட்டிருக்கிறார்கள்.

சிரில் குனிந்து வணக்கம் செலுத்தினான். வெளிப்பக்கம் கை நீட்டியவாறு வழிகாட்டி நின்றான். "இத்தனை காலமாக உன்னை அறிந்து, உன்னோடு நட்புக்கொண்டு பழகியதில் எனக்கு அளவற்ற மகிழ்ச்சி. கடவுள் அருள்வாராக! வணக்கம்!" ஒவ்வொரு சொல்

லையும் திருத்தமாக உச்சரித்தான்.

சம்பா கொடி மூட்டத்திற்கடியில் குனிந்து வெளியே வந்து சேர்ந்தாள். "நீ என்னை வழியனுப்ப வெளிகேட் வரைக்கும் வர மாட்டாயா?" தனிமையின் வெறுமையை நினைத்து அஞ்சியவளாய் சம்பா கேட்டாள்.

"வருவதற்கில்லை. பகுத்தறிவுப் போட்டிப் புதிர்களைத் தீர்க்கவேண்டும்." திரும்பி உள்ளே சென்று விட்டான்.

சிரில் சரியாகத்தான் சொன்னான், அன்றைக்குப் பிறகு சம்பா சிரில் ஐஷ்லேயைச் சந்திக்கவே இல்லை!

# 46

மேட்டில் சானிடோரியத்தின் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. இருட்டில் கலங்கரை விளக்கம்போல் அது காட்சி அளித்தது. புலப் படாத சாரணர் கூட்டம் ஆபத்தான மலையுச்சியில் அபாய அறிவிப்புக்காக எரிமூட்டிக் காட்டுவது போலவும் தோன்றியது. தொலைவிலிருந்து பார்க்கும்போது, இருளுக்கிடையில் மினுக்கும் விளக்கொளிகள் 'வாழ்வு ஒளிரும், பிறகு அணையும்; பிரகாசிக்கும், அஸ்தமிக்கும்' என்பதைப் புலப்படுத்தின.

கௌதம நீலாம்பரன் பஸ்ஸிலிருந்து இறங்கி, விளக்கொளிகளால் ஒளிரும் படிக்கட்டுகளைக் கடந்து நிர்மலா படுத்திருக்கும் அறைக்கு வந்து சேர்ந்தான். கௌதமனைக் கண்டதும் நிர்மலா கிளர்ந்து மலர்ந்தாள். அவன் வருவதற்கு முன்பு சுவர்ப் பக்கம் திரும்பிப் படுத் திருந்தாள். என்ன சிந்தித்துக் கொண்டிருந்தாளோ?

"மைடியர்!" கௌதமனின் குரல் அவன் கண்டத்திற்குள்ளேயே இடறியது. சந்தடிமிக்க-சுயநலமிக்க வெளியுலகம் தன் துயரங்களைத் துறந்து அமைதியாக யாருக்காக, எதற்காகக் காத்திருக்கப் போகிறது?

கௌதமனைக் கண்டதும் நிர்மலா எழுந்து உட்கார்ந்தாள். விரல்களால் முடியைக் கோதிச் சரிப்படுத்திக் கொண்டாள். பக்கத்தில் சிறு கண்ணாடி கூட இல்லையே என்று சலித்துக் கொண்டாள்.

"அடடே! நீ நல்ல ஆரோக்கியமாக இருக்கிறாயே! உடம்பு நன்றாகத் தேறியிருக்கிறது."

"வெறுமே அளக்கிறாய்! என் டெம்பரேச்சர் சார்ட்டைப் பாரேன். இன்றைக்குக்கூட நூற்று ஒன்று டிகிரி ஜுரம். மாதக் கணக்காக இதே நிலைதானே" கர்வப்படுபவள்போல் சொன்னாள்.

கௌதமன் மனப்பளுவுடன் அவள் பக்கத்தில் அமர்ந்தான். அவள் தன்னை மகிழ்ச்சியுள்ளவளாகக் காட்டிக் கொண்டாள்.

"நிர்மலா! நான் உன்னைச் சரியாகவே கவனித்து வரவில்லை. ஆனால் நீ என் ஆத்மாவில் லயித்திருக்கிறாய்."

அவனுக்கே உறுத்தியது. ஒரே சமயத்தில் இரு பெண்களை அவனால் எப்படி நேசிக்க முடியும்? சம்பா, நிர்மலா. ஆனால் சம்பா விடமுள்ள எவ்வித ஆபத்தான தன்மையும் இந்தப் பெண்ணிடம் கிடையாது. இவள் எளியவள், மகிழ்ச்சி நிறைந்தவள், பண்புள்ளவள், புனிதமானவள்.

சம்பா 'இவ்வுலக மாது' (வுமன் ஆஃப் த வேர்ல்ட்) ஆகி விட்டாள். எப்போதும் தன் ஆபத்தான மேனி வனப்பால் ஆண்களைக் கவர்ந்து கிளர்த்தி வருகிறாள். அனுபவசாலி; உலகியலில் ஏற்றம்-இறங்கங்களைக் கண்டவள், இவ்வளவு இருந்தும் தன்வசமற்றவள். நிர்மலா இப்போது மரணப் படுக்கையில் கிடக்கிறாள். வீட்டுக்கு அடங்கிய பெண், குடித்தனப் பாங்குள்ளவள், உலகாயத அனுபவம் குறைவு. ஆவல்-காதல் கொண்டவள். கௌதமன் சம்பாவை மறந்து விடுவான். கடந்த ஐந்தாண்டுகளாக எவ்வளவோ முயன்று சம்பாவின் நினைவுச் சுழலிலிருந்து விடுபட்டு வந்திருக்கிறான். வெளிநாட்டில், நெருக்கமான நண்பர் குழாத்தில் கலந்திருப்பதால், சம்பாவைச் சந்திக்காமலிருக்க முடிந்திருக்கிறது. ஆனால் சம்பாவின் அழைப்பை—அறைகூவலைப் புறக்கணிக்க அவனால் முடியவில்லை. அக்குரல் மெட்ரிட், ரோம், வியன்னா மாநகர்களில் ஒலிக்கும் வாத்திய இசை களில் எதிரொலிக்கிறது. மழை இரைச்சலில், அங்காடிச் சந்தடியில், உணவு விடுதிக் கலகலப்பில், அட்லாண்டிக் கடல் அலைகளின் ஆர்ப்பரிப்பில், நியூயார்க் நகரின் கோலாகலத்தில் எல்லா இடங் களிலும் அக்குரல் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. அமைதி அவன் பாக்கியத்தில் கிடையாதோ என்னவோ? சம்பா ஒலி-இரைச்சல்; நிர்மலா சாந்தி-அமைதி. சம்பா கௌதமனிடம் எவ்வளவோ பேசியிருக்கிறாள்; எல்லாம் நினைவில் இருக்கின்றன. பாட்டு முடிந்தாலும், அதன் எதிரொலிப்பு காற்றில் தொனித்துக் கொண்டிருப்பதுபோல. அந்த நேரம், இடம், சூழ்நிலை எல்லாமே தொடர்கின்றன. நிர்மலா மௌனமாக இருந்தாள்—கோமதி நதியைப் போல. நிர்மலா ஒருபோதும் அவனிடம் சொந்த விவகாரங்களைப் பேசியதில்லை. சம்பாவின் ஒவ்வொரு பேச்சும், முறையும், கருத்தும் பிறருடன் புலனாகாத—மிஸ்டிக் தொடர்பை நிறுவி விடுகிறது. நிர்மலா பக்கம் அவன் குனிந்து, '...இப்போது எனக்குக் கொஞ்சம் அமைதியைக் கொடுத்தருளேன்!' என்று மனத்துள் சொல்லி வைத்தான்-ஒத்தினான்.

"கௌதம்!"

"என்ன, டியர்?"

"சுரேகாவின் புதிய ப்ளாட் எப்படி?"

விரிவாக அந்தக் குடியிருப்பை விவரித்தான். "குணமானதும், நீயே நேரில் வந்து பார்க்கப் போகிறாய்."

"நிச்சயம்" உற்சாகத்துடன் பதிலளித்தாள்.

"இப்போது புதிய பெரியவர் ஒருவர் வந்திருக்கிறார்; பெயர் துகியா பாகல்புரீ."

"வேடிக்கையான பெயர்! ஒரு தினுசோ?"

"மகா அழுத்தம்."

"சந்திரா இருக்கிறாளோ?"

"ஆகா!"

"இரவு நேரமாகிவிட்டது. கௌதம் மாஸ்டர்!" வழக்கம்போல் கமாலும் ஹரிசங்கரும் கூறுவதைப்போல் பேசினாள்.

"ஆமாம்." கௌதமன் எழுந்தான்.

"அடேடே! ஒரு விஷயம் கேட்க மறந்துவிட்டேன்! எவ்வளவு பெரிய தகவல்!" உற்சாகம் மலர்ந்தது.

"என்ன?"

"சம்பாபாஜி இறுதித் தேர்வு எழுதிவிட்டு, கேம்பிரிட்ஜிலிருந்து லண்டன் வந்திருக்கிறாளாமே! நேற்று தலயத் சொன்னாள். உனக்குத் தெரியுமோ?"

"தெரியாதே!" பிறகு தன் மனத்துள் பலபடி வைது கொண்டான்.

"அப்படியா தலயத் உன்னிடமும் சொல்லியிருப்பாள் என்று நினைத்தேனே. பாவம், அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வா!" இயல்பாக - எளிமையாகச் சொல்லிவிட்டாள். பிறகு படுத்துக் கொண்டாள்.

"எனக்கு இதற்கெல்லாம் நேரம் கிடையாது, நிர்மல்?" முகத்தைத் திருப்பிக்கொண்டு சொல்லிவிட்டு, அவளைப் பரிவுடன் பார்த்தவாறு, "என் இல்லத்தரசியே! கடவுள் அருள் புரியட்டும்!" என்று உளமாரச் சொல்லிவிட்டு வெளியே வந்தான்.

நிர்மலாவின் ஆறாவது உணர்வுப் புலன் விழிப்புற்று, அறிவித்தது: 'கௌதமன் பொய் சொன்னான்!' சம்பா வந்திருப்பது அவனுக்குத் தெரியும். அவன் முக மாறுதலிலிருந்து ஊகித்துக் கொண்டாள். அவன் சம்பாவைக் கட்டாயம் சந்திக்கப் போகிறானானென்பதை.

நிர்மலா மெல்ல நகர்ந்து பெட் சுவிட்சை அழுத்தி விளக்கை அணைத்தாள். சுவர்ப்பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டாள் பழையபடியே!

கௌதமன் நிர்மலாவிடம் பொய் சொன்னான். அன்றைய தினம், அவன் லிட்ஹர்ஸ்ட் புறப்படுவதற்குச் சற்றுநேரம் முன்புதான் தொலைபேசி மணி ஒலித்தது. ரிசீவரை எடுத்துக் கேட்டான். குரல்

தெரிந்தது.

"கௌதம்...! ஹலோ...! மிஸ்டர் கௌதம்!"

கௌதமன் பதில் பேசவில்லை.

"கௌதம் நீலாம்பர்!" மறுமுனையிலிருந்து சம்பா பேசினாள்: "என்னப்பா என் குரல் கேட்கவில்லையா?"

"கேட்டுக் கொண்டிருக்கிறேன்."

"ஷேம்! ஷேம்!" இயல்பாகவே பேசினாள்: "எங்காவது தண்ணீரில் மூழ்கிச் செத்துப்போ! நான் இத்தனை காலமாக இங்கே இருந்து வருகிறேன். நீ ஒருநாள்கூட என்னைச் சந்திக்க வரவில்லையே! ஏன்? நான் உன்னைக் கடித்துத் தின்றுவிடுவேனா?" பிறகு சுவையாகச் சிரித்தாள்.

கௌதமன் பேசவில்லை. இவ்வளவு பெரிய டிப்ளமெட், பேச்சில் நிபுணன்-இவனால் இப்போது ஏதும் பதில் தர முடியவில்லை!

சம்பா சொன்னாள்: "நான் கேம்பிரிட்ஜிலிருந்து வந்து விட்டேன். ஜேன் கார்ட்டரோடு தங்கியிருக்கிறேன். என்றாவது ஒருநாள் இங்கே வாயேன்!"

"சரி வருகிறேன், சம்பா!" கௌதமன் தடுமாறிக் கொண்டே சொல்லி வைத்தான். மறுமுனையிலிருக்கும் சம்பா தன் குரலைக் கேட்டு மகிழ்ந்து குதூகலித்திருக்கிறாள் என்பதைக் கௌதமன் எப்படி அறிவான்? உலகத்துச் செல்வமெல்லாம் கைக்கு வந்துவிட்ட மாதிரி அவள் பூரித்திருக்கும் பொலிவை அவனால் பார்த்திருக்க முடிந்திருந்தால்?

நிர்மலாவைச் சந்தித்துவிட்டுத் திரும்பியதும் இரவு பன்னிரண்டு மணியாகியது. தன் விடுதிக்குள் வந்து, பதற்றத்துடன் போனை எடுத்தான். ஜான் கார்ட்டரின் நம்பருக்கு டயல் செய்தான்.

"ஹலோ.. யார்?" ஜான் கார்ட்டரின் தூக்கக் கலக்கமான குரல் ஒலித்தது.

"மிஸ் அஹமத் இருக்கிறாரா?"

"நீங்கள் யார்?"

"நீலாம்பர்."

"ஓஹ்ஹோ...! ஹலோ, மிஸ்டர் நீலாம்பர்! மிஸ் அஹமத் இப்போது எங்கோ வெளியே போயிருக்கிறார்.

"அப்படியா! சரி!"

"ஏதாவது முக்கியமான சமாசாரமா?" கௌதமனின் குரலில் தொனித்த கலக்கத்தை உணர்ந்து ஜான் கேட்டார்; பிறகு, "பிரோஸ், சுரேகா, ஜரீனா, அம்லா, தலயத்—இவர்களுக்கெல்லாம் போன் செய்து பாருங்கள். தகவல் கிடைக்கலாம்."

"தாங்க்யூ வெரிமச்! அப்படியொன்றும் முக்கிய காரியமில்லை.

குட்நைட்!" தன் மடமையைக் கௌதமன் சாடிக் கொண்டான். ரிசீவரை வைத்துவிட்டு, சிகரெட் பற்றவைத்துக் கொண்டு, ஜன்னல் எதிரே போய் நின்றான்.

# 47

முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு கமால் சொன்னான்: "நான் ஒரு புத்தகம் எழுதப்போகிறேன். பெயர்: போர்ட்ரெய்ட் ஆஃப் தி ஆர்டிஸ்ட் ஏஜ் எ டான் ஜுவான். ஆமாம்!"

அவர்கள் சுரேகாவின் விசாலமான வரவேற்புக் கூடத்தில், தரையில் கால் விரித்து உட்கார்ந்திருந்தார்கள். அறைக்கதவு தோட்டத்துப் பக்கமாகத் திறந்திருந்தது. சுரேகா வாசல் பக்கம் அமர்ந்து பின்னல் தையலில் முனைந்திருந்தாள். தலயத்தும், பிரோஸூம் அடுக்களை வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். ஹரிசங்கர் வாஷிங்டனிலிருந்து வந்திருந்தான்; காஹிரா போகப்போகிறான். "இந்த ஹரிசங்கரும், கௌதமனும் கொண்டாட்டமாகத்தான் இருக்கிறார்கள். இப்னபதூதா மாதிரி உலகம் சுற்றும் பயணிகள்! காலையில் கௌதமன் போன் செய்தான்; மாஸ்கோ போகிறானாம்." குல்ஷன் தெரிவித்தார்.

"கௌதமன் ஹுவான்சாங் கூட! அடிக்கடி சீனா போய் வருகிறான்."—கமால்.

தோட்டத்தில் அமர்ந்திருந்த சம்பா மாதுர் புதுப்பாட்டைத் தொடங்கிவிட்டாள். சந்திரா இவர்களுடைய பழைய தோழி. நியூ யார்க்கிலிருந்து தில்லி போகிற வழியில் லண்டனில் இப்போது ஜரீனாவோடு தங்கியிருக்கிறாள். வரவேற்புக் கூடத்தின் ஒரு மூலையில் துகியான் சாகப் சுரேகாவின் கணவர் குல்ஷன் அஹுஜாவோடு மும்முரமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்.

மிகச்சுவையான, ரம்மியமான அமைதி நிறைந்த ஞாயிற்றுக் கிழமை இது. காலையில் சம்பா ஜான் கார்ட்டர் வீட்டிலிருந்து புறப்பட்டாள். சுரேகாவைச் சந்திக்கப் பஸ்ஸில் ஏறி அமர்ந்ததும், கிழ கண்டக்டர் சம்பாவைப் பார்த்து மகிழ்ச்சி ததும்ப, "மைடியர்! நீ பார்க்க மிக அழகாய் இருக்கிறாய், பெண்ணே! உன் பாய் பிரண்ட் உன்னைக் கண்டதும் சொக்கிப் போவான்." என்றான்.

சம்பா அகமகிழ்ந்து போனாள். நேற்று கௌதமனுக்கு போன் செய்து பேசிக்கொண்டிருந்தாள். பல வருடங்களுக்குப் பிறகு அவன் குரலைக் கேட்க முடிந்தது.

சம்பா சுரேகா வீட்டுக்குப் போனாள். அங்கே நண்பர்கள் குழுமியிருந்தார்கள். மிக்க மகிழ்ச்சியுடன் ஒவ்வொருவரோடும் பேசிக்கொண்டிருந்தாள்.

"மிஸ்டர் ஹரிசங்கர்!" தலயத் அடுக்களையிலிருந்து குரல் கொடுத்தாள். தோட்டத்து வாசலில் நின்று கொண்டிருந்த ஹரிசங்கர் திரும்பிப் பார்த்தான். தலயத்திடம் சென்றான். "இந்தா! சூடான பூரிகள். சம்பாபாஜி எங்கே? இந்தப் பிளேட்டுகளை அவளுக்குக் கொடு!" தலயத் ஏவினாள்.

குல்ஃபிஷான் மாளிகையின் சுமுகமான சூழ்நிலை இங்கும் நிலவியது. குடும்பம் - வீடு. சம்பாவுக்கு ஒருக்காலும் இந்த வாய்ப்பு கிட்டாது. ஜன்னல் பக்கம் அமர்ந்திருந்த அவளுக்கு ஒரு கணம் விதிர்த்து விட்டது. ஹரிசங்கர் கையில் பிளேட்டுகளுடன் சுற்றும் தேடினான். அவளைக் கண்டதும் பல பழைய நினைவுகள் ஹரிசங்கருக்குக் கிளர்ந்தன. பாரிஸ் நகரத்து மங்கலமான பகலவன், சுணக்கமான-அலுப்புள்ள மானசீக வாழ்வு, தொடர்ந்து தத்துவ சிந்தனை, புதிய பிரெஞ்சு இலக்கியம், கேம்பிரிட்ஜின் குவாட்ரெங்கல், இப்படிப் பல...! 'சம்பா! நீ மிக விரைவில் ஒரேயடியாக இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குப் போய்விட்டாய்! இப்போதெல்லாம் நீ வாய்விட்டுச் சிரிக்கிறாயோ, இல்லையோ? அந்த ரங்கமான - மானசீகமான சம நிலையை உறுதிப்படுத்திக் கொண்டிருக்கிறாயோ, இல்லையோ? அதற்காகவே நீ முன்பு பாடுபட்டாய்! இப்போது இந்தப் பெண்களைத்தான் பாரேன்—சுரேகா, தலயத், பிரோஸ்—இவர்களை! புத்திசாலிப் பெண்கள்! பொதுவாகப் பெண்கள் விவகாரமே தாறுமாறானதுதான். ஒருமுறை தோணி கரை சேர்ந்தால்தான் உண்டு; இல்லாவிட்டால் அல்லாடல், அலைக் கழிப்புத்தான். எங்களுக்குத் தெரிந்தது இது...'

"சம்பாபாஜி! பூரி சாப்பிடுங்கள்" ஹரிசங்கர் அறிவிப்புடன் வந்தான். சம்பாவின் அருகில் மண்டியிட்டு அமர்ந்தான்.

"இவர்களுக்கு என்ன வந்துவிட்டது. ஏன் திடீரென்று ஊமையாகி விட்டார்கள்." துகியான் சாகப் பேச்சுவாக்கில், சற்று இடைவெளி விட்டு, குல்ஷனிடம் மெல்லக் கேட்டார்.

"இவர்களுக்கெல்லாம் சிந்தனைகள் ஆவேசம் தந்திருக்கின்றன." குல்ஷன் அலட்சியமாகப் பதில் சொன்னார்.

"மிக மகிழ்ச்சி நிறைந்த தருணம்!" துகியான் உவகையுடன் பேசினார்: "சுரேகா தேவிக்கு தையல் வேலைகூடத் தெரியுமா? எனக்குத் தெரியாதே. கமால் பூரி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். சந்திராதேவி தோட்டத்தில் கோழிகளுக்குத் தீவனம் போடுகிறார். தலயத் உள்ளே ஏதோ தாளிக்கிறாள். ரவீந்திரநாத் டாகூர் எழுதிய நாவலில் வருகிற மாதிரி அமைதியானவள், கவிதை உள்ளம்

கொண்டவள், இனியவள்."

"நீங்கள் டாகூர் நாவலெல்லாம் படித்திருக்கிறீர்களா!" எரிச்சலுடன் குல்ஷன் சொன்னார். உள்ளே பார்த்து, "தலயத்! பூரியையெல்லாம் கருக வைத்துவிட்டாயே! டீ கொடுத்தனுப்பு சீக்கிரம்!" என்றார். துகியான் சாகப் சிந்தனையில் ஆழ்ந்தார்.

"ஹலோ சங்கர்!" சம்பா பத்திரிகை படித்துக் கொண்டிருந்தவள் தலையை நிமிர்த்திப் பார்த்தாள்: "என்ன சமாச்சாரம்?" என்றாள்.

'இப்போது கேட்கிறாள் என்ன சமாச்சாரம் என்று? ஆண்டவனுக்குத் தான் வெளிச்சம்; இவ்வளவு அகந்தையா?' "ஒண்ணுமில்லை; சம்பாபாஜி? டீ குடிக்கிறீர்களா?"

"கொடேன்," கோப்பையை எடுத்துக் கொண்டாள். ஸ்பூன் கீழே விழுந்தது.

'நாம் ஒருவர் மற்றொருவர் வாழ்வில் புகுந்திருக்கிறோம். தொடர்ந்து ஒருவரையொருவர் கொன்றும் வாழ்வித்தும் வருகிறோம்.' ஹரிசங்கர் சொன்னான்: "நீ எல்லாரையும் விட மேம்பட்டவள். காரணம், உன் உள்ளத்தில் காதலுக்காக ஆழமான-பத்திரமான இடமிருக்கிறது." பிறகு மெல்லச் சொன்னான்: "இதோ பார்! ஐ.நா. அலுவலகத்தில் ஒரு நல்ல வேலை இருக்கிறது. இந்தியாவின் கோட்டைதான் அது. உனக்காக முயற்சி செய்யட்டுமா?"

"உன் எண்ணம் என்ன? நான் ஆயுள் பூராவும் இப்படியே அலைந்து கொண்டிருக்க வேண்டுமா?"

"இதைத் தவிர வேறு என்ன வேலை உனக்கு?" இவ்வளவு துணிச்சலாகக் கேட்டிருக்கக் கூடாதென்று ஹரிசங்கருக்குத் தோன்றியது. சமாளிக்க வேண்டி, "அதாவது, என் கருத்து என்னவென்றால், உன்னிடம் தன்னம்பிக்கை இருக்கிறது; நீ மற்றவரைப்போல் அடுப்பு ஊதிக்கொண்டிருக்கக் கூடியவளில்லை. நீ எவரெஸ்டில் கூட குஷாலாக ஏறி இறங்கி விடுவாய். சம்பாபாஜி! நீ பெரிய மனுஷி, க்ரேட் ஸோல்,!" அவன் குரல் தழைந்தது. சம்பா பேரில் அவனுக்கு இரக்கம் ஏற்பட்டது.

சம்பா பேசாமல் தோட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வேறு அறையில் இருந்தவர்கள் உரக்கப் பேசிக்கொண்டிருந்தார்கள். சுற்றுப்புறமே சம்பாவுக்குப் பெரும் சோதனையாக மாறியது. "எனக்குப் பைத்தியம்தான் பிடிக்கப் போகிறது." தனக்குள் சொல்லிக்கொண்டாள். அவள் கண்களில் நீர் துளும்பியது.

ஹரிசங்கர் சம்பாவின் விழிகளில் இதற்கு முன்பு இப்படிக் கண்ணீர் துளிர்க்கக் கண்டதில்லை. அவன் சொன்னான்: "சம்பா பாஜி! காதலை உணர்ச்சிபூர்வமாக மாற்றிக் கொள்ளாதே தயவு செய்து. பேலன்ஸ், நடுநிலை, சுய அடக்கம், தக்க அளவு-க்ளாஸிக் க்ரீக் ஐடியல் காட்டிய உண்மை தத்துவங்கள்—அதாவது..."

"கொத்தனூர்-கொல்லத்துக்காரர் மாதிரி பேசத் தொடங்கி விட்டாயே, ஏன்?" சம்பா தன்னை மீறிச் சிரித்தாள். "நான் காதலித்துக் கொண்டிருக்கிறேனா அல்லது, ஏதாவது கட்டிடத்திற்கு வரைபடம் உருவாக்கிக் கொண்டிருக்கிறேனா?"

"சம்பாபாஜி! உன் எண்ணங்கள் பத்தாம் பசலிச் சரக்குகள். 'காத்திக்'(பழைய ஜெர்மனி மொழி) காலத்திலிருந்தே வழங்கியவை. உன் கருத்துக்களில் வாக்னரின் செல்வாக்குச்சுமை இருக்கிறது. முன்பே இருந்ததுதான்; இப்போது அதிகரித்திருக்கிறது. நான் சொல்வதன் சாராம்சம் இதுதான்— நீ உன் ஆன்மாவின் தூய்மையைக் குலைத்துக் கொண்டிருக்கிறாய். பத்தாண்டுக் காலம் கடந்துவிட்டது; நீ இன்னும் துளிக்கூட மாறவில்லை."

"ஹரிசங்கர்! என்னைக் கண்டு இரக்கம் கொள்ளாதே! நான் இதுவரைக்கும் தோல்வியை அறிந்தவளில்லை." சம்பா தன்னுணர் வோடு சொன்னாள்.

டைனிங் டேபிளின் எதிரே இருந்த துகியான் சாகப்பின் குரல் உரக்கக் கேட்டது: "நாமெல்லாரும் நிழல்கள்!"

"சரியாகத்தான் சொல்லுகிறீர்கள்!" குல்ஷன் அலுப்படைந்து சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டான்; சம்பாவைப் பார்த்தான்.

"கம்யூனிஸ்டுகள் மார்க்சிஸத்தை ஒழித்துக்கட்டி விட்டார்கள்." துகியான் சாகப் ஜான் கார்ட்டரைப் பார்த்துக்கொண்டே புதுப் பேச்சைத் துவக்கினார். இவர் பெரிய-தீவிர சோஷலிஸ்டாக இருந்தவர். சூஃபி மத ஆராய்ச்சி-ஈடுபாடு மறுசார்பு. இந்தியில் பல புதினங்கள் படைத்திருக்கிறார். இப்போது இங்கிலீஷில் எழுதத் தீர்மானித்திருக் கிறார். இவரது முழுப்பெயர்: ராய் ஹரபன்ஸ்ராய் 'துகியான்' பாகல்புரி. 'துகியான்' புனைபெயர்.

"என் ஹஜரத்(ஆசான்) உபதேசிக்கிறார்..." நாவலாசிரியர் ஆரம்பித்துவிட்டார்.

"இவருக்கு முஸ்லீம் ஆசான் ஒருவர் ஸ்ரீநகரில் இருக்கிறார்." ஹரிசங்கர் சம்பாவிடம் மெல்லச் சொன்னான்.

'என் ஹஸரத் என்னை ருஷ்யா போய்வருமாறு பணித் திருக்கிறார்" துகியான்.

"ஆமாம்! 'அங்குள்ள நாத்திகர்களுக்கு உண்மையான சோஷ லிஸத்தைப் போதித்து நல்வழிப்படுத்தி விட்டு வா!' என்று உபதேசித்திருக்கிறார்." அடுக்களையிலிருந்து தலயத் அவர் பேச்சைப் பூர்த்தி செய்தாள்.

"இவர் தம் ஆசானையும் சரிப்படுத்தி விட்டாரே!" சந்திரா சொன்னாள்.

துகியான் திகைப்புடன் சந்திராவைப் பார்த்தார். "இந்த அம்மாள் யார்?" சுரேகாவிடம் கேட்டார்.

“முற்போக்குக் கருத்துக்கள் கொண்டவர். ஆனால் டாலர் சம்பாதிக்க வேண்டி நியூயார்க் வானொலி நிலையத்தில் இந்திச் செய்தி அறிவிப்பாளராகப் பணி புரிகிறார். இவரை ஏற்றி வந்த வானஊர்தி இன்றுதான் இங்கு வந்தது.” கமால் பதிலளித்தான்.

“நான்தான் சொன்னேனே; நாமெல்லாருமே நிழல்கள். நான், நீ, உன் கௌதம நீலாம்பர் எல்லாருமே நிழல்கள்தாம். என் ஆசான் உபதேசித்தார்...”

“இப்போது நான் ஒரு முக்கியத் தகவல் தெரிவிக்கப் போகிறேன். சாந்தாவுக்கும் பில் கிரேக்குக்கும் சரிப்பட்டு வரவில்லையாம். பில் அவளை விட்டுவிடப் போகிறானாம்.” தலயத் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

“பெரும்பாலும் இன்டலெக்சுவல் ஆண்கள் தம் மனைவிகளும் இன்டலெக்சுவல்களாக இருந்தால் தாளுவதில்லை; ஒதுக்கி விடு கிறார்கள்” கமால் அலட்சியமாகச் சொன்னான்.

“இப்போதெல்லாம் இது ஒரு தொற்றுநோயோ?” சுரேகா மெல்லக் கேட்டாள்.

தலயத் கேட்டாள்: “நேற்று சிரில் ஐஷ்லேயைப் பார்த்தேன், சுஜாதா முகர்ஜியின் வீட்டில் அடைந்து கிடக்கிறான்! மனச் சாந்திக்காகவா அங்கே...?”

“இதிலே பிரச்சினை என்ன தெரியுமா? மிடில் கிளாஸ் பெண்கள் எதற்காகத்தான் உல்லாசப் பித்துகளாக இருக்கிறார்களோ, தெரியவில்லை?”— பிரோஸ் கேட்டாள்.

“எப்போதும் உள்ளதுதானே இது.”—தலயத்.

மூலையில் அமர்ந்திருந்த ஹரிசங்கர், கமாலிடம் சொன்னான்: “என் சிந்தனையெல்லாம், பெண்களுடைய விவகாரமே குளறுபடியாக இருக்கிறதே, ஏன்? என்பதுதான். அவர்களைப் பாரேன்-எவ்வளவு மும்முரமான முனைப்பு! ஒருத்தி ரவிக்கை தைத்து விட்டாளாம், பூரித்துப் போகிறாள். மற்றொருத்தி ஊர் வம்பளப்பில் பேருவகை காண்கிறாள். ஆனால் இவர்கள் எத்தனை கடினமான துன்பத்தைத் தாங்கிக் கொள்ளுகிறார்கள்! ஒரு சிசுவைப் பிரசவிப்பதன் மூலமாக இந்த உலகத்துப் பொறுப்புக்களையே தலைமேலே போட்டுக் கொள்ளுகிறார்கள்! அப்பாவிகள்! தம்மைத் தாமே ஆண்களிடத்திலே ஒப்படைத்து விடுகிறார்கள். இவர்களை மகிழ்விப்பது-திருப்திப் படுத்துவது மிக எளிது. எவ்வளவு சின்னச் சின்னக் காரியங்களாலும் பொருள்களாலும் மகிழ்ந்து போகிறார்கள்! இவர்களைத் தேவி மார்களாக்கிப் போற்றி வரவேண்டும். இவர்களுடைய உள்ளத்தை வருத்துவது மகாபாவம்—பெரிய குற்றம்!”

தலயத் ஹரிசங்கரைக் கவனித்தாள். ஹரிசங்கர் மறுபடியும் விஸ்தாரமாகப் பேசிக்கொண்டிருந்தான். இந்த மிகைப்படுத்தல்

தலயத்திற்குப் பலரிடம் தென்பட்டது—கௌதம நீலாம்பரிடம், சம்பாவிடம், அப்பியிடம். இவர்கள் மனிதப் பிறவியின் பெரிது படுத்தப்பட்ட சித்திரங்கள். இவர்கள் இதனாலேயே சில சமயம் ஃபோக்கஸிற்கு மீறி அப்பால் இருந்து விடுகிறார்கள்.

"ஐயனே! என்ன அளந்து கொண்டிருக்கிறாய்? இந்த வித்தார மெல்லாம் வேறெங்காவது வைத்துக்கொள். தேவிமார்-தேவதை யெல்லாம் என்ன சிலாகிப்பு? இந்தக் கவின்மிகு கவிதையான பேச்சையெல்லாம் ஒதுக்கி வை. பொருளாதார சுதந்திரமும், தன் னிறைவும்தான் முக்கியம்." தலயத்.

"உனக்கு இதெல்லாம் புரியாது. பொருளாதார சுதந்திரம் முக்கியமென்றால், சம்பா பேகம் இந்தச் சமயத்தில் தோட்டத்தில் உலாத்திக் கொண்டிருக்க மாட்டார்கள்." ஹரிசங்கர் பதிலளித்தான்.

"ஊஹூம்! அவள் புத்தி சரியில்லை"— தலயத்.

"ஆஹா! எவ்வளவு திறமை மிகுந்த பெண்! கேம்பிரிட்ஜில் எல்லார் மீதும் ஆளுகை செலுத்திவிட்டு, செல்வாக்கைப் பரப்பிவிட்டு வந்திருக்கிறாள். எவர் சந்திக்கிறாரோ, அவர் வசமழிந்து 'ஃப்ளோர்' ஆகி விடுகிறார். அத்தகைய எழிலார்ந்த நங்கை நல்லாளை நீங்கள் 'புத்தி சரியில்லை' என்கிறீர்களே!"

"ஏனப்பா! கம்யூனிஸ்டுகள் காதல் கொள்ள மாட்டார்களோ?" துகியான் சாகப் குல்ஷனிடம் கேட்டார்.

"அடக் கடவுளே!" தலயத் எரிச்சலுடன் உள்ளே சென்று விட்டாள்.

"மைடியர்!" ஹரிசங்கர் பரிவோடு விளித்தான். "நீ மேலே படி! முனைந்து பி.ஹெச்.டி. முடித்துவிடு. எந்தப் பயல் சொல்வது, பொருளாதார சுதந்திரம் அவசியமில்லை என்று? சிறுமைப்படுத்திக் கொள்ளாதே உன்னை நீயே!"

"பி.ஹெச்.டி. பெற்றுவிட்டால் பெரிய இதுவோ! முன்னூறு ரூபாய் சம்பளம்-வெறும் முன்னூறு!" தலயத் ஹரிசங்கரின் மூக்கிற்கு எதிரே நெருக்கமாக மூன்று விரல்களை உயர்த்திக் காட்டினாள். பிறகு, "பணம்தான் எல்லாம் என்பதில்லை. புதிய பாரதம் உருவாகி வருகிறது. நாமெல்லாரும் அதற்காகப் பாடுபட வேண்டும்." என்றாள் மதிப்புடன்.

சம்பா தோட்டத்தைச் சுற்றிவிட்டு, அறைக்குள் எட்டிப் பார்த்தாள். மற்றவர்கள் முனைப்பாகப் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு, மெதுவாக தோட்டத்து வழியாக வெளியேறி சாலைக்கு வந்து சேர்ந்தாள்.

# 48

பனி அதிகம் கொட்டியது. சுஜாதா தேவி ஜன்னல்களை அடைத்தாள்.

சுவாமி தேவிகானந்தர் கீதை நூலின் பக்கங்களைப் புரட்டிப் பார்த்துவிட்டு, எதிரே இருக்கும் பக்தர் குழாமைக் கடாட்சித்தார். இவர் கமால், ஹரிசங்கர் முதலானோருக்கு ஆங்கிலப் பேராசிரியராக இருந்தவர். பதிமூன்று-பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு, லக்னோ லாமார்ட்டினேயர் காலேஜிலிருந்து திடீரென மறைந்து போனார். ஹரித்துவார்-ரிஷிகேசப் பகுதிகளில் அவரைத்தேடி கமாலும் ஹரி சங்கரும் அலைந்து திரிந்தார்கள். இப்போது இவர் காவித்துவராடை அணிந்து தாடி வளர்த்துக்கொண்டு, ஐரோப்பா- அமெரிக்க நகர்களில் தார்மீகப் பிரசங்கம் செய்து கொண்டிருக்கிறார். கௌதமன் சுஜாதா முகர்ஜியின் ஜாகைக்கு வந்தபோது, ஜன்னல் வழியாக இந்தக் காட்சியைக் கண்டான். சுவாமிஜியைச் சுற்றிலும் வெள்ளைக்காரப் பெண்கள் குழுமியிருந்தார்கள். ஒரு பக்கம் நாம சங்கீர்த்தனம் இசையாக ஒலித்துக் கொண்டிருந்தது. சுஜாதா முகர்ஜி வந்திருந்தவர்களுக்குக் காபி வழங்கிக் கொண்டிருந்தாள்.

கௌதமன் அன்று காலையில்தான் பல மாதங்களுக்குப் பிறகு மாஸ்கோவிலிருந்து வந்தான். கமால் அவன் மூலமாக இந்தியாவில் பல இடங்களுக்கு வேலைக்காக விண்ணப்பங்கள் அனுப்பியிருந்தான். அவற்றுக்கெல்லாம் பதில்கள் நிறைய வந்து கிடந்தன. இண்டியா ஹவுஸில்-கௌதமன் மேஜைமீது வைக்கப்பட்டிருந்தன. அவற்றைத் திறந்து பார்க்காமலேயே, நல்ல செய்தி இருக்கும் என்கிற நம்பிக்கையில் பெருமகிழ்வு கொண்டு குதூகலித்தான். உடனே கமாலைக் காண விழைந்தான். விசாரித்ததில் தெரிந்தது, கமாலும் ஹரிசங்கரும் தம் பழைய கல்லூரிப் பேராசிரியரைச் சந்திக்க சுஜாதா முகர்ஜி வீட்டுக்குப் போயிருக்கிறார்களென்று. ஆனால், இங்கு வந்து பார்த்ததில் அவர்கள் வரவே இல்லை என்பது தெரிந்தது. எங்கே போயிருப்பார்கள்? கௌதமன் கூடத்து மூலையில் அமர்ந்திருந்த மைக்கேல் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

“தம்பி! உங்கள் சுவாமிஜி வெறும் பேத்து மாத்து ஆசாமி போல் தோன்றுகிறதே!” மைக்கேல் தொடர்ந்தான்: “அமெரிக்கா இவருக்குப் பண உதவி அளிக்கிறது பிரசாரம் செய்வதற்காக. இவர் ‘காங்கிரஸ் ஆப் கல்ச்சுரல் ஃப்ரீடம்’ நிறுவனத்தின் சார்பாகச் சுற்றுலா புரிந்து வருகிறார். எனக்கு எல்லாம் தெரியும்.”

• “நீ இன்னும் இஸ்ரேல் போகவில்லை?”

“விரைவில் கிளம்பப் போகிறேன்.”

“எல்லாரும் போகப் போகிறார்கள்.” சுஜாதா மைக்கேல்

பேச்சைக் கேட்டு அருகில் வந்தாள். கௌதமனைப் பார்த்ததும், "நமஸ்காரர்! மிஸ்டர் நீலாம்பர்!" என்றாள்.

"நமஸ்காரர்! சுஜாதா அக்கா!"

நிறைய மலர்களை எடுத்துக்கொண்டு நர்கீஸ் உள்ளே வந்தாள். "வெளிச்சத்தில் கொணர்ந்து பார்த்தபோதுதான் தெரிந்தது இவை யெல்லாம் சிவப்புப் பூக்களென்று; மஞ்சள் பூக்களென்று கொண்டு வந்தேன்." சுவாமிஜிக்கெதிரே பூக்களை வைத்துவிட்டுச் சொன்னாள்.

"நர்கீஸ்! இதென்ன புதுவேஷம்?" கௌதமன் உற்சாகமின்றிக் கேட்டான்.

"கௌதம்! எல்லாம் கல்ச்சருக்காகத்தான்" பெரிய தோரணை யில் பதில் சொன்னாள்.

"கமால் எங்கே?"

"லிட்ஹர்ஸ்ட் சானிடோரியத்திலிருந்து திரும்பி வரவில்லையோ என்னவோ?"

"அங்கேயா? இன்று ஞாயிற்றுக்கிழமை இல்லையே?" கௌதமன் மனக்கலக்கம் கொண்டான்.

"நிர்மலாவுக்கு இரண்டாவது ஈரல் பையில் ஆபரேஷன் நடந்தது. உனக்குத் தெரியாதா? ஆமாம். நீ இன்றைக்குத்தானே வந்திருக்கிறாய்; தெரிந்திருக்காது."

"எல்லாரும் தங்கள் தேசத்துக்குத் திரும்பிக் கொண்டிருக் கிறார்கள்." சுஜாதாதேவி கண்களை இடுக்கிப் பார்த்துக்கொண்டு கௌதமனிடம் சொன்னாள்: "உங்கள் கூட்டம் முழுவதுமே இந்தியா திரும்பப் போகிறது." நர்கீஸ் சொன்னாள். மைக்கேலும் கிளம்பப் போகிறான்.

"சுஜாதாதேவி! இது உலக நியதி. ஜனங்கள் போவதும் வருவதும் இயல்புதான்."—கௌதமன்.

"எனக்குத் தெரியும். ஆனால் போய்ச் சேருகிறார்கள்; திரும்பி வருவதில்லை..." பிறகு சுஜாதா ரவீந்திரநாத் டாகூரின் மேற்கோள் கொடுக்கத் தொடங்குவதற்குள் கௌதமன் எழுந்து விட்டான். திரும்பி, "நர்கீஸ்! கமாலை அவசரமாகப் பார்க்க வேண்டும். அவன் பெயரில் சில முக்கியமான கடிதங்கள் வந்திருக்கின்றன" என்றான்.

"பி.பி.ஸி. காண்டீனில் போய்ப் பார். இல்லாவிட்டால் பக்கத்திலிருக்கும் வாலிபர் சங்க விடுதியில் பார். கிளம்புவதற்கு முன் சுவாமிஜியைத் தரிசனம் செய்துவிட்டுப் போயேன்!"–நர்கீஸ்.

வாலிபர் சங்க விடுதி வழக்கத்திற்கு மாறாக அமைதியாக இருந்தது. ஒரு வாலிபப் பெண் மட்டும் வாசல் பக்கம் முதுகைக் காட்டிக்கொண்டு அமர்ந்திருந்தாள். காபி குடித்தாள். கௌதமன் விசாரிப்பதற்காக கவுன்டர் பக்கம் சென்றான். பி.பி.ஸி.க்காரர்கள் அங்கு வந்ததாகத் தெரியவில்லை. ஸ்டூலில் உட்கார்ந்திருந்த பெண்

திரும்பிப் பார்த்தாள். அவள் சம்பா அகமத்.

"ஹலோ! நீ இங்கே இருக்கிறாயா?" கௌதமன் வலியவந்து கேட்டான்.

சம்பா அங்கிருந்து எழுந்து பக்கத்து ஸ்டூலில் உட்கார்ந்தாள். "நீதானே உலகம் மிகச்சிறியது என்று சொன்னது. நாம் எங்காவது மறுபடியும் சந்திப்போம்."

"இப்போது அவ்வளவு சிறியது அல்ல. ஒவ்வொரு விஷயத்திற்கும் இலக்கியப் பொருள்தான் கொள்ள வேண்டுமென்பதில்லை." பாதிக்கப்பட்டவனாகப் பதில் சொன்னான். பிறகு கமாலைத் தேடி சுற்றும் முற்றும் பார்த்தான்.

"நான் ஒரு தடவை உன்னிடமே சொல்லியிருக்கிறேன். உன்னை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறதென்று. அது பெரிய 'அப்ஸ்டிராக்ட்' விஷயம், உய்த்துணர மட்டுமே முடியும். இதையும் நீ மேம்போக்காக எடுத்துக் கொண்டாய், இதெல்லாம் உன் குற்றம்தான்." சம்பா விரலை நீட்டிச் சுட்டிக் காட்டினாள்.

"அப்ஸ்டிராக்ட் பற்றிப் பேசாதே." கௌதமனுக்கு எரிச்சலாக இருந்தது. "நான் இப்போதுதான் சுஜாதா தேவியின் வீட்டிலிருந்து சுவாமி தேவிகானந்தரைச் சந்தித்துவிட்டு வந்திருக்கிறேன். நீ கமாலைப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

"இல்லை" சம்பா குரலில் சுணக்கம். இந்த மனிதன் எப்படியெல்லலாம் குணம் மாறுகிறான்! மேலுக்குக் கேட்டு வைத்தாள்: "நீ அன்று எனக்கு ஃபோன் செய்தாயில்லையா? ஜான் கார்ட்டர் வீட்டுக்கு?"

"ஆமாம் அதற்கென்ன. நீ எனக்குக் கேம்பிரிட்ஜிலிருந்து வந்ததும் ஃபோன் செய்தாயே." குற்றவாளி அகப்பட்டுக் கொண்ட மாதிரி தடுமாறினான்.

"கௌதம்! பேச்சுக்குப் பேச்சு வெட்டிப் பேச உனக்கு ஏன் தோன்றுகிறது? இதற்கு முன்பு நீ இப்படி இருந்ததில்லையே. நான் கிட்டத்தட்ட ஏழு வருஷங்களுக்குப் பிறகு உன்னைச் சந்திக்கிறேன். கொஞ்சம் மதிப்பாகப் பழகேன்."

"சம்பா! நான் இப்போது நிம்மதி இல்லாமல் தவிக்கிறேன். கமாலுக்குப் பல அவசரமான முக்கியக் கடிதங்கள் வந்திருக்கின்றன. ஒருகால் அவன் உடனே தில்லிக்குப் புறப்பட வேண்டியிருக்கும்; இண்டர்வ்யூ இருக்கலாம். நிர்மலாவுக்கு இரண்டாவது தடவை ஆபரேஷன் ஆகியிருக்கிறது. நீ எப்போதும் கனவுலகில் வளைய வந்து கொண்டிருப்பாய். பிறத்தியார் உன் கனவோடு எப்படி இணைந்திருக்க முடியும்?"

"அடேடே! வா, போகலாம்; கமாலைத் தேடிப் பிடிப்போம். எனக்கு இதெல்லாம் தெரியாதே!"

கௌதமன் சம்பாவையே பார்த்தான். இப்படியுமொரு விசித்திரமான-மோகினியான மங்கையா!

இருவரும் வெளியே வந்து சுரேகாவுக்கு ஃபோன் செய்தார்கள். குல்ஷன் பேசினார்: "கமாலைப் பற்றித் தெரியாது. நிர்மலாவின் நிலைமையைத் தெரிந்து கொள்ள டாக்டரிடம் போயிருப்பான். சுரேகா இன்னும் 'ராயல் அகாதமி ஆஃப் டிரமெடிக் ஆர்ட்'டிலிருந்து திரும்பி வரவில்லை. கமால் இங்கு வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறான். நீ இங்கே வந்துவிடு. நான் காலேஜ் போய்க் கொண்டிருக்கிறேன். பக்கத்து வீட்டில் சாவியைக் கொடுத்துவிட்டுப் போகிறேன்."

"யாராவது லிட்ஹர்ஸ்ட் சானிடோரியம் போயிருக்கிறார்களா?" கௌதமன் கேட்டான்.

"தலயத்தும் ஹரிசங்கரும் போயிருக்கிறார்கள். நீயும் போகிற தானால் இங்கே வந்துவிட்டுப்போ. ஒரு பார்சல் இருக்கிறது, நிர்மலா வுக்குக் கொடுப்பதற்காக. மேஜை மீது வைத்திருக்கிறாள் சுரேகா. தலயத் கொண்டுபோக மறந்து விட்டாள்."

"அப்படியா! நான் இப்போதே அங்கே வருகிறேன்."

சம்பாவும் கௌதமனும் செயின்ட் ஜார்ஜ்வுட் பக்கம் புறப் பட்டார்கள். சுரேகா வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். பனிப்படலம் வெயிலில் ஒளிர்ந்தது. தோட்டத்துப் பக்கத்துக் கதவைத் திறந்து வைத்தார்கள்.

"எவ்வளவு வசதியான வீடு இந்த சுரேகா குல்ஷனுடையது!" கௌதமன் சோஃபாவில் படுத்துக் கொண்டான். தோட்டத்திற்கு அப்பாலிருந்து இசையொலி மிதந்து வந்தது. சம்பா அடுப்பு மூட்டினாள்.

அறையின் ஒரு பக்கம் புத்தக அலமாரிகள் இருந்தன. அந்த வரவேற்பு அறை மாடர்ன் இன்டீரியர் டெகரேஷன்ஸ் ஒப்பனைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. ஒரு கலையுள்ளம் படைத்த நடன நங்கையின் அலங்கார அறை என்பதை அதன் அமைப்பே புலப்படுத்தியது. மூலையில் தையல் மிஷின் இருந்தது. பக்கத்தில் மிருதங்கம், காய்கறிக்கூடை. கௌதமன் முறுவலித்தான். இது கலைஞரின் அறை. ஆனாலும் இதில் ஒய்வாக, கூச்சமின்றியும் இருக்கலாம். "நான் இங்கு மிக உற்சாகமாக இருந்திருக்கிறேன்." கௌதமன் மகிழ்ச்சியோடு பேசினான்: "இவர்கள் மிக அன்பானவர்கள்; இல்லையா? அறையின் அமைப்பிலிருந்தே அதில் இருப்பவரின் பர்ஸனாலிட்டி எப்படித் தெளிவுபடுகிறது, பார்! சுஜாதா தேவியின் இந்த அறையில் ஒவ்வொரு பொருளும் தனிப் 'போஸ்' கொடுத்துக் கொண்டு அமைப்பாக இருக்கிறது."

"நீ போஸ்-போஸ் இல்லாதது இரண்டிற்கும் எப்படி வேறுபாடு கண்டு கொள்ளுகிறாய்?"—சம்பா.

"அப்படி இல்லை சம்பா! நாம் நம்முடைய பின்பகைப்புலனி லிருந்து, உண்மையிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது. ஆனால் நான் இதுவரை உன் உண்மையான பேக்கிரவுண்டை அறிந்ததில்லை. சிற்றுண்டி விடுதியில் ஸ்டூலில் உட்கார்ந்திருந்த உன்னைப் பார்த்து யாரும் 'இவள் பனாரஸிலிருந்து வந்தவள்' என்று சொல்ல முடியாது. நாம் நம்முடைய பேக்கரவுண்டிடம் நன்றியுடன் நாணயமாக நடந்து கொள்ளவேண்டும். நீ அப்படி இல்லை."

"தவறு!" சம்பா சினந்தாள்: "நீங்கள் எல்லாரும் தனித்தனியாகி, வெகுதூரம் சென்று விட்டீர்கள். நான் தனியளாக நின்று விட்டேன். இப்போது வந்து நீ குறை கூறுகிறாய், நான் நாணயமாக இல்லை யென்று."

"உனக்கே தெரியும், போன வருஷம் உனக்கு அமெரிக்கா விலிருந்து கடிதம் போட்டிருந்தேன். அந்தக் கடிதத்தை தேவதாரு மரத்தோப்பில் அமர்ந்து எழுதினேன். அப்போதெல்லாம் நான் மிக மகிழ்ச்சியாக இருந்தேன். இன்றுகூட அதற்குக் காரணம் புலப்பட வில்லை. உனக்கு அந்தக் கடிதம் கிடைக்கவில்லையோ என்னவோ?"

"எனக்குக் கிடைக்கவில்லை."

"இப்போது நீ மறுபடியும் ரொமாண்டிக் ஆகிவிட்டாய்!" பக்கத்து வீட்டிலிருந்த யாரோ உரத்த குரலில் பாடுவது கேட்டது.

"கௌதம்! இப்படி மோசமாகத் தாழ்த்திப் பேசாதே" சம்பாவின் கண்கள் பனித்தன.

"எதற்கு அழுகை? வாழ்க்கையில் இதற்குக் குறைச்சலே இல்லை. நீ வீணுக்குக் கண்ணீர் விடாதே. சிரித்துக் கொண்டிரு. உதாரணத் திற்கு பையாசாகப்பை எடுத்துக்கொள். அவர் ஸல்பர்ஸேஜிலிருந்து வெளியே வருவதைப் பார்த்தேன். பக்கத்தில் பேகம், மிக்க மகிழ்ச்சி யோடு இருந்தார். மலர்ந்த முகம்! குழப்பமில்லாதவர்கள் அப்படித் தான் இருப்பார்கள்."

"போதும், பிதற்றாதே!"

பாட்டொலி இப்போதும் கேட்டுக் கொண்டிருந்தது.

"ஜன்னல் கதவைச் சாத்திவிடு!"—கௌதமன்.

"சரி; ராத்திரி வரைக்கும் இந்தக் கூச்சல் இருக்கும். இந்த லண்டன்காரர்களுக்கு வேறு வேலை இல்லை."

"அடேடே! ஒருவேளை அங்கே கமால் வந்து சேர்ந்திருப்பானோ? இவர்கள் எதற்காக இராக் கூத்தடிக்கிறார்கள்?"

"காலையில் புடாபெஸ்ட் போகப் போகிறார்களாம்."

அவர்கள் ஒருசேர, "சுமையைத் தூக்கு! ஓஹையா ஓஹையா!" என்று நாடோடிப் பாடலொன்றை உரக்கப் பாடிக் கொண்டிருந் தார்கள். கௌதமன் வெளியே வந்து தோட்டத்துச் சுவர்ப்பக்கமாக எழும்பிப் பார்த்தான். திரும்பி வந்து, "இல்லை; கமால் இன்னும்

வரவில்லை," என்றான்.

"கௌதம் மாஸ்டர்!"

"என்னம்மா?"

"நான் மகா முட்டாளோ?"

"இல்லையே. ஆனால் அதிகப் புத்திசாலியும் இல்லை."

"இதைத்தான் கேட்க விரும்பினேன். நீ சொன்னது நல்லதாயிற்று. இனி எனக்குத் தன்னம்பிக்கை இருக்கும்" சம்பா இயற்கையாகவே சொன்னாள்.

சிறிதுநேரம் கழித்து, கௌதம் கோரினான்:

"தோழி! தேனீர் குடிக்க ஆசையாக இருக்கிறது."

சம்பா அடுக்களைக்குள் சென்றாள்.

"சம்பாராணி! ஏன் சுணங்கியிருக்கிறாய்?" சமையலறை வாசலில் நின்று கொண்டு கௌதமன் கேட்டான்.

"வேறென்ன செய்வது? டான்ஸ் ஆடட்டுமா?"

"இதுதான் பதிலா? நீ ஒரு காலத்தில் சுவையாகப் பதில் சொல்வதில் தேர்ந்திருந்தாய். அதோ பார்! கருகவைத்து விட்டாய்!'

"தலயத் இங்கு இல்லையே, உனக்கு டிபன் செய்து கொடுக்க, என்று எனக்கு வருத்தமாக இருக்கிறது."

"சம்பா! பிதற்றலாகப் பேசாதே!"

"கௌதம்!" சம்பா கெட்டிலைத் தூக்கியவாறே சொன்னாள்: "நான் இங்கிருந்து போய்விட விரும்புகிறாயானால், இப்போதே கிளம்பி விடுகிறேன். பிறகு உன்னை எங்குமே சந்திக்க முயற்சிக்க மாட்டேன். உன்னை மறுபடியும் சந்திக்கலாமென்கிற ஆவலில் நான் இவ்வளவு காலம் காத்திருந்தது என் தவறுதான்."

கௌதம் அடுக்களைக்குள் ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டான். "சம்பாராணி! உண்மையைத் தெரிந்து கொள்ள விரும்புகிறாயா? என்னைக் கண்டு எனக்கே பயமாக இருக்கிறது. நான் என்ன பேசுகிறேன்? நீ என்ன கேட்கிறாய்? என் விருப்பம் என்ன?—எதுவுமே எனக்குப் பிரக்ஞை இல்லை. இவ்வளவு காலத்தை ஓட்டி விட்டோம். நம்மிடையே சுவையாக சுவாரசியமாகப் பேசிக்கொண்டிருக்க விஷயமே இல்லை!"

டீ தயாரித்து எடுத்துக்கொண்டு டிராயிங் ரூமுக்கு வந்தாள். சம்பா. "இங்கே வா!" அவள் குரலில் தொனித்த கடுமை கௌதமனை உலுப்பியது. கண்ணுக்கெதிரே வந்து அமர்ந்தான். பேச்சைத் தொடங்க வேண்டி, நாற்காலியில் இருந்த கைப்பையைத் தொட்டுப் பார்த்து, "மிக அழகாக இருக்கிறது. இதிலே என் பேப்பர்களை வைக்கட்டுமா?" என்று கேட்டான்.

"வையேன்."

கவனமாகக் கடிதங்களை அந்த அலங்காரப் பைக்குள் திணித்து

வைத்தான். பிறகு பேச ஏதுமில்லை.

"இந்தப் பையில் உன் சாமான்கள் இருக்கிறதில்லையா? போகிறபோது ஞாபகமாக என் கடிதங்களை எடுத்துக் கொடு. மறந்தால் வேலையெல்லாம் குளறுபடியாகிவிடும்."

"நீ எந்தப் பை பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாயோ, அது என்னுடையதில்லை, சுரேகாவினுடைய பை. இதில் நீ உன் சாமான்களை வைத்துக் கொள்ளலாம். கையோடு உன் வீட்டுக்கும் கொண்டு போகலாம். இங்கு எனக்கும் உனக்கும் பங்கு கொண்ட பொருள் எதுவும் இல்லை. இந்தப் பை, இந்தக் காகிதங்கள், இந்த வீடு, இந்த சாமான்கள், ஏன்? நினைவுகள்—எதுவுமே உன்னுடன் பகிர்ந்து கொள்ளவோ இணைத்துக் கொள்ளவோ கிடையாது. துயரம் மட்டும்தான் இணைந்திருக்கிறது. ஆனால் உன் துயரத்தைக் கூடத் தனக்குள்ளேயே பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ள விரும்புகிறாய்!"

கௌதமன் பேசவில்லை.

"கௌதம நீலாம்பர்! கடந்த ஏழு வருடங்களாக நான் உன்னைப் பார்க்கவில்லை. இருந்தாலும் எனக்குத் தெரியும். நீ எப்போதுமே தனக்கு எதிரிடையாகவே சாட்சியம் கூறி வருகிறாய்; சுயநிலையைக் காட்டிக் கொள்வதில்லை. இதை நீ உணர்கிறாயா?"

"சரிதான். நான் யாரிடம் பேசிக் கொண்டிருந்தாலும், என் பேச்சைக் கேட்பவர் என் குற்றங்களைச் செவிமடுக்கும் ஞானகுரு என்றே தோன்றுகிறது. என்னுடைய எல்லா இருக்கை தன்மைகளுமே என் கன்ஃபெஷன்தான். நான் எவ்வளவு கொலைகள் புரிந்திருக்கிறேன். உன்னைக் கொன்றேன். என்னையே கொன்று கொண்டேன். என் குற்றம் உன் குற்றத்திலிருந்து வேறுபட்டது. உன்னுள்ளே அப்பாவித்தனம் குற்றவுணர்வாகப் புதைந்திருக்கிறது. ஒன்றை மட்டும் தெளிவாகக் கேள்! உன் எண்ணங்களில் எது பாவமானது?"

"எவர் உள்ளத்தையாவது வருத்திக் கொண்டிருப்பது" சம்பா யோசித்தே சொன்னாள்.

"அப்புறம்?"

"சுயமை; போலித்தனம்."

"அப்புறம்?"

"அற்பத்தனம்"

"சண்டே ஸ்கூல் பாடங்கள்."

"என்னது?" சம்பா அவன் கருத்தைப் புரிந்து கொள்ளவில்லை.

"நான் உன் உள்ளத்தை மிகவும் வருத்திவிட்டேன். உன் கருத்தில் இது பெரிய தீம்பு இல்லையா?"

"ஆமாம்."

"ஆனால் உனக்கு விரைவிலேயே தெரிந்துவிடும், சம்பாராணி! வாழ்க்கையில் சில திருப்பங்கள் ஏற்படுகின்றன. அப்போதெல்லாம்

பிறர் மனங்களை வதைக்கத்தான் வேண்டியிருக்கிறது; இன்றியமை யாதது; வேறு வழியும் இல்லை."—கௌதமன்.

"கொலைகாரன் கூட கொலை செய்யும்போது இப்படித்தான் நினைப்பான். கொலை அவசியமானது, இன்றியமையாதது, வேறு வழியில்லை. இல்லாவிட்டால் எதற்காகக் கொலை செய்யவேண்டும்."

கௌதமன் பேசவில்லை. பிறகு பியானோ பக்கம் சென்று விரல்களைப் பாவவிட்டு, "ஸ்வரங்கள் மேலும் கீழுமாக எழும்பு கின்றன." என்றான்.

"ஒரு ஸ்வரம் எங்கோ ஒடிந்திருக்கிறது"—சம்பா

"எனக்குத் தெரியும், பியானோவில் எலிகள் குடியிருக்கின்றன. என் பியானோவில் பஹ்ராயிச்சில் இருந்தபோது, பாதி ராத்திரியில் அழகான, பருத்த எலி உள் தந்திகளிடையே தாவிக் குதித்து 'ஸிம்ப்பனி' இசையெழுப்பும்."

"இதை நீ எனக்கு முன்பு சொன்னதில்லையே!"

"பஹ்ராயிச் மிக ரம்மியமான இடம், எனக்கு மிகப் பிடித்தமான இடம். காரணம், என் தாயகம் அது."

"நாமெல்லாருமே பிறருடைய செயலிலும் தயவிலும்தான் வாழ்கிறோம். பரஸ்பரம் காலம்-நேரத்திற்குள் அடைபட்டிருக்கிறோம் விசித்திரம்தான்!"

இந்தச் சமயமே போலியானது. அறையிலிருந்த பொருள்கள் தெளிவாகத் தெரிந்தன. தோட்டத்து மலர்களிலிருந்து பனித்துளிகள் உருகி வழிந்தன.

"இந்தச் செருப்பைப் பார்!" காலை நீட்டிக் காண்பித்தான். "வாழ்க்கை இதைப்போலவே பொருந்துவதில்லை." பிறகு டோஸ்ட் டிலிருந்து ஒரு விள்ளல் எடுத்து, பூனைக்குப் போட்டான். ஜன்னலருகில் உட்கார்ந்திருந்த பூனை அதை முகர்ந்துகூடப் பார்க்கவில்லை.

"இதுவும் 'பொஹிமியன்' (தான்தோன்றி) பூனைதான்! டோஸ்ட் சாப்பிடாது. இதற்கு லாப்ஸ்டரும் ஷாம்பைனும் கொண்டுவா!" பிறகு சம்பாவிடம் சொன்னான், "சம்பா! நீ வீணுக்கு இத்தனை காலம் என்னை எதிர்பார்த்திருந்தாய். நான் வெறும் போலி ஆள்!"

கணப்புக்கருகில் அமர்ந்திருந்த சம்பா தேவையற்றவளாகத் தோன்றினாள்; அசட்டுப் பெண்ணாகவும் காட்சியளித்தாள். என் எதிரே எதற்காக இப்படி உட்கார்ந்திருக்க வேண்டும்?

"சம்பா! தலயத் பிரமுகர்-பிரபலங்களின் தலையை பதுமை யாக்கி வைத்தாளாமே. உன் தலையைப் பதுமையாக்கச் சொல்ல வில்லையா? இப்போதும் காலம் கடந்துவிடவில்லை. எங்காவது வெளியூர் போவாயோ?"

"இப்போது வேண்டாம். நான் ஒரு வாசல் வழியாக உள்ளே வந்துவிட்டேன். வெளியே போக எல்லா வாசல்களும் அடைக்கப்பட்டு

விட்டன."

"உன்னுடைய இந்த அப்பாவித்தனம் தவறானது, வீணானது. ஒவ்வொரு சமயத்திலும் நீ பிடிபடுவாய். நீ முடிவு செய்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். நீ நினைக்கிற மாதிரி எதுவும் எளிதல்ல. உனக்கு இன்னும் விபத்துகள் ஏற்படும்."

சம்பா மௌனமாகக் கணப்புக்கெதிரே உட்கார்ந்திருந்தாள். "இப்போது எல்லா இருப்புமே ஒரு புத்தகம். அதை நான் படித்து விட்டேன். இறுதிக் காலத்திற்குள் பல தடவை படித்து விடுவேன்." தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

"என் எதிரே இரு உலகங்கள் எப்போதும் இருக்கின்றன. ஒன்று இந்தப் பொருள்கள்-நபர்கள் உள்ளது." அறையிலுள்ளவைகளைச் சுட்டிக் காண்பித்தான்; பிறகு, "மற்றொரு உலகம் நானும் நீயும் மட்டுமே. இருவருக்குமிடையே ஒரு பாலம். என்றைக்கு இந்தப் பாலம் உடைகிறதோ, அன்று என்னவாகும்?"

"பாலத்தை நீ உடைப்பாயா?"

"இல்லை. நாலுபக்கமும் இயந்திரத் துப்பாக்கிகள் பொருத்தப் பட்டிருக்கின்றன. மேலே மேகங்கள் முழக்கமிடுகின்றன. ஒருநாள் இந்தப் பூமி பாதாளத்தில் அழுந்தி மறைந்து போகும். நான் வெளியே கை கால்களை அடித்துகொண்டு தவிப்பேன். இதை நினைக்கும் போதே என் நெஞ்சு இடிந்து போகிறது."

"நீ உன் ஸ்பாட்லைட்டுடன் மாடியில் மறைந்திருக்கிறாய். சாபக்கேடாக அகப்பட்டுக் கொண்டவன் மேடையில் தோன்றி விட்டால் போதும், நீ மட்டமான அற்பத்தனத்துடன் திடீரென்று அவன்மீது வெளிச்சத்தைப் பாய்ச்சுகிறாய். அவன் அம்பலமாகி விடுகிறான்."

"நானும்தானே வெளிச்சத்தில் இருக்கிறேன்."

"நீ திரைமறைவுக்குப் போய்விடுவாய். என்றாவது ஒருநாள் உன் மீது பேட்டரி லைட் வெளிச்சம் பட்டால் என்ன செய்வாயாம்? அன்று மாடி மறைவிலிருந்து தலைதெறிக்க ஓடுவாய். ஜன்னல் பக்கம் பலர் இருப்பார்கள். உன்முகம் எங்களுக்கு ஜன்னல் கண்ணாடி வழியாகத் தென்படும்-போகிமென் (Bogey-man)."

"நான் உன் பக்கத்தில் இருப்பேன். ஸ்டவ் பக்கத்தில் இருந்து பேசிக்கொண்டு, சமையல் செய்துகொண்டு, சாப்பிட்டுக்கொண்டு, ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்துக்கொண்டு, நான் இருப் பதையும் நீ காண்பாய்—போக் வுமன்! (Bog woman)."

இருவருமே மௌனியானார்கள்.

கௌதமன் எழுந்து சுவர்ப் படங்களைப் பார்க்கலானான். பிறகு ஜன்னல் பக்கம் சென்றான். "இன்றைக்குப் பனி அதிகம்." பொது அறிக்கை விடுத்தான்.

"இதற்குப் பிறகும் மிச்சமிருக்கிறது—இறுதிக்காலம் வரைக்கும்" தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

"சுரேகாவின் தோட்டம் மிக அழகு!"-கௌதமன்.

"எனக்கு எந்த அதிர்ஷ்டமும் கிடையாது. யார் யாருக்கோ அதிர்ஷ்டம் அடிப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்!"

கௌதமன் துணுக்குற்றுத் திரும்பிப் பார்த்தான். முகம் வெளுத்தது. பகல்பொழுது கழிந்துவிட்டது. மாலை இருண்டது. 'நான் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறேன்? எதற்காக இருக்கிறேன்? நேரத்தை வீணாக்கி விட்டேனே!' முணுமுணுத்துக் கொண்டே உள்ளே சென்றான்; மேஜை மீதிருந்த பார்சலைப் பார்த்தான். திரும்பி சம்பாவைப் பார்க்கவில்லை. அந்தப் பொட்டலத்தை எடுத்துக்கொண்டு வெளியே வந்தான்; காரில் அமர்ந்து லிட்ஹர்ஸ்ட் சானிடோரியத்திற்குப் புறப்பட்டான்.

கௌதமன் போனபிறகு, தன் பையிலிருந்து கமால் பெயருக்கு வந்திருந்த நீண்ட கவர்களை வெளியே எடுத்தாள். அவன் மறந்துவிட்டான். சம்பா எல்லாக் கவர்களையும் பிரித்துப் பார்த்தாள்.

கமால் அனுப்பிய விண்ணப்பங்களெல்லாம் மறுதலித்து ஏமாற்றத்தைத் தாங்கி திரும்பி வந்திருந்தன.

# 49

"தலயத்! டீ தேவை!" மேஜை மீது உட்கார்ந்து கொண்டு சாந்தா சொன்னாள்.

தலயத் டீ கொடுத்தாள். சுரேகா மும்முரமாக ரேடியோவைத் திருப்பிக் கொண்டிருந்தாள். ஜரீனா தோட்டத்துப் பக்கத்துக் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு வெயிலில் ஈஸலை வைத்து, ஓவியம் வரையத் தொடங்கினாள். பக்கத்து வீட்டுக்காரி வேலிப்பக்கம் தலைநீட்டி, கொஞ்சம் சர்க்கரை கைமாற்றுக் கேட்டாள். உலகத்தின் செயல்கள் அமைதியாக நடந்தன. மேலும், நிர்மலா காலமானதற்குப் பிறகு மேலும் அமைதியாகக் காரியங்கள் நடக்கின்றன. ஒவ்வொருவரும் தத்தம் காரியங்களில் தீவிரமாக முனைந்திருப்பதைப் பார்த்தால் இதற்கு முன்பு இவர்களுக்குத் தம் கடமைகளைப் பற்றி ஏதும் தெரியாதோ என்று எண்ணத் தோன்றும். தலயத் தெய்தித்தாளுக்கு அறிக்கை தயாரித்தாள். பிரோஸ் புஸ்தகங்களை அள்ளிக் கொண்டு யூனிவர்சிடி போய்க் கொண்டிருந்தாள். கமால் சுரேகாவின் டிராயிங் ரூமில் கணப்புக்கெதிரில் ஒருக்களித்துப் படுத்து, அப்ளிகேஷன்கள்

எழுதிக்கொண்டிருந்தான். ஹரிசங்கர் புது வேலை தொடங்கி யிருக்கிறான்—பறவைகளின் சிறகுகளைச் சேகரிக்கத் தொடங்கி யிருக்கிறான்.

நிர்மலா இறந்து பத்து நாட்களாகிவிட்டன. ஆனால் அவள் பிரிந்து போய் பல நூற்றாண்டுகளாகி விட்டதுபோல் இருந்தது. காலம் ரப்பர் மாதிரி நீண்டு கொண்டே போயிற்று. இந்த ரப்பர் இழுப்புக்கு நடுவில் என்றாவது ஒருநாள் துண்டிப்பாக்கி விட்டால், என்ன ஆகும்?

"இப்போது நாம் நிர்மலாவின் பதிமூணாவது நாள் சடங்கைச் செய்வது பற்றிக் கவலைப்பட வேண்டுமில்லையா?" ஹரிசங்கர் கமாலிடம் கேட்டான்.

"ஆமாம்." கமால் மெல்லச் சொன்னாள்.

"இங்கே எந்தப் புரோகிதரும் இல்லையே." தலயத்தும் சொன்னாள். நல்லது கெட்டதையெல்லாம் கொண்ட வாழ்க்கையைக் கடந்து நிர்மலா போய்ச் சேர்ந்துவிட்டாள். போனில் சுஜாதாதேவி தெரிவித்தாள்: "பதிமூன்றாம் நாள் பற்றி ஏற்பாடு ஆகாவிட்டால் கவலைப்பட வேண்டாம். சுவாமி தேவிகானந்த்ஜி தம் சென்டரில் ஏற்பாடு செய்வதாகச் சொல்லுகிறார்."

"அப்படியா! ரொம்ப சரி, நல்லது. நன்றி!" கமால் மகிழ்சியுடன் ரிசீவரைக் கீழே வைத்தான்.

"மரணமும் சுவாமி தேவிகானந்தரைப்போல் ஃப்ராடுதானோ?"

பிறகு எல்லாரும் தத்தம் காரியங்களில் முனைந்தார்கள். மணி மூன்று. கமால் ஹரிசங்கரிடம் பார்வையால் சொன்னான்: "சர் ரௌஸரிடம் போய் டெத் சர்ட்டிபிகேட் வாங்கப்போக வேண்டும்." நடுங்கவைக்கும் இந்த வாக்கியத்தைச் சொற்களால் வெளிப்படுத்த முடியாதுதான்.

"வாங்கி வையேன்." அதே மௌன மொழியில் ஹரி சங்கர் பதிலளித்தான்.

"லிட் ஹர்ஸ்டிலிருந்து நிர்மலாவின் சாமான்கள் வந்தாக வேண்டும்." தலயத்தும் மௌனமொழியில் தன் பங்கு உரையாடலை நிகழ்த்தினாள்.

"நாம் எப்படி அங்கே போவது?" கமால் சொல்லாமல் சொன்னான். 'போகலாம், போகமுடியும், கிளம்புங்கள்!' என்று ஹரிசங்கர் உணர்த்தினான்.

எல்லாரும் புறப்பட்டார்கள். காரில் அமர்ந்து சானிடோரியம் சென்றார்கள். அவர்கள் கடைசி முறையாக இங்கு வந்திருக்கிறார்கள்.

செயின்ட் ஜார்ஜ்வுட் பகுதியில் தன் ஜாகைக்குத் திரும்பி வந்ததும், கமால் எல்லாச் சாமான்களையும் கெஸ்ட் ரூமில் கொண்டு வைத்தான்; அங்குதான் ஹரிசங்கர் தங்கியிருந்தான். எல்லாரும்

திரும்பிய பிறகு, தலயத் கெஸ்ட் ரூமிற்கு வந்தாள்.

ஹரிசங்கர் சிறகுகளின் ஆல்பத்தை மேஜைமீது போட்டுவிட்டு கமாலுடன் வெளியே சென்றான். அறையில் எல்லாப் பொருள்களும் வெளிச்சத்தில் தெளிவாக இருந்தன. நூறாண்டுகளுக்கு முந்திய செப்புப் படிமம், விக்டோரியா காலத்து சைன்போர்டு, பழைய பத்திரிகைகள், கிழிந்த சோஃபா... இவற்றுக்கிடையே நிர்மலாவின் பொருள்களைக் கண்டபோது, எல்லாருடைய வாழ்வுமே பெரிய குஜிலிக் கடைப் பொருள்கள் என்றே தோன்றின. இவையாவும் உதவாக்கரைகள். இவர்களை விற்கத் தொடங்கிவிட்டாலோ? நம் வாழ்வையும் இந்தக் குஜிலிக்கடைத் தெருவில் விற்பனைக்கு வைக்க வேண்டும். சாவுதான் இதற்கு விலை.

மரணம்! பீரங்கி முழக்கம் போல் தாக்கியது.

எதிரே சைன்போர்டின் மூலையில் நிர்மலாவின் சாம்பல் வைக்கப்பட்டிருந்தது. இதைக் கங்கையில் கரைக்க ஹரிசங்கர் கையோடு எடுத்துப் போவான். இந்தச் சாவு சம்பந்தமான இறுதிப் பணிகளுக்காக அவன் கமாலோடு சென்றிருக்கிறான். இறுதிச் சடங்கு, டெத் சர்ட்டிபிகேட், கீதை பாராயணம், விமான டிக்கெட், ஒவ்வொன்றிலும் உண்மை பொதிந்திருந்தது. இந்த நாற்காலி, சோஃபா. சாப்பாட்டுப் பாத்திரங்கள் எல்லாவற்றிலுமே உண்மை பொதிந்திருந்தது. மரணம் தனி உலகம் என்று எந்த மடையன் சொன்னது? மரணத்தை விட மோசமான, தோசியான, இரண்டாந்தர விஷயம் வேறு எது? பிறகு தானே செத்து விடுகிறார்கள். யாருக்கு யார் சோகம் கொண்டாடுவது?

நிர்மலா என்கிற அசட்டுப்பெண் இருந்தாள், போய்ச் சேர்ந்தாள். அவளுடைய பூர்வோத்தரங்களை வேண்டுமானால் வரிசையாக நினைவில் கொள்ளலாம். வருடக்கணக்காக நோய்வாய்ப்பட்டு, பூதவுடலைத் துறந்து பரம்பொருளின் சன்னிதானத்துக்குச் சென்றுவிட்டாள்.

இந்த மரணத்துக்காக அழவேண்டுமா? கூடாது. இது மனம்விட்டுச் சிரிக்க வேண்டிய விஷயம். உண்மையில் இதைவிட நகைப்புக்குரிய விஷயம் வேறு இல்லை. தலயத்திற்கு இது புது அனுபவம். அவள் அந்த அறையைச் சுற்றிப் பார்த்தாள். தோட்டத்து மூலையில் சமையல் கட்டில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சந்திரா, சுரேகா இருவருடைய நிழல்களும் ஜன்னல் கண்ணாடியில் தெரிந்தன. சுற்றி அலைந்துவிட்டு ஹரிசங்கரின் அறைக்கு வந்து சேர்ந்தாள். நிர்மலாவின் பொருள்களை ஒன்றாகக் குவித்துப் பார்க்க விரும்பினாள். தொட்டுப் புரட்டிப் பார்த்தாள். புத்தகங்களுக் கிடையில் கீதையைக் கண்டாள். அதை எடுத்துக்கொண்டு டிராயிங் ரூமுக்கு வந்து சேர்ந்தாள். கவனமாகப் படிக்கலானாள்.

'...அவற்றைத் துணிச்சலுடன் சகித்துக்கொள்!'

'சரீரம் அழிவுள்ளது; ஆனால் இந்தச் சரீரத்திற்குள் இருக்கும் ஆத்மா அமரத்துவமுள்ளது, சாசுவதமானது. அதனால் போர்புரி! பாரதத்தின் புதல்வனே! ஆத்மா எவரையும் வதம் புரிவதில்லை; எவராலும் வதம் புரியப்படுவதுமில்லை. ஆயுதங்கள் ஆத்மாவைக் காயப்படுத்த முடியாது. தீ அதைப் பொசுக்க முடியாது. நீர் அதை அணைக்கவோ, மூழ்கடிக்கவோ முடியாது. காற்று அதைப் பாதிக்க இயலாது. பிறந்தது இறந்தே தீரும்; மரித்தவர் பிறப்பதும் திண்ணம். இதில் விசனப்பட என்ன இருக்கிறது?'

'துக்கம்-சுகம், லாபம்-நட்டம், வெற்றி-தோல்வி, எல்லாவற்றையும் ஒன்றாக, சமமாகப் பாவித்துப் போர் புரி!'

'ஏய் அர்ஜுனன் குழந்தைகளே...!' இடியட்!

புத்தகத்தை வேகமாக மூடிவைத்துவிட்டு எழுந்தாள் தலயத். மறுபடியும் கெஸ்ட் ரூமுக்குள் வந்தாள். தரையில் அமர்ந்து மறு படியும் நிர்மலாவின் பொருள்களை ஒழுங்குபடுத்தத் தொடங் கினாள். கைப்பையில் உலகத்துப் பொருள்கள் எல்லாம் இருந்தன. பெண்கள் கைப்பையில் இப்படி இருக்கத்தான் செய்யும்—பஸ் டிக்கெட், லாண்டிரி பில், பழைய காலியான லிப்ஸ்டிக், காதுத் தொங்கட்டான்கள், ஊக்குகள், சில்லரைக் காசுகள் இன்னபிற! நாலு வருடங்களுக்கு முந்திய தேதிகள் இருந்தன பில்களில். பிறகு, புத்தகங்களை அடுக்கி வைக்கத் தொடங்கினாள். ஒரு புத்தகத்திலிருந்து போட்டோ ஒன்று கீழே விழுந்தது. ஆர்வத்துடன் எடுத்துப் பார்த்தாள். கௌதம நீலாம்பரின் படம். பத்தாண்டுகளுக்கு முன்பு பெண்— பிள்ளை பார்க்க ஏற்பாடு செய்திருந்தபோது, பஹ்ராயிச்சிலிருந்து சிங்காடேவாலீ மாளிகைக்கு அனுப்பிவைக்கப்பட்டிருந்தது. அந்தப் போட்டோவை வெறித்துப் பார்த்துவிட்டு, பழையபடியே புத்தகத்திற் குள்ளேயே வைத்துவிட்டாள்.

அறையில் காலடியோசைகள் கேட்டன. வெளியே சென்றவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள்.

அன்று இரவு ஹரிசங்கர் உறங்கியபின், தலயத் அந்த அறைக்குள் மெல்ல நுழைந்து, அந்தப் புத்தகத்திலிருந்து கௌதமனின் போட்டோவை எடுத்து வந்தாள். தன் அறைக்குள் வந்து, அந்த போட்டோவைத் தரையில் போட்டு செருப்பாலேயே ஆத்திரம் தீர அடித்தாள். பிறகுதான் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது. தரையில் அமர்ந்து குலுங்கிக் குலுங்கி அழுது தீர்த்தாள்.

# 50

வெள்ளைப் பனிப்படலம் சவச்சல்லா மாதிரி எங்கும் கவிந்திருந்தது. ஓவியங்கள் மாதிரி, சாலை மருங்குகளின் மரங்கள் நிலைகுத்தி யிருந்தன. கடுமையாகப் பனி கொட்டியது. ஓரத்தில் இரண்டு மாடிக்கட்டிடம் அழகாகப் பொலிந்தது. வெளி வராந்தாவில் சிவப்புச் செங்கல் சுவர் ஓரமாகச் செப்பு விளக்குத் தொங்கியது. பின்னால் புல் வெளியின் மருங்கில் அழகிய மரங்கள். பனிக்காலத்தில் ஜரீனா தலையில் ஸ்கார்ப் சுற்றிக்கொண்டு, ஸ்வெட்டர் அணிந்து, வெளியிலிருந்து கட்டைகளைக் கொணர்ந்து, டிராயிங் ரூமில் கணப்பில் போடுவாள்; கணப்பு கனன்று எரியும். அப்போது உலகம் மிகப் பத்திரமாக இருப்பதாகத் தோன்றும்.

ஜரீனா ஹுஸேன் இங்கு தாய், தம்பிகளுடன் இருந்து வந்தாள். ஸ்லைட்ஸிலிருந்து ஆர்ட் டிப்ளமா வாங்கியிருக்கிறாள். அவள் தாய் இளமை மறையாதவள்; வெள்ளைக்காரி. ஆனால் சரியான லக்னோ வட்டாரத்து மொழி பேசுபவள்; வழிவந்த சுத்தமான பழமொழி-வசனமெல்லாம் பேசுபவள். இனிய இயல்பு, ஜரீனாவின் நண்பர் களுக்கு எப்போதும் அந்த இல்லத்தில் புகல் உண்டு. அவர்களும் மிக ஒட்டுறவுடன் பழகி வந்தார்கள். ஜரீனாவின் தந்தை லக்னோவில் பாரிஸ்டராக இருந்தார். அவருடைய ஆங்கிலேய மனைவி சில வருடங்களாகப் பிள்ளைகளின் படிப்புக்காக லண்டனில் இருந்து வருகிறாள்.

இந்தச் சமயம் ஜரீனா மேஜைமீது உட்கார்ந்து ரஷ்யப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாள். அழைப்புமணி ஒலித்தது. ஜரீனா ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். கௌதமன் நின்று கொண்டிருந்தான். ஜரீனா அவனை வியப்புடன் பார்த்தாள். கைப்பெட்டி அட்டேச்சி கேஸுடன் கௌதமன் மாடிக்கு வந்தான்.

"இது ஐந்தாவது நகரம். இங்கும் விளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன. இது மற்ற இடங்களைப் போல் இராது என்று நினைத்தேன்."

"உன் எண்ணம் தவறானது குறித்து எனக்கும் வருத்தம்தான். உள்ளே வா!" ஜரீனா பதிலளித்தாள்.

"என்னோடு வந்தவர்கள் வெளியே நின்று கொண்டிருக் கிறார்கள்."

"அவர்களையும் அழைத்து வாயேன்."

"எப்படி அழைப்பேன்? இந்த வெளிச்சத்தில் அவர்களுடைய முகங்களை நீ பார்க்கமுடியாது."

"யார் அவர்கள்?"

"ஆவிகள், பிசாசுகள், அருவமான சவங்கள், பேய்கள், எல்லாம் என் நண்பர் குழாம். வெளியே இருட்டில் வாயைப் பிளந்து கொண்டு நிற்கின்றன. என்னை முன்னேவிட்டு, அவை ஊர்வலம் வருகின்றன."

"எனக்குப் பயமாக இருக்காதா?"

"நீ அவற்றைக் கண்டு பயப்படக்கூடாது. ஏனென்றால் நாம் எல்லாருமே அவற்றின் வெளியுருவங்கள் தான். ஆனால்..." கையை வீசிக்கொண்டு கௌதமன் சொன்னான்: "இந்த இடம் மற்ற இடங் களைப் போல் இல்லாமல் இருட்டாக இருக்குமென்று நினைத்தேன். ஆனால் நீயும் மற்றவர்களைப்போல் இங்கேயும் தீபாவளி கொண்டாடுகிறாய்! வெளிச்சத்தில் நீ எதையம்மா பார்க்க முனைந் திருக்கிறாய்?" கௌதமன் சலிப்புடன் கைப்பெட்டி மீது உட்கார்ந்தான். ஜரீனா காலரிக் கதவைத் திறந்துவிட்டாள்.

"வெல்கம் கௌதம்! எங்கே போனாலும் திரும்பி வந்து விடுகிறாய். மகிழ்ச்சி. உன் வரவைக் கவலையுடன் எதிர் நோக்கி யிருந்தோம்."

"எல்லாருக்கும் என் நன்றி"

"அதாவது, வெல்கம் ஹோம்! வீட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்ததற்காக! 'வீடு' எங்கிருந்தாலும் சரி, ஒரு பயணத்திற்குப் பிறகு திரும்பி வந்து தங்குமிடம் ஒன்று வேண்டும்."

"சரிதான்! நான் உன் வரவேற்பை ஏற்கிறேன். இது நீ இருக்கக் கூடிய வீடு இல்லையே! கலைச்செல்வியின் வீடா இது?"

"அதேதான்"

"சரி; நீ சொன்னால் சரியாகத்தான் இருக்கும். ஜரீனா! நான் பித்துக்குளி மாதிரி ஆகிவிட்டேனா?"

"இல்லையே!" ஜரீனா கலவரமடைந்தாள். "நீ மிகவும் களைத்திருக்கிறாய்."

"தொடர்ந்து ஓடிக்கொண்டே இருந்தால், மனிதன் களைத்துத்தான் போகிறான்."

"நீ எங்கே இருந்தாய்?"

"நானா? எதற்காகச் சொல்லவேண்டும்? பல இரவுகளை வயல் வெளிகளிலே கழித்தேன். தோணிகளுக்குள் புகுந்து கொண்டிருந்தேன். ரயில்வே ஸ்டேஷன் வெயிட்டிங் ரூம்களில் முடங்கிக் கிடந் திருக்கிறேன். போலீஸின் பசிப் பார்வையிலிருந்து தப்பி, ஒளிந்து திரிந்து கொண்டிருந்தேன். இன்று எனக்குத் தோன்றுகிறது: நல்ல மனிதனைப்போல் வெளியே வந்து குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டாலென்ன?"

"போலீஸா_!"

"உனக்குத் தெரியாதா?"

“தெரியாதே. என்ன ?”

“ஜரீனா பேகம்! நான் கொலை செய்துவிட்டேன். அப்போதிருந்து நிலைகொள்ளாமல் திரிந்து கொண்டிருக்கிறேன், எங்காவது தலை மறைவாக ஒளிந்து இருக்கப் புகல் கிடைக்காதா என்று. நண்பர்களுடைய வீடுகளுக்கெல்லாம் ஓடுகிறேன். எல்லாக் கதவுகளும் அடைபட்டிருக்கின்றன; உள்ளே நல்ல வெளிச்சம், இந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தேன். சரி, உன்னையும்தான் பார்த்துவிட்டுப் போகலாமே என்று வந்தேன்.”

“உள்ளே வா, கௌதம்! காற்று மிகச் சில்லிப்பாக அடிக்கிறது.”

“போலீசுக்குத் தகவல் கொடுக்க மாட்டாயே?” பயப்பிராந்தியுடன் கேட்டான்.

“ஒருகாலும் மாட்டேன்.”

“நான் இங்கேயே உட்காருகிறேன். மாடிப் பகுதிகள் எனக்கு ராசி இல்லை.”

பனிக்காற்று வேகமாகத் தாக்கியது.

“ஜரீனா பேகம்! நான் உண்மையைச் சொல்லுகிறேன். நான் இரண்டு கொலைகளைச் செய்திருக்கிறேன். இருவருக்குமே நான் இதைச் செய்திருக்கிறேனென்பது தெரியாது. அன்றைக்கு, சுரேகா வீட்டிலிருந்து பார்ஸலை எடுத்துக்கொண்டு சானிடோரியத்திற்கு ஓடினேனா? அப்போது நிர்மலா என்னைத் தெரிந்து கொள்ளவில்லை. அதற்குள் அவள் இறந்துவிட்டாள். அன்று இரவு நான் திரும்பிவந்து, நிலை கொள்ளாமல் தெருத்தெருவாய்ச் சுற்றிக் கொண்டிருந்தேன். சேல்ஸி பகுதியில் ஒரு ‘பப்’பில் சம்பா அகமத்தைச் சந்தித்தேன். அவளால் என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அளவுக்கு மீறிக் குடித்திருந்தாள் அவள்... இந்த வித்தையில் நான் கில்லாடி, பார்த்தாயா...?”

பனிப்புயல் தீவிரமாகிக் கொண்டிருந்தது. ஒரு கார் சேற்றை வாரி இறைத்துக் கொண்டு ஆவேசமாக வந்து நின்றது. கமாலும் ஹரிசங்கரும் இறங்கி வந்தார்கள்.

“ஜரீனா! கௌதம் இங்கு வந்தானா?” கீழேயிருந்து குரல் கொடுத்தார்கள். விரைவாக மேலே வந்தார்கள்.

“சுவாமிஜியின் சென்டரில் போய் விசாரித்ததில், கௌதமன் இந்தப் பக்கம் வந்திருப்பதாகச் சொன்னர்கள்.” கமால் சொல்லிக் கொண்டு வந்தான். சிறிது நேரத்திற்குப் பிறகு, மயக்கத்தில் கிடந்த கௌதமனைக் காரில் போட்டுக்கொண்டு, தம் ஜாகைக்கு விரைந்தார்கள்.

# 51

சுஜாதா தேவி கதவைத் திறந்து உரக்கத் தெரிவித்தாள்: "ஒருவரும் வரக்காணோம். மூன்று பயல்களும் நாஸ்திகர்கள்: காலமான நிர்மலாவுக்கு வேண்டியவர்களாம்! சுவாமிஜி எல்லா ஏற்பாடுகளும் செய்து வைத்திருந்தார். பூக்கள் சேகரித்தார்; பஜனைக் குழுவை சுவிஸ் காட்டேஜில் காத்திருக்கச் சொன்னார். உரிமைப்பட்டவர்களைக் காணோமே! சாந்தி ஏற்படுவதை இவர்கள் விரும்பவில்லையோ என்னவோ!"

"இப்போது அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள், தெரியுமா? அந்த இண்டியன் டான்ஸர் வீட்டில் கூடி இராப் பகலாய் சீட்டாடிக்கொண்டிருக்கிறார்கள். மகா மோசம்!" பரமார்த்தப் பித்துக்கொண்ட வயோதிக ஆங்கில மாது குறை கூறினாள்.

சம்பா படிகளில் இறங்கி வந்தாள்.

"நீ யாரையோ தேடிக்கொண்டிருக்கிறாய் போலிருக்கிறதே?" மற்றொரு வேதாந்த பக்தையான அமெரிக்க மாது ஜன்னலிலிருந்து கழுத்தை நீட்டியவாறு சொன்னாள். "அதோ பார்! அங்கே இருக்கிறான்; நம்மை எல்லாரையுமே அழைக்கிறான்" கண்ணன் படத்தைக் காண்பித்து விளக்கினாள்: "இதைப் பார்க்க இந்த ஊனக் கண்ணால் முடியாது; மூன்றாவது கண் வேண்டும். ஆனால் பாவம்! இந்தியர்களான நீங்கள் அந்தக் கண்ணை இழந்து விட்டீர்கள்."

சம்பாவால் அங்கே நிற்க முடியவில்லை. கீழே விரைந்து வந்தாள். தெருவுக்கு வந்ததும், நெற்றியைத் தடவிப்பார்த்துக் கொண்டாள். தன்னைத் தவிர மற்றவர்கள் எல்லாருக்கும் மூன்றாவது கண் இருப்பதாகவும், அதனால் தன்னை உறுத்துப் பார்ப்பதாகவும் தோன்றியது. சம்பா ஓடிப்போய் 73ஆம் நம்பர் பஸ்ஸில் ஏறிக் கொண்டாள்.

சென்டரில் சுவாமி தேவிகானந்தர் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். யோகசாதனையைப் பற்றிய அவருடைய பிரசங்கத்தைக் கேட்டபிறகு, ஆன்மீகப் பித்துகளான கிழவிகள் தங்கள் இல்லங்களுக்குச்சென்று, பழைய பாத்திரங்களைத் தேய்ப்பார்கள். காஸ் அடுப்புக்கு ஆகும் செலவை எண்ணிக் கவலைப்படுவார்கள். அப்போது அவர்களுடைய லார்டு கிருஷ்ணா எவ்வாறு உதவுவார்?

பஸ்ஸிலிருந்து இறங்கி இந்திய மாணவர் விடுதிக்கு வந்து சேர்ந்தாள். ஹாலில் புதிய மாணவர்களின் ஒரு குழு அரட்டை அடித்துக் கொண்டிருந்தது.

"நான் சம்பா அஹமத்." கதவுப் பக்கம் நின்று கொண்டு சொன்னாள்.

"யெஸ்..." மதராஸி மாணவனொருவன் வந்து விசாரித்தான்.

சம்பாவுக்கு இளக்காரமாக இருந்தது; அவள் பெயர் எவ்வளவு மதிப்பிழந்து விட்டது! அவளை யாரும் இனம் கண்டு கொள்ள வில்லையே. யாருக்குமே அவள் தேவை இல்லை போலிருக்கிறது.

"ஒன்றுமில்லை; யாரும் வேண்டாம். உங்கள் சென்டரைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்."

சில மாணவர்கள் அவளைச் சந்தேகக் கண்ணோடு பார்த் தார்கள். அவள் பேசாமல் திரும்பிச் சாலைக்கு வந்தாள். பிறகு இண்டியா ஹவுஸ் வந்து சேர்ந்தாள். காண்டீனில் எப்போதும்போல் கூச்சல்-சந்தடி இருந்தது.

பிறகு இளைஞர் விடுதிக்குச் சென்றாள். கமால் அங்கு இருந்தான். கவுன்ட்டரில் நின்று யாருக்கோ ஃபோன் செய்து கொண்டிருந்தான். பிறகு வெளியே சென்று விட்டான். கூட்டத்தில் கலந்து மறையும் வரைக்கும் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு பி.பி.ஸி. காண்டீனுக்குப் போய்ப் பார்த்தாள். "நான் சம்பா அஹமத்" என்று அங்கு கூடியிருந்தவர்களிடம் தெரிவிக்க விரும் பினாள்; ஆனால் பேசாமல் திரும்பி வந்து விட்டாள். எதிரே சுரங்க வழிப்பாதை. கீழே இறங்கி எந்த முடிவும் இல்லாமல் மேடாவலுக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டாள். சில நிமிடங்களுக்குப் பிறகு மேடா வலின் அகன்ற தெருவில், ஒரு மரததில் சாய்ந்து நின்று கொண்டு, நாலா பக்கமும் பார்த்தாள். எதிரே சிறிது தூரத்தில் சுரேகா, ஆஷா இவர்களின் வீட்டுப்பகுதிகள் இருந்தன. வேலிக்கு அப்பால் தலயத், கமால் இருவரின் பிளாட்டுகள். ஸ்டேஷனுக்கு எதிரே புதிய பிளாக்கில் சாந்தாவும் விலியம் பில் கிரேக்கும் இருந்தார்கள்.

இதே சமயத்தில் சுரேகா எதிர்ப்பட்டாள். உவகையுடன், "ஹலோ! சம்பா எங்கே இப்படி நின்று கொண்டிருக்கிறாய்? வா, வா!" என்று அழைத்தாள். சம்பா பேசாமல் சுரேகாவுடன் சென்றாள். இருவரும் வீட்டுக்குள் சென்றார்கள்.

பகல் மீதமிருந்தது. பழுப்பு இலைகள் கீழே உதிர்ந்து கிடந்தன. பொன்னிறக் கிரணங்கள் புல்வெளியில் வட்டமாகப் படிந்திருந்தன.

மனிதன் உண்மையில் என்ன விரும்புகிறான்?

"சம்பா! இந்த சோஃபாவில் வசதியாக உட்கார்ந்து கொள்ளேன்." சுரேகா சொன்னாள்.

"இந்த சோஃபாவிலே உட்கார்ந்தாலும் அன்றைக்குப் பார்த்த அறைதானே இது?" சம்பா சொன்னாள்.

"அன்றைக்குப் பார்த்த என்றால்...? என்றைக்கு?"—சுரேகா

"யாருக்குத் தெரியும்!"

பருவத்தின் செல்வாக்கு படர்ந்திருந்தது. சுத்தமான குளிர்; சுத்தமான பனி. எல்லாப் படைப்புகளுமே புஞ்சையாகத் தெளிவாகத்

தென்பட்டன.

வாளியிலிருந்து கரியை அள்ளியவாறே, சுரேகா தெரிவித்தாள்: "நாளைக்குப் பலர் வீடு திரும்புகிறார்கள்!"

"வீட்டுக்கா?" சம்பா திகைத்தாள்.

"ஆமாம். இந்தியாவுக்குத்தான்."

"யார், யார்?" நடுநிலையாகக் கேட்டாள். அவளுக்கு யாரால் என்ன ஆகவேண்டும்? பருவகாலம் போல் எல்லா இடங்களிலும் வியாபித்திருந்தாள். அவளுக்கு எவரோடும் சம்பந்தம் கிடையாது. சுரேகா காய்கறி நறுக்க உட்கார்ந்தாள். "எல்லாருமே—ஹரி டிப்ளேனில் போகிறான்; கமால் கப்பல் பயணம்; கௌதமன் இன்று காலையே நியூயார்க் போய்விட்டான்."

மாடி மறைப்பில் பகலவன் மறைந்துவிட்டான். வெளியில் இருள் கவிந்தது. குளிர்காலத்து இரவு... திடுதிப்பென்று சூழ்ந்து கொண்டு தாக்கும். சுரேகாவுக்கு உதவ சம்பா சமையலறைக்குள் சென்றாள். ஜன்னல் வழியாகப் பக்கத்து அறையைப் பார்த்தாள். ஒன்றையும் காணோம். புதிய அறைபோல் இருந்தது. சுரேகாவின் வீட்டுக்கு வெளிப்பக்கத்திலிருந்து கமால் குடியிருப்பின் வெளிச் சத்தைப் பார்க்க முடிந்தது.

"என்னை விட்டுப் போகாதே! என்னை விட்டுப் போகாதே! போகாதே!" வாய்விட்டுக் கத்த விரும்பினாள். ஆனால் மௌனியாக ஸ்டேஷனை நோக்கி விரைந்தாள்.

தன் அறைக்குள் நுழைந்து, சுவிட்சைப் போட கை நீட்டியபோது, இருள் அவளுக்கு நல்வரவு கூறியது. ஜன்னல் பக்கம் வைத்திருந்த குரோட்டன்ஸ் பக்கம் சாய்ந்து கொண்டாள். 'இன்று வரை இருட்டு எனக்கு எதிரியாக இருந்தது; ஆனால் இப்போது துணை, நட்பு. மாடி வீடுகளைத் தழுவிவரும் சிலிர்ப்புக் காற்று, புல்களின் சரசரப்பு, உறைபனி, எல்லாம் தத்தம் இயக்கத்தில், போக்கில் இருக்கின்றன. நான் உண்மையாகவே சுதந்திரமடைந்து விட்டேன்...' அவள் சிரித்துக்கொண்டாள். 'கீழே கெட்டியான தரை இருக்கிறது. அதில் இறுதிவரைக்கும் நான் நடந்து செல்லவேண்டும். இந்தக் கால்கள் என்னை எங்கெல்லாம் அழைத்துச் செல்லுமோ?' தன் கால்களைப் புதிய உவகையுடன் பார்த்துக் கொண்டாள். இந்த இரவைத் துணைக்கொண்டு பகலைக் கடப்பேன். இரவே! என் தோழி! எப்படி இருக்கிறாய்? உன்னை வெகுகாலமாக நான் அறிவேன். பல நிலைகளில், இடங்களில், காலங்களில் உன்னைச் சந்தித்திருக் கிறேன். நாம் இருவரும் கூடிக்கலந்து பொழுது போக்கியிருக்கிறோம். இறுதியில் நீதான் வெல்வாய்...!'

'கௌதம நீலாம்பர்! உன்னைக் கனவுலகில் திரிய விடுகிறேன். நான் ஓர் உண்மை நிலை. நீயோ கனவுகளிலேயே சுகம் கண்டாய்.'

இருளும் பனிக்குளிரும் அதிகரித்தன. அமைதி அலையாகத் தாக்கியது. காலம் அறிவித்தது: "என்னைப் புரிந்து கொள். நான் ஒருகாலும் உன்னைத் தொடராமல் விடமாட்டேன். நான் பின் தங்கியிருப்பேன் என்று நினைத்தாயல்லவா? தவறு, என்னைப் பார், புரிந்துகொள்! நான் சொல்கிறேன்– கணமாக, கணத்திற்கும் கணமாக. இருளில் கரைகிறேன்; நான் இறுதி எல்லை. அதற்கப்பால் நீ போக முடியாது. இனி நீ திரும்பிப் போகலாம். நீ எல்லைக்கு வந்துவிட்டாய். எதிரே வாசல். அங்கிருந்து புதிய தேசம் தொடங்குகிறது. புதிய பயணத்துக்கு நீ ஆயத்தமாக வேண்டும்; சான்றிதழ்களை-இசைவுத் தாள்களை சேகரித்துக்கொள். இங்கு சுங்கச் சாவடி, எல்லைச் சோதனை, விசாரணை எல்லாம் இருக்கும். நான் பல அதிசயங்களைத் தீர்த்து வைத்திருக்கிறேன். உன் அதிசயம் மிக மிகச் சாதாரணம்- என்னைப் புரிந்து கொள். நான் உன் கூடவே வந்து கொண்டிருப்பேன். நீ தப்ப முடியாது. மற்றவர் உன்னை விட்டு ஓடிவிடலாம்; என்னால் முடியாது. நான் எல்லாச் சிக்கல்களையும், முடிவுகளையும் தீர்த்து வைக்கிறேன். உனக்குப் பல சங்கடங்கள் ஏற்படும். அவற்றைத் தீர்க்க நான் வழி வகை காட்டுவேன். என்னைச் சார்ந்திரு. நம்பு...!'

குளிர் நடுக்கியது; சம்பா ஜன்னலை மூடிவிட்டு அறைக்கு வந்து சேர்ந்தாள்.

# 52

"அப்பி கலியாணத்தின் போது உடுத்திக்கொள்ள நல்ல புடவை வாங்கப் போகிறேன்-கார் சோபி ரகம்!" நிர்மலா சொல்லிக் கொண்டிருந்தாள்.

தலயத் பேசவில்லை.

"எனக்கு இந்தப் புதுரகப் பார்டர்கள் பிடிப்பதே இல்லை." மாலதி கிழவி மாதிரி சொல்லிக் கொண்டிருந்தாள். ராஜா வீட்டுப் பெண்; பதினாறு வயது. நிர்மலா அவளை விட ஒரு வயது சிறியவள். தலயத் நிர்மலாவைவிட ஒரு வயது சிறியவள். அவர்கள் இருவரும் பெரிய மனுஷிகளைப்போல் புடவை-துணிரகம்-தரம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்; வியப்பிலாழ்த்துவதாக எண்ணம்.

தலயத் ஒரு கணம் பேசாதிருந்துவிட்டு, பிறகு கமாலிடம் சொன்னாள். "என் கடந்த காலம் என் வரைக்கும் முக்கியத்துவம் வாய்ந்தது. பிறருக்கோ-உலகிற்கோ இதற்கு எந்தப் பொருளும் இல்லை. அவர்களுக்கு இதில் எவ்வித சுவாரசியமும் ஏற்படாது."

"என் கடந்த காலமும் எனக்கே உரியதுதான்." கமாலும் அதே

கருத்தைத் தெரிவித்தான்.

"உலகுக்கு 'இன்று'தான் விருப்பமானது." ஹரிசங்கர் சொன்னான்.

"ஆனால் கடந்த நேற்றுதான் இன்று ஆகிறது. 'இன்று' என்பது கடந்த காலத்தைச் சார்ந்தது; வருங்காலத்திற்கும் உரியதுதான். காலத்தின் அலைக்கழிப்பில் தவித்தாகிவிட்டது நான். உங்களில் யாராவது எனக்கு ஏன் உதவக்கூடாது?"

"உனக்கு உதவுவதா? தலயத் பேகம்! ஐன்ஸ்டீன் கூட உதவ முடியாது." ஹரிசங்கர்.

"காலம் எப்போதும் இருக்கிறது. 'இன்று' தான் அந்தக் காலம்." தலயத் சொன்னாள்.

இவர்கள் லண்டன் செயின்ட் ஜார்ஜ்வுட்டில் உட்கார்ந்து, 1954, டிசம்பர் 15, மூன்றாம் ஜாமத்தில் இவ்விதமாக அளவளாவிக் கொண்டிருந்தார்கள். இவர்களுடைய நிழல்கள் ஜன்னல் கண்ணாடி களில் விசித்திரமாக உருமாறிப் பிரதிபலித்தன. வெளியே ஆவேசக் காற்று. சாலையில் கார்களின் படுவேகமான போக்குவரத்து. கன்ஸர்ட் இசையொலி ரேடியோவில் இழைந்தது. காலவெள்ளத்தின் சிறு பகுதியில், அகன்ற இருண்ட சுவர்களுக்கிடையில், பல ஒலிகளின் மயக்கத்தில் அம்மூவரும் முடங்கிக் கிடந்தார்கள்.

காலத்தின் இதே இருண்ட சிறு பகுதியில் தலயத், 1940, ஜூலை மாதத்தில் சிங்காடேவாலீ மாளிகையின் கூடத்தில் நிர்மலாவுடனும் மாலதியுடனும் அமர்ந்து முன்சொன்னவாறு பேசிக் கொண்டிருந்தாள். இங்கிருந்த தலயத்திற்கும், லண்டனிலிருக்கும் தலயத்துக்கும் வேறு பாடு கிடையாது. இருந்தாலும் இரு தனித்தன்மைகள் அவர்கள். புத்தர்பிரான் சொல்லியிருக்கிறார்: "மனிதன் கணத்துக்குக் கணம் மாறிக் கொண்டிருக்கிறான். பாலியத்தில், இளமையில், முதுமையில் மாறிக்கொண்டிருக்கிறான். இந்தத் தொடர்நிலைதான் எஞ்சுவது, சாசுவதமானது" தொலைவில் பனிப்பாறைகள் தகர்ந்து சரிந்து பிரவிக்கின்றன. காற்றும், இருளும் காலத்தின் பரிணாமங்கள்.

"நாம் நம் கதையைத் திரும்பக் கூறி நம்மையே நம்பவைத்துக் கொள்ளுகிறோம். காரணம், நமக்குப் பயம் எழுகிறது"—ஹரி சங்கர்.

"நாம் பொழுது, இருட்டு இரண்டையும் கண்டு பயப்படுகிறோம். காரணம், காலம் ஒருநாள் நம்மைக் கொன்று விடும். இருட்டு நாம் புகல் தேடும் கடைசி இடமாகும்."—தலயத்.

"கௌதம நீலாம்பர் வரைக்கும் எவ்வளவு கோழையாகி விட்டார்கள்!"—கமால்.

"கௌதம நீலாம்பரைப் பற்றி இப்போது பேச்செடுக்காதே. முக்கிய விஷயத்தை விட்டு விலகாதே. வாழ்க்கையில் எது முக்கிய மென்பதைத் தீர்மானித்துக் கொள்ளவேண்டும்." ஹரிசங்கர் தொடர்ந் தான்: "நான் பதினான்கு வருடங்களுக்கு முன்பும் இருந்தேன்.

உயிரோடிருந்தால் பதினான்கு வருடங்களுக்குப் பிறகும் ஹரி சங்கராகவே இருப்பேன். காலத்தின் எல்லாச் சோதனைகளையும் நாம் ஏற்றிருப்போம்; நாம் சிறு துணுக்குகள்; நாமும் மடியப் போகிறவர்கள்தான்-"

காலத்தின் எந்த அமைப்பில் தலயத் அமர்ந்திருந்தாளோ, அதே அமைப்பில் வேறோர் இடத்திலும் அவள் இருந்தாள். இரு துளிகளுக்குமிடையில் வருடங்களின் இடையீடு. இந்த அளவுக்குள் தான் மேலும் மேலுமாக மனிதன் முன்னேற வேண்டும். திரும்பிப் போவது இயலாதது. ஆயிரக்கணக்கான தலயத்துகள், எண்ணற்ற துண்டங்களாகப் பிரிந்து, பலப்பல இடங்களில் இருந்தார்கள். கண்ணாடித் துண்டுகளில் ஒரே முகத்தின் பிரதிபிம்பங்கள் புலப் படுமே, அவைபோல!

கமால் நாடக மேடையில் நடப்பவன் மாதிரி வந்து மேஜையில் உட்கார்ந்தான். கண்களை இடுக்கிப் பார்த்தான். மைக்கேல், பில் கிரேக், ஜரீனா மூவரும் கௌதம நீலாம்பரை விமான நிலையத்தில் வழியனுப்பிவிட்டுத் திரும்பியிருக்கிறார்கள். கமாலின் அறையில் ஹரிசங்கர், கமால் இருவரின் சாமான்களும் கட்டிவைக்கப் பட்டிருந்தன.

கௌதம், ஜரீனாவின் அறையிலிருந்து நினைவிழந்த நிலையில் எடுத்துச் செல்லப்பட்டவன் கமாலின் அறையில் பதினைந்து நாட்கள் வரைக்கும் சுகவீனமாகக் கிடந்தான். பொழுது போக்கு சீட்டாட்டத்திலும் அரட்டையிலும் நிறைவு கண்டது. உடல்நலம் தேறுவதற்குள்ளேயே காஷ்மீர் விவகாரத்திற்காக மறுபடியும் நியூயார்க் போகுமாறு உத்தரவு வந்தது. கமாலுக்கும் ஹரிக்கும் லண்டனில் இது கடைசி தினம். இரவு ஏர் இண்டியா விமானத்தில் ஹரி புறப்படப் போகிறான். மறுநாள் காலையில் கமால் போட்-டிரெயினில் கிளம்ப வேண்டும். மைக்கேலும் விடை கொள்ளப் போகிறான்.

தலயத் மறுபடியும் காலண்டரைப் பார்த்தாள். 14, டிசம்பர் 1954. அவளுக்கு உடல் விதிர்த்தது. உரக்க, "மைக்கேல்! கதவை மூடேன்!" என்றாள்.

மைக்கேல் கதவை மூடினான். தலயத்துக்கு மற்றவர்கள் பொம் மைகளாகத் தோற்றமளித்தார்கள். துப்பாக்கி தாங்கிய சிப்பாய் (மைக்கேல்), தலயசைக்கும் தாடிவளர்த்த சீனஞானி (ஹரிசங்கர்), மஹாராஜ் சந்திரகுப்தரின் அவையில் ஆடும் நர்த்தகி (சுரேகா), வாய்விட்டு அழுகிற, சோகம் கொண்டாடுகிற, கூனல் விழுந்த நவாப் கம்மன் சாகப்(கமால்)—தீபாவளி கொலுவரிசை மாதிரி எதிரே அலங்கரிக்கப்பட்டிருந்தார்கள். லக்னோ கைவினைஞர் வடித்த பதுமைகளாக! இவற்றின் ஒன்றின் தலை உடைந்து விட்டது. பணியாள் வந்து அலங்கரித்துக் கொலுவைப்பான். எல்லாப் பொம்மை

களும் அதனதன் இடத்தில் அமர்த்தப்படுவார்கள்.

"நான் சகஜமாகத்தான் இருக்கிறேன். எல்லாப் பொருள்களும் பயமுறுத்துகின்றன ஒரேயடியாக."

"உலகத்தில் பெரிய குழப்பம் குளறுபடிகளெல்லாம் நடப்பதாகத் தெரிகிறது"—கமால்.

"நான் சொற்களின் கடலைக் கடந்து எண்ணங்களின் பயங் கரமான பாதையில் முன்னேறி நிற்கிறேன்." சொற்கள் உண்மையில் என்னவாம்? பல நூல்கள் சொல்லியிருக்கின்றன: 'சொற்கள் தவறுபவை.' நிலையானது எதுவுமில்லை. தொடர்பு வலுவற்றது. உளுத்துப்போன நிலை. பிருகஸ்பதி ராட்சதர்களுக்குத் தம் வித்தைகளைக் கற்றுத் தருகிறார். நானே ஒரு ராட்சசியாகத் தோன்றுகிறேன். வனதேவதைகளின் கதைகளில் வரும் அரக்கியாகித் தன் மாந்திரீக இலைக்கொத்தில் ஏறிக்கொண்டு இருட்டில்-சூனியத்தில் திரிகிறேன்.

"இந்த இருட்டில் பல இலைக்கொத்துகள் திரிகின்றன. அவை மேல் ஆயிரக்கணக்கான பெண்கள்—தஹ்மீனா, நிர்மலா, ஜோன் கார்ட்டர், சம்பா, ஜரீனா, இன்னும் எத்தனையோ பேர்கள். இலைக் கொத்துக்கள் உயரே பறக்கின்றன. இனி அவை கீழே இறங்குவது இயலாது."

"இவர்களுள் சம்பாவைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டியிருக்கும் அவள் கனவுகள் காணத் தொடங்கி விட்டாள்."

"நீங்களும் மாந்திரீக சக்திகொண்ட அந்த இலைக்கொத்து ஒன்றில் சவாரி செய்தவாறு உறங்கிவிடுவீர்களானால், நீங்களும் வழி தடுமாறிப் போவீர்கள்; கீழே தரைக்கு வந்து சேருவீர்கள்."

"தன் கனவுலகில் மத்திய காலத்துப் பக்தர்களைப்போல் பாடித் திரிந்தாள். மாதா கோவில்களுக்குச் சென்றாள். துறவிகளைக் கண்டு அவர்களுடைய மன நிறைவைக்கண்டு அதிசயித்தாள். தன் ஞானகுருவையும், வாழ்க்கையெனும் கடவுளையும், கற்பனைத் தெய் வத்தையும் ஒன்று சேர்த்துச் சிந்தித்தபோது அவளுக்கு வெகு சுகமாக இருந்தது. அந்த சுகத்தை நீ அளவிட முடியாது. இங்கே பக்தி சிரத்தையின் பாலுள்ள சிக்கல்கள் தீர்ந்தன. கொஞ்சம் 'சூஃபீ' தத்துவ சிந்தனை தேவை. விடிகாலையில் எழுந்து பைரவி ராகத்தில் துதி கீதம் பாடினால் அந்தத் தத்துவ சிந்தனை தானாகவே ஏற்பட்டு விடும். கௌதம நீலாம்பரைப்போல் ஒவ்வொரு விஷயத்திலும் உருவிலும் ஏதோ ரகசியம் மறைந்திருப்பதாகத் தெரிகிறது"

அவர்கள் அறையிலிருந்து வெளியேறி, வீதிக்கு வந்தார்கள். கமால் பனிப்படலத்தை மோந்து பார்த்தான்.

"ஒவ்வொரு பொருளிலும் ரகசியம் இருக்கிறது. இதனால் நான் பல துன்பங்களை அனுபவித்திருக்கிறேன்." மைக்கேல் காற்றில்

கையை அசையவிட்டபின் சொன்னான்.

"ஆமாம்" தலயத் ஆமோதித்தாள். எல்லாரும் தலை குனிந்து நடந்தார்கள். பெண்கள் அலுவலகங்களிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். மலையடிவாரம் சென்று ஓவியங்களைப் பார்த் தார்கள். அலுப்பும் சலிப்பும் மேலும் அதிகமாயிற்று.

கீழே ஏதோ விழாக் கூட்டம். ஜிப்ஸிப் பெண்கள் கை ரேகை பார்த்து ஆருடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். குழந்தைகள் வேர்க்கடலை, ஐஸ்கிரீம் என்று ரசித்துக் கொண்டிருந்தார்கள்.

"பிறரையும் நம் கனவுலகில் இழுத்துக் கொள்கிறோமே, இதுதான் நம்முடைய மகா மடத்தனம்." மைக்கேல் சொன்னான். தலயத் இக்கருத்தை ஆமோதித்தாள்.

"ஆம்! என் கடந்த காலம், என் நேரம், என் கனவுகள், எல்லாமே எனக்கே உரியவை. ஆனால், நான் தனி நபர் குறித்தே பேசுகிறேன். வருங்காலம் நம் எல்லாருக்குமே ஒன்றுதான், பொதுவானது."

மைக்கேலுக்குக் கோபமாக வந்தது. "தயவு செய்து இந்தக் கட்டத்தில் பார்ட்டி லைனைப் போட்டு வைக்காதே. வருங்காலம் எல்லாருக்கும் ஒன்றுபோல் இராது. இந்த மலைக்கு அப்பால் வருங்காலம் நமக்காகத் தனித்தனியாக வாய்பிளந்து காத்திருக்கிறது."

"மைக்கேல்! நான் பயந்து கொண்டிருக்கிறேன்." தலயத் குழந்தை மாதிரி சொன்னாள்.

"அப்படியா?"

"என்னைப் பயமுறுத்தக் கொஞ்சமாகவா பொருள்கள் இருக் கின்றன? அழகிய காட்சி, சுகமான வீடு... பையைத் திறந்தால், பல வகைப் பேப்பர்கள் வெளிப்படுகின்றன. பாங்கிக் குறிப்புகள், கடி தங்கள், பங்கு மார்க்கெட் பத்திரங்கள், ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனி களின் அறிக்கைகள்... இவற்றில் உள்ள பெயர்கள் லார்டு சின்ஹா, சர்வீரேன் முகர்ஜி, ஸ்ரீதாபர். இந்தப் பெயர்களுக்குப் பின்னால் மற்றொரு உலகம் இருக்கிறது. உயரமான திடமான வீடுகள்; ரொக்கத் தொகை, நிதி நிலவரம், வேலை நிறுத்தங்கள், பசி, வேலையில்லாமை, பாட்டாளிகளின் குடியிருப்புகள், ஸிட்டி ஆஃப் லண்டன், க்ளைவ் ரோட், கல்கத்தா, சௌரங்கி, டாடா நகர், எண்ட்ரூயூ யூல், கல்கத்தா...

"நான் பயந்துகொண்டே அந்தக் காகிதங்களில் கையெழுத்திடு கிறேன். இவை என் வாழ்க்கையின் பிணை நிதியம்; என் உயரிய செல்வந்த நிலைக்குச் சாட்சியங்கள். இவையாவும் எதற்கு? என்ன லாபம்? நான் ரஸா குடியில் பிறந்து இதற்கெல்லாம் வாரிசாக்கப் படப்போகிறேன். காகிதத் துண்டுகள், பணம், பணம், ரூபாய், ரூபாய்! பண மோகம் என் உள்ளத்திலிருந்து விலகியது. 'இந்த நவாப் குடிவழி சந்ததியார் இப்படித்தான் பொறுப்பில்லாமல் இருப்பார்கள்' என்று

பேசிக்கொள்ளுகிறார்கள். எனக்குச் சிரிப்பாக வந்தது."

அவர்கள் பாறைகளில் அமர்ந்தார்கள். கீழே தாழ்வரையில் ஏரிக்குள் மறைந்துகொண்டிருக்கும் கதிரவனின் பொற்கிரணங்கள் நடனமாடின. 'ஸால்வேஷன் ஆர்மி' (விடுதலைப்படை) இசைக் குழுவினர் பாண்டு வாசித்துக்கொண்டே சென்றனர். கமால் ஏரிக் கரையில் தனியாக நின்றான். கீழே தொலைவிலிருந்து பார்த்தபோது அவன் சிறுபிள்ளையாகத் தோன்றினான்.

தலயத் திடீரென்று உரக்கச் சிரித்தாள்.

"நான் ஒருநாள் நிர்மலாவிடம் கேட்டேன்: 'ராணி! உனக்கேன் பயம்?' நிர்மலா பதில் சொன்னாள்: 'என் கனவுகளிலிருந்து அவனைத் தவிர்க்க விரும்புகிறேன். அவன் என் கனவுகளை அறிவான்.' வேடிக்கைதான்! நிர்மலாவின் கனவுகள் அவளிடத்திலேயே பத்திர மாக நிலைத்துவிட்டன. கடைசியில் கௌதமன் 'யாரோ மனிதன்' நிலையில்தான் அமைந்தான்."

"நாம் அறியாமையில் பிறந்து, அறியாமையிலேயே வாழ்கிறோம்; இறுதியில் அதிலேயே மரிக்கிறோம்—இதுதான் கொள்கை முடிவு."

கமால் வருவது தெரிந்தது. மைக்கேல் ஓர் இலையைக் கிள்ளிப் போட்டான். விழாவில் ஒலி இசை முடிந்துவிட்டது. குளிர் வேகம் அதிகரித்தது. ஒரு ஜெட் விமானம் தலைக்கு மேலே உறுமிக் கொண்டு பறந்து, இருளில் மறைந்தது. எனினும் அவர்கள் அண்ணாந்து பார்த்தார்கள்.

"அறியாமையெனும் நகரை நாம் நிர்மாணித்திருக்கிறோமே, அதன் சுவர்களை வேதாந்தத் தத்துவமெனும் செங்கற்களைக் கொண்டு எழுப்பியிருக்கிறோம்." தலயத் முடிக்கவில்லை. "ஒருநாள் கன்னம் வைத்து மரணம் நம் நகருக்குள் நுழைந்துவிடும்."

"ஒரு சமயம், ஃபாரன்பெராவில் நிகழ்ந்த 'விமானப்போட்டி விழா'வில் விமானி ஜான்டேரி ஒலியின் வேகத்தையும் விஞ்சியபோது, உயிர் துறந்தான்; அவனுடைய விமானம் வெடித்துத் துகள் துகளாகி, விழாக்காட்சியாளர்கள் மீது உதிர்ந்தது. பலர் இறந்தார்கள். அப்போது அக்கினிப் பிழம்பாக விமானம் என்னை நோக்கி ஒலியினும் கடுகிப் பாய்ந்து வந்தது. அப்போதே நான் உணர்ந்து விட்டேன்: இதுதான் சாவு: அடுத்தகணம் நான் எரிந்து சாம்பலாகி விடுவேன். தற்பாது காப்புக்காகத் தரையில் குப்புறப் படுப்பதற்குப் பதிலாக, அந்த அக்னி மழையிலும் சந்திராவையும் ஜரீனாவையும் கூவியழைத்தவாறு ஓடினேன்; அவர்களுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடக் கூடாதே என்று. என்னைவிட அவர்கள் பேரில் அக்கறை அதிகமிருந்தது. சுயநினைவோ கவலையோ எழவே இல்லை.

"இதனால்தான், நிர்மலா மரணத்தோடு போராடிக் கொண் டிருந்தபோது, அவளை அச்சம் தீண்டியிராது என்பதை அறிந்தேன்.

இந்த ஓர் உணர்வில்தான் மனிதன் பிறருடன் பகிர்ந்து கொள்ள முடியாமல் போகிறான். அதனால்தான் நாங்கள் நிர்மலாவைத் தனியாகவே சிந்திக்க விட்டோம். பாவம், பேதைப்பெண் நதியின் இருள்வெள்ளத்தில் கைகால்களை அடித்துக்கொண்டு மிதந்து போய் விட்டாள்...!

"வேதாந்தத்தில் எங்கோ ஓரிடத்தில் நிலைபெறு தன்மைக்கு நான்கு நிலைகள் கூறப்பட்டுள்ளன: விழித்திருப்பது, கனவு காண்பது, அயர்ந்த உறக்கம், மரணம்"—தலயத் சொல்லி ஓய்ந்தாள்.

கீழே இருண்ட தாழ்வரையில் கமால் பாடிக்கொண்டு திரிந்தான். அந்த இசையொலி காற்றில் மிதந்து அவர்களை ஈர்த்தது. தண்மதி மரக்குவையிலிருந்து மீண்டு வெளிப்பட்டது.

"கருத்துக்களை நாடி ஆன்மாக்களின் பயணம் ஒன்று போலவே இருக்கிறது." ஹரிசங்கர் கூறினான்.

"என்னை மரணம் அழித்துவிடும். மரணத்தை யார் அழிப்பது? காற்று என் சுவாசத்தை அடித்துச் செல்லும். பகலவன் என் கண்ணொளி மீது மறைப்பை விரித்து விடும். சந்திரன் என் சிந்தையை உறங்கவைக்கும். ஆத்மா காற்றில் கலந்துவிடும். என் உரோமங்கள் புதர்களாகிவிடும். தலைமுடிகளிலிருந்து மரங்கள் முளைக்கும்..." தலயத் அறிவித்தாள்.

"ஆழமான உறக்கம், ஆழமான தண்ணீர், ஆழமான கனவு! உலகியல் தத்துவங்கள்—தன்மைகள் சிந்திக்கின்றன; புலன்கள் உறங்கி விட்டன. மரணம்தான் எஞ்சியிருக்கிறது." ஹரிசங்கர்.

"உடல் சிந்திக்கிறது, உணர்கிறது. இது முடிந்து விடுமானால் எல்லாமே முடிந்துவிட்ட மாதிரிதான். எரியும் தீ, குளிர்ந்த நீர், சில்லிட்ட காற்று—எல்லாமே இயற்கையிலிருந்து தாமாகவே பிறந்தவை. கௌதமன் சம்பாவிடம் சொன்னான்: 'உன் உடல் உன் அறிவினின்றும் வேறுபட்டதானால், அதைப் பிரித்துவிடு. பிறகு நீ மட்டும் என்னிடம் வந்து சேர்! ஆனால் நீ இப்படிச் செய்ய முடியாதவள்.' இந்தத் தகவலை குல்ஷன் எனக்குச் சொன்னான்."

"இன்னும் எத்தனையோ பேர் மரிக்கவேண்டும். நான் அவர்களுக்கு முன்னோடியாகச் செல்கிறேன். பலர் மரித்துக் கொண்டிருக்கிறார்கள். நான் அவர்களுடன் உடன் போக்காகச் செல்கிறேன். மரித்தவர் என்ன ஆனார்கள் என்று திரும்பிப் பார்க்கிறேன்... முன்னால் எழும்பிப் பார்க்கிறேன், இறக்கப் போகிறவர்களுக்கு என்ன ஆகுமென்று..."— ஹரிசங்கர்.

கமால் பாடுவது கேட்டது:

"காதில் யானையைத் தொங்கவிட்டுக்
கொண்டே எறும்பும் மலைமீது
ஏறிச்செல்லும் திறனைப்பார்!

மாறிய அதிசயமொன்று கண்டேன்,
நதியின் நடுவே தோணியொன்று
விதியின் விளைவாய் மூழ்கியதே!"

"என் மதிப்பு என்ன? நான் இதுகாறும் என்ன செய்தேன்?"—சுரேகா.

"நான் செய்வதெல்லாம், என் ஒவ்வொரு செயலும் அகிலத்தின் சிருஷ்டிப் புதிர்களோடு நேரிடையாகத் தொடர்பு கொண்டது. இதை மறைப்பது கேலிக்குரியது. நான் இப்போதே சொல்லி வைக்கிறேனே: நம் முடிவு மோசமாக இருக்கும்." மைக்கேல் விரலை உயர்த்தி அறிவித்தான்.

"என்ன செய்வது? நாம் என்ன செய்ய முடியும்?" 'கோரஸ்' இரைச்சல் மாதிரி எல்லாருடைய குரல்களும் மலையில் மோதி எதிரொலித்தன.

"எதிரே வருங்காலத்தின் சுவர் நிற்கிறது. நானும் மைக்கேல் மாதிரி அதன் எதிரே நின்று உரக்கக் கத்தி அலறுகிறேன். துன்பங்களைச் சகித்துக் கொண்டிருப்பது குற்றமிழைத்ததற்குச் சாட்சியமோ?" —தலயத்.

"யாராவது அமெரிக்கன் நீக்ரோவைக் கூப்பிடு. ஜெர்மன் யூதனை அழைத்து வா! அரபு அகதி எவனையாவது கொணர்ந்து நிறுத்து, பாகிஸ்தான் அகதி, இந்து அகதி இருவரையும் கொண்டுவா. எல்லாரிடமும் கேள் 'நீ என்ன குற்றம் புரிந்தாய்? எதற்காக உனக்கு இந்தத் தண்டனை கிடைத்திருக்கிறது? கேட்டுப்பாருங்கள்!" —குல்ஷன்.

"நான் உன் எதிரே நிற்கிறேன். எனக்கு என்ன தண்டனை? சொல்!"—மைக்கேல்.

"இஸ்ரேலின் புதிய இளம் பாடகனே! நாங்கள் உன்னிடமிருந்து டிபெளராவின் கீதத்தைக் கேட்கவே ஆசைப்பட்டோம். ஆனால், இப்போது நீ கையில் துப்பாக்கியை எடுத்துக்கொள்!"— தலயத்.

"நாம் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக அழுது கொண்டிருந்தோம். பாலைவனத்துப் பசி, கோப தாபம், ஆற்றாமை தாளாமல், புலம்பிப் புலம்பி யெஹ¬வாவிடம் முறையிட்டோம். தாவூத்தின் பாடகர்களின் துன்பம், அவசம், கனவு—சகலத்தையும் கண்டோம். நான் தலயத்தின் கேள்வியையே எதிரொலிக்கிறேன். துன்பங்களைச் சகித்துக் கொண்டிருப்பது குற்றமிழைத்தற்குச் சாட்சியமோ?" மைக்கேல் தொடர்ந்தான்: "ஆத்மாவின் ஒருமையை அவர்கள் தம் குரலில் நிரப்பிக் கொண்டார்கள். ஆழத்தின் தனிமையே உயரத்தின் தனிமை- துன்பம், சந்தேகம், கிளர்ச்சி, மயக்கம், புன்மை ஆகியவைகளின் தனிமை. ஏதாவதொரு கவர்ச்சியில் சிக்கிய மனிதன் தன்னையே எவ்வளவு தனியனாக உணர்கிறான், தவிக்கிறான்."

“காடுகளில் ஓராயிரம் யோகிகள்—துறவிகள் அமர்ந்து பஜனை கீதம் இசைத்தார்கள். நான் அவர்களுடைய குரல்களைச் செவி மடுத்தேன்”—ஹரிசங்கர்.

“பாலஸ்தீனத்துப் பசுமையான நிலப்பரப்பில் நான் பாடிக் கொண்டே திரிந்தேன்” மைக்கேல் சொன்னான்.

“நான் உன் குரலையும் கேட்டிருக்கிறேன்”—தலயத்.

“வரலாற்றின் ஜீவனுள்ள அனுபவம் என் தலைமீது வாளைப் போல் தொங்கிக் கொண்டிருக்கிறது. நான் என்னிடமிருந்தே தப்பித்துக் கொள்ள முடியாது” மைக்கேல் சொன்னான்.

“என்ன செய்வது? நாம் என்ன செய்யலாம்,” எல்லாரும் ‘கோரஸ்’ மாதிரிக் கூடிக்குரல் எழுப்பினார்கள்.

“அதே பழைய புத்தகங்கள்தாம்; இதுவரைக்கும் ஆயிரக் கணக் கானவர்கள் படித்து விட்டார்கள். புதிய புத்தகங்கள் அச்சாகின. கட்டுரைகள் எழுதப்பட்டன. தினமும் காலையில் மலைகள் மீது வெளிச்சம் பரவியது. ‘கலீஸா’க்களில் தாவூத்தின் கீதங்கள் பாடப் பட்டன. என் ருபாயிப் பாடல் கூறியது: ‘மனிதன்’ ‘ஸபத்’* விரத தினத்தன்று இரவு தண்ணீர் குடிக்கலாகாது. மீறிக் குடித்தால் ‘அவன் குருதி தலையில் ஏறும்...’ ஆனால் மனிதனின் விடாய் அடங்காதது; இதற்கு மருத்துவமேது? அந்த மனிதனிடமே சொல்: தாவூத்துடன் கூட ஏழு குரல்களை எதிரொலிக்க வேண்டும். ஆண்டவனின் குரல் தண்ணீருக்கு மேலே ஒலிக்கிறது. இக்குரலால் லெபனானின் தேவதாரு மரங்கள் ஒடிந்து விழுகின்றன. இந்தக் குரலினால் தீப்பிழம்புகள் எழும்புகின்றன. இக்குரலைக் கேட்டு பொட்டல் காடுவெளிகளும் நடுங்குகின்றன; அடவிகள் திடல்களாகி விடுகின்றன. அதன் உபாசகர்கள் கூவுகிறார்கள். ‘புனிதமாகட்டும்! புனிதமாகட்டும்! புனிதமாகட்டும்!’ அப்படியும் நீ சொல்கிறாய்: எனக்குத் தாகம்! தாகம்! தாகம்...” மைக்கேல் சொன்னான்.

“பசியினால்— பசியிலிருந்து மனிதன் தோன்றுகிறான். வாழ்நாள் முழுவதும் பசி அவனை வாட்டுகிறது—காதல் பசி, பாசப்பசி, சோற்றுப்பசி, அமைதிப் பசி...! பசியும் தாகமும்தான் நம்மை அச்சுறுத்தும் கொடிய பூதங்கள். முதலில் இவற்றிலிருந்து முக்தி பெற விரும்புகிறேன். மற்ற முக்தி தானாகவே கிடைத்துவிடும்”— யதார்த்த வாதியான குல்ஷனின் பேச்சு.

கமால் பாடிக்கொண்டே வந்து சேர்ந்தான்.

“மக்களைப் பாப உணர்வுதான் ஒன்று சேர்க்கிறது. குற்றவாளி யெனும் தன்னுணர்வு நம்மை எதிலும் ஒட்டவிடாமல் செய்கிறது. இப்போது தோன்றுகிறது: நாமும் ஏதாவது பாவம் செய்திருக்க

---

* யூதர்களின் விரதநாட்களான வெள்ளி—சனிகளுக்கிடையிலான இரவு

லாகாதா என்று. குற்றவுணர்வும் அப்பாவித்தனமும் நம்மை ஒருங் கிணைக்கின்றன. என்றாவது நம்மில் யாராவது இந்த இணைப்பை அறுத்துவிட்டால் நாம் எல்லாருமே சிதறிப் போய் விடுவோம்" —ஹரிசங்கர்.

"அப்படி ஒருக்காலும் நடக்காது. எப்போதும் நம் கலாச்சாரம், நம்முடைய பின்னணி, நமது மேன்மையான மாரல் கோட் நமக்குத் துணைவரும்"—தலயத்.

"இல்லை, தலயத் பேகம்! நம் கல்ச்சரின் பிணைப்பு முன்பே அறுந்துவிட்டது. ஒரு முனையில் நீயும், மறுமுனையில் நானும் அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறோம்; நிராதரவாகக் காற்றில் அலைகிறோம்" ஹரிசங்கர்.

"தன்னுள்ளிருக்கும் பேய்களை மறந்துவிடு! பூதங்களை மறந்து விடு!"—குல்ஷன்.

கமால் ஆவேச லயிப்பில் பேசலானான்:

"பெரிய கண்ணாடிக் கதவு திறந்தது. பலர் உள்ளே வந்தார்கள். சம்பாவும் வந்தாள். என்னைப் பார்த்து 'ஹலோ!' என்றாள். அருகில் வந்தாள். நான் மாணவர் மன்ற விடுதியில் இருக்கிறேன். கப்பல் கம்பெனிக்கு ஃபோன் செய்கிறேன். இப்போது பத்திரமாக இருக்கிறேன். என்னைச் சுற்றிலும் நகரத்துக் கல் கட்டிடங்கள் எழும்பியிருக்கின்றன. காலடியில் கெட்டியான தரை; ஆனாலும் அளவற்ற அச்சம் என்னை ஆட்கொண்டிருக்கிறது. சம்பாபாஜி என் எதிரே நிற்கிறாள். காலத்தின் காளவாய் கனன்று கொண்டிருக்கிறது. அந்த ஒளியில் சம்பா ஜொலிக்கிறாள். அவளைப் பார்க்க எனக்கு மகிழ்ச்சியாக இல்லை; வருத்தம், சலிப்பு, எரிச்சல் எதுவும் இல்லை. இங்கிருந்து கத்திக் கொண்டே ஓட விரும்புகிறேன். நான் சம்பாவைப் பற்றி வேறு என்ன சொல்ல முடியும்? என்னிடம் ஏதோ முக்கிய விஷயம் பேசவிரும்புகிறவள் போல் தோன்றுகிறாள். ஆனால் ஏதும் பேசவில்லை.

"சினிமா பார்த்துவிட்டு வந்தவர்களின் முகங்கள் வாடியிருந்தன. வெளிச்சமே விசனப்பட்டது; இசை அழுதது. காலம் இழைகிறது. சம்பா ஜன்னலில் மூக்கைத் தேய்த்துக் கொண்டு நிற்கிறாள்; சாலை யில் போக்குவரத்தைப் பார்க்கிறாள். நான் அவசரமாக அவளிட மிருந்து 'குதாஹாபிஸ்!' கூறி விடைபெற்று வெளியே வருகிறேன்..! நான் இப்போது அவளை வெகு தொலைவில் பின்தங்க விட்டாகி விட்டது. நான் வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். ஏன் இவ்வளவு களைத்திருக்கிறேன். என்னை ஓய்வாக உட்கார விடேன்.!" கமால் ஒரு கல்லின்மேல் அமர்ந்திருந்து பேசி முடித்தான்.

"திருடர்களைப் போல் நாமும் சொந்தத் தேவைகளை எழுப்பி விட்டோம். என்ன ஆகியது பார்! நம்மையே தாக்கிவிட்டன"—தலயத்.

பசுமையான பனிமூட்டம் எங்கும் கவிந்தது. இதில் எல்லாரும் மிதந்து போகிறார்கள். தலயத் சொன்னாள். "நான் அந்தகாரத்தின் விளிம்பில் வெளிச்சத்திற்கும் அச்சத்திற்கும் கூடலிடத்தில் கால்களை ஊன்றி, பொன்னிற மேனியரான பிரும்மதேவரைப் போல், பண்டங் களின் பெயர்களை வைக்கிறேன்... மைக்கேல்! அதோ பார்! உன் ஜெரூஸலேம். நம் எல்லாருக்குமே அது புனித ஜெரூஸலேம்தான்" வான முகட்டைச் சுட்டிக் காட்டினாள் தலயத்.

"அங்கும் பிரிவினையாகி விட்டது" ஹரிசங்கர் நினைவு படுத்தினான்.

"அங்கே மலைப்பகுதிகளிலே ஹஜரத் தாவூத்தின் பாடகர்கள் முனகிக் கொண்டே திரிகிறார்கள். ஸ்வரங்கள் தீர்ந்து போயின. சிலுவைகளில் ஏசுவோடுகூட நம்மையும் தொங்கவிட்டிருக்கிறார்கள். ஏசுவுக்குப் பதிலாக நாம் கழுமரத்தில் ஏறுகிறோம். காரணம், நாம் பிறரைவிட மோசமான திருடர்களாக இருந்தோம். நாம் ஆண்ட வனின் அரிய கருவூலத்திலிருந்து மகிழ்ச்சியைக் கவர விரும் பினோம்" தலயத்.

"எனக்கு எதுவுமே நினைவில்லை. கடந்த வருடங்கள் சூறாவளிகளைப்போல் என்னைச் சூழ்ந்து வீசுகின்றன. உறங்கும் கட்டிடங்களின் சிம்ஃபனிகளிலிருந்து சரிந்து, சந்திரன் கடலை நாடி இறங்குகிறது. ஈஸ்ட் இங்கிலியாக் காடுகளில், வேகமான புயல்க்ள் வீசுகின்றன. சந்தடியற்ற துறைமுகத்தினருகில் கரிய நீர்ப்பரப்பில் இராப்பறவைகள் வலம் வருகின்றன. என் எதிரிலேயே ஜனக் கூட்டம் கடந்து செல்கிறது. ஏரியில் தோணிகள் மிதக்கின்றன. நான் கரையில் இருக்கிறேன். நான் போக வேண்டிய கப்பல் தென்படுகிறது. விளக்குகள் அணைந்து இருளில் கலங்குகிறது. அது செல்லும் திசையில் என்னை வரவேற்க எவரும் இருக்கமாட்டார்"ள—கமால்

இருள் மேலும் கருமை பெற்றது. பனிமூட்டம் மேலும் கவிந்தது.

"உருவமும் பெயரும்..!"—ஹரிசங்கர் சொன்னான்.

"வித்தை—அவித்தை..!"—தலயத் சொன்னாள்.

"இப்போது நமக்கு எல்லாம் புரிந்து விட்டது" எல்லோரும் சேர்ந்து சொன்னார்கள்.

"உணர்வுகளின் கருத்துக்களின் மிக உன்னதமான சிகரத்தில் எப்போதும் அவன் தனியனாக நிற்கிறான். அந்தத் தனி மனிதன் கௌதமனாகவும், மைக்கேலாகவும், ஹரிசங்கராகவும், சிரில்லாகவும், கமால் ரஸாவாகவும் இருக்கிறான்; பெயர்கள் தொடரும்...! அந்தத் தனி மனிதனின் தனிமை சாசுவதமானது!"

குளிர்ந்த—இருண்ட காற்றில் அவர்களுடைய குரல்கள் கரைந்தன. பனிமூட்டம் அவர்களைத் தன்னுள் மறைத்துக் கொண்டு விட்டது!

# 53

கப்பல் தளத்தில் இசைக் குழுவினர் பிரிவு கீதத்தை உரக்க இசைத்துக் கொண்டிருந்தார்கள். கமாலின் உள்ளத்தில் சோகம் நிரம்பியது. ரேலிங் பக்கம் குனிந்து கீழே பார்த்துக் கொண்டிருந்தான். லண்டனில் போட்-டிரெயினில் அவனை வழியனுப்பப் பலர் வந்திருந்தார்கள். இங்கு போர்ட்ஸ்மத்தில் தனியாக இருந்தான். புதிய துறைமுகம்; அறிமுகமற்ற பயணிகள்; உலகத்தின் தேசாந்திரத்தனம் இங்கேயே தொடங்கிவிட்டது. கண்களில் நீர் மல்குவதை அடக்கிக் கொண்டான். பக்கத்தில் இரு வயோதிகர்கள் இருந்தார்கள். ஒருவர் பாசத்துடன் கமாலின் தோள்மீது கை வைத்தார். கமால் நன்றித் தழுதழுப்புடன் அவரைப் பார்த்தான்.

மறுநாள் கப்பல் முழுவதையும் சுற்றிப் பார்த்தான். இந்தியாவையும் பாகிஸ்தானையும் சேர்ந்த வெளிநாட்டு இலாகா அதிகாரிகள், குடும்ப சமேதரர்களாக இருந்தார்கள்; ராணுவ அதிகாரிகள், மாணவர்கள், இங்கிலீஷ்காரர்கள், அமெரிக்கர்கள்... டூரிஸ்ட் வகுப்பிலுள்ள கூட்டம் அதிக சுவாரசியமாக இருந்தது. ஏழை மாணவர், படிக்காத சீக்கியத் தொழிலாளிகள், சில்லறை வியாபாரிகள், மிஷினரிக்காரர்கள், கத்தோலிக்கப் பாதிரிமார்கள்; பிரெஞ்சு நாட்டுப் பிக்கு, இவர்களைத் தவிர இந்துப் பண்டிதர் ஒருவர். இவரைக் கமால் லண்டனிலேயே சந்தித்திருக்கிறான். அங்கு ஓரியண்டல் ஸ்கூலில் ஆசிரியர். விடுமுறைக்குத் தாய்நாடு திரும்புகிறார்; சுத்த இந்தி பேசுகிறவர்; மீரட்வாசி; சுருண்ட நீண்ட முடி; பெண்ணைப் போன்ற வனப்பான தோற்றம்; மெல்லிய—மென்மையான உடல்; காந்திஜியின் சீடர்; மிக அடக்கமானவர்; கடுங்குளிரிலும் லண்டனில் வேட்டியும் செருப்புமே அணிந்திருந்த தீரர்; விரஜபூமி வட்டாரத்து நாடோடிப் பாடல்கள் குறித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பவர்.

மைக்கேலும் டூரிஸ்ட் கிளாஸில் இருந்தான்; ஜிப்ரால்டர் வரையில் போகிறான்.

ஒருநாள் கமால் தளத்தில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தான்; கூடவே கடலலைகளை எண்ணிக் கொண்டிருந்தான்.

"நான் இங்கே உட்காரலாமா?"

"தாராளமாக!" கமால் திரும்பிப் பார்த்தான். முன்பு அன்பு செலுத்திய கிழவர் நின்று முறுவலித்தார். கமால் விரைவாக எழுந்து அவருக்காக மற்றொரு நாற்காலியைப் பக்கத்தில் இழுத்துப் போட்டான்.

"ப்ரெண்ட்! பால்! நீங்களும் இங்கே வாருங்கள்."

உடனே இரு முதிய வெள்ளைக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள்.

"என் பெயர் டாக்டர் ஹைன்ஸ் கிரேமர்; ஆஸ்டிரியக் குடிமகன். இந்த இரு நண்பர்களும் நானும் சரித்திரப் பேராசிரியர்கள். இந்தியா வுக்குப் போகிறோம். நீங்கள் இந்தியர்தானே?"

"ஆமாம்."

"இதற்காகத்தான் முதலிலேயே கேட்டு வைத்துக் கொள்வது நல்லது. நேற்று அதோ உட்கார்ந்திருக்கிறானே. அவனை 'இந்தியரா?' என்று கேட்டு விட்டேன்; மகாகோபம் வந்துவிட்டது அவனுக்கு. அவன் பாகிஸ்தானியாம்" மூன்று முதியவர்களும் பொக்கையாகச் சிரித்தார்கள்.

கமால் வாளாவிருந்தான்.

"இந்தியாவில் இருக்கிறாயா,"

"ஆமாம்"

"நான் பூடா—ஜயண்டிக்காகப் போகிறேன்" டாக்டர் கிரேமர் சொன்னார்.

"என்னது...? ஓஹோ! புத்தஜயந்தி!"

"எஸ்! 'பூடா' வரலாற்றுப் பெருமை கொண்ட பெரிய மனிதன்" பால் கருத்துத் தெரிவித்தபின், "நீ இந்துவா?" என்று கேட்டார்.

"இல்லை."

"ஓஹோ! மன்னிக்கவும்! அப்படியானால் நீ மஹமடனோ?"

"ஆமாம்."

"அப்படியானால் இந்தியாவில் எப்படி இருக்கிறாய்?"

"ஹாய் டாக்!" ஒரு அமெரிக்கன் மகிழ்ச்சி பொங்க அருகில் வந்து முகமன் கூறினான்; கமாலையும் சகஜமாகப் பார்த்து, மலர்ச்சியுடன் "ஹாய்!" சொன்னான்.

"ஹாய்!" கமாலின் பதில்.

"என் பெயர் டாமஸ் ஜெரேல்ட் எட்கிங்ஸ். ஆனால் 'டாம்' என்று அழைத்தால் போதும்."

"மீதி ஜர்னலிஸ்ட்டுகள் எங்கே?" பிரண்ட் கேட்டார்.

அவர்களும் வந்து சேர்ந்தார்கள். ஒருவன் பிரெஞ்சுக்காரன், மாரிஸ் இண்டோ சைனா போகிறவன்; மற்றவன் ஆங்கிலக்கவி—பிரபலமானவன். பி.பி.ஸி. பிரதிநிதியாக புத்தர்பிரானின் 2500 ஆவது ஜயந்தி மகா விழாவில் பங்கு கொள்ளப் போகிறான் பாரதத்திற்கு. சில அமெரிக்ச் சீமாட்டிகளும் இதற்காகவே வந்திருக்கிறார்கள். பிரெஞ்சு நாட்டு பௌத்தபிக்கு துவராடை அணிந்து ஒதுங்கி உட்கார்ந்திருந்தார்; புத்தகயா, வாரணாசியெல்லாம் போகப் போகிறார். இவர் டூரிஸ்ட் கிளாஸ் பயணி.

மாலையில், கமால் மைக்கேலை அழைத்து வந்து இந்த அன்பர்களிடம் அறிமுகம் செய்து வைத்தான். வாலிப சமஸ்கிருத பண்டிதரும் இந்தக் கூட்டத்தில் கலந்தார். எல்லாருமே ஒன்றாக

இயங்கலானார்கள். ஒரு மராட்டிப் பெண் இனிமையாகப் பாடி வந்தாள்; பண்டித்ஜி பஜன் கீர்த்தனைகள் பாடினார். இரவில் பால்ரூம் டான்ஸ்கள் நடந்தன; சினிமா காட்டப்பட்டது. பிரயாணம் வேகமாகக் கடந்து கொண்டிருந்தது.

நாளைக் காலையில் கப்பல் ஜிப்ரால்டர் சேரும். கமால் பல தரப்பட்ட குழுவினருடன் உட்கார்ந்து அரட்டையடித்தான்; சீட்டு விளையாடினான்; நீச்சலடித்தான்; லைப்ரரியில் பத்திரிகைகளைப் புரட்டினான்; பிறகு அலுத்துப் போனான். மாறுதலுக்கு கப்பல் தளமெல்லாம் சுற்றிப்பார்த்துவிட்டு, மேல் தளத்தில் வந்து நின்றான்.

பின்னால் இரைந்து யாரோ பேசுவது கேட்டது. திரும்பிப் பார்த்தான் கமால். தொலைவில் தோணிகளுக்குப் பக்கத்தில் டாக்டர் கிரேமர் நண்பர்களுடன் உட்கார்ந்திருந்தார். மைக்கேல் ரேலிங் பக்கமாகச் சாய்ந்து நின்று அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். அமெரிக்கப் புரொபஸரான இளநங்கை தரையில் பக்கவாட்டாகப் படுத்திருந்தாள். யாரோ கிட்டார் இசைப்பது கேட்டது.

"எழுதேன்..."—மைக்கேல்.

"என்ன எழுதுவது?"—டாம் கேட்டான்.

"நான் சொல்வதைத் திரித்து, தப்பும் தவறுமாக எழுதிவையேன். உன் பிழைப்பே பொய்யும்—புனைந்துரையுமாக எழுதிச் சம்பாதிப்பது தானே!" மைக்கேல் கத்தினான்.

'தொல்லைதான். இவர்கள் சண்டையிடத் தொடங்கி விட்டார்களா!'—கமால் நினைத்தான்.

"அதோ, பார்! கமால் ரஸா வந்து கொண்டிருக்கிறான். அவருடைய பேச்சுக்களையும் கவனமாகக் கேள். திரும்பிப் போனதும் உன் புத்தகத்தில் இந்திய முஸ்லீம் கப்பலில் பிரயாணம் செய்தான்; அவன் பாகிஸ்தானத்தை விரும்பாதவன்.' ஆனால், 1955ல் இந்தியா விலும் அவன் பேச்சை எவரும் புரிந்து கொள்ளவில்லை" மைக்கேல் பேசினான்.

"ஆஹா! கமால் ரஸாஜி! இங்கே வாருங்கள். மைக்கேல் பிரசங்கம் புரிகிறார். பாருங்கள்!"— பண்டித்ஜி தலைமுடி அசைந்தது.

"பண்டித்ஜி! மைக்கேலின் கடுமைக்கு மாற்று என்னிடமும் கிடையாது, சுவாமி!"—கமால் சிரித்துக் கொண்டே சுத்த இந்தியில் சொன்னான்.

ஆங்கிலக் கவிஞன் இருவரையும் வேடிக்கை பார்த்தான்.

"மகா சங்கடம்! வெளிநாட்டுக்காரன் உன் தேசத்தைப் பற்றி ஏதாவது எழுதுகிறானென்றால், நீங்கள் உடனே ஈ.எம். பாஸ்டரின் அளவால் கணிக்கிறீர்கள். பாவம் அவன் ஒரு ஐடியலிஸ்ட்— குள்ளர்கள் வாழும் உலகிலிருக்கும் தேவன்!"

“பாஸ்டர் 1924இல் தம் நாவலை எழுதினார். அப்போது அவர் டாக்டர் அஜீஸ் அவர்களை இந்தியாவின் பிரதிநிதி பாத்திரமாக எடுத்துக் காட்டினார்.” ஆங்கிலேயக் கவிஞன் சொன்னான்: “ஆனால் இன்று அவர் மறுபடியும் வேறொரு நாவல் ‘பாஸேஜ் டு இண்டியா’ எழுதினால், அத்தகைய பாத்திரத்தை மாற்ற வேண்டியிருக்கும். இன்று டாக்டர் அஜீஸ் இந்தியாவின் எடுத்துக்காட்டான பாத்திர மல்ல. இன்று ஒவ்வொரு முஸல்மானையும் பாகிஸ்தானி என்றே எண்ணப்படுகிறது. இந்துதான் இந்தியாவின் அசல் பிரதிநிதியாகக் கருதப்படுவான்.”

“ஆமாம்”—கமால் பதில் சொன்னான்.

“கமால்! நீ மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறாயோ?”

“ஆம். ஆனால் நான் அதைக் காட்டிக்கொள்ள விரும்பவில்லை; தொன்றுதொட்டு துன்பம் அனுபவித்துவரும் ஆன்மா—இந்திய ஆன்மா இது. இந்த மகிழ்ச்சி, இந்தக் கவர்ச்சி, துன்பப்படும் பழக்கம்—இவற்றை நீ ஒருக்காலும் புரிந்து கொள்ளமாட்டாய்.”

“ஸெயின்ட் அகஸ்டீன் பனாரஸில் பிறக்கவில்லையே”—மாரிஸ் சொன்னான்.

“கத்தோலிக்க வாழ்க்கைத் தத்துவம் ஒரு முக்கியமான மத ஏற்பாடு—ந்யூ கல்ட் வாழ்க்கை முழுவதையும் தம்முள் அரவணைத்துக் கொள்ள முடியவில்லை. இப்படி இல்லாதிருந்தால், நீ இப்போது கத்தோலிக்கனாக இருந்தும் இந்தோ சைனாவில் போர்புரியப் புறப்பட்டிருக்க மாட்டாய்” கமால் சலிப்புடன் சொன்னான்.

“அப்ஸர்வருக்கும், காம்பிடெண்டுக்கும் என்ன வித்தியாசம்?” மாரிஸ் கேட்டான்.

“இதை உன்னிடமே கேட்டுக் கொள். பிறர் போராடுவதை நீ அப்ஸர்வ் செய்து கொண்டிரு. இப்படி நோட்டம் பார்ப்பதால் குற்ற உணர்வு குறைந்துவிடுமா?”

“நீ குயேகர்ஸ் மாதிரி விளம்பர சாந்திவாதியாகத் தோன்றுகிறாய்” டாம் சொன்னான்.

தளத்தின் மூளையிலிருந்து, லீலா பாஸ்கர் பாடுவது கேட்டது. கமால் டாமின் பேச்சைக் கவனிக்காமல் பாடலில் லயித்தான். பண்டித்ஜி தாளம் போட்டு ரசிக்கலானார். பிறகு இருவரும் லீலா பாஸ்கர் அருகே சென்றார்கள்.

“ஒவ்வொரு கலாச்சாரத்திற்கும் தனி மோனமொழி உண்டு; அதை அந்தக் கலாச்சாரம்தான் உணர முடியும்”—கவிஞன்.

“மறுபடியும் குழப்பமா! பண்டித்—கமால் இருவரின் கல்ச்சரும் ஒன்றா?”—டாம்.

கவிஞன் ஆமென் முறுவலிப்புடன் சாடினான்: “நீ மைக்கேலின் மறைமுக மொழியைக் கூடப் புரிந்து கொள்ளமாட்டாய்.”

மைக்கேலிடம் டிராய் மார்ட்டினியின் செல்வாக்குப் படிந்திருந்தது. அவன் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். ஒலிக்கருவி மாதிரி விட்ட இடத்திலிருந்து பேசத் தொடங்கினான்.

"எழுது! உலக நாடுகளின் வரலாறு, அதன் நோக்கம், வெற்றி, நாடு பிடித்தல், ஆட்சியைப் பரப்புதல், புதிய நாடுகளை உருவாக்குவது- என்னிடம்—என் நாட்டிடம் வரலாற்றின் கொடுமையான அட்டூழியங்கள், சங்கடங்கள், விபத்துக்கள்—இவற்றின் கதைகள் உள்ளன. பதிமூன்றாம் நூற்றாண்டில் இங்கிலாந்திலிருந்து வெளியேற்றப் பட்டேன்; பதினாலாம் நூற்றாண்டில் பிரெஞ்சு நாட்டிலிருந்து அகற்றப்பட்டேன்; பதினைந்தாம் நூற்றாண்டில் ஸ்பெயின் என்னைச் சீர்குலைத்தது. ஆனாலும், நான் நாடோடியாக ஏசல்—இளக்காரங்களைச் சகித்துக் கொண்டு, மேற்கிலும் கிழக்கிலும் கண்ணீர் விளக்கு ஏற்றி ஞானவொளி பரப்பினேன். நான் பூ-அலீஸீநா, இப்னே குல்தூன், இமாம் கஜாலி, அல்ஃபார்பி, க்வாரஜ்மி முதலியவர்களின் தத்துவ சிந்தனைகளையும் கோட்பாடுகளையும் ஐரோப்பாவெங்கும் பரப்பினேன், நான்..."

லீலா பாஸ்கர் பாடிக்கொண்டிருந்தாள். கமால் கீழ்த்தளத்திற்கு வந்து சேர்ந்தான். மைக்கேல் எதிரே வந்தபோது நினைவு வந்தது; நாளைக் காலையில் மைக்கேல் ஜிப்ரால்டரில் இறங்கப் போகிறான். பிறகு இவனை என்றுமே சந்திக்க முடியாமல் போகலாம். விசித்திரமான நிலை! மைக்கேல் இருந்த காபினுக்கு வெளியே ரேலிங் பக்கம் குனிந்து நின்றான். எதிரே பௌர்ணமி நிலவு வான முகட்டில் உதயமாகிக் கொண்டிருந்தது. கடல் மிக அமைதியாக இருந்தது. கப்பல் முன்னேறியது. இந்த டெக் பகுதியும் வெறிச்சோடி இருந்தது. பிரான்சு நாட்டுப் பிக்கு கமாலுக்குப் பின் பக்கத்தைக் காட்டியபடி உட்கார்ந்திருந்தார். கமாலின் நெஞ்சு படபடத்தது. அமைதி அவனை அச்சுறுத்தியது. டாம், ஆங்கிலக் கவி இருவரும் சொன்னவை நினைவுக்கு வந்தன. உற்சாகம் குன்றிவிட்டது. ரேலிங்கைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

"நான் ஸ்டேட்லெஸ்! நான் ஸ்டேட்லெஸ்! நாடற்றவன், அகதி, அநாதை!" தனக்குள் கதறிக் கொண்டான்.

தெள்ளிய நிலவொளியில் கப்பல் முன்னேறிக் கொண்டிருந்தது. மற்றும் சில வியாபார—ராணுவக் கப்பல்கள், பிரயாணிக் கப்பல்கள் சஞ்சரித்தன. தொலைதூர தேசங்களின் மக்கள் பயணம் செய்தார்கள். ஐரோப்பிய அறிஞர்கள், இத்தாலியப் பாதிரிமார்கள், அமெரிக்க உல்லாசப் பயணிகள், மெக்சிகோ ஓவியர்கள், இந்திய நடனக் கலைஞர்கள்- உலகில் இன்னும் சாந்தி இருந்து வருகிறது. தில்லியில் நேருஜியின் ஆட்சி நடைபெறுகிறது. வாழ்க்கையில் பரபரப்பு பரவியிருக்கிறது.

“அமைதியான உள்ளம் படைத்தவர்கள் பாக்கியசாலிகள்! பிரதர்! எனக்குச் சாந்தி வேண்டும்” கமால் மெல்லச் சொன்னான்.

பிரான்ஸ் நாட்டுப் பிக்கு கண்களை உயர்த்திப் பார்த்தார். அவர் முகத்தில் பூரண அமைதியும் சாசுவதமான மகிழ்ச்சியும் பொலிந்தன. இதே பௌர்ணமி இரவில், இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு, கடலுக்கு அப்பால், ஓர் இடத்தில் சாக்கிய முனிவர் சித்தார்த்தர் பிறந்தார். நிலவொளி கமால்—பிக்கு இருவர் முகங்களிலும் படர்ந்தது.

“என் எண்ணங்களிலிருந்து எனக்கு விடுதலைபெற உதவுங்களேன்!”—கமால் இறைஞ்சினான்.

பிக்கு ஆழ்ந்த நீலவிழிகளை விரித்து அவனைப் பார்த்தார். “எண்ணம்... எண்ணம்.. நீ உன்னையே உணரவில்லை. எண்ணம் தானாகவே வெளியேற முடியாது. சிருஷ்டியை மீறி எந்தத் தெய்வமும் கிடையாது; தெய்வத்தை மீறிய சிருஷ்டியும் இல்லை. சத்தியம்—அசத்தியம் இரண்டுக்கும் பேதம் இல்லை. ஆனால் இவை இரண்டிற்கும் மேலே உள்ள இறுதி நிலை சூனியம்தான்” பிக்கு பிரெஞ்சில் பேசினார்.

“எனக்கு இந்தச் சூனியத்திடம், இந்த அமைதியிடம் மிகப் பயமாக இருக்கிறது.”

“சூனியம்! அமைதி! சூனியநிலை! இதுதான் இறுதிநிலை.”

“எனக்கு இந்த எண்ணமே அச்சமூட்டுகிறது. இந்த அமைதியில் நான் தனியாக எங்கே போவேன்? நீயும் என்னுடன் வரலாகாதா?” கமால் அந்த மகாயானி பிக்குவை ஐயப்பாட்டுடன் பார்த்தான். பிறகு, “நான் நாடற்றவன். இது உன் ‘சுகவதி’ நிலை இல்லை; துறவு சாதனை இல்லை” மனத்துள் சொல்லிக் கொண்டே தன் பகுதிக்கு வந்து சேர்ந்தான்.

கப்பல் தன் பயணத்தை நிச்சிந்தையாக மேற்கொண்டு முன்னேறியது.

# 54

இந்தியாவின் கடற்கரை!

பம்பாய்...! தாயகம்! பிறந்தகம்!

கமால் லக்னோ வந்து சேர்ந்தான். குல்ஃபிஷான் மாளிகைக்குச் சென்று பார்த்தபோது, ஊர் மாறியிருப்பது தெரிந்தது. தோட்டத்து மரங்கள் எரிக்கப்பட்டிருந்தன. செடிகள் காய்ந்து கிடந்தன. புல்வெளியெங்கும் முட்புதர்கள், கார் ஷெட்டும், குதிரை லாயமும் பல

பொருள் கிடங்குகளாகியிருந்தன "பாகிஸ்தானத்திற்குப் போகிற உறவினர்கள் பத்திரப்படுத்தி வைத்துவிட்டுப்போன பொருள்கள் கிடங்கில் அடைந்திருக்கின்றன."—கிழ அத்தை சொன்ன தகவல். பணியாட்கள் விடுதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. கமாலின் கண்கள் கங்காதீனைத் தேடின; கதீர்—கம்ருன் இருவரையும் தேடின. ஹுசைனியின் மனைவியையும் ராம் அவதாரின் மனைவியும் பெயர் சொல்லி விளித்துப் பார்த்தான். யாரும் கிடைக்கவில்லை.

உளம் சாம்பித் தன் அறைக்குள் வந்து கட்டிலில் படுத்து ரகசியமாக விம்மி அழுதான். உலகமென்னவோ அதேதான்— குல் ஃபிஷான், லக்னோ, உற்றார்—உறவினர் எல்லாம் பழைய மாதிரியே. 'நான்தான் மாறிவிட்டேனோ? என் தந்தையின் இந்த வறிய நிலையைக் கண்டு, உணர்ச்சிவசப்பட்டு வருந்துகிறோனோ? இளமைப் பருவம் முழுவதும் ஜமீன்தாரி ஒழிப்புக்காக—பொதுவுடை மைக்காகப் பாடுபட்டேன்-!'

மாலையில் அப்பி (தஹ்மீனா) சொன்னாள்: "பெரிய பெரிய சமஸ்தானங்கள் பறிபோய்விட்டன; நாம் எந்த மூலைக்கு?" சொத்துக் களெல்லாம் கரைந்து தாழ்ந்த நிலைக்கு வந்தவர்களின் பட்டியலை சும்மா ஒப்பித்தாள்.

"இனி என்ன தீர்மானம்? இங்கே கர்பலாவில் இருப்பதா. இல்லை பாகிஸ்தானா?" கமால் தந்தையிடம் கேட்டான்.

"இங்கேயே இருப்போமே. நாம் நாடோடிகளா என்ன?" தன் னம்பிக்கையோடு சொன்னார்.

கமால் திகைத்தான். "ஆனால், நீங்கள் முஸ்லீம் லீகில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தீர்களே!"

"ஆமாம்! அதனாலென்ன? பாகிஸ்தான் ஏற்பட்டுவிட்டது. நல்லதாயிற்று. அதற்காக நாமும் இங்கிருந்து ஓடிவிடவேண்டுமா?"

"அதாவது, பாகிஸ்தானைத் தன் பிரிய நாடாகக் கருதினாலும், அங்கே போயிருக்க நீங்கள் விருப்பப்படவில்லை! இந்தத் தள்ளாத வயதில் அங்கே போய் ஏன் அல்லல்படவேண்டும் என்கிற அலுப்பா? அல்லது, இந்தியாவின்மீது இருக்கிற தாயகப் பற்றுதலா? ஏன் இந்தி யாவைத் துறக்க மனம் வரவில்லை உங்களுக்கு?"

"அட, போடா! உன்னோடு யார் வாதாடுவது? எப்போதுமே நீ ஏடாகூடம்தான்."—நவாப் சாகப் பதில் சொல்லிவிட்டார்.

அம்மா பேகம் முறை வந்தது; முறையிட்டாள்: "இனி கராச் சிக்குப்போய் என்ன செய்வது? ஆமிர் ரஸாவுக்குப் பெண் கொடுத்து, மாமியார் என்கிற முறையிலே மருமகன் வீட்டிலே போய் உட்கார வழியில்லை. இங்கே நமக்கென்று ஒரு வீடாவது இருக்கிறதே. இருந்தாலும் என் மனசு இங்கே ஈடுபடமாட்டேன் என்கிறதே...!"

சில தினங்களுக்குப் பிறகு, கமால் மிக முனைந்து வேலைக்கு

முயற்சி செய்தான். அவனிடம் பல பட்டங்கள் இருந்தன— டிரினிடி காலேஜ், கேம்பிரிட்ஜ் பட்டங்கள். பல வருடங்கள் இங்கிலாந்தில் பிரபல லாபரெட்டரியில் பணிபுரிந்த அனுபவம். தாய்நாட்டுக்குத் தொண்டு புரிய வேண்டுமென்று பிரிட்டனில் கிடைத்த வேலையைத் துறந்துவிட்டு இந்தியா வந்து சேர்ந்திருக்கிறான்.

ஆறு மாதங்கள் ஓடிவிட்டன. தில்லியின் மூலைமுடுக்குகளி லெல்லாம் ஏறி இறங்கிவிட்டுப் பித்துப்பிடித்தவன்போல் ஆனதுதான் மிச்சம்.

"பிள்ளையாண்டான்! யாராவது மினிஸ்டரைப் பாரேன்; சிபாரிசு செய்யச் சொல்லேன்." தந்தை யோசனை கூறினார்.

"சிபாரிசுக்கு நான் செத்தாலும் போகமாட்டேன். என் குவாலிஃபிகேஷனில் எனக்கு நம்பிக்கை இல்லையா? சிபாரிசுக்குத் திரிவானேன்?"—ரோஷப்பட்டான்.

இப்போது நாள் முழுவதும் 'குல்ஃபிஷான்' மாளிகையில் முடங்கிக் கிடக்கிறான்; மனதிருந்தால் தலயத்துக்குக் கடிதம் எழுது கிறான். ஒவ்வொரு கடிதத்திலும், "இந்தியாவுக்கு வரவே வராதே! அங்கேயே முடிந்தவரைக்கும் இருந்து கொண்டிரு. இங்கே வந்தால் என்னைப்போலவே நிராதரவாகத் தவிக்க வேண்டிவரும்" என்று எழுதத் தவறுவதில்லை.

தலயத் பதில் எழுதுவாள்: "உனக்கு புத்தி பேதலித்துவிட்டதா? துணிச்சல், போராட்ட உணர்வு எல்லாம் எங்கே தொலைத்தாய்? இதுதானே செயலூக்கத்திற்குத் தக்க வாய்ப்பு. கூலி வேலை செய்! ஏர் பிடித்து உழு. புரட்சியை எதிர்கொள்வது இந்த வகையில் தானே? இதையெல்லாம் விட்டு, நீ இன்பக் கனவு கண்டு கொண்டிருக் கிறாயோ? அப்படியானால் பாகிஸ்தான் போய்ச் சேர்! அங்கே போனாயானால் நான் முகத்திலேயே விழிக்க மாட்டேன்." இப்படியே கடிதம் வரும்.

'பெண்களுக்குத் துணிவு அதிகமோ? அல்லது உயர்ந்த ஆதரிச வாதிகளோ?_' எப்படியிருந்தாலும் தலயத்தின் கடிதங்கள் கமாலுக்கு ஆறுதலளித்தன.

கௌதமன் நியூயார்க்கிலிருந்து கமாலுக்குத் தொடர்ந்து கடிதம் எழுதிக்கொண்டிருந்தான். கமால் அவனுக்குப் பதிலே போடவில்லை. என்ன எழுதுவது? ஹரிசங்கர் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்து விட்டான்; பெங்களூரில் அவனுக்கு வேலை கிடைத்துவிட்டது. அவனுக்கும் கமால் கடிதம் எழுதவில்லை.

பெரிய அண்ணன் ஆமிர்ரஸா கராச்சியிலிருந்து வற்புறுத்தி எழுதியிருந்தார். "இங்கே உடனே வந்து சேர்! பெரிய வேலைகள் இங்கே காத்திருக்கின்றன. நீ வந்து சேர வேண்டியதுதான், உடனே கிடைத்துவிடும். பிடிவாதத்தை விட்டுத் தொலை...!"

பிறகு, பெரிய அண்ணனின் கடிதங்களைப் பிரித்துக்கூடப் பார்ப்பதில்லை என்னும் நிலைக்கு வந்தான் கமால். சில மாதங் களுக்குப் பிறகு பாராபங்கி கல்லூரியில் தற்காலிக வேலை கிடைத்தது. ஆனால் வேறொரு தொல்லை முளைத்தது. ஆமிர் ரஸா பாகிஸ்தானி யாகிவிட்டார்; குல்ஃபிஷான் மாளிகையில் அவருக்கும் பிதுரார்ஜித உரிமை உண்டு; இதனால் கஸ்டடியன் தகராறு செய்து, நவாப் சாகப்பிற்கு (கமாலின் தந்தைக்கு) மாளிகையில் உரிமை இல்லை என்று தீர்ப்பளித்துவிட்டார். இதை எதிர்த்து நவாப் சாகப் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார். இதற்காகக் கமால் கோர்ட்டுக்கும் வக்கீல் வீட்டுக்கும் அலைந்தான். அவன் பேச்சில் கடுமை புகுந்துவிட்டது. மிகக் குறைவாகச் சிரிப்பான். கலகலப்பு—அரட்டை—ரகளை— அட்டகாசமெல்லாம் இருந்த இடம் தெரியவில்லை.

"பூர்ஷ்வா பிள்ளை பெரிய புரட்சியாளராக இருந்தார். இப்போது நிஜமாகவே புரட்சி செய்து காட்ட வேண்டிய தருணம் வந்ததும், ஜகா வாங்குகிறார்." காபி ஹவுஸில் சில தோழர்கள் பேசிக் கொண் டார்கள்.

ஹுஸைனியும் அவன் பீவியும் ஆமிர்ரஸாவின் மனைவியுடன் கராச்சிக்குப் போய்விட்டார்கள். கதீர், கம்ருன் இருவரும் முன்பே காரை விற்றதுமே சொந்தக் கிராமத்துக்குப் போய்விட்டார்கள்.

ஒருநாள் கமால் எப்போதும் போல் தில்லியில் பேலாரோடில் தங்கியிருந்தான்; ஏதோ வேலைக்கு விண்ணப்பம் எழுதித் தபாலில் போடப் போய்க்கொண்டிருந்தான். வழியில் தாமஸ் எட்கின்ஸ் எதிர்ப்பட்டான்; கப்பலில் சக பிரயாணியாக இருந்தவன்.

"ஹலோ! இங்கே எப்படி?" கமால் கேட்டான்.

"இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருக்கிறேன். தென்னிந்தியா, வங்காளம், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா எல்லாம் பார்த்தாகி விட்டது. இனி ராஜஸ்தான் போகப்போகிறேன்."

"நீ தில்லியைச் சுற்றிப் பார்த்தாயா,"

"இன்னும் இல்லை."

"எங்களுடைய ராஷ்டிரபதி பவன் பார்த்தாயா," கமால் கர்வத் துடன் கேட்டான்: "மேலும் புது தில்லியின் நவீன கட்டிடங்கள் நவ பாரதத்தின் எடுத்துக்காட்டுகள். அப்புறம் ராஜ்காட், அப்புறம்..." பழைய கமாலாக மாறிவிட்டான். அதே கலகலப்பு, கவலையின்மை, இந்தியாவின் உத்வேகமுள்ள குடிமகன். தில்லியின் எல்லாப் பகுதி களையும் தாமஸுக்குச் சுற்றிக் காண்பித்தான். மிக உற்சாகமாக இருந்தான்.

"இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" ஆல்ப்ஸில் அமர்ந்து காபி குடிக்கும்போது தாமஸ் கேட்டான்.

"ஒன்றும் இல்லை. வேலை தேடிக் கொண்டிருக்கிறேன்."

கவலைப்படாமல் சொன்னான்.

"வேலையில்லாமை இந்தத் தேசத்தின் மிகப் பெரிய பிரச்சினை."

"எல்லாருக்கும்தான். எனக்கு மட்டுமில்லையே. நல்ல காலம் வரும்போது எல்லாருக்குமாகவே வரும். அது, இது இந்து வீடு, இது முஸ்லீம் வீடு என்று பார்க்காது. நாங்கள் எல்லாருமே ஒன்றாக மூழ்குவோம், ஒன்றாகவே எழுவோம்."

"ஆனால் நீ நவாப் வீட்டுப் பிள்ளை. கூலி வேலை செய்ய மாட்டாய்? நீ தன்னைத் தானே 'டி' கிளாஸாக்கிக்கொள்ள இயலாதவன்." கூட வந்த குல்ஷன் சொன்னான்.

"இது தவறு."

"அப்படியானால் என்னுடன் வந்து டிராக்டர் ஓட்டு."

"எனக்குப் பழக்கமாகியிருந்தால் நிச்சயம் ஓட்டுவேன்; பயிற்சியே பெறவில்லையே. வீணாக எட்டு வருட காலம் நியூக்ளியர் பிஸிக்ஸில் பாழ்படுத்தி விட்டேனே என்று வருந்துகிறேன்."

"பாகிஸ்தானில் ஸயன்ஸ் படித்தவர்களுக்கு ஏகப்பட்ட கிராக்கியாமே. அங்கே போயேன். இங்கே ஏன் அவதிப்படுகிறாய்,"' குல்ஷன் அறிவுறுத்தினான்.

"நீயும் இப்படிச் சொல்கிறாயா?" கமால் திகைத்தான்.

"நிச்சயம். வேறு வழி?" குல்ஷன் அமைதியாகச் சொன்னான்.

கடைசியில், கமால் தில்லிக்குச் சென்று விசாவுக்கு விண்ணப்பிக்கும் நாளும் வந்து சேர்ந்தது. இந்த முடிவுக்கு வருவதற்கு முன்பு அவன் பல இரவுகள் உறங்காமல் பரிதவித்தான். பிறர் கண்ணில் படாமல் ஒளிந்து திரிந்தான். குல்ஃபிஷான் மாளிகையில் வெறும் நிழல்களே ஆடி அசைந்தன. அறைகள் அடைக்கப்பட்டிருந்தன; படுதாக்கள் காற்றில் படபடத்தன. உள்ளே படுக்கையறையிலிருந்து கிழவர் நவாப் சாகப்பின் இருமல் ஒலித்தது. அம்மா பேகம் பின் பக்கத்துக் கூடத்தில் மனைமீது அமர்ந்து ஜபித்துக் கொண்டிருந்தாள்; பிறகு பிரார்த்தனை: "ஆண்டவரே! கம்மனுக்கு வேலை கிடைக்க வேண்டும்; கம்மனுக்கு உதவி புரியேன்!" (பாராபங்கி கல்லூரிவேலை முடிவடைந்துவிட்டது) கம்மன்—கமால் தனக்குள் சொல்லிக் கொண்டான்: 'நீ ஒரு கோழை! இழிந்தவன். உன் பழைய நேஷனலிஸ்ட் டிரெயினிங் எங்கே போயிற்று? தலயத் சரியாகத்தான் சொன்னாள்: புல் செதுக்கு! ஏர் உழு...! ச்சீ! வெட்கம்! சந்தர்ப்பவாதி நீ! நாணயமில்லாதவன்! பலவீனமான நம்பிக்கை கொண்டவன் நீ...!'

அலிகர் யுனிவர்சிடியில் வேலை கிடைக்குமென்கிற நம்பிக்கை இருந்தது. அதற்கும் இடமில்லை. அவனுக்கு ஏற்ற வேலை வாய்ப்பு இங்கு இல்லை. இந்த நிலையிலும் கமால் தீர்மானித்திருந்தான்: பட்டினி கிடந்து செத்தாலும் சரி, தாயகத்தை விட்டுச் செல்லும் பேச்சே கிடையாது.

இந்தத் தருணத்தில்தான், ஒரு நாள் நீதிமன்றம் தீர்ப்பளித்தது. 'குல்ஃபிஷான்' மாளிகை சர் ஜகீரஸாவின் பெயரில் பதிவாகியிருந்தது. அவருடைய ஒரே பிள்ளை ஆமிர் ரஸா பாகிஸ்தானியாகிவிட்டான். 'குல்ஃபிஷான்' கைவிடப்பட்ட சொத்தாகத் தீர்ப்பளிக்கப்பட்டது. மறுநாள் காலை தூங்கியெழுந்ததும் கமால் தான் அகதியாக லக்னோவில் இருப்பதை உணர்ந்தான். மூன்றாம் நாள் போலீஸ் அதிகாரிகள் மாளிகையைப் பூட்டி சீல் வைக்க வந்து சேர்ந்தார்கள். நான்காம் நாள் கமால் ரஸா தம் முதிய பெற்றோர்களுடன் டிரெயினில் புறப்பட்டான். ஐந்தாம் நாள் டிரெயின் தில்லி வந்தது. ஆறாம் நாள் ரயில் இந்திய எல்லையைக் கடந்தது. ஏழாம் நாள் கமால் ரஸா கராச்சியில்—பாகிஸ்தானில் இருந்தான்.

# 55

கராச்சி இன்று—1956ஆம் ஆண்டு—உலகத்திலேயே மிகப் பெரிய இஸ்லாமிய ராஜ்யத்தின்—உலகத்தின் ஐந்தாவது தேசத்தின் தலைநகரம். இங்கு புதிய செல்வந்தரான நடுத்தர வர்க்கத்தாரின் ஆட்சி நடக்கிறது. கராச்சி மிக மிக நவீன நாகரிக நகரம். இங்கே தினமும் இரவில் உயர்தர ஹோட்டல்களிலும், கிளப்புகளிலும் ஒளிவீசும் பகட்டான புதிய உலகம் உலவுகிறது. இப்புதிய சமுதாய வாழ்வின் ஆணிவேர் பணம். இங்குள்ள மற்றொரு உண்மை சலிப்புணர்வு—ஃப்ரெஸ்ட்ரேஷன் உணர்வு. கள்ளச்சந்தை உள்ள ஃப்ரஸ்ட்ரேஷன். மேலும் அதிகமாகத் தொழில் வெற்றி காண முடியவில்லையே என்பது. இடதுசாரிச் சிந்தனைவாதிகள் புரட்சிக்கு வாய்ப்பு இல்லையே என்று அழுகிறார்கள். ஜமாதேஇஸ்லாமிக் குழுவினர் கதறுகிறார்கள் 'ஐயோ! முஸ்லீம் பெண்டுகள் பர்தா இல்லாமல் தெருவில் தெரிகிறார்களே! பால்ரூம் டான்சில் கலந்து கொண்டு கூத்தடிக்கிறார்களே...!' நடுத்தர வர்க்கத்தாருக்கு ஆயிரக் கணக்கில் கவலை—தொல்லைகள்.

இவை தவிர, வங்கத்திலிருந்தும், பஞ்சாபிலிருந்தும் வந்தேறிய அகதிகளுக்கும் உள்ளூர்வாசிகளுக்குமுள்ள சச்சரவு தனி.

இந்தியா முழுமுயற்சி செய்து நிலைநாட்ட முயன்று கொண்டிருந்தது— பிரிவினை தவறு; உண்மையில் இந்தியா ஒன்று; அகண்ட இந்தியா! பாகிஸ்தான் இப்படி நிரூபித்தது— பிரிவினை நியாயமானது, நல்லது. இங்குள்ள பண்பாடே தனி. இந்தத் தேசியத்தின் அடிப்படையில் தனிநாடு பெறப்பட்டது.

அங்கு இந்தியா பறை சாற்றுகிறது; கீழை நாடுகளின் கலாச்

சாரத்தின் பிறப்பிடமே பாரதப் பண்பாடுதான். அங்கு குப்தர்களின் பொற்காலம் பற்றி சிலாகிக்கப்படுகிறது; இங்கு பாகிஸ்தானில் கிலாஃபதே ராஷிதா, அப்பாஸி, மொகல் காலத்தின் அருமை பெருமைகள் புகழப்படுகின்றன. இரு நாடுகளின் இந்தப் பிரச்சாரங்கள் மும்முரமாகத் தொடர்கின்றன. இரண்டுமே தங்கள் பெருமைக் குறிகளைப் பதிய வைக்கிற இடம்—மேலைநாடுகள்.

அகில உலகத்திற்கும் சார்பாக இப்போது இஸ்லாமிற்குப் பரிந்தும் சார்ந்தும் செயல்படுவது பாகிஸ்தான்தான். இஸ்லாம் ஒரு காலத்தில் பெரிய ஜீவநதி போல் எண்ணற்ற உபநதிகளைத் தன்னுள் ஏற்று, மிகக் கம்பீரமாகப் பரந்து பிரவகித்தது. அதுவே இப்போது குறுகி, வற்றி, கலங்கி, தேங்கிப்போய், சிறு வாய்க்காலாக ஓடிக் கொண்டிருக்கிறது. இதில் வேடிக்கை, 'இஸ்லாம்' என்று கூக்கூரல் இடுபவர்களுக்கு அந்தத் தர்மதரிசனத்திடம் அக்கறை கிடையாது. அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் முஸல்மான்கள் எண்ணூறு வருடங்கள் வரைக்கும் கிறிஸ்துவ ஸ்பெயின் நாட்டை ஆண்டார்கள்; ஆயிரம் வருடகாலம் இந்துக்களின் பாரதத்தில் கோலோச்சினார்கள்; நானூறு ஆண்டுகள் கிழக்கு ஐரோப்பாவில் ஆட்சி புரிந்தார்கள்—என்பதுதான். இவைதவிர, இஸ்லாமின் மிக உன்னதமான மனிதாபிமான பரம்பரையையோ, அன்புடைமைக் கோட்பாட்டினையோ நினைவுபடுத்துவதில்லை. அராபிய தத்துவதர்சிகள், ஈரானியக் கவிஞர்கள், ஸூஃபி ஞானிகளின் பெரும்போக்கு—பொதுநோக்கு இவைகளையெல்லாம் பிரச்சாரம் செய்யத் தேவையில்லை என்று நினைக்கிறார்கள். இஸ்லாம் ஒரு தீவிர போராட்ட மதமாகவும் கோட்பாடாகவும் எடுத்துக் காட்டப்படுகிறது.

பல விஷயங்கள் மகிழ்ச்சியூட்டவும் செய்கின்றன. நாடு விரைவாக தொழில் வளம் நோக்கி முன்னேறுகிறது. ஏராளமான பெண்கள் டாக்டர்களாகவும், நர்சுகளாகவும், லெக்சரர்களாகவும் பணிபுரிகிறார்கள். பாகிஸ்தான் பெண்கள் உண்மையிலேயே மிக முன்னேற்றம் கண்டிருக்கிறார்கள். இது மிகவும் வன்மையான நல்ல அறிகுறி.

இராப்பொழுது கடந்து கொண்டிருக்கிறது. தலயத்! என் மனத்தில் தோன்றுவதையெல்லாம் எழுதிக் கொண்டிருக்கிறேன். இதனாலேயே இந்தக் கடிதம் உனக்குக் கட்டுக்கோப்பில்லாததாக—பிசிறு தட்டுவதாகத் தோன்றும். எனக்குப் பலப்பல சங்கதிகளை உன்னிடம் தெரிவித்தாக வேண்டும். மேலும், நீ என் கண் நோக்கோடு இந்த என் புதிய நாட்டைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். எனக்குத் தைரியமளி; என் ஊக்கத்தை வளர். நான் இந்த நாட்டுக்கு ஏதாவது செய்ய விரும்புகிறேன்.

தலயத்! முக்கியமானது, இந்துஸ்தானத்தில் மத்தியவர்க்க

முஸல்மான்களின் வாழ்க்கை நொடித்துவிட்டது. கலாச்சார— பொரு ளாதாரத் தற்காப்புக்காக இந்திய முஸ்லிம்கள் இங்கு குடிபெயர்ந்து வருகிறார்கள். முஸ்லிம் இளைஞர்கள் யூனிவர்சிட்டிப் படிப்பை முடித்துக் கொண்டு வெளியே வந்ததும் பல பிரச்சினைகளை அவர்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. அவர்களை இந்திய ராணுவத்தில் சேர்த்துக் கொள்வதில்லை. அவர்களுடைய நாணயமும் நம்பகமும் சந்தேகிக்கப்படுகின்றன. குடும்பங்கள் சிதறிவிட்டன. ஒரு சகோதரன் பாகிஸ்தான் ராணுவத்தில் இருக்கிறான்; மற்றவன் பாகிஸ்தான் கப்பல் படையில் பணியாற்றுகிறான். மூன்றாமவன் ஆஜாத் காஷ்மீர் ரேடியோவில் அலுவல் புரிகிறான். நான்காவது தம்பி பாட்னாவில் பி.எஸ்.ஸி படித்துக் கொண்டிருக்கிறான். இந்திய விமானப்படையில் சேர மிக ஆசைதான்; ஆனால் விண்ணப்பம் போடத் துணியவில்லை. பாகிஸ்தான் வந்து ஜெட் பைலட்டாகப் போகிறான். பாட்னாவில் ஒரு குமாஸ்தா வேலை கூடக் கிடைக்காது. அவனுக்குத் தெரியும்! பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தேர்வில் தேறி வந்தாலும், மதம் காரணமாகத் தேர்ந்தெடுக்கப்பட மாட்டான்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பொருளாதாரக் குலைவு—சரிவு காரணமாக இந்தச் சங்கடங்கள் தலையெடுத்தன. 'பெருவாரியான இந்துக்களின் கையில் சிக்கி நசிப்பார்கள் முஸ்லிம்கள்' என்கிற அச்சவுணர்வை நேருவும் சர்தார் பணிக்கரும் வெளியிட்டார்கள். இது வரலாற்றில் தனியிடம் பெறும்; 'ஆனால்', இந்தப் பயத்தைப் போக்க 'முடியுமானால்', நிலைமை எப்படி இருக்கும்? இதைக் காங்கிரஸ் செய்ய முடியும்.

மொழிப் பிரச்சினை நம்முடைய இழிவூழின் விளைவு. இந்திய முஸ்லீம்களின் நிலைகுலைந்து போவதற்கு இந்தப் பிரச்சினையும் காரணம். இன்று உருதுவை இந்தியாவில் முஸ்லீம்களின் மொழியாகக் கருதுகிறார்கள். உண்மையில் உருது இருசாராரின் பழகு மொழியாகப் பேச்சு வழக்கில் இருந்து வந்தது.

இப்போது நான் மறுபடியும் இங்குள்ள நிலைமைக்குத் திரும்பி வருகிறேன். இன்று வெள்ளிக்கிழமை இரவு. சிந்தனைச் சிற்பிகளின் சிறப்புக் கூட்டத்திலிருந்து வந்திருக்கிறேன். அங்கே மேலை இலக்கியம், உலக அரசியல் இரண்டையும் அலசித் தீர்த்த பாங்கினை, குழுவாக— கட்சியாக இணைந்து வாதாடிய மாணவ—மாணவிகளின் உற்சாகத்தை, நீ நேரில் இருந்து ரசிக்கவில்லையே என்று ஏங்கினேன்.

இன்று மாலை அதே கூட்டத்தில் கத்தோலிக்கரின் மத நம்பிக்கை பற்றி விவாதம். மற்றொரு பக்கத்தில் மேற்கத்திய பிற்போக்கு வாதி (ரியாக்ஷனரி) எழுத்தாளர்களைச் சாடிய கருத்தரங்கு. ஒரு பிரெஞ்சுக்காரரை அல்ஜீரியா சார்பில் பழித்து இழிவுபடுத்தினார்கள். அமெரிக்க உதவிக்காக மேரி ரிச்சர்ட்ஸைச் சூழ்ந்து கொண்டு

சிரமப்படுத்தினார்கள். நான் மறுபக்கம் திரும்பிக் கொண்டேன். அங்கு மூலையில் ஒரு குழு பிரெஞ்சு நாட்டு இன்டெலெக்சுவலோடு விவாதித்தது.

"பிரான்ஸின் இப்போதையப் பச்சோந்தி நிலை மேற்கத்திய அறிஞர்களின் நிலைமையை மோசமாக்கி இருக்கிறது. பிரான்ஸின் ஸிம்பலான இன்றைய ஐரோப்பிய கலாச்சாரப்போக்கு மேற்கத்திய அறிவாளிகளைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது. மேலைநாடுகளுக்கு இது சரிவு காலம். இப்போது அவற்றிடம் தம்மை விடுவித்துக் கொள்ள—சமாளிக்க எந்தத் தர்க்கவாதமும் கிடையாது. இனி ஸாத்ரே மறுபடியும் கழுவாய் தேட முனைந்தாலும் வியப்படை வதற்கில்லை. மேற்கத்திய நாகரிகத்தின் பிரதிநிதிகளின் செல்வாக்கு குலைந்துவிட்டது." தன்வீர் முழக்கினான்.

"ஆங்கிலேய அறிஞர்கள்கூட அமெரிக்காவிடமிருந்து கைக்கூலி பெறுகிறார்கள்-"

நான் அப்பால் சென்று, அமெரிக்கர்கள் பக்கத்தில் அமர்ந்தேன். மற்றொரு குழுவில் பிரபல அமெரிக்க வரலாற்றாசிரியர் உட்கார்ந் திருந்தார். அவர் சொன்னார்: "அமெரிக்கா முன்பே உள்நாட்டுப் போரில் இரு பகுதிகளாகப் பிரிந்திருக்குமானால், இன்று எங்கள் நிலை எப்படி மாறியிருக்குமோ, தெரியாது! பொருளாதாரச் சீர்கேடு தான் நாட்டுப் பிரிவினைக்குக் காரணம் என்று சொல்லிக் கொண்டிராதே. இது தவிர, வேறு எது காரணம் என்பதை அறிய விரும்புகிறேன்."

"கீழை நாடுகளின் வீழ்ச்சிக்குக் காரணம் என்ன?" ஹமீதா கேட்டாள். நான் டோயன்பியிடமும் இதைக் கேட்டேன். அவன் விழித்தான். இந்தியாவில் பதினெட்டாம் நூற்றாண்டில் வீழ்ச்சி ஏற்பட்டதற்குக் காரணம்?

"இந்தியாவில் பாசன வசதிகள் மிக மோசம்." அமெரிக்க இன்டலெக்சுவல் ஜேகப் மாரிஸன் கருத்துத் தெரிவித்தான். வெகுநேரம் கழித்து வீடு திரும்பினோம். நான் களைத்து விட்டேன்.

என் அன்பார்ந்த சகோதரி, தலயத்! இப்போது மிக முக்கியமான நிகழ்ச்சி இதுதான். லக்னோவைச் சேர்ந்த புரட்சிக்காரன், காங்கிரஸின் உற்சாகமிக்க தொண்டன், அகண்ட பாரதத்தின் பெருமையைப் போற்றுபவன் நான்; இன்று காலையில் ஆயிரத்து இருநூறு ரூபாய் மாதச் சம்பளத்தில் பதவியில் அமர்த்தப்பட்டிருக்கிறேன். முழு லாபரட்டரியை நான் அமைத்துக் கொள்ள வேண்டும். இதற்கு வேண்டிய கருவி—சாதனங்களைச் சேகரிக்க நான் விரைவில் அமெரிக்கா வரவேண்டியிருக்கும். இந்த வேலைக்காகவே அடுத்த வாரம் கிழக்குப் பாகிஸ்தான் போகிறேன். அடுத்த கடிதம் உனக்கு டாக்காவிலிருந்து எழுதுவேன்.

இப்போது விடிகாலை தொடங்கப் போகிறது. இரவு முழுவதும் உனக்குக் கடிதம் எழுதுவதிலே கடந்துவிட்டது. இப்போது ஜன்னல் திரைகளை விலக்கி வெளியே பார்க்கிறேன். கராச்சி விழித்தெழுகிறது. தன் செயலில் இயங்கத் தொடங்குகிறது. ஆயிரக்கணக்கான மனிதர்கள் தத்தம் அலுவலை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்களைத்தான் 'மக்கள்' என்கிறோம். தலயத்! இந்த மக்கள் எந்தக் குற்றமும் இழைக்கவில்லை. இவர்களுக்குக் கல்வி வசதி அளிக்கவில்லை; பட்டினியால் வாட விடப்பட்டார்கள்; இவர்களை எப்படி வேண்டுமானாலும் திசை திருப்பலாம்; இயங்க வைக்கலாம். இவர்கள் யாவரும் அமைதியாக வாழவும், வயிறார உண்ணவும், நிம்மதியாக உறங்கவும் உரிமை கொண்டவர்கள். தலயத்! இந்தக் காலை நேரத்தில் ஆயிரக்கணக்கில் தொழிலாளிகள் பி.ஐ.டி.ஸி துறைமுகம் டாக்யார்டை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். இந்தக் காட்சி—ஆஹா! எவ்வளவு பரவசமூட்டுகிறது! பார்க்க வேண்டிய திருக்கூட்டம். எனக்குப் பாகிஸ்தானத்தின் வருங்கால வளமை—பெருமை குறித்து நம்பிக்கை துளிர்க்கிறது. தலயத்! இவர்கள் மிக அன்புருவான மக்கள். இவர்கள் கலகம்—குழப்பமெல்லாம் செய்து நாட்டைத் துண்டாடிவிட்டார்கள் என்பதற்காக, இவர்களை நீ வெறுக்காதே. இவர்கள் அப்பாவிகள், பேதை மக்கள். இவர்களுக்கு நேற்று நடந்தனவே சிந்தனைவாதிகளின் கருத்தரங்குக் கூட்டங்கள், அவற்றில் விவாதிக்கும் பிரச்சினைகளைப் பற்றி அக்கறை கிடையாது; கவலையுமில்லை. இவர்களுக்குத் தெரிந்த—தெரிந்திருக்க வேண்டிய போதுமான உண்மை சிந்து இண்டஸ்டிரியல் எஸ்டேட்டில் பல தொழிற்சாலைகள் தொடங்கிவிட்டன; அவற்றின் மிஷின்களை இந்த மனிதர்கள் இயக்குகிறார்கள். இவர்கள் வாழும் நாடு பாகிஸ்தான். இப்போது கடந்துபோனதற்காக வருந்துவதோ, தூற்றுவதோ, கழிவிரக்கப்படுவதோ தவறு. வருங்காலம் காத்திருக்கிறது. இந்தியாவும் பாகிஸ்தானமும் இணைந்து ஒரு நாடாகிவிடும் என்று நினைப்பது மடமை. உலகத்தின் வரைபடம்—தேசங்களின் அமைப்பு ஒவ்வொரு பெரும்போருக்குப் பிறகும் மாறுகிறது. 1945க்குப் பிறகும் மாறவே செய்தது. பிரிவினை பற்றி சிந்திக்கும்போது என் உள்ளம் சாம்புகிறது. என்ன பயன்? வாழ்வில் பாதி கடந்து விட்டது; மீதி இருப்பது கொஞ்சம். இதையாவது கொஞ்சம் பயனுள்ளதாகச் செய்யலாமே.

இந்த நாடு என்னைப் பராமரிக்க ஏற்றுக் கொண்டிருக்கிறது; எனக்குப் புகலளித்திருக்கிறது. இதை ஆக்குவதும், குலைப்பதும் என் கையில்தான் இருக்கிறது. நான் வாழ்நாள் முழுவதும் அழிவுக்குப் பதில், ஆக்கப்பணிகள் புரியவே கனவு கண்டேன். நான் இந்தக் கனவுகளிலேயே கரைந்து விடுவேனோ? உன் கருத்து என்ன? இல்லை; நான் என்னை அப்படிக் கரைய விடமாட்டேன். நான் ஆக்கப்

பணிகளே புரிவேன்; நிர்மாணிப்பேன்.

பின் குறிப்பு:

'ஆக்கப் பணி' என்றதும் நினைவு வருகிறது. ஆமிர் ரஸா அண்ணனின் பங்களாவில் தங்கியிருக்கிறேன். மிக நேர்த்தியான கட்டிடம். ஒரு இத்தாலியக் கட்டிட நிபுணர் உருவாக்கியது. அண்ணி அவர்கள் கராச்சியில் பிரபல மேல்மட்ட மங்கையர் குழாத்தில் ஒருவர். என்னைக் குடியும் குடித்தனமுமாக வாழ்விக்க, மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டிருக்கிறார். வீடு கட்ட நிலம் வாங்கிக் கொடுத்திருக்கிறார். நேற்று அவர் அமர்த்திய இத்தாலியக் கட்டிட நிபுணர் பங்களாவின் வரைபடத்தைக் கொணர்ந்து காட்டியபோது, கதறி அழலாமா என்று தோன்றியது.

இப்படிக்கு உன் அன்புள்ள,
'கம்மன்'

# 56

மத்திய காலத்துப் பாரதம்; அதன் சுவர்களில் புல்பூண்டுகள் முளைத்திருக்கின்றன. பழைய தில்லி, வங்கம், மால்வா, அகமதாபாத், சம்பா நேர், மாண்டு, ஜௌன்புர், பஹ்மனி பாதுஷாக்களின் கட்டிடங்கள், பீதர், குல்பர்க்கா, தக்காணம், தென்னிந்தியா...!

உத்தரபிரதேசத்தில் லலிதபுர், காலபி, ஷிகோஹாபாத், பதாயூம், ஜோன்புர்—மொகலாயர்களுக்கு முந்திய இந்தியா.

ஒரிஸா, சென்னை, கர்நாடகம், அஜந்தா, எல்லோரா—இங்கெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு, பிறகு மத்தியகாலத்துக் கட்டிடங்களுக்கு சிரில் வந்து சேர்ந்தான். எண்ணற்ற பெயர்கள், காலங்கள், நேரங்கள், இவற்றின் அமைப்புகள். இதே சிரில் முன்பு ஐரோப்பாவில் பழைய கதீட்ரல்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான். இப்போது நாடோடியைப்போல் இந்தியா முழுவதையும் சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கிறான். பல காட்சிகளில் லயிக்கிறான்: தாமரை மலர்கள், யானைகள், கந்தர்வ சிற்பங்கள், நீர்ச்சுனைகள், மினார்கள், படிக்கட்டுகள். பழைய கட்டிடத்தினருகில் கிராமத்துப் பெண் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருக்கிறாள்; ஒரு பையன் மரக்கிளையிலிருந்து குளத்தில் குதிக்கிறான்; ஒரு குருடன் பாழடைந்த அரண்மனையில் உட்கார்ந்து புகைபிடித்துக் கொண்டிருக்கிறான். மேலே உடைந்த கும்பட்டங்களுக்கு மேல் வானம் கவிந்திருக்கிறது. முகில்கள் மேற்குமலைத் தொடர்ச்சியிலிருந்து குமுறி எழுந்து, சித்தூர் பக்கம் பரவுகின்றன. வங்காளவிரிகுடாக் கடலிலிருந்து கருமுகில்கள்

எழுகின்றன; ராஜ்ஷாஹி, கௌட் பகுதிகளில் பரவுகின்றன. மத்திய காலத்துச் சோர்வடைந்த, மௌனமான, பாழடைந்த இந்தியப் பகுதி மழையில் நனைகிறது. புல் செடிகள் காற்றில் அலைபாய்கின்றன.

இந்தக் கற்கள் கடந்த காலம், நிகழ்காலம் இரண்டிலும் தொடர்பு கொண்டிருந்தன. சிரில்லின் உணர்வில் மழை உக்கிரமாகப் பொழிந்தது; அவன் புகல்நாடி ஓடிவந்து வருங்காலத்தில் புகல் பெற்றான்.

இந்தியா முழுவதும் சுற்றி அலைந்த பிறகு, (அவன் யாரைத் தேடிக் கொண்டிருக்கிறான்? பல தடவை சள்ளைப்பட்டுக்கொண்டு தன்னிடமே கேட்டுக் கொண்டிருக்கிறான்) கல்கத்தா வந்து சேர்ந்தான். பிறகு விமானமேறி கிழக்கு பாகிஸ்தானத்தின் அழகிய நிலத்தில் இறங்கினான். டாக்கா கிளப்பின் பாரில் தொடர்ந்து பீர் குடித்தபிறகு, ஸில்ஹட் போகும் டிரெயினில் உட்கார்ந்து தான் போகவேண்டிய இடத்திற்குப் போகிறான்.

சிரில் போகவேண்டிய இடம் இதுதான்—

ஒரு சிறிய நிலையத்தில் ரயில் குலுங்கி நின்றது. பல குரல்கள் தூக்கத்தில் நீந்திக் கொண்டு வந்தன. வேகவைத்த முட்டை, சூடான டீ விற்பவர்கள் எழுப்பும் குரல்கள். ஜன்னல் கதவைத் தூக்கிவிட்டு, வெளியே பார்த்தான். சூழ்நிலையில் மலர்களின் மணம் பரந்திருந்தது. பரந்த வயல் வெளியிலிருந்து வரும் காற்று அது. ஒரு கிழ வங்காளி இந்து மூட்டைகளைச் சுமந்து கொண்டு, குனிந்தவாறு வேகமாக நடந்தான். சிரில் அந்தக் கிழவனையே பார்த்துக் கொண்டிருந்தான். 'இங்கு எவ்வளவு மக்கள் இருந்தார்கள்! பெண்கள் நெற்றியில் பொட்டும், வகிட்டில் செந்தூரமுமாக நடமாடிக் கொண்டிருந்தார்கள். லுங்கிகள் அணிந்த முஸ்லிம்கள், ஆங்கிலோ-இந்தியக் கார்டுகள், பல்லக்குத் தூக்கும் போகிகள்... ரயில் கிளம்பியது. வங்காளிப் பேச்சுகள் இருளில் மறைந்தன. ரயில் மறுபடியும் குளங்களை ஒட்டிச் சென்றது. குளங்களில் தாமரை மலர்கள் பூத்திருந்தன. மலர்க்கொடிகள் மறைத்திருந்த குடிசையின் வாசலில் ஒரு மங்கை ஊதா நிறச்சேலை உடுத்திக்கொண்டு நின்றாள். சில பெண்கள் பர்தா மறைப்பை இழுத்துவிட்டுக் கொண்டு மூங்கில் தோப்பினுள் போய்க் கொண்டிருந்தார்கள். இவர்களுடைய பெயர்கள் என்னவாக இருக்கும்? ஆமினா, ஸகீனா, ரேவா, ராதா. அவர்களுடைய வாழ்க்கைக் கதைகளில் என்னவெல்லாம் இருக்குமோ? பிறப்பு முதல் இறப்பு வரைக்கும் வேதனை, கொடுமை, ஏழ்மை, பஞ்சம், பஞ்சம், பஞ்சம்.....

சிரில் கண்களை மூடிக்கொண்டான்.

"அல்லாஹ்! காபட் தே! பாநீ தே! பாத் தே! ரே அல்லாஹ் பாத் தே-!" சிரில்லின் காதுகளில் இந்தக் கோரஸ் முழக்கம் கேட்டது. இதே கூவலை டாக்காவில் ஒரு கூட்டத்தில் மாணவர்கள் வாயிலாகக்

கேட்டிருக்கிறான். வங்காளத்தைப் பற்றி அவன் எப்போதுமே இன்ப கரமான கற்பனைகளையே கண்டு சேகரித்து வைத்திருந்தான். சுஜாதா தேவி டாகூரின் பல சொற்பொழிவுகளை அவனுக்குப் போதித்திருக்கிறாள். நாடோடிப் பாடல்களைச் சேகரிக்கும் ஜஸ் முத்தீன், லீலாராம் இவர்களின் பேச்சுக்கள், இலக்கிய விழாக்கள், கல்கத்தா தியேட்டர்கள், கலாச்சார நிகழ்ச்சிகள், பில்வேடியரின் (Belvedere) பழைய கவர்ன்மெண்ட் ஹவுஸ்; இங்கு முன்பொரு காலத்தில் லார்டு காரன்வாலிஸ் வாழ்ந்து வந்தான். பதினெட்டாவது—பத்தொன்பதாவது நூற்றாண்டுகளின் பின்புலன், கிளைவ் ரோடு (இப்போது நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு), அலிபுர், தர்மதல்லா, கார்டன் ரீச் எல்லாம் கடந்து ரயில் ஒரு ஸ்டேஷனில் வந்து நின்றது.

அந்தக் கம்பார்ட்மென்டின் கதவு திறந்தது. வெள்ளைச் சீருடை அணிந்த டைனிங் காரின் சிப்பந்தி உள்ளே வந்தான்: "டின்னர் சாகப்?"

"எஸ்!"

சிரில் கம்பளியை இழுத்துப் போர்த்திக்கொண்டு விச்ராந்தி யாகப் படுத்துக் கொண்டான்.

சில்ஹட்டின் தேயிலைத் தோட்டங்களில் நூற்றுக்கணக்கான கிழக்குப் பாகிஸ்தானிகள் வேலை பார்த்து வந்தார்கள். ராம்தேயி, ராம்அவதார், லக்ஷ்மன், சீதா, கேந்தா, சம்பேலியா. கிழக்குப் பக்கத்துக்காரர்களிடம் இந்த இரு பெயர்களும் மிகப் பிரசித்தம்: ராமன்—சீதை, பாரதத்தின் கடந்த பொற்காலம்—பாடலிபுத்திரம், இந்திரபிரஸ்தம், அயோத்யா, லாவண்யவதி, சிராவஸ்தி—திக்விஜயம் புரிந்த ராமச்சந்திரன், மிதிலை ராஜகுமாரி—ஜனகர் மகள் சீதை! அடேயப்பா! சரித்திரக்காரர்களே...!

"டின்னர் சாகப்! காபி கொண்டு வரட்டுமா?" சிப்பந்தி டிரேயைக் கொணர்ந்து எதிரே வைத்தான். சிரில்லைத் தெய்வத்தை அழைப்பதுபோல் பக்தி சிரத்தையோடு மெல்ல விளித்தான்.

சிரில் மறுபடியும் நிகழ்காலத்திற்கு வந்து சேர்ந்தான். தான் ஸ்ரீமங்கல் போய் சேரவேண்டுமென்பது நினைவுக்கு வந்தது. ரங்காமாடி, பந்தர்பன் நிலயங்கள் கடந்தன. அவனுக்குப் பணம் சம்பாதிக்க வேண்டும்.

மறுநாள் டிரெயின் சில்ஹட் வந்தடைந்தது. ஸ்டேஷனில் வழக்கம்போல் மானேஜர் பீட்டர் ஜாக்ஸன் காருடன் வந்து காத் திருந்தான். நகர்ப்புறம் கடந்து ஸ்ரீமங்கலுக்குச் சென்றார்கள். சர்மா நதிக்கரைக்கு வந்ததும் காரை நிறுத்தினான். அந்திப்பொழுதின் இருள் பரவியது. லாந்தலை ஏந்திக் கிழவர்களும் நடுத்தரங்களும், பெண்களும் தோணிகளில் ஏறிக் கொண்டார்கள்; சிலர் இறங்கிக் கொண்டிருந்தார்கள், மறு கரையிலிருந்து மோட்டார் போட் சத்த

மிட்டுக் கொண்டு வந்தது. ஒரு குருட்டுப் பக்கிரி குர்-ஆன் ஆயத்து களைப் பாடிப் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தான். மோட்டார் போட்டுடன் பலகைகளைக் கரைப்பக்கத்திற்கு இணைத்து, போட்டுக்குள் காரை கொணர்ந்தார்கள். தோணிகளில் பயணிகள் நிரம்பியிருந்தார்கள்.

"மிக மோசமான அழுக்குக் கூட்டம். நாம் வேறு தோணியில் போகலாம்" பீட்டர் சொன்னான். சிரில் மறுதலிக்கவில்லை. அவனே தோணியைப் போல் நீர் மேல் மிதந்து கொண்டிருக்கிறவன்.

இருவரும் ஒரு தோணியில் ஏறிக் கொண்டார்கள். மோட்டார் போட்டுக்குப் பின்னால் தோணி சென்றது. கரை பின் தங்கியது. அங்கே லாந்தல் விளக்குகள் மினுக்கிக் கொண்டிருந்தன. கொடிகள் படர்ந்த குடிசைகள் சிதறியிருந்தன. ஒரு டீக்கடைக்கு எதிரே லாந்தல் விளக்கில் சிலர் செய்தித்தாள் படித்தார்கள். நதியில் பல தோணிகள் மிதந்தன. தொலைவில் பாக்கு மரங்கள் அசைந்தாடுவது தெரிந்தது. எவ்வளவு அமைதி! அழியாத சாந்தி!

திடீரென்று பெருங்காற்று வீசியது. தோணி ஆட்டம் கண்டது. படகோட்டி படுகிழவன்; சிரமப்பட்டு துடுப்பு வலித்தான். தன்னை மறந்து பாடினான். சிரில் கவனித்தான். தான் செல்லும் தோணி அசைவதைக் கண்டான். எதிரே இருள் மூட்டம்; பேய்க்காற்று புயலாக வீசியது. கிழவன் மிக லாவகமாகத் துடுப்புப் போட்டான். பட்டினி கிடந்து வற்றிய உடல். ஐம்புலன்களின் கொடிய சோதனை, சாவு, ஆபத்து இவற்றோடு அக்கிழவனுக்கு வெகு நாளைய நட்பு.

காற்றின் வேகம் அதிகரிக்கவே, தோணி அடிக்கடி தத்தளிக்கவே, சிரில் பயந்து போனான்; லாந்தலைத் தூக்கிப் பிடித்துச் சுற்றிலும் பார்த்தான். "பீட்டர்! நாம் புயலில் சிக்கிக் கொண்டு விட்டோமோ?" கலவரத்துடன் கேட்டான்.

"இல்லை, இது சாதாரணக் காற்றுதான். கவலைப்படாதே!" பீட்டர் தைரியமூட்டினான். பிறகு, "அந்தக் கறுப்புப் பன்றியிடம் சொல்லேன்: மோசமாகப் பாடுவதை நிறுத்திவிட்டு, கவனமாகச் சுக்கானைக் கவனி என்று. இப்படியே போனால் காலையில்கூட மறுகரைக்குப் போய்ச் சேரமாட்டோம்."

"பாவம், கிழவன்." சிரில் தட்டி மறைப்பை விலக்கிவிட்டு மறுபக்கம் பார்த்தவாறு சொன்னான். படகோட்டி சிரில்லை ஏறிட்டுப் பார்த்தான். பொறுமையாக—நிதானமாகத் துடுப்புப் போடலானான்.

"இவன்கள் மோசமான மட்ட ஜனங்கள். இவர்களிடம் சுறுசுறுப்பு துளிக்கூடக் கிடையாது"—பீட்டர். சிரில் கீழே குனிந்து குரல் கொடுத்தான்: "கிழவரே! உன் பேர் என்ன?"

"அபுல் மன்ஷுர், சாகப்!"

"அபுல் மன்ஷுர்! நான் உனக்கு உதவி செய்யட்டுமா?"

"வேண்டாம் சாகப்!" பிறகு கிழவன் சுக்கான் பக்கம் குனிந்தான். இப்போது தோணி வேகமாகக் கரைப்பக்கம் முன்னேறியது. சிரில் தோணிக்குள் எட்டிப் பார்த்தான். அங்கே அபுல் மன்ஷுரின் சொத்துகள்—அகல் விளக்கு, பாய், தொழுகை விரிப்பு, இரு செப்புப் பாத்திரங்கள்—இருந்தன. சிரில் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். இது உண்மைதான், கேம்பிரிட்ஜ் சந்துகளில் சுற்றிக் கொண்டிருந்தவன் இப்போது இங்கே தோணியில் உட்கார்ந்திருக்கிறான். இதுவும் விதியின் லீலை. இந்த விசித்திரமான வனப்பு மிக்க பூமியில்—கிழக்கு வங்காளம் என்கிற இந்த நிலப்பகுதியில் கிழக்கு பாகிஸ்தானில்—விதி தன்னைக் கொணர்ந்து சேர்த்திருப்பதை எண்ணி அதிசயித்தான்.

லாந்தலை உயர்த்தி மறுபடியும் சுற்றுப் புறத்தைப் பார்த்தான். விளக்கொளி அலைகளினூடே பாதையாக நீண்டிருந்தது. திங்கள் மரக்கூட்டத்திலிருந்து மெல்ல வெளி வந்து கொண்டிருந்தது.

# 57

கடந்துபோன வருடங்கள் பீர் கிளாசில் நொப்பும் நுரையுமாகப் பொங்கும் குமிழிகளைப் போல் சஞ்சரித்தன. அரைமணி நேரம் கடந்தது. சிரில் மௌனமாக உட்கார்ந்து நீலவண்ணக் குன்றுகளை லயித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவற்றுக்கு அப்பால் இருந்தது பர்மா.

"என்னப்பா, என்ன யோசனை?" கமால் சுணக்கத்துடன் கேட்டான்.

"ஒன்றுமில்லை; பர்மாவுக்கு இங்கிருந்து கால்நடையாகவே போனால் எவ்வளவு தொலைவு இருக்கும் என்று யோசித்துக் கொண்டிருந்தேன்"—சிரில்.

"இதுதானா யோசனை?"

ஒரு தெருப்பொறுக்கி நாய் உள்ளே வந்தது.

"இதுவும் பர்மாவிலிருந்து வருகிறது."

"அல்லது பர்மா போக விரும்புகிறது." கமால் தரக்குறைவாகச் சொன்னான். நாய் வாலாட்டியது.

"ஹலோ! ஹலோ! இந்தா, பிஸ்கெட் சாப்பிடு!" சிரில் நாயை உபசரித்தான்.

"நண்பா! இது செஞ்சீனாவிலிருந்து தப்பி ஓடி வந்திருக்கிறது.

கம்யூனிஸ்ட் எதிரியான நாய் இது. சுதந்திரம் வேண்டி இங்கு வந்து சேர்ந்திருக்கிறது."

குனிந்தபடியே கமாலைப் பார்த்தான் சிரில். பிறகு, "கல்லூரி நாட்களில் பேசுவதுபோல் இருக்கிறது உன் பேச்சு" என்றான்.

"இப்போதுங் கூட... புகழ முடியாது". மேஜையில் தேனீர்த் தட்டு இருக்கிறது. கமால் ஒரு சாண்ட்விச்சை நாய்க்கு எதிரே போட்டான். "சிரில்! இப்போது என் நிலை வேறு. இஸ்லாமிய ஆட்சியில் விசுவாசம் உள்ளவனாகிவிட்டேன். இதோ பார், என் பாஸ்போர்ட்டை," பையிலிருந்து பச்சை நிறமான புதிய பாஸ் போர்ட்டை எடுத்துக் காட்டினான்.

"ரைலே பிரதர்ஸில் நான் உனக்கு இதைவிட நல்ல வேலை கிடைக்கச் செய்திருப்பேன். கர்னாபுலி மில்லுக்காக திட்டமிட வந்திருக்கிறாயா? இதற்காக இங்கே பலர் வந்துபோய்க் கொண்டிருக் கிறார்கள்."

"நானா! புல் செதுக்க வந்திருக்கிறேன்! உனக்கென்ன வந்தது? நீ வங்காளித் தொழிலாளிகளை வாட்டியெடுக்கத்தானே வந்திருக் கிறாய்? உன் வண்டவாளங்கள் ஊரறிந்தவை. நான்தான் காலம் காலமாக எஸ்கேபிஸ்ட், ரியாக்ஷனரி என்று பேரெடுத்திருக்கிறேனே."

கமாலுக்குத் தன்னுணர்வு முறைக்காய்ச்சலாக ஏற்படத் தொடங்கியிருக்கிறது. சிரில் வேதனையுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

சிரில் ஹாவர்ட் ஐஷ்லே நதிகள், மலைகள், காடுகள் யாவும் கடந்து நேற்றுக் காலைதான் இங்கு வந்து சேர்ந்தான். ஸ்ரீமங்கலத் திலிருந்து தொழில் சம்பந்தமாக சட்காம் வந்திருக்கிறான். சட்காமி லிருந்து அவனுடைய தேயிலை பெருவாரியாக ஏற்றுமதியாகிறது. இங்கும் சிரில்லுக்கு மன அமைதி கிட்டவில்லை. மானேஜர் பீட்டரிடம் பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டு, மலைப்பிராந்தி யத்தில் சுற்றித்திரியப் புறப்பட்டான். ராங்காமாடி தபால் நிலையத்தி லிருந்து, அண்ணனுக்குத் தன் கீழ்ப்படிந்த தன்மைக்கேற்ப 'நலம், நலமறிய அவா' முறையில் கடிதமெழுதி அனுப்பிவைத்தான். கடிதத்தில், சில்ஹட், சட்காம் பகுதிகளின் இயற்கையழகை வர்ணித் திருந்தான்; அடுத்த கிறிஸ்துமஸ் பண்டிகையை இங்கேயே சில்ஹட்டில் நாம் சேர்ந்து கொண்டாடலாமென்று விருப்பம் தெரி வித்திருந்தான்.

சிரில் ரோஸ்மேரியுடன் விவாகரத்து செய்துகொண்டு விட்டதை (இதற்கான உண்மைக் காரணம் யாருக்கும் தெரியாது) அறிந்த அண்ணன் லார்டு பார்ன்ஃபீல்டின் மனப்பளு இறங்கியது. திசைமாறி, சறுக்கிச் சரிந்தாலும், தன் தம்பி தம் பெருங்குடிமைக்கு ஏற்பத் திருந்திவிட்டான் என்பதில் அவருக்கு அபரிமிதமான மகிழ்ச்சி.

இப்படித் திருந்துவான் என்றும் அவர் எதிர்பார்த்ததுதான். லார்ட் அவர்கள் பெருமளவில் தொழில் அபிவிருத்தி செய்ய கிழக்குப் பாகிஸ்தானத்தில் நிறைய முதலீடு செய்திருந்தார். அங்கு அவருக்கு நிறைய தேயிலைத் தோட்டங்கள் இருந்தன. சிரில் கேம்பிரிட்ஜில் படித்துத் தேறி வந்தபின், வேலைக்காக லண்டனில் அலைந்து கொண்டிருந்தான். ஒரு நாள், லார்ட் அவர்கள் தம்பியைத் தம் கிளப்பிற்கு வரவழைத்து, எந்தவித முன்னுரையுமில்லாமல், "நான் உன்னைப் பாகிஸ்தானுக்கு அனுப்பப்போகிறேன்" என்றார்.

அதே தோரணையில் சிரில்லும், "மிக நல்லது" என்று கூறி ஏற்றுக்கொண்டான். இனி அவனுக்கு வாழ்க்கையில் சச்சரவு—எதிர்ப்பு என்று போராடத் திராணி கிடையாது.

கடந்த ஆறுமாத காலமாக அவன் பாகிஸ்தானில் இருந்து வருகிறான். லண்டனை விட்டுப் பிரிவதில் விசனமேதும் இல்லை. கௌதம நீலாம்பர், ஹரிசங்கர், கமால், மைக்கேல், சுரேகா என்று தெரிந்தவர் யாவரும் லண்டனை விட்டுக் கிளம்பி விட்டார்கள்.

இப்போது சிரில் துரை ஸ்ரீமங்கலில் மிக நேர்த்தியான பங்களாவில் வசித்து வந்தான். சிறிது ஓய்வு கிடைத்தாலும் வெளியிடங் களுக்குச் சுற்றுலா புறப்பட்டு விடுகிறான். கல்கத்தா, டாக்கா, புராதன கட்டிடங்கள், கோட்டை கொத்தளங்கள், இடிபாடுகள் என்று பலவும் அவனைக் கதை கேட்க அழைக்கின்றன.

நேற்று சாயந்திரம் ஒரு பகோடா தோட்டத்தில் ஒரு மணி நேரம் அமைதியாக உட்கார்ந்திருந்து விட்டு சர்க்கியூட் ஹவுஸிற்கு வந்தான். அங்கே ஒரு வாலிபன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவன் குனிந்து கர்னாபலி நதியைப் பார்த்துக் கொண்டிருந்தான். காலடியோசை கேட்டதும் வாலிபன் திரும்பிப் பார்த்தான். அவன் தான் கமால் ரஸா.

கமால் தன் கதையையெல்லாம் சிரில்லுக்குத் தெரிவித்தான். இப்போது, அரசாங்கத்தின் சார்பில் ஒரு லாபரெட்டரி நிறுவ, கராச்சியிலிருந்து இங்கு வந்திருப்பதையும் தெரிவித்தான்.

இருவரும் வெளிக்கூடத்தில் அமர்ந்திருந்தார்கள்; வாழ்வின் துயரங்கள் நினைவுகளாக வந்து அவர்களை வருத்தின. மாலைப் பொழுது மறைந்தது. பணியாட்கள் விளக்குகளை ஏற்றி வைத்தார்கள்.

சில நாட்களுக்கு முன்புதான் 'கேடா' (யானை வேட்டை) நடந்தது. பக்கத்து அறையில் யானைகளை வாங்கும் ஏஜெண்ட்—ஆங்கிலோ இந்தியன் தங்கியிருந்தான். குடித்த பிறகு, அவன் வேதாந்த தத்துவங்களாகவே சொற்பொழிவு செய்பவன்.

இரவு, மேற்கு பாகிஸ்தானிலிருந்து வாலிபர்களான சிவிலியன் ஆபீஸர்களின் கூட்டம் வந்து சேர்ந்தது. ஒரே கலகலப்பு. கமாலுடன் நல்ல வாக்குவாதம். சாப்பாட்டு மேஜையில் கிழக்கு வங்கத்தின்

பிரச்சினைகள் குறித்துப் பேசிக் கொண்டார்கள்.

"கல்கத்தா கம்யூனிஸ்ட் பார்ட்டியிடமிருந்து இங்கே நிறையப் பணம் வருகிறது"—சிலர் சொன்னார்கள். "வங்காளத்தின் பிரச் சினையே மிகச் சிக்கல்" கூட்டத்தில் ஒருவன் தெரிவித்தான்.

கமால் அவர்களை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். சாப்பாடு முடிந்ததும் அவர்கள் தம் அறைகளுக்குப் போய்விட்டார்கள். சிரில்லும் கமாலும் தனியாகப் பின்கட்டில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். இரவு அமைதியாக இருந்தது. நதியின் திருப்பத்தில் உள்ள குன்றின் மீது பவர் ஹவுஸ் இருந்தது. இரவில் அதன் இயக்கக் குரல் தனியோசையாகக் கேட்டது. அதன் பக்கத்தில் மூங்கில் கழிகள்—பிளாச்சுகள் கொண்டு கட்டிய திரைப்படக் கூடத்தில் அப்போது 'பைஜு பாவ்ரா' ஓடிக்கொண்டிருந்தது. அதில் வரும் லதா மங்கேஷ்கரின் இனிய பாடல் நதி வெள்ளத்தில் நீந்தி சர்க்கியூட் ஹவுஸை எட்டியது. கமால் அதை ரசித்துக் கொண்டிருந்தான். 'லதாவின் தேமதுர இனிய குரல் இரு விரோதி நாடுகளை இணைக்கும் மகத்தான பாலம்!' கமால் எண்ணமிட்டான்.

"நீ லதாவின் பாடல்களைக் கேட்டிருக்கிறாயோ?" கமால் சிரில்லிடம் உரக்கவே கேட்டான்.

"லதா என்பது யார்?" சிரில் கேட்டான்.

கமால் சலித்துக் கொண்டான். பணியாள் காபி டிரேயுடன் வந்து நின்றான். அந்தப் பணியாளனுடன் கமால் பேச்சுக் கொடுத்து ஒட்டுறவை வளர்த்துக் கொண்டிருந்தான். இருவரும் பல விஷயங்கள் குறித்துப் பேசியிருக்கிறார்கள்.

"பெரியவரே! என்ன சமாசாரம்? சொல்லுங்கள்!" கமால் உற்சாகப்படுத்தினான்.

"ஐயா தயவு! நீங்களெல்லாம் வந்திருக்கிறதே தனிப்பொலிவாகத் தான் இருக்கிறது. இல்லாதுபோனால் இந்தக் காட்டுப்புறத்திலே என்னங்க கவர்ச்சி இருக்கிறது?"—குனிந்து காபி கலந்தான் கிழவன்.

கவர்னர் ஜெனரல் இஸ்கந்தர் மிர்ஜாவின் குழுவினர் 'கேடா' வேட்டையை முடித்துக் கொண்டு, பந்தர்பன் வழியாகத் திரும்பிக் கராச்சி போய்ச் சேர்ந்துவிட்டனர். அவர்களுக்காகவே இந்த சர்க்கியூட் ஹவுஸ் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. பாகிஸ்தானத்துக் கவர்னர் ஜெனரலின் ஆடம்பர வைபவத்தைக் கண்ட முதிய சிப்பந்திகளுக்கு வங்காளத்துக் கவர்னர் சர் ஃப்ரடெரிக்கின் ஞாபகம் வந்ததில் வியப்பில்லை. அவரும் இங்கு யானை வேட்டைக்கு வரும் போது, இதே போலத்தான் காடெல்லாம் விழாக்கோலம் பூணும். நிறையப் பக்ஷீஷ் கிடைக்கும்.

"போன வாரமெல்லாம் இங்கே கோலாகலமாக இருந்திருக்கும்" கமால் பேச்சுக் கொடுத்தான்.

"நீங்கள் அப்போது வந்து பார்த்திருக்க வேண்டும்... வெகு தூரத்திலிருந்தெல்லாம் துரைமார்கள் வருவார்கள். இப்போது ஒரு சந்தோஷம் என்னவென்றால், பெரிய லார்டு துரைக்குப் பதிலாக இப்போது முஸல்மான் கனவான் வருகிறார். ஆடம்பரம்—சொகுசு களிலே வெள்ளைக்காரருக்குக் குறைந்தவரில்லை. இதைக்கண்டு மற்றவர்கள் வயிற்றெரிச்சல் படுகிறார்கள்."

"யார் வயிற்றெரிச்சல் படுவது."

"அதையேன் கேட்கிறீர்கள், எஜமான்!" பணியாள் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு, "இங்கே பயங்கர ஆசாமிகளெல்லாம் இருக்கிறார்கள்" என்றான்.

"இங்கே எங்கே?" சிரில்லுக்கு அந்தக் காட்டுப் பிரதேசத்தில் கம்யூனிஸ்டு பயங்கரவாதிகளின் கொரில்லாக் கூட்டம் பதுங்கி யிருப்பதுபோல் தோன்றியது. சர்க்கியூட் ஹவுஸைச் சூழ்ந்துகொண்டு தாக்கப்போகிறார்கள் என்கிற திகிலும் எழுந்தது. "சரி நான் இதில் அமரனாகிவிட வேண்டியதுதான்..."

சிரில் உடை மாற்றிக் கொள்ளச் சென்றான். பணியாள் காபி பாத்திரங்களை எடுத்துச் சென்றதும், அமைதி திரும்பியது. சிறிது நேரமானதும் ஒரு அமெரிக்கன் கமால் எதிரே வந்து உட்கார்ந்தான். இருவரும் நலம் விசாரித்துக் கொண்டார்கள். அறிமுகம் செய்து கொண்டான் அமெரிக்கன். 'நான் டைடஸ் ஃப்ரேஜர் ஜூனியர். 'ஜானி' என்று கூப்பிடலாம்.'

"ஹலோ, ஜானி! இங்கே வந்த காரியம்?" இதைக் கேட்ட பிறகுதான், அனாவசியமான கேள்வியைக் கேட்டிருக்கிறோமென்று கமாலுக்குத் தோன்றியது.

"இங்குள்ள சக்மா ஆதிவாசிகளை வைத்து ஒரு டாக்கு மெண்டரிப் படம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்."

"ஓ ஹவ் எக்ஸைட்டிங்!" கமால் கால்களை விரித்து சோம்பல் முறித்தான்; "சிகரெட்?"

"தாங்கஸ்!"

மறுகணம் ஜானியும் சூழ்நிலையின் இறுக்கத்தில் தன்னை மறந்தான். நதிப்பெருக்கைப் பார்த்துக் கொண்டிருந்தான். தோணிகள் மிதந்தன. ஓடப்பாட்டு கவர்ச்சியாக இருந்தது.

ஜானி ஒட்டுறவுடன் பேசிக் கொண்டிருந்தான். கமால் 'உம்' கொட்டினான். சிரில் கமாலின் சங்கடத்தைக் கண்டு, வேறிடத்தில் போய் உட்கார்ந்தான். அவன் எதிரேயும் நதி கம்பீரமாக ஓடிக் கொண்டிருந்தது. இருள் அடர்ந்திருந்தது.

மேலும் இரு அமெரிக்கர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். இருவரும் அமெரிக்கத் தூதரகத்தைச் சேர்ந்தவர்கள். டாக்காவில் இருப்பவர்கள். ஜானியுடன் ராங்காமாடி வந்திருக்கிறார்கள். படப்

பிடிப்புக்கான லொகேஷனைத் தேர்ந்தெடுக்க சக்மா கிராமங்களில் திரிந்தார்கள். ஜானி கமாலிடம் புதுத் தகவலைச் சொன்னான்.

"செஞ்சீனா இங்கிருந்து மிகச் சமீபம். இந்த மலைகளைத் தாண்டினால் போதும். உனக்குத் தெரியுமா?"

சர்க்கியூட் ஹவுஸ் பணியாள் வந்து குளிக்க வென்னீர் தயாராக இருப்பதாகத் தெரிவித்ததும், அமெரிக்கர்கள் பேசிக்கொண்டே எழுந்து போனார்கள்.

சிரில் எட்டிப் பார்த்தான். "உன் நண்பர்கள் விடை பெற்று விட்டார்களா?" என்று கேட்டான்.

"இடம் காலி, வந்து சேர்."

சிரில் வந்து சாய்வு நாற்காலியில் அமர்ந்தான். பழையபடியே இருவரும் தத்தம் சிந்தனைகளில் ஒன்றினார்கள்.

கமாலும் சிரில்லும் ஐந்தாறு நாட்கள் அங்கே தங்கியிருந்தார்கள். சர்க்கியூட் ஹவுஸிற்குக் கீழே கர்னாபலி நதியில் மரக்கட்டைகளை மிதக்கவிட்டு சந்திரகோனா துறைமுகத்திற்குக் கொண்டு சென்றார்கள். சற்றுத் தொலைவில் டெபுடிக் கமிஷனரின் பங்களா இருந்தது. வளைந்து செல்லும் மலைப்பாதையில் மங்கோலியரைப்போன்ற மலைவாசிகள் முதுகில் சுமை தூக்கிக் கொண்டு நடந்தார்கள். அரசாங்க ஜீப்கள் விரைந்தன. காலையிலும் மாலையிலும் கோவில் களில் மணியோசைகள் ஒலித்தன. சந்தை கூடியது. நீண்ட பைப்பு களைப் புகைத்துக் கொண்டு மலர்ந்த முகத்துடன் மலைசாதிப் பெண்டுகள் கடை விரித்திருந்தார்கள். இந்து, முஸல்மான், பௌத்தர் எல்லாருமே அமைதியாக மகிழ்ச்சியுடன் தத்தம் காரியங்களில் ஈடுபட்டிருந்தார்கள். அன்னாசித் தோட்டங்களில் பழங்கள் பறித்துக் கொண்டிருந்தார்கள். கழனிகளில் பயிர்த்தொழில் நடந்தது—நடவுக் காலம். அடர்ந்த காடுகளிலிருந்து மூங்கில்களை வெட்டிக் கொண்டு வந்தார்கள். காட்டின் ஒற்றையடிப் பாதையில் லுங்கி உடுத்திய கிழவன் மூங்கில் சுமை தூக்கிக் கொண்டு செல்வதைக் கமால் பார்த்தான். மூங்கில் கட்டை விற்றுக் காசாக்குவான். இதுதான் அவனுக்குப் பிழைப்பு. பரம்பரை பரம்பரையாகச் செய்து வருகிற தொழில் இது. அழகான, அமைதி நிறைந்த இந்தப் பிராந்தியம் காட்டுப்புறம் என்று உதாசீனப்படுத்தப்படுகிறது. இங்குள்ளவர்கள் காட்டு மிராண்டிகளாம்! மலைசாதிப் பெண்கள் விறகுப் பொதியும் தண்ணீர்க்குடமும் தாங்கிச் செல்கிறார்கள். யாரோ பௌத்த பிக்கு துவராடையுடன் தனித்துச் செல்வது தெரிகிறது. பந்தர்வன் சென்று கமாலும் சிரில்லும் மோகராஜாவைச் சந்தித்தார்கள்; அவருடைய காட்டு மாளிகையைப் பார்த்தார்கள்; யானைகள் நிறைந்த கான கத்தைச் சுற்றிப் பார்த்தார்கள்.

"அஸ்ஸாமில் இந்த ஆண்டு பெருவெள்ளம் வந்ததால், எண்ணற்ற

யானைகள் அஸ்ஸாம் காடுகளிலிருந்து இங்கு வந்து சேர்ந்துவிட்டன. இந்தக் காடுகளின் எல்லையைக் கடப்பது மிகச் சிரமம்." காட்டிலாக்கா அதிகாரி ஒருவர் கமாலுக்கு விளக்கினார்.

"அப்படியானால் பாகிஸ்தானி யானைகளை வேட்டையாடும் போது, அகதிகளாக மற்ற யானைகளையும் எதிர்கொள்ள வேண்டியிருக்கும்?" கமால் சீரியஸாகச் சொன்னான். அவர்கள் பந்தர்பன் பகுதிகளைச் சுற்றிப் பார்த்தார்கள். அழகிய மிருகங்கள் ஓடித் திரிந்தன. சிறுத்தைகளும், கலைமான்களும், கவரிமான்களும் தென்பட்டன. ஆஹா! இது எவ்வளவு தூய்மையான உலகம்!

ஒரு நாள் மாலையில் ராங்காமாடியிலிருந்து கர்னாபுலிக்கு அப்பால் ராஜ்பாடிக்கு வந்து சேர்ந்தார்கள். அங்குதான் சக்மா இனத்தாரின் ராஜா இருந்தான். இங்கு சுதேசி சமஸ்தானங்களின் இறுதியான ஜீவித நிலைமையைக் கவர்ச்சிகரமாகக் கண்டான் கமால். தோட்டத்தில் பீரங்கிகள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு கோவில் இருந்தது. மாமரங்களில் அந்திப்பொழுதில் குயில்கள் களைப்புடன் கூவுவது கேட்டது. எதிரே சாதாரண மாளிகையில் பல்புகள் மங்கி எரிந்தன. காரணம், ராங்காமாடியின் பவர் ஹவுஸ் மிக சாதாரண மானது.

ஹாலில் ராஜாவின் முன்னோர்களுடைய தைலசித்திரங்கள் தொங்கின. "இவற்றுடன் வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் கவர்னர் களாக இருந்த முஸ்லிம் கனவான்களின் படங்களும் இடம் பெற்றிருந்தன." சிரில் வரலாற்றுக் குறிப்பைச் சான்றுடன் எடுத்துச் சொன்னான். இதை அவன் அறிந்தது கரையான் அரித்த ஒரு புத்தகத்தில், சர்க்கியூட் ஹவுஸின் கூடத்தில் கிடந்தது அது. "இந்தக் காட்டு ராஜா மதத்தால் இந்துவும் பௌத்தரும் கலந்தவர். சாதியால் பிராம்மணர், பிறகு மொகல், பிறகு மங்கோலியர். இந்திய வரலாற்றின் இப் புதிரான மாயாஜாலம் என்னைக் கலங்கடித்துவிட்டது. உங்கள் தேசத்தில் இவ்வளவு சரித்திரக் குவியல்கள் ஏன்தான் குவிந்தனவோ?" சலிப்பும் சினமுமாகக் கமாலைப் பார்த்துக் கேட்டான் சிரில்.

இங்கிலாந்தில் படித்துவிட்டுத் திரும்பிய வாலிபரான ராஜாவும் அவர் அன்னையாரும் விருந்தினர் இருவரையும் வரவேற்றார்கள். டிராயிங் ரூமில் பியானோவுக்கு மேலே பிரபல இந்திய நடன நங்கையும் திரையுலக நட்சத்திரமுமான பேரழகியின் படம் இடம் பெற்றிருந்தது. இவள் ராஜமாதாவின் தங்கையாம். கடந்த நூற்றாண்டில் புகழ்பெற்றிருந்த பிரும்ம ஸமாஜத் தலைவர்களான கேசவ சந்திரசேனும், ஜி.என். தத்தும் ஓவியமாக வீற்றிருந்தார்கள். ராஜமாதா (இப்போதைய அரசரின் அன்னையார்) ஜி.என்.தத்தின் கொள்ளுப்பேத்தி, டாக்டர் மனோரஞ்ஜன் தத்தின் பேத்தி.

"நான் ஜி.என்.தத் அவர்களின் வாழ்க்கை சரிதம் படித்திருக்

கிறேன்” சிரில் மெல்லச் சொன்னான்.

“பாகிஸ்தானிலிருந்து வருகிறீர்களா?” ராஜமாதா கேட்டாள். கமால் ஒரு கணம் தடுமாறிப் போனான். இதுவும் பாகிஸ்தான் தானே? இந்த சமஸ்தானம் எந்தத் தேசத்துடன் சேர்ந்தது?

ராஜா நல்ல அழகன். ஆக்ஸ்போர்டு ஸ்டைலில் சிரில்லுடன் பேசினான்: “அரசாங்கம் கர்னாபுலியில் அணைகட்டி, இந்த மாகாணத்திலுள்ள தொழிற்சாலைகளுக்காக இங்கே ஹைட்ரோ எலெக்ட்ரிக் ஸ்டேஷன் அமைக்கப் போகிறது. என் இனத்துக் குடி மக்களுடைய நிலங்களெல்லாம் நீரில் மூழ்கிவிடும். அரசாங்கம் அவர்களுக்கு இழப்பீடு கொடுத்து, வேறிடத்தில் குடியமர்த்தும். என் வீடு—வெளியெல்லாம்—ராங்காமாடி முழுவதுமே நீர்த்தேக்கத்துள் மூழ்கிவிடும்.”

“மாறுதல் இல்லாமல் முன்னேற்றம் காணமுடியாது” கமால் மெல்லச் சொன்னான்.

ராஜமாதா கல்கத்தா பற்றிப் பேசினார். பழைய தகவல்கள். தம்முடைய கொள்ளுப்பாட்டன் பிரபல பிரும்ம சமாஜியார் பாபு ஜி.என். தத் அவர்களின் மாளிகை ‘தத் ஹவு’ஸ்ஸை கமாலின் தாய் வழிக்கொள்ளுப்பாட்டன் மடியா புர்ஜ் நவாப் அலி ரஸா பஹதூர் போன நூற்றாண்டிலேயே விலைக்கு வாங்கியதைக் குறிப்பிட்டார். பேச்சு முடிந்ததும், சிரில்லும் கமாலும் விடை பெற்றார்கள். ராஜாவும் ராஜமாதாவும் வாசல்வரைக்கும் வந்து வழியனுப்பி வைத்தார்கள்.

இருவரும் வெளியே வந்தார்கள். அரண்மனைப் பகுதியில் வெளிச்சங்கள் மினுக்கின. நதித்துறையில் படகுகளின் போக்குவரத்து குறைந்திருந்தது. இரவு பனிப்பொழிவால் நனைந்து குளிர் கண்டது. மறுநாள் விடிகாலையில் சிரில்லும் கமாலும் ராங்காமாடிக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு, சமதரைப் பகுதிக்கு வந்து சேர்ந்தார்கள். சட்காமில் ரயிலேறி சீதாகுண்ட் வந்து சேர்ந்தார்கள். இருவரும் இறங்கி நடந்தபோது மாலைப்பொழுது மறைந்து கொண்டிருந்தது.

“நாங்கள் சீதாதேவி ஆலயத்திற்குப் போக விரும்புகிறோம்” கமால் ஒரு ஆளிடம் தெரிவித்தான்.

“இந்த நேரம் போகவேண்டாம். மலையேற்றப் பாதை உயரத்தில் செங்குத்தாகப் போக வேண்டும்; மிக ஆபத்து. திரும்பி வருவதற்குள் இருட்டிவிடும்.” ஸ்டேஷன் மாஸ்டர் எச்சரித்தார். இதற்குள் பத்துப் பதினைந்து பேர்கள் குழுமினார்கள். இதொரு தனிக் குடும்பமாகியது. ரயில் நிலையச் சிப்பந்திகள், போலீஸ் சேவகர்கள், சாயாக்கடைக் காரன், கிராமத்தார், துறவிகள், பூசாரிகள். இந்த அமைதியான வட்டாரத்தில் இந்தப் புதிய மனிதர்கள் எங்கிருந்து வந்தார்கள்?

குடியிருப்புப் பகுதியில் செய்தி பரவியது. வசதி படைத்த இரு

யாத்திரிகர்கள் வந்திருக்கிறார்கள்; ஒருவர் வெள்ளைக்காரர். அங்கு ஒரு பல்லக்கு வந்து சேர்ந்தது. அதன் திரையை விலக்கிக் கொண்டு ஒரு பெண் வெளியே வந்தாள். இருவரையும் வியப்போடு பார்த்தாள். சிரில் பல்லக்கை மலங்க மலங்கப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இவர்கள் எங்கள் பெரிய மவுலியாரின் மகள். புக்ககம் போகிறார்கள்" பல்லக்குத் தூக்கிகளில் ஒருவன் தெரிவித்தான்.

போலீஸ்காரன் முன் வந்தான்: "நான் உங்களைக் கிராமத்திலே கொண்டு விடுகிறேன், வாருங்கள்!" சிரிலும் கமாலும் பின் தொடர்ந்தார்கள். வழியில் அரசியல் பேச்சு வந்தது—விலைவாசி ஏற்றம், முஸ்லீம் லீக்கின் கொள்கை, செயற்கையான பஞ்சம், அவாமி லீக், எ.கே.ஃபஸ்லுல் ஹக்—எல்லாமே அடிபட்டன. இந்த வட்டாரத்தில் சிறுபிள்ளைகூட அரசியல் பிரக்ஞை கொண்டிருக்கிறான். கிராமத்துச் சிறிய கடைவீதியைக் கடக்கும்போது, ஒரு சிறுவன் கமாலைத் தொடர்ந்தான். அவன் கான்ஸ்டபிளிடம் வட்டார மொழியில் ஏதோ சொன்னான். போலீஸ்காரன் சொன்னான்: "இவன் பெயர் பிரபுல்லா. உங்களைச் சீதாகுண்டம் வரைக்கும் அழைத்துப் போவான்."

"ஹலோ, பிரபுல்லா!" சிரில் சிறுவனுடன் கைகுலுக்கினான்.

"பள்ளிக்கூடம் போகிறாயா,"

"இல்லை, சார்! வயல் வேலை செய்கிறேன்."

"சௌகரியமாக இருக்கிறாயா,"

"சௌகரியமாக இல்லாமல் என்ன?" பிரபுல்லா புரியாமல் திகைத்தான். கமால் வாயடைத்துப் போனான்.

கடைத்தெருவில் தண்ணீர் தெளித்திருந்தார்கள். சிறு கடைகளுக்கெதிரே ஜனங்கள் குழுமியிருந்தார்கள். கூட்டத்தினர் புதிய யாத்திரிகர் இருவரையும் அக்கறையோடு பார்த்தார்கள். கமால் ஒரு டீக்கடைக்கெதிரே நின்றான். மூங்கில் தட்டியால் உருவான டீக்கடை துப்புரவாக இருந்தது. சிலர் போர்வை போர்த்தியவாறு உட்கார்ந்திருந்தார்கள். வங்காளிப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார்கள். மூலையில் கிராமஃபோன் ஒலித்தது. சுவர்களில் கல்கத்தாவில் உருவான வங்காளி திரைப்படங்களின் விளம்பரங்கள் இடம் பெற்றிருந்தன.

சிலர் தம் வீட்டிலிருந்து பழங்களுடன் வந்து புது விருந்தினரை உபசரித்தார்கள். "நீங்கள் வெகு தூரத்திலிருந்து எங்கள் ஊருக்கு வந்திருக்கிறீர்கள். உங்களை உபசரிப்பது எங்கள் கடமை." தாடி வைத்திருந்த முதிய முஸ்லீம் ஒருவர் சொன்னார்.

கமால் வியப்புடன் இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான். இந்த எளிய மக்கள் தானே நோவாகாலி (நவகாளி)யிலும், பீஹாரிலும் ஒருவரையொருவர் கொன்று குவித்தார்கள்..!

பிரபுல்லாவின் தலைமையில் மலைபபாதையில நடக்க லானார்கள். வழியில் அழகிய குடில்கள். பசுமை கொழிக்கும் சிறு சோலைகள். சரஸ்வதி பூஜைக்கான ஏற்பாடுகள் நடந்து கொண் டிருந்தன. வீடுகளுக்கெதிரே புல்தரையில் கலைமகள் தேவியின் வனப்பான சிறு பொம்மைகள் வைக்கப்பட்டிருந்தன. மண் வினைஞர் வடிவமைத்து உருவாக்கியவை; உலர வைத்திருந்தார்கள். கமால் ஒரு பதுமைக்கெதிரே பவ்வியமாக அமர்ந்துகொண்டான். சிரில்லும் அப்படியே உட்கார்ந்து கொண்டான். “உன் கிராமத்துக் குயவர்கள் தேர்ந்த கலைஞர்களப்பா!” ஒரு சரஸ்வதி பொம்மையை ரசித்துப் பார்த்துக் கொண்டே சிரில் சொன்னான்.

கமால் செருக்குடன் ஆமோதித்தான்.

எல்லாரும் மூங்கில் காட்டினூடே கோவில் குன்றத்தை நோக்கிச் சென்றார்கள். எதிரே சிவப்புக் கற்களாலான படித்துறையுடன் ஒரு குளம் தென்பட்டது. படித்துறையில் ஆலமரக் கிளைகள் கவிந் திருந்தன. அமைதி பரவிய சூழல். குளத்தை வலம் வந்து சிறு சோலைக்குள் நுழைந்தார்கள். கிராமத்துச் சிறுமிகள் ஏரிக்கரையில் உட்கார்ந்திருந்தார்கள். குடிசைகள் மீது சுரைக்கொடிகள் படர்ந் திருந்தன. மஞ்சள் வண்ண மலர்கள் பூத்திருந்தன. மரங்கள் நறுமணம் பரப்பின.

“நண்பா! இது ஏதோவொரு முற்போக்கான வங்காளி பிலிமிற்கான வெளிப்புறக் காட்சிபோல் இருக்கிறதப்பா. கிழக்கு வங்காளத்துக் கிராமங்களைவிட வனபபு மிக்க இயற்கைக் காட்சிகளைக் கொண்ட இடங்கள் வேறெங்கே கிடைக்கும்?” கமால் பெருமிதத்துடன் சொல்லிக் கொண்டான்.

குன்றத்தின் படியேற்றத்திற்கு வந்து சேர்ந்தார்கள். இரு மருங்குகளிலும் அடர்ந்த காடுகள். இருண்ட குகைகள், பள்ளங்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன்பு கட்டி வைத்த சிறு சிறு மடங்கள் புதர்களுக்கிடையே மறைந்து கிடந்தன. பழுப்பேறிய ஆலயங்கள் பயங்கரமாகக் காட்சியளித்தன. பூட்டப்பட்டிருந்த அறைகளுள் முன்னாள் மகந்துகளின் சமாதிகள் இருந்தன. அழுத்தமான அமைதி. ஆயிரக்கணக்கிலிருந்த மொக்கை—மொள்ளையான படிக்கட்டுகள் வளைந்து திரும்பி மலை உச்சி வரைக்கும் வழி தந்தன. அங்குதான் கந்தகக் குண்டத்தில் தீ கனன்று கொண்டிருந்தது.

“சீதாதேவியை ராவணன் இலங்கையிலிருந்து எடுத்து வந்து இங்கே வைத்திருந்தான்”. பிரபுல்லா சிரத்தையும் நம்பிக்கையும் ததும்ப, நேற்று நிகழ்ந்ததைத் தெரிவிப்பதைப்போல் அறிவித்தான். சில சாதுக்கள் கோவில் பக்கம் தென்பட்டார்கள். சிரில் மேலே ஏறி ஒரு மரத்தில் சாய்ந்து நின்றான்.

இருள் இறுகுகிறது. உடைந்த அரைகுறைப் படிக்கட்டுகளைக்

கழுவியவாறு நீர் வீழ்ச்சி விழுந்தது. மாலைப்பொழுதின் இறுதியில், புள்ளினங்களின் சிலம்பல்கள், இலைகளின் சலசலப்பு, நீர் வீழ்ச்சியின் ஓசை, தீக்குண்டத்தின் ஒலி, பூசாரிகளின் மந்திரவொலிகள் எல்லாம் கலந்து தொனித்தன.

சூரியன் மறைந்துவிட்டான்.

"நாம் திரும்பலாம். பத்து மணிக்கு டிரெயினைப் பிடிக்க வேண்டும்" கமால் நினைவுபடுத்தினான்.

பலரும் கீழே இறங்கலானார்கள்.

கிராமத்து டீக்கடையில் சிரில்லையும் கமாலையும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் வந்ததும் பிஸ்கெட்டும் டீயும் பரிமாறினார்கள். கிராமத்தார்கள் மதிப்பும் பயமும் கலந்து பழகினார்கள்.

இருவரும் வெளியே வந்தார்கள். ஸ்டேஷன் வரைக்கும் பலர் உடன் வந்தார்கள். பிரபுல்லா பழகிய நண்பன் போல் கூடவே வந்தான். கிராமத்துப் பிள்ளைகள் இனாம் கேட்காமலேயே சூழ்ந்து வந்தார்கள். பிரபுல்லாவும் கொடுத்த இனாமை ஏற்க மறுத்து விட்டான். இனாம் கொடுத்தது பிரபுல்லாவின் மனத்தை வருத்தி விட்டது போல் தோன்றியது கமாலுக்கு.

"நான் பிச்சைக்கார உலகில் இருக்கும் பெரிய பிச்சைக்காரன். யாராவது நான் தரும் பிச்சையை மறுதலித்தால், ஆச்சரியப்படாமல் இருக்க முடியுமா?" கமால் கேட்டான்.

"நியாயம்தான்"

டிரெயின் வந்தது. அவர்கள் சட்காம் திரும்பி வந்தார்கள். அங்கு பிரகாசமான கிளப்பின் பார் ரூமில் பீட்டர் ஜாக்ஸன் அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

"சீதாகுண்டம் போய்விட்டு வருகிறீர்களா?" பீட்டரின் முகம் கடுகடுத்தது. "நல்லகாலம்! அந்த இடத்திலே பாம்புகளும், சிறுத்தை களும், தேள்—நட்டுவாக்கிளிகளும் அதிகம். பகல் வேளையிலேயே துப்பாக்கியும் கையுமாகத்தான் அங்கே போவார்கள்."

"அங்கே ஜனங்கள் வசிக்கிறார்களே?" கமால் கேட்டான்.

"அங்கேதான் தினமும் பாம்புக்கடி—தேள் கடியென்று சாகிறார் களே. அவர்களுக்கென்ன? காட்டு ஜனங்கள்தானே?"

மறுநாள் அவர்கள் சில்ஹட்டிற்குக் கிளம்பினார்கள். ஒவ்வொரு இடத்திலும் பழைய கோயில்கள், மடங்கள், மசூதிகள், தர்க்காக்கள் என்று தென்பட்டுக் கொண்டிருந்தன. சிரில் அவற்றைப் பற்றிச் சிறந்த தொல்பொருள் ஆராய்ச்சி நிபுணனைப் போல் கமாலுக்கு விளக்கம் கூறி வந்தான்.

"நீ எப்போதிருந்து ஆர்க்கியாலஜி நிபுணனாகியிருக்கிறாய்?"— பொறுக்க முடியாமல் ஒருநாள் கமால் படகில் போகும்போது

கேட்டே விட்டான்.

சிரில் மோட்டார் படகின் கைப்பிடிக் கம்பி மீது சாய்ந்து கொண்டு, நதி வெள்ளத்தைக் கவனித்தவாறு பதில் சொன்னான்: "நான் இந்த முடிவுக்கு வந்துவிட்டேன்: என்னிடத்தில் கடந்த காலம் தான் நல்லபடியாக எஞ்சியிருப்பது. இதை யாரும் சீர்குலைக்கவும் முடியாது; இது காலத்தின் பிடிப்பிற்கும் அப்பாற்பட்டது. நானே ஒரு கடந்த காலம்தான். உன்னைப் போலவே இந்தியாவிலும் பாகிஸ்தானிலுமுள்ள இந்தப் பழைய கட்டிடங்கள், இடிபாடுகள் தான் எனக்கு உற்ற நண்பர்கள். நான் இவற்றின் மொழியைப் புரிந்து கொள்வேன். இந்தப் பைத்தியக்கார உபகண்டத்தில் இவைதான் என் ரகசியங்களை அறிந்தவை. சரித்திரக்காரர்களை ஒதுக்கிவிட்டு, வரலாற்றாசிரியர்களைப் புறக்கணித்துவிட்டு, இவை தம் கதைகளை என்னிடம் விண்ணப்பிக்கின்றன. நான் ஒருவன்தான் இவற்றுக்கு ஆடியன்ஸ். இந்தக் கற்கள் எனக்கு என்றுமே நண்பர்களாக இருப் பார்கள். கமால்! தயவு செய்து என்னை 'இவன் மேற்கு ஐரோப் பியாவைச் சேர்ந்த டீசெண்ட் இண்டலெக்சுவல்' என்று கூறி விமரி சிக்காதே. எனக்கு இந்த லேபிள்களெல்லாம் தேவை இல்லை; பொருட்படுத்தவும் இல்லை. இப்போது தெரிகிறது, பலரும் ரோமிலும், பாயிஸந்தியத்திலும் என் புகல் நாடித் திரிகிறார்களென்பது. நான் உலகத்தோடு புதிய உறவை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறேன்; இதை நீ தயவு செய்து கசப்பான உணர்வுகளால் முறிக்க முயற் சிக்காதே!"

சில்ஹட் எழிலார்ந்த மலையடிவார நகரம். மலைப்பாதையில் உலாவச் சென்றவர்கள் எல்லைக்காவல் நிலையம் வரைக்கும் சென்றார்கள். எதிரே பெரிய மரக்கதவு தெரிந்தது. இந்தப்புறம் பாகிஸ்தானி சிப்பாய் காவல் நின்றான். கதவுக்கு மறுபுறத்தில் சில அஸ்ஸாமியர்கள் சாவகாசமாக அமர்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார்கள். தொலைவில் அஸ்ஸாம் மலைத்தொடர்கள் தெரிந்தன. கமால் அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். இவ்வளவு எதிர்பாராமல் இந்தியப் பகுதியைக் காணும் மனநிலையில் அவன் இல்லை. எதிரே சில அடிகளுக்கப்பால் இந்தியா தென்படுவதை உணர்ந்தான்.

சில்ஹட்டிலிருந்து அடுத்த நாள் ஸ்ரீமங்கலுக்குப் புறப்பட்டான். நீண்ட பயணம். நதிகளையும், அடர்ந்த காடுகளையும், மௌல்வி பஜாரின் அழகான பகுதிகளையும் கடந்து சிரில்லின் பங்களாவுக்கு வந்து சேர்ந்தார்கள். ஒரு தாழ்வரைக் குன்றத்தில் பங்களா அமைந் திருந்தது. தொலைவிலிருந்தே விளக்குகள் பிரகாசிப்பது தெரிந்தது. இரவு வந்தது. கமாலுக்கு இப்போது சிரில் தன் பழைய நண்பன். சிரில், ஏதோவொரு புதிரான வகையில் கணத்துக்குக் கணம் 'பெரிய

துரை'யாக மாறிக்கொண்டிருப்பதாக உணர்ந்தான். கார் போர்ட்டி கோவில் நின்றதும், தலைநிமிர்த்தி நேரிய பார்வையுடன் படிகளேறிச் சென்றான். பணியாட்களின் பட்டாளம் எதிர்கொண்டழைக்க ஓடி வந்தது. வராந்தாவில் நின்று கொண்டிருந்த வேலைக்காரர்கள் குனிந்து, கைகூப்பி வணங்கினார்கள். சிரில் குரல் கொடுத்தான்: "அப்புர் ரஹ்மான்! குளிக்க வென்னீர் எடுத்து வை!" பிறகு கமாலுடன் கெஸ்ட் ரூம் பக்கம் சென்றான்.

"இது உனக்கு; இந்த அறை." சிரில் சொன்னான். பங்களாவில் சிங்கத் தோல்கள், சிறுத்தை, கலைமான்களின் தலைகள், விலைமிக்க கருங்காலியில் செய்த மேசை, நாற்காலி, முக்காலி, கட்டில்கள் எல்லாம் ஒப்பனைப் பொருள்களாக பொருத்தப்பட்டிருந்தன. கமாலுக்குத் தான் 1928ஆம் ஆண்டுக் காலத்து இந்தியாவில் இருப்ப தாகத் தோன்றியது. குல்ஃபிஷான் மாளிகை நினைவு வந்தது. டேராடூனில் அவர்களுக்கிருந்த 'கயாபான்' மாளிகையும் நினைவு வந்தது. சிரில் டிரைவரை உரக்க அழைத்தான். தன் வீட்டில் டிரைவராக இருந்த கதீர் ஓடி வரப்போகிறானென்று கற்பனை செய்து கொண்டான்.

வங்காளி கணக்குப்பிள்ளை கூலியாட்களின் ஊதியக் கணக்கு களை எடுத்துக்கொண்டு வந்தார். தொழிற்சங்கத்து ஆசாமி வெகு நேரமாகப் பேட்டிக்குக் காத்திருந்தான். யூரேஷியன் கிளார்க் ரால்ஃப் ஜோஸப் வராந்தாவில் பேப்பர்களில் கையெழுத்து வாங்க நின்றிருந் தான். சிரில் ஒருவனுக்குப் பல அலுவலர்கள் குற்றேவல் புரியக் காத்திருந்தார்கள்—தோட்டக்காரன், புல்வெட்டுபவன், தண்ணீர் நிரப்புபவன், காவலாளி. ஆற்றுத்துறையில் சிரில்லுக்கென்று தனி மோட்டர் லாஞ்ச் இருந்தது. ஸ்ரீமங்கல் பகுதியில் தொலைதூரம் பரவியிருந்த சொத்து சுதந்திரங்களுக்குச் சிரில் தன் அண்ணன் லார்ட் பார்ன் ஃபீல்டுடன் சேர்ந்து எஜமானன். சிரில் விரும்பினால், தன் சிப்பந்திகளில் எவனையும் தலைகீழாகக் கட்டிவைத்து அடிக்க முடியும். ஆம், சில காலம் முன்பு கேம்பிரிட்ஜில் போதலேயர், இலியட் இவர்களின் நூல்களைக் கையிலேந்தித் திரிந்து கொண் டிருந்த, 'கோஹிநூர்' ஹோட்டலில் மைக்கேலுடன் உருளைக் கிழங்கு டிபனை விரும்பிப் புசித்து வந்த சிரில்தான் இப்படி மாறியிருக்கிறான்!

காலை ஏழு மணிக்கு, காவலாளி பங்களாவின் வெளிக் கூடத்துக் கதவைத் திறந்துவிட்டான். வெயில் உள்ளே ஒளிக்கரம் நீட்டிப் பிரவேசித்தபோது, சிரில் கொசுவலைக்குள்ளேயிருந்து வெளிப் பட்டான். கமால் தன் அறையிலிருந்து வெளி வந்தான். டிரஸிங் கவன் அணிந்து, வராந்தாவில் நின்று சிகரெட் குடித்துக் கொண் டிருந்தான். பழைய நினைவுகளைக் காட்டும் பாடல் ஒன்றை முணு

முணுத்தான். டிராயிங்ரூமில் கிழக்குப் பாகிஸ்தானத்து ஓவியர்களின் படங்கள் இருந்தன. அலமாரிகளில் தேர்ந்தெடுத்த நூல்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. காலைச்சிற்றுண்டியை முடித்துக்கொண்டு இருவரும் வெளியே காரில் சென்றார்கள். பீட்டர் ஜாக்ஸனும் ரால்ஃப் ஜோஸப்பும் தலைமை தாங்க மற்ற சிப்பந்திகள் ஜீப்களில் பின் தொடர்ந்து வந்தார்கள். சிரில் கமாலுக்குத் தன் தொழிற் சாலையைச் சுற்றிக் காண்பித்தான். அங்கு தேயிலைகளைப் பதப் படுத்தி ஏற்றுமதிக்கு ஏற்றதாகச் செய்து வந்தார்கள்.

மதியப் பொழுதில் சாப்பாட்டிற்காகக் கிளப்பிற்கு வந்தார்கள். சில சக தோட்ட முதலாளிகளுடன் நாராயண் கஞ்சிலுள்ள பங்கு மார்க்கெட் நிலவரம் குறித்துப் பேசிக் கொண்டிருந்தான் சிரில். பிறகு 'ஸ்டேட்ஸ்மென்,' 'அமிர்தபஜார் பத்திரிகா', டாக்காவிலிருந்து வரும் 'மார்னிங் நியூஸ்' பத்திரிகைகளை ஒரு நோட்டம் விட்டான். சாப்பாட்டுக்கு முன்பு பீர் வழங்கப்பட்டது. கமால் அங்கு காணாததை அறிந்து வெளியே வந்தான் சிரில். பீட்டரிடம் 'மிஸ்டர் கமால் ரஸா எங்கே போனார்?' என்று கேட்டான்.

"தெரியாதே. கொஞ்சநேரம் முன்பு அவர் நூருல் இஸலாம் சௌத்ரியோடு தோட்டத்துப் பக்கம் போவதைப் பார்த்தேன்." பீட்டர் சொன்னான்.

நூருல் இஸ்லாம் சௌத்ரி? சிரில் மேலே பேசவில்லை. அந்த ஆசாமி தொழிலாளர் பிரதிநிதி; இரவு சிரில்லைச் சந்திக்க வந்திருந் தான். ஆனால் சிரில் அவனைச் சந்திக்க மறுத்து விட்டான்; காலையில் அலுவலகத்தில் வந்து சந்திக்கும்படி சொல்லி அனுப்பி விட்டான்.

சிரில் காரில் ஏறிக்கொண்டு கமாலைத் தேடிச் சென்றான். தன் தேயிலைத் தோட்டத்துள், அமைதியான, நிழல் நிறைந்த சாலையில் சுற்றிப் பார்த்தான். கமால் கிடைக்கவில்லை. அலுத்துப்போய், ஓரிடத்தில் காரை நிறுத்திவிட்டு, ஏதோ சிந்தனையில் புதர்களின் பக்கமாக நடந்தான். பருவம் மிக சுகமாக இருந்தது. பறவைகள் மரங்களில் கலகலப்பையூட்டின. வெயில் மரக்கொப்புகளால் சலிக்கப் பட்டு, தேயிலைச் செடிகளில் படும்போது, பல ஓவிய வடிவங்களாகப் பொலிந்தது. கை வளையல்களின் இனிய ஒலிகேட்டு, சிரில் திரும்பிப் பார்த்தான். ஒரு பெண் மிக லாவகமாகத் தேயிலைகளைக் கிள்ளிக் கொண்டிருந்தாள். பெரிய துரையைக் கண்டதும், முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டாள் மரியாதைக்காக. சிரில் முறுவலித்தான். சிந்தனைப் பிரவாகத்தில் மிதந்தவன் கரையேறிய வனாக, அவளைக் கேட்டான்: "உன் பெயரென்ன?"

"என் பெயர் சம்பா."

"சம்பா!" இந்தப் பெயரை இப்போதுதான் முதல் முறையாகக்

கேள்விப்படுபவன்போல் சொல்லிப் பார்த்துக்கொண்டான். பிறகு, "சம்பா—நல்ல பெயர்" என்று சொல்லிவிட்டு காரை நோக்கி நடந்தான். பெண் வியப்புடன் அந்த வெள்ளைக்காரனைப் பார்த்தாள். அவளும், அவளுடைய முன்னோர்களும் பலதரப்பட்ட வெள்ளைக் காரர்களைப் பார்த்திருக்கிறார்கள்—கிறுக்கன், இழிந்தவன், தறுதலை, அளவுக்கு மீறிக் குடிப்பவன்.

இந்தத் துரையும் கிறுக்கன் ரகம்.

கிளப்பிற்கு வந்ததும் சிரில் சோர்ந்துபோய் உட்கார்ந்தான். எதிரே சுவரில் எலிசபெத் மகாராணியாரின் படம் தொங்கியது. மற்றொரு படத்தில் ஒரு துரைசானி வெள்ளித் தொப்பி அணிந்து, துப்பாக்கியும் கையுமாக யானை மீது அம்பாரியில் அமர்ந்திருந்தாள். பக்கத்தில் கூச்பிஹார்மகாராஜா வீற்றிருந்தார். அந்தத் துரைசானி யிடம் தன் பாட்டியார் லேடி பார்ன் ஃபீல்டின் சாயல் தெரிந்தது. பாட்டி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அடிக்கடி இந்தியா வந்து புலிவேட்டையில் கலந்து கொள்வது வழக்கம். 'குட்மார்னிங், க்ரேனி! இன்று காலையில் நீ எப்படி இருந்தாய்?' மனத்துள் சொல்லிக் கொண்டான்; பிறகு சிந்தனையோட்டத்தில் மிதந்தான்: 'இப்போது கமால் எங்கே இருப்பான்?'

அன்று மாலையில், கமாலைக் கௌரவிக்கச் சிறப்பு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தான் சிரில். டின்னருக்குக் கமால் இல்லை. அவனில்லாமலேயே சகதோட்ட முதலாளிகளுக்கு விருந்தளித்தான்; விருந்து முடிந்ததும் பிரிட்ஜ் விளையாடினான்.

இரவு நேரம் கழித்து, கமால் வந்து சேர்ந்தான். அவனுக்காகச் சிரில் சாப்பாட்டறையில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தான்.

"தாங்கள் எங்கே போயிருந்தீர்கள்?"

"எங்குமில்லை; சும்மா சுற்றிக் கொண்டிருந்தேன்."

"தொழிலாளிகள் குப்பம் பக்கம் போயிருந்தீர்களாக்கும்?"

"ஆமாம்."

"நான் நினைத்தேன்."

"உனக்குக் கோபமோ?"

"இல்லையே, இந்த நடைமுறை அமைப்பில் என்னைப் போல் நீயும் ஈடுபட்டிருப்பவன்தானே? இதில் கோபப்படுவதற்கு என்ன இருக்கிறது?"

"இங்கு பாட்டாளிகளுக்கு நாள் ஒன்றுக்கு ஒன்றே கால் ரூபாய் கூலி கிடைக்கிறதாமே?"

"ஆமாம்."

"டிரேட் யூனியன் எதுவும் கிடையாதோ?"

"இல்லை"

"ஏதாவது கம்யூனிஸம் எலிமெண்ட்?"

"தெரியாது."

"உளறாதே! உனக்கு எல்லாம் தெரியும்."

"கமால்! உலகத்தின் பொறுப்பாளியாகி நான் பலகாலம் சுமைதாங்கியாக இயங்கியிருக்கிறேன். கடைசியில் அதை உதறினேன். நீயும் இந்தச் சுமையை இறக்கிவிட்டவன். பிறகு இந்த வீம்புத்தனம் எதற்காக? என்ன லாபம்? இப்படி ஏதாவது செய்து, உன்னைக் குற்றவாளி இல்லை என்று சமாதானப்படுத்திக்கொள்ள விரும்புகிறாயா? நீ என்னைவிடப் பெரிய குற்றவாளி, மிஸ்டர் கமால் ரஸா."

கமால் வாளாவிருந்தான். சிரில் அவனுக்கு விஸ்கி ஊற்றிக் கொடுத்தான்.

"உன்னைப் போன்ற படுமூடமான மனிதனைச் சந்தித்தேன்; அவனும் தேயிலைத் தோட்ட முதலாளிதான். ஸ்ரீ நீஹார் ரஞ்ஜன் தாஸ் குப்தா" கமால் சொன்னான்.

"தாஸ் குப்தா! அவனை எங்கே பார்த்தாய்? திரும்பவும் கிளப்புக்குப் போனாயா?"

"இல்லை, ஒற்றையடிப்பாதை வழியாக வந்து கொண்டிருந்தேன். என்னுடைய சூட்டையும் பூட்சையும் பார்த்து, எனக்கு 'லிப்ட்' கொடுக்க காரை நிறுத்தினார். அவர்தான் உன் பங்களா வரைக்கும் கொண்டு வந்துவிட்டார். அவரும் உன்னைப்போலவே பரம்பரைக் கனவான் என்பதும் தெரிந்தது." கமால் தொடர்ந்தான்: "நான் அவரிடம் கேட்டேன்: நாட்டைவிட்டு வெளியேறுகிற எண்ணமில்லையா? வாய்விட்டுச் சிரித்தார். 'நீங்கள் வேடிக்கையாகப் பேசுகிறீர்கள். இந்தியா கவர்ன்மெண்ட் எல்லாவற்றையுமே தேசியமயமாக்கிக் கொண்டிருக்கிறது. விரைவிலேயே அங்கே உண்மையான சோஷலிஸ்ட் அரசாங்கம் அமைந்துவிடும். இந்த நிலைமையிலே, பாகிஸ்தானைவிட்டுப் போக எனக்கென்ன மூளைக் கலக்கமா?' எனக்கு அவருடைய இந்த வெகுளித்தனம் நிரம்பப் பிடித்திருந்தது.

சிரில் சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, பிறகு சொன்னான்: "நான் உனக்கு மறுபடியும் அதே யோசனையைக் கூறுகிறேன். உலகத்து விவகாரங்களிலெல்லாம் தலையிடுவது உன் வழக்கம். இதை நீ விட்டுவிடு. இல்லையோ, உனக்குத்தான் ஆபத்து."

கமால் விஸ்கியில் பொங்கியிருந்த நுரைப் பூரிப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அடுத்த நாள் காலையில், இருவரும் ராஜஷாஹிக்குப் புறப்பட்டார்கள். வழியில் சந்தால் கிராமத்திற்கு வந்தார்கள். சந்தால் மக்கள் கமாலை மேலும் துக்கப்பட வைத்தார்கள்.

"இந்த அப்பாவி மக்களுக்காக மனதில் பெரிய பெரிய சொகுசான கற்பனைகளை உருவாக்கிக் கொண்டிருந்தேன். கிராமிய நடனம்,

ஜைநுல் அபிதீனின் புகழ்பெறற வாட்டர் கலர் பெயிண்டிங், இன்னும் எவ்வளவோ...!"

"ஆனால் உண்மை நிலை? தாளமுடியாத ஏழ்மை காரணமாக இவர்கள் மரவேர்களைச் சாப்பிடுகிறார்கள்." சிரில் ஜீப் ஓட்டிக் கொண்டே பேசினான்: "ஆரம்பத்தில் எனக்கும் அடிக்கடி மனது நொந்தது..."

சந்தால் மக்களிடம் நட்புறவு ஏற்பட்டது. அவர்கள் கிராமத்தை விட்டுப் புறப்படுகிற தினத்தில், எல்லா சந்தால் மக்களும் வழிமறித்து நின்றார்கள். ஒரு அழகிய பெண் மலர் மாலைகள் அணிவித்தாள். பிறகு கைகுவித்து குனிந்து வணங்கினாள். கிராமத் தலைவன் புடைசூழ எல்லை வரைக்கும் வந்தான். ஒரு வாலிபன் குளத்தில் இறங்கி செந்தாமரை மலர்களைப் பறித்து, சிரில்லிடம் கொடுத்தான். ஒவ்வொருவரும் உவகையும் பரிவும் மேலிட வழியனுப்பி வைத்தார்கள்.

இரவு அவர்கள் ராஜஷாஹி சர்க்கியூட் ஹவுஸிற்குத் திரும்பி வந்தார்கள். பக்கத்தில் கங்கை ஓடியது. மறு கரையில் முர்ஷிதாபாத் நகரம்.

முர்ஷிதாபாத்...? சிராஜுத்தௌலா...? கர்னல் கிளைவ்...? பொருளற்ற வீண் பேச்சுக்கள்...! அதோ, துப்பாக்கிச் சுடு கேட்கிறது. யாரோ ஒரு கள்ளக்கடத்தல்காரன் கொல்லப்பட்டிருக்கிறான்...

இருவரும் காரிருளில் கங்கைக் கரைப்பக்கத்தில் நிசப்தமான சாலையில் உலாவுவது வழக்கம். அப்பால் மாவட்ட மேலதிகாரிகளின் வீடுகள்; பிறகு கடைவீதி- சிறிய நாற்சந்திகள், சந்துகள். பதினெட்டு—பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த சோகம் படிந்த கட்டிடங்கள்.

"கட்டிடங்கள் எப்பேர்ப்பட்ட கதைகளையெல்லாம் சொல்கின்றன"—சிரில்.

அடர்ந்த சோலைகளுக்கிடையில் பெரிய பெரிய இந்து ஜமீன் தார்களின் மாளிகைகள் மறைந்திருந்தன. அவற்றில் பல சந்தடியற்றுக் கிடந்தன.

"இங்கு ஜமீன்தாரி ஒழிப்பு ஆகிவிட்டதாகக் கேள்விப் பட்டேன்"—கமால்.

அவர்கள் டாக்காவுக்கு ரயிலில் புறப்பட்டார்கள். நதித்துறை ஒன்றில் ரயில் நின்றது. பயணிகள் இறங்கி ஸ்டீமரில் ஏறிக் கொண்டார்கள். ரயிலிலிருந்து வியாபாரப் பொருள்களும், மற்ற பார்சல்களும் ஸ்டீமரில் ஏற்றப்பட்டன. இங்கு கிரேன் கிடையாது. நூற்றுக்கணக்கான கூலிகள் கூவிக்கொண்டே சுமை தூக்கலானார்கள். இம்மாதிரிக் கூவல்களையும் ராகங்களையும் கமால் வெளிநாட்டில் இந்திய மாணவர்களுடன் கோரஸாகப் பாடி இருக்கிறான்.

கப்பலில் தாடி வளர்ந்த கிழவர்களும், முக்காடிட்ட மாதர்களும்

வந்து மூன்றாவது வகுப்பில் அமர்ந்தார்கள். வயோதிக இந்துக்களும்—முஸல்மான்களும் (சால்வை போர்த்தியவர்கள்), அவர்களுடைய மகள்—மருமகள்கள்—குழந்தைகள் பின்தொடர தேங்க்வே வழியாக நுழைந்து இரண்டாம் வகுப்புக்குள் நுழைந்தார்கள்.

"இங்கே ஒரே இந்துக் கிழவர்களாக இருக்கிறார்களே! வாலிபர்கள் எங்கே?" கமால் கவலையோடு விசாரித்தான்.

"இந்து இளைஞர்கள் வேலை தேடி கல்கத்தா சென்றிருக்கிறார்கள்" சிரில் சலிப்புடன் பதிலளித்தான்.

முதல் வகுப்பில் பிரயாணிகள் வந்து உட்கார்ந்தார்கள். சில அமெரிக்கர்கள் வாலிப மாணவருடன் பேசிக் கொண்டிருந்தார். இரு வங்காளி முஸ்லிம்கள் அவாமிலீகின் கொள்கை பற்றி கருத்துப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள். உயர் அதிகாரி ஒருவர் கேபினிலிருந்து வெளியே வந்தார். அவருடைய மனைவியும் மைத்துனியும் சாய்வு நாற்காலியில் அமர்ந்து வெயில் காய்ந்தார்கள். மைத்துனி இந்தியாவிலிருந்து வந்த 'ஃபிலிம்ஃபேர்' படித்துக் கொண்டிருந்தாள். சிரில் எதிரே ரேலிங் மீது சாய்ந்து நின்று கொண்டிருந்தான். அவனுடைய பொன்னிறமான கேசங்கள் வெயிலில் பளபளத்தன. மிக அழகனாகக் காட்சியளித்தான்.

மேல் தளத்தின் மறு பக்கத்தில் இரண்டாம் வகுப்புப் பகுதி. ஒரு ஆங்கிலோ இந்திய யுவதி ஜன்னல் வலையில் சாய்ந்து, 'ட்ரூ ஸ்டோரி மேகஸின்' படித்துக் கொண்டிருந்தாள். அட்டைப்படக் கதாநாயகனைக் கண்ணாரப் பார்த்தபின், ஆங்கிலேயே வாலிபன் சிரில் பக்கம் பார்வையை ஓட்டினாள். அசல் மார்லின் பிராண்டோ மாதிரி இருந்தான். அந்த இரண்டுங்கெட்டான் பெண் பெருமூச்சு விட்டபின், பழையபடி நாவலில் ஒன்றிப் போனாள்.

இந்தப் பெண்ணின் பெயர் மிஸ் மார்க்கரெட் இஸபெல் கிரிஸ்டீனா டீஸ்டெல். செல்லப்பெயர் மைகி. இவ்வளவு நீண்ட பெயர் அமைந்ததற்குக் காரணம்: மைகியின் கொள்ளுப்பாட்டி, மார்க்கரெட் இஸபெல் சர் சிரில் ஐஷ்லேக்கும் இந்திய இந்துப் பெண்ணுக்கும் பிறந்த சந்ததி. சர் சிரில் ஐஷ்லே கடந்த நூற்றாண்டில் வங்காளத்தில் மிகப் பிரபலமானவர். பஞ்ச காலத்தில் டாக்காவிலிருந்து கல்கத்தா வந்து ஐஷ்லேயின் அந்தப் புரத்தை அடைந்தாள் அந்த இந்து நங்கை. அவள் பெண் மார்க்கரெட் இஸபெல் பருவமடைந்ததும், கான்புர் ரெஜிமெண்ட்டின் சார்ஜெண்ட் டீஸ்டெல்லை மணந்து கொண்டாள். அவன் அசல் வெள்ளைக்காரன். அளவு மீறிக் குடித்துக் கொண்டிருந்ததால் அகால மரணமெய்தினான். ஆகையால் மார்க்கரெட் இஸபெல் தம் குழந்தைகளுடன் கல்கத்தா வந்து சேர்ந்தாள். பிறகு அவள் குடும்பம் கல்கத்தாவிலுள்ள தாழ்ந்த வர்க்கத்து ஆங்கிலோ இந்தியன் சமூகத்தோடு கலந்தது.

மைகி டீஸ்டெல்லின் தாய் தந்தையர் காலமாகி விட்டார்கள். மைகி கிரேட் ஈஸ்டர்ன் ஹோட்டலில் டெலிபோன் ஆபரேட்டர். இப்போது லீவு எடுத்துக் கொண்டு சுகவீனமாயிருக்கும் அத்தையைப் பார்க்க வந்திருந்தாள். அத்தை பிக்ஸியில் இருந்தாள். இப்போது மைகி அத்தையைப் பார்த்துவிட்டு, கல்கத்தா திரும்புகிறாள்.

ஸ்டீமரின் விசில் ஒலி அவளைத் திடுக்கிட வைத்தது. நிமிர்ந்து பார்த்தாள். கரை நெருங்கிக் கொண்டிருந்தது. பயணிகள் தங்கள் சாமான்களைச் சேகரித்து வைத்துக் கொண்டார்கள். முதல் வகுப்பு டெக்கில் நின்று கொண்டிருந்த ஹீரோவை இப்போது காணோம். மைகி மனம் சலித்துக் கொண்டாள். தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு, கண்ணாடியில் பார்த்து கூந்தல் கர்லிங்பற்றி திருப்தி கொண்டு, கைப்பையுடன் கிளம்பினாள்.

சிரில்லும் கமாலும் கப்பலிலிருந்து இறங்கி கரைக்கு வந்து சேர்ந்தார்கள். பிரயாணிகளும் கூலியாட்களும் ரயிலை நோக்கி விரைந்தார்கள். ரயில் கப்பல் துறையிலிருந்து சற்றுத் தொலையில் இருந்தது. துறையில் இந்து மாதர்கள் ஸ்நானம்—ஜபம்—பூஜை என்று ஈடுபட்டிருந்தார்கள். இந்துக்கள் கூட்டமே அதிகம். மத்திய வர்க்கத்து மகிழ்ச்சி நிறைந்த இந்து மக்கள், தாழ்ந்த வர்க்கத்தவர்களும் இருந்தார்கள்.

“இந்த மாவட்டங்களில் இந்துக்கள் தொகை அதிகம்” சிரில் சொன்னான்.

“இங்கு நல்ல அமைதி. உண்மையிலேயே என் ஸைக்காலஜி படுமோசம்; இந்து—முஸ்லிம் தகராறு என் மனத்தை ஆழமாக அரித் திருக்கிறது. இதனால் இருதரப்பாரையும் எங்காவது ஒற்றுமையாகப் பார்க்க நேர்ந்தால், எனக்கு நம்பிக்கை ஏற்படுவதில்லை. இப்போதும் எனக்குப் புரியத்தான் இல்லை; இந்து—முஸ்லிம் கலகம் ஏன் ஏற்படு கிறதென்று.”

ஏற்றமான பாதையில் மைகி தலை குனிந்து முன்னே சென்றாள். ரயில் அருகில் வந்ததும், கைப்பெட்டியைக் கீழே வைத்துவிட்டு, கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். அவளைக் கடக்கும்போது, சிரில் சலிப்புடன் அவளைப் பார்த்துவிட்டு, தன் கம்பார்ட்மெண்டுக்குச் சென்றான். டாக்கா போய்ச் சேர்ந்ததும், சிரில்லும் கமாலும் தத்தம் அலுவல்களில் ஈடுபடலானார்கள். இருவரும் தினமும் மாலையில் கிளப்பில் சந்திப்பார்கள்; சேர்ந்தே வீடு திரும்புவார்கள். வேலை முடிந்ததும், சிரில் டாக்கா நகர் வீதி களைச் சுற்றித் திரிவான். டாகூர், சீதாதேவி ஆகியோர் எழுதிய நாவல்களில் வர்ணித்த சூழ்நிலைகளை எடுத்துக் காட்டுவான்.

ஒருநாள் கமால், சிரில்லோடு கங்கை வழியாக லாஞ்சில் வேறொரு ஜில்லாவுக்குச் சென்றான். கமாலுக்கு அரசாங்க அலுவல்

இருந்தது. பேப்பர் படித்துக் கொண்டிருந்தவன், திரும்பி கமாலைப் பார்த்துக் கேட்டான்: "அதோ எதிரே அடர்ந்த தோப்பு தெரிகிறதே, பார்த்தாயா?"

"ஆமாம்."

"அது விக்ரம்புர். இங்கு சரோஜினி நாயுடு, பி.ஸிராய் முதலியவர்களின் கார்டன் ஹவுஸ்கள் இருக்கின்றன. மிக அழகான இடம். இந்தக் கிராமங்கள் இப்போது வெறிச்சோடிக் கிடக்கின்றன. இங்கிருந்தவர்கள் மேற்கு வங்காளத்திற்குக் குடிபெயர்ந்து போய் விட்டார்கள். வருகிறாயா, போய்ப் பார்க்கலாம்?"

"நான் கிறிஸ்துவரோடு புனிதயாத்திரை செய்து சோர்ந்து விட்டேன். என்னை நிம்மதியாய் இருக்கவிடமாட்டாயா?"

"மாட்டேன்."

"நான் உன் கதைகளைக் கேட்கப் போவதில்லை."

"அதோ, இரண்டு மாடிக் கட்டிடம் தெரிகிறதே, அந்தக் கார்டன் ஹவுஸில்தான் ரவீந்திரநாத் தாகூர் இருந்து வந்தார். கவனித்தாயா?" சிரில் பாதிக்கப்படாமல் பேசினான்.

"சரி, கிளம்பு. நான் உனக்கு இன்றைய காட்சியைக் காட்டுகிறேன்." கமால் சொன்னான். லாஞ்ச் திரும்பி, நாராயண் கஞ்ஜ் பக்கம் சென்றது.

"நான் இப்போது சணல் மில்லுக்குப் போகிறேன்," வெற்றி கண்டவன்போல் பேசினான்.

"அங்கே மானேஜருடன் மதிய விருந்து கொள்வதற்குப் பதிலாக, தொழிலாளிகளின் ஊதியப்பட்டியல், புள்ளி விபரமெல்லாம் சேகரித்துக் கொண்டிரு. கிருத்திருமக்காரப்பயல்!"

கமால் சிரித்துக் கொண்டான்.

இருவரும் மில்லுக்கு வந்து சேர்ந்தார்கள். பெரிய ஆலையில் பீஹாரிப் பெண்டுகளும், வங்காளி ஆண்களும் வேலை செய்து கொண்டிருந்தார்கள். பூதாகாரமான மிஷின்கள் ஓலமிட்டுக் கொண்டிருந்தன. கமால் அதிசயத்தில் மூழ்கி, மிஷின்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பிறகு அவர்கள் லாஞ்சுக்குத் திரும்பி வந்து, பயணத்தை மேற்கொண்டார்கள். அகன்ற நதிப் பரப்பில் லாஞ்ச் படகு விரைந்தது. ஊதாநிற மேகங்களுக்கிடையில் கதிரவன் சிவந்த திலகம் போல் ஒளிர்ந்தான். அலைகள் பொன்னிறமாகத் திகழ்ந்தன. ஆயிரக் கணக்கான சிறு ஓடங்கள் நதியில் போய் வந்து கொண்டிருந்தன. ஒரு கிழவி தன் ஓடத்தை லாஞ்ச் பக்கம் தள்ளிக் கொணர்ந்தாள். அந்த நதியில் மிகக் கம்பீரமான வலுவான உலகம் குடி பெற்றிருந்தது. மாலைப்பொழுது தொடங்கியது. படகுகளில் விளக்குகள் ஏற்றப் பட்டன. தீபவரிசை தீபாவளிப் பண்டிகையை நினைவுபடுத்தியது.

படகோட்டிகள் ஓடங்களில் இருந்தவாறே நமாஸ் படித்துத் தொழுகை புரியலானார்கள். காற்று எழுந்தது. பாய்மரத் துணிகள் படபடத்தன.

இந்தக் காட்சி முழுவதுமே உன்னதமான ஸிம்ஃபனி இசையாக—கம்பீர ராகமாக இருந்தது. வங்காளம் முழுவதுமே இந்த இசை லயத்தில் மூழ்கியிருந்தது—இது துக்கராகம், மரண ராகம், ஜீவன ராகம்.

இரவில் ரமனாவின் தெருக்களில் மங்கலான வெளிச்சங்கள் படர்ந்தன. தொலைவில் ஒரு கோவிலிலிருந்து வைஷ்ணவ பஜன் இனிமையாக ஒலித்தது. சிரிலும் கமாலும் வெளிக்கூடத்தில் அமர்ந்திருந்தார்கள். கார்கால முகில்கள் குழுமிப் புறப்பட்டன. சிரில் மறுபடியும் புத்தகத்தைத் திறந்தான்: 'குளத்தைச் சுற்றிலும் சம்பா மலர்கள் விகசித்திருந்தன. வானத்தில் கருமுகில்கள் முழங்குகின்றன. என் உள்ளத்தில் சிந்தனைக் கடல் பொங்கியெழுகிறது. நதியே! நீ எங்கே போகிறாய் என்பது உனக்கே தெரியாது. அப்படியிருந்தும் ஏன் இவ்வளவு வேகமாக ஓடுகிறாயோ? நீர்க்குடமே! திவலைபோல் நீரில் மூழ்கிவிடு! நானும் உன்னைப்போல் கடலில் மூழ்கியவள்தான்."

மத்திய காலத்து வங்க நாடோடிப் பாடல்களின் தொகுப்பில் சிரில் லயித்திருந்தான். வெளியே கும்மிருட்டு. இடியும் மின்னலும் ஆர்ப்பரித்தன.

"நான் நாளைக் காலையில் இந்தியா வழியாகக் கராச்சிக்குப் புறப்படுகிறேன்" கமால் சொன்னதைக் கேட்டு, சிரில் திகைத்தான்.

"சரி; தெரிந்தது."

"நாம் அடிக்கடி சந்திப்போம்."

"சரி."

காற்று வீச்சில் வேகம் கூடியது. வராந்தா அருகிலிருந்த அசோக மரத்தின் கிளைகள் உரசிச் சலசலத்தன. "அசோக மரம்...!" மரத்திடம் பேசுவது போல் சிரில் சொன்னான்: "இதை யாராவது யுவதி தொட்டால் உடனே மலர்கள் விரியுமாம்."

கமால் தூறலைக் கண்டு, நாற்காலியை உள்ளுக்கு இழுத்துக் கொண்டான்.

"காகம் கறுப்பு; குயில் அதைவிடக் கறுப்பு. ஸஞ்ஜார் வாலி நதியின் நீர் குயிலையும் விடக் கருமையானது. குயிலின் ரோமங்கள் தாம் மிக மிகக் கறுப்பானவை..."

மழைத் தூறல்கள் வெளியே குளத்தில் ஜலதரங்கம் வாசித்துக் கொண்டிருந்தன. மின்னல் பிரகாசித்தது. தோட்டத்திலிருந்த இலைகள் யாவும் அந்தக் கணத்தில் பளபளத்தன.

"சண்பக மரங்களுக்கு அப்பால், கங்கையின் அலைகள் வீணுக்கு ஆர்ப்பரிக்கின்றன. அவற்றிடம் சொல், நான் காதுகளைப் பொத்திக்

கொண்டு விட்டேனென்று. என் தோணியைக் கரையில் கட்டிவைத்து விட்டேன்" சிரில் சொன்னான்.

"ஆகா, நான் சொல்லிவிடுகிறேன்"—கமால்.

மறுநாள் காலையில் கமால் சிரில்லை டாக்காவில் விட்டு விட்டு, விமானமேறி கல்கத்தா வந்து சேர்ந்தான். அங்கு தன் உறவினர்களைச் சந்திக்க தத்ஹவுஸ் போய் வரலாமென்று எண்ணினான்; அந்தத் தீர்மானத்தை மாற்றிக் கொண்டு, ரயிலேறி லக்னோ புறப்பட்டான்.

ஹாவடா ஸ்டேஷனில் தன்னை நோக்கி ஒரு போலீஸ் அதிகாரி வருவதைக் கண்டு ஒரு கணம் கலங்கிப் போனான். பையில் கை வைத்து, விசா, பாஸ்போர்ட் முதலியவற்றைப் பார்த்துக் கொண்டான். நிம்மதி ஏற்பட்டது; சட்ட விரோதமாக இந்தியாவுக்குள் நுழைந்து விடவில்லை. டிரெயின் புறப்பட்டது. பரத்வான், ஆஸன் ஸோல், துர்க்காபுர், அலாஹாபாத்- ரயில் அறிமுகமில்லாத நிலத்தைக் கடந்து கொண்டிருந்தது. ஓராண்டுக்கு முன்பு இது அவனுடைய தாய்நாடாக இருந்தது. இப்போது இங்கே அந்நிய நாட்டானாக வந்து, பிரயாணம் செய்து கொண்டிருக்கிறான். தன்னை மற்றவர்கள் சந்தேகக் கண்ணோடு பார்ப்பதாகத் தோன்றியது. எல்லார் பார்வைகளும் தன் மீதே பதிந்து மிரட்டுவது போல் இருந்தது. 'நீ பாகிஸ்தானிதானே ! போலீஸ் ஸ்டேஷனுக்கு வாடா !' தொடர்ந்து, ரயில் சக்கரங்களும் இப்படியே மிரட்டின. 'நீ பாகிஸ்தானி, முஸல் மான். வேவு பார்க்க வந்தவன். முஸ்லிம் உளவாளி, துரோகி !' கமால் பதறிப் போனான். கண் திறந்து பார்த்தபோது, டிரெயின் சார்பாக் ஜங்ஷனுக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

அவன் மனது அடித்துக் கொண்டது.

சார்பாக்—லக்னோ—லக்னோ—

இரண்டு நாட்கள் சொந்தக்காரர்களோடு தங்கியிருந்தான். பிறகு 'கயாபான்' வீட்டிற்கான இழப்பீட்டுத் தொகை வாங்க, சில முக்கிய தஸ்தாவேஜிகளைப் பெற டேராடூன் போக வேண்டி யிருந்ததால், மூன்றாம் நாள் புறப்பட்டான். டிரெயின் முராதாபாத் அருகே வந்தபோது, லக்னோவில் யாரோ சொன்னது நினைவுக்கு வந்தது. சம்பா வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்துவிட்டாள்; முராதாபாதில் சித்தப்பாவுடன் தங்கியிருக்கிறாள். இதையறிந்ததும், விசாவில் முராதாபாத் பெயரையும் சேர்க்கச் செய்து கொண்டான்.

டிரெயின் பிளாட்பாரத்தில் வந்து நின்றதும், தன் சாமான்களை எடுத்துக் கொண்டு இறங்கினான். தாங்காவில் ஏறிக்கொண்டு நகருக்குள் பிரவேசித்தான். ஒரு பழைய பகுதிக்குத் தாங்கா ◌ ந்தது. ஒரு வீட்டுக்கு எதிரே வண்டி நின்றது. கமால் சாமான்களுடன் இறங்கிக் கொண்டான். பழைய காலத்துக் கேட். வாசல் பக்கம் சிறு

ஜன்னல் திறந்திருந்தது. உள்ளே உமி கொட்டிக் கிடந்தது. இருண்ட பகுதியில் மாடிப்படிக்கட்டு. பதினெட்டாம் நூற்றாண்டுக் கட்டிடம். அதற்கேற்ற பழைய ரகப் பொருள்கள். மாடிப்படி ஏறி மேலே சென்றான். காரை உதிர்ந்த சுவர்கள்; இலமாகிய பொருள்கள். மேற்குப் பக்கம் பார்த்தான். கீழே மசூதி தெரிந்தது. பேஷ் இமாம் நமாஸ் படித்துக் கொண்டிருந்தார். எதிரே சில பிள்ளைகள் நின்று அவரைக் கேலி செய்து கொண்டிருந்தார்கள். கல்லை விட்டெறிந்து அவர்களை விரட்டிய பிறகு நமாஸைத் தொடங்கினார். இந்த மறைவிடத்திலும் வாழ்க்கை எவ்வளவு மகிழ்ச்சியாக, நிம்மதியாக இயங்குகிறதென்பதைக் கண்ட கமாலுக்குப் புல்லரித்தது. அவன் மாடியிலிருந்து இறங்கித் தெருவுக்கு வந்தான். இந்த வீட்டில் இருப்பவர்கள் எங்கே போனார்கள்? நாலுபக்கமும் நிசப்தம். வலது பக்கத்தில் சரிவான திடல் இடுகாடாக இருந்தது. உடல் விதிர்த்தது. உடலுள்ள ஆவிகள், உடலற்ற ஆவிகள்! இங்கே எவ்வளவு அவலம் குடிகொண்டிருக்கிறது! சடலங்களின் புதையிடம்! சம்பாபாஜி! நீ இங்கே எந்த இடத்திலே இருக்கிறாய்? இடுகாட்டிற்கு மூலையில் கூரை தெரிந்தது. மேலே ஜன்னலிலிருந்து ஒரு பெண் எட்டிப் பார்ப்பது தெரிந்தது. கமால் தன்னைப் பார்ப்பதைக் கண்டதும் ஜன்னலை மூடிக் கொண்டாள்.

கமால் எதிர் வீட்டுக்கு வந்தான். அதுவும் பழைய வீடுபோலவே இருந்தது. இடிந்த திண்ணை; காவலாளி நிற்குமிடம்; பல வண்ணக் கண்ணாடிகள் பதித்த முகப்பு, கமால் கதவைத் தட்டினான்.

"யாரது?" உள்ளேயிருந்து குரல் கேட்டது.

நிராசை, வேதனை காரணமாக கமாலின் குரல் எழவில்லை.

"யாரது?" ஒரு கிழவி உள்ளேயிருந்து எட்டிப் பார்த்தாள்.

"நான்தான்."

"நான்தான்-! கமால் ரஸா. பாகிஸ்தானிலிருந்து வந்திருக்கிறேன்."

கிழவி உள்ளே போய்விட்டு வந்தாள், ஜன்னல் வழியாக, "வாங்க, தம்பி! உள்ளே வாங்க" என்றாள்.

கமால் உள்ளே சென்றான். செங்கல் தெரிந்த தளம். சுவரோரத்தில் பழைய காலத்துச் செடிகள், மக்கிக் கிடந்தன. சமையல்கட்டிற்கு எதிரே கோழிக் கூடை இருந்தது. கோழி இறகுகள் சுற்றிலும் சிதறியிருந்தன. எதிரே நீண்ட அங்கணம்; அதில் ஓர் ஆசனம். அதில் சம்பா உட்கார்ந்திருந்தாள்.

"அரே! ஹலோ! கமால்! படு அதிசயம்!"

"சம்பாபாஜி!"

"மை குட் காட்...!" மெல்ல எழுந்து வந்து கமாலுக்கு விரிப்பை உதறிப் போட்டாள்.

"நான் தெரியாமல் எதிர் வீட்டுக்குள் நுழைந்து விட்டேன்"

கமால் பேச்சைத் தொடங்கினான்.

"என் வீட்டுக்காரர்கள் சித்தப்பா வீட்டுக்குப் போயிருக்கிறார்கள். நாமும் அங்கேயே போகலாம் வா. சாவகாசமாக உட்கார்ந்து பேசலாம்."

ஆணியில் தொங்கிக் கொண்டிருந்த மெல்லிய ரஜாய் போர்வையை எடுத்து உடலை மறைத்துப் போர்த்திக் கொண்டாள். முகத்திரையாகக் கொஞ்சம் இழுத்து விட்டுக் கொண்டு, கமாலுடன் தெருவுக்கு வந்தாள். "எங்கள் வீட்டிலே 'புர்க்கா', அணிகிற வழக்க மில்லை. இதுவரைக்கும் 'சாதரா', 'துலாயி' தான் போர்த்திக் கொண்டு வருகிறோம்" சம்பா விளக்கம் கூறினாள்.

பழைய மசூதிப் பக்கம் சென்றதும் மற்றொரு சந்தில் திரும்பி னார்கள். சந்து இடுகாட்டையொட்டித் துப்புரவாக நீண்டிருந்தது. சுவர்களில் பூண்டுகளும் அரசஞ்செடிகளும் முளைத்திருந்தன.

"இதுவா இடம்?" கமால் இடுகாட்டைக் காட்டினான். சம்பா நின்று பார்த்தாள். "நாங்கள்தானே! இங்கேயே வாழ்கிறோம், இங்கேயே மடிகிறோம்" சற்றுத் தூரத்தில் 'தீவான் கானா' மாளிகை எதிர்ப் பட்டது. "இதுதானே சித்தப்பா வீடு!" கமால் கேட்டான்.

"ஆமாம்."

இருவரும் உள்ளே சென்றார்கள். கூடத்தில் பல ஆசனங்கள், திண்டுகள் கிடந்தன. வெறுமை ஒவ்வொன்றையும் ஆட்கொண் டிருந்தது.

"இங்கே ஒருவரையும் காணோமே!" கமால் கலவரப்பட்டான்.

"இது இமாம்பாடா (ஷியாக்களின் சமாதிக் கூடம்). பாகிஸ்தான் ஏற்படுவதற்கு முன்பு இங்கே புகழ்பெற்ற பீடங்களின் விழாக்கூட்டம் நடைபெறும்."

'சரி, பழைய கதைகளைக் கிளறத் தொடங்கிவிட்டாள்.' கமால் எரிச்சலை அடக்கிக் கொண்டான்.

"அசல் வீடு உள்பக்கம் இருக்கிறது. சரி, வா போகலாம். உன்னெதிரில் பர்தா எதற்கு?" போர்வையை மடித்துக் கையில் வைத்துக் கொண்டாள். இருவரும் உள்ளே சென்றார்கள். கூடத்தில் நாற்காலிகளும் கட்டில்களும் பரவலாகக் கிடந்தன. அடுக்களையி லிருந்து தாளிப்புமணம் வீசியது. சில சாதாரண முகங்கள் தென் பட்டன. புழுக்கமாக இருந்தது. விளக்கைச்சுற்றி ஈசல்கள் முற்றுகை யிட்டன.

"சித்தப்பா! கமால் வந்திருக்கிறார்" இருட்டை நோக்கி சம்பா குரல் கொடுத்தாள்.

"வா, வா! வரவேணும், தம்பி! எங்களைக் கௌரவப்படுத்தி இவ்வளவு தூரம் வந்தாயே," கட்டிலில் படுத்திருந்த சித்தப்பா எழுந்து உட்கார்ந்தார்.

லாந்தலைத் தூக்கிக் கொண்டு ஒரு பெண் அடுக்களைப் பக்கம் விரைந்தாள். மற்றொரு பெண் மேஜை மீது அமர்ந்து படித்துக் கொண்டிருந்தாள். 'நடுத்தரவர்க்கம் இவ்வளவு ஒடுங்கியிருக்கிறதா!' என்று படித்துக் கொண்டிருந்த பெண் கமாலை ஏறிட்டுப் பார்த்தாள். கமால் பார்வையைத் திருப்பிக் கொண்டான். மத்தியதர வகுப்புப் பெண்களின் உல்லாசப்பித்தைப் பற்றிய நிறையக் கேள்விப்பட்டிருக்கிறான். அந்தப் பெண் தன்னை ஆதுரமாகப் பார்க்கவும் வேண்டாம், அவனுடன் ஒட்டுதல் கொண்டு பழக முயலவும் வேண்டாம்; பிறகு நீண்ட காதல் கடிதங்களும் எழுத வேண்டாம், என்று நினைத்தான். கமாலின் குழப்பம் அதிகரித்தது.

"இரு பெண்களும் என் கஸின்கள். அவள் ஜெபுன்னிஸா; தில்லியில் எம்.ஏ. படித்தவள். அடுத்தவள் மரியம் ஜமானி. அக்ரி கல்சரில் எம்.ஏ.; எம்.எஸ்.ஸி படித்துக் கொண்டிருக்கிறாள். நீ ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிறாய்?"—சம்பா பேசினாள்.

"ஒண்ணுமில்லை, சம்பா பாஜி!"

பிறகு சித்தப்பா கமாலுடன் மெல்லப் பேச்சுக் கொடுத்தார். பழைய சமாச்சாரங்கள், பாகிஸ்தான், இந்துஸ்தான், முத்தாய்ப்பாக, "இங்கே நம்ப நாடி தளர்ந்து போச்சு, தம்பி!" பெரியவர் சொன்னார்.

"இங்கே என் இவ்வளவு அமைதி?" தன் அசட்டுத் தனத்தை உணர்ந்தான். குரலில் பீதி தொனித்தது. "பேட்டைவாசிகளெல்லாம் எங்கே?"

"நீ போயிருக்கிற இடத்துக்குத்தான்." கனைத்துக் கொண்டு, "கோக்கராபார் வழியாக எல்லாரும் நாடு கடந்துவிட்டார்கள். ருஹேல்கண்ட் காலியாகிவிட்டது. நாங்கள் கிழம் கட்டைகள் சில பேர் எஞ்சியிருக்கிறோம். இரண்டு மூணு வருஷம் நாங்க மன்றாடிக் கொண்டிருந்து விடுவோம். பிற்பாடு, இங்கேயெல்லாம் கழுதைகள் மேயும்."

கமாலால் உட்கார முடியவில்லை. எழுந்து நடந்தான். மரியம் ஜமானி மிக ஆதுரத்தோடு தேனீர் தயாரித்துக் கொண்டுவந்தாள். நெகிழ்ச்சி—கவர்ச்சியில் அவள் ஈடுபடுபவளாகத் தெரியவில்லை. நல்ல காலம். கமாலுக்கு ஆறுதலாகவும் இருந்தது; விசனமாகவும் இருந்தது.

"பாகிஸ்தான் நிலவரம் எப்படி? இங்கேயிருந்து போனவன்கள் அங்கே லட்சாதிபதிகளாகி விட்டார்களாமே! அப்படியா? என் மருமகன் (சகோதரியின் மகன்) எழுதியிருந்தான்; அங்கே ஒவ்வோர் இடத்திலேயும் பஞ்சாபிக்காரன்கள், யு.பி. காரன்களைக் கண்டால் வெறுக்கிறார்களாமே? செல்வாக்கு இல்லாமல் செய்துவிட்டார்களாமே? இது படுமோசம்! தம்பி! நாங்கள் சீர்குலைந்து போய் விட்டோம், அங்கே வந்தால் மட்டும் என்ன சீரும் சிறப்பும்

கண்டுவிடப் போகிறோம்? "ப்சு! ம்ஹூம்...!" பிறகு பெண்ணைப் பார்த்து, "மரியம்! கொஞ்சம் பிஸ்கெட் கொண்டு வாயேன்...! தம்பி! இந்த மாளிகையிலே நாலு வேலைக்காரர்களுக்குக் குறைந்து இருந்த தில்லை. இப்போது? ஆந்தை—கோட்டான்கள் கூடுகின்றன.!"

கமால் சமைந்து உட்கார்ந்திருந்தான்.

"இந்தப் பேட்டைக்கு வந்தும் இந்த வீட்டுக்கு இன்னும் மின்சாரம் வரவில்லை. அத்தை வீட்டிலே லைட் இருக்கு. ஆனால் அவர்கள் குடும்பத்தோடு சிந்து ஹைதராபாதுக்குப் போய்விட் டார்கள்"—சம்பா பொதுப்படையாகப் பேசினாள்: "இப்போது அத்தை வீட்டைக் கஸ்டடியன் எடுத்துக் கொண்டு விட்டார். அங்கே சீக்கியர் பள்ளிக்கூடம் வந்ததும், கரெண்டு கனெக்ஷன் கொடுத்து, லைட்டும் போட்டு விட்டார்கள். இந்த வீடுகளுக்கெல்லாம் வரவில்லை."

"லைட் போடப் பணம் வேண்டாமா, தம்பி?" சித்தப்பா டீ டிரேயை ஓசைபட முக்காலியில் வைத்துவிட்டுச் சொன்னார். டிரே சரிந்து எல்லாப் பாலும் கீழே கொட்டிவிட்டது. சம்பா விசனத்துடன் பால் பரவுவதைப் பார்த்தாள். "இனிமேல் இந்த இரவிலே எங்கே பாலுக்குப் போவது?"

"இதற்காக வருத்தப்படவேண்டாம், சம்பா!" கமால் மெல்லச் சொன்னான். சம்பா அவனைப் பார்த்து முறுவலித்தாள். கமால் இன்று சம்பாவை வாழ்வின் புதிய—மாறான படியில் கண்டான். இதுதான் இவளுடைய அசல் சூழ்நிலை. ஒருகணம் கண்களை மூடிக்கொண்டான். லக்னோ, பாரிஸ், கேம்பிரிட்ஜ், லண்டனி லெல்லாம் இருந்த சம்பாவையும், இப்போது இந்த முராதாபாத் பேட்டையில், இருண்ட வீட்டில் இருக்கும் சம்பாவையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டான்—மிடில்கிளாஸ் சம்பா! துணிச்சல்காரி சம்பா! உனக்கு இணை ஈடு கிடையாது. ஒப்புக் கொள்ளுகிறேன்!

கமால் முராதாபாத்தில் இரு தினங்கள் தங்கினான். இரவு அதே மாடி அறையில் தங்கினான். முதலில் வந்ததும் நுழைந்து பார்த்தானே அந்த வீட்டின் மாடியில். வெளிப்பக்கம் வந்து புறக்காட்சியைக் கண்டான். தண்மதி மங்கலான நிலவை கட்டிடங் களின் மேல் பூசிக்கொண்டிருந்தது. மசூதித் தூபிகள், கும்பட்டாக்கள், வேப்பமரங்கள் யாவுமே அந்த நிலவொளியில் இளித்தன.

பகலில் அவன் படுத்த இடத்திற்கு ராமகங்கா நதியிலிருந்து குளிர்ந்த காற்று நேரிடையாக வீசியது சற்று ஆறுதலளித்தது.

சம்பாபாஜி உற்சாகத்துடன் பேச வந்து உட்கார்ந்தாள்: "உன் நாட்டில் இந்தியப் புடவைகளுக்கு நல்ல கிராக்கியாமே! உன் நாட்டு உயர்தர வகுப்புப் பெண்கள் இங்கு வந்ததுமே புடவைக் கடைகளை முற்றுகையிடுகிறார்கள். உன் நாட்டு ஹைகிளாஸ் சொஸைட்டி..."

"ஏன் இப்படி 'ஹைசொஸைட்டி—ஹைசொஸைட்டி' என்று அதன் மென்னியைத் திருகுகிறாய்?" கமால் சலித்துக் கொண்டான்: "உனக்கும் இந்த கிளாஸ் கான்ஷஸ்னெஸ்ஸைப் பெற வள்ளிசாய் பதினைந்து வருடங்கள் பிடித்திருக்கின்றன! இதை நீ மறந்துவிட வேண்டாம், அம்மணி!"

சம்பா வாய்விட்டுச் சிரித்தாள். "கிளாஸ்—கான்ஷஸ்னெஸ் பற்றிப் பேச வேண்டுமானால், என் கஸின்களிடம் பேசு. ஜெபுன், மரியம் இரண்டு பேருமே தேர்ந்த ஸ்டூடண்ட் வொர்க்கர்ஸ்."

தான் சந்தேகப்பட்டது வீண் என்பதைக் கமால் உணர்ந்து கொண்டான். இந்த மிடில்கிளாஸ் பெண்கள் தமக்குள்ள சலிப்புணர்வு, சொகுசார்வம் இரண்டையும் வென்றிருக்கிறார்கள். பதினைந்து வருடங்களுக்கு முன் இவர்கள் சம்பாவின் இடத்தில் இருந்திருந்தால், சம்பாவைப்போலவே சொகுசார்வம் கொண்டிருப்பார்கள். இவர்கள் புதுமைப் பெண்கள்; சம்பா நடுவாந்தரத்துப் பெண். அதனால் சோதனை செய்து பார்த்து, தோல்விகளையும் காணவேண்டிய நிலை சம்பாவுக்கு இருந்தது.

ஜெபுன், மரியம் இருவரும் ஏழைப் பெண்கள்; ஆனால் துணிச்சல் உள்ள பெண்கள். இவர்கள் மனத்தில் சிக்கல் ஏதும் கிடையாது.

"நானும் 1941-ல் இந்தப் பெண்களைப் போல் இருந்திருந்தால்..." கமாலின் உள்ளத்தை உணர்ந்தவள் போல், பேசினாள் சம்பா.

"இப்போது நம்மால் ஏதும் செய்ய முடியாது." ஆற்றாமையுடன் கமால் ஒப்புக் கொண்டான். தான் கிழவனாகிவிட்ட உணர்வு அவனைச் சலிப்படைய வைத்தது. 'எதிரே உட்கார்ந்திருக்கிற சம்பா கிழவியாகி விட்டாளே! நாங்கள் இருவரும் மனோரதங்களின் உலகில் எவ்வளவு தூரம் சுற்றுலா போய் வந்திருக்கிறோம்...!' கமால் திகைத்தான்.

அவன் இப்போது புதிய நகரில், இருள் படிந்த மாடிப்பகுதியில் அமர்ந்திருக்கிறான். நதிப்பெருக்கைத் தழுவி வரும் காற்று அவனது கேசங்களைக் கலைக்கின்றது. பருவ மழை—இந்த நாட்டுக்குரிய மழை. இந்த நாடு இப்போது அவனுக்குச் சொந்தமில்லை. விசாவின் கெடு முடியப்போகிறது. நாளைக் காலையில் அவன் இங்கிருந்து தனது நாட்டுக்குப் புறப்பட்டு விடுவான். முராதாபாத், இந்த மாடி, சம்பா அஹமத், ஜெபுன், மரியம், சித்தப்பா—ஆகியோர் இங்கேயே இருக்கப் போகிறார்கள். இந்த உண்மைக்காக அவன் கண்ணீர் வடிக்க வேண்டுமா? ஆனால், தன் முதுமை உணர்வு தன்னைச் சமனப்படுத்துவதை உணர்ந்தான். அடக்கம், பொறுமை, அமைதி, நிதானம்—'புராதன யூனானியரின் ஆதரிசங்கள்'—கமாலுக்கு ஹரிசங்கரின் பேச்சு நினைவு வந்தது.

சம்பா இம்முறையும் அவன் உள்ளத்தைப் புரிந்து கொண்டாள். "உன் தோழன் ஹரிசங்கர் எங்கே இருக்கிறான்?" எப்போதும்போல் கேட்டாள்.

"சம்பாபாஜி! ஹரிசங்கர் இப்போது என் தோழன் இல்லை. இப்போது அவன் எங்கே இருக்கிறானோ, யார் கண்டது?" கமால் சினந்தான்.

"அவனுக்குக் கடிதம் எழுதுவதில்லையா நீ?"

"நான் எந்த நண்பனுக்கும் கடிதம் எழுதுவது கிடையாது. நான் ஹரிசங்கர் ஸ்ரீவாஸ்தவிற்கு எதற்காகக் கடிதம் எழுத வேண்டும்? என்ன எழுதுவது?"

"நீ இன்னும் ஸென்டிமென்டலாகத்தான் இருக்கிறாய்!"

தன் களவு வெளியாகிவிட்ட எரிச்சலில் கமால் கத்தினான்: "இல்லை! இந்தப் பேச்சே வேண்டாம். இந்த எல்லா கேலிக் கூத்துகளையும்—இந்தியா—பாகிஸ்தான் மெலோட்ராமாக்களையும் பார்த்து, கேட்டு சோர்ந்து சலித்துப்போய்விட்டேன். அல்லா ஆணையாகச் சொல்லுகிறேன், இவற்றைக் கண்டாலேயே வெறுப்பாக இருக்கிறது. சரி, ஹரிசங்கர் பங்களூரில் இருக்கிறானாம், நான் அங்கே போய் அவனைக் கட்டிக் கொண்டு கதறட்டுமா?"

"இதுவும் ஒரு மெலோ டெமட்ரிக் பேச்சுதான்!"

கமால் சரியான பதில் சொல்லத் தெரியாமல், சப்பைக் கட்டலாகப் பேசினான். "மனிதன் எங்காவது, எப்போதாவது தன் பழைய நண்பர்களைச் சந்தித்துக் கொண்டுதான் இருக்கிறான். மேலும் இந்த முராதாபாத் நான் போகிற வழியாகவும் இருந்தது."

மழை தூறிக் கொண்டிருந்தது. மண்வாடை வீசியது. சம்பா வெளியே பார்த்தாள்.

"சம்பாபாஜி! இங்கே நீ என்ன செய்யப்போகிறாய்," இது கொடூரமான கேள்வி. ஒருவருடைய வருங்காலத்தைப் பற்றி அவரிடமே எப்படிக் கேட்பது?

"நானா? கடைசியில் பனாரஸ் போகப் போகிறேன். என் முன்னோர்களுடைய ஊர் எது தெரியுமா?"

"சிவபுரி"

"ஆமாம், ஆனந்த நகர். அது என்றாவது ஒரு நாள் உண்மையாகவே ஆனந்த நகரமாக மாறும்—நாட்டின் மற்ற நகரங்களைப்போல. இந்தத் தேசத்தை துன்பக்கோட்டையாகவோ, ஆனந்தத்தின் உறைவிடமாகவோ ஆக்குவது என் கையில் இருக்கிறது. எனக்குப் பிறரைப்பற்றி என்ன கவலை," தன் கைகளை விரித்துக் காட்டினாள்; "இவை வெறும் சாதாரண நிலையிலுள்ள—புத்திசாலிப் பெண்ணின் கைகள், இனி நான் உழைத்து வேலை பார்க்க விரும்புகிறேன்."

சிறிது நேரத்திற்கெல்லாம் மசூதியிலிருந்து மாலைத் தொழுகைக்

கான அழைப்பு 'அஜான்' கூவல் எழுந்ததும், சம்பா தன்னையறி யாமலேயே துப்பட்டாவை இழுத்து முகத்தை மூடிக்கொண்டாள்.

"கமால்! நீ ஏன் இங்கிருந்து போனாய்? நான் உன் பாகிஸ் தானுக்கு வந்தால், எனக்கு பெரிய நல்ல வேலை கிடைக்காமலா போகும்? பாரேன், நான் கேம்பிரிட்ஜிலிருந்து எத்தனை டிகிரிகள் வாங்கி வந்திருக்கிறேன், பார்!"

சம்பாவின் உறவுப் பெண்கள் சிக்கனமாகச் சிங்காரித்துக் கொண்டு, கீழே கூடத்தில் சிற்றுண்டி தயாரித்தார்கள். "இங்கேயும் கொஞ்சம் அனுப்பி வையுங்கடி!" சம்பா ஜன்னல் வழியாகக் குரல் கொடுத்தாள்.

"இதோ, கொண்டு வருகிறோம்!" என்று சொல்லிவிட்டு, தன் வயத்தில் பாடத் தொடங்கினார்கள். ஜைபுன் இரு தட்டுகளில் சிற்றுண்டி வைத்து, மேலே கொணர்ந்தாள். வெகு இயல்பாக மாடிக்கு வந்து, தரையில் அவர்களெதிரே தட்டுகளை வைத்துவிட்டு, பழையபடியே பாட்டை முணுமுணுத்துக் கொண்டே திரும்பினாள். சம்பா நிலைப்படியில் உட்கார்ந்திருந்தாள். மெல்லச் சொன்னாள்: "என் வீட்டுக்கு யார் வருவார் என்று நினைத்திருப்பாய். ஆனால் கமால்! சொந்த முறையில் வாழ்க்கை வெற்றி என்று பார்க்கும்போது, நான் உன்னைவிட அதிர்ஷ்டசாலிதான். எனக்கு வழி கிடைத்து விட்டது."

"ஒப்புக் கொள்ளுகிறேன், சம்பாபாஜி!"

கீழே மழை இரைச்சல் கேட்டது. பசுமையும் புதுமையும் மேலும் பொலிவு பெற்றன. தெருவில் மழை நீர் அருவியாக ஓடியது. கூரை மாடிகளிலிருந்து நீர்வீழ்ச்சியாகச் சொரிந்தது. முற்றத்தில் சிறு சிறு ஏரிகளாகத் தேங்கியிருந்தன.

சம்பா உணர்ச்சியுடன், "இது என் ஜலமாளிகை. இங்கு என் கண்ணீர் மழை பொழிகிறது."

கீழே கூடத்தில் பெண்களின் துப்பட்டாக்கள் அசைந்தன.

"நான் சாதாரண நிலையிலுள்ள பெண். நான் ஆண்டவனிடம் அதீத பக்தி கொண்டவளாக இருந்திருந்தால்—மீராபாய், முக்தாபாய், ஸெயின்ட்ஸோஃபியாவாக இருந்தால், என் உடலில் புண்கள்பட்ட வடுக்கள் இருந்திருக்கும். என்ஆடை ரத்தக்கறை படிந்திருக்கும். என் கைகளில் ஆணிகளை அறைந்திருப்பார்கள். என் தலைக்குப் பின்னால் பிரபை ஒளிரும். எனக்கு நஞ்சு நிறைந்த கோப்பையோ, சர்ப்பப் பெட்டியோ அனுப்பி வைக்கப்பட்டிருக்கும். ஆனால் நான் வெறும் சம்பா அஹமத். என் புண்கள் எவருக்கும் புலப்படாதவை. காரணம், என்னை வேடிக்கை பார்ப்பவர்களும் என்னைப் போலவே புண்பட்ட வர்கள். அவர்கள் பலவீனர்கள்; அழியப் போகிறவர்கள்; பார்க்கவல்ல கண் படைத்தவர்களில்லை. செயின்ட் ஸோஃபியாவைப் பூஜிக்க

விரும்புகிறபோது, என்னைப் பார்த்து ஏளனம் செய்தாலும் செய்யலாம்."

காற்று வேகத்தில் நாவல் மரத்திலிருந்து பழங்கள் உதிர்ந்தன. சம்பா தன் தலையில் விழுந்த பழுப்பு இலையை எடுத்துப் போட்டாள்.

"கமால்! பலதரப்பட்ட ஜீனியஸ் டைப்பான மேதைகளோடு பழகியிருக்கிறேன். அவர்களில் எவருமே தன் நிலையில் மகிழ்ச்சி கொள்வதுமில்லை, வருந்துவதுமில்லை. 'நீ ஏன் மகிழ்ச்சியோடு இருக்கிறாய்?' நான் ஒவ்வொருவரிடமும் கேட்கிறேன். 'இவ்வளவு ஆழ்ந்த நுண்ணிய அறிவை வைத்துக் கொண்டிருந்தும் சிந்தனையில் தோய்ந்துவிடக் காரணம்?' இப்படி என்னைப் பார்த்துக் கேட்கும் போது எனக்குக் குத்தலாகப் படுகிறது. தன் துக்கத்தை உலகத்தின் துக்கமாக மாற்றுபவர்கள்தான் இங்கு அதிகம். இது மிக எளிதான காரியம். மலைக்குக் கீழே போனபின்புதான் தெரிந்தது, நம்முடைய சொந்தத் துயரம் எவ்வளவு சாதாரணம், துச்சமானது என்று.

"எட்டு வருஷங்களுக்குப் பிறகு உன்னைப்போல் நானும் சொந்த நாட்டுக்குத் திரும்பி வந்தேன். இங்குள்ள நிலைமையைப் பார்த்தேன். நான் மகிழ்ந்து, கர்வப்பட்டு, பெருமைப்பட்டுக் கொண்ட நிலைகளும், நிகழ்ச்சிகளும் இங்கு நேரிட்டிருக்கின்றன. நான் வருந்தத்தக்க, அவமானத்தால் தலைகுனிய வேண்டிய நிகழ்ச்சிகளும் எதிர்ப்பட்டிருக்கின்றன. எனக்கு எதிரே பிரச்சினைகள் மலையாகக் குவிந்திருந்தன. அப்போது நான் என்ன செய்தேன் தெரியுமா? எறும்பு தன் காதுகளில் யானைகளைக் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு, மலைமீது ஏறியதாமே, அதைத்தான் நான் எடுத்துக் காட்டாக வழிகாட்டியாகக் கொண்டிருக்கிறேன்! இப்போதாவது உனக்குப் புரிகிறதா? நான் என்ன செய்யப் போகிறேன் என்று இப்போதுமா அறிய விரும்புகிறாய்?"

மறுநாள் மாலையில் கமால் அங்கிருந்து புறப்பட்டான். தாங்கா வண்டி தெருவைக் கடந்து வந்தபோது திரும்பிப் பார்த்தான்: சம்பாபாஜி தொலைவில் நின்று கொண்டிருந்தாள்; இடிந்த பழைய வீட்டின் வாசல் பக்கம் நின்று தன்னைப் பார்க்கிறாள். இதே போலத் தான் சம்பாவை, முன்பு ஆக்ஸ்போர்டு யூனிவர்சிடி வீதியில், இளைஞர் மன்றத்து சிற்றுண்டி விடுதியின் கண்ணாடிக் கதவருகில் விட்டுவிட்டு வந்தான். இதே போலத்தான், முன்பொரு நாள் 'குல்ஃபிஷான்' மாளிகைக் கேட்டில், இருட்டில் தனியாக நின்று கொண்டிருந்தபோது, இவளை விட்டு விட்டு ஆமிர்ரஸா பாகிஸ் தானிற்குச் சென்றான்.

ஆனால் இந்தச் சமயம், சம்பா தனியாக இல்லை. இப்போது ஒரு சமூகத்தின் பிரதிநிதி. எந்தவித நிபந்தனையுமில்லாமல சமூகத்தின்

சோதனையை ஏற்றுக் கொண்டிருக்கிறாள். சம்பா இப்போது ஊர் வலத்தில் கலந்தவள்; முன்னேறிக் கொண்டிருக்கிறாள். அவளுடன் கூட பேட்டையின் சந்துக்கள், மசூதியின் மினார்கள், ஜெபுன், மரியம், கோலி விளையாடும் பிள்ளைகள், அங்காடிக்காரர்கள், ஏழைகள், பர்தா மறைப்புகளுள்ளிருக்கும் மாதர்கள், மற்றும் பொது மக்கள் ஊர்வலத்தில் செல்கின்றனர். எல்லாவற்றிற்கும் சம்பா தோழியாக இருக்கிறாள். இவர்கள் முன்னேறக் காத்திருக்கிறார்கள்; இன்றைக்கு இல்லாவிட்டால் நாளைக்கு, என்றாவதொரு நாள் இவர்கள் முன்னுக்கு வந்துவிடுவார்கள். இந்தக் குறியிடத்தில் வந்ததும் சிரில்லின் கோட்பாடுகளெல்லாம் இற்று வீழ்ந்து விடுகின்றன.

தாங்கா கடைவீதியைக் கடந்து கொண்டிருந்தது. கடைகளை அடைக்கத் தொடங்கினார்கள். சாயாக் கடைகளில் ரேடியோ பாடியது. திரைப்படக் கொட்டகைக்கெதிரே நல்ல கூட்டம்.

"என்ன செய்வேன், பார்ட்னர்! என் முடிவு சோக மயமாகி விட்டதே!" ரயிலில் உட்கார்ந்து கொண்டதும் தன்னையே விளித்துப் பேசிக் கொண்டான்.

ரயில் சிவாலிக் குன்றுகளைக் கடந்து இமயத்தின் பசுமையான மடியில் ஊர்ந்தது. டேராடூன் ஸ்டேஷனில் இறங்கி, ஜில்லா மாஜிஸ்டிரேட் கோர்ட்டுக்குச் சென்றான். 'மன்கூலா', பங்களாவுக்குரிய பத்திரங்கள், கிரய சாஸனப் பத்திரங்கள் யாவற்றையும் வாங்கிக் கொண்டு அழகான வீதிகள் வழியாக நடந்தான். எதிரே ரஸ்பனா நதி ஓடியது.

"நண்பா, ஹரிசங்கர்!"

"என்னப்பா!"

"நண்பா! அந்தப் புரொபஸர் ஹைமில்டன் சரியாகத்தான் சொன்னான். நாமெல்லாரும் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம்."

அன்றைக்கு அந்த வெள்ளைக்காரப் பேராசிரியர் தியாகம் குறித்து வெகுவாகச் சொன்னார். இரு நண்பர்களும் ஆழ்ந்த வேதாந்தக் கருத்தினால் பாதிக்கப்பட்டிருந்தார்கள்.

"சரி, வா! மாளிகைகளின் பெயர்களைப் படிக்கலாம். பெயர்களைத் தேர்ந்தெடுத்ததிலிருந்து விட்டுக்காரர்களின் மனப்போக்கைத் தெரிந்து கொள்ளலாம்" நடந்தவர்கள், ஒரு வீட்டின் எதிரே நின்றார்கள். வெளிக் கதவுப் பக்கம் சென்றதும், ஹரிசங்கர் சொன்னான்.

"நாம் ஒருக்காலும் வீடுகட்டிக் கொண்டு குடியிருக்கப் போவதில்லை" கமால்.

"நீ சொல்வது சரி. பூர்ஷ்வாத்தனம் எவ்வளவு தூரம் வருந்தத்தக்க வகையில் ஸென்டிமென்டலாகியிருக்கிறது, பார்! இந்தப் பெயர்களைப் படியேன்."

"க்வாபிஸ்தான்—கனவு விலாசம்! அட ஆண்டவனே..!" கமால்.

"ஆனால் நீ குல்ஃபிஷானிலும், கயாபானிலும் இருக்கிறவன்"

"தெரியும்."

"கமால்!"

"சொல்லுப்பா!"

"கொஞ்சம் சிந்தித்துப்பார்! ஜனங்கள் நிறைய வீடு கட்டி வைத்திருக்கிறார்கள். வெகு நீளத்திற்கு வெகு நீளம்; ஒன்றைவிட மற்றது அழகு மிக்கதாக. உலகம் முழுவதிலுமே வீடுகள்!"

"ஆம், நண்பா! மிக விநோதமாகத்தான் இருக்கிறது.

இருவரும் ஒரு குட்டைச் சுவரில் அமர்ந்து கொண்டார்கள். இந்தப் பிரச்சினைபற்றி ஆழ்ந்து சிந்திக்கலானார்கள். உண்மையிலேயே, புரொபஸர் உலக பாசத்தைத் துறந்து சென்றது அவர்களைப் பாதித்திருந்தது. நல்ல அறிவுத் தெளிவு கொண்ட மனிதன்—விஞ்ஞானி, உலகியலைத் துறந்து காட்டிற்குப் போய்விட்டானே! அதிசயம் தான்!

"இதற்கு ஏதோவொரு காரணம் நோக்கம் இருக்கத்தான் செய்யும்..." கமால் சொன்னான்.

இருட்டுகிறவரைக்கும் இருவரும் மாளிகைகளின் பெயர்களைப் படித்துக் கொண்டே போனார்கள்: நஸ்தான், தௌலத்கானா, ஆஷியானா, ராஜ்மஹால்... இந்த மாளிகைகளின் தோட்டங்களின் மலர்ந்திருக்கும் காட்டுப் பூக்களின் நறுமணம் சுற்றுப்புறமெங்கும் கமழ்ந்தது. இருவரும் திரும்பி வந்து ஒரு பங்களாவின் வாசலில் மதகுக்கட்டையில் அமர்ந்தார்கள். கீழே ஓடும் வாய்க்காலைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நீரோட்டத்தில் அறுந்த செறுப்பு ஒன்று தாவிக் குதித்து ஓடியது...

பெரிய கார் வந்து நின்றது. கமால் திடுக்கிட்டெழுந்தான். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். பக்கத்தில் ஹரிசங்கரைக் காணவில்லை. இப்போது நடப்பது *1942* இல்லை, *1956*. பழைய சொந்த டேராடூனில் தான் இல்லை; புதிய மாறிய டேராடூனில் இருப்பதை உணர்ந்தான். காரிலிருந்து மிடுக்காக ஒரு சர்தார்ஜி இறங்கி வந்தார்.

"நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?"

"நான்... நான்..." கமாலுக்கு நா குழறியது. மனசு அடித்துக் கொண்டது. சர்தார் அவனைக் களவாணிப்பயல், சாப்பாட்டறையிலிருந்து ரேடியோவைத் திருடிச் செல்ல வந்திருக்கிறானென்று எண்ணினாரோ என்னவோ? கமால் பேச்செழாமல் கேட்டுத் தூணில் பதித்திருக்கும் சலவைக் கல்லைப் பார்த்தான்.

'நவாப் தகீ ரஸா, பஹதுர் ஆஃப் கல்யாண்புர்'

இது கமாலின் வீடு. மதகுக் கட்டையிலிருந்து எழுந்தான்.

கண்டம் தடைந்தது; பேச்செழவில்லை. சான்றிதழ்களை எடுத்துச் சர்தாரிடம் கொடுத்தான்; ஜீவனற்ற சிரிப்பைக் காட்டினான்.

"ஓஹோ! நீங்கள் மூவபில் பிராபர்ட்டி சம்பந்தமாக வந்திருக்கிறீர்களோ? உள்ளே வாருங்கள்."

கமால் சர்தாருடன் தோட்டத்து வழியாக உள்ளே சென்றான். "உங்களுடைய ஸ்டோர் ரூம் பத்திரமாகப் பூட்டியிருக்கிறது. சாவி கொண்டு வந்திருக்கிறீர்களில்லையா?"

"கொணர்ந்திருக்கிறேன்."

டிராயிங் ரூமிற்குள் அழைத்துப்போயும், சர்தார் அவனுக்கு டீ கூடக் கொடுக்கவில்லை; ஒப்புக்குக்கூடச் சாப்பிடச் சொல்லவில்லை, சர்தார் ராவல்பிண்டியில் பெரிய காண்டிராக்டராக இருந்தவர். வெகு நேரம் தன் பழைய கதைகளையே சொல்லிக் கண்ணீர் வடித்தார். அவர் நெகிழ்ச்சியைக் கண்டு கமால் பயந்து போனான். எழுந்து விட்டான்.

"நாளைக் காலையில் வந்து பாக்ஸ் ரூமைத் திறந்து பார்க்கிறேனே. வரட்டுமா?"

"அவசியம். இதை உங்கள் வீடாகவே எண்ணிக் கொள்ளுங்கள்" சர்தார் கூறினார். பிறகு தம் காரில் ஏற்றிக் கொண்டு கமாலைத் தங்குமிடத்தில் கொண்டு போய்விட்டார்.

மறுநாள் காலையில் மறுபடியும் தன் 'கயாபான்' பங்களாவிற்குச் சென்றான். வெயில் அடித்தது. தோட்டத்தில் இரு இளம்பெண்கள் பேட்மிண்டன் விளையாடிக் கொண்டிருந்தார்கள். சர்தாரிணி எருமைகளுக்குத் தீனி வைத்துக் கொண்டிருந்தாள். உள்ளே ரேடியோ பாடியது. அமைதியான சூழ்நிலை. பக்கவாட்டில் சென்று ஸ்டோர் ரூமை அடைந்தான். பூட்டைத் திறப்பதற்கு முன்பாக, வெளிப் பக்கத்துப் படியில் உட்கார்ந்தான். இப்போது அவன் இருபதாம் நூற்றாண்டின் செலாவணியில்லாத பறிபோன பரம்பரையைச் சேர்ந்தவன். அவனுடைய குடும்பத்தாரின் உலகம், இலையுதிர் காலத்து மரம்—செடி—கொடிகளைப் போல் நலிந்தவர்கள். எதிரே தெரியும் தேவதாரு மரங்களின் நடுவே ஒற்றையடிப் பாதையில் அவன் குடும்பத்துப் பெண்கள் பல வண்ணக் குடைகள் தாங்கிச் செல்லும்போது, துருக்கி அல்லது ஐரோப்பிய நாவல்களில் வரும் கதாநாயகிகளைப் போல் காட்சியளிப்பார்கள்.

கோடைகாலத்தில் கமால் லக்னோவிலிருந்து குடும்பத்தாருடன் இங்கு வருவது வழக்கம். நடுக்கூடத்தில் மெத்தை—திண்டுகள் விரிக்கப்பட்டிருக்கும். மலைஜாதிக்காரனான சமையலாள் பகீரா தேனீர் தட்டைக் கணப்புக்கெதிரே கொணர்ந்து வைத்து விடுவான். குளிர்காலத்தில் தலயத்தும் கமாலும் ஏராளமான புத்தகங்களை எதிரே குவித்து வைத்திருப்பார்கள். வண்ணக் கலவை நூல்கள்,

அதிசயக் கதைகள், பொம்மைகள், மைகனோஸெட். ஸ்டோர் ரூம் திறக்கும்போதெல்லாம் மிக ஆதுரத்தோடு அம்மா பேகத்தோடு உள்ளே நுழைவான். எத்தனையோ அதிசயமான பண்டங்கள்—பொருள்கள் இதற்குள் அடைந்து கிடக்கின்றன. பெட்டிகள், கூடைகள், பாத்திரங்கள், லஸ்தர்கள், பெரிய விளக்குகள், பழைய பத்திரிகைகள், கடிதங்கள் நிரம்பிய கைப்பெட்டி, ஏதேதோ பொட்டலங்கள், பாய்—விரிப்புகள்-

குளிர் காலத்தில், உள்ளே நாற்காலியில் அமர்ந்து ஹுக்கா குடித்துக் கொண்டிருக்கும் தந்தையின் தோற்றம் நினைவு வந்தது. லீச்சி மரங்களில் பனி படிந்து வடியும். பணியாட்கள் விடுதியில், தோட்டக்காரன் திரிலோசன் பெரிய படமொன்றைச் சுவரில் ஒட்ட வைத்திருந்தான். அதில், இந்த உலகில் பாபகாரியங்கள் புரிபவர்கள் நரகத்தில் எப்படியெல்லாம் வேதனைகளை அனுபவிப்பார்கள் என்று காட்சிகளாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது. ஒரு சித்திரக்காட்சி: ஒரு மனிதன் பூஞ்சையான மாட்டின்மீது நிறையப் பளுவை ஏற்றி வைத்து ஓட்டுகிறான். எதிர்ப்பக்கத்துச் சித்திரத்தில், அதே மனிதன் நரகத்தில் வண்டியில் பூட்டப்பட்டு ஓட்டப்படுகிறான்; வண்டி நிறையச் சுமைகள்; நீண்ட நாக்கு கொண்ட நரகக் காவலர்கள் அவனை அடித்து வண்டி இழுக்க வைக்கிறார்கள். பணியாட்கள் பகுதியில் மற்றொரு காட்சி: ஜமாதார் மனைவி ரோஸி. அவள் மகள் இங்கிலீஷ்காரர் பங்களாவில் ஆயா வேலை பார்ப்பது, ரோஸி தேனீர் தயாரிப்பது எல்லாம் கலந்து நினைவுக்கு வந்தது.

லக்னோவிலிருந்து பணியாட்கள் பட்டாளமே இங்கு வந்து சேரும். டிரைவர் கதீர் வந்து சேருவான். சமையலறைக்கு எதிரே பலாமரம். ஹுஸைனியின் பீவி தினமும் மறவாது காய்களை எண்ணுவாள்.

சோஃபா, நாற்காலி, கட்டில்களில் சிவப்புத் துணி உறையிட்டிருப்பார்கள். எதிரே வராந்தாச் சுவரில் பெரிய படம்—கலைமானை வேட்டை நாய்கள் துரத்துகின்ற காட்சி. விருந்தினர் உபசரிப்புக் கூடம், வரவேற்பு அறை, உள் கூடம் இப்படி ஒவ்வொரு இடத்தின் அமைப்பும், காட்சியும், இயக்கமும் கமாலுக்கு உயிர்ப்புடன் நினைவு வந்தன. எதிரே தோட்டத்தில் தான் தனியாகக் கழித்த நாட்களும் காட்சிகளும் அவனுக்கு நினைவு வந்தன. கோடையில் வீட்டில் எல்லாரும் உறங்கிக் கொண்டிருப்பார்கள்; உச்சிவேளை. கமால் மட்டும் எழுந்து தோட்டத்திற்கு வந்துவிடுவான். லீச்சி மரங்களுக்கிடையில் உட்கார்ந்திருப்பான். நல்ல குளுமை. அதிசயமான—சுகமான சோம்பல்தனம் எங்கும் மண்டியிருக்கும். அமைதி ததும்பும் கருத்துக்கள் ஊற்றெடுக்கும். தொலைவில், தேவதாரு மரமொன்றில் பறவை கத்திக் கொண்டிருக்கும்: 'நான் தூங்கினேன்! தூங்கினேன்!'

அந்தப் பறவை சிவாலிக் தாழ்வரைகளைத் தவிர வேறெங்கும் தென்படாதாம். அதை யாரும் பார்த்ததுமில்லை. மலைவாசிகள் சொல்லுவார்கள்: "கடவுள் இந்த உலகைப் படைத்துக் கொண்டிருந்தார். எல்லாப் பிராணிகளுக்கும் பாக்கியத்தையும் சிறப்பு இயல்புகளையும் அவரவர் பங்குக்கு ஏற்ப அருளிக் கொண்டிருந்தார். மயிலுக்குத் தோகை, குயிலுக்கு இனியகுரல் என்று சிறப்பியல்புகள் அருளப் பெற்றன. அந்தச் சமயத்தில் இந்தப் பறவை எங்கோ தூங்கிக் கொண்டிருந்தது. இதனாலே இது வாழ்நாள்பூராவும் இப்படியே கதறிக் கொண்டிருக்கிறது. கவனமாகக் கேட்டால் 'நான் தூங்கினேன்! நான் தூங்கினேன்!' என்று கதறுவது புரியும்!'

சர்தாரிணி ஏதேதோ பேசிக் கொண்டு, இங்குமங்கும் போய்க் கொண்டிருந்தாள். கதவை வேகமாக அடித்துச் சாத்தினாள். கமால் 1935ஆம் ஆண்டிலிருந்து திரும்பி தற்காலத்திற்கு வந்தான்.

படியிலிருந்து எழுந்தான். பையிலிருந்து சாவியை எடுத்து சாமான்களறையைத் திறந்தான். உள்ளே போய் அலமாரிகளை ஏதோ கவனமாகத் திறந்து திறந்து மூடினான். பெட்டிகளைத் திறந்து பார்த்தான். இந்தப் பொருள்களையெல்லாம் என்ன செய்வதென்று தோன்றவில்லை. மனிதன் தன் சொத்து—பொருள்கள் என்று அபிமானித்து மகிழ்ந்து கொண்டிருக்கும் அந்தக் குப்பலைத் தத்துவ நோக்காகப் பார்த்தான். மேலும், இதே போன்ற பொருள்கள் குப்பல் குப்பலாக லக்னோவில் 'குல்ஃபிஷான்' மாளிகையிலும், கல்யாண்புர் மாளிகையிலும் தனி அறைகளில் அடைந்து கிடக்கும். அறைக்கு நடுவே தீவு போல் சிறிய இடம் காலியாக இருந்தது. அங்கே நின்று சிந்தித்தான்; இந்தச் சொத்தைச் சொத்துக்காகவா உலகம் அடித்துக் கொண்டு சாகிறது! இவ்வளவுக்கும் பதிலாக இழப்பீடாக 'ஒரு மான் தோல்... ஒரு மான் தோல்...'

இப்போது புரிகிறது. பெரியவர்கள் ஏன் உலகியலைத் துறந்து காடுகளுக்குப் போய் விடுகிறார்களென்பது.

கமால் குந்தியிருந்து பழைய கடிதங்களுள்ள பெட்டியைத் திறந்து பார்த்தான். சுற்றிலும் பழைய பத்திரிகைகள், புத்தகங்கள், படங்கள் சிதறிக் கிடந்தன. கடிதங்களின் உறைகளில் பலதரப்பட்ட தபால் முத்திரைகள். பட்னா, 1933, விலாஸ்புர், 1928, போபால், 1937... இந்தக் கடிதங்களில் என்ன என்ன தகவல்கள் இருக்கின்றனவோ? எவரெல்லாம் இக்கடிதங்களை எழுதியிருக்கிறார்களோ? அவர்கள் எங்கே, எப்படி இருந்திருப்பார்கள்? இந்தக் கடிதம்: ராஸ் பீஹாரி லாலிடமிருந்து 1934இல், பீலீபீத்திலிருந்து வந்தது. கிறுக்கலான உருது எழுத்து. அவர் யார்? எப்படி இருந்தார்? வேறு சில கடிதங்கள்: சிவானந்த பாண்டே, ராணிகேத் மொகம்மத் அகமத் அப்பாஸி, முன்சிப், கோண்டா ஜில்லா...

கமால் தரையில் சப்பணமிட்டு உட்கார்ந்து கொண்டான் கடிதங்களைப் பழையபடியே பெட்டிக்குள் திணித்து வைத்தான். அப்பெட்டியை ஒரு அலமாரிக்குள் அடைத்தான். விரிப்புகளுக் கடியில் பழைய ஃபைல்கள் கிடந்தன. வழக்குகள், நிலங்கள், வீடுகள் பற்றிய பத்திரங்கள், அடமான—விடுதலை—விற்பனை ஆகிய பத்திரங்கள், நிரம்பியிருந்தன. அவத் ஆட்சியின் வரலாறு படங் களுடன்; பழைய புத்தகம்; தொட்டால் மடிந்து ஒடியும். பக்கங்கள் மஞ்சளித்திருந்தன. முதல் பக்கத்தில் 'ஹிஸ் ஹைனஸ் த ஆனரபிள் சர் மகாராஜா திக்விஜயசிங் பஹதுர் கே. ஸி.எஸ்.ஐ.எ, பல்ராம்புர்—துளஸிபுர், அவத் சமஸ்தானம்' என்ற முழுப் பெயருடன் கோணல் மாணலாக வரைந்த அவர் படமும் அச்சிடப்பட்டிருந்தது. அவர் கையால் எழுதிய—அழகிய உருது நடையில் அமைந்த முன்னுரை அச்சாகியிருந்தது; அந்தக் காலத்து உரைநடை.

"சுருக்கமாகச் சொல்லப்படுவது என்னவென்றால், பரிவு—அருள் இல்லாத பேச்சுக்களால் மிகக் கலங்கிப் போன ஆலிஜாஹ் அவர்கள் ஒருநாள், ஏதோ காரணமாக, கயமைத்தனமே இயல்பாகக் கொண்ட முகத்துதிக்காரர்கள் புடை சூழ்ந்துவர, ஏதோ கவலையால் என்ன செய்கிறோம் என்பதைச் சிந்தியாமல், காவி உடை அணிந்து, பக்கிரி மாதிரி வேடம் புனைந்து, ஈச்சம்பாயில் அமர்ந்திருந்த காலையில், உற்ற நண்பர்களும் அதே நிலையில் இருந்து பொதுவாகவும் சிறப்பாகவும் பிரபலமானவர்களாக, பக்கத்தில் அமர்ந்திருந்தார்கள். ஆலி ஜாஹ் அவர்கள் தம்மீது ஏற்பட்டிருக்கும் வீண் பழியான இழிவை உணர்ந்து, அலி இப்ராஹிம்கானுக்கு மகாமேதாவியான நவாபின் சார்பாகச் சொல்லியனுப்பினார்: நான் பாதுஷாவின் உத்திரவுப்படி..."

கமால் அடுத்த பக்கத்தைப் புரட்டினான்.

"வெள்ளைக்காரத் துரைமார்கள் இந்துஸ்தான் அறிவு மங்கிய தென்பதை முன்பே தெரிந்து கொண்டுவிட்டார்கள். மேற்கிலிருந்து கிழக்குவரையில் நிலைமை அம்பலமாகிவிட்டது. இதனால் ஆட்சிப் பொறுப்பும் அமைப்பும் வெகு திடமாக இருக்க வேண்டும். பிறகு எல்லா ஆட்சிப் பதவிகளிலும் புகுவது எளிதாகும். திடீரென்று ஒருவனுடைய வீட்டில் நுழைந்துவிடக் கூடாது. இப்போது எல்லாப் பழைய நிலைகளும் அம்பலமாகிவிட்டன. எல்லாருடைய மதச் சிறப்புகளும் சரிந்துவிட்டன. அதாவது, இந்துஸ்தானத்தின் மேன்மை யான ஒளிவிளக்குகள் அணைந்துவிட்டன."

"மிர்ஜா வஜீர் அலிகான். ஜூன் 1816ஆம் ஆண்டு காலமானதும் கல்கத்தா, காஸிபாகில்—திப்புசுல்தானின் மகன் புதைக்கப்பட்ட இடத்தில் அடக்கம் செய்யப்பட்டார். சில ஏழை ஜனங்கள் இந்தியாவின் மந்திரியாயிற்றே என்று கருதி, சவ அடக்கத்தின்போது

உடன் இருந்தார்கள். நகரத்து சில வேசிமார்கள் அருடைய நல்ல தாராள புத்தியையும், இப்போதைய நிராதரவையும்கண்டு, வருந்தி, தம் வீட்டு வாசற்படியில் நின்றே கண்ணீர் வடித்தார்கள். துரை உத்தரவிட்டார்—வெள்ளைக்காரர்கள் திரைக்கு வெளியே நிற்க வேண்டும். தாயூத் (சவப்பெட்டி) எதிரே வெள்ளைக்கார சோல்ஜர்கள் பாரா நின்றார்கள். அந்தக் கூட்டத்தில், வெள்ளைக்கார ரெஜிமெண்ட், லக்னோ பகுதித் தலைவர் ஜான் லிம்ஸ்டன், பனாரஸ் ரெஜிமெண்ட் தலைவர் ஜான் சேரி துரை, கொலையாளிகளுக்கு உடந்தையான தஃபஜ்ஜல் ஹுசேன் கான் ஆகியோர் இருந்தார்கள்."

"மிர்ஜா முஸப்பர்பஃக்த் இளவரசு, அரசகுமாரன் மிர்ஜா ஸுலேமான் ஷிகோஹ் இருவரும் ஈரானிய சந்ததி என்பதற்காகவும், உலகியல் மோகம் காரணமாகவும் வெளியே வந்தார்கள். சங்கடப் பட்டுக் கொண்டிருந்த, வேலை வெட்டியில்லாத சில லக்னோக் காரர்களும் உடன் இருந்தார்கள். தோல்வியுடன் லக்னோ திரும் பியதும், பேகம் மிம்ஜும்லா மணமான ஜெனரல் மார்ட்டினை மணந்து கொண்டார். அவர் கொடுக்கச் சொன்ன பென்ஷனில்தான் இரு நாவப் சந்ததிகளும் வாழ்ந்து வந்தார்கள். வெள்ளைக்காரி தொரைசானி காலமானதும், அந்த வீட்டில் நவாப் சந்ததிகள் வாழ்ந்து வந்தார்கள்."

கமால் புத்தகத்தைக் குப்பையில் தூக்கியெறிந்தான். கையில் படிந்திருந்த தூசுகளை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டான். துடைத்துக் கொள்ளவில்லை.

'இந்தச் சாமான்கள் எங்கும் போய்விடாது. ஜப்தி செய்து கொள்ளட்டும், பரவாயில்லை!' அந்தப் பழம்பொருள் கூடத்திலிருந்து வெளியே வரும்போது இருபது ஆண்டுகளுக்கு முன்பு எடுத்த குரூப் போட்டோ ஒன்றைக் கையோடு எடுத்து வந்தான். அதில் அவனுடைய பெரியப்பா 'ஹார்பூல்' அணிந்து நடுவில் உட்கார்ந்திருந்தார். ஏதோவொரு ஜில்லாவில் பிரிவுபசாரக் கூட்டத்தில் எடுத்த போட்டோ. அதில் பல டெபுடி கலெக்டர்களும், வக்கீல்களும் வரிசையாக உட்கார்ந்திருந்தார்கள். பின்னால் பெரிய வாசல் நிலைகளுள்ள கூடம். ஸக்ஸேனா, ரிஜ்வி, டாகுர் ராமநாராயண், மசூதுல் ஹஸன் இவர்கள் விசித்திர மனிதர்கள்—நேரிய, அப்பாவி களான, வெகுளிகளான மனிதர்கள், வஞ்சகம் என்பதை எவரும் அறிந்ததில்லை. ராக்கெட் விடுவது அவர்களுக்குப் பொழுது போக்காக இல்லாதிருக்கலாம். தில்லுமுல்லு, ஏமாற்று வித்தை, வஞ்சகமெல்லாம் கைவரப் பெறாதவர்கள், எத்தகைய படு அசடர்கள்! அவர்களுக்கென்று தனிக்கேலி—கிண்டல் ரகங்கள், தனிப்பொழுது போக்குகள்— முஷையரா கவியரங்கம், கோர்ட்டு வழக்கு, வேட்டை, இசைவிழா. எவ்வளவு அமைதியான—சுவையான வாழ்க்கை வாழ்ந்திருக்

கிறார்கள்! இவர்களுடைய கேலிகளும் கிண்டல்களும் கமாலுக்கு நினைவு வந்தன. ரிஜ்வி சாகப்பிற்கு குலாப்ஜாமுன் என்றால் கோபம் வந்துவிடும். டாகர் சாகப்பின் தொந்தி நகைச்சுவைக்கு இலக்காகியது. மீரட்டில் நெசந்தி விழாவுக்குப் போக ஏற்பாடுகள் நடக்கின்றன. ஏதோவொரு மேளாவுக்குச் செல்லத் திட்டமிடப்படுகிறது. மைத்துன னுடன் இளவட்டங்களின் கேலிப் பேச்சுகள் கலகலப்பூட்டுகின்றன. எவ்வளவு அமைதியான சமூகம்...!

கமால் அந்த போட்டோவையே பார்த்துக் கொண்டிருந்தான். நாம் எந்த வகையில் நம் முன்னோர்களைவிடச் சிறந்தவர்களென்று காட்டிக் கொண்டிருக்கிறோம்? முதிய பெருந்தகைகளே! வெகுளியான பெருமக்களே! உங்களுக்கெதிரே நான் நிற்க வெட்கப்படுகிறேன். உங்களை ஏறிட்டுப் பார்க்கவே கூசுகிறேன். முகத்தை மறைத்துக் கொண்டு ஓடி ஒளியவே விரும்புகிறேன். ஓடிக் கொண்டிருக்கிறேன்! குதாஹாபிஸ்! குரூப் போட்டோவைப் பழையபடியே தரையில் போட்டுவிட்டு, அறையைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்தான்.

தேவதாரு மரங்களுக்கிடையே அந்த அதிசயப் பறவை ஓல மிட்டுக் கொண்டிருந்தது: "நான் தூங்கினேன்! தூங்கினேன்!"

'அடேடே! தூங்கினால் என்ன தவறாமல்,' கமால் தனக்குள் சொல்லிக் கொண்டான்: 'சரி, விழித்துக் கொண்டு இருந்தால் மட்டும் என்னவாம்? அந்தக் கடவுள் உனக்கு என்ன பெரிய சுகத்தை அருளிவிடப் போகிறார்? ஆனால் ஒன்று, கழிவிரக்கமும் ஏக்கக் கூவல்களும் தன் பெருமையை உணரச் செய்கின்றன. சரி, நாம் என்ன அப்படிப் பெரிய மகத்தான படைப்புகளாகிவிட்டோம்? கமால் ரஸா, சிரில் ஐஷ்லே, கௌதம நீலாம்பர் எல்லாருமேதான்! தனித்தனிப் பிதற்றல்களைத் தானே படைத்திருக்கிறார்கள்! வேறென்னவாம்?'

தில்லி ஸ்டேஷனில் அவனுக்காக அன்புறவால் அக்காவான லாஜ்வதியின் கணவர் காத்திருந்தார். அவரோடு பேலா ரோடு வந்தான். லாஜ்வதி வராந்தாவில் நின்று காத்திருந்தாள். கமாலைக் கண்டதும், அவனைக் கட்டிக்கொண்டு கதறிவிட்டாள். "இங்கிருந்து போகாதே! கம்மன்! நிர்மலா காலமாகிவிட்டாள். ஹரிசங்கர் வெளியூரிலேயே தங்கிவிட்டான். நீ பாகிஸ்தான் போய்விட்டாய்...!" அழுது அழுது லாஜ்வதிக்கு விக்கல் வந்துவிட்டது, கேவினாள்.

பேசாமல் உட்கார்ந்திருந்த கமால், "நீ ஏன் அழுகிறாய்? அழாதே, அழாதே!" என்றான் குரல் இடற.

மாலையில் புறப்பட்டு அமிருதஸர் போகவேண்டும். விரை விலேயே லாஜ்வதியிடமிருந்து விடைபெற வேண்டுமென்று தீர்மானித்தான். சாப்பிட்டதும் 'அத்திம்பேர்' கூடவே புதுதில்லிக்குக் கிளம்ப ஆயத்தமானான்.

“கௌதமனுக்குப் ஃபோன் செய்து பாரேன். சண்டிகர் போயிருந்தான். திரும்பி வந்திருப்பான்.” லாஜ்வதியின் கணவர் சொன்னார். விருப்பமில்லாமலே நம்பரைப் பார்த்து டயல் செய்தான். கௌதமன் கிடைத்தான்.

“ஹலோ கௌதம்! அடேய்! நீ இங்கேயா இருக்கிறாய்? மடசாம்பிராணி! ஏய் முட்டாள்...!” சிரமப்பட்டு எப்போதும் போல் மகிழ்ச்சிக் கலகலப்புடன் பேச முற்பட்டான் கமால். “ஊமடியர்! ஆம்... இன்றைக்குத்தான் டேராடூனிலிருந்து வந்தேன்... என்ன...? டாக்காவிலிருந்து புறப்பட்டேன்... ஆமாம், லக்னோ போயிருந்தேன்... அப்பி உன்னை மிக விசாரித்தாள்... ஆமாம், எல்லாரும் சௌக்கிய மாய்—ரொம்ப சௌக்கியமாய் இருக்கிறார்கள் என்னைத்தவிர.. அப்படியில்லை, நானும் நவாப் தர்பாராகத்தான் ஒய்யாரமாக வாழ்கிறேன்... இருந்தாலும், சரி, விடு! எல்லாரும் நலம். கதீர், கமருன்? அடேயப்பா! உனக்கு சகலமான பேர்களும் நினைவிருக்கிறதே யப்பா! எதுதான் உனக்கு மறக்கும்? அரே மாஷா அல்லாஹ்! கதீர் மிர்ஜாபுர் திரும்பிப் போய் வெகு காலமாகிவிட்டதப்பா...! காரெல் லாம் எப்போதோ விற்றாகிவிட்டதே! ஏன் விற்கவேண்டுமென்றா கேட்கிறாய்? அடேய்! இங்கே வாழ்க்கையே விற்பனையாகிக் கொண்டிருக்கிறதே...! நீ கார் வாங்க அலைந்து கொண்டிருக்கிறாயா? நீ இன்னும் விற்கப்படவில்லை...! ஸாரி! நான் தவறிச் சொல்லி விட்டேன். நான் விற்பனையாகி விட்டேன்; நானே என்னை விற்று விட்டேன். நல்ல விலை கிடைத்திருக்கிறது. போணிசெய்ய வேண்டிய தருணமப்பா, இது-! இன்னும் யார் யாரைப்பற்றிக் கேட்கவேண்டும், கேள்! சுட்கீ ராம்தையா-? அவள் காலமாகி விட்டாளே. குல்ஃபிஷான் மாளிகைத் தோட்டத்திலே புல் அறுத்துக் கொண்டிருந்தாள்; பாம்பு கடித்துவிட்டதாம், பாவம்...! கங்காதீன் மத்தியப் பிரதேசத்தில் எங்கோ டிராக்டர் ஓட்டிக் கொண்டிருக்கிறான். முன்னுக்கு வந்து விட்டான். அப்பி சொன்னாள். அவன் எஃப்.ஏ. பாஸ் செய்து விட்டானாம். இதைக் கேட்டதும் நான் மிக மகிழ்ந்தேன்... இன்னும் பேசிக் கொண்டிருக்க வேண்டுமா?... சந்திக்க முடியாதப்பா! எனக்கு நேரமில்லை... என்ன? உன் கான்ஃபரென்ஸ் மூன்று மணிக்கு முடிந்துவிடுமா? பிறகு எனக்காக ஆல்ப்ஸில் காத்திருக்கிறாயா? எதற்கப்பா? எனக்காகக் காத்திருந்து என்ன பயன்...? கஸ்டடியனைச் சந்திக்கப் போகிறேன். ‘பி’ பிளாக்... பிறகா? சரி, பார்க்கலாம். முயற்சிக்கிறேன். ஆனால் எனக்காக அதிக நேரம் காத்திருக்காதே... நல்லது! ஸோலாங்!”

கமால் டெலிபோன் ரிஸீவரைக் கீழே வைத்தான். லாஜ்வதி வாசல் பக்கம் நின்று கொண்டிருந்தாள். “சரி, நான் கிளம்புகிறேன்” என்றான்.

"சீக்கிரம் வந்துவிடு!"

"சரி"

"டிபனுக்கு என்னசெய்து வைக்கட்டும்?"

"எப்போதும் செய்வதைச் செய்யேன்!"

'நீ இந்தப் பாசம்—பரிவெல்லாம் காட்டி என்னை வலை போட்டுப் பிடிக்காதே. என் மனசு இளகாது. பிடிப்பு தளராது. ஊன்றிய கால் ஊன்றியதுதான். திடமாக இருக்கிறது. கிழவனாகி விட்டேன். பொறுமை, நிதானம், சமநிலை, அமைதி எல்லாம் கொண்டிருக்கிறேன்...' மனத்துள் சொல்லிக் கொண்டான்.

கமால் ஜம்னா ரோடு பக்கம் சென்றான். புதியவனைப்போல் சுற்றித் திரிந்தான். மோட்டார் கார்கள், செல்வந்தர், செழிப்புள்ளவர், மகிழ்ச்சி கொண்டவர், அவசர அலுவலர், பகட்டான கடைகள் யாவும் எதிர்ப்பட்டன. கமாலுக்குப் பயமாக இருந்தது. கிளம்புவதற்கு முன்பு, சிவில் லைன்ஸ் போலீஸ் ஸ்டேஷனுக்குப்போய், தான் இந்தியாவை விட்டுப் புறப்படுவதைத் தெரிவித்துவிட்டு வரவேண்டு மென்பது நினைவுக்கு வந்தது. வெயில் உறைத்தது. மனச்சள்ளையுடன் களைப்பும் சேர்ந்து கொண்டது. இறக்கை முளைத்து, அப்படியே கராச்சிக்குப் பறந்து போய்விட மாட்டோமா என்று இருந்தது. இனி இந்தியாவிற்கு வருவதில்லையென்று தீர்மானித்துக் கொண்டான்.

"அதோ பார், எதிரே யார் வருகிறாரென்று?" கமால் டாக்டர் ஹைன்ஸ் கிரீமரைக் கண்டதும், செயற்கை உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டான். மலை போலிருந்த மதியப்பொழுது இலகுவாகக் கழிந்துவிடும் என்கிற எண்ணம் மகிழ்வித்தது.

"ஹலோ! ஹலோ! மைடியர் பாய்!" டாக்டர் கிரீமர் கைகளை நீட்டி அவனை எதிர்கொண்டார். "விசித்திரமான சந்திப்பு இது!"

அவருடன் செய்தி தகவல் துறை அமைச்சரகத்தைச் சேர்ந்த பெண் ஒருத்தி இருந்தாள். கமாலின் வணக்கத்திற்கு அவள் பெரும் போக்காகப் பதில் வணக்கம் செய்தாள்.

"நான் டாக்டரை தேசிய மியூசியத்திற்கு அழைத்துப் போகிறேன். நீங்களும் ஒழிவாக இருந்தால் வாருங்களேன்." கமாலைப் பார்த்துச் சொன்னாள். அவள் பெயர் குமாரி அருணா வாஜ்பேயி. கமால் கண்களை மூடிக்கொண்டான். நிர்மலா உயிரோடிருந்தால், அவளும் இந்த மாதிரி ஒரு பதவியில் இருந்திருப்பாள்.

"சரி, வருகிறேன்" பதிலளித்தான்.

பிராட்காஸ்டிங் ஹவுஸிலிருந்து மேலும் இரு ஐரோப்பிய இன்டலெக்சுவல்களை உடன் அழைத்துக் கொண்டு, ராஷ்டிரபதி பவனுக்குச் சென்றார்கள். டாக்டர் ஹைன்ஸ் கிரீமர், அவருடைய நண்பர்கள் இந்த உலகத்தின் உறுப்பினர்கள். இதே உலகத்தில் கமாலும் சில காலம் முன்பு சேர்ந்திருந்தான். அவனுக்கும்

வாழ்க்கையை விடப் பரந்த இலட்சிய நோக்கு இருந்தது. அவர்களுக்கும் உலகப் பொருள்களில் மர்மங்கள் அடங்கியிருப்பது தெரிந்தது. அவர்களிடமும் மெய்ஞானத்துடன் பகுத்தறிவு கலந்திருந்தது. புத்த ஜயந்தியில் கலந்து கொள்ள இந்தியாவிற்கு வந்திருக்கிறார்கள். ஸ்ரீநகரில் ஒரு ஹவுஸ் போட்டில் குடியிருந்துகொண்டு பாரதத்தின் சிற்ப படிமக்கலை பற்றி நூல் எழுதி வருகிறார்கள். அவர்களைச் சந்திக்க அவர்களைப்போன்ற வெளிநாட்டாரும், உள்ளூர் படிப்பாளிகளும் வந்து போகிறார்கள். இவர்கள் கைகளைப் பிசைந்துகொண்டு, தரையில் மெத்தை, பாய் என்று போட்டு, வந்தவர்களை உட்கார வைக்கிறார்கள்; (பால் கலக்காமல்) வெறும் தேனீர் கொடுக்கிறார்கள்.

ராஷ்டிரபதி பவன் படிக்கட்டுகளில் நின்று, டாக்டர் ஹைன்ஸ் கிரீமர் கைகளைப் பிசைந்து கொண்டு, தலை உயர்த்திப் பார்த்தார்; பொன்னிறமான சிங்கங்களுக்கடியில் பொறிக்கப்பட்டுள்ள 'ஸத்ய மேவ ஜயதே' (உண்மையே வெல்லும்) என்பதை உரக்கப் படித்தார். அதன்மொழிபெயர்ப்பைக் கமாலுக்குச் சொன்னார். பிறகு, அவர்கள் குமாரி அருணா வழிகாட்ட, உள்ளே சென்றார்கள். வைஸ்ரீகல் லாஜின் விசாலமான கூடங்களில் குளுமை அதிகமிருந்தது. வெளியே தகித்த வெயிலுக்கு இது மிக இதமாக இருந்தது. பழைய காலத்திய, மத்திய காலத்தியச் சிற்பங்கள் ஒளியிழந்த கண்களால் கமாலை முறைத்துப் பார்த்தன. டாக்டர் ஒவ்வொரு சிற்பத்திற்கும் எதிரே நின்று பிரெஞ்சிலும், ஜெர்மனியிலும் தம் கருத்தைத் தெரிவித்து வந்தார். ஓரிடத்தில் கம்பீரமான புத்தர்சிலை இருந்தது. அதன் பின்புறத்தில் வெல்வெட் திரை அலைபாய்ந்தது. கமால் படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டான்.

"இது தற்காலிகமான அரும்பொருள் கருவூலம். நம்முடைய தேசிய அரும்பொருள் கருவூலம், நம் புராதனமான பண்பாட்டுக்கு ஏற்ப நிர்மாணிக்கப்பட்டு வருகிறது." குமாரி அருணா அருகில் வந்து தெரிவித்தாள்.

"ஆமாம்; செய்ய வேண்டியதுதான்" கமால் பதிலளித்தான். ஓராண்டுக்கு முன்பு அவனும் இதே போலத்தான் டாமிற்கு இந்த இடங்களைச் சுற்றிக் காண்பிக்கையில் பேசினான்.

"இப்படி வாருங்கள். எங்களுடைய புராதனமான மொஹஞ்சதாரோ நாகரிகத்தைச் சேர்ந்த நடன சிங்காரியைப் பார்த்தீர்களா?"

குமாரி அருணா சலவைக் கல் மேவிய நடைபாதையில் சிட்டாகத் திரிந்தாள்—சன்ஹோதடோ, மொகன் ஜதாரோ, ஸ்வாத் தாழ்வரை, ஹரப்பா, தக்ஷசிலா, ரோபட்... இவை முடிந்ததும் தற்காலக் காட்சிகள். "இதைப் பாருங்கள், மூன்றாம் நூற்றாண்டுக் கல். அசுவமேத யாகம் செய்த இடம்; டேராடூனில் நடந்தது. இவை

அஹிச்சத்ரனின் சிலைகள்..." டாக்டரிடம் மும்முரமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

ஒரு பெண்சிலை எதிரே வந்து சேர்ந்தார்கள். ஆர்க்கைக் பாணி சிலை. "இது சிராவஸ்தியில் அகழ்வாராய்ச்சியின்போது இந்த ஆண்டு கிடைத்தது; சிவப்பு மண்ணில் செய்த இந்தப் படிமத்தின் காலம் கி.மு. 4ஆம் நூற்றாண்டு." டாக்டர் தன் கையெழுத்துப் பிரதியைப் புரட்டிப் பார்த்துவிட்டு, நண்பர்களிடம் பிரெஞ்சில் சொன்னார்.

குளிர்ந்த தரையில், அந்தப் படிமத்திற்கு எதிரே எல்லாரும் உட்கார்ந்தார்கள். சிற்பத்தில் ஜீவகளை, துடிப்பு, செம்மை புலப் பட்டன. வாழ்க்கை பற்றிய கற்பனையைவிட, வாழ்க்கையே, பூமியில் சிருஷ்டியே அதில் தென்பட்டது. சிலையின் அழகையும் அமைப் பையும் பற்றி ஒவ்வொருவரும் தம் போக்கில், அதிசயித்துப் பாராட்டி, விமரிசித்தார்கள்.

"அந்தக் காலத்துக் கலைஞர்களுக்கு, தம் கருத்துக்களைக் குறிப் பீடாக கலையுருவில் காண்பவர்களுக்குப் புலப்படுத்த வேண்டிய பிரச்சினை இருந்திருக்கும். இந்த நோக்குதான் வேதகாலத்திற்குப் பிறகு மூர்த்தி பூஜை (விக்ரக வழிபாடு) பரவிப் பிரபலமாக வழி செய்திருக்க வேண்டும்." அருணா தன் கருத்தைத் தெரிவித்தாள்.

உருவம்—அருவம், தன்மை—இன்மை பற்றியெல்லாம் கமால் அறிந்து வைத்திருப்பதை இனி யாரிடம் சொல்லப்போவான்? இந்த அறிவுக்கெல்லாம் இனிப் பயனில்லை; கமால் இதையும் சிந்தித்தான். அந்தப் படிமத்தினிடமிருந்து அவனுக்கு எந்தவிதமான செய்தியோ, போதனையோ, தூண்டுதலோ கிடைக்கவில்லை.

"வேதாந்த முடிவுப்படி பரிசுத்தமான அழகுப் பிரயோகம், நடுநிலையிலுள்ள ஆனந்தானுபவம், மின்னலைப்போல் இணைந்தது; அதைப் பிரிக்க முடியாது. அது தானே வெளிப்படுகிறது. அது சுயம் பிரகாசம்! ஒரு கலைஞனுடைய கற்பனை, தேவலோகச் சிற்பி விசுவகர்மாவின் கற்பனையோடு இணைந்திருப்பதைப்போல், ஆத்மா வோடு அல்லது தன் நிலையோடு இணைந்துவிடுகிறான் கலையை —அழகைக் காண்பவன். அவன் ஆத்மாவிலேயே வாழவும் செய்கிறான். அவன் எப்போதும் பார்க்கிறான்; அவனுடைய சொரூபம் எல்லா சிருஷ்டிகளுக்கும் ஊற்றுக்கால். உலகத்தின் சொரூபம ஒவ்வொரு உருவத்திலும் பிரதிபலிக்கிறது. இந்த வேதாந்த நோக்கு பற்றி உன் கருத்தென்ன, கமால்? இந்தச் சிற்பம் சிறப்பாகத் தோன்றுகிறதா, அல்லது மதுரா பாணிச் சிற்பத்தைத் தான் நீ ஒப்புக் கொள்வாயோ," மோஸியோ ராவல் ஈடுபாட்டோடு பேசினான்.

"பசித்திருப்பவனுக்குக் கலையையோ, தத்துவ ஞான போதத் தையோ ரசிக்க—விமர்சிக்க இயலாதாகையால், எனக்கு இது

அப்பாற்பட்டது." கமாலின் பேச்சிலிருந்த கடுமையும வேதனையும் மற்றவர்களைத் துணுக்குற வைத்தன.

"சரி, இவன் கம்யூனிஸ்ட்." டாக்டர் தீர்மானித்துக் கொண்டார்.

'இவனுடைய சலிப்பு—சள்ளைத்தனத்திற்கு என்ன காரணம் இருக்கும்,' அருணா யோசித்தாள். அமெரிக்கா சென்று உளவியல் துறையில் டாக்டர் பட்டம் பெற்றுத் திரும்பியவள். கமாலை ஏறிட்டுப் பார்த்தாள்: படித்த வாலிபன்; நல்ல அழகன். "நீங்கள் சமஸ்கிருதம் படித்திருக்கிறீர்களில்லையா?" புகழ்ச்சியாகக் கேட்டு வைத்தாள்.

"ஏதோவொரு காலத்திலே கொஞ்சம் படித்திருக்கிறேன்." மணியைப் பார்த்தான்; கஸ்டடியனைச் சந்திக்க நேரமாவதை உணர்ந்தான். அந்த அழகிய பெண்சிற்பம் குளிர்ச்சியாக இருந்தது. கல் என்றுமே 'டைம்லெஸ் பிகம்' என்பதற்கு அறிகுறி. நிகழ்காலத்தில் வெள்ளோட்டம் மிக வேகமுடையது; இதில் கடந்த காலங்களில் உதிர்ந்த இலைகள் மிதந்து வந்து சகதியில் சிக்கி விடுகின்றன. இதே நினைவுத் தொடரில் கமால் சிந்தித்தான்: 'இதற்காகத்தான் நான் மண்வெட்டியைக் கொண்டு மக்கிய இலைகள், சகதி, குப்பை கூளங்களையெல்லாம் சுரண்டிக் கொட்ட வேண்டுமென்று கூறு கிறேன். நான் இத்தகைய துப்புரவுப் பணியில்தான் ஈடுபட்டிருக் கிறேன். மூளை, சிந்தனை, மனது இவற்றுக்கு ஸ்பிரிங் க்ளீனிங் தேவை. நல்ல சலவை தேவை. கடந்த காலத்துடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்டு விட்டேன். இதையெல்லாம் அந்த வெள்ளைக்காரர்களிடம் சொல்ல வேண்டும்.' பிறகு அந்தப் பதுமையைப் பார்த்து மனத்துள் சொல்லிக் கொண்டான்: 'சிராவஸ்தியின் அழகிய யக்ஷிணியே! உன்னை உருவாக்கியவன் எவனாக இருந்தாலும் சரி, அவன் தன் கருத்தை, கருதிய செய்தியை என்வரைக்கும் எட்ட வைக்க முடிய வில்லை. உன்னைப் படைத்தவன் என்னுடன் தொடர்பு கொள்ள முடியாது. நான் உருவம்—அருவம் பற்றிய ஆராய்ச்சி விவாதத்தில் இறங்க மறுக்கிறேன். இந்தத் தேசிய தொல்பொருள்—கலைப்பொருள் கருவூலத்தை நான் சகல முற்கால நிலைகளுடன், எல்லா பாரத்ப் பகுதிகளுடனும் குமாரி அருணா வாஜ்பாயியிடம் ஒப்படைத்து விட்டேன்.'

கமால் அங்கிருந்து வெளியேறினான். ஐரோப்பிய அறிஞர்களின் குரல்கள் ஒலித்தன.

"ஆஹா! இந்தப் படிமத்தைப் படைத்தவனின் தொழில்பற்றி நாம் அறியமுடிந்தால் எவ்வளவு உபயோகமாக இருக்கும்! இந்த விசித்திரமான தேசத்தில் வரலாற்றுக்கு எவ்விதச் சிறப்பும் கிடையாது; மதிப்பும் இல்லை." டாக்டர் கிரீமர் சொல்லிக் கொண்டிருந்தார்: "நிகழ்ச்சிகளுக்கு எவ்வித மகத்துவமுமில்லை. உண்மையென்பது

வதந்திதான். காலத்தின் இடைவெளிக்கு எவ்வித மதிப்பும் கிடையாது. கணம்தான் சாசுவதம். மனிதன் ஊர் பேர் தெரியாதவன். அவனுடைய படைப்புகள், கலை சிருஷ்டிகள், இலக்கியம் எதற்குமே காலக்கடலில் தனிஇடம் கிடையாது; ஒப்புக் கொள்வதுமில்லை."

"ஆம். மனிதன் மரிக்கிறான்; உடனே அவன் எரிக்கப்பட்டு விடுகிறான். காரணம், அவனுக்கென்று வரலாற்றுச் சிறப்பு, பொருள் படைத்த நிலையில் ஏதும் கிடையாது." முஸியோ ராவல் சொன்னார்.

"எவ்வித ஆபத்தும்—விபத்தும் இந்திய அறிவைப் பாதிப்ப தில்லை; செல்வாக்கைச் செலுத்துவதுமில்லை. காரணம், கேடுகளும் காலத்தின் கோலங்கள்; வரலாறு இல்லை. கடந்தது, வரப்போவது, அழிவு, சாசுவதம்—எதற்குமே நிலையில்லை. அதனால் இந்தப் பூதவுடலை எரித்துவிடு. காரணம், இவை நிகழ்காலப் போக்கில் அடங்காதவை" டாக்டர் ஸ்டீவர்ட் சொன்னார்.

"இதனால்தான் கீழை நாட்டுக் கலைஞர்கள் தம் பெயர்களைக் குறித்து வைக்கத் தேவையில்லை என்று கருதினார்கள். நாம் இத்தகைய கலைஞர்களைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளமுடியு மானால்...! ம்ஹூம்! இங்கே எத்தனை எத்தனை மைக்கேல் ஏஞ்ச லோக்கள் மிக அமைதியாக, ஆனந்தமாக அநாமதேயர்களாகி இருக் கிறார்கள்!"

இதையெல்லாம் கேட்டுவிட்டு, கமால் வெளியேறினான்.

"நாம் என்கிற உணர்வே காலம்தான்" மோஸியோ ராவல் கூறினார்.

"விஸ்தாரத்தை— விரிந்த பரப்பை உணர முடியும். காலத்தையோ சிந்திக்கத்தான் முடியும்" டாக்டர் கிரீமர் சொல்லிக் கொண்டிருந்தார்.

கமால் கஸ்டடியனைச் சந்தித்து, தன்அலுவலை முடித்துக் கொண்டபின், கௌதம நீலாம்பரனைச் சந்திக்க 'ஆல்ப்ஸ்' ரெஸ்டா ரண்டுக்குப் போகவில்லை. நேரே லாஜ்வதி வீட்டுக்குச் சென்றான். அவளிடம், "என் பெயருக்கு ஃபோன் வந்தால் நான் இன்னும் திரும்பவில்லை என்று சொல்லிவிடு" என்று சொல்லிவிட்டு, அறைக்குள் போய் படுத்துக்கொண்டான். உடனே தூங்கிவிட்டான்.

கௌதமன் ஒருமணி நேரம் ஆல்ப்ஸ் ரெஸ்டாரண்டில் கமாலுக் காகக் காத்திருந்தான். பல இடங்களுக்கு ஃபோன் செய்தான். கமால் இருக்குமிடம் தெரியவில்லை. ஏமாற்றச் சலிப்புடன் தன் அலுவலகத் திற்குப் போய்ச்சேர்ந்தான். புத்த ஜயந்தியை மிக விமரிசையாகக் கொண்டாட சர்க்கார் பெரிய ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தது. இரவு வரைக்கும் கௌதம் அலுவலகத்தில் பணிபுரிய வேண்டி யிருந்தது. மிக முக்கியமான ஃபைல் சம்பந்தமாக குமாரி அருணா வாஜ்பாயிக்கு ஃபோன் செய்தான். அவள் டாக்டர் கிரீமருடன் நேஷனல் மியூசியத்திற்குப் போயிருப்பதாகப் பதில் வந்தது.

கௌதம் எரிந்து விழுந்தான். கமால் கிடைக்காததே அவனுக்கு வேதனை. இப்படி யாரைத் தேடினாலும் கிடைக்கவில்லையென்றால், கோபம்தானே வரும்! எல்லாரிடத்திலும் கோபம் அவனுக்கு; தன் பேரில்கூட. டாக்டர் கிரீமர் குழுவினரையும் அந்த அருணாவையும் கொன்று போடலாமா என்று தோன்றியது.

அந்த ஃபைல் மிக அவசரமாகத் தேவைப்பட்டது; அதை வெகு விரைவாகத் தன் மேலதிகாரி ஜாயிண்ட் செகரெட்டரிக்கு அனுப்ப வேண்டும். உடனே காரில் ராஷ்டிரபதி பவன் சென்றான். மியூசியம் பக்கம் போய்ப் பார்த்தான். அவர்களைக் காணவில்லை; மனச் சள்ளையோடு பல அறைகளில் நுழைந்து பார்த்தான். ஒரு சிற்பத் திற்கு எதிரே தகவல் ஒலி பரப்பு இலாக்காவின் கையேடு ஒன்று கிடந்தது. டாக்டர் கிரீமர் இதை இங்கு மறதியாக விட்டுப் போயிருக்க வேண்டும். கௌதமன் அதை எடுத்துப் பார்த்தான்; 'சிராவஸ்தியிலிருந்த எழில்மிகு யக்ஷிணி' உடனே, அந்தச் சிற்பத்தைப் பார்த்தான். அதன் தோற்றம் அவனது சினத்தை மேலும் கிளர்த்தியது. எண்ணம் கிளர்ந்தது: "நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? உன்னை நான் துளியும் மதிக்கவில்லை. உன் தோற்றத்தையே மறந்து கொண்டிருக்கிறேன். உருவம் வெறும் தகவல்தான். என் உள்ளத்தில் பதிந்திருக்கும் உருவத்தை அந்தத் தேவலோகச் சிற்பி விசுவகர்மா மட்டுமே உணரமுடியும்!" சொல்லிக் கொண்டான்.

சிராவஸ்தியில் அகழ்வாராய்ச்சியிலிருந்து கிடைத்த அந்தச் சிற்பம் கதம்ப மரக்கிளையை ஒயிலாகப் பற்றி நிற்கும் எழில்மிகு நங்கை யக்ஷிணி கௌதம நீலாம்பரனை மலர்ந்த விழிகளால் பார்த்துக் கொண்டிருந்தாள். கௌதம் அதனருகில் சென்று, முகத்தைத் தடவிப் பார்த்தான்.

"ஆர்க்கேயிக் சிற்ப பாணியின் தலைசிறந்த எடுத்துக்காட்டு!" தனக்குள் சொல்லிக் கொண்டான். 'பண்பாடு, கலாச்சாரம் என்று பிரபலப்படுத்தும் கலைப் பத்திரிகையில் இந்தப் புதிய ஆராய்ச்சிக் கண்டுபிடிப்பு பற்றிச் சிறப்புக் கட்டுரை வெளிவரவேண்டும்'— கடமைப் பற்றுள்ள பிரச்சார நிபுணனைப்போல் சிந்திக்கலானான். பிறகு வெளியே வந்துவிட்டான்.

ரயில் புறப்படும் நேரம். கமால் லாஜ்வந்திக்கும், அவள் கணவருக்கும் 'குதாஹாபிஸ்!' கூறிவிட்டு பெட்டிக்குள் ஏறி அமர்ந்தான். ரயில் கிளம்பி ஸ்டேஷனைக கடந்தது. யமுனையின் பாலம், செங்கோட்டைச் சுவர்கள், கடைவீதி, சாலைகள், கட்டிடங்கள்—ஜன்னல் வழியாகப் பார்த்து வந்தான்—அவன் சென்று கொண்டிருக்கிறான்.

வாழ்க்கை—உலக இயக்கம் தொடரும். ஒரு நபர் பிரிந்து சென்றதால் மாறுதல் ஏற்பட்டுவிடாது. இந்த மனிதர்கள் இப்போது

வேறுபட்டவர்கள். வேறுவழியில் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் கமாலுக்குமிடையில் ஒட்டுறவுக்கு எந்த வாய்ப்பும் இல்லை. அவர்களால் அவனுக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. அவர்களும் கமால் இல்லாமையைப் பொருட்படுத்த மாட்டார்கள்.

ரயில் வயல்களைக் கடந்து கொண்டிருந்தது. "ஒவ்வொரு பயணத்திற்கும் மகத்தான பொருள் உண்டு." ஒருமுறை கௌதமன் சொன்னான். "பாரதத்தின் தனிச் சின்னமே யாத்திரைதான். போய்க்கொண்டே இருப்பது; எதையாவது நாடித் தேடிச் செல்லுகிற பழக்கம்" ஷ்பைங்லர் எங்கோ இப்படி எழுதியிருக்கிறார்.

கமால் ராதாகிருஷ்ணனின் நூல் ஒன்றைப்பிரித்து வைத்துக் கொண்டான்.

"இந்திய தரிசனத்தில் எவரும் எவருக்கும் ஆணையிடுவதில்லை—'இதைக் கட்டாயம் செய்!' அல்லது 'இப்படி நீ செய்தாக வேண்டும்!'—இந்த வலுக்கட்டாயம் கிடையாது. இங்கு மனிதன் தன் கர்மாக்களுக்கு உரிமையுள்ள செயலாளி."

கமால் புத்தகத்தை ஜன்னல் வழியாக வெளியே வீசியெறிந்து விட்டு, இருக்கையில் படுத்துக் கொண்டான். பஞ்சாபிலுள்ள ஸ்டேஷன்கள் கடந்து போயின—அம்பாலா, லூதியானா, ஜலந்தர்-சுவர்களில் உருதுவில் சினிமா விளம்பரங்கள் தென்பட்டன. பிளாட்பாரத்தில் துப்புரவான தரையில் சீக்கிய மாதர்களின் வண்ண வண்ண சல்வார்கள் விளக்கொளியில் பளிச்சிட்டன.

பொழுது புலர்ந்தது. டிரெயின் அமிருத்ஸர் வந்து சேர்ந்தது. பல இடங்களிலும் முஸல்மான் குருமார்களின் சமாதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. சீக்கியப் பெண்கள் ஒற்றையடிப் பாதையில் வரிசையாகப் போய்க் கொண்டிருந்தார்கள். சீக்கிய விவசாயிகள் சாகுபடியில் இறங்கிவிட்டார்கள். பல இடங்களில் எரிந்த வீடுகள் இடிந்து கிடந்தன. அமிருத்ஸர் பிளாட்பாரத்தில் புர்க்கா அணிந்த ஏழை முஸ்லிம் பெண்டுகளும், கிழவர்களும் விசாவில் கையொப்பம் பெறுவதற்காகக் கும்பலாகக் காத்திருந்தார்கள்.

டிரெயின் கிளம்பியது; இரு நாட்டு சோல்ஜர்களும் பெட்டிகளில் காவல் நின்றார்கள்.

திடீரென்று வேறொரு தேசம் தொடங்கிவிட்டது? இரு சர்தார்கள் புல்வெளியில் காவல் நின்றார்கள்.

நான் பாகிஸ்தானத்தில் இருக்கிறேன்; இந்தியாவிலிருந்து வந்திருக்கிறேன். அகதி- உத்தரபிரதேசத்து முஸல்மான்- புகல்நாடித் திரியும் வந்தேறி... வீடுவாசல் இல்லாத ஏதலன்.

டிரெயின் எல்லையைத் தாண்டிவிட்டது. இத்தனை நாட்களாகத் தன் மனவலியையெல்லாம் கூட்டி, கண்ணீரை அடக்கிக் கொண்டிருந்தான் கமால். தூணுக்குப் பக்கத்தில் ஒரு சீக்கிய

சோல்ஜர் துப்பாக்கியைத் தாங்கியவாறு நிற்பதைக் கண்டு, குழந்தை மாதிரி விக்கி விக்கி அழுதான். சக பயணி தன்னை ஒரு தினுசாகப் பார்ப்பதை உணர்ந்தான். அவன் பாகிஸ்தான் எல்லைக்காவல் படையைச் சேர்ந்த போலீஸ் அதிகாரி; அமிருத்ஸரிலிருந்து லாகூர் திரும்புகிறவன்.

கமால் வெட்கிப்போனான். அந்தப் போலீஸ் அதிகாரி தன்னைப் பார்த்து, 'நீ இதுவரைக்கும் பகைமை கொண்ட இரண்டு இடங் களுக்கும் விசுவாசமுள்ளவனாக இருந்துவிட்டு வந்திருக்கிறாய்! மகா கேவலம்!" என்று ஏசுவது போல் இருந்தது. எல்லாருமே தன்னை அவநம்பிக்கையுடன் பார்ப்பது போல் தோன்றியது கமாலுக்கு: "நீ இந்தியாவின் உளவாளி! இந்திய வேவுகாரன்" என்று ஏசுவது போல் இருந்தது. டிரெய்னின் சக்கரங்களும் இப்படியே இரைவதுபோல் ஒலித்தன.

கமால் கலவரத்துடன் எழுந்தான். டிரெயின் லாகூரை நெருங்கிக் கொண்டிருந்தது. அவன் உள்ளம் படபடத்தது.

லாகூரிலிருந்து கராச்சிக்கு விமானத்தில் சென்றான். இப்போது அவனுடைய புதிய வாழ்க்கை அவன் எதிரே காத்திருந்தது. டயரியை எடுத்தான். கராச்சி போய்ச் சேர்ந்ததும் பல முக்கிய அலுவல்கள் அவனை எதிர்நோக்கி இருக்கின்றன. பங்களா கட்டு வதற்கு பிளாக் மார்க்கெட்டில் சிமின்டும், இரும்பும் வாங்கியாக வேண்டும். மிஸ்டர் எக்ஸ் அவர்களுக்கு ஜிம்கானாவில் ஒரு பார்ட்டி கொடுக்கவேண்டும். 'இனி நான் எங்கே போகமுடியும்?'- தன்னையே கேட்டுக் கொண்டான். மோசமான, சரிந்துவரும் சமுதாயத்தில் மனிதன் எப்படி நேர்மை-நாணயத்துடன் இருக்க முடியும்? இது குறித்தும் யோசிக்கத்தான் வேண்டியிருக்கிறது. அவன் விமான உபசரிப்புப் பெண்ணிடம் சொல்லி இரண்டாம் தடவையாகக் காபி வரவழைத்தான். பிறகு 'டான்' பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினான்.

'பாகிஸ்தான் அமைச்சரவையில் சலசலப்பு, பிரதம மந்திரி ராஜினாமா செய்துவிட்டார். புதிய பிரதமர், ஜஹாங்கீர் பார்க்கில் நடந்த பொதுக்கூட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு.'

கமால் ஜன்னல் வழியாக வெளிப் பக்கம் பார்த்தான். வானத்தில் மேகங்கள் விரைவாகக் கவிந்து வந்தன. சிறிது நேரத்திற்கெல்லாம் மழை வரப்போகிறது.

அவன் ஜன்னல் திரையை இழுத்து மூடினான்.

'நானும் சவம்தான், நானே எனக்குப் புதைகுழி தோண்டிக் கொள்ளப் போகிறேன், எனக்காக நானே அழவும் போகிறேன்...' சீட்டில் தலை சாய்த்து, கண்களை மூடிக்கொண்டான்.

# 58

கப்பி ரோடில் ஒரு பையன் மாட்டு வண்டி ஓட்டிக் கொண்டு போகிறான். ஸ்டேஷன் வேன் ஒன்றுபுகை விட்டவாறு, தூசி கிளப்பியபடி, முட்டித் தள்ளிக்கொண்டு முன்னேறுகிறது. எதிரே ஒரு மாட்டுவண்டி வருகிறது. வண்டிக்காரன் மாட்டின் வாலைத் திருகி விரட்டிக்கொண்டே, மோட்டார்க்காரர்களை அதட்டுகிறான்: "பார்த்துப் போங்கப்பா! நம்ப மாடு வெறிக்குது, பார்! பதவிசாய் போங்க!"

அமெரிக்கப் பத்திரிகைக்காரனொருவன் சட்டென்று காமிராவை எடுத்து இந்தக் காட்சியைப் படம் பிடித்துக் கொண்டான். பின்னால் மற்றொரு கார் வந்தது. அதில் அமர்ந்திருந்த திருமதி ராஜ்வாடா எட்டிப் பார்த்தாள்; பிறகு லேடி கமலேஷ் சர்மாவோடு பேசத் தொடங்கினாள். சிராவஸ்தி இன்னும் தொலைவில் இருந்தது. சூரியன் மறையத் தொடங்கினான். மழை கொட்டக் காத்திருந்தது. மோஸியோ ராவல் அடுத்த ஸ்டேஷன் வேனில் உட்கார்ந்திருந்த குமாரி அருணா வாஜ்பேயியிடம் ஏதோ கேட்க விரும்பினார். அருணா உடனே தகவல்-செய்தித் துறை அமைச்சரகம் வெளியிட்ட புத்தகங்களை அவரிடம் கொண்டுவந்து போட்டாள். கேள்விக்கணைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள, நிட்டிங் பின்னலில் ஈடுபட்டாள். மூன்றாவது மோட்டாரில், இலங்கை-ஜப்பான் இரு தேசங்களிலிருந்தும் வந்திருக்கும் பௌத்த பிக்குகள் நிரம்பியிருந்தார்கள். அவர்களுடன் பிலிம் டிவிஷன் கேமராமேன் இருந்தான். சில குடியானவப் பெண்கள் வரப்பு மேட்டில் நின்றுகொண்டு இந்தப் பயணிகள் கூட்டத்தை வியந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். பின் சீட்டில் இருந்தவர்கள் உரக்கப் பேசி விவாதித்தார்கள். கௌதம நீலாம்பரன் காரை ஓட்டிக் கொண்டிருந்தான். திரும்பி அருணா வாஜ்பேயிடம் சொன்னான், "நீ கொஞ்சம் இந்த வேலைகளைக் கவனித்துக் கொள்வாயானால், நான் இங்கேயே இறங்கி என் வீட்டுக்குப் போய் வருவேன்."

"போரடிக்கிறதோ?" அருணா கேட்டாள். ஆனால் அவளுக்கே அலுப்பு காரணமாகத் தூக்கம் வந்தது.

"ஆமாம். என்னை இங்கே விட்டால் போதும். வயல் வழியாகக் குறுக்கே போய் வீட்டுக்குப் போய்ச் சேருவேன். சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும். நாளைக் காலையில் மறுபடியும் நம் பணி தொடரும். மோஸியோ ராவல்! நீங்கள் அனுமதி அளித்தால்..." பிரெஞ்சு எழுத்தாளரிடம் கேட்டுக் கொண்டான்.

காரை நிறுத்திக் கீழே இறங்கினான். கார்கள் வரிசையாக அவனைக் கடந்து சென்றன. சிறிது நேரம் அங்கேயே நின்றான். மழைத்துளி ஒன்று விழுந்தது. கைகளை விரித்துக் காற்றைச் சுவாசித்தான். துவரைச்செடி ஒன்றை ஒடித்து எடுத்துக் கொண்டு, ஒற்றையடிப் பாதையில் நடக்கலானான்.

மழை தொடங்கியது. தூறலிருந்து தப்ப மாந்தோப்பில் ஒண்டினான். அடிமரத்தில் சாய்ந்து உட்கார்ந்து, காற்றும் இலைகளும் இணைந்து இசைபாடுவதை ரசித்தான். அரைமணிக்குப் பிறகு, மழை கொஞ்சம் நின்றதும் புறப்பட்டான். கண்ணுக்கெட்டிய தூரம் வரைக்கும் பசுமை படர்ந்த கழனிகள்; கதிர்கள் முற்றி கம்பீரமாக அளைந்து கொண்டிருந்தன. நகர்ப்புறமும் தொலைவில் இருந்தது.

கௌதமன் திரும்பிப் பார்த்தான். மழை காரணமாக பாதையில் புழுதி எழவில்லை. கால்களில்தான் புழுதி அப்பியிருந்தது. மரங்களும் செடிகளும் பசுமை மிளிர அசைந்து கொண்டிருந்தன. சிவப்பும் மஞ்சளுமாக மலர்ந்த பூக்கள் பசுமையில் குங்குமப் பொட்டுகள்போல் ஒளிர்ந்தன. வைரம்போல் மழைத்தூறல்கள் விழுந்து பசுமைப் பரப்பில் சிதறின. துறையில் தோணிகள் கட்டிவைக்கப்பட்டிருந்தன. ஆலமரத்தடியில் ஒரு படகோட்டி பாடல் இசைப்பது இனிமையாக ஒலித்தது. மாந்தோப்பில் ஒரு மயில் தோகை விரித்துக் கொண்டு நின்றது. நதியின் மறுகரையில் கோரைப் புற்களோடு நீல மலர்கள் மண்டிய கொடிகள் கலந்து, பிரவாகத்தை நோக்கிக் கவிந்திருந்தன. ஆலமரங்களுக்கடியில் இருள் படியத் தொடங்கியது. நாரைகளும், மயில்களும் சிலிர்த்துக்கொண்டு சுணக்கமாக நின்றன. நாலைந்து மனிதர்கள் தோளில் துண்டைப் போட்டுக்கொண்டு, கிராமத்தை நோக்கி விரைந்தார்கள்.

பஹ்ராயிச்சின் புறநகர் தொடங்கியது. சிவில் லைனில் நிழலடர்ந்த சாலையொன்றைக் கடந்து, மஞ்சள் நிறமான இரண்டு மாடிக் கட்டிடத்துள் நுழைந்தான். அதுதான் அவனுடைய இல்லம்.

அவனுடைய தந்தை சர் தீபநாராயண் புல்வெளியில் உலாவிக் கொண்டிருந்தார்.

"ஹலோ! வா! வா!! நான் நினைத்தேன், நீ வெளிநாட்டு விருந் தாளிகளை அழைத்துக்கொண்டு நேரே ஸஹேத்மஹேத் (சிராவஸ்தி) போயிருப்பாயோ என்று."

"அவர்களை அப்படியே அனுப்பிவிட்டு நான் இங்கே வந்து சேர்ந்தேன்."

பிறகு கௌதமன் உள்ளே போய் தாயைச் சந்தித்தான். நலம் விசாரிப்பதெல்லாம் முடிந்ததும், குளிக்கப் போனான். குளியலறையி லிருந்தவாறே, "தமயந்தி அத்தை அங்கேதானே இருக்கிறார்?" என்று கேட்டான்.

"டவுனிலேதான். நீ போகிறபோது அவரைப் பார்த்து விட்டுப் போ."

"சரி, அம்மா!"

"சௌகரியமாக இருக்கிறாயா, கௌதம்?"

"ஓ எஸ்! பச்சனுக்கு எப்போது கலியாணம்?"

"வருகிற பங்குனியில்."

"பிரகாஷ் சித்தப்பா வீடு கட்டியாகி விட்டதா?"

"இல்லை. அந்த ரிடயர்ட் ஜட்ஜ் கான் பஹதூர் முகம்மது ஹுசேன் இங்கே இல்லை, பாகிஸ்தான் போய்விட்டார். அவர் வீடு ஏலத்துக்கு வந்தது. அதை பிரகாஷ் வாங்கியிருக்கிறார். நிரம்ப சல்லிசாகக் கிடைத்தது" அம்மா உற்சாகத்துடன் சொன்னாள்.

குளியலறையிலிருந்து வெளியே வந்தபின், மேஜையில் உட்கார்ந்து கொண்டு அதேபோல் சில குடும்ப நிலவரங்களை விசாரித்துத் தெரிந்து கொண்டான். 'பாகிஸ்தான்' என்ற பெயரைக் கேட்டதும் உள்ளூர அதிர்ச்சி கொண்டான். அந்தப் பெயரையே மறக்க முயன்று வந்தான். மேலும், வெளிநாட்டுப் பிரமுகர்களுக்கு சிராவஸ்தியைத் தரிசிக்க வந்திருக்கும் புத்திவாதிகளுக்கு அவன் கஷ்மீர் பிரச்சினையை அலசி விளக்கிச் சொல்லியாக வேண்டும்.

கௌதமனின் உள்ளம் பதறத் தொடங்கியது. இனம் தெரியாத வேதனை கொந்தளித்தது. இதேபோல் தில்லியிலும் சிரமப்பட்டிருக்கிறான்.

"நதி வரைக்கும்போய் உலவிவிட்டு வருகிறேன்" தாயிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

"இப்போதுதானே நீண்ட பயணம் செய்து வந்திருக்கிறாய், அதற்குள் உலாவப்போக வேண்டுமா? கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ளேன்!"

கௌதமன் வெளியே புறப்பட்டு விட்டான். தந்தையின் காரை எடுத்துக் கொண்டு, நதிக்கரைக்குச் சென்றான். மழையும் காற்றும் அடங்கியிருந்தன. நதிக்கரையில் காரை நிறுத்திவிட்டு, சண்டிதேவியின் கோவில்படியில் போய் உட்கார்ந்தான். இங்கே அமைதியான தனிமை. சிந்தனைச் சுழலிலிருந்து விடுபட்டு, தெளிவாக இருக்க விரும்பினான். இந்தக் கணத்தில் தனக்கு 'நிர்வாண' நிலை கிட்டி விட்டால் எவ்வளவு நன்றாக இருக்குமென்று முதல் முறையாக நினைத்தான். அச்சம், தனிமை உணர்வு, துன்பம், வெறுப்பு, தப்பி ஓட விரும்புவது, அதீத கற்பனை, பெரிய பெரிய ஆவல்கள்... இவைகளுக்கெல்லாம் அப்பால் 'நிர்வாணம்'! இது மரணம், தூக்கம், விழிப்பு, அன்பு, இரக்கம், பற்றின்மை, தொடர்பின்மை ஆகியவற்றுக்கெல்லாம் அப்பாற்பட்டது. எனினும் சத்தியமானது, இரண்டறக் கலப்பது... சூனியநிலை, வெறும் வெட்டவெளியான சூனியம்!

இந்தியாவின் ஆத்மா படும் துன்பங்களை இந்த வெளிநாட்டுப் புத்திவாதிகள் அறிவார்களா...?

கௌதம நீலாம்பரன் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டான்; கோவில் படிக்கட்டருகில் அப்படியே விச்ராந்தியாகப் படுத்துக் கொண்டான். 'மாரிக்காலம்; இங்கெல்லாம் நச்சரவுகளும் நச்சுப் பூச்சிகளும் திரியும்...' இப்படியும் சிந்தித்தான். காட்டுப் பகுதியோடு அவனுக்கு ஜன்ம ஜன்மாந்தரமாகத் தொடர்பிருப்பதாகக் கருதினான், உணர்ந்தான். இந்தச் சூழலில்தானே அவன் வளர்ந்து பெரியவனாகி யிருக்கிறான்!

கீழே யாரோ வரும் காலடியோசை கேட்டது, சிரிப்பொலியும் வந்தது.

"யாரப்பா, அங்கே?" கீழேயிருந்து யாரோ கேட்பது ஒலித்தது; "இருட்டிலே இங்கே தனியாக உட்கார்ந்திருக்கிறாயே!"

"நான்தான்" படுத்திருந்தவாறே கௌதமன் பதில் சொன்னான்.

கேட்டவன் வாலிபன்; குட்டைச் சுவரைத் தாண்டி கோயில் வாயிலுக்கு வந்தான்.

"இதென்ன பித்துக் குளித்தனமப்பா! ஊரெல்லாம் உன்னைத் தேடிக்கொண்டு வருகிறேன். வீட்டிலே போய் கேட்டேன். அம்மா சொன்னார்கள், நீ இந்தப் பக்கம் வந்திருக்கிறாயென்று."

"வா... என்ன புழுக்கம் பார்த்தாயா! ஒரு இலைகூட அசைய வில்லையே! சரி, நீ எப்படி இருக்கிறாய்?"

"படுபோர்!" ஹரிசங்கர் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். கிண்டலாக, இந்த 'பூடா ஜயாண்டி' (புத்த ஜயந்தி) இதே மாதிரி மேலும் தொடர்ந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும். இந்தச் சுழலில் சிக்கியதால், லக்னோ போக முடியவில்லை. ஜேயெஸின் (ஜாயிண்ட் செகரெட்டரி) தந்தி கிடைத்ததும் டில்லி வந்து சேர்ந்தேன். வழித்துணைப் பணி! இந்த வெளிநாட்டு மேதாவிகள் நம்மை இலேசில் விடமாட்டார்கள் போலிருக்கிறது! அருணா வாஜ்பேயி சொன்னாள்: அவர்கள் சிராவஸ்தியிலிருந்து நேராகக் கபில வஸ்துவிற்கும், புத்த கயாவிற்கும் திருத்தல யாத்திரை செய்ய முடிவு செய்திருக்கிறார்களாம். வழியெல்லாம், டாக்டர் ஹைன்ஸ் கிரீமர் என்னைக் கொன்றுவிட்டாரப்பா! மகாயானி பௌத்தர்களுக்கும் ஜைனர்களுக்கும் உள்ள பேதா பேதங்களைச் சொல்லிச் சொல்லியே என் மூளையைக் கிறங்க அடித்து விட்டார்! உன் காரில் நல்ல காலம், மோஸியோ ராவல் மட்டுமே இருந்தார்."

ஹரிசங்கர் ஓய்ந்தான். நதியில் மறையும் ஆதவனின் செவ்வொளி சூழ்நிலையில் பிரகாசித்தது. இருவரும் உற்சாகமின்றி ஏங்கினார்கள்.

"கௌதம்!"

"சொல்லப்பா!"

"கமால் நம்மை வஞ்சித்து விட்டான்" ஹரிசங்கர் மெல்லச் சொன்னான்.

"ம்ஹு¬ம்..."

"உனக்குத் தெரியுமா? களவாணிப்பயல் தில்லி வந்து போயிருக்கிறான். எனக்குத் தந்தி கொடுத்திருந்தால் நான் வந்து சந்தித்திருக்க மாட்டேனா?"

"நான் தில்லியிலேயே இருந்தவன். அப்படியும் என்னைச் சந்திக் காமலேயே போய்விட்டான்" கௌதமன் தாபத்துடன் சொன்னான்.

இருவரும் சிந்தனை வயப்பட்டார்கள்.

"ப்சு! இப்போது அவன் எங்கே இருக்கிறானோ?" ஹரிசங்கர் நெடுவீர்ப்புடன் ஏங்கினான்.

"கராச்சியில் இருப்பான்; வேறெங்கே போவான்?"

இருவரும் மௌனியானார்கள். கோவில் படிகளைக் கடந்து, படித்துறைக்கு வந்தார்கள். நதிப்பெருக்கை உவகையோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். இருவருமே இப்படிச் சிந்தித்துக் கொண்டிருந் தார்கள் போலும்.

'அபுல் மன்சூர் கமாலுத்தீன் எவ்வாறு இந்தியாவுக்கு வந்தான்? பிறகு எப்படி இந்தியாவை விட்டு வெளியேறினான்...?'

நதி ஓடிக் கொண்டிருந்தது. இருவரும் குனிந்து நீரில் தம் பிரதிபலிப்புகளைக் கண்டார்கள். கௌதமன் சிறு கல்லை எறிந்தான். அலைகள் வட்டமிட்டுப் பரவின. இருவருடைய பிரதிபலிப்புகளும் அந்த அளவில் பரவின. படித்துறைக்கு அப்பால், கம்யூனிட்டி பிராஜக்ட் சென்டரிலிருந்து வெளிச்சம் தெரிந்தது. நாடோடிப் பாடகர் குழு வருடாந்தர யூத் ஃபெஸ்டிவல் விழா நிகழ்ச்சிக்கான ஒத்திகையில் ஈடுபட்டிருந்தது. அவர்களுடைய எடுப்பான குரல்கள் படித்துறையில் தெளிவாக ஒலித்தன. தொலைவில், கிராமத்து நாற்சந்தியில் நௌடங்கி தெருக்கூத்து நாடகம் நடப்பதும் கேட்டது. மாந்தோப்புக்கு வெளியில் குழுமியிருந்த கிராமத்து இளவட்டங்கள் ஆவேசமான ஆல்ஹா—ஊதல் பாடல்களை வீரச்சுவையுடன் கம்பீரமாகப் பாடுவது புல்லரிக்க வைத்தது. காங்கிரஸ் கமிட்டி அலுவலகத்தில் தேர்தல் முன்னேற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. அதற்கப்பால், சிவில் லைனில் டெபுடி கமிஷனரின் பங்களாவில் வெள்ளைக்கார விருந்தாளிகள் உற்சாகமாக டின்னர் விருந்தில் ஈடுபட்டிருந்தார்கள்.

கௌதமன் கவிழ்த்துப் போட்டிருந்த படகில் காலை ஊன்றிய வாறு, கண்களை மூடி அமர்ந்திருந்தான். பிறகு கண்களை மட்டும் திறந்தான். படித்துறைக்கருகில் தான் மட்டும் இருப்பதை உணர்ந்தான். ஹரிசங்கர் குடியானவன் ஒருவனோடு பேசிக்கொண்டே கம்யூனிட்டி பிராஜக்ட் சென்டர் பக்கம் போய்விட்டான். கரிய மேகங்கள்

நதிப்பக்கம் கவிந்திருந்தன.

கௌதமன் தன் சோர்ந்துபோன கால்களைப் பார்த்துக் கொண்டான். பரவி வரும் இருளைக் கவனித்தான். ஆனால், இதில் அச்சங்கொள்ள என்ன இருக்கிறது? அவன் நிலத்தாயுடன் இருந்தான்; தாய் அவனுக்குத் துணைபுரிவாள், துணை நிற்பாள்.

கௌதமன் மேலே நடந்தான்.

ஈரித்த புற்களின் இளம் மணம், கற்களின் சில்லிப்பு, மண்ணின் உறுதி... கால்கள் பாவும் போதே உணர்ந்து கொண்டான். கைகளை விரித்து, காற்றைத் தழுவினான். மெய்சிலிர்த்தது. உணர்ச்சியோடு சொன்னான்: "பூமித்தாயே! உன் குன்றுகளும், பனி படர்ந்த மலைகளும், காடுகளும் மலர்ந்து முறுவலிக்கின்றன! அன்னையே! நான் உன் மடியில் நிற்கிறேன். நான் தோல்வி காணவில்லை. எனக்கு எவ்விதமான பாதிப்பும் ஏற்படவில்லை; நான் புண்படுத்தப்படவுமில்லை. நான் முழுமையானவன்—பூர்ணன்! என்னை எவராலும்—எதாலும் அழித்துவிட முடியாது, முடியவுமில்லை."

மலர்கள் நிறைந்த செடி—கொடிகளின் கொப்புகள் கௌதமனின் பாதையில் குனிந்து சாய்ந்திருந்தன. புள்ளினங்கள் அவன் குரலோடு ஒத்தொலித்தன. மழைத்துளிகள் தாமரை இலைகளின் மேல் இனிதாக ஜலதரங்கம் இசைத்தன.

அவன் சிறு மேட்டில் வந்து நின்றான். பனித்த கண்களை வயல் வெளிப்பக்கம் ஓட்டினான். ஆறுதலாக இருந்தது. "தானியக் கதிர்களே! வளர்ந்து ஓங்குங்கள்! வளர்ந்து எழுங்கள். எங்கள் பானைகள் நிரம்பட்டும். புயல்கள் வீசும்; சமாளித்துத் தப்பித்துக் கொள்ளுங்கள். உயர்ந்த தானியக் கதிர்களே! மேன்மையான படைப்புகளே! கடலைப் போல் பரந்து—ஆழ்ந்து திகழுங்கள்! உங்களுக்குத் தொண்டுபுரியும் ஏற்றமிகு உழவர் பெருமக்கள் அமர புருஷர்களாக—மகான்களாக நீடூழி வாழ்வார்களாக! உன் கழனிகளும் களங்களும் அழியாது பரந்தும் புரந்தும் நிலை நிற்கட்டும்!"

மேட்டிலிருந்து இறங்கி, ஒற்றையடிப் பாதையில் நடந்தான். நதியை ஒட்டிய பாதையில் சென்றான். வானத்தில் கருமுகில்கள் முழக்கமிட்டுக் கொண்டிருந்தன. அவன் உள்ளத்தில் புயல் வெள்ளம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. அவன் மூளையில் நீர் வீழ்ச்சிகளின் இனிய இசையொலிகள் தொனித்துக் கொண்டிருந்தன. மயில்கள் இறங்கி அகவின. சாதகப் புள்கள் கூவின. வண்டுகள் ரீங்கரித்தன. கதம்ப மலர்கள் அவன் காலடியில் நிறைய உதிர்ந்தன; கொப்புகள் சொரிந்து அர்ச்சித்தன போலும்!

நாடோடிப் பாடகர் ஒருமித்து உல்லாசமாகப் பாடுவது திசையெங்கும் ஒலித்தது:

தரிசுகள் தழைக்குது பார்!

கழனிகள் கொழிக்குது பார்!
வாழ்வு செழிக்குது பார்!
கதிர்கள் களிக்குது பார்!
மணிகள் பொங்குது பார்!

கௌதமன் ஈடுபட்டு ரசித்தான். பொருளறிந்து, கருத்தில் திளைத்தும், அவன் இதழ்கள் விரிந்து, புன்சிரிப்பை மலர்த்தின.

பாறைகள், தாழ்வரைகள், பனிப்படலங்கள், சரிவுகள், புயல்கள், சுழிக்காற்றுகள் இவற்றினூடே புகுந்து சென்று, முன்னேறி, ஒலி அலைகளில் மிதந்தவாறே, கௌதமன் இமயத்தின் 'கௌரி சங்கர்' சிகரத்தின் மீதேறி, மேகப்படங்களுள் மறைந்தான். மலைச்சிகரத்தில் அவன் மண்டியிட்டு அமர்ந்தான். நாலு பக்கமும் பார்த்தான். எங்கும் வெற்று வெளி; வெறும் சூனியம். எப்போதும் போல் தான் இந்தச் சூனியத்தில் தனித்திருப்பதைக் கண்டான்.

உலகின் முதல்வனும் இறுதியானவனுமான மனிதன்... களைத்துச் சளைத்தவன், தோற்கடிக்கபபட்டவன், மிக்க மகிழ்ந்தவன், நம்பிக்கை நிறைந்தவன், இந்த மனிதன்! இவன் கடவுளிடம் ஒன்றியவன், இவனே கடவுள்!

அவன் சிரித்துக் கொண்டே கீழே இறங்கி வந்தான்; கண்களைத் திறந்தான். சாசுவதமான குரல் ஒன்று ஒலித்தது.

"விழிப்படைந்தவர்களை எழுப்புதல் நலம் மல்கியதாகத் துலங்கட்டும்!"

"நியாயம், நீதிகளின் பிரச்சாரம் நலம் நலகுவதாகத் திகழட்டும்!

"ஒன்றிய குழுவில்- சங்கத்தில் சாந்தி நிலவுதல் மங்கலநலன்கள் நிறைந்ததாகப் பொலியட்டும்!

"சாந்தி நிலைகண்ட சான்றோர்களின் சாதனைகளெல்லாம் என்றென்றும் மங்கல நலன்கள் நிரம்பியவையாக விளங்கட்டும்!"

சாக்கிய முனிவர் புத்தர் பிரானின் சாசுவதமான குரல்!

அவன் வரப்பு மேட்டிலிருந்து இறங்கி நடைபாதைக்கு வந்தான். நெடுவீர்ப்புடன் மெல்ல நடந்தான்; வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

